## சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்



சொற்பொழிவுகள் மற்றும் **5** எழுதியவற்றின் தொகுப்பு

# சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்

சுடர் 5

சொற்பொழிவுகள் மற்றும் எழுதியவற்றின்

தொகுப்பு

**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர், சென்னை-600004

## பதிப்புரை

சுவாமி விவேகானந்தர் ஏற்றி வைத்த ஞானதீபத்தின் ஐந்தாம் சுடர் இது. இதில் ஒளிர்வது அவர் கொழும்புமுதல் அல்மோராவரை நிகழ்த்திய சொற்பொழிவுகள்.

இந்தியப் பாரம்பரியத்தின்மீது சுவாமிஜிக்கு இருந்த ஆழ்ந்த நம்பிக்கையையும், அது மீண்டும் ஒருமுறை உலகை வெற்றிகொள்ளப் போகிறது என்பதில் அவருக்கிருந்த மாறாத உறுதியையும் இந்தச் சொற்பொழிவுகளில் நாம் காண முடிகிறது. 'ஓ இந்தியா விழித்தெழு, உனது ஆன்மீகத்தால் உலகை வெற்றிகொள்'(பக். 125) என்று பாரதத்தைத் தட்டி யெழுப்புகிறார் அவர். உறங்கிக் கிடக்கின்ற பாரத மணித் திருநாடு உணர்வு பெற்றெழ வேண்டுமானால், முதலில் நாம் ஒவ்வொருவரும் நமது பாரம்பரியத்தை அறிய வேண்டும். அதனை அறியாததால்தான், உணராததால்தான் 'நமது நாட்டில் எதுவும் இல்லை, எல்லாம் வெளியிலிருந்துதான் வர வேண்டும்' என்று கருதி, மேலை நாகரீகங்களின் பின்னால் ஓடத் தலைப்படுகிறோம். ஆனால் 'ஒருவன் தன் முன்னோரைக் குறித்து வெட்கப்பட ஆரம்பித்துவிட்டானானால் அவனுக்கு முடிவுக்காலம் வந்துவிட்டது' (பக். 331) என்று எச்சரிக்கிறார் சுவாமிஜி. எனவே, நாம் பெருமைப்பட வேண்டிய, கர்வப்பட வேண்டிய நமது பாரம்பரியம் எது என்பதை இந்தச் சொற்பொழிவுகளில் எடுத்துக் கூறுகிறார்.

இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் பேராசிரியர் திரு. ஏ. சுப்பிரமணியம் அவர்கள். அவருக்கும், மற்றும் மொழிவளம், அச்சுப்பிரதிகளைச் சரிபார்த்தல் என்று பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் இறைவன் திருவருள் புரிவாராக! ஞானதீபத்தின் இந்தச் சுடரும் படிப்போருக்கு ஒளிகாட்டி, வழிகாட்டி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்லுமாக!

31.1.1997, சுவாமி விவேகானந்தரின் 135-ஆம் ஜெயந்தி
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4

## இந்தச் சுடரில்....

**1893**, செப்டம்பர் 11-ஆம் நாள் அமெரிக்காவிலுள்ள சிகாகோவில் நடைபெற்ற சர்வமத மகாசபையில் சுவாமி விவேகானந்தர் பேசினார். அன்று தொடங்கியது ஒரு புதிய யுகம்! சுமார் நான்கு ஆண்டுகள் அங்கே தங்கி, இந்திய ஆன்மீகத்தின் வெற்றிக்கொடியைப் பறக்க விட்டார். 1896, டிசம்பர் 30-ஆம் நாள் தாயகத்திற்குப் புறப்பட்டார். 1897, ஜனவரி 15-ஆம் நாள் இலங்கை வந்தார். அங்கே ஓரிரு சொற்பொழிவுகள் நிகழ்த்திவிட்டு, ஜனவரி 26-ஆம் நாள் தமிழ்நாட்டிலுள்ள பாம்பன் வந்து சேர்ந்தார். தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களிலும், வங்காளம், உத்திரப் பிரதேசம், பஞ்சாப் (தற்போது பாகிஸ்தானிலுள்ள பகுதி), ராஜஸ்தான், கிழக்கு வங்காளம் (தற்போதைய பங்களாதேஷ்) முதலிய இடங்களிலும் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அவற்றுள் நமக்குக் கிடைத்த 30 சொற்பொழிவுகளையே இந்தச் சுடரில் காண்கிறோம்.

# பொருளடக்கம்

## இலங்கை

# 1. கொழும்பில்

மேலை நாடுகளில் பணி ஆற்றிய பின்னர் சுவாமி விவேகானந்தர் 1897, ஜனவரி 15-ஆம் நாள் பிற்பகலில் கொழும்பு வந்து சேர்ந்தார். அங்குள்ள இந்துப் பெரு மக்கள் அவரை அரச மரியாதையுடன் வரவேற்றனர்.

சுவாமிஜி தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்பைக் குறிப்பிட்டு, அது ஒரு சிறந்த அரசியல்வாதிக்கோ போர்வீரனுக்கோ செல்வந்தனுக்கோ தரப்படவில்லை; மாறாக, பிச்சையேற்று வாழும் ஒரு துறவிக்கு அளிக்கப்பட்டுள்ளது; இதுவே மதத்தைப் பொறுத்தவரை இந்துக்களின் மனப்போக்கைக் காட்டுவ தாக அமைகிறது என்றார். நமது நாடு வாழ வேண்டுமானால் மதமே தேசிய வாழ்க்கையின் முதுகெலும்பாக அமைய வேண்டும் என்பதை வற்புறுத்தினார். தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு, ஒரு கொள்கைக்குக் கிடைத்த வரவேற்பே தவிர, தனிமனிதனுக்கு அளிக்கப்பட்டது அல்ல என்பதையும் சுவாமிஜி கூறினார்.

மறுநாள் பிற்பகல் பிளோரல் மண்டபத்தில் அவர் உரையாற்றினார்.

## வரவேற்புக்குப் பதிலுரை

என்னால் செய்யப்பட்ட ஏதோ சிறிதளவு பணி என்னுள் இருக்கும் ஆற்றலால் செய்யப்பட்டதல்ல; மிகுந்த அன்பிற் குரியதும் மிகப் புனிதமானதும் பிரியமானதுமான இந்த நமது தாய்நாட்டிலிருந்து என்னைத் தொடர்ந்து வந்த உற்சாக மொழி களாலும் நல்வாழ்த்துக்களாலும் ஆசிகளாலுமே செய்யப் பட்டது. சிறிது நற்பணி நடைபெற்றுள்ளது, உண்மைதான். ஆனால் எனக்குத்தான் அதனால் அதிக நன்மை விளைந் துள்ளது. ஏனெனில், ஒருவேளை என் உணர்ச்சிப் பெருக்கின் விளைவாக இருந்த என் பணி இப்போது திடவுறுதி பெற் றுள்ளது; அதைச் செயல்படுத்துவதற்கான வலிமையும் திறமை யும் இப்போது எனக்கு வந்துள்ளது.

ஒவ்வோர் இந்துவும் நினைப்பதைப்போல் இந்த நாடு புண்ணிய பூமி, கர்ம பூமி என்று நானும் முன்பு நினைத்திருந் தேன், அவ்வளவுதான். நமது அவைத்தலைவரும் சற்று முன்பு

அதையே குறிப்பிட்டார். ஆனால் இன்று, இதோ இங்கே நின்றுகொண்டு, அது அப்படியே உண்மை என்று உண்மையின் உறுதிப்பாட்டுடன் சொல்கிறேன். இந்த உலகத்தில் புண்ணிய பூமி என்று சொல்லத்தக்க ஒரு நாடு இருக்குமானால், தங்கள் வினைப்பயன்களைத் தீர்த்துக் கொள்வதற்காக ஒவ்வோர் உயிரும் வந்தாக வேண்டிய ஓர் இடம் இருக்கிறது என்றால், கடவுளைத் தேடிச் செல்கின்ற ஒவ்வொரு ஜீவனும் வந்துசேர வேண்டிய கடைசி வீடு ஏதாவது இருக்கிறது என்றால், மென்மையிலும் தாராள மனப்பான்மையிலும் புனிதத்திலும் அமைதியிலும், இவையனைத்திற்கும் மேலாக அக நோக்கிலும் ஆன்மீகத்திலும் மனித சமுதாயம் உச்சத்தை அடைந்த நாடு ஏதாவது உண்டென்றால் அது பாரதத் திருநாடே.

எனவேதான் மிகப் பழங்காலத்திலிருந்தே ஆச்சாரிய புருஷர்கள் இந்தப் பூமியைப் புனிதமான, வற்றாத ஆன்மீக வெள்ளத்தால் மீண்டும்மீண்டும் நிறைத்திருக்கிறார்கள். அதனால்தான் இங்கிருந்து கிளம்பிய தத்துவப் பேரலைகள் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்று உலகின் எல்லா திசைகளிலும் பரந்துள்ளன. அதனால்தான் உலகாயதக் கலாச்சாரத்தை ஆன்மீகமயமாக்கப் போகின்ற அலையும் இங்கிருந்துதான் எழுந்தாக வேண்டும். மற்ற நாடுகளிலுள்ள லட்சக்கணக்கான மக்களின் இதயத்தின் அடியாழங்களைச் சுட்டுப் பொசுக்குவதான உலகாயதப் பெருந்தீயைத் தணிக்கின்ற, வாழ்க்கை வளத்தை நல்குகின்ற நீர் இங்கேதான் உள்ளது. என்னை நம்புங்கள் நண்பர்களே, இது நடக்கத்தான் போகிறது.

இதை நான் காண்கிறேன். உங்களுள், மனித இனங்களின் வரலாற்றைப் படித்தவர்களுக்கு இந்த உண்மை தெரிந்திருக்கும். நமது தாய்த் திருநாட்டிற்கு இந்த உலகம் பட்டுள்ள கடன் அளவற்றது. ஒவ்வொரு நாடாகப் பாருங்கள்; அமைதியான, சாதுவான இந்துவிற்குக் கடன்பட்ட அளவிற்கு உலகம் வேறெந்த இனத்திற்கும் கடன்பட்டதில்லை. 'சாதுவான இந்து' என்ற சொல் சிலவேளைகளில் குற்றம் சாட்டும் தொனியில் பயன்படுத்தப் படுகிறது. ஆனால் எந்தக் குற்றப் படுத்தலிலாவது அற்புதமான உண்மை ஒன்று எப்போதாவது மறைந்திருக்க முடியுமானால், அது, கடவுளின் ஆசீர்வதிக்கப்பட்ட பிள்ளையாக என்றென்றைக்கும் இருந்துவருகிறானே, அந்த இந்துவைக் குறிக்கின்ற 'சாதுவான இந்து' என்னும் சொல்லில்தான்.

உலகின் மற்ற பகுதிகளில் கலாச்சாரங்கள் தோன்றியுள்ளன. வலிமையும் பெருமையும் வாய்ந்த இனங்களிலிருந்து மகத்தான சிந்தனைக் கிரணங்கள் அன்றும் இன்றும் எழுந்து பரந்துள்ளன. இனங்களுக்கிடையே அற்புதமான கருத்துக் கருவூலங்கள் அன்றும் இன்றும் பரிமாறப் பட்டுள்ளன. மகோன்னதமான உண்மை மற்றும் ஆற்றலின் விதைகள், முன்னேறி வருகின்ற தேசிய வாழ்க்கையின் பேரலைகளால் அயல்நாடுகளில் அன்றும் இன்றும் பரப்பப்பட்டுள்ளன.

ஆனால் நண்பர்களே, ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள்; இவையனைத்தும் போர்முரசுகளின் காதைப் பிளக்கின்ற முழக்கங்களோடும் படைகளின் அணிவகுப்புகளோடுமே சாதிக்கப்பட்டன. ஒவ்வொரு கருத்தும் ரத்த வெள்ளத்தில் தோய்த்தே பரப்பப்பட்டது. லட்சக்கணக்கான நம் உடன் பிறந்தவர்களின் ரத்தத்தின்மீது நடந்து சென்றே ஒவ்வொரு சிந்தனையும் பரப்பப்பட்டது. வலிமைமிக்க அந்தக் கருத்துக்கள் சென்ற இடங்களில் எல்லாம், அவற்றைத் தொடர்ந்து லட்சக்கணக்கானோரின் மௌன ஓலங்களும் அனாதைகளின் அழுகுரலும் விதவைகளின் கண்ணீரும்தான் எழுந்தன. மற்ற நாடுகள் முக்கியமாகக் கற்றுத் தந்த பாடம் இதுதான்.

ஆனால் இந்தியா ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அமைதியுடன் வாழ்ந்து வருகிறது. கிரீஸ் என்ற நாடு தோன்று முன்னரே, ரோமப் பேரரசு கற்பனையில்கூட உதிக்குமுன்னரே, இன்றைய இதே ஐரோப்பியரின் மூதாதையர் தங்கள் உடம்புகளில் நீல நிறச் சாயத்தைப் பூசிக்கொண்டு காடுகளில் வாழ்ந்த காலத்திலேயே இங்கே மிகச் சிறந்த வாழ்க்கைமுறைகள் உருவெடுத்துவிட்டன. அதற்கு முன்புகூட, வரலாறு என்ற ஒன்று இருந்ததற்குச் சான்றுகள் இல்லாத காலத்திலிருந்தே, கடந்தகாலத்தின் இருண்ட கருவறைக்குள் தங்கள் பார்வையைச் செலுத்தப் பாரம்பரியங்கள் அஞ்சி நிற்கின்ற அந்தக் காலத்திலிருந்தே இன்றுவரையில், ஒன்றன்பின் ஒன்றாகச் சிந்தனைப் பேரலைகள் இந்தியாவிலிருந்து அணிவகுத்து உலகெங்கும் சென்றுள்ளன. ஆனால் அந்த ஒவ்வொரு வார்த்தைகளும் உச்சரிக்கப்பட்ட போதெல்லாம், முன்னால் அமைதியும் பின்னால் ஆசிகளும் மட்டுமே விளைவாக இருந்தது. நாம் மட்டுமே பிற நாடுகளை வென்று அடிமைப்படுத்தாத இனமாக வாழ்கிறோம். அந்தப் பேராசிகளின் காரணமாகத்தான் நாம் இன்றும் வாழ்ந்துவருகிறோம்.

கிரேக்கப் படைகளின் அணிவகுப்பு முழக்கத்தைக் கேட்டு, இந்தப் பூமியே அதிர்ந்த ஒரு காலம் இருந்தது. அந்தப் பழம் பெரும் நாடு இன்று அழிந்துவிட்டது; தனது பெருமையை எடுத்துச் சொல்வதற்குக்கூட ஒருவரின்றி பூமியிலிருந்தே மறைந்துவிட்டது. மதிப்பு வாய்ந்தவையாக இருந்த அனைத்தின் மீதும் ரோமானியர்களின் கழுகுக்கொடி[1] உயர்ந்தோங்கிப் பறந்த காலம் ஒன்று இருந்தது. எங்கும் அதன் அதிகாரம் கொடிகட்டிப் பறந்தது; அந்த அதிகாரம் மனித குலத்தின்மீது சுமத்தவும் பட்டது. அதன் பெயரைக் கேட்டே இந்தப் பூமி நடுங்கியது. ஆனால் இன்று கேபிடோலின் குன்று[2] உடைந்து சின்னா பின்னப்பட்டுக் கிடக்கிறது. சீசர்கள் ஆண்ட இடத்தில் சிலந்திகள் வலை பின்னுகின்றன. அதுபோலவே பல நாடுகள் பெரும் புகழுடன் எழுந்தன; செல்வச் செழிப்புடனும் மகிழ்ச்சிப் பேராரவாரத்துடனும் ஆதிக்க வெறியுடனும் கொடிய லட்சியங் களுடனும் வாழ்ந்தன; ஆனால் கண நேரத்திற்குத்தான், நீர் மேல் குமிழிபோல் எல்லாம் மறைந்துவிட்டன. அவற்றின் அடையாளச் சுவடுகள் மட்டுமே இன்று மனித குலத்தின் நினைவில் நிழலாடுகிறது.

ஆனால் நாம் வாழ்கிறோம். மனு இன்று மீண்டும் வந்தால் கூட, தான் ஏதோ அன்னிய நாட்டிற்கு வந்துவிட்டதாக எண்ணி அவர் அஞ்சி நடுங்க வேண்டியிருக்காது. ஏனெனில் அவர் வகுத்த நியதிகளே இன்றும் உள்ளன. இந்த ஆயிரக்கணக் கான ஆண்டுகளில் அந்த நியதிகளைக் காலத்தின் தேவைகளுக்கு ஏற்ப ஏதோ சிறிது மாற்றியிருக்கலாம். ஆனால் நமது சிந்தனை சக்தியின் விளைவாகக் காலங்காலமாக இருந்து வருகின்ற பழக்கவழக்கங்களும் நமது அனுபவங்களும் அழிவற்றவை போல் அப்படியே உள்ளன. காலப்போக்கில் துரதிர்ஷ்டத்தின் எத்தனையோ பேரடிகள் ஒன்றன்பின் ஒன்றாக அவற்றின்மீது விழுந்தன. ஆனால் அந்த அடிகள் ஒவ்வொன்றும் அவற்றை மேலும் வலுவுடையவையாக, மேலும் நிரந்தரமானவையாகச்

---

1. ரோமானியப் படையினர் புலி, குதிரை, கரடி போன்ற உருவங்கள் பொறித்த கொடி தாங்கிச் செல்வது வழக்கம். மாரியஸ் (கி.மு. 155–86) என்ற மன்னன் தன் காலத்தில் கழுகின் உருவம் கொண்ட கொடியை உடையவனாக இருந்தான்.

2. பண்டைய ரோமப் பேரரசு ஏழு குன்றுகளின் மீது அமைக்கப்பட்டி ருந்தது. அவற்றுள் பண்டைய ரோமானியர்களின் தெய்வமான ஜுபிடரின் ஆலயம் அமைந்திருந்த குன்று கேபிடோலின் (Mons Capitolinus). இதன் மீதுதான் அவர்களின் தலைநகரம் அமைக்கப் பட்டிருந்தது.

செய்தனவே தவிர, அவற்றைச் சற்றும் அசைக்கவில்லை. அவற்றின் மையப்பகுதி, அந்த இதயப்பகுதி, தேசிய வாழ்க்கையின் அடிப்படை ஆதார ஊற்று எங்கே உள்ளது என்பதை ஆராய்ந்து பார்த்தோமானால், அது இங்கே உள்ளது என்றே என் உலக அனுபவம் சொல்கிறது. இதை நம்புங்கள்! மற்ற நாடுகளுக்கு மதம் என்பது வாழ்க்கையின் எத்தனையோ அம்சங்களுள் ஒன்று. அரசியல் உள்ளது, சமுதாய வாழ்வின் சுகபோகங்கள் உள்ளன; பணத்தால் வாங்கக்கூடிய, அதிகாரத்தால் சாதிக்கக்கூடிய எல்லாம் உள்ளன; புலன்களால் அனுபவிக்க முடிந்தவை எல்லாம் உள்ளன. இவற்றுக்கிடையே, ஏற்கனவே சுக அனுபவங்களால் திகட்டிப்போன புலன்களுக்கு மேலும் கொஞ்சம் இன்பம் தருபவற்றைத் தேடுகின்ற தேடலுக்கு இடையே மதத்திற்கும் ஏதோ ஒரு சிறு இடம் உள்ளது, அவ்வளவுதான்.

ஆனால் இங்கே இந்தியாவில் மதம் ஒன்றுதான் வாழ்க்கை. சீனாவுக்கும் ஜப்பானுக்கும் இடையில் போர்[1] நடந்ததுபற்றி உங்களுள் எத்தனை பேருக்குத் தெரியும்? தெரிந்திருந்தாலும் அது ஏதோ ஒருசிலருக்குத்தான். மேலை நாட்டின் சமுதாய அமைப்பை மாற்றுவதற்காக மகத்தான அரசியல் இயக்கங் களும் சோஷலிச இயக்கங்களும் முயற்சி செய்துவருவதைப் பற்றி உங்களுள் எத்தனை பேருக்குத் தெரியும்? நிச்சயமாக மிகச் சிலருக்கே. ஆனால் அமெரிக்காவில் சர்வமத மகாசபை ஒன்று கூடியது, அதில் கலந்துகொள்ள இந்துத் துறவி ஒருவர் அனுப்பப்பட்டார்—இதை இங்கே ஒரு சாதாரணக் கூலியாள் கூட அறிந்திருப்பது எனக்குப் பிரமிப்பைத் தருகிறது. நமது பாதை எது, நமது தேசிய வாழ்க்கை எதை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது என்பதையே இது காட்டுகிறது. உலகைச் சுற்றிவருகின்ற, குறிப்பாக அன்னிய நாட்டு யாத்திரிகர்கள் எழுதிய நூல்களை நான் படிப்பதுண்டு. கீழை நாட்டு மக்களின் அறியாமையைப்பற்றி அவர்கள் ஏதேதோ எழுதியிருக் கிறார்கள்; அதில் ஓரளவிற்கு உண்மை இருந்தாலும் பொய்யும் கலந்தே உள்ளது. இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ் அல்லது ஜெர்மனியிலுள்ள ஒரு குடியானவனிடம், 'நீ எந்தக் கட்சியைச் சேர்ந்தவன்?' என்று கேட்டால், தான் ரேடிகல் (Radical)

1. கொரியாவின் மீது யார் ஆதிக்கம் செலுத்துவது என்பதை நிலை நாட்ட இரு நாடுகளுக்கும் இடையே 1894-ஆம் நடைபெற்ற போர். பின்னர் 1895-இல் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி ஜப்பான் அந்த அதிகாரத்தைப் பெற்றது.

அல்லது கான்சர்வேடிவ் கட்சியைச் (Conservative) சார்ந்தவன், இன்னாருக்கு ஓட்டளிக்கப் போகிறேன் என்பதையெல்லாம் பளிச்சென்று கூறுவான். அமெரிக்கனாக இருந்தால், தான் ரிபப்ளிக் (Republic) கட்சியைச் சார்ந்தவன் அல்லது டெமாக்ரடிக் (Democratic) கட்சியைச் சார்ந்தவன் என்பான்; ஒருவேளை வெள்ளிப் பிரச்சினையைப்[1] பற்றிக்கூடச் சிறிது அறிந்திருப்பான். ஆனால், 'உன் மதம் எது?' என்று கேட்டாலோ, ஏதோ ஒரு பிரிவின் பெயரைச் சொல்வான், தினமும் சர்ச்சுக்குப் போவதாகவும் கூறுவான். அவனுக்குத் தெரிந்தது அவ்வளவுதான், அதுபோதும் என்றே அவன் நினைக் கிறான்.

இந்தியாவை எடுத்துக் கொள்வோம். இங்குள்ள ஒரு குடியானவனிடம், 'உனக்கு அரசியலைப்பற்றி ஏதாவது தெரியுமா?' என்று கேட்டுப் பாருங்கள். 'அது என்ன?' என்று கேட்பான் அவன். சோஷலிச இயக்கங்கள் பற்றியும் அவனுக்குத் தெரியாது, முதலாளி-தொழிலாளி வர்க்கத்திற்கு இடையே உள்ள உறவு, அது இது என்பதெல்லாமும் அவனுக்குப் புரியாது. இவற்றைப்பற்றி அவன் கேள்விப்பட்டதும் இல்லை. அவன் கடினமாக உழைக்கிறான், வேண்டியவற்றைச் சம்பாதிக்கிறான், அவ்வளவுதான். ஆனால் அவனிடம், 'உனது மதம் எது?' என்று மட்டும் கேட்டுப் பாருங்கள். 'நண்பா, அதை என் நெற்றியிலேயே இட்டிருக்கிறேன் பார்' என்று தாமதமின்றிப் பதிலளிப்பான். மதத்தைப் பற்றி ஓரிரு விளக்கங்களைக்கூட அவனால் கொடுக்க முடியும். இது என் அனுபவம். இதுதான் நமது தேசிய வாழ்க்கைமுறை.

ஒவ்வொருவரும் சில தனித்தன்மைகளைப் பெற்றிருக் கிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் தான் வளர்வதற்கான ஒரு தனிப்பட்ட முறை உள்ளது. அவனது வாழ்க்கைகூட— இந்துக் களாகிய நாம் சொல்கிறோமே அதுபோல், முடிவற்ற தனது முற்பிறவிகளால், வினைப்பயனால் நிர்ணயிக்கப்பட்ட—தனி வாழ்க்கையாகவே உள்ளது. கடந்தகால வினைகளின் மொத்தச்

---

1. Silver Question; அமெரிக்காவில் தங்க, வெள்ளி நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன. 1873-இல் வெள்ளி நாணயங்கள் நிறுத்தப்பட்டன. நாட்டில் நாணயத் தட்டுப்பாடு ஏற்பட்டது. இதனால் பெரும் அவதிக்குள்ளான குடியானவர் போன்ற கடைநிலை வர்க்கத்தினர் மீண்டும் வெள்ளி நாணயங்களைக் கொண்டு வருமாறு போராடினர். இந்தப் போராட்டக் காலத்தில் சுவாமிஜி அமெரிக்காவில் இருந்தார். அவர் மிஸ். மேரி ஹேலுக்கு எழுதிய கடிதத்தில் (1. 11. 1896) இதைக் குறிப்பிடுகிறார்.

சுமையுடன் அவன் இந்த உலகிற்கு வருகிறான். முடிவற்ற அந்தக் கடந்தகாலம் நிகழ்காலத்தை நிர்ணயிக்கிறது. நிகழ்கால வாழ்க்கையை நாம் பயன்படுத்துகின்ற விதம் எதிர்காலத்தை உருவாக்குகிறது. இவ்வாறு இந்த உலகத்தில் பிறந்த ஒவ்வொரு வருக்கும் தனிப் பாதை உள்ளது; அவன் எந்தத் திசையில் போக வேண்டும், எப்படி வாழ வேண்டும் என்பது நிர்ணயிக்கப் பட்டுள்ளது.

தனிமனிதனின் விஷயத்தில் எது உண்மையோ அது ஓர் இனத்தைப் பொறுத்தவரையிலும் உண்மை. எனவே ஒவ் வோர் இனத்திற்கும் ஒரு தனிப் பண்பு உள்ளது; அது இருப் பதற்குத் தனிக் காரணம் உள்ளது; இந்த உலகத்தில் நடத்தி முடிக்க அதற்கென்று தனிப் பணியும் உள்ளது. தன் லட்சியத்தை அந்த இனமே முடிவு செய்ய வேண்டும்; அதுவே அதனைச் சாதிக்கவும் வேண்டும்.

அரசியல் மகோன்னதமோ ராணுவ அதிகாரமோ நம் இனத்தின் தனிச் செய்தி அல்ல; அப்படி இருந்ததும் இல்லை, இருக்கவும் இல்லை; என் வார்த்தையைக் குறித்துக் கொள் ளுங்கள், இனி இருக்கப்போவதும் இல்லை. ஆனால் நமக் கென்று மற்றொரு லட்சியம் தரப்பட்டிருக்கிறது. அது, நம் இனத்தின் எல்லா ஆன்மீக சக்தியையும் ஒன்று திரட்டி, அதனைப் பாதுகாத்து, அதை ஒரு ‘டைனமோ’விற்குள் சேமிப் பதுபோல் சேமித்து, ஒருங்கிணைந்த அந்தச் சக்தியை, தகுந்த வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம், உலகம் முழுவதும் வெள்ளம்போல் பெருக்கெடுக்கச் செய்வதாகும். பாரசீகனும் கிரேக்கனும் ரோமானியனும் அரேபியனும் ஆங்கிலேயனும் படைகளை நடத்தட்டும், உலகை வெல்லட்டும், அதன்மூலம் வெவ்வேறு நாடுகளை இணைக்கட்டும். அந்த இணைப்புப் பாதையின் வழியாக இந்தியாவின் தத்துவமும் ஆன்மீகமும் உலக நாடுகளின் நாடிநரம்புகளுள் பாய்வதற்குத் தயாராக இருக்கும். மனித சமுதாயத்தின் ஒட்டுமொத்த முன்னேற்றத்தில் இந்துவின் அமைதியான மூளையும் தன் பங்கைக் கொடுத்தே ஆக வேண்டும். ஆன்மீக ஒளியே உலகிற்கு இந்தியாவின் நன் கொடையாகும்.

இவ்வாறே கடந்த காலங்களில் நடந்துள்ளது. எப் போதெல்லாம் உலகை வெல்லும் ஒரு நாடு தோன்றி பல்வேறு இன மக்களை வென்று, இந்தியாவை அவைகளோடு இணைத் ததோ, தனக்குள் ஆழ்ந்திருந்தது போலிருந்த இந்தியாவைத்

தனிமையிலிருந்தும் ஒதுங்கிய நிலையிலிருந்தும் விலக்கி உலகத் தோடு ஒன்று சேரும்படி வைத்ததோ, அப்போதெல்லாம், அத் தகைய சூழல் உருவாக்கப்பட்ட போதெல்லாம், அதன் விளை வாக உலக நாடுகள் முழுவதும் இந்திய ஆன்மீகம் பாய்ந்து சென்று பரவி இருக்கிறது.

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஜெர்மனியின் சிறந்த தத்துவ ஞானியான ஷோபனேர் (Schopenhauer) வேதங்களின் லத்தீன் மொழிபெயர்ப்பைப் படித்தார். அது முதலில் பாரசீக மொழியிலும் பின்னர் அதிலிருந்து பிரெஞ்சு இளைஞன் ஒரு வனால் லத்தீனிலும் மொழிபெயர்க்கப்பட்டது.[1] அவ்வளவு சிறப்பான மொழிபெயர்ப்பாக அதனைக் கருதுவதற்கில்லை. இருப்பினும் அதைப் படித்தபின் அவர், 'உபநிடதங்களைப் போல் நன்மையளிப்பதும் உன்னதமான நிலைக்கு அழைத்துச் செல்வதுமான நூல் எதுவும் இல்லை. அது என் வாழ்விற்கு அமைதியைத் தருவதாக உள்ளது; என் மரணத்திற்கும் அமைதியை அளிப்பதாக இருக்கும்' என்று கூறியுள்ளார். இந்த மகத்தான ஜெர்மானியப் பேராசிரியர் முன்பே தீர்க்க தரிசனமாக, 'கிரேக்க இலக்கியங்களால் உலகச் சிந்தனையில் ஏற்பட்ட மறுமலர்ச்சியைவிட மிக ஆற்றல் வாய்ந்த, மிகவும் தீவிரமான சிந்தனை மறுமலர்ச்சி ஏற்படப் போவதை உலகம் காணப் போகிறது' என்று கூறினார். இப்போது அவரது வார்த்தைகள் உண்மையாகிக் கொண்டிருக்கின்றன. யாரெல் லாம் கண்களைத் திறந்து வைத்துள்ளனரோ, யாரெல்லாம் மேலைத் திசையில் உள்ள பல்வேறு நாட்டு மக்களின் மனப் போக்குகளைப் புரிந்து கொண்டார்களோ, யாரெல்லாம் பல் வேறு நாடுகளைப்பற்றிப் படிக்கின்ற சிந்தனையாளர்களோ, அவர்கள், மெதுவாக ஆனால் தொடர்ச்சியாக எல்லா இடங் களிலும் பரவிக் கொண்டிருக்கின்ற இந்த இந்தியச் சிந்தனை களால் உலக இலக்கியங்களின் கண்ணோட்டமும் போக்கும் வழிமுறைகளும் வெகுவாக மாறி வருவதைக் காண்பார்கள்.

ஆனால் முன்பு நான் கோடிகாட்டியதுபோல் மற்றொரு விசித்திரம் இதில் உள்ளது. நாம் ஒருபோதும் நம் கருத்துக்களை

---

1. முகலாய சக்கரவர்த்தியான ஷாஜஹானின் மூத்த மகனான தாராசிகோ உபநிடதங்களைப் பாரசீக மொழியில் மொழிபெயர்க்கச் செய்தார். சுஜா உத்தௌலாவின் சபையிலுள்ள ஒரு பாரசீகர் அதனைச் செய்தார். அதன் பெயர் 'உபநேகத்' என்பதாக இருந்தது, ஆதேதில் துபேரோம் அதனை லத்தீனில் மொழிபெயர்த்தவர். இந்த மொழிபெயர்ப்பையே ஷோபனேர் படித்தார்.

வாள்மூலமோ நெருப்பின் மூலமோ பரப்பவில்லை. இந்தியா உலகிற்குத் தந்த கொடையை விளக்குவதற்கு ஒரு சொல் ஆங்கில மொழியில் இருக்கிறதென்றால், இந்திய இலக்கியங்களால் மனித சமுதாயத்தில் ஏற்பட்ட விளைவுகளை விளக்குவதற்கு ஆங்கிலத்தில் ஒரு சொல் இருக்குமானால், அது, Fascination (வசீகரம்) என்பதே. அது திடீரென்று ஒருவரை அப்படியே பற்றிப் பிடித்துக் கொள்கின்ற கவர்ச்சி அல்ல; உணர முடியாத வகையில் ஒருவர்மீது ஆதிக்கம் செலுத்துகின்ற வசீகரம் அது. இந்தியச் சிந்தனை, இந்தியப் பழக்க வழக்கங்கள், இந்தியத் தத்துவம், இந்திய இலக்கியம் முதலானவை எடுத்த எடுப்பில் பலருக்கு வெறுப்பைத் தருவதாக இருக்கும். ஆனால் அவர்கள் பொறுமையைக் கைக்கொள்ள வேண்டும், தொடர்ந்து படிக்க வேண்டும். அந்தக் கொள்கையின் அடிஊற்றாக ஓடுகின்ற மகத்தான கருத்துக்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். அப்போது நூற்றுக்கு தொண்ணூற்றொன்பது பேரும் அதன் தாக்கத்தைப் புரிந்துகொள்வார்கள், அந்த வசீகரத்தை உணர்வார்கள். அதிகாலையில் மெதுவாக அமைதியாக உதிர்கின்ற பனித்துளிகளைக் காணவோ கேட்கவோ முடியாது, இருந்தாலும் அவை எத்தனை அற்புதங்களை நிகழ்த்திவிடுகின்றன! அமைதியான, பொறுமை யான, துயரத்தையே அனுபவித்து வந்துள்ள இந்த ஆன்மீக இனமும் அதுபோலவே உலகின் சிந்தனைப் போக்கில் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது.

வரலாறு மீண்டும் திரும்பப் போகிறது. ஏனெனில் ஆற்றல் மிக்கவையாகவும் தகர்க்க முடியாதவை போலவும் தோன்றிய பழங்கால நம்பிக்கைகள் எல்லாம் இன்று நவீன விஞ்ஞானத் தின் கண்கூசுகின்ற ஒளி வெள்ளத்தில் வேருடன் சாய்க்கப் படுகின்றன; மனித குலத்தின் கடமை இதுதான் என்று பல் வேறு மதப் பிரிவுகளும் வகுத்தளித்த விசேஷ ஆணைகள் எல்லாம் அணுஅணுவாகச் சிதறி, காற்றோடு காற்றாகக் கரைந்து மறைகின்றன; பழங்காலத்தைப் பற்றிய நவீன ஆராய்ச்சிகளின் கூர்மையான சம்மட்டி முனைகள் புராதனத்தின் குறுகிய கருத்துக்களை எல்லாம் பீங்கான் சில்லுகளைப்போல் நொறுக்கித் தூள்தூளாக்குகின்றன. மேலை நாட்டின் மதமோ அறிவற்றோரின் கைகளில் சிக்கிக் கிடக்கிறது. அதனால் அறி ஞர்கள் மதத்தைச் சார்ந்த எதையும் வெறுப்போடு பார்க்கின் றனர். இந்த நிலையில்தான், இந்திய மனங்களின் மிகவுயர்ந்த

ஆன்மீக லட்சியங்களின் வெளிப்பாடாக இருப்பதும், தத்துவ உண்மைகளின் சிகரங்களைத் தொடுகின்ற, அதேவேளையில் மக்களின் அன்றாட வாழ்வில் செயல்முறைப்படுத்தக் கூடியதாக இருப்பதும் ஆகிய இந்தியத் தத்துவ ஞானம் முன்னே வருகிறது. எல்லோரும் ஒன்றே என்னும் கருத்து, எல்லையில்லா தன்மை, அருவக் கொள்கை, மனிதனின் ஆன்மா அழிவற்றது என்னும் அற்புதக் கோட்பாடு, முன்னேற்றத்திலுள்ள தடையற்ற தொடர்ச்சி பற்றிக் கூறும் கொள்கை, முடிவேயில்லாத அண்ட சராசரங்களைப் பற்றிக் கூறும் கொள்கை—இவை அவர்களை மீட்பதற்குத் தாமாகவே வருகின்றன.

உலகத்தை ஒரு சிறிய சேற்றுக் குட்டை என்றும், காலம் என்பது சில நாட்களுக்கு முன் துவங்கியது என்றும் பழங்கால மதங்கள் நினைத்து வந்தன. ஆனால் நம் சாஸ்திரங்களில், நம் சாஸ்திரங்களில் மட்டுமே, முடிவேயில்லாத, மகத்தான காலத்தையும் பிரபஞ்சத்தைப் பற்றியும், தோற்றங்களின் காரணம் பற்றியும், இவற்றுக்கு எல்லாம் மேலாக மதங்களின் தேடலுக்கு முக்கியப் பொருளான ஆன்மாவின், மனிதனின் எல்லையற்ற பெருமை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

தற்காலத்தின் பரிணாமக் கொள்கை,[1] ஆற்றல் மாறாக் கொள்கை[2] முதலியவை, குருட்டுத்தனமான மதக் கோட்பாடுகளுக்கு மரண அடி கொடுத்து வருகின்றன. இந்த நிலையில், மனித மனத்தின் மிகச் சிறந்த கண்டுபிடிப்பான, ஆண்டவனின் அற்புதக் குரலான வேதாந்தம் கூறுகின்ற மிகவும் ஆச்சரியகரமான, நம்பிக்கையைத் தருகின்ற, மனத்தை விரிவுபடுத்துகின்ற மகத்தான கருத்துக்களைத் தவிர வேறு எது பண்பட்ட மனித சமுதாயத்தின் அன்பைப் பெறுவதாக இருக்க முடியும்?

இந்தியாவிற்கு வெளியே உள்ள நாடுகளில் நமது மதம் செயல்படுகிறது என்று கூறினேன். இங்கு நான் மதம் என்று குறிப்பிடுவது, மதத்தின் கோட்பாடுகளை, அதன் பின்னணியை, எந்த அடிப்படைமீது மதம் கட்டப்பட்டுள்ளதோ அந்த அடிப்படையை மட்டுமே. பல்வேறு விளக்கங்களோ, சமுதாயத்தின் தேவைகளுக்காகப் பல நூற்றாண்டுகளாக ஏற்படுத்திக்கொண்ட

---

1. Theory of Evolution; ஓர் இனத்தைச் சேர்ந்த உயிர், தேவையை முன்னிட்டும் சூழ்நிலையின் தாக்கத்தாலும் இன்னோர் உயர்நிலை உயிராகப் பரிணமிக்கிறது என்ற கொள்கை. டார்வினின் கொள்கை இது.

2. Law of Conservation of Energy; சக்தி ஒன்றிலிருந்து மற்றொன்றாக மாறுகிறதே தவிர, அளவில் மாறுவதில்லை, எப்போதும் ஒரே அளவாகவே இருக்கிறது.

நுட்பமான கருத்துக்களோ, சமுதாய நலனிற்காக பழக்க வழக்கங்களுக்குக் கொடுத்த காரணகாரிய விளக்கங்களோ அந்த மதத்தில் இடம் பெறாது.

இரண்டு தனித்தனியான உண்மைகளை நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன: ஒன்று, என்றென்றும் நின்று நிலவுகின்ற உண்மைகள்; மனிதனின் இயல்பு, ஆன்மாவின் இயல்பு, இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள தொடர்பு, இறைவனின் இயல்பு, பூரணத்துவம் போன்றவற்றின்மீது எழுப்பப்பட்டவை இவை. மேலும் பிரபஞ்சத்தின் படைப்பு, சரியாகச் சொல்வதானால் பிரபஞ்சத்தின் வெளிப்பாடு, பிறப்பு இறப்பாகிய சுழற்சி பற்றிய அற்புதமான விதி—இவை போன்றவையும் இதில் அடங்கும். இவையெல்லாம் இயற்கையில் காணப்படுகின்ற பிரபஞ்சம் தழுவிய நிலையான நியதிகளின் மீது அமைக்கப்பட்டவை.

மற்றொரு பகுதி அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படுகின்ற சாதாரண விதி முறைகள். அவை பெரும்பாலும் புராணம், ஸ்மிருதி முதலிய பகுதிகளைச் சார்ந்தவை; வேதங்களைச் சேர்ந்தவையல்ல. இந்த விதிகள் முதல்வகை உண்மைகளுடன் சிறிதும் தொடர்புடையவை அல்ல. நமது நாட்டில்கூட இந்த விதிகள் மாறிக்கொண்டே வந்திருக்கின்றன. ஒரு காலத்தின், ஒரு யுகத்தின் பழக்கங்கள், மற்றொரு காலத்தின், யுகத்தின் பழக்கங்களாக இருக்காது. யுகங்கள் மாறிமாறி வருவதற்கு ஏற்ப அவையும் மாறிக்கொண்டே இருக்கும். மாபெரும் ரிஷிகள் தோன்றி அந்த யுகத்தின் சூழலுக்கும் இயல்பிற்கும் தேவையான புதிய பழக்க வழக்கங்களை உருவாக்கி நம்மை வழிநடத்திச் செல்வார்கள்.

மனிதனையும் கடவுளையும் உலகையும் பற்றிய இந்த ஆச்சரியகரமான, முடிவே இல்லாத, உன்னதமான, மிகப் பரந்த கருத்துக்களின் அடிப்படையாக விளங்குகின்ற மகத்தான கோட்பாடுகள் இந்தியாவில் தோற்றுவிக்கப்பட்டன. இந்தியாவில் மட்டும்தான் மனிதன் பல்வேறு குழுக்களின் தெய்வங்களுக்காக, 'என் தெய்வம்தான் உண்மை, உன் தெய்வம் உண்மையில்லை. இதைக் குறித்து நாம் கடுமையாகச் சண்டை செய்வோம்' என்று மற்றவனை அறைகூவிச் சண்டைக்கு அழைக்கவில்லை. அத்தகைய எண்ணங்கள் இங்கு ஏற்படவே இல்லை. இந்த மகத்தான அடிப்படைக் கோட்பாடுகள், மனிதனின் அழிவற்ற இயல்பின் மீது எழுப்பப்பட்டுள்ளதால், அவை ஆயிரமாயிரம்

ஆண்டுகளுக்கு முன்பு போலவே, இன்றும் மனித இனத்தின் நன்மைக்காகச் செயல்படும் திறன் படைத்தவை; அவ்வாறே, இந்தப் பூமி இருக்கும்வரை, கர்ம நியதி இருக்கும்வரை, நமது கர்மங்களை நமது ஆற்றலினாலேயே வாழ்ந்து முடிப்பதற்காக நாம் தனி மனிதர்களாகப் பிறந்து கொண்டிருக்கும்வரை அவை நிலைத்து நிற்கவும் செய்யும்.

எல்லாவற்றிற்கும் மேலாக இந்தியா உலகிற்குக் கொடுக்க வேண்டியது இதுதான். பல்வேறு இனங்களில் மதம் தோன்றி வளர்ந்த வரலாற்றை நாம் கவனித்தால், ஆரம்பத்தில் ஒவ்வோர் இனத்திற்கும் சொந்தமாக ஒரு தெய்வம் இருப்பதைக் காண லாம். ஒன்றுக்கொன்று சுமுகமான உறவுள்ள இனங்களின் தெய்வங்களின் பெயர்களிலும் பொதுமை இருக்கும். பாபி லோனிய தெய்வங்களின் பெயர்களைப் பார்த்தால் இது புரியும். யூதர்கள் பல்வேறு இனங்களாகப் பிரிந்தபோது, அவர்களின் தெய்வங்கள் மொலாக் (Moloch) என்ற பொதுப் பெயரைப் பெற்றனர்; அதுபோல்தான் பாபிலோனியர்கள் பிரிந்த போது அவர்களின் தெய்வங்கள் பால்(Baal) என்ற பொதுப் பெயரைப் பெற்றனர். இவர்களுள் ஓர் இனம் மற்ற இனங்களைவிட ஆற்றல் பெறும்போது, அந்த இனத்தின் அரசனே எல்லா இனங்களுக்கும் அரசன் ஆவான். அதுபோலவே அந்த இனம் தங்கள் தெய்வத்தை மற்ற இனங்களுக்கும் தெய்வம் ஆக்குகிறது. இப்படித்தான் பாபிலோனியர் பால்-மெரோடக் (Baal-Merodach) தான் உயர்ந்த தெய்வம், மற்றவர்கள் தாழ்ந்தவர்கள் என்று சொன்னார்கள். மொலாக்-யாவே (Moloch-Yavah) மற்ற எல்லா மொலோக் தெய்வங்களுக்கும் மேலானவர். இந்தப் பிரச்சினைகள் போரின் வெற்றியால் தீர்மானிக்கப்பட வேண் டியிருந்தது.

இங்கேயும் இதே போராட்டம் இருந்தது. இந்தியாவிலும் தெய்வங்கள் தங்கள் தலைமைக்காகப் போராடினர். ஆனால் இந்த நாட்டின் மகத்தான நற்பேற்றின் காரணமாகவும் உலகத் தின் நற்பேறு காரணமாகவும் அந்தக் கூச்சலுக்கும் குழப்பங் களுக்கும் இடையே ஒரு குரல் எழுந்து, 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி[1] (இருப்பது ஒன்றே; மகான்கள் அதைப் பல பெயர்களால் அழைக்கிறார்கள்)' என்று முழங்கியது. சிவன் விஷ்ணுவிற்கு மேலானவர், விஷ்ணு மட்டும்தான்

---

1. ரிக் வேதம், 1. 164. 46

எல்லா ஆற்றல்களையும் உடையவர், சிவபெருமான் ஒன்றுமே இல்லாதவர் என்பதெல்லாம் இல்லை. சிவன், விஷ்ணு என்றெல்லாம் எத்தனையோ நூறு பெயர்களால் அழைக்கப் படுவது ஒரே கடவுள்தான். பெயர்கள் வேறு, ஆனால் இருப்பது ஒன்றுதான். இந்தச் சின்னஞ்சிறு வாக்கியத்தில் இந்தியா முழுவதையுமே படித்துவிடலாம்! வரலாறு முழுவதிலும் இந்த மையக் கருத்தே அற்புதமான மொழியில் மகத்தான ஆற்றலுடன் திரும்பத் திரும்பச் சொல்லப்படுகிறது. இந்தக் கருத்து நாட்டின் ரத்தத்தில் ஊறும்வரை, அதன் நாடி நரம்புகளில் ஓடுகின்ற ஒவ்வொரு சொட்டு ரத்தத்தோடு ரத்தமாகக் கலந்து துடிக்கும் வரை, உயிருடன் உயிராக மாறும்வரை, அது உண்டாக்கப் பட்டிருக்கிறதே அந்தப் பொருட்களின் கூறுகள் அனைத் திலும் ஊடுருவும்வரை இந்தக் கருத்து மீண்டும்மீண்டும் சொல்லப்பட்டு வந்தது. அந்தக் காரணத்தால் நமது இந்தப் புராதனமான தாய்நாடு வியக்கத்தக்க பொறுமையின் உறைவிடமாக மாற்றப்பட்டுவிட்டது; எல்லா மதங்களையும் எல்லா நெறிகளையும் தன்னிடம் வரவேற்கின்ற உரிமை பெற்றதாக விளங்குகிறது. இதற்கான நிரூபணத்தை, ஒன்றுக்கொன்று முற்றிலும் முரணானவைபோல் தோன்று கின்ற மதப் பிரிவுகள் வியக்கத்தக்க சமரசத்துடன் நிலவுவதை இங்கேதான் காண முடியும். நீங்கள் துவைதியாக இருக்கலாம், நான் அத்வைதியாக இருக்கலாம்; நீங்கள் இறைவனின் நிலை யான சேவகன் என்று உங்களை நம்பலாம், நான் என்னைக் கடவுளுடன் ஒன்றுபட்டவனாகக் கூறிக்கொள்ளலாம். என்றாலும் நாம் இருவரும் நல்ல இந்துக்களாகவே இருப்போம். இது எப்படி முடிகிறது? 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி—இருப்பது ஒன்றே; மகான்கள் அதைப் பல பெயர்களால் அழைக்கிறார்கள்' என்பது நம் மனத்தில் ஊறி இருப்பதால் தான். என் நாட்டு மக்களே! எல்லாவற்றுக்கும் மேலாக நாம் உலகத்திற்குப் போதிக்க வேண்டியது இந்த மகத்தான உண்மையைத்தான்.

பிற நாடுகளிலுள்ள பேரறிஞர்கள்கூட, நமது மதத்தை உருவ வழிபாடு என்று கூறித் தங்கள் மூக்குகளை 45 டிகிரி கோணத்தில் திருப்பிக் கொள்கிறார்கள். நான் நேரிலேயே அதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் தங்கள் மூளையில் எவ்வளவு மூட நம்பிக்கைகள் குவிந்து கிடக்கின்றன என்பதை அவர்கள் நினைத்துப் பார்ப்பதில்லை. கீழ்த்தரமான இந்தப்

பிரிவினைவாதம் இன்னும் எல்லா இடங்களிலும் அப்படியே தான் இருக்கிறது.

தன்னிடம் இருப்பதே உயர்ந்தது, தகுதியானது; பணத்தையும் பண தேவதையையும் வணங்கி வாழ்கின்ற குறுகிய வாழ்க்கையே வாழத்தக்கது, தனது சிறிய சொத்து மட்டுமே மதிப்பு வாய்ந்தது—வேறு எதுவும் தகுதியுடையதாக அவனுக்குத் தெரிவதில்லை. பயனற்ற ஏதோ ஒன்றை வெறும் களிமண்ணில் செய்துவிடுவான், எந்திரம் ஒன்றைக் கண்டு பிடித்துவிடுவான், அவ்வளவுதான், அதை மகத்தானதாக எல்லோரும் பாராட்ட வேண்டும்! இவ்வளவு அதிகமாகப் படிப்பும் சிந்தனையும் இருந்தும் உலகம் முழுவதும் நிலைமை இப்படித்தான் இருக்கிறது. கல்வி என்பது இனிதான் வர வேண்டும். பண்பாடு—அது இதுவரை எங்கேயும் தோன்றவே இல்லை. 99.9 சதவீத மக்கள் இன்றும் ஏறக்குறைய காட்டுமிராண்டிகள் போலவே உள்ளார்கள். விட்டுக் கொடுத்தல், மதங்களிடையே சகிப்புத்தன்மை என்றெல்லாம் புத்தகங்களில் படிக்கலாம். ஆனால் அதில் இம்மியளவுகூட உலகில் காணப்படவில்லை—இது என் அனுபவம்; நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் அதுபற்றி நினைப்பது கூட இல்லை. நான் பார்த்த எல்லா நாடுகளிலும் மதத்தின் பெயரால் படுகொலைகள் சர்வசாதாரணமாக நடக்கின்றன; புதியனவற்றைக் கற்பதற்கும் கடுமையான தடைகள் முன்பு போலவே விதிக்கப்படுகின்றன.

மதங்களிடையே ஏதோ சிறிதளவு சகிப்புத்தன்மையும் ஏதோ சிறிது அனுதாபமுமாவது உலகில் காணப்படுகிறது என்றால், அது ஆரியர்களின் பூமியான இந்த இந்தியாவில்தான்; வேறு எங்கும் இல்லை. இங்கேதான் இந்தியர்கள் முகமதியர் களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் கோயில்களைக் கட்டித் தந்திருக் கிறார்கள்; வேறெங்கும் இல்லை. நீங்கள் வெளி நாடுகளுக்குச் சென்று அங்கு முகமதியர்களிடமோ மற்ற மதத்தினரிடமோ உங்களுக்காக ஒரு கோயிலைக் கட்டித் தரும்படி கேளுங்கள்; அவர்கள் எப்படி உதவி செய்கிறார்கள் என்பதை அப்போது காண்பீர்கள். உங்களுக்காகக் கோயில் கட்டித் தருவதைவிட உங்கள் கோயில்களை இடிப்பதிலும், முடிந்தால் உங்களையே தீர்த்துக் கட்டவும்தான் அவர்கள் முயல்வார்கள்.

உலகிற்கு இன்று மிகமிகத் தேவையானதும், இந்தியாவிட மிருந்து அது கற்றுக்கொள்ள வேண்டியதுமான மகத்தான

உண்மை சகிப்புத்தன்மை மட்டுமல்ல, அனுதாபமும் கூட. சிவ மஹிம்ன ஸ்தோத்திரம் கூறுவது போல், 'பல்வேறு மலைகளிலிருந்து புறப்படுகின்ற ஆறுகள் நேராக ஓடினாலும், வளைந்து வளைந்து ஓடினாலும் இறுதியில் கடலையே சென்று அடைகின்றன. எனவே ஓ சிவபெருமானே! மனிதர்கள் தங்கள் மனநிலைக்கு ஏற்பத் தேர்ந்தெடுக்கின்ற பாதைகள் வெவ்வேறாகத் தோன்றினாலும் நேராகவோ வளைந்தோ சென்றாலும் எல்லாம் உன்னை நோக்கியே வருகின்றன'. பாதைகள் வெவ்வேறாக இருக்கலாம், ஆனால் அனைவரும் செல்வது பாதையில்தான். சிலர் கொஞ்சம் வளைந்த பாதையில் செல்லலாம், சிலர் நேரான பாதையில் செல்லலாம். எல்லோரும் ஒரே கடவுளிடம்தான் சென்று சேர்கின்றனர்.

சிவபெருமானை சிவலிங்கத்தில் மட்டுமல்லாமல் எல்லா இடங்களிலும் காணும்போதுதான் அவரிடம் நீ கொண்ட பக்தி முழுமை பெறுகிறது. ஹரியை ஒவ்வொன்றிலும், ஒவ்வொருவரிலும் யார் காண்கிறானோ அவனே ஹரியின் உண்மை பக்தன். நீ உண்மையான சிவ பக்தனாக இருந்தால் சிவனை ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவரிலும் காண வேண்டும். வழிபாடுகள் எந்தப் பெயரில் இருந்தாலும் சரி, எந்த விதத்தில் இருந்தாலும் சரி, அவை அனைத்தும் ஒரே கடவுளுக்குச் செய்யப்படுகின்றன என்பதை நீங்கள் உணர வேண்டும். காபாவை[1] நோக்கிப் பணிகின்ற, சர்ச்சில் முழந்தாளிடுகின்ற, புத்தர் கோயிலில் மண்டியிடுகின்ற எல்லா கால்களும், அவர்களுக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி, அவர்கள் அதை உணர்ந்தாலும் சரி உணராவிட்டாலும் சரி, அவை அந்த ஒரே இறைவனையே பணிகின்றன. எந்தெந்த வடிவங்களில், எந்தெந்தப் பெயர்களில் மலர்களை அர்ப்பித்தாலும், அவை அத்தனையும் அந்த ஒரே இறைவனின் திருவடிகளில்தான் இடப்படுகின்றன. ஏனெனில் எல்லோருக்கும் ஒரே தலைவர் அவரே, ஆன்மாக்களின் ஆன்மா அவரே. உலகிற்கு எது தேவையென்று உங்களையும் என்னையும்விட அவருக்கு மிக மிக நன்றாகவே தெரியும்.

வேற்றுமைகளே இல்லாமல் போவது என்பது முடியாத காரியம்; அவை இருந்தேயாக வேண்டும். வேறுபாடுகள்

---

1. முஸ்லீம்களின் புனிதத் தலமான மெக்காவிலுள்ள முக்கிய பள்ளிவாசல். இங்கே கறுப்புக் கல் ஒன்று உள்ளது. எல்லா முஸ்லீம்களும் இது இருக்கும் திசையை நோக்கித் தொழுகை செய்வார்கள்.

இல்லையென்றால் வாழ்க்கையே இருக்காது. இந்த மோதல் தான், வேறுபட்ட இந்தக் கருத்துக்கள்தாம் தெளிவை உண்டாக்குகின்றன, எல்லாவற்றையும் இயக்குகின்றன, எல்லாவற்றையும் நடைபெறச் செய்கின்றன. வேற்றுமைகள், முற்றிலும் முரணான வேற்றுமைகள் நிச்சயம் இருக்க வேண்டும். ஆனால் அதற்காக நாம் ஒருவரை ஒருவர் வெறுக்க வேண்டியதில்லை; ஒருவரோடு ஒருவர் போரிட வேண்டும் என்பதும் இல்லை.

எனவே இங்கே நமது தாய்நாட்டில் மட்டுமே போதிக்கப் பட்ட ஒரு சிறந்த மையக் கருத்தை நாம் மறுபடியும் கற்க வேண்டும். அது மறுபடியும் இந்தியாவிலிருந்து உலகத்திற்கு உபதேசிக்கப்பட வேண்டும். ஏன்? ஏனெனில் அது நம் நூல்களில் மட்டும் இருக்கின்றன என்பதில்லை, நம் தேசிய இலக்கியத்தின் ஒவ்வொரு பகுதியிலும் தேசிய வாழ்வின் ஒவ்வொரு நிலை யிலும் அது உள்ளது. இங்கே, இங்கே மட்டும்தான் அது நாள் தோறும் நடைமுறையில் பின்பற்றப்பட்டது. கண்களைத் திறந்து வைத்துக்கொண்டு பார்க்கின்ற எந்த மனிதனும் அது இங்கு, இங்கு மட்டுமே நடைமுறையில் உள்ளதைக் காண்பான். இவ்வாறு நாம் உலகிற்கு மதத்தைப் போதித்தாக வேண்டும். இந்தியா போதிக்கத்தக்க மேலான வேறு போதனைகளும் உள்ளன; ஆனால் அவை அறிஞர்களுக்கு போதிக்கப்பட வேண்டியவை. சாதுத் தன்மை, மென்மை, மன்னிக்கும் குணம், சகிப்புத் தன்மை, அனுதாபம், சகோதரத்துவம் முதலியவற்றை ஜாதி மத இன வேறுபாடுகள் இல்லாமல் ஆண், பெண், குழந்தைகள், படித்தவர், பாமரர் என்று அனைவரும் கற்கலாம். 'இறைவா, உன்னை மக்கள் பல பெயரால் அழைக்கின்றனர். ஆனால் நீ ஒருவனே!' ❑

# 2. யாழ்ப்பாணத்தில்

கொழும்பிலிருந்து கண்டி, அனுராதபுரம், வவுனியா வழியாக யாழ்ப்பாணம் சென்றார் சுவாமிஜி. வழியெங்கும் அவருக்கு விமரிசையான வரவேற்பு அளிக்கப்பட்டது. யாழ்ப்பாண இந்துக்கள் அளித்த வரவேற்புரைக்குப் பதிலளித்து, ஜனவரி 23ஆம் நாள் மாலையில் யாழ்ப்பாண இந்துக் கல்லூரியில் வேதாந்தம் என்னும் தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார் சுவாமிஜி. அதன் சுருக்கம் இங்கு தரப்படுகிறது.

## வேதாந்தம்

விஷயமோ மிகவும் பெரியது, நேரம் மிகக் குறைவாகவே உள்ளது. ஒரு சொற்பொழிவில் இந்துக்களின் மதத்தைப் பற்றிய ஒரு முழுமையான ஆராய்ச்சியை நடத்துவது என்பது முடியாதது. எனவே நமது மதத்தின் முக்கியக் கருத்துக்களை என்னால் இயன்ற அளவு எளிய மொழியில் உங்கள் முன் வைக்கிறேன்.

நம்மை நாம் இப்போது நாகரீகமாக அழைத்துக் கொள்கின்ற 'ஹிந்து' என்ற வார்த்தை, அதன் முழுப்பொருளையும் இழந்துவிட்டது. ஏனெனில் இந்த வார்த்தை சிந்துநதிக்கு மறு பக்கத்தில் வாழ்ந்தவர்களைக் குறிப்பிடுகிறது, அவ்வளவுதான். சிந்து என்ற சொல் பழங்காலப் பாரசிகர்களால் சிதைக்கப்பட்டு ஹிந்து என்று ஆகியது; சிந்துநதிக்கு மறுபுறம் வாழ்ந்த அனைவரையும் அவர்கள் ஹிந்து என்றே அழைத்தார்கள். இவ்வாறு இந்தச் சொல் நம்மிடம் வந்தது. முகமதியர்களின் ஆட்சிக் காலத்தில் நாமும் இந்தப் பெயரை ஏற்றுக் கொண்டோம். இந்த வார்த்தையைப் பயன்படுத்துவதால் எந்தத் தீமையும் இல்லை. ஆனால் நான் முன்பே சொன்னதுபோல், அது தன் பொருளை இழந்துவிட்டது. தற்காலத்தில் சிந்து நதிக்கு இந்தப் பக்கத்தில் வாழ்கின்ற எல்லா மக்களும் பழங் காலத்தைப்போல் ஒரே மதத்தைப் பின்பற்றவில்லை. எனவே இந்தச் சொல் தற்போது இந்துக்களை மட்டுமின்றி முகமதியர்கள், கிறிஸ்தவர்கள், சமணர்கள் என்று இந்தியாவில் வாழ்கின்ற அனைவரையும் குறிக்கிறது. அதனால் இங்கு இந்து என்ற சொல்லை நான் பயன்படுத்தப் போவதில்லை. அப்படியானால் எந்த வார்த்தையை உபயோகிப்பது? நாம்

பயன்படுத்தத்தக்க வார்த்தைகள் இரண்டே: வைதீகர்கள்—வேதத்தைப் பின்பற்றுபவர்கள்; அல்லது இதைவிடச் சிறப்பாக, வேதாந்திகள்—வேதாந்தத்தைப் பின்பற்றுபவர்கள்.

உலகின் சிறந்த மதங்களுள் பெரும்பாலானவை சில குறிப்பிட்ட நூல்களை ஆதாரமாகக் கொண்டுள்ளன; அவற்றுள் கூறப்பட்டுள்ளதை இறைவனின் வார்த்தைகள் என்றோ, இயற்கையைக் கடந்த சில தேவதைகளின் வாக்குகள் என்றோ அவர்கள் நம்புகிறார்கள். அவையே அவர்களது மதத்தின் அடிப்படையாக உள்ளன. இன்றைய மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துப்படி, இந்த நூல்களுள் மிகவும் பழமையானது இந்துக்களின் வேதங்களே. எனவே வேதத்தைப் பற்றிச் சிறிது அறிந்து கொள்வது அவசியமாகும்.

வேதங்கள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்ற நூற் களஞ்சியங்கள் மனிதர்கள் சொன்னவை அல்ல. அவற்றின் காலமும் நிர்ணயிக்கப்படவில்லை; நிர்ணயிக்கப்படவும் முடியாது. நம் கருத்துப்படி, வேதங்கள் என்றுமே உள்ளவை. ஒரு முக்கிய விஷயத்தை நான் உங்களுக்கு நினைவூட்ட விரும்பு கிறேன். மற்ற மதங்கள் தங்கள் தோற்றத்திற்கு ஒரு தெய்வத்தையோ, பல மனிதர்களையோ, தேவதைகளையோ, இறைவனின் விசேஷ தூதர்களையோ காரணமாகக் காட்டி, குறிப்பிட்ட சிலர்மூலமாக அவர்கள் அந்த மதத்தை வெளிப் படுத்தியதாகக் கூறுகின்றன. இவ்வாறு தங்கள் அத்தாட்சியை நிலைநாட்டுகின்றன. ஆனால் இந்துக்களோ வேதங்களுக்கு அப்படியோர் அத்தாட்சியைக் கூறவில்லை. என்றென்றும் நிலையான இறைஞானத்தை அவை கூறுவதால் அவையும் அழிவற்றவை, அதனால் வேதங்களுக்கு வேதங்களே அத்தாட்சி என்று இந்துக்கள் கூறுகிறார்கள். அவை எந்தக் காலத்திலும் எழுதப்படவில்லை, எந்தக் காலத்திலும் உருவாக்கப் படவில்லை. காலங்காலமாக அவை இருக்கின்றன. எவ்வாறு படைப்பு தோற்றமும் முடிவும் இல்லாமல் எல்லையற்றதாகவும் நிரந்தரமானதாகவும் இருக்கிறதோ, அவ்வாறே இறையறிவும் தோற்றமும் முடிவும் இல்லாமல் என்றும் இருக்கிறது. இந்த அறிவுதான் வேதங்கள் (வித் — அறிதல்) என்று அழைக்கப் படுகிறது.

வேதாந்தம் என்ற பெயரால் அழைக்கப்படுவதான அறிவுக் களஞ்சியம், ரிஷிகளால் கண்டுபிடிக்கப்பட்டவை. ரிஷி என்றால் 'மந்த்ர த்ரஷ்டா' அதாவது மந்திரத்தை, ஒரு சிந்தனையை

நேரே கண்டவர் என்று கூறப்படுகிறது. அவர்கள் அந்தச் சிந்தனையைக் கண்டவர்களே தவிர, அந்தச் சிந்தனைகள் அவர்களுடையவை அல்ல. வேதத்தின் இன்ன பகுதி இன்ன ரிஷியிடமிருந்து வெளிவந்தது என்றால் அந்தப் பகுதியை அவர் எழுதினார் என்றோ, அவர் தம் மனத்திலிருந்து அதனை உருவாக்கினார் என்றோ நினைத்துக் கொள்ளாதீர்கள். ஏற்கனவே இருந்த சிந்தனையை அவர் கண்டார், அவ்வளவு தான். அது பிரபஞ்சத்தில் எப்போதும் இருக்கிறது. ரிஷி அதனைக் கண்டுபிடித்தவர்; ரிஷிகள் ஆன்மீகக் கண்டுபிடிப்பாளர்கள்.

வேதங்கள் முக்கியமாகக் கர்ம காண்டம், ஞான காண்டம்—செயல் அல்லது சடங்குப் பகுதி; அறிவு அல்லது ஆன்மீகப் பகுதி—என்று இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கர்மகாண்டம் பல்வேறு யாகங்களைப்பற்றிக் கூறுகிறது. தற்போதைய சூழ்நிலையில் செய்யப்பட முடியாதவை என்று அவற்றுள் பலவும் கைவிடப்பட்டுவிட்டன. எஞ்சியவை ஏதோ ஒருவிதத்தில் இன்றுவரை இருக்கவே செய்கின்றன. சாதாரண மனிதன், மாணவன், இல்லறத்தான், துறவி என்று வாழ்வின் பல்வேறு நிலைகளில் உள்ளவர்களுக்கான கடமைகள் கர்மகாண்டத்தின் முக்கியக் கருத்துக்கள் ஆகும். இவை இன்றும் ஓரளவிற்கு வழக்கத்தில் உள்ளன.

நமது மதத்தின் ஆன்மீகப் பகுதி இரண்டாம் பகுதியான ஞானகாண்டத்தில் உள்ளது. இதுவே வேதாந்தம், வேதங்களின் நிறைவு, வேதங்களின் சாரம், அதன் லட்சியம். வேதங்களின் சாரமான கருத்து வேதாந்தம் எனப்படுகிறது. இந்தப் பகுதியில்தான் உபநிடதங்கள் உள்ளன. துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்யம் என்று இந்தியாவிலுள்ள மதப் பிரிவுகள் எதுவாயினும், இந்து மதத்தின் ஒரு பிரிவாகத் தன்னைக் கூறத் துணிவுள்ள எந்த நெறியாயினும் அவை வேதங்களின் இந்த உபநிடதங்களை ஏற்றுக்கொண்டாக வேண்டும். அவை அவற்றைத் தங்களுக்கு ஏற்றவாறு பொருள் கொள்ளலாம். ஆனால் உபநிடதங்களை ஏற்றுக்கொண்டே தீர வேண்டும். அதனால்தான் நாம் இந்து என்பதற்குப் பதிலாக வேதாந்தி என்ற சொல்லைப் பயன்படுத்த விரும்புகிறோம். இந்தியாவின் வைதிகத் தத்துவ அறிஞர்கள் அனைவரும் வேதாந்தத்தை ஏற்கத்தான் வேண்டும். தற்கால மதங்களை எடுத்துக்

கொள்ளுங்கள். அவற்றுள் சில வளர்ச்சி அடையாதவையாக இருக்கலாம், சில பயனற்றவை போலவே தோன்றலாம். ஆனால் அவற்றை ஆழ்ந்து படிப்பவர்கள், புரிந்துகொள் பவர்கள், அவையும் உபநிடதக் கருத்துக்களையே ஆதாரமாகக் கொண்டிருப்பதைக் காணலாம்.

இந்து மதத்தின் கீழ்நிலைப் பிரிவுகள் ஏதாவது ஒன்றில் காணப்படுகின்ற சின்னங்களை ஆராய்ந்து பாருங்கள்; அவற் றுள் பலவும் உபநிடதங்களில் உருவகமாகக் கூறப்பட்டிருப் பதைக் கண்டு ஆச்சரியமடைவீர்கள். இந்த உபநிடத உருவகங்களே காலப்போக்கில் சின்னங்களாக மாறின. அந்த அளவிற்கு ஆழமாக உபநிடதங்கள் நம் இனத்தில் ஊறிப் போயிருக்கின்றன. உபநிடதங்களில் உள்ள உயர்ந்த ஆன்மீகச் சிந்தனைகளும் கருத்துக்களும் பல்வேறு சின்னங்களின் வடிவில் இன்றும் நம் வீடுகளில் வழிபடப்பட்டு நம்முடன் இருக்கின்றன. இவ்வாறு நாம் பயன்படுத்தி வருகின்ற சின்னங்கள் எல்லாமே வேதாந்தத்திலிருந்து வந்தவைதாம். வேதாந்தத்தில் அவை உரு வகங்களாகக் கூறப்படுகின்றன. இவை நாடு முழுவதும் பரவி, இறுதியில் சின்னங்களாக ஒவ்வொருவரின் அன்றாட வாழ்க்கை யோடு ஒன்றிவிட்டன.

வேதாந்தத்திற்குப் பிறகு ஸ்மிருதிகள் வருகின்றன. இவையும் மகான்களால் எழுதப்பட்டவையே. ஆனால் அத்தாட்சியைப் பொறுத்தவரை இவை வேதாந்தத்திற்கு அடுத்த படியில் உள்ளவை. மற்ற மதங்களுக்கு அவற்றின் சாஸ்திரங்கள்போல் நமது மதத்திற்கு உள்ளவை இவை. இந்த ஸ்மிருதிகள் சில குறிப்பிட்ட ரிஷிகளால் எழுதப்பட்டவை என்பதை நாம் ஏற்றுக்கொள்கிறோம். இந்த நிலையில்தான் அவை பிற மத சாஸ்திரங்களைப் போன்றவை. ஸ்மிருதிகள் இறுதி அத்தாட்சி அல்ல. ஸ்மிருதியில் வேதாந்தத்திற்கு மாறாக ஏதாவது இருக்குமானால் அதை ஒதுக்கிவிட வேண்டும், அதன் அத்தாட்சி போய்விட்டது. இந்த ஸ்மிருதிகள் காலத்திற்குக் காலம் மாறிக்கொண்டே இருப்பதையும் நாம் காண்கிறோம். சத்திய யுகத்தில் இன்ன ஸ்மிருதி அத்தாட்சி பெற்றது, திரேதா யுகத்தில் இன்ன ஸ்மிருதி, அதுபோல் துவாபர யுகத்தில் சிலவும், கலியுகத்தில் சிலவும் அத்தாட்சி பெற்றிருந்தன என்று நாம் படிக்கிறோம். ஸ்மிருதிகள் முக்கியமாக மக்களின் பழக்க வழக்கங்களை நெறிப்படுத்துபவை. காலத்திற்கேற்ப நாட்டின் அடிப்படைச் சூழல்கள் மாறி, வேறு சூழல்களின் ஆதிக்கம்

ஏற்படும்போது, மக்களின் வாழ்க்கைமுறை மாறுவதற்கு ஏற்றாற் போல் ஸ்மிருதிகளும் மாறும். இந்த விஷயத்தை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

வேதாந்தக் கோட்பாடுகள் மாறாதவை. ஏன்? ஏனெனில் அவை மனிதனிலும் இயற்கையிலும் உள்ள மாறாத உண்மை களின் அடிப்படையில் எழுப்பப்பட்டுள்ளவை. அவை ஒரு போதும் மாறாது. ஆன்மா பற்றிய உண்மைகள் மற்றும் சொர்க்கத்திற்குப் போவது போன்ற கருத்துக்கள் எப்போதுமே மாற முடியாது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் அவை இருந்தது போலவே இன்றும் உள்ளன; லட்சக்கணக் கான ஆண்டுகளுக்குப் பிறகும் இப்படியேதான் இருக்கும். ஆனால் சமுதாய நிலைகள், பரஸ்பரத் தொடர்பு ஆகியவற்றின் அடிப்படையிலேயே முற்றிலும் அமைவதான சமயப் பழக்க வழக்கங்கள் சமுதாயம் மாறும்போது மாறியே தீரும். எனவே குறிப்பிட்ட ஒரு காலத்திற்குத்தான் நல்லவையாகவும் பொருத்த மானவையாகவும் அவை இருக்கும்; மற்ற காலங்களுக்கு ஏற்புடையவையாக இருக்காது. ஒரு குறிப்பிட்ட உணவு ஒரு காலத்தில் உண்பதற்கு அனுமதிக்கப்பட்டது, அடுத்த கால கட்டத்தில் அனுமதிக்கப்படவில்லை. ஏனெனில் அந்தக் காலத் தில் அந்த உணவு பொருந்தவில்லை, கால நிலையும் மற்றச் சூழல்களும் மாறியது, வேறு பல சூழல்களையும் எதிர்கொள்ள நேர்ந்தது. எனவே பிற்கால ஸ்மிருதிகள் உணவையும் பிற வற்றையும் மாற்றிவிட்டன. இவ்வாறே காலத்திற்குக் காலம் மாறுதல்கள் ஏற்பட்டன. இன்றைய நமது சமுதாயம் ஏதாவது மாற்றங்களை விரும்பினால் அவற்றையும் செய்தாக வேண்டும். மகான்கள் தோன்றி அதனை எப்படிச் செய்வது என்பதைக் காட்டுவார்கள். ஆனால் நமது மதத்தின் கோட்பாடுகள் ஒரு துளிகூட மாறாது; அவை அப்படியே இருக்கும்.

பின்னர் வருபவை புராணங்கள். ‘புராணம் பஞ்ச லக்ஷணம்’[1]—புராணங்களை ஐந்து அடையாளங்களால் அறிந்துகொள்ளலாம்; அவை வரலாறு, பிரபஞ்ச இயல், தத் துவக் கருத்துக்களுக்கு பல்வேறு உருவ விளக்கம் போன்றவை.

---

1. ஒப்பிடுக:
ஸர்கச்ச ப்ரதிஸர்கச்ச வம்சோ மன்வந்தராணி ச ।
வம்சானுசரிதம் சைவ புராணம் பஞ்ச லக்ஷணம் ।
படைப்பு, ஒடுக்கம், வம்ச பரம்பரை, மனுவின் ஆட்சிக்காலம், வம்சங்களின் வரலாறு போன்ற ஐந்து விஷயங்களைக் கூறுவது புராணம்.

வேதக் கருத்துக்களைப் பரப்புவதற்காக எழுதப்பட்டவை புராணங்கள். வேதங்கள் எழுதப்பட்ட மொழி மிகவும் பழமையானது. அறிஞர்களுள்கூட ஏதோ சிலரால்தான் அந்த நூல்கள் எழுதப்பட்ட காலத்தை அறிந்துகொள்ள முடியும். புராணங்கள் அக்கால மக்கள் பேசிய மொழியிலேயே எழுதப் பட்டுள்ளன. அந்த மொழியே இன்றைய நவீன சம்ஸ்கிருதம். அவை அறிஞர்களுக்காக எழுதப்பட்டவை அல்ல, சாதாரண மக்களுக்காக எழுதப்பட்டவை. சாதாரண மக்களால் தத்துவங் களைப் புரிந்துகொள்ள முடியாது. அத்தகைய விஷயங்கள் சுலபமாகப் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் மகான்கள், அரசர்கள் மற்றும் பிரபலமானவர்களின் வரலாறுகள் மூலமாகவும், அக்காலத்தில் அந்த இனத்தில் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகள் முதலியவற்றின் வாயிலாகவும் புராணங் களில் விளக்கப்படுகின்றன. இவற்றைப் பயன்படுத்தி மக்களுக்கு நிலையான தத்துவங்களை மகான்கள் புகட்டினார்கள்.

இவற்றைத் தவிர தந்திர நூல்கள் உள்ளன. இவை சில விஷயங்களில் புராணங்களைப் போலவே உள்ளன. இவற்றுள் சில கர்ம காண்டத்தில் உள்ள யாகம் பற்றிய பழைய கருத்துக் களைத் திரும்பவும் நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கான முயற்சி காணப்படுகிறது.

இந்த நூல்கள் அனைத்தும் சேர்ந்ததே இந்துக்களின் சாஸ்திரங்கள். இவ்வளவு அதிகமான புனித நூல்கள் இருக் கின்ற ஒரு நாட்டில், தன் ஆற்றலின் பெரும் பகுதியை இத்தகைய தத்துவ நாட்டத்திலும், ஆன்மீகச் சிந்தனைகளிலும் செல விட்ட ஓர் இனத்தில் (எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக என்பது யாருக்கும் தெரியாது), அதிகமான இவ்வளவு மதப் பிரிவுகள் இருப்பது இயல்பானது. இன்னும் ஆயிரக்கணக்கில் இல்லாதது தான் ஆச்சரியம். அந்தப் பிரிவுகள் சில கோட்பாடுகளில் முற்றிலும் வேறுபடுகின்றன. அந்த வேறுபாடுகள் எல்லா வற்றையுமோ அவற்றின் ஆன்மீகக் கோட்பாடுகள் அனைத்தை யுமோ அறிந்துகொள்ள நமக்கு நேரமில்லை. எனவே இந்தப் பிரிவுகள் அனைத்திற்கும் அடிப்படையானதும், ஒவ்வோர் இந்துவும் நம்பியே தீரவேண்டுவதுமான சில கருத்துக்களை நான் பேச எடுத்துக் கொள்கிறேன்.

முதலாவது, படைப்பைப் பற்றியது; அதாவது இயற்கை, பிரகிருதி, மாயை பற்றியது. மாயை எல்லையற்றது, தோற்றம் இல்லாதது. இன்ன நாள் இந்த உலகம் உருவாக்கப்பட்டது,

ஒரு கடவுள் வந்து இந்த உலகங்களைப் படைத்தார், அதன் பிறகு இன்றுவரை அவர் தூங்கிக் கொண்டிருக்கிறார் என்பதில்லை; ஏனெனில் அவ்வாறு நடக்க முடியாது. படைப்பாற்றல் இன்னும் இயங்கிக் கொண்டேதான் இருக்கிறது. கடவுள் எப்போதும் படைத்துக் கொண்டே இருக்கிறார், ஒருபோதும் ஓய்வு கொள்வதில்லை. 'நான் ஒரு கணம் ஓய்வெடுத்தாலும் இந்தப் பிரபஞ்சம் அழிந்துவிடும்' என்று கீதையில் (3. 24) ஸ்ரீகிருஷ்ணர் சொல்வதை நினைவுகூருங்கள். நம்மைச் சுற்றி இரவும் பகலும் இயங்கிக் கொண்டே இருக்கின்ற அந்தப் படைப்பாற்றல் ஒரு வினாடி நின்று போனாலும் எல்லாம் தரைமட்டமாகிவிடும். பிரபஞ்சம் முழுவதும் அந்தச் சக்தி இயங்காத நேரமே கிடையாது.

ஆனால் பிரளயம் அல்லது சுழற்சி நியதி (Law of Cylces) என்பது உள்ளது. படைப்பிற்கான சமஸ்கிருதச் சொல்லைச் சரியாக மொழிபெயர்த்தால் அது வெளிப்பாடு (Projection) என்று பொருள்படுமே தவிர படைப்பு (Creation) என்று பொருள் தராது. ஏனென்றால் ஆங்கில மொழியில், படைத்தல், என்ற சொல் சூன்யத்திலிருந்து ஏதோ ஒன்று தோன்றுதல், ஒன்றுமில்லாததிலிருந்து படைப்பு, இல்லாத ஒன்று இருப்பதாக மாறுதல் என்றெல்லாம், துரதிர்ஷ்டவசமாக, மிகவும் வேதனை தருகின்ற, முதிர்ச்சியற்ற பொருள்களைத் தருகிறது. இந்தக் கருத்தை நம்பும்படிக் கூறி உங்களை நான் இழிவுபடுத்த மாட்டேன். இதற்கு நம் சொல் 'வெளிப்பாடு' என்பது. இந்த இயற்கை மொத்தமும் இருக்கிறது; பிறகு நுட்பமாகிறது, மறைகிறது. ஒரு குறிப்பிட்ட கால ஓய்விற்குப் பின்னர், வெளிப்படுவது போல் மீண்டும் எல்லா பொருட்களும் தோன்றுகின்றன; அதே சேர்க்கை, அதே பரிணாமம், அதே வெளிப்பாடுகள் தோன்றுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலம் விளையாடல் நடைபெறுவது போல் தோன்றுகிறது. பின்னர், சேர்ந்த அனைத்தும் மீண்டும் சிதறி நுட்பமாகி, மேலும் நுட்பமாகி எல்லாம் மறைந்து விடுகிறது. மறுபடியும் வெளி வருகிறது. இவ்வாறு ஓர் அலையைப்போல் முன்னால் வருவதும் பின்னால் போவதுமாக காலங்காலமாக இந்த இயக்கம் நடைபெற்றுக் கொண்டேயிருக்கும்.

காலம், இடம், காரணம் எல்லாம் இந்த இயற்கைக்குள்தான் உள்ளன. எனவே இந்தப் பிரபஞ்சம் ஒரு காலத்தில் படைக்கப்பட்டது என்று சொல்வது சுத்த முட்டாள்தனம்.

அதன் தோற்றத்தைப் பற்றியோ முடிவைப் பற்றியோ எந்தக் கேள்வியும் எழ முடியாது. எனவே நம் சாஸ்திரங்களில் எங்கெல்லாம் பிரபஞ்சத்தின் தோற்றம் மற்றும் முடிவு என்று வருகிறதோ அதனை ஒரு சுழற்சியின் தோற்றம் மற்றும் முடிவு என்று கொள்ள வேண்டும். இதுவே அதன் பொருள், வேறெதுவும் அல்ல.

எது இதனைப் படைத்தது? கடவுள். God (கடவுள்) என்னும் இந்த ஆங்கிலச் சொல்மூலம் நான் எதைக் குறிப்பிடு கிறேன்? சாதாரணமாக அந்த வார்த்தை ஆங்கில மொழி யில் கூறப்படும் பொருளில் அல்ல. நான் கொள்ளும் பொரு ளுக்கும் அதற்கும் மிகுந்த வித்தியாசம் உள்ளது. அதனைக் குறிப்பதற்குப் பொருத்தமான வேறு ஆங்கிலச் சொல் எதுவும் இல்லை. எனவே 'பிரம்மம்' என்ற சம்ஸ்கிருதச் சொல்லையே பயன்படுத்துகிறேன். அவர் இந்த எல்லா வெளிப்பாடுகளுக்கும் பொதுக் காரணமாக இருக்கிறார்.

இந்த பிரம்மம் என்பது என்ன? அவர் என்றும் இருப்பவர், என்றும் தூய்மையானவர், என்றும் விழிப்போடு இருப்பவர், எல்லா ஆற்றலும் கொண்டவர், எல்லாம் அறிந்தவர், கருணை மயமானவர், எங்கும் நிறைந்தவர், உருவமற்றவர், பிரிவு இல்லாதவர். அவர் இந்தப் பிரபஞ்சத்தைப் படைக்கிறார். அவர் எப்போதும் படைத்துக் கொண்டும் காத்துக் கொண்டும் இருப்பதாகச் சொன்னால் இரண்டு சங்கடங்கள் எழுகின்றன. நாம் இந்தப் பிரபஞ்சத்தில் ஏற்றத்தாழ்வுகளைப் பார்க் கிறோம். ஒரு மனிதன் பிறந்ததிலிருந்தே மகிழ்ச்சியாக இருக் கிறான், மற்றொருவன் துயருறுகிறான்; ஒருவன் பணக்காரனாக இருக்கிறான், மற்றொருவன் ஏழையாக இருக்கிறான். இது ஓர வஞ்சனையையே காட்டுகிறது. அதோடு, படைப்பில் கொடூரம் இருக்கிறது; வாழ்க்கையின் நியதியே மரணமாக அல்லவா உள்ளது. ஒரு மிருகம் மற்றொரு மிருகத்தை நார்நாராகக் கிழிக்கிறது. ஒவ்வொருவனும் தன் சொந்த சகோதரனிடமிருந்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு பறித்துக் கொள்ள முயல் கிறான். இந்தப் போட்டி, கொடூரம், பயங்கரம், ஏக்கப் பெரு மூச்சுகள் எல்லாம் இரவும்பகலும் இதயங்களைக் கிழித்துக் கொண்டே இருக்கின்றன. இதுதான் நமது உலகத்தின் நிலைமை. இது கடவுளின் படைப்பு என்றால், அந்தக் கடவுள் கொடூரத்தை விட மோசமானவர்; மனிதனால் கற்பனை செய்ய முடிவதைவிட மிகவும் பயங்கரமான பிசாசு அவர்.

ஆனால் இங்கே ஓரவஞ்சனை இருக்கிறது என்றால், போட்டி நிலவுகிறது என்றால் தவறு கடவுள் மீது இல்லை என்கிறது வேதாந்தம். அப்படி என்றால் இவற்றை உண்டாக்கு வது யார்? நாமே. மேகம் எல்லா நிலங்களின் மீதும் சமமாகவே மழையைப் பொழிகிறது. ஆனால் நன்றாக உழுது பண்படுத்தப் பட்ட நிலம் மட்டுமே அந்த மழையால் பலன் பெறுகிறது; பண்படுத்தப்படாத நிலமோ, நல்ல முறையில் கவனம் செலுத்தப் படாத நிலமோ மழையின் எந்தப் பலனையும் பெற முடியாது. அது மேகத்தின் குற்றம் அல்ல. அதுபோல் கடவுளின் கருணை நிரந்தரமானது, மாறாதது. நாம்தான் வேற்றுமைகளை உண்டாக்குகிறோம். ஆனால் பிறந்ததிலிருந்தே சிலர் மகிழ்ச்சி யோடு இருப்பதையும், சிலர் துன்பத்தில் வாடுவதையும் எப்படி விளக்குவது? இந்த வேற்றுமையை உண்டாக்க அவர்கள் எது வும் செய்யவில்லை; இந்தப் பிறவியில் ஒன்றும் செய்யவில்லை, உண்மைதான்; ஆனால் சென்ற பிறவியில் செய்தார்கள். சென்ற பிறவியில் செய்தவை இந்தப் பிறவியின் நிலைமைக் கான காரணங்கள் என்பதே வேற்றுமைகளின் விளக்கம்.

எல்லா இந்துக்கள் மட்டுமன்றி, எல்லா பௌத்தர்களும் எல்லா சமணர்களும் ஏற்றுக் கொள்கின்ற இரண்டாவது கோட் பாட்டிற்கு இப்போது வருவோம். நாம் எல்லோரும் வாழ்க்கை நிரந்தரமானது என்பதை ஏற்றுக் கொள்கிறோம். ஒன்றும் இல்லாததில் இருந்து இது வரவில்லை, அப்படி வரவும் முடி யாது. அத்தகைய வாழ்க்கை வாழத் தகுந்ததும் அல்ல. காலத் தின் கட்டிற்குள் தோன்றுகின்ற எல்லாம் அதற்குள்ளேயே முடிந்தாக வேண்டும். வாழ்க்கை நேற்றுதான் துவங்கி இருக்கு மானால் அது கட்டாயம் நாளை முடிவுக்கு வந்துவிடும், முழுமையான அழிவுதான் அதன் விளைவாக இருக்க முடியும். வாழ்க்கை இருந்துகொண்டே இருக்கிறது. இதனை அறிந்து கொள்வதற்கு இன்று பிரமாதமான அறிவுக் கூர்மை தேவை யில்லை. ஏனெனில் இன்றைய விஞ்ஞான முடிவுகள் எல்லாமே இந்த விஷயத்தில் நமக்குத் துணையாக உள்ளன; தூல உலகின் உதாரணங்களையே காட்டி அவை நமது சாஸ்திரங்களிலுள்ள கருத்துக்களை விளக்குகின்றன.

நாம் ஒவ்வொருவரும் முடிவற்ற கடந்தகாலத்தின் விளைவு என்பது ஏற்கனவே உங்களுக்குத் தெரியும். கவிஞர்கள் கவிதை களில் பாடி மகிழ்வார்களே, அவ்வாறு மின்னல் வெட்டுவது போல் இயற்கையின் கைகளிலிருந்து குழந்தை திடீரென உலகில்

வந்துவிடவில்லை, எல்லையற்ற கடந்தகாலம் என்னும் சுமை அவனிடம் உள்ளது. நல்லதற்கோ கெட்டதற்கோ, அவன் தன் கடந்தகாலக் கர்மங்களைக் கழிப்பதற்காக வந்துள்ளான். இந்தக் கர்மங்கள்தான் மக்களிடையே வேற்றுமையை உண்டாக்கு கின்றன. இது கர்ம நியதி. நாம் ஒவ்வொருவரும் நமது சொந்த விதியை உருவாக்குபவர்களாக இருக்கிறோம். நமது வாழ்க் கையை வேறு யாரோ முன்பே வகுத்து வைத்திருக்கிறார்கள் (Predestination), விதிப்படிதான் எல்லாம் நடக்கும் என்றெல் லாம் கூறுவதை ஒரேயடியாக வீழ்த்திவிட்டு, இந்தக் கர்ம நியதி இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையில் ஒரே பாலமாகத் திகழ்கிறது.

நாம் துயருறுவதற்கு நாம், நாமேதான் காரணம்; வேறு யாரும் அல்ல. நாமே விளைவுகள், நாமே காரணங்கள். எனவே நாம் சுதந்திரர்கள். நான் துன்பப்பட்டால் அது எனக்கு நானே உண்டாக்கிக் கொண்டது; நான் விரும்பினால் என்னால் மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்பதையும் இது காட்டுகிறது. நான் தூய்மையற்றவனாக இருந்தால் அதுவும் நான் செய்து கொண்டதுதான். இதுவே, நான் விரும்பினால் தூயவனாக இருக்க முடியும் என்பதையும் காட்டுகிறது. மனித சங்கல்பம் எல்லா சூழ்நிலைகளையும் கடந்து நிற்கிறது. அந்த வலிமையான, உறுதியான எல்லையற்ற சங்கல்பத்திற்கும் சுதந்திரத்திற்கும் முன்னால் எல்லா ஆற்றல்களும், இயற்கையின் ஆற்றல்கள்கூட, கட்டாயம் தலைவணங்கியே தீர வேண்டும், ஒடுங்கியாக வேண்டும், சேவகர்களாக வேண்டும். இதுதான் கர்ம நியதியின் விளைவு.

இயல்பாகவே எழும் அடுத்த கேள்வி, ஆன்மா என்றால் என்ன என்பதுதான். ஆன்மாவை அறியாமல் நமது சாஸ்திரங் கள் கூறுகின்ற கடவுளை நாம் புரிந்துகொள்ள முடியாது. புற இயற்கையை ஆராய்வதன் மூலம், அனைத்தையும் கடந்த பொருளைச் சிறிதாவது உணர்ந்து விடலாம் என்று அதற்கான முயற்சிகள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நடந்து வந்துள்ளன. இந்த முயற்சிகள் எவ்வளவு படுதோல்வியைத் தழுவ நேர்ந்தது என்பதை நாம் அறிவோம். இயற்கையைக் கடந்த பொருளைக் காண்பதற்குப் பதிலாக, நாம் எவ்வளவு அதிகமாக உலகப் பொருட்களை ஆராய்ந்தோமோ அந்த அளவிற்கு உலகியலின் வசப்பட்டு வருகிறோம். இந்த உலகத்தை அதிகமாகப் பயன்படுத்தும்போது நம்மிடம் இருக்கின்ற

சிறிதளவு ஆன்மீகம்கூட மறைந்து போகிறது. எனவே இயற்கையை ஆராய்வது ஆன்மீகத்தை, இறைஞானத்தை அடைவதற்கான வழி அல்ல. அந்த வழி நிச்சயம் இதயத்தின் மூலம், மனித ஆன்மாவின் மூலம் வர வேண்டும். புற முயற்சி எதுவும், அனைத்திற்கும் அப்பால் உள்ள எல்லையற்ற பொருளைப்பற்றி நமக்கு எதையும் கற்பிக்காது; அக முயற்சிகள் மட்டுமே அதைச் செய்ய முடியும். எனவே ஆன்மாவின் மூலம், மனித ஆன்மாவை ஆராய்ச்சி செய்வதன்மூலம் மட்டுமே நாம் கடவுளை அறிய முடியும்.

மனித ஆன்மாவின் இயல்புபற்றி இந்தியாவில் உள்ள பல்வேறு நெறிகளிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஆனால் அவை எல்லாமே ஏற்றுக்கொள்கின்ற சில கருத்துக்கள் உள்ளன. ஆன்மாக்களுக்குத் தோற்றமும் முடிவும் இல்லை, அவை இயல்பாகவே அமரத்துவம் வாய்ந்தவை என்பதை நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்கிறோம். எல்லா சக்திகளும், ஆசீர்வாதங்களும், தூய்மையும், எங்கும் நிறைந்த தன்மையும், எல்லாம் அறிகின்ற தன்மையும் ஒவ்வோர் ஆன்மாவிலும் உள்ளது என்பது நம் அனைவருக்கும் ஏற்புடைய கருத்துதான். இது நாம் நினைவில் கொள்ள வேண்டிய ஓர் அற்புதமான கருத்து. பலவீனமானது, வஞ்சகமானது, உயர்ந்தது, தாழ்ந்தது போன்ற வேறுபாடுகள் எதுவும் இன்றி ஒவ்வொரு மனிதனிலும் ஒவ்வொரு மிருகத்திலும், எங்கும் நிறைந்த எல்லாம் அறிகின்ற ஒரே ஆன்மா உறைகிறது. வேற்றுமை ஆன்மாவில் இல்லை, அதன் வெளிப்பாட்டிலேயே உள்ளது. எனக்கும் மிகச்சிறு பிராணிக்கும் உள்ள வேற்றுமை ஆன்மாவின் வெளிப்பாட்டிலேயே. ஆனால் அடிப்படையில் இருவரும் சமமே. அது என் சகோதரன். அதுவும் நானும் ஒரேவிதமான ஆன்மாவைப் பெற்றிருக்கிறோம். இந்த மகத்தான உண்மையைத்தான் இந்தியா பிரச்சாரம் செய்தது. சகோதரத்துவம் பற்றிய பேச்சு இந்தியாவைப் பொறுத்தவரை உலகம்தழுவிய சகோதரத்துவ மாக உள்ளது; பெரிய மிருகங்களிலிருந்து சிறிய எறும்புகள் வரை எல்லாமே நமது உடம்புகள் என்று கருதும் அளவிற்கு வளர்ந்து உள்ளது. 'இவ்வாறு எல்லா உடம்புகளிலும் ஒரே இறைவன் உறைகிறார் என்பதை அறிகின்ற மகான், எல்லா உடம்புகளையும் அவ்வாறே வழிபடுகிறார்' என்றே நமது சாஸ் திரங்களும் கூறுகின்றன. அதனால்தான் இந்தியாவில் ஏழைகள், மிருகங்கள் என்று எல்லோரிடமும் எல்லாவற்றிடமும்

கருணை காட்டும் போக்கு உள்ளது. ஆன்மாவைப் பற்றிய நமது அடிப்படைக் கருத்துக்களுள் இது ஒன்றாகும்.

இப்போது கடவுளைப்பற்றிய கருத்திற்கு வருகிறோம். அதற்குமுன் ஆன்மாவைப்பற்றி ஒரு விஷயம்: ஆங்கிலம் படித்தவர்கள் அடிக்கடி அதில் வரும் soul (ஆன்மா), mind (மனம்) என்ற சொற்களால் குழம்பியிருப்பீர்கள். ஆன்மா வேறு, மனம் வேறு. நாம் மனம் என்று எதைச் சொல்கிறோமோ, அதையே மேலை நாட்டினர் soul (ஆன்மா) என்கிறார்கள். சுமார் இருபது வருடங்களுக்கு முன் சம்ஸ்கிருதத் தத்துவத் தின் வாயிலாக அறியும்வரை ஆன்மா என்ற ஒன்றைப் பற்றியே மேலை நாடுகள் அறிந்திருக்கவில்லை. உடம்பு இதோ இருக் கிறது, இதைக் கடந்து மனம் இருக்கிறது. என்றாலும் மனம் ஆன்மா அல்ல; மனம் நுண்ணுடல், சூட்சும சரீரம்; மிக நுட்ப மான பொருட்களால் ஆக்கப்பட்டது; பிறப்பிலிருந்து இறப்பு என்று தொடர்ந்து செல்கிறது. ஆனால் மனத்தையும் கடந் திருப்பது ஆன்மா, அதாவது மனிதனின் ஆன்மா. ஆன்மா என் னும் வார்த்தையை உயிர், மனம் என்றெல்லாம் எந்த வார்த்தை யாலும் மொழிபெயர்க்க முடியாது. எனவே ஆன்மா என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும், அல்லது மேலை நாட்டுத் தத்துவ அறிஞர்கள் பயன்படுத்தும் Self என்ற வார்த்தையால் குறிப்பிட வேண்டும். எந்த வார்த்தையைப் பயன்படுத்தினாலும் சரி, ஆன்மா என்பது மனத்திலிருந்தும் உடம்பிலிருந்தும் வேறானது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். இந்த ஆன்மாதான் நுண்ணுடலாகிய மனத்துடன் சேர்ந்து பிறப்பு-இறப்புச் சுழலில் சென்று கொண்டிருக்கிறது; உரிய காலத்தில் ஞானம் பெற்று, தனது பூரணத்துவத்தை வெளிப் படுத்துகிறது; அதன்பிறகு அதன் பிறப்பு-இறப்புச் சுழற்சி நின்று விடுகிறது. பின்னர் நுண்ணுடலாகிய மனத்தை வைத்துக் கொள்ள வேண்டுமா அல்லது அதை முற்றிலுமாக விட்டு விட்டுச் சுதந்திரமாக நிரந்தரமான முக்திப்பேற்றில் திளைக்க வேண்டுமா என்பது ஆன்மாவின் விருப்பம். ஆன்மாவின் லட்சியம் முக்தி. இது நமது மதத்திற்கு மட்டுமே உரிய ஒரு தனித்தன்மை ஆகும்.

நமக்கும் சொர்க்கங்களும் நரகங்களும் உள்ளன. ஆனால் அவை நிரந்தரமானவை அல்ல, அப்படி இருக்கவும் முடியாது. சொர்க்கங்கள் இருக்குமானால் அவை இந்த உலகத்தின் நகல்களாகவே இருக்கும்—சற்று அதிக அளவில் மகிழ்ச்சியும்,

அதிகமான போகமும் அங்கே இருக்கலாம். ஆனால் இவை யாவும் ஆன்மாவிற்குக் கேடு விளைவிக்கக் கூடியவை. இத்தகைய சொர்க்கங்கள் பல உண்டு. பலனை எதிர்பார்த்து நற்செயல் புரிபவர்கள், இறந்தபின் ஏதாவது சொர்க்கங்களில் இந்திரன் போன்ற தேவர்களாகப் பிறக்கிறார்கள். தேவர்கள் என்பது சில குறிப்பிட்ட நிலைகளையே குறிக்கிறது. அவர்களும் மனிதர் களாக இருந்தவர்கள்தாம். நல்ல காரியங்கள் செய்ததால் தேவர் களாகி இருக்கிறார்கள். மேலும், இந்திரன் போன்ற பெயர்களும் ஒரே நபரின் பெயர்கள் அல்ல. ஆயிரக்கணக்கான இந்திரர்கள் இருப்பார்கள். நகுஷன் ஒரு பேரரசன். அவன் இறந்தபின் இந்திரன் ஆனான். அது ஒரு பதவி. ஒரு ஜீவன் உயர்ந்த நிலையை அடைந்ததும் இந்திர பதவியைப் பெறுகிறது. குறிப் பிட்ட காலம்வரை அந்தப் பதவியில் இருக்கிறது. பிறகு இறந்து, மறுபடியும் மனிதனாகப் பிறக்கிறது. ஆனால் மனிதப் பிறவிதான் எல்லாவற்றிலும் மிக உயர்ந்த பிறவி. சொர்க்கத்திலும்கூட, சில தேவர்கள் அங்குள்ள இன்பங்களில் நாட்டம் கொள்ளாமல், அவற்றைத் துறந்து மேலே செல்ல முயலலாம். ஆனால் இந்த உலகத்தில் போலவே அவர்களுள் பெரும்பாலோரை அங்குள்ள செல்வம், பதவி, போகம் முதலியவை மயக்கி விடுகின்றன. எனவே தங்கள் புண்ணிய பலனை அங்கே அனுபவித்து முடித்து விட்டு, மீண்டும் பூமியில் மனிதர்களாகப் பிறக்கிறார்கள். அதனால்தான் இந்த உலகம் கர்மபூமி என்று அழைக்கப்படு கிறது. இந்த உலகத்திலிருந்துதான் நாம் முக்தி பெற முடியும். எனவே சொர்க்கங்களும்கூட நாம் அடையத் தகுந்தவை அல்ல.

அப்படியானால் நாம் அடையத் தகுந்தது எது? முக்தி, சுதந்திரம். மேலான சொர்க்கங்களில்கூட நீங்கள் அடிமைகளாக இருக்கிறீர்கள் என்றே நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. அங்கு இருபதாயிரம் ஆண்டுகள் அரசர்களாக இருந்தாலும் அதனால் என்ன பயன்? உடம்பு என்ற ஒன்று இருக்கும்வரை, மகிழ்ச்சிக்கு அடிமையாக நீங்கள் இருக்கும்வரை, காலம் உங்களைக் கட்டுப் படுத்தும்வரை, இடம் உங்களைக் கட்டுப் படுத்தும்வரை நீங்கள் அடிமைகளே. எனவே அக மற்றும் புற இயற்கைகளிலிருந்து விடுபடுவதே நமது நோக்கம். இயற்கை உங்கள் காலடியில் விழ வேண்டும். நீங்கள் அதைக் காலால் மிதித்து, அதற்கு அப்பால் சென்று சுதந்திரமாகவும் மகோன்னதமாகவும் இருக்க வேண் டும். அங்கு வாழ்வு இல்லை, மரணம் இல்லை; இன்பம் இல்லை, ஆகையால் துன்பமும் இல்லை. விளக்க முடியாத, அழிக்க

முடியாத எல்லாவற்றையும் கடந்த பேரின்பம் அது. இங்கு நாம் மகிழ்ச்சி என்றும் நன்மை என்றும் எவற்றைச் சொல்கிறோமோ, அவை அந்த எல்லையற்ற பேரின்பத்தின் வெறும் துளிகள் மட்டுமே. அளவற்ற அந்தப் பேரின்பத்தை அடைவதுதான் நமது லட்சியம்.

ஆன்மா பால்வேற்றுமை இல்லாதது. அது ஆணா பெண்ணா என்று நம்மால் கூற முடியாது. பால்வேற்றுமை உடலுக்கு மட்டுமே. உடலைப் பொறுத்தவரையில் ஆண், பெண் என்று பேசுவது சரி. ஆன்மாவை அவ்வாறு பாகு படுத்துவது அறிவீனம். வயது விஷயத்திலும் அவ்வாறுதான். அதற்கு வயதாவதே இல்லை. பழமையான அது எப்போதும் மாறாததாகவே இருக்கிறது. அது எப்படி இந்த வாழ்க்கையில் கட்டுண்டது? இந்தக் கேள்விக்கு நமது சாஸ்திரங்களில் ஒரே ஒரு பதில் இருக்கிறது: அறியாமைதான் இந்தப் பந்தங்களுக் கெல்லாம் காரணம். அறியாமையினால்தாம் நாம் கட்டுண் டோம்; ஞானம் இந்தக் கட்டினை விலக்கி, நம்மை மறுகரைக்கு அழைத்துச் செல்லும். அந்த ஞானம் எப்படி வரும்? அன்பின் மூலம், பக்தியின்மூலம், கடவுளை வழிபடுவதன் மூலம், எல்லா உயிர்களையும் கடவுளின் கோயிலென்று அன்பு செலுத்துவதன் மூலம். ஏனெனில் எல்லோரிலும் கடவுள் இருக்கிறார். அந்தப் பேரன்பின் மூலம் ஞானம் வரும், அறியாமை மறைந்துபோகும், பந்தங்கள் அறுந்து போகும், ஆன்மா சுதந்திரம் பெறும்.

சாஸ்திரங்களில் கடவுளைப்பற்றி இரண்டு கருத்துக்கள் உள்ளன: ஒன்று சகுணம், மற்றொன்று நிர்க்குணம். சகுணக் கடவுளைப் பற்றிய கருத்து என்னவென்றால், அவர் எங்கும் நிறைந்தவர்; எல்லாவற்றையும் படைத்தவர், காப்பவர், அழிப் பவர்; அண்டசராசரங்களின் நிலையான தந்தையும் தாயும் அவரே. நம்மிலிருந்தும் மற்ற உயிர்களிலிருந்தும் அவர் எப் போதும் வேறுபட்டவர். அவரை நெருங்குவதும் அவரில் வாழ்வதும்தான் முக்தி.

நிர்க்குணக் கடவுளைப் பற்றிய கருத்துக்கள் அடுத்து வரு கின்றன. சகுணக் கடவுளை விளக்கிய குணநலன்கள் எல்லாம் உண்மைக்குப் புறம்பானவை என்றும், பொருளற்றவை என்றும் இங்கே விலக்கப்படுகின்றன. அவர் உருவம் அற்றவர், எங்கும் நிறைந்தவர். அறிபவர் என்று அவரைக் கூற முடியாது. ஏனென் றால் அறிதல், அறிவு என்பவையெல்லாம் மனித மனத்தில் மட்டுமே நிகழக்கூடியவை. சிந்திப்பவர் என்று அவரைக்

கூற முடியாது. ஏனென்றால் சிந்திப்பது பலவீனர்களின் வழி. அவரை ஆராய்பவர் என்று சொல்ல முடியாது, ஏனென்றால் அது பலவீனத்தின் அடையாளம். படைப்பவர் என்று அவரைக் கூற முடியாது. ஏனென்றால் கட்டுண்டு இருப்பவர்கள்தாம் படைப்பார்கள், அவருக்கு என்ன தளை இருக்கிறது? ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக மட்டுமே ஒருவர் செயல் புரிய வேண்டும், அவருக்கு என்ன ஆசை இருக்கிறது? சில தேவைகளைத் தீர்த்துக் கொள்வதற்காகத்தான் உழைக்க வேண்டும், அவருக்கு என்ன தேவை இருக்கிறது?

வேதங்களில் கடவுளைக் குறிப்பிடுவதற்கு 'அவன்' என்ற சொல் பயன்படுத்தப்படவில்லை. 'அது' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஏனெனில் 'அவன்' என்ற சொல் கடவுளை ஆண் என்று காட்டும். எனவே பால்வேற்றுமை இல்லாத 'அது' என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது; 'அது' என்பதே உபதேசிக்கப்படுகிறது. இந்த நெறி அத்வைதம்.

இந்த நிர்க்குணப் பொருளுடன் நமது தொடர்பு என்ன? நாமே அவர். அவரும் நாமும் ஒன்றே. நாம் ஒவ்வொருவரும் குணமற்ற, எல்லா உயிர்களின் அடிப்படையாக இருக்கின்ற அந்த ஒன்றின் வெளிப்பாடே. அந்த எல்லையற்ற, நிர்க்குணப் பொருளிலிருந்து நம்மை வேறாக நினைப்பதால்தான் நாம் துன்பப்படுகிறோம். ஆச்சரியகரமான அந்த நிர்க்குணப் பொருளுடன் நாம் ஒன்றுபட்டவர்கள் என்பதை அறிவதில்தான் முக்தி இருக்கிறது. இது நமது சாஸ்திரங்களில் காணப்படுகின்ற கடவுள் பற்றிய சுருக்கமான இரண்டு கருத்துக்களாகும்.

இங்கே சில விஷயங்களைச் சொல்ல வேண்டும். நிர்க்குணக் கடவுள்கருத்தின் மூலம்தான், உங்களால் ஏதாவது நன்னெறிக் கோட்பாட்டினை உருவாக்க முடியும். 'பிறரையும் உங்களைப் போல் நேசியுங்கள். அதாவது மற்ற மனிதர்களையும் உங்களைப் போல் நேசியுங்கள்' என்று ஒவ்வொரு நாட்டிலும் மிகப் பழங் காலத்திலிருந்தே போதிக்கப்பட்டு வருகிறது. இந்தியாவிலோ 'எல்லா உயிர்களையும் உங்களைப்போல் நேசியுங்கள்' என்று உபதேசிக்கப்படுகிறது. மனிதர்கள், மிருகங்கள் என்று நாம் வேறுபாடு பார்ப்பது கிடையாது. ஆனால் நம்மைப்போல் பிறரையும் நேசிப்பது ஏன் நல்லது என்பதற்கான காரணத்தை யாரும் சொல்லவில்லை; யாருக்கும் தெரியவும் இல்லை. அந்தக் காரணம் நிர்க்குணக் கடவுள்கொள்கையில் உள்ளது. இந்த உலகம் முழுவதும் ஒன்று என்பதை நீங்கள் அறியும்போது,

அதனைத் தெளிவாகப் புரிந்து கொள்வீர்கள்— பிரபஞ்சத்தில் ஓர் ஒருமை உள்ளது, எல்லா உயிர்களும் ஒன்றாக இணைக்கப் பட்டுள்ளன; பிறரைத் துன்புறுத்தும்போது என்னையே நான் துன்புறுத்திக் கொள்கிறேன், யாரிடமாவது அன்பு செலுத் தினால் என்னிடமே நான் அன்பு செலுத்துகிறேன். பிறரை ஏன் துன்புறுத்தக் கூடாது என்பதை இப்போது நாம் அறிந்துகொள் கிறோம். எனவே நன்னெறிக்கான காரணத்தை இந்த நிர்க் குணக் கடவுள்கருத்திலிருந்து மட்டுமே நாம் பெற முடியும்.

பிறகு இதில் சகுணக் கடவுளின் இடம் பற்றிய கேள்வி எழுகிறது. சகுணக் கடவுள்கருத்திலிருந்து பாய்ந்துவரும் அன்பு வெள்ளத்தை நான் புரிந்து கொள்கிறேன்; பல்வேறு காலங்களின் தேவைகளுக்கு ஏற்ப மனிதனுக்குப் பயன்படக் கூடிய அதன் சக்தியையும் அடிப்படை ஆற்றலையும் நான் முழுக்கமுழுக்க ஆமோதிக்கிறேன். ஆனாலும் நம் நாட்டில் நமக்கு இப்போது தேவையானதெல்லாம் சிறிதாவது வலிமையே அன்றி, அளவுக்கு அதிகமான அழுகை அல்ல. எல்லா மூட நம்பிக்கைகளையும் தூர எறிந்துவிட்டு, 'குணங்கள் அற்ற ஒன்று நான்' என்ற ஞானத்தோடு சொந்தக் கால்களிலேயே ஒருவனை நிற்கச் செய்கின்ற இந்த நிர்க்குணக் கடவுள் கொள்கைதான் வலிமையின் எத்தகைய சுரங்கமாக இருக்கிறது! எது என்னைப் பயமுறுத்த முடியும்? நான் இயற்கையின் நியதிகளைக்கூட பொருட்படுத்த மாட்டேன். மரணம் எனக்கு ஒரு கேலிக்கூத்து! இங்கே மனிதன் நிரந்தரமான, எல்லையற்ற, மரணமற்ற ஆன்மா வின், தன் சொந்த ஆன்மாவின் பெருமையில் திளைக்கிறான். அந்த ஆன்மாவை எந்த ஆயுதங்களாலும் வெட்ட முடியாது, எந்தச் சூட்டினாலும் உலர்த்த முடியாது, நெருப்பினால் எரிக்க முடியாது, நீரினால் நனைக்க முடியாது. அது எல்லையற்றது, பிறப்பற்றது, இறப்பற்றது, ஆரம்பமும் முடிவும் இல்லாதது. அதன் முன்னிலையில் சூரிய சந்திரர்களும் வான மண்டலங் களும்கூட கடலின் முன் சிறு துளிகளாகத் தோன்றுகின்றன. அதன் பெருமைக்கு முன்னால் இடம் (Space) என்பது சூன்யத் தில் கரைகிறது; காலம் என்பது இல்லாமல் ஒடுங்கி விடுகிறது.

பெருமை மிக்க இந்த ஆன்மாவில் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அதிலிருந்து ஆற்றல் வரும். எதை நினைக்கிறீர்களோ, அதுவாக ஆவீர்கள். உங்களைப் பலவீனர்கள் என்று நினைத் தால், பலவீனர்கள் ஆவீர்கள்; வலிமையானவர்களாக நினைத் தால் வலிமை மிக்கவர்கள் ஆவீர்கள்; தூய்மையற்றவர்களாக

எண்ணினால் தூய்மையற்றவர் ஆவீர்கள், தூய்மை யானவர்களாக எண்ணினால் தூயவர் ஆவீர்கள்.

எனவே நம்மைப் பலவீனர் என்று நினைக்க வேண்டாம்; நாம் வலிமை மிக்கவர்கள், எதையும் செய்யும் ஆற்றல் பெற்ற வர்கள், எல்லாம் அறிந்தவர்கள் என்று நினைக்கும்படி இது போதிக்கிறது. நான் அதை இதுவரை வெளிப்படுத்தவில்லை என்றால், அதைப்பற்றிக் கவலை இல்லை; ஆனால் அது என்னில் இருக்கிறது. எல்லா அறிவும் எல்லா ஆற்றலும் எல்லா தூய்மையும் எல்லா சுதந்திரமும் என்னில் இருக்கிறது. அந்த அறிவை ஏன் என்னால் வெளிப்படுத்த முடியவில்லை? ஏனென் றால் அவைமீது எனக்கு நம்பிக்கை இல்லை. நான் அதை நம்பினால் அவை வெளிப்பட்டே தீர வேண்டும்; வெளிப் படவே செய்யும். இதைத்தான் நிர்க்குணக் கடவுள் கொள்கை போதிக்கிறது. உங்கள் குழந்தைகளைச் சிறுவயதிலிருந்தே வலிமை உடையவர்களாக ஆக்குங்கள். அவர்களுக்குப் பலவீனத்தைச் சொல்லித் தராதீர்கள். வெறும் புறச் சடங்கு களைக் கற்றுத் தராதீர்கள். அவர்களை வலிமையானவர்களாக ஆக்குங்கள். அவர்கள் தங்களின் கால்களிலேயே நிற்கட்டும். தைரியமானவர்களாக, எல்லாவற்றையும் வெல்பவர்களாக, எல்லா துன்பங்களையும் ஏற்பவர்களாக, அனைத்திற்கும் மேலாக, ஆன்மாவின் பெருமையை அறிபவர்களாக அவர்களை உருவாக்குங்கள்.

நீங்கள் அதை வேதாந்தத்தில், வேதாந்தத்தில் மட்டுமே பெற முடியும். பிற மதங்களிலுள்ள பக்தி, வழிபாடு போன்ற கருத்துக்களும், அவற்றைவிட மேலான வேறு பலவும் வேதாந் தத்தில் உள்ளது. ஆனால் அதிலுள்ள இந்த ஆன்மாவைப் பற்றிய கருத்துதான் உயிரோட்டம் தரும் சிந்தனையாக, மிகவும் ஆச்சரியமானதாக உள்ளது. அங்கே, அங்கே மட்டும்தான் உலகையே புரட்சிமயமாக்கப் போகின்ற, பௌதீக அறிவையும் ஆன்மீகத்தையும் இணைக்கப் போகின்ற மகத்தான கருத்து இருக்கிறது.

நமது மதத்தின் முக்கியமான கருத்துக்களை, கொள்கை களை உங்கள் முன் கொண்டு வர நான் முயன்றேன். இப்போது அவற்றின் பயிற்சி மற்றும் செயல்முறைபற்றி சில வார்த்தைகள் சொல்லப்போகிறேன். இந்தியாவில் இப்போதுள்ள சூழ்நிலை யில் பல மதப்பிரிவுகள் தோன்றத்தான் செய்யும் என்பதை ஏற் கனவே கண்டோம். அவ்வாறே தோன்றியிருப்பதையும் நாம்

காண்கிறோம். அதே நேரத்தில் இவை ஒன்றுக்கொன்று போரிட்டுக் கொள்ளாத விசித்திரத்தையும் பார்க்கிறோம். ஒவ்வொரு வைணவனும் அழியப் போகிறான் என்று சைவர்கள் சொல்வதில்லை. எல்லா சைவர்களும் நாசமாய் போவார்கள் என்று வைணவர்களும் சொல்வதில்லை. 'இது என் பாதை. உங்களுக்கு உங்கள் பாதை இருக்கிறது. முடிவில் நாம் இரண்டு பேரும் சேர்ந்தேயாக வேண்டும்' என்று சைவன் கூறுகிறான். இந்தியாவில் உள்ள எல்லோருக்கும் இது தெரியும். இதுவே இஷ்டதெய்வக் கொள்கை. பல்வேறு விதங்களில் கடவுளை வழிபடுவது மிகப் பழங்காலத்திலேயே ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. வெவ்வேறு மனநிலைகளுக்குப் பல்வேறான வழிபாட்டு முறைகள் தேவை என்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்டதே. நீங்கள் கடவுளிடம் வருகிற வழி எனக்கு ஏற்ற வழியாக இல்லாமல் போகலாம், ஒருவேளை அது என் மனத்தை உறுத்துவதாகக்கூட இருக்கலாம். எல்லோருக்கும் ஒரே வழி என்னும் கொள்கை அழிவைத் தருவதாகும்; அது பொருளற்றது, முற்றிலுமாகத் தவிர்க்கப்பட வேண்டியது.

எல்லோரும் ஒரே மதக் கருத்தை ஏற்றுக்கொண்டு, ஒரே வழியைப் பின்பற்ற நேர்ந்தால் உலகிற்கே அழிவுதான்; எல்லா மதங்களும் எல்லா சிந்தனைகளும் அழிக்கப்பட்டு விடும். வாழ்க்கையின் ஆதாரமே வேறுபாடுதான். அது முழுவதுமாக அழிந்தால் படைப்பே அழிந்து போகும். வேறுபட்ட சிந்தனைகள் இருந்தால்தான் நாம் வாழ்வோம். வேற்றுமைகள் இருக்கிறதே என்று நாம் சண்டையிடத் தேவையில்லை. உங்கள் வழி உங்களுக்கு நல்லது, எனக்கு அல்ல. ஒருவருக்கு உரிய தனி வழி சம்ஸ்கிருதத்தில் இஷ்டம் என்று அழைக்கப்படுகிறது.

உலகத்தில் உள்ள எந்த மதத்துடனும் நமக்கு விரோதம் இல்லை. நம் ஒவ்வொருவருக்கும் இஷ்டம், அதாவது தனி வழி உள்ளது. ஆனால் வெளிநாட்டிலிருந்து சிலர் வந்து, 'இது ஒன்றுதான் எல்லோருக்கும் வழி' என்று சொல்லி, அதையே பின்பற்றுமாறு நம்மை வற்புறுத்தும்போது நாம் அவர்களுக்கு ஒன்று சொல்ல வேண்டும்: 'உங்களைப் பார்த்துச் சிரிப்புத்தான் வருகிறது'. கடவுளைக் காண்பதற்கு, மாறுபட்ட ஒரு பாதையைப் பின்பற்றுவதுபோல் தோன்றுவதால் தங்கள் சகோதரர்களை அழிக்க விரும்புகின்ற இவர்களிடம் அன்பைப் பற்றிப் பேசுவது வீண். இவர்கள் காட்டும் அன்பையும் பெரிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. தங்கள் வழியிலிருந்து மாறுபட்ட

பாதையைப் பின்பற்றுபவர்களைக் கண்டால் பொறுக்க முடியாத இவர்களால் எப்படி அன்பைப் போதிக்க முடியும்? அது அன்பென்றால், பிறகு வெறுப்பு என்பதுதான் என்ன?

உலகத்தில் உள்ள எந்த மதத்துடனும், அது ஏசுவையோ புத்தரையோ முகமதுவையோ அல்லது வேறு எந்த மகானையோ வழிபடச் சொன்னாலும் அவற்றுடன் நமக்குச் சண்டை கிடையாது. இந்து அவர்களைப் பார்த்து, 'வாருங்கள் சகோதரர்களே! நான் உங்களுக்கு உதவுகிறேன். ஆனால் என் வழியில் நான் செல்ல நீங்களும் அனுமதிக்க வேண்டும். அது என் இஷ்டம். உங்கள் வழி மிகவும் நல்லதுதான். அதில் சந்தேகமில்லை. ஆனால் எனக்கு அது அபாயமானதாக இருக்க லாம். எனக்கு எந்த உணவு நல்லது என்பதை என் அனுபவம் தான் எனக்குச் சொல்ல முடியும். ஒரு பெரிய டாக்டர் பட்டாள மும் அதைக் கூற முடியாது. எனவே எனக்கு எது மிக நல்ல பாதை என்பதை நான் என் அனுபவத்திலிருந்தே அறிந்து கொள்கிறேன்' என்கிறான். அதுதான் லட்சியம்; அதுவே இஷ்டம். எனவேதான் கோயிலோ சின்னமோ அல்லது ஒரு திருவுருவோ, உன்னுள் இருக்கும் தெய்வீகத்தை நீ உணர்ந்து கொள்ள உதவுமானால், நீங்கள் அதனை வைத்துக் கொள் ளுங்கள் என்று நாம் சொல்கிறோம். நீங்கள் விரும்பினால் இரு நூறு விக்கிரகங்களை வைத்துக் கொள்ளுங்கள். சில குறிப்பிட்ட விக்கிரகங்களும் வழிபாட்டு முறைகளும் நீங்கள் தெய்வீகத்தை உணர உதவி செய்யுமானால், அந்த வழியில் விரைந்து செல்லக் கடவுள் உங்களுக்கு வலிமை தரட்டும். உங்களைக் கடவுளுக்கு அருகே கொண்டு செல்லுமானால், எந்த வடிவத்தையும் எந்தக் கோயிலையும் எந்த விதமான சடங்குகளையும் தாராளமாகப் பின்பற்றுங்கள். ஆனால் அது குறித்துச் சண்டையிடாதீர்கள். சண்டையிடத் தொடங்குகின்ற அந்தக் கணமே நீங்கள் கடவுளை நோக்கிச் செல்லவில்லை; மிருக நிலையை நோக்கிப் பின்னால் செல்கிறீர்கள்.

நமது மதத்தில் உள்ள சில கருத்துக்கள் இவை. இது எல் லோரையும் தன்னுள் அடக்கிக் கொள்கிறது. யாரையும் விலக்கு வதில்லை. ஜாதிகளும் சமுதாய அமைப்புக்களும் மதத்துடன் தொடர்புள்ளதுபோல் தோன்றினாலும், அவை தொடர்பு உடையவை அல்ல. ஒரு நாடு என்ற வகையில் நம்மை இணைத்துக் காப்பதற்கு இந்தச் சமுதாய அமைப்புக்கள் தேவை; இந்தத் தேவை இல்லாமல் போகும்போது இவை தாமாகவே

அழிந்துவிடும். ஆனால் எனக்கு வயது ஏறஏற, காலங்காலமாகப் போற்றப்பட்டு வந்த இந்த அமைப்புக்களின் நன்மைகளை ஆழ்ந்து சிந்திக்கத் தோன்றுகிறது. இவற்றுள் பலவற்றைப் பயனற்றவை என்றும் நன்மையில்லாதவை என்றும் ஒரு காலத்தில் நினைத்தேன். ஆனால் நான் வளரவளர அவற்றுள் ஒன்றைப் பழிப்பதற்குக்கூட தைரியம் இல்லாதவனாக இருப் பதை உணர்கிறேன். ஏனெனில் அவை ஒவ்வொன்றும் பல நூற்றாண்டு கால அனுபவத்தின் திரட்சிகளாக உள்ளன.

நேற்றுப் பிறந்து நாளைமறுநாள் சாவதற்கு விதியால் நிர்ணயிக்கப்பட்ட ஒரு குழந்தை என்னிடம் வந்து, என் திட்டங்கள் அனைத்தையும் மாற்றச் சொல்கிறது. அந்தக் குழந்தையின் அறிவுரையைக் கேட்டு, அதன் கருத்திற்கு ஏற்ப என் திட்டங்களை நான் மாற்றிக்கொண்டால், நான்தான் முட் டாளே தவிர வேறு யாரும் அல்ல. பல்வேறு நாடுகளிலிருந்து நமக்கு வருகின்ற அறிவுரைகள் எல்லாம் இப்படிப்பட்டவை தான். தங்களை அறிவாளிகள் என்று காட்டிக் கொண்டிருக் கின்ற இந்த முட்டாள்களுக்குச் சொல்லுங்கள்: 'முதலில் ஒரு நிலையான சமுதாயத்தை உனக்கென்று நீ ஏற்படுத்து. அதன் பிறகு நான் உன் உபதேசத்தை கேட்கிறேன். இரண்டு நாட் களுக்கு உங்களால் ஒரே கருத்தை முற்றிலுமாகக் கைக்கொள்ள முடியவில்லை. அதற்குள் அடித்துக்கொண்டு அதை விட்டு விடுகிறீர்கள். மழைக்காலத்தில் தோன்றும் ஈசல்கள்போல் தோன்றி, அவற்றைப் போலவே ஐந்து நிமிடங்களுக்குள் செத்துப் போகிறீர்கள். நீர்க்குமிழிகளைப் போல் தோன்று கிறீர்கள், அவற்றைப் போலவே உடைந்து அழிகிறீர்கள். முதலில் எங்களுடையதுபோல் நிலையான ஒரு சமுதாயத்தை அமையுங்கள். நூற்றாண்டுகள் பலவாகியும் ஆற்றல் குன்றாமல் நிலைத்திருக்கின்ற சட்டங்களையும் சமுதாய அமைப்புக்களை யும் உண்டாக்குங்கள். அதன் பிறகுதான் உங்களோடு இதைப் பற்றிப் பேசுவதற்கான நேரம் வரும். அதுவரை, என் நண்பர் களே, நீங்கள் வெறும் குழந்தைகள்.'

மதத்தைப்பற்றி நான் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி விட்டேன். இன்றைக்கு மிகவும் தேவையான ஒன்றை உங்களுக்கு நினைவுபடுத்திவிட்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன். மகாபாரதம் எழுதிய மகத்தான ஆசாரியராகிய வியாசருக்குப் புகழ் எல்லாம் செல்வதாக! அவர் அதில், இந்தக் கலியுகத்தில் செய்ய வேண்டியது ஒரே ஒரு மகத்தான காரியம்தான்

என்கிறார். மற்ற யுகங்களில் செய்யப்பட்ட கடினமான தவங்களும் யோகங்களும் இந்த யுகத்தில் பலன் தராது. இந்த யுகத்திற்குத் தேவையானது எதுவென்றால் கொடுப்பது, பிறருக்கு உதவி செய்வது, அதாவது தானம். தானம் என்பதன் பொருள் என்ன? தானங்களிலேயே மிகச் சிறந்தது ஆன்மீக ஞானத்தைத் தருவதாகும். அதற்கு அடுத்தது, பௌதிக அறிவைத் தருவது. அதற்கு அடுத்தது துன்பத்தில் காப்பது, கடைசியாக வருவது உணவும் நீரும் தருவது.

ஆன்மீக ஞானத்தை அளிப்பவன், பல பிறவிகள் எடுப்பதிலிருந்து உயிரைக் காப்பாற்றுகிறான். பௌதிக அறிவைத் தருபவன் ஆன்மீக ஞானத்தை நோக்கிச் செல்ல ஒருவனுடைய கண்களைத் திறந்து விடுகிறான். இதற்குக் கீழேதான் மற்ற தானங்களின் மதிப்பு வருகிறது. உயிரைக் காப்பாற்றுவதுகூடக் கீழேதான் வருகிறது. ஆன்மீக ஞானத்தை அளிக்கின்ற செயலை விடப் பிற செயல்கள் மதிப்புக் குறைந்தவை என்பதை அறிந்து கொள்வது அவசியம். மிகவுயர்ந்த, மகத்தான உதவி ஆன்மீக ஞானத்தை அளிப்பதுதான். ஆன்மீகத்தின் நிரந்தர நீரூற்று நம் சாஸ்திரங்களில் உள்ளது. துறவின் பெரும் பூமியான இந்த நாட்டில் அல்லாமல், செயல்முறை ஆன்மீகத்தின் இத்தகைய உன்னத எடுத்துக்காட்டுகளை உலகில் வேறெங்கும் காண முடியாது. எனக்கு ஏதோ சிறிது உலக அனுபவம் உண்டு. என்னை நம்புங்கள். மதத்தைப்பற்றி பிற நாடுகளில் அதிகமாகப் பேசப்படுகிறது. ஆனால் அதனைத் தன் அன்றாட வாழ்வில் செயல்படுத்தியவன் இங்கே, இங்கே மட்டுமே இருக்கிறான்.

வெறும் பேச்சு மதம் ஆகாது. கிளிகள் பேசலாம், இப்போதெல்லாம் எந்திரங்கள் பேசுகின்றன. ஆனால் துறவு வாழ்வை, ஆன்மீக வாழ்வை, துன்பங்களை ஏற்கும் வாழ்வை, எல்லையற்ற அன்பு மயமான வாழ்வை எனக்கு நீங்கள் காட்டுங்கள் பார்க்கலாம். இத்தகைய வாழ்க்கைதான் ஓர் ஆன்மீகவாதியை அடையாளம் காட்டும். இத்தகைய கருத்துக்களும் அவற்றை வாழ்ந்து காட்டிய உன்னதமான வரலாறுகளும் நம் நாட்டில் உள்ளன. யோகியரின் மூளைகளிலும் இதயங்களிலும் செறிந்திருக்கின்ற இந்தக் கருவூலங்களை வெளியே கொண்டு வந்து ஏழை பணக்காரர், உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று, இந்தியாவில் மட்டுமல்ல, உலகத்தில் உள்ள ஒவ்வொருவரின் சொத்தாகும்படிச் செய்யாமல் இருப்பது ஆழ்ந்த பரிதாபத்திற்குரியது. நாம் செய்ய வேண்டிய மகத்தான

கடமைகளுள் இது ஒன்று. பிறருக்கு அதிகமாக உதவுகின்ற அளவிற்கு உங்களுக்கே நீங்கள் உதவி செய்து கொள்வதைக் காண்பீர்கள். நீங்கள் உங்கள் மதத்தை நேசிப்பது உண்மை யானால், உங்கள் நாட்டை நேசிப்பது உண்மையானால் எழுந்து நின்று, உங்கள் சாஸ்திரங்களில் முடங்கிக் கிடக்கின்ற கருவூலங்களை வெளியே கொண்டு வந்து, அதற்கு உரிமையான வாரிசுகளிடம் தர வேண்டும் என்ற ஒரே கருத்துடன் முனைந்து செயலாற்றுங்கள். இது தவிர்க்க முடியாத கடமையாகும்.

இவை அனைத்திற்கும் மேலாக ஒன்று அவசியம். காலங் காலமாக நாம் பயங்கரமான பொறாமையால் இறுகிப் போயி ருக்கிறோம்; ஒருவருக்கொருவர் பொறாமைப்பட்டபடியே இருக்கிறோம். இவனுக்கு ஏன் முன்னேற்றம், எனக்கு ஏன் கூடாது? கடவுளை வழிபடும்போதுகூட நமக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டும் என்று எண்ணுகின்ற அளவிற்கு நாம் அடிமை நிலைக்குத் தாழ்ந்துவிட்டோம். இது தவிர்க்கப்பட வேண்டும். தற்போது இந்தியாவில் கொடிய பாவம் என்று ஒன்று உண்டென்றால் அது இந்த அடிமை மனப்பான்மைதான். கட்டளை இடவே எல்லோரும் விரும்புகிறார்கள், அடிபணிய யாரும் விரும்பவில்லை. இது பழங்காலத்தில் நம்மிடையே இருந்த அற்புதமான பிரம்மச்சரிய முறை அழிந்து போனதால் ஏற்பட்ட விளைவாகும். முதலில் பணியக் கற்றுக் கொள் ளுங்கள், ஆணையிடுகின்ற தகுதி தானே வரும். எப்போதும் முதலில் வேலைக்காரனாக இருக்கக் கற்றுக் கொள்ளுங்கள், எஜமான் ஆவதற்குரிய தகுதி பெறுவீர்கள். இந்தப் பொறாமையை நீக்குங்கள், செய்து முடிக்க வேண்டிய மகத்தான காரியங்களைச் செய்வீர்கள். நமது முன்னோர்கள் அற்புதமான காரியங்களைச் செய்தார்கள். அவர்கள் செய்தவற்றைப் பெருமையோடும் மதிப்போடும் நாம் திரும்பிப் பார்க்கிறோம். நாமும் மகத்தான செயல்களைச் செய்யப் போகிறோம். நமக்குப் பின்வருபவர்கள் மகிழ்ச்சியோடும் பெருமையோடும் நம் செயல் களைத் தங்கள் முன்னோர்களின் காரியமாகப் போற்றட்டும்.

நம் முன்னோர்கள் எவ்வளவுதான் மகத்தானவர்களாக வும் பெருமைக்கு உரியவர்களாகவும் இருந்தாலும் அவர் களுடைய செயல்களை மங்கச் செய்யும் வகையில் நாம் ஒவ் வொருவரும் அதிகச் செயல்களை இறையருளால் செய் வோமாக! ❑

# தமிழ்நாடு

## 1. பாம்பனில்

யாழ்ப்பாணத்திலிருந்து கடல் மார்க்கமாக சுவாமிஜி ஜனவரி 26-ஆம் நாள் பாம்பனுக்கு வந்து சேர்ந்தார். மேலை வெற்றிகளுக்குப் பிறகு பாரதத் திருநாட்டில் அவர் திருவடி பதித்த முதல் இடம் இது. அங்கே ராமநாதபுர மன்னர் அவரை அன்புடன் வரவேற்றார். பாம்பன் மக்களின் சார்பில் வரவேற்புரை அளிக்கப் பட்டது. அதன்பின்னர் மன்னர் உணர்ச்சிபூர்வமானதொரு வரவேற்புரை நிகழ்த்தி னார். அதற்கு சுவாமிஜி பதிலளித்தார்:

### வரவேற்புக்குப் பதிலுரை

நமது புனிதமான தாய்த் திருநாடு ஆன்மீகமும் தத்துவமும் தழைத்த நாடு, ஆன்மீகச் செம்மல்களைப் பெற்ற நாடு, துறவின் உன்னத நாடு. இங்கு, இங்கு மட்டுமே மிகப் பழங்காலத் திலிருந்து மிக நவீன காலம்வரை, வாழ்வின் மிகவுயர்ந்த லட்சியம் மனிதனுக்குக் காட்டப்பட்டுள்ளது. மேலை நாடு களில் நான் இருந்திருக்கிறேன், பல நாடுகளில் பயணம் செய் திருக்கிறேன், பல்வேறு இன மக்களுடன் பழகியிருக்கிறேன். ஒவ்வொரு நாடும் ஒவ்வோர் இனமும் ஒரு குறிப்பிட்ட லட்சியத்தைப் பெற்றிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. வாழ்க்கை நீரோட்டம் முழுவதிலும் அந்த லட்சியம் பாய்ந்து பரவுகிறது, தேசிய வாழ்க்கையின் முதுகெலும்பாக அமைந்து இருக்கிறது. அரசியலோ, வாணிகத் தலைமையோ, தொழில் நுட்ப உயர்வோ, ராணுவ ஆற்றலோ இந்தியாவின் முதுகெலும் பாக இல்லை. நாம் பெற்றதெல்லாம், பெற விரும்புவதெல்லாம் மதம், மதம் மட்டுமே. ஆன்மீகம் என்பது இந்தியாவில் எப் போதும் இருந்து வந்திருக்கிறது. உடல் வலிமையின் வெளிப் பாடுகள் மகத்தானவை. விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புகளிலும் எந்திரங்களிலும் காணப்படுகின்ற அறிவு வெளிப்பாடுகள் உன்னதமானவை. ஆனால் இவை எதுவும் ஆன்மீக சக்தியைவிட அதிக ஆற்றல் கொண்டவை அல்ல.

நமது நாடு செயல்திறம் மிக்கதாக இருந்து வந்திருப்பதை நம் இனத்தின் வரலாறு காட்டுகிறது. நம்மை இன்னும் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டிய நிலையில் இருக்கின்ற சிலர், இந்துக் கள் மந்தமானவர்கள், உற்சாகமற்றவர்கள் என்று பறைசாற்றி

வருகிறார்கள். மற்ற நாட்டு மக்களுக்கு இது ஏதோ பழமொழி போலவே ஆகிவிட்டது. இந்தியா ஒருபோதும் அவ்வாறு மந்த மாக இருந்ததில்லை என்று கூறி, நான் அவர்களின் கருத்தையே ஒதுக்குகிறேன். ஆசீர்வதிக்கப்பட்ட நமது இந்த நாட்டைப் போல் செயல்திறம் வேறெங்கும் இவ்வளவு வெளிப்படையாக இருந்ததில்லை. மிகப் புராதனமான பெருந்தன்மை வாய்ந்த நமது இனம் இன்னும் வாழ்ந்துகொண்டிருப்பதே அதனை நிரூபிக்கிறது. வாழ்வது மட்டுமல்ல, ஆண்டுகள் செல்லச் செல்ல பெருமை மிக்க அதன் வாழ்வு புத்திளமை பெற்று அழியாமலும் அழிக்க முடியாமலும் இருந்து வருகிறது. செயல்திறம் இங்கே மதத்தில் வெளிப்படுகிறது.

ஆனால் மனித இயல்பின் ஒரு விசித்திரம் என்னவென்றால், தன் சொந்தச் செயல்பாட்டின் அளவுகோலைக் கொண்டே பிறரையும் மதிப்பிடுவதாகும். செருப்பு தைப்பவனை எடுத்துக் கொள்வோம். அவன் செருப்பு தைப்பதை மட்டுமே புரிந்து கொள்வான், செருப்பு தயார் செய்வதைவிடச் சிறந்தது வாழ்க்கையில் வேறு எதுவுமே இல்லை என்று எண்ணுகிறான் அவன். கொத்த வேலை செய்பவனுக்கு அதைத் தவிர, வேறு எதுவும் தெரியாது. அதையே அன்றாடம் தன் வாழ்நாள் முழுவதும் செய்துகொண்டிருப்பான். இதை இன்னொரு காரணத்தின் வாயிலாகவும் விளக்கலாம். ஒளியின் அதிர்வுகள் மிகவும் அடர்த்தியாக இருந்தால் நம்மால் ஒளியைக் காண முடியாது. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட எல்லையைக் கடந்த ஒளியைக் காண முடியாதவாறு நாம் ஆக்கப்பட்டிருக்கிறோம். ஆனால் ஒரு யோகியால் அது முடியும். அவர் தமது ஆன்மீக உள்ளுணர்வின் துணையுடன் கீழ்நிலை மக்களின் உலகியல் திரையை ஊடுருவி அப்பால் காண்கிறார்.

உலகம் முழுவதன் கண்களும் ஆன்மீக உணவிற்காக இப்போது இந்தியாவை நோக்கித் திரும்பியுள்ளன; எல்லா இனங்களுக்கும் இந்தியா அதைத் தந்தாக வேண்டும். மனித குலத்திற்கான மிகச் சிறந்த லட்சியம் இங்கு மட்டுமே உள்ளது. நமது சம்ஸ்கிருத இலக்கியங்களிலும் தத்துவங்களிலும் உள்ளதும், காலங்காலமாக இந்தியாவின் தனிப்பெரும் பண்பாகத் திகழ்வதுமாகிய இந்த லட்சியத்தைப் புரிந்துகொள்வதற்காக இப்போது மேலை நாட்டு அறிஞர்கள் அரும்பாடுபட்டுவருகின்றனர்.

வரலாறு தொடங்கியதிலிருந்து இந்து மதக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் பரப்புவதற்கு இந்தியாவிற்கு

வெளியே எந்தப் பிரச்சாரகரும் சென்றதில்லை. ஆனால் இப் போது நம்மிடம் ஓர் ஆச்சரியகரமான மாறுதல் ஏற்பட்டுள்ளது. பகவான் ஸ்ரீகிருஷ்ணர், 'தர்மம் குன்றி அதர்மம் மேலோங்கும் போது உலகிற்கு உதவ நான் மீண்டும்மீண்டும் வருகிறேன்'[1] என்று கூறுகிறார். நம்மிடமிருந்து நீதிநெறிக் கோட்பாடுகளைப் பெறாத நாடே இல்லை என்ற உண்மையை மத ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. ஆன்மா அழிவற்றது என்பதுபோன்ற மேலான கருத்துக்கள் எந்த மதத்திலாவது காணப்பட்டால், அது நேரடியாகவோ மறைமுகமாகவோ நம்மிடமிருந்து பெறப்பட்டதே ஆகும்.

இந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் காணப் படுவதைப்போல், இதற்கு முன்பு இவ்வளவு அதிகமான கொள்ளைகளும், முரட்டுத்தனங்களும், பலமானவர்கள் பல வீனர்களுக்கு இழைக்கும் அடக்குமுறைகளும் உலக வரலாற்றில் இருந்ததில்லை. ஆசைகளை வெல்வதன் வாயிலாக மட்டுமே முக்தி கிட்டும், ஜடப் பொருளின் தளையில் கட்டுண்ட எந்த மனிதனும் சுதந்திரமாக இருக்க முடியாது என்பதை ஒவ் வொருவரும் அறிந்துகொள்ள வேண்டும். இந்த மகத்தான உண்மையை எல்லா நாடுகளும் மெல்லமெல்லப் புரிந்து கொள்ளவும் பாராட்டவும் தொடங்கி இருக்கின்றன. இந்த உண்மையைச் சீடன் புரிந்து கொள்ளும் நிலையை அடைந்த தும், குருவின் வார்த்தைகள் அவனது உதவிக்கு வருகின்றன. ஒருபோதும் தடைபடாததும், எப்போதும் எல்லா இனங்களின் மீதும் பாய்ந்து கொண்டிருக்கின்ற தன் எல்லையற்ற கருணை யைத் தன் சொந்தக் குழந்தைகளுக்கு அனுப்பி உதவுகிறான் இறைவன். நம் இறைவன் எல்லா மதங்களின் இறைவன். இந்தக் கருத்து இந்தியாவுக்கு மட்டுமே சொந்தமானது, உலகின் வேறு சாஸ்திரங்கள் எதிலாவது இத்தகைய கருத்தைக் காட்ட முடியுமா என்று உங்களுக்குச் சவால் விடுகிறேன்.

கடவுளின் திருவுளத்தால், இந்துக்களாகிய நாம் இப்போது நெருக்கடியும் பொறுப்பும் மிக்க இடத்தில் வைக்கப்பட்டு இருக்கிறோம். ஆன்மீக உதவிக்காக மேலை நாடுகள் நம்மை நாடி வந்து கொண்டிருக்கின்றன. மனித வாழ்வின் அடிப்படைப் பிரச்சினைகளில் உலக மக்களுக்கு ஒளி காட்டுகின்ற தார்மீகப் பொறுப்பு பாரதத் தாயின் பிள்ளைகளிடம் உள்ளது. அதற்குத்

1. கீதை, 4.7, 8.

தகுதி படைத்தவர்களாகத் தங்களை ஆக்கிக்கொள்ள வேண்டிய கடமை அவர்களுக்கு உள்ளது.

ஒன்றை நாம் கவனிக்கலாம். மற்ற நாடுகளின் மாமனிதர் கள், ஏதோ மலைக்கோட்டையில் வாழ்ந்துகொண்டு, அவ்வப்போது வெளிவந்து வழிப்போக்கர்களைக் கொள்ளை யடித்து வாழ்க்கை நடத்திய கொள்ளையர் தலைவனின் வழி வந்தவர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுகிறார்கள். ஆனால் இந்துக்களாகிய நாமோ, மலைகளிலும் குகைகளிலும் வாழ்ந்து, கிழங்குகளையும் கனிகளையும் உண்டபடி, இறைவனை தியானம் செய்துவந்த ரிஷிகளின், மகான்களின் வழித்தோன்றல்கள் என்று கூறு வதில் பெருமைப்படுகிறோம். நாம் இப்போது இழிவையும் பிற்போக்கையும் அடைந்திருக்கலாம். எவ்வளவுதான் இழி வையும் பிற்போக்கையும் அடைந்திருந்தாலும், நமது மதத் திற்காக, சரியான உற்சாகத்தோடு வேலை செய்யத் தொடங் கினால் மறுபடியும் மகத்தானவர்களாக ஆகிவிடுவோம்.

எனக்கு நீங்கள் தந்த மனம் நிறைந்த கனிவான வரவேற் பிற்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றிகளை ஏற்றுக் கொள்ளுங்கள். மேன்மை தங்கிய ராமநாதபுர மன்னர் என்னிடம் கொண்டிருக் கும் அன்பிற்கு வார்த்தைகள் மூலம் நன்றி செலுத்துவது என் பது முடியாத காரியம். என்னாலும் என் வாயிலாகவும் ஏதாவது நற்காரியம் செய்யப்பட்டு இருக்குமேயானால், அது இந்த மனிதரால்தான். இந்தியா இந்த நல்ல மனிதருக்குக் கடமைப் பட்டு இருக்கிறது. ஏனெனில் நான் சிகாகோ சர்வமத மகா சபைக்குப் போக வேண்டும் என்று நினைத்தவரே இவர்தான். அந்த எண்ணத்தை என் மனத்தில் எழுப்பியவரும், நான் அங்கு நிச்சயம் சென்றாக வேண்டும் என்று இடைவிடாமல் வற்புறுத் தியவரும் இவர்தான். இப்போது என் பக்கத்தில் நின்று கொண்டு, முன்புபோலவே, உற்சாகத்துடன் மேலும்மேலும் நான் பணிகளில் ஈடுபட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். அன்பான நமது தாய்நாட்டின் உயர்விற்காக ஆன்மீக வழியில் பாடுபட இவரைப்போல் இன்னும் ஐந்தாறு மன்னர்கள் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ❑

## 2. ராமேசுவரம் கோயிலில்

பாம்பனிலிருந்து சுவாமிஜி ராமேசுவரம் கோயிலுக்குச் சென்றார். அங்குக் கூடியிருந்த மக்கள் அவரிடம் ஓரிரு வார்த்தைகள் பேசுமாறு கேட்டுக்கொண்டனர். சுவாமிஜி பேசியதை திருநாகலிங்கம் என்பவர் தமிழில் மொழிபெயர்த்தார்.

### உண்மை வழிபாடு

மதம் வாழ்வது அன்பில், இதயத்தின் தூய்மையான உண்மையான அன்பில்தானே தவிர சடங்குகளில் அல்ல. உடலாலும் மனத்தாலும் தூய்மையாக இல்லாமல் ஒருவன் கோயிலுக்கு வருவதும் சிவபெருமானை வழிபடுவதும் பயனற்றது. உடம்பாலும் மனத்தாலும் தூய்மையாக இருப்பவர்களின் பிரார்த்தனைகளை சிவபெருமான் நிறைவேற்றுகிறார். ஆனால் தாங்களே தூய்மையற்றவர்களாக இருந்துகொண்டு பிறருக்கு மத போதனை செய்பவர்கள் இறுதியில் தோல்வியையே அடைகிறார்கள். புற வழிபாடு என்பது அக வழிபாட்டின் அடையாளம் மட்டுமே. அக வழிபாடும் தூய்மையும்தான் உண்மையான விஷயங்கள். இவையின்றிச் செய்யப்படுகின்ற புற வழிபாடு பயனற்றது. இதனை மனத்தில் பதித்துக்கொள்ள முயற்சி செய்யுங்கள்.

தாங்கள் எதை வேண்டுமானாலும் செய்யலாம், பிறகு ஒரு தீர்த்தத் தலத்திற்குச் சென்றால் அந்தப் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டுவிடும் என்று நினைக்கும் அளவிற்குக் கீழான நிலைக்கு இந்தக் கலியுகத்தில் மக்கள் வந்துவிட்டனர். தூய்மையற்ற உள்ளத்துடன் கோயிலுக்குச் செல்கின்ற ஒருவன் ஏற்கனவே இருக்கின்ற தன் பாவங்களுடன் மேலும் ஒன்றைக் கூட்டுகிறான், புறப்பட்டபோது இருந்ததைவிட மோசமானவனாக வீடு திரும்புகிறான். தீர்த்தத் தலங்கள் புனிதமான பொருட்களாலும் மகான்களாலும் நிரம்பி இருப்பவை. மகான்கள் வாழ்கின்ற இடங்களில் கோயில் எதுவும் இல்லையென்றாலும், அந்த இடங்கள் தீர்த்தத் தலங்களே. நூறு கோயில்கள் இருந்தாலும், அங்கே புனிதமற்றவர்கள் இருப்பார்களானால் தெய்வீகம் மறைந்துவிடும். தீர்த்தத் தலங்களில் வாழ்வதும்

மிகவும் கடினமான காரியம். சாதாரண இடங்களில் செய்யப் படும் பாவங்களை எளிதாக நீக்கிக்கொள்ள முடியும். ஆனால் தீர்த்தத் தலங்களில் செய்யப்படும் பாவத்தை நீக்கவே முடியாது.

மனத் தூய்மை, பிறருக்கு நன்மை செய்வது—இதுவே எல்லா வழிபாடுகளின் சாரமாகும். ஏழையிடமும் பலவீன ரிடமும் நோயுற்றோரிடமும் சிவபெருமானைக் காண்பவனே உண்மையில் சிவபெருமானை வழிபடுகிறான். விக்கிரகத்தில் மட்டுமே சிவபெருமானைக் காண்பவனின் வழிபாடு ஆரம்ப நிலையில் உள்ளது. ஒரே ஓர் ஏழைக்காயினும், அவனது ஜாதி, இனம், மதம் போன்ற எதையும் பாராமல், அவனிடம் சிவ பெருமானைக் கண்டு அவனுக்கு உதவிகள் செய்து தொண் டாற்றுபவனிடம் சிவபெருமான் மிகவும் திருப்தி கொள்கிறார்; கோயிலில் மட்டுமே தம்மைக் காண்பவனைவிட, இவனிடம் அதிக மகிழ்ச்சி கொள்கிறார்.

ஒரு பணக்காரனுக்குத் தோட்டமொன்று இருந்தது. அதில் இரண்டு தோட்டக்காரர்கள் இருந்தார்கள். ஒருவன் சோம்பேறி, வேலையே செய்ய மாட்டான். ஆனால் எஜமான் தோட்டத் திற்கு வந்தால்போதும், உடனே எழுந்து போய் கூப்பிய கை களுடன் அவரிடம், 'ஓ, என் எஜமானின் முகம் எவ்வளவு அழ காக இருக்கிறது' என்று புகழ்பாடி அவர் முன்னால் பல்லை இளித்துக்கொண்டு நிற்பான். மற்றவன் அதிகம் பேசுவதே இல்லை, ஆனால் கடினமாக உழைப்பான். பலவகையான பழங்களையும் காய்கறிகளையும் சாகுபடி செய்து, நெடுந் தொலைவில் வசிக்கின்ற அந்த எஜமானின் வீட்டிற்குச் சுமந்து கொண்டு செல்வான். இந்த இரண்டு தோட்டக்காரர்களுள் யாரை எஜமான் அதிகம் விரும்புவார்? சிவபெருமான்தான் அந்த எஜமான். இந்த உலகம் அவரது தோட்டம். இங்கே இரண்டு வகையான தோட்டக்காரர்கள் இருக்கிறார்கள். ஒரு வகையினர் சோம்பேறிகள், ஏமாற்றுக்காரர்கள். அவர்கள் எதுவும் செய்வதில்லை; சிவபெருமானின் அழகான கண்களை யும் மூக்கையும் மற்ற குணநலன்களையும் பற்றிப் பேசிக் கொண் டிருப்பார்கள். ஏழைகளான, பலவீனர்களான எல்லா மனிதர் கள், விலங்குகள் மற்றும் அவருடைய படைப்பு அனைத்தையும் மிகுந்த கவனத்தோடு பராமரிப்பவர்கள் மற்றொரு வகையினர். இவர்களுள் யார் சிவபெருமானின் அன்பிற்கு உரியவர்கள்? நிச்சயமாக அவரது பிள்ளைகளுக்குச் சேவை செய்பவர்களே. தந்தைக்குச் சேவை செய்ய விரும்புபவர்கள், முதலில்

பிள்ளைகளுக்குச் சேவை செய்ய வேண்டும். சிவபெருமானுக்குச் சேவை செய்ய விரும்புபவர்கள், அவரது பிள்ளைகளாகிய இந்த உலக உயிர்கள் அனைத்திற்கும் முதலில் சேவை செய்ய வேண்டும். கடவுளின் தொண்டர்களுக்குச் சேவை செய்பவர்களே அவரது மிகச் சிறந்த தொண்டர்கள் என்று சாஸ்திரங்களிலும் கூறப்பட்டுள்ளது. இந்தக் கருத்தை மனத்தில் கொள்ளுங்கள்.

மீண்டும் சொல்கிறேன்: மனத்தூய்மையுடன் இருங்கள், உங்களை நாடி வரும் ஏழைகளுக்கு உங்களால் இயன்ற உதவி செய்யுங்கள். இது நற்கர்மம். இதன் பலனாக உங்கள் இதயம் தூய்மை (சித்தசுத்தி) பெறும். எல்லோரிலும் உறைகின்ற சிவ பெருமான் வெளிப்பட்டுத் தோன்றுவார். அவர் எல்லோரது இதயத்திலும் எப்போதும் இருக்கிறார். அழுக்கும் தூசியும் படிந்த கண்ணாடியில் நம் உருவத்தைப் பார்க்க முடியாது. அறியாமையும் தீய குணங்களுமே நம் இதயக் கண்ணாடியில் படிந்துள்ள தூசியும் அழுக்கும்.

நம் நன்மையை மட்டுமே நினைக்கின்ற சுயநலம், பாவங்கள் அனைத்திலும் முதற்பாவமாகும். 'நானே முதலில் உண்பேன். மற்றவர்களைவிட எனக்கு அதிகமான பணம் வேண்டும், எல்லாம் எனக்கே வேண்டும்', 'மற்றவர்களுக்கு முன்னால் நான் சொர்க்கத்தை அடைய வேண்டும், எல்லோருக்கும் முன்னால் நான் முக்தி பெற வேண்டும்' என்றெல்லாம் நினைப்பவன் சுயநலவாதி. சுயநலமற்றவனோ, 'நான் கடைசியில் இருக்கிறேன். சொர்க்கம் செல்வதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் நரகத்திற்குச் செல்வதால் என் சகோதரர்களுக்கு உதவ முடியுமானால் அதற்கும் தயாராக இருக்கிறேன்' என்கிறான். இத்தகைய சுயநலமற்ற தன்மையே மதத்திற்கான உரைகல். சுயநலம் இல்லாதவனே மேலான ஆன்மீகவாதி, அவனே சிவபெருமானுக்கு அருகில் இருக்கிறான். அவன் படித்தவனாக இருந்தாலும் படிக்காதவனாக இருந்தாலும், அவன் அறிந்தாலும் அறியவில்லை என்றாலும் அவனே மற்ற அனைவரையும்விட சிவபெருமானுக்கு அருகில் இருக்கிறான். சுயநலம் கொண்டவன் எல்லா கோயில்களையும் வழிபட்டிருந்தாலும், புண்ணியத் தலங்கள் அனைத்தையும் பார்த்திருந்தாலும், சிறுத்தையைப் போல் தன் உடம்பு முழுவதிலும் மதச் சின்னங்களைத் தீட்டிக் கொண்டிருந்தாலும் அவன் சிவபெருமானிடமிருந்து விலகியே இருக்கிறான். ❑

## 3. ராமநாதபுரத்தில்

ஜனவரி 25-ஆம் நாள் மன்னர் வரவேற்புரை ஒன்று அளித்தார். சுவாமிஜி அளித்த பதிலின் சுருக்கம்:

மிக நீண்ட இரவு விலகுவதுபோல் தோன்றுகிறது, மிகக் கடுமையான துன்பம் கடைசியாக முடிவுக்கு வந்துவிட்டது போல் தோன்றுகிறது, பிணம்போல் கிடந்த உடம்பு விழிப்பது போல் உள்ளது. இந்த நேரத்தில் ஒரு குரல் நம்மை நோக்கி வருகிறது—வரலாறும் மரபுகளும்கூட எட்டிப் பார்க்கமுடி யாத இருள்செறிந்த அந்தக் கடந்தகாலத்திலிருந்து புறப்பட்டு, ஞானம், பக்தி மற்றும் கர்மமாகிய எல்லையற்ற இமயச் சிகரங்கள் தோறும் எதிரொலிப்பதுபோல் நம் தாய்நாடாகிய இந்தியாவின் குரல் நம்மை நோக்கி வருகிறது. மெதுவாக ஆனால் உறுதியாக மிகவும் தெளிவாக அது வருகிறது. நாளுக்கு நாள் அதன் ஒலி அதிகரித்துக்கொண்டே வருகிறது. தூங்கிய வன் விழிக்கிறான்! இமயத்திலிருந்து தவழ்ந்து வரும் தென்றல் காற்றைப்போல், அது ஏறத்தாழ உயிரிழந்த நிலையில் இருக் கின்ற எலும்புகளுக்கும் தசைகளுக்கும் உயிர்த்துடிப்பைத் தரு கிறது. சோம்பல் நீங்கத் தொடங்குகிறது. நமது பாரதத்தாய் நீண்ட ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழிக்கிறாள். அவள் விழித்து வருவதைக் குருடனும் குதர்க்கவாதிகளும் காண முடியாது. அவளை யாரும் தடுக்க முடியாது. இனி அவள் தூங்கப் போவதுமில்லை. புற சக்திகள் எதுவும் அவளை அடிமைப் படுத்த முடியாது. ஏனெனில் அவளது காலடியில் எல்லையற்ற ஆற்றல் எழுந்து கொண்டிருக்கிறது.

ராமநாதபுர மன்னர் அவர்களே! ராமநாதபுரத்தின் குடி மக்களே! நீங்கள் அன்போடும் கனிவோடும் எனக்கு அளித்த வரவேற்பிற்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றியை ஏற்றுக்கொள் ளுங்கள். உங்கள் அன்பையும் கனிவையும் என்னால் உணர முடிகிறது. ஏனெனில் வாய்ச் சொற்களைவிட இதயத்துடன் இதயம் பேசுவதே உயர்ந்த மொழி. உயிருடன் உயிர் கலந்து, ஆழ்ந்த அமைதியில் அவை பேசுகின்ற அந்த மொழி சிறிதும்

தவறில்லாத தூய மொழி. அதை நான் என் உள்ளத்தின் ஆழத்தில் உணர்கிறேன்.

மேன்மை தங்கிய ராமநாதபுர மன்னர் அவர்களே, மேலை நாடுகளில் நமது மதத்திற்காகவும் நம் தாய்நாட்டிற்காகவும் என்னால் ஏதாவது சிறிய வேலை செய்ய முடிந்தது என்றால், தங்கள் சொந்த வீடுகளிலேயே ஆழமாகப் புதைந்து கிடக்கின்ற விலைமதிப்பற்ற ரத்தினங்களை அறியாத நம் நாட்டு மக்களின் கவனத்தை அதன்மீது திருப்பி, அவர்களின் உணர்ச்சிகளை விழிக்கச் செய்ய முடிந்ததென்றால், அறியாமையாகிய குருட்டுத் தனத்தின் காரணமாக, தாகத்தால் தவித்து வாடி, உயிர் பிழைக்கும் வழிதேடி எங்கோ உள்ள சாக்கடைத் தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தவர்களை அழைத்து, தங்கள் சொந்த வீட்டிலேயே வற்றாமல் பொங்கிக் கொண்டிருக்கின்ற நிரந்தர ஊற்றுநீரைக் குடிக்குமாறு என்னால் செய்ய முடிந்தது என்றால், நமது மக்களை விழிப்புணர்த்தி, செயல்படத் தூண்டி, எல்லாவற்றிலும் இந்தியாவின் உயிர்த்துடிப்பு மதம், மதம் மட்டுமே என்பதைப் புரியவைக்க முடிந்ததென்றால், அந்த உணர்வு இல்லாது போனால் எத்தனை அரசியல்கள் இருந்தாலும், எத்தனை சமூகச் சீர்திருத்தங்கள் இருந்தாலும், இந்த நாட்டு மக்கள் ஒவ்வொருவரின் தலைமீதும் குபேரனின் செல்வத்தைக் கொட்டிக் குவித்தாலும் இந்தியா அழிந்துவிடும் என்று நான் அவர்களுக்கு உணர்த்த முடிந்தது என்றால், இதற்காக இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் என்னால் ஏதாவது செய்ய முடிந்தது என்றால் அதற்கான பெருமை முக்கியமாக தங்களையே சாரும்.

ஏனெனில் நீங்கள்தான் எனக்கு முதன்முதலில் இந்த எண்ணத்தைத் தந்தீர்கள். நீங்கள்தான் இடைவிடாமல் என்னை இத்தகைய வேலையில் தூண்டி வந்தீர்கள். எதிர்காலத்தை உள்ளுணர்வால் புரிந்துகொண்டதுபோல் நீங்கள்தான் என் கைகளைப் பிடித்து அந்தப் பணிகளுக்கு அழைத்துச் சென்றீர்கள், எல்லா வழிகளிலும் உதவினீர்கள், ஒருபோதும் தயங்காமல் என்னை உற்சாகப்படுத்தினீர்கள். எனவேதான், எனது வெற்றியில் மகிழ்கின்ற முதல் மனிதராக நீங்கள் இருக்கிறீர்கள். அதைக் காணவே நான் இந்தியாவிற்குத் திரும்பும் வழியில் உங்கள் அரசில் முதன்முதலில் இறங்க நேர்ந்தது போலும்!

மேன்மை தங்கிய மன்னரே, தாங்கள் ஏற்கனவே கூறியது போல் மகத்தான வேலைகள் செய்யப்பட வேண்டியுள்ளது;

வியக்கத்தக்க ஆற்றல்கள் செயல்படுத்தப்பட வேண்டியுள்ளது. மற்ற நாடுகளுக்கு நாம் பலவற்றைப் போதிக்க வேண்டியுள்ளது; தத்துவத்தின், ஆன்மீகத்தின், பண்பின், இனிமையின், மென்மையின், அன்பின் தாயகம் இந்தப் பூமி. இந்தக் குணங்கள் இன்றும் இருக்கின்றன. பல நாடுகளுக்குச் சென்றதில் கிடைத்த என் அனுபவங்கள் எனக்கு இதையே அழுத்தமாகத் தெரிவிக்கின்றன. உலக நாடுகளிலேயே இந்தியாவில்தான் இந்தக் குணங்கள் இன்றும் மிகச்சிறந்த அளவில் இருக்கிறது என்பதை உறுதியாக, தைரியமாக என்னால் சொல்ல முடியும்.

இந்த விந்தையைப் பாருங்கள். கடந்த நான்கைந்து ஆண்டுகளாக இங்கு எத்தனையோ அரசியல் மாற்றங்கள் நடந்துள்ளன. பல்வேறு நாடுகளில் உள்ள அமைப்புகளை அழிப்பதற்காகப் பெரிய இயக்கங்கள் வேலை செய்துவருகின்றன. மேலை நாடுகளில் அவை குறிப்பிடத்தக்க வெற்றியும் பெற்றுவருகின்றன. இதைப்பற்றிக் கேள்விப்பட்டதுண்டா என்று நம் மக்களைக் கேளுங்கள். ஒரு வார்த்தையும் கேள்விப்பட்டதில்லை. ஆனால் சிகாகோவில் சர்வமத மகாசபை ஒன்று நடைபெற்றது, அதில் கலந்துகொள்ள இந்தியாவிலிருந்து ஒரு துறவி அனுப்பப் பட்டது, அவர் அங்கே மிகுந்த பாராட்டு பெற்றது, அப்போதிலிருந்து அவர் அங்கே பணியாற்றி வருவது போன்ற விவரங்கள் சாதாரண பிச்சைக்காரனுக்குக்கூடத் தெரிந்திருக்கிறது.

நம் மக்கள் மழுங்கிய மூளை உடையவர்கள், அவர்கள் கற்க விரும்புவதில்லை, எந்தச் செய்திகளையும் அறிந்து கொள்ள விரும்புவதில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருகாலத்தில் நானும் அத்தகைய முட்டாள்தனமான கருத்தையே கொண்டிருந்தேன். ஆனால் உலகைச் சுற்றி வருகின்ற யாத்திரிகர்களும், மேலோட்டமாக விஷயங்களைப் புரிந்துகொள்கின்ற அவசர புத்திக்காரர்களும் எழுதுகின்ற நூல்களில் உள்ள கருத்துக்களை விட, கற்பனைகளைவிட அனுபவமே சிறந்த ஆசானாக உள்ளது. நம் மக்கள் முட்டாள்கள் அல்ல, மந்தமானவர்கள் அல்ல, கதிரவனின் குடையின்கீழ் இந்த உலகத்தில் வாழ்கின்ற எல்லா மக்களைப் போலவே அவர்களும் செய்திகளை அறிந்து கொள்வதில் ஆர்வமும் தாகமும் உடையவர்களாக உள்ளனர் என்பதைத்தான் இந்த அனுபவம் எனக்குப் போதித்தது.

ஆனால் ஒவ்வொரு நாட்டிற்கும் அதற்கென்று ஒரு தனிப் பங்கு உள்ளது. இயல்பாகவே ஒவ்வொரு நாடும் தன்னோடு பிறந்த, தனக்கென்றே உரிய விசித்திரங்களும் தனித் தன்மையும்

கொண்டதாக உள்ளது. உலக நாடுகள் அனைத்தின் இந்த இயைபில் ஒவ்வொரு நாட்டிற்கும் தனிப் பங்கு உள்ளது. அதுவே அந்த நாட்டின் உயிரோட்டமாகவும் ஆதாரமாகவும் உள்ளது. அதுவே அந்த நாட்டு தேசிய வாழ்வின் முதுகெலும்பாகவும் அஸ்திவாரமாகவும் அசைக்க முடியாத அடித்தளப் பாறையாகவும் அமைந்துள்ளது.

நமது இந்த ஆசீர்வதிக்கப்பட்ட நாட்டின் அடித்தளமாகவும் முதுகெலும்பாகவும் உயிர்நிலைமையமாகவும் இருப்பது மதம், மதம் மட்டுமே. மற்றவர்கள் அரசியலைப்பற்றிப் பேசட்டும், வியாபாரத்தின் மூலம் குவிகின்ற அளவற்ற செல்வத்தின் பெருமையைப் பேசட்டும், பரவி வருகின்ற வாணிப வளத்தைப் பற்றிப் பேசட்டும், சுதந்திரத்தின் மகிமையைப்பற்றிப் பேசட்டும். இவைகளை எல்லாம் இந்துவின் மனம் புரிந்து கொள்ளாது, புரிந்து கொள்ளவும் விரும்பாது. ஆன்மீகம், மதம், இறைவன், ஆன்மா, எல்லையற்ற பரம்பொருள், முக்தி—இவை பற்றியெல்லாம் பேசிப் பாருங்கள். பிற நாடுகளின் சிறந்த தத்துவ ஆசிரியர்கள் என்று கூறப்படுபவர்களைவிட நம் நாட்டில் உள்ள சாதாரண குடியானவன் இவற்றைப்பற்றி அதிகமாக அறிந்திருப்பான். இது உறுதி. அன்பர்களே, நாம் இந்த உலகத்திற்குப் போதிக்க வேண்டியவை சில உள்ளன என்று கூறினேன். ஏறக்குறைய ஆயிரம் ஆண்டு காலம் கொடுமையிலும் அன்னிய ஆதிக்கத்திலும் அவர்களின் தண்டனைகளின் கீழும் வாழ்ந்தும் இந்த நாடு அழியாமல் இருப்பதற்குரிய ஒரே காரணம், இந்த உலகத்திற்குப் போதிக்க வேண்டியதை அது பெற்றிருப்பதுதான். இந்த நாடு இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கிறது. ஏனெனில் அது கடவுளையும் மதம் மற்றும் ஆன்மீகக் கருவூலங்களையும் கைவிடாமல் பிடித்துக்கொண்டிருக்கிறது.

தற்போது அரசியல் பேராசைகளாலும் சமூகத் திட்டங்களாலும் பெரும்பாலும் அழிக்கப்பட்டுவிட்ட, பாதி செத்துவிட்ட மேலை நாடுகளுக்கும் பிற நாடுகளுக்கும் புதிய வாழ்வையும் புதிய சக்தியையும் வெள்ளம்போல் பாய்ச்சுவதற்கான மதம் மற்றும் ஆன்மீகத்தின் ஊற்றுக்கள் இன்னும் இந்த நாட்டில்தான் இருக்கின்றன.

இந்தியச் சூழலை நிறைத்துக் கிளம்புகின்ற, இயைபானதும் மாறுபட்டதுமான பல்வேறு குரல்களுக்கிடையே மகத்தான, தனித்தன்மையான, முழுமையான ஒரு குரல் எழுகிறது; அது துறவு. துறந்துவிடு! இதுதான் இந்திய மதங்களின்

அடிப்படையான கருத்து. இந்த உலகம் இரண்டு நாட்களுக்கு மட்டுமே இருக்கின்ற ஒரு மாயை. இப்போதைய வாழ்க்கையும் வெறும் ஐந்து நிமிடங்களுக்கு மட்டுமே. இதற்குப் பின்னால், மாயையாகிய இந்த உலகத்திற்குப் பின்னால் எல்லையற்ற ஒன்று உள்ளது; அதனை நாம் தேடுவோம். முடிவில்லாததாகக் கருதப்படுகின்ற இந்தப் பிரபஞ்சம்கூட ஒரு சேற்றுக்குட்டை மட்டுமே என்று எண்ணுகின்ற ஆற்றல்மிக்க பரந்த மனங்களாலும் அறிவாலும் ஒளி பெறுகின்ற நாடு இது. இதற்குப் பின்னால், அதற்கும் பின்னால் அவர்கள் போகிறார்கள். காலம், எல்லையற்ற காலம்கூட அவர்களைப் பொறுத்தவரை வெறுமையே. காலத்திற்கும் அப்பால், வெகு அப்பால் அவர்கள் செல்கிறார்கள். இடம் (Space) என்பது அவர்களுக்கு ஒன்றுமே இல்லை. அதையும் கடந்து செல்ல அவர்கள் விரும்புகிறார்கள். இப்படி இந்த உலகம், காலம், இடம் அனைத்தையும் கடந்து செல்வதுதான் மதத்தின் ஆதாரம்.

எல்லாவற்றையும் கடந்து செல்வதுதான், அனைத்தையும் கடந்து செல்வதற்கான இந்தப் போராட்டம்தான், எதனை இழக்க நேரினும் எந்த ஆபத்துக்களை எதிர்கொள்ள நேரினும் எல்லாவற்றிற்கும் அப்பால் இருக்கின்ற ஒன்றின் காட்சியைப் பெறுவதற்காக இயற்கையின் முகத்திரையைக் கிழிக்கின்ற தைரியம்தான் நமது நாட்டின் பண்பு. அதுவே நமது லட்சியம். ஆனால் ஒரு நாட்டிலுள்ள எல்லோரும் முற்றிலுமாகத் துறந்து விட முடியாதுதான். அவர்களுக்கு உற்சாகமூட்ட விரும்புகிறீர்களா? அப்படியானால் அதற்கான வழி இதோ உள்ளது. உங்கள் அரசியல், சமூகச் சீர்திருத்தம், பணம் சம்பாதிப்பது, வாணிப வளம்—இவை பற்றிய உங்கள் பேச்சுக்கள் எல்லாம் வாத்தின் முதுகில்பட்ட தண்ணீர்போல் வழிந்து போய்விடும். பிறகு? நீங்கள் உலகிற்குப் போதிக்க வேண்டியதெல்லாம் ஆன்மீகத்தைத்தான். நாம் வேறு ஏதாவது கற்றுக்கொள்ள வேண்டுமா? இந்த உலகத்திடமிருந்து நாம் கற்றுக் கொள்வதற்கு ஏதாவது இருக்கிறதா? ஆம்; உலகப் பொருட்களைப் பற்றிய அறிவு, நிறுவனங்களின் சக்தி, அதிகாரங்களைக் கையாளும் திறமை, நிறுவனங்களை உருவாக்குகின்ற திறமை, குறைந்த சக்தியைச் செலவழித்து அதிக பலன்களை அடையும் திறமை—இவற்றையெல்லாம் நாம் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. இவற்றை ஒரு குறிப்பிட்ட அளவு மேலை நாட்டிடமிருந்து ஒருவேளை நாம் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கலாம்.

ஆனால் உண்பதும் உடுப்பதும் குடித்துக் களிப்பதுமான லட்சியத்தை இந்தியாவில் யாராவது உபதேசித்தாலும், உலகியல் வாழ்க்கையை ஆன்மீகத்திற்குள் புகுத்த நினைத்தாலும் அவன் பொய்யன். இந்தப் புனித பூமியில் அவனுக்கு இடம் இல்லை; அவனது பேச்சைக் கேட்கவும் இந்திய மனம் விரும்பாது. மேலை நாகரீகம் மினுமினுப்பும் பளபளப்பும் கொண்டதாக இருக்கலாம், நாசூக்கானதாக இருக்கலாம், அதிகார ஆற்றல் மிக்கதாக இருக்கலாம். ஆனால் அவை அனைத்தும் வீண் என்பதை இந்த மேடையில் நின்றுகொண்டு, அவர்களின் முகத்திற்கு நேராகச் சொல்கிறேன். அவை வெறும் டம்பமே. கடவுள் மட்டுமே வாழ்கிறார். ஆன்மா மட்டுமே வாழ்கிறது. ஆன்மீகம் மட்டுமே வாழ்கிறது. அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்.

என்றாலும், மிக உயர்ந்த உண்மைகளை ஏற்றுக் கொள்வதற்கான பக்குவம் பெறாத சகோதரர்களுக்கு, அவர்களின் தேவைகளுக்கு ஏற்ப தீவிரம் குறைக்கப்பட்டச் சிறிது உலகாயதம் ஒருவேளை நன்மையைத் தரலாம். அவர்கள்மீது உயர் உண்மைகளைத் திணிக்கக் கூடாது. சமீப காலத்தில் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு சமூகத்திலும் இந்தத் தவறே செய்யப்பட்டு வருகிறது. உயர் உண்மைகளை ஏற்றுக்கொள்கின்ற பக்குவம் இல்லாதவர்களிடமும் அவை திணிக்கப்படுகின்றன. இப்படித் திணிப்பது தவறு என்ற உண்மை நன்றாகப் புரிந்துகொள்ளப் படுகின்ற இந்தியாவில் மிகவும் வேதனை தருகின்ற அளவில் இது நடைபெறுகிறது. என் வழி உங்கள் வழியாக இருக்க வேண்டியதில்லை. இந்துவாழ்க்கையின் லட்சியம் சன்னியாசம் என்பது உங்களுக்குத் தெரியும்; எல்லோரையுமே துறக்கும்படி நமது சாஸ்திரங்கள் கட்டாயப்படுத்துகின்றன. உலகியல் இன்பங்களை அனுபவித்த பிறகு வாழ்வின் இறுதிக்கட்டத்தில் ஒவ்வோர் இந்துவும் உலகைத் துறக்க வேண்டும். அப்படித் துறக்காதவன் இந்து அல்ல. அவன் தன்னை இந்து என்று கூறிக்கொள்ள உரிமையில்லை. உலக வாழ்வின் நிலையாமையைக் கண்ட பிறகு, வாழ்க்கையை அனுபவித்தபிறகு அதை விட்டுவிட வேண்டும். இதுதான் லட்சியம் என்பது நமக்குத் தெரியும். போக வாழ்க்கை உள்ளீடற்றது, வெற்றுச் சாம்பல் என்பதை அறிந்ததும், அதைத் துறந்துவிடு, திரும்பிவிடு. மனம் புலன்களை நோக்கிச் சுழன்று செல்வது போலுள்ளது. அந்த மனத்தைப் பின்னால் திரும்பிச் சுழலச் செய்ய வேண்டும்.

பிரவிருத்தி நின்றுபோக வேண்டும்; நிவிருத்தி துவக்கப்பட வேண்டும். இதுதான் லட்சியம்.

ஆனால் ஒரு குறிப்பிட்ட அளவு அனுபவம் ஏற்பட்ட பிறகே, அந்த லட்சியத்தை அடைய முடியும். துறவின் உண்மையை ஒரு குழந்தைக்குப் போதிக்க முடியாது. குழந்தை இன்பநோக்குடன் பிறக்கிறது; அதன் உலகம் புலன்களிலேயே உள்ளது; அதன் வாழ்க்கை முழுவதும் புலனின்பங்களில் உள்ளது. இந்தக் குழந்தையைப் போன்ற மனிதர்கள் ஒவ்வொரு சமூகத்திலும் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஓரளவு அனுபவம் வேண்டும், போகம் வேண்டும்; இவற்றின்மூலம் அவர்கள் உலகின் நிலையாமையை அறிந்து கொள்வார்கள். அதன்பிறகே அவர்களுக்குத் துறவு வரும். நமது சாஸ்திரங்களில் அத்தகை யோருக்கான வழிகள் நிறைய உள்ளன. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக, சன்னியாசிகளுக்கான நியதிகளால் எல்லோரையும் கட்டுப்படுத்தும் பழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டது. இது மிகப் பெரிய தவறாகும். இந்தத் தவறைத் தவிர்த்திருந்தால் இப்போது நீங்கள் இந்தியாவில் காண்கின்ற இவ்வளவு வறுமையும் துன்ப மும் இருந்திருக்காது. சாதாரண ஏழையின் வாழ்க்கைகூட அவனுக்குச் சிறிதும் பயனில்லாத ஆன்மீக மற்றும் ஒழுக்க விதி களால் கட்டி நெருக்கப் பட்டுள்ளது. உங்கள் கைகளை விலக்கிக் கொள்ளுங்கள்! அவன் வாழ்க்கையைக் கொஞ்சம் அனுபவிக் கட்டும். அதன்பிறகு அவன் தன்னை உயர்த்திக்கொள்வான்; தானாகவே அவனிடம் துறவு தோன்றும்.

மேலை நாட்டினர் இந்த வகையில் ஏதோ சிறிது நமக்குப் போதிக்கலாம். ஆனால் இவற்றைக் கற்றுக் கொள்வதில் நாம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஏனெனில் மேலை நாட்டுக் கருத்துக்களின்படி தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர்களுள் பலரது வாழ்க்கை பெரும்பாலும் தோல்வி யாகவே உள்ளது. இதைச் சொல்வதற்கு நான் மிகவும் வருந்து கிறேன்.

இந்தியாவில் நமது பாதையில் இரண்டு தடைகள் உள்ளன. ஒன்று பழங்கால வைதீகம், மற்றொன்று தற்கால ஐரோப்பிய நாகரீகம். இரண்டுமே அளவை மீறினால் அபாயம் விளை விக்கக் கூடியவை, ஒன்றை விட்டால் மற்றொன்றினால் நேரும் அபாயம் பெருகும். இந்த இரண்டுள் பழங்கால வைதீகத்தையே நான் தேர்ந்தெடுப்பேன். ஐரோப்பியமயமாகும் முறையை நான் விரும்பவில்லை. ஏனெனில் பழைய வைதீக மனிதன்

அறிவிலியாக இருக்கலாம், முரடனாக இருக்கலாம்; ஆனால் அவன் மனிதன். அவனுக்கு நம்பிக்கை இருக்கிறது, வலிமை உள்ளது. அவன் சொந்தக் கால்களில் நிற்கிறான். ஐரோப்பிய மயமானவனுக்கோ முதுகெலும்பில்லை; பல்வேறு இடங்களி லிருந்து அங்கொன்றும் இங்கொன்றுமாகத் திரட்டப்பட்ட, பொருந்தாத, ஜீரணிக்க முடியாத, ஒன்றுபடாத பல்வேறு கருத்துக்களின் ஒரு கூட்டுக் குழப்பமாக அவன் இருக்கிறான். அவன் சொந்தக் காலில் நிற்கவில்லை, அவனது தலை சுற்றிச் சுழன்று கொண்டிருக்கிறது. அவனது செயல்களின் நோக்கம் எது தெரியுமா? ஆங்கிலேயர் சிலரிடமிருந்து பெறும் 'சபாஷ்'தான். அவனது சீர்திருத்தத் திட்டங்கள், ஏதோ சில சமுதாயத் தீமைகளுக்கு எதிரான அவனுடைய வசைமாரிகள்—இவையெல்லாம் முக்கியமாகச் சில ஐரோப்பியர்களின் ஆதரவிலேயே நடக்கிறது. நமது சில பழக்கங்கள் கொடியவை என்று ஏன் அவன் சொல்கிறான்? ஏனென்றால் ஐரோப்பியர்கள் அப்படிச் சொல்கிறார்கள், இதுதான் அவன் கூறும் காரணம். நான் இதை ஏற்றுக்கொள்ள மாட்டேன். உங்கள் வலிமை யிலேயே எழுந்து நில்லுங்கள், உங்கள் வலிமையிலேயே இறந்து போங்கள். இந்த உலகத்தில் பாவம் என்று ஏதாவது இருக்கிறது என்றால் அது பலவீனம் மட்டுமே. எல்லா வகையான பலவீனங்களையும் தவிர்த்துவிடுங்கள். ஏனெனில் பலவீனம் தான் பாவம், பலவீனம்தான் மரணம். தன் கால்களில் நிற்கின்ற அளவுகூடச் சமநிலை பெறாத இந்தப் பிராணிகள் இன்னும் எந்தப் பெயராலும் குறிப்பிடத் தக்கவர்கள் ஆகவில்லை, அவர்களை என்னவென்று அழைப்பது—ஆண்கள் என்றா, பெண்கள் என்றா, மிருகங்கள் என்றா?

ஆனால் அந்தப் பழைய வைதீகர்கள் உறுதி வாய்ந்தவர்கள், அவர்கள் மனிதர்கள். அவர்களுள் சில சிறந்த உதாரண புருஷர் கள் இன்றும் இருக்கிறார்கள். அவர்களுள் ஒருவரை உங்கள் முன் காட்ட விரும்புகிறேன். அவர்தான் உங்கள் ராமநாதபுர அரசர். இவரைப்போல் ஆர்வம் நிறைந்த ஒரு மனிதர் இந்த நாடு முழுவதிலும் இல்லை. இதோ இளவரசர் இருக்கிறார்; இவரைப்போல் கீழை மற்றும் மேலை நாட்டு விவகாரங்களை அறிந்த, நல்லனவற்றை எல்லா நாடுகளிலிருந்தும் தன்னால் முடிந்த அளவிற்கு எடுத்துக் கொள்கின்ற வேறெந்த நாட்டு இளவரசரும் இல்லை. 'மிகக் கீழான ஜாதியில் பிறந்தவராயினும், அறிவால் உயர்ந்திருப்பின் அவரிடமிருந்து உயர்அறிவை

மிகுந்த பக்தியுடன் கற்றுக்கொள். தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவரிடமிருந்து வருமானாலும் முக்திக்கு உரிய வழியை அவருக்குத் தொண்டுகள் செய்து அறிந்து கொள். ஒருத்தி சிறந்தவளாக இருப்பாளானால், கீழான குலத்தில் பிறந்திருந்தாலும் அவளை மணந்துகொள்'[1]—இவை நமது மகத்தான இணையற்ற சமுதாய விதி அமைப்பாளரான, தெய்வீக மனு அமைத்த சட்டங்கள். இது உண்மை. உங்கள் சொந்தக் காலிலேயே நில்லுங்கள். உங்களால் முடிந்தவற்றை ஏற்றுக் கொள்ளுங்கள். ஒவ்வொரு நாட்டிலிருந்தும் கற்றுக் கொள்ளுங்கள்; உங்களுக்குப் பயனுள்ளவற்றை மட்டுமே எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் இந்து என்ற வகையில், அவை எல்லாம் நமது தேசியக் கொள்கைகளுக்கு அடுத்த படியிலேயே இருக்க வேண்டும் என்பதைக் கவனத்தில் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கைக்கும் நோக்கம் ஒன்று இருக்கிறது. இந்த நோக்கம், கணக்கில்லாத அவனது கடந்த கால கர்மங்களின் விளைவாகும். அதுபோல் உங்கள் பெருமைக்குரிய நாட்டின் முடிவில்லாத கடந்தகால வாழ்க்கையின் முழுமையான விளைவான மிகச் சிறந்த பாரம்பரியத்துடன் நீங்கள் ஒவ்வொருவரும் பிறந்திருக்கிறீர்கள். லட்சக்கணக்கான உங்கள் முன்னோர் உங்கள் ஒவ்வொரு செயலையும் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. எனவே விழிப்போடு இருங்கள். ஒவ்வோர் இந்துக் குழந்தையும் எந்த நோக்கத்துடன் பிறக்கிறது? பிராமணன் எதற்காகப் பிறக்கிறான் என்பது பற்றிப் பெருமையுடன் மனு முழங்குவதை நீங்கள் படித்ததில்லையா? 'தர்மமாகிய புதையலைக் காப்பதற்கே'[2] என்றல்லவா அவர் கூறுகிறார்! இது பிராமணனின் லட்சியம் மட்டுமல்ல, இந்த ஆசீர்வதிக்கப்பட்ட பூமியில் பிறக்கின்ற ஆண் பெண் பேதமின்றி ஒவ்வொரு குழந்தையின் லட்சியமும் 'தர்மமாகிய புதையலைக் காப்பதே' என்று நான் கூறுவேன். வாழ்க்கையின் மற்ற பிரச்சினைகள் எல்லாம் அந்த நோக்கத்திற்கு அடுத்த படியிலேயே வைக்கப்பட வேண்டும். சங்கீதத்தில் தாளலயங்களின் இடத்தைப் போன்றதே இது.

---

1. ச்ரத்ததான: சுபாம் வித்யாமாததீதாவரதபி ।
அந்த்யாதபி பரம் தர்மம் ஸ்த்ரீரத்னம் துஷ்குலாதபி ॥

—மனு, 2. 238.

2. ப்ராஹ்மணோ ஜாயமானோ ஹி ப்ருதிவ்யாமதி ஜாயதே ।
ஈச்வர: ஸர்வபூதானாம் தர்மகோசஸ்ய குப்தயே ॥

—மனு, 1. 99.

அரசியலையே நோக்கமாகக் கொண்டுள்ள ஒரு நாடு இருக்கலாம். அங்கே மதம் முதலான மற்றவையெல்லாம் அந்த லட்சியத்திற்கு அடுத்தபடியாகத்தான் அமைய வேண்டும். ஆனால் இந்த நாட்டின் மகத்தான வாழ்க்கை லட்சியம் ஆன்மீக மும் துறவும்தான். இவர்களுடைய அடிப்படை முழக்கம், 'இந்த உலகமே வெறுமை, மூன்று நாட்களுக்கு மட்டுமே நிலைக்கும் மாயை; மற்ற எல்லாமே—விஞ்ஞானம் ஆகட்டும் அதிகார அனுபவம் ஆகட்டும், செல்வம், பெயர், புகழ் என்று எதுவும் ஆகட்டும்—அந்த மேலான லட்சியத்திற்கு அடுத்த நிலையில்தான் இருக்க வேண்டும்' என்பதே. ஐரோப்பிய விஞ்ஞான அறிவு, கல்வி, செல்வம், அதிகாரம், பெயர் முதலிய அனைத்தையும், ஒவ்வோர் இந்துக் குழந்தையின் பிறப்புடனே அதனுடன் தோன்றிய ஆன்மீகம் மற்றும் அந்த இனத்தின் தூய்மை ஆகிய முக்கிய நோக்கத்திற்கு அடுத்த நிலையில் வைப்பதே ஓர் உண்மையான இந்துவினுடைய பண்பின் ரகசியம் ஆகும்.

ஆகையால் இந்த இரண்டு வகையான மனிதர்களுள் வைதீக மனிதன் தன் இனத்தின் வாழ்க்கை ஊற்றான ஆன் மீகத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளான். மற்றவன் முற்றிலுமாக மேலைநாட்டு போலி நாகரீகத்தின் பிடியிலுள் ளான்; உயிருட்டும் லட்சியமான ஆன்மீகத்தில் அவனுக்குப் பிடிப்பில்லை. இந்த இருவருள் வைதீக மனிதனையே நாம் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை இங்குள்ள ஒவ்வொருவருமே ஏற்றுக் கொள்வீர்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஏனென்றால் அவனிடம் சிறிது நம்பிக்கைக்கு இடமிருக்கிறது; அவனிடம் தேசியக் கொள்கை உள்ளது, பிடித்து நிற்க ஏதோ இருக்கிறது. எனவே அவன் உயிர்வாழ்வான், மற்றவனோ அழிந்துபோவான். தனி மனித வாழ்க்கையில் வாழ்க்கையின் லட்சியம் தடைபடாமல் இருந்தால், உயிர்த் துடிப்பான அந்த லட்சியம் செயல்பட்டுக் கொண்டிருக்குமானால் மற்ற செயல் களுக்கு ஏற்படுகின்ற தடைகள் எவ்வளவு கடுமையாக இருந் தாலும் அந்தத் தடைகள் அவனை அழிக்காது. அதுபோலவே நமது வாழ்க்கையின் இந்த லட்சியம் தடைபடாதவரை எதுவும் நம் நாட்டை அழிக்க முடியாது. ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்: அந்த ஆன்மீகத்தை விலக்குவீர்களானால், விலக்கிவிட்டு மேலை நாட்டின் உலகியல் நாகரீகத்திற்குப் பின்னால் செல்வீர்களானால் மூன்று தலைமுறைகளுள்

உங்கள் இனம் ஒன்றுமே இல்லாமல் அழிந்து போகும். ஏனெனில் நாட்டின் முதுகெலும்பு முறிந்துவிடும்; தேசிய மாளிகை எழுப்பப்பட்டுள்ள அஸ்திவாரம் தகர்க்கப்பட்டு விடும். அதனால் எல்லாம் அழிந்தே தீரும்.

எனவே அன்பர்களே, முதலும் மிக முக்கியமானதுமான நமது வேலை, பரம்பரை பரம்பரையாக நமக்கு நமது முன்னோர்களால் அளிக்கப்பட்டுள்ள மதிப்பிட முடியாத செல்வமான ஆன்மீகத்தை நிலையாக, உறுதியாகப் பற்றிக்கொள்வதே. மன்னர் பரம்பரையைச் சார்ந்தவர்கள், ஏழை யாத்திரிகர்களைக் கொள்ளையடித்து, புராதனமான கோட்டை கொத்தளங்களில் வாழ்ந்த ஏதோ அரச வம்சத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுவதில் பெருமை கொள்ளாமல் காடுகளில் வாழ்ந்த அரை நிர்வாண சாதுக்களைத் தங்கள் முன்னோர்களாகக் கொண்டாட முயல்கின்ற பேரரசர்கள் வாழ்ந்த நாட்டைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? அத்தகைய ஒரு நாடு இருப்பது உங்களுக்குத் தெரியுமா? அது இந்த நாடுதான். மற்ற நாடுகளின் மகத்தான மதவாதிகள் தங்கள் மூதாதையர்களாகச் சில அரசர்களைச் சொல்கிறார்கள். ஆனால் இங்கோ, பேரரசர்கள் தங்கள் பரம்பரையின் துவக்கத்தை ஓர் ஆன்மீக வாதியிடம் காண முயல்கிறார்கள். ஆகையால் நீங்கள் ஆன்மீகத்தை நம்புகிறீர்களோ இல்லையோ, நம் தேசிய வாழ்விற்காகவாவது ஆன்மீகத்தில் நம்பிக்கை கொண்டு அதை ஒரு கையால் பற்றிக் கொள்ளுங்கள். பின்னர் மற்றொரு கையை நீட்டி, மற்ற இனங்களிடமிருந்து எதையெல்லாம் பெற முடியுமோ அவற்றையெல்லாம் பெற்றுக் கொள்ளுங்கள். ஆனால் அவை எல்லாமே உங்கள் வாழ்வின் ஒரே லட்சியமாகிய ஆன்மீகத்திற்கு அடுத்த படியில்தான் இருக்க வேண்டும். அத்தகைய ஆச்சரியமான, உன்னதமான வாழ்க்கையிலிருந்து எதிர்கால இந்தியா உருவாகும்.

இதுவரை இல்லாத அளவிற்கு பெரும் சிறப்புடன் அத்தகைய இந்தியா உருவாக்கிக் கொண்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. பழங்கால ரிஷிகள் அனைவரை விடவும் மகத்தான ரிஷிகள் தோன்றப் போகின்றனர். மற்ற உலகங்களில் வாழ்கின்ற உங்கள் முன்னோர்கள் தங்கள் வழித்தோன்றல்களாகிய உங்களின் புகழையும் கீர்த்தியையும் கண்டு திருப்தி மட்டும் அடையவில்லை, பெருமையும் அடைவார்கள் என்பதை நான் காண்கிறேன்.

என் சகோதரர்களே, நாம் எல்லோரும் கடுமையாக உழைப்போம். தூங்குவதற்கு இது நேரமில்லை. எதிர்கால இந்தியா நம்முடைய உழைப்பைப் பொறுத்தே அமையப் போகிறது. இப்போது இந்தியத் தாய் தயாராகக் காத்திருக்கிறாள். தூக்கத்தில் இருக்கிறாள், அவ்வளவுதான். எழுந்திருங்கள், விழித்திருங்கள். அழியாத தன் அரியாசனத்தில் புத்திளமையோடும் முன்பு எப்போதும் இல்லாத பெருமையோடும் அவள் வீற்றிருப்பதைக் காணுங்கள்.

கடவுளைப் பற்றிய கருத்து நமது தாய்த்திருநாட்டில் வளர்ந்துள்ளதுபோல் வேறெங்கும் இவ்வாறு முழுமையாக வளரவில்லை. ஏனென்றால் கடவுளைப் பற்றிய இந்தக் கருத்து உலகில் வேறெங்கும் இருக்கவேயில்லை. நான் இவ்வாறு உறுதியாகச் சொல்வதைக் கேட்டு நீங்கள் திகைக்கலாம். ஆனால் பிற மத சாஸ்திரங்கள் எவற்றிலேனும் கடவுளைப் பற்றிய நமது கருத்துக்களுக்குச் சமமான கருத்துக்கள் இருந்தால் காட்டுங்கள். அவர்களின் தெய்வங்கள் எல்லாம் ஒவ்வொரு குழுக்களுக்கு உரியவர்கள்; யூதர்களின் தெய்வம், அரேபியரின் தெய்வம், அந்த இனத்தின் தெய்வம், இந்த இனத்தின் தெய்வம் என்றிப்படி உள்ளவர்கள். சொந்த இனத்தவருக்காக மற்ற இனத்தவருடன் போரிடும் தெய்வங்கள். ஆனால் எல்லோருக்கும் நன்மை தருகின்ற, மிகுந்த கருணை வாய்ந்த, நம் தந்தையாகவும் தாயாகவும் நண்பனாகவும், நண்பனுக்கும் உற்ற நண்பனாகவும், ஆன்மாவின் ஆன்மாவாகவும் உள்ள கடவுள்கருத்து இங்கு, இங்கு மட்டுமே உள்ளது. சைவர்களுக்கு சிவபெருமானாகவும், வைணவர்களுக்கு விஷ்ணுவாகவும், கர்ம நெறியினருக்கு கர்மமாகவும், பௌத்தர்களுக்கு புத்தராகவும், சமணர்களுக்கு அருகராகவும், கிறிஸ்தவர்களுக்கும் யூதர்களுக்கும் ஜெஹோவாவாகவும், முகமதியர்களுக்கு அல்லாவாகவும், ஒவ்வோர் இனத்திற்கும் ஒவ்வொரு தெய்வமாகவும், வேதாந்திகளுக்கு பிரம்மமாகவும் இருக்கின்ற, அந்த ஒரே கடவுளே எங்கும் நிறைந்திருக்கிறார் என்ற உண்மையும், அந்த இறைவனின் பெருமையும் இந்த நாட்டிற்கு மட்டுமே தெரிந்த உண்மையாகும். அவர் நம்மை ஆசீர்வதிப்பாராக, உதவுவாராக![1] இந்தக் கருத்தினைச்

---

1. யம் சைவா: ஸமுபாஸதே சிவ இதி ப்ரஹ்மேதி வேதாந்தினே
பௌத்தா புத்த இதி ப்ரமாணபடவ: கர்த்தேதி நையாயிகா: ।
அர்ஹன்னித்யத ஜைனசாஸனரதா: கர்மேதி மீமாம்ஸகா:
ஸோயம் நோ விததாது வாஞ்சிதபலம் த்ரைலோக்ய நாதோ ஹரி: ॥
—உதயனாசாரியர்

செயல்படுத்த அவர் வலிமையும் ஆற்றலும் தருவாராக. நாம் கேட்டவையும் படித்தவையும் நமக்குச் சக்தியைத் தரும் உணவாகட்டும், நமக்குள் வலிமையாக மாறட்டும். ஒருவருக்கொருவர் உதவி செய்யும் ஆற்றலாக மாறட்டும்! ஆச்சாரியரும் சீடனுமாகிய நாம் ஒருவருக்கொருவர் பொறாமையின்றி இருப்போமாக.[1] ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ஹரி: ஓம்! ❑

1. ஸஹ நாவவது ஸஹ நௌ புனக்து ஸஹ வீர்யம் கரவாவஹை ।
தேஜஸ்வி நாவதீத மஸ்து மா வித்விஷாவஹை ॥
—கடோபநிடதம், 2. 3. 19

## 4. பரமக்குடியில்

ராமநாதபுரத்திலிருந்து சுவாமிஜி பரமக்குடி சென்றார். அவரைக் காண்பதற்காகப் பெரும் கூட்டம் திரண்டு வந்தது. அங்கே அங்கே அளிக்கப்பட்ட வரவேற்பை ஏற்றுக்கொண்டு சுவாமிஜி பேசினார்:

### வரவேற்புக்குப் பதிலுரை

நீங்கள் மிகுந்த அன்போடும் கனிவோடும் எனக்களித்த வரவேற்புக்கு நன்றி சொல்வது என்பது இயலாத காரியம். நீங்கள் அனுமதித்தால் நான் ஒன்று கூற விழைகிறேன்—நீங்கள் என்னைப் பேரன்புடன் வரவேற்றாலும் சரி அல்லது இந்த நாட்டைவிட்டு உதைத்துத் துரத்தினாலும் சரி, என் நாட்டின் மீது எனக்குள்ள அன்பு, முக்கியமாக, என் நாட்டு மக்களின்மீது எனக்குள்ள அன்பு ஒன்றுபோலவே இருக்கும். கீதையில் ஸ்ரீகிருஷ்ணர், வேலைக்காகவே வேலை செய்ய வேண்டும், அன்பிற்காகவே அன்பு செய்ய வேண்டும் என்று கூறுகிறார். மேலை நாடுகளில் என்னால் செய்யப்பட்டிருக்கும் வேலை மிகவும் சிறியது. நான் செய்ததைப்போல், மேலை நாட்டில் நூறு மடங்கு வேலை செய்ய இங்குள்ள ஒவ்வொருவராலும் முடியும். இந்தியாவின் காடுகளிலிருந்து தோன்றிய, இந்திய மண்ணுக்கு மட்டுமே சொந்தமான ஆன்மீகம், தியாகம் ஆகியவற்றை உலகம் முழுவதற்கும் போதிப்பதற்குத் தயாரான, வெல்ல முடியாத ஆன்மீக ஆற்றலோடு கூடிய மனிதர்கள் தோன்றும் நாளை நான் மிகுந்த ஆர்வத்தோடு எதிர்பார்க்கிறேன்.

உலக வாழ்வில் ஒருவிதமான சோர்வினால் பீடிக்கப்படுவது போன்ற சில காலகட்டங்களை உலக நாடுகள் ஒவ்வொன்றும் சந்திப்பதை மனிதகுல வரலாற்றில் நாம் காண்கிறோம். அப்போது அவர்களுடைய திட்டங்கள் எல்லாம் கைநழுவிப் போகின்றன, அவர்களுடைய சமுதாய அமைப்புகளும் முறைகளும் தூள்தூளாகிப் புழுதியில் வீழ்கின்றன, அவர்களுடைய நம்பிக்கையெல்லாம் இருண்டு போகின்றன, எல்லாமே சூன்யமாகின்றன.

சமுதாய வாழ்வை உருவாக்க இந்த உலகத்தில் இரண்டு முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஒன்று, மதத்தை அடிப்படையாகக்

கொண்டது, மற்றொன்று, சமுதாயத் தேவையை அடிப்படை யாகக் கொண்டது. ஒரு முயற்சி, ஆன்மீகத்தின் மீது எழுப்பப் பட்டது; மற்றொன்று லௌகீகத்தின்மீது. ஒன்று அனைத்தை யும் கடந்ததை ஆதாரமாகக் கொண்டது, மற்றொன்று காணும் இந்த உலகத்தை ஆதாரமாகக் கொண்டது. ஒன்று, போகப் பொருட்களால் ஆன இந்தச் சின்னஞ்சிறிய உலகத்திற்கு அப்பால் துணிச்சலாகப் பார்ப்பதும் அங்கேயும் அதற்கு அப்பாலும் வாழ்க்கையைத் துவக்குவதும் ஆகும்; மற்றொன்று, உலகப் பொருளிலேயே திருப்தி அடைந்துவிடுவதும் அங்கேயே நிலைத்து வாழ நினைப்பதும் ஆகும். ஆச்சரியப்படும் வகையில் சிலவேளைகளில் ஆன்மீகமும், சிலவேளைகளில் லௌகீகமும் உச்சத்திற்கு வருகின்றன. இரண்டும் அலையலையாக ஒன்றை யொன்று தொடர்வதுபோல் உள்ளது. ஒரே நாட்டில் இத்தகைய பல்வேறு அலைகள் நிலவும். ஒரு சமயம் லௌகீக அலை அடித்துப் பரவும்; அப்போது அதிக இன்பமும் அதிக உணவும் தருகின்ற செல்வம், அத்தகைய கல்வி போன்ற இந்த வாழ்க் கையைச் சேர்ந்த அனைத்தும் பெருமை பெறும். பின்னர் கீழான நிலைக்குச் சென்று இழிநிலையை அடைந்துவிடும். செல்வத்தின் வளர்ச்சியோடு மனித இனத்துடனேயே தோன்றிய எல்லா வகையான பொறாமைகளும் வெறுப்புகளும் உச்ச நிலையை அடையும். அந்தக் காலகட்டத்தில் போட்டிகளும் இரக்கமற்ற கொடுமைகளும் நிலவியே தீரும். பிரபலமான ஆனால் அவ்வளவு சிறந்ததல்லாத ஓர் ஆங்கில பழமொழி கூறுவதுபோல், 'ஒவ்வொருவரும் தனக்காகவே வாழ்கிறார்கள், பின்னால் வருபவனைச் சாத்தான் பிடித்துவிட்டுப் போகட்டும்' என்பது அந்த நாளின் நோக்கமாக அமையும். வாழ்க்கை முறையின் திட்டமே தோற்றுவிட்டது என்றே மக்கள் நினைப் பார்கள். அப்போது ஆன்மீகம் வந்து, மூழ்குகின்ற அந்த உலகிற்கு உதவிக்கரம் நீட்டி அதனைக் காப்பாற்றவில்லை எனில் உலகமே அழிந்து போய்விடும்.

அதன்பிறகு உலகம் புதிய நம்பிக்கையைப் பெறும்; புதிய வாழ்க்கை முறைக்கான புதிய அடித்தளத்தைக் காணும். பிறகு மற்றோர் ஆன்மீக அலை வரும்; காலப்போக்கில் அதுவும் அழியத் தொடங்கும். பொதுவாகச் சொல்வதானால், சில விசேஷ ஆற்றல்களுக்குத் தனிப்பட்ட உரிமை கொண்டவர் களான ஒரு பிரிவினரை ஆன்மீகம் உருவாக்குகிறது. இதன் உடனடி விளைவு என்னவென்றால் லௌகீகத்தை நோக்கி

மீண்டும் செல்லுதல். இது அந்தப் பிரிவினர் இன்னும் பல்வேறு தனிப்பட்ட உரிமைகளைப் பெற வழிவகுக்கும். காலப்போக்கில் அந்த இனத்தின் எல்லா ஆன்மீக ஆற்றல்கள் மட்டுமல்லாமல், பௌதீக அதிகாரங்களும் சலுகைகளும் அந்தச் சிலரின் ஆளுகைக்கு உட்பட்டுவிடும். இந்தச் சிலர் பாமர மக்களின் தோள்மீது ஏறிக்கொண்டு அவர்களை அடக்கியாள விரும்புவார்கள். இப்போது சமூகம் தனக்குத் தானே உதவிக்கொண்டாக வேண்டும். இந்த நிலையில் லௌகீகம் வந்து உதவிக்கரம் நீட்டும்.

நமது தாய்நாடான இந்தியாவைப் பார்த்தால், இத்தகையதொரு நிலைமையைத்தான் காண்கிறீர்கள். ஐரோப்பாவிற்குச் சென்று வேதாந்தத்தைப் போதித்த ஒருவனை இப்போது வரவேற்கிறீர்கள். ஐரோப்பாவின் பௌதீக வாழ்க்கை அதற்கான வழியைத் திறந்து விட்டிருக்காவிட்டால் என்னை நீங்கள் வரவேற்பதென்பது முடியாத காரியம். பௌதீகம் ஒருவிதத்தில் இந்தியாவைக் காப்பாற்றியிருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். அது வாழ்க்கையின் கதவுகளை எல்லோருக்கும் திறந்து விட்டிருக்கிறது; ஜாதிச் சலுகைகளை அழித்திருக்கிறது; பயன்படுத்துவதற்கு மறந்துபோய் ஒரு சிலரிடம் மறைக்கப் பட்டுக் கிடந்த விலைமதிப்பற்ற புதையல்களை, விவாதிப்பதற் காகத் திறந்து வைத்திருக்கிறது.

இந்த நாட்டின் அருமையான ஆன்மீகப் புதையல்களுள் பாதி திருடப்பட்டுவிட்டது, நாம் அவற்றை இழந்துவிட்டோம். மறு பாதியோ, தானும் தின்னாமல் பசுவையும் தின்ன விடாமல் வைக்கோற்போரைக் காவல் செய்யும் நாய்களைப் போன்ற சிலரிடம் சிக்கிக் கொண்டிருக்கிறது. இனி மற்றொரு புறம், ஐரோப்பாவில் பல காலமாக இருந்து வருவதும் நூற்றாண்டு களாகப் பின்பற்றப்பட்டும் குறைபாடுகளுடன் கூடியதாகவே இருப்பதுமான அரசியல் அமைப்புகளை இந்தியாவில் கொண்டு வரத் துடித்துக் கொண்டிருக்கிறோம். அரசியலோடும் அரசாங்கத்தோடும் தொடர்புடைய பல்வேறு அமைப்புகளும் வழிமுறைகளும் எல்லாமே ஒன்றன்பின் ஒன்றாகச் சோதித்துப் பார்க்கப்பட்டு, பயனற்றவை என்று ஒதுக்கப்பட்டுவிட்டன. எனவே செல்லும் திசையறியாமல் ஐரோப்பா குழம்பிக் கொண் டிருக்கிறது. பொருளாதாரக் கொடுங்கோன்மை அங்கே பயங்கரமாக உள்ளது. வேலை செய்யாத, ஆனால் லட்சக்கணக் கான மக்களின் உழைப்பை உறிஞ்சுகின்ற சில மனிதர்களின்

கையில் நாட்டின் செல்வமும் அதிகாரமும் கட்டுண்டு கிடக்கின்றன. இந்த அதிகாரத்தின்மூலம் பூமி முழுவதையும் அவர்கள் ரத்த வெள்ளத்தில் நனைக்க முடியும். மதமும் மற்ற எல்லாமுமே அவர்களின் காலடியில் கிடக்கின்றன. அவர்களே ஆள்கிறார்கள், எல்லாவற்றிற்கும் மேலானவர்களாகக் காட்சியளிக்கிறார்கள். மேலை நாடுகள் ஒரு சில ஈட்டிக்காரர்களால்தான் ஆளப்படுகின்றன. சட்டரீதியான அரசாங்கம், சுதந்திரம், உரிமை, பாராளுமன்றம் என்றெல்லாம் நீங்கள் கேள்விப்படுகிறீர்களே, அவையெல்லாம் வெறும் வேடிக்கைச் சத்தங்கள் மட்டுமே.

ஈட்டிக்காரர்களின் கொடுமையால் மேலை நாடுகள் துடிக்கின்றன. கீழை நாடுகள் பூஜாரிகளின் கொடுமையால் துடிக்கின்றன. இரண்டும் ஒன்றை ஒன்று தடுத்துக் காக்க வேண்டும். இவற்றுள் ஒன்று மட்டுமே உலகிற்கு உதவிசெய்ய வேண்டுமென்று நினைக்காதீர்கள். பாரபட்சமற்றவரான இறைவன் தன் படைப்பில் ஒவ்வொரு துகளையும்கூட சமமாகவே படைத்திருக்கிறார். மிக மோசமான, அரக்கத்தனமான ஒருவனிடம், மகானிடம்கூட இல்லாத உயர்ந்த குணங்கள் இருக்கலாம்; மிகச் சாதாரணமான புழுவிடம் மிக மேலான மனிதனிடம் இல்லாத சில உயர்ந்த குணங்கள் இருக்கலாம். ஏழைத் தொழிலாளி ஒருவனை எடுத்துக் கொள்ளுங்கள். அவனுக்கு வாழ்வில் இன்பம் மிகக் குறைவே. உங்களைப் போன்ற அறிவு அவனிடம் இல்லை, வேதாந்தத் தத்துவங்களை அவனால் புரிந்துகொள்ள முடியாது என்றெல்லாம் நீங்கள் நினைக்கலாம். ஆனால் உங்கள் உடம்பை அவனது உடம்போடு ஒப்பிட்டுப் பாருங்கள். அவனது உடம்பு உங்கள் உடம்பைப்போல், அவ்வளவு சீக்கிரமாக நோய்க்கும் வலிக்கும் இடம் தருவதில்லை. அவனது உடம்பில் ஆழமான வெட்டுப்பட்டால்கூட அந்தக் காயம் உங்கள் உடம்புகளைவிட விரைவில் ஆறிவிடுகிறது. அவனது வாழ்க்கை புலனின்பங்களில் இருக்கிறது; அவன் அவற்றின் மூலமே மகிழ்ச்சி அடைகிறான். அவனது வாழ்க்கை சமச்சீராக, சமன்படுத்தப் பட்டதாக உள்ளது. லௌகீக அடிப்படையில் ஆகட்டும், அறிவு அல்லது ஆன்மீக அடிப்படையில் ஆகட்டும், இறைவன் பாரபட்சமின்றி, ஒன்றில்லா விட்டால் மற்றொன்றை ஒவ்வொருவருக்கும் அளித்து எல்லோரையும் சமமாகவே வைத்திருக்கிறார். எனவே நாம்தான் உலகத்தைக் காப்பவர்கள் என்று நினைக்கத் தேவையில்லை. நாம் உலகத்திற்குப் பல நல்லவற்றைப் போதிக்கலாம். அதேவேளையில், நாமும் உலகத்திடமிருந்து

நல்லவை பலவற்றைக் கற்றுக்கொள்ள முடியும். உலகத்திற்கு எது தேவையோ அதைத்தான் நாம் கற்பிக்க முடியும். ஆன்மீக அடிப்படை மட்டும் இல்லாமல் போனால், மேலை நாகரீகம் அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்குள் தூள்தூளாகச் சிதறிவிடும். மனித குலத்தை வாளால் ஆள நினைப்பது முழுக்கமுழுக்கப் பயனற்ற வீண் முயற்சி. அத்தகைய வன்முறையின்மூலம் உருவாக்கப்பட்ட அரசாங்கங்கள் எல்லாம் நாசமடைந்து, மிக விரைவில் தன் நிலையிழந்து உருத் தெரியாமல் மறைந்து போயிருப்பதை நீங்கள் காணலாம். பௌதீக ஆற்றலின் நிலைக் களனான ஐரோப்பா தன் நிலையை மாற்றி, ஆன்மீகத்தைத் தன் அடிப்படையாகக் கொள்ளாமல் போகுமானால் இன்னும் ஐம்பது ஆண்டிற்குள் அது நொறுங்கிச் சுக்கலாகச் சிதறிவிடும். அந்த ஐரோப்பாவை எது காக்க முடியும் தெரியுமா? உபநிடதங்கள் கூறுகின்ற ஆன்மீகம் மட்டுமே.

பல்வேறு மதப் பிரிவுகளும் தத்துவங்களும் சாஸ்திரங் களும் இருந்தாலும் இவை அனைத்திற்கும் அடிப்படையாக ஒரு கருத்து, ஒரு கொள்கை உள்ளது. அது, மனிதனின் ஆன்மா வில் நம்பிக்கை. இந்தக் கருத்தினால் உலகின் போக்கையே மாற்ற முடியும். ஆன்மா எல்லா சக்திகளும் நிறைந்தது என்ற கருத்து, இந்துக்கள், சமணர்கள், பௌத்தர்கள் என்றில்லாமல் இந்தியா முழுவதுமே உள்ளது. ஆற்றலையோ தூய்மையையோ, முழுமையையோ நீங்கள் வெளியேயிருந்து பெற முடியும் என்று இந்தியாவில் உள்ள ஒரு தத்துவம்கூடக் கூறவில்லை; இவையனைத்தும் உங்கள் பிறப்புரிமை, உங்கள் இயற்கை என்றே இந்தியத் தத்துவங்கள் கூறுகின்றன. இது உங்களுக்கு நன்றாகவே தெரியும். தூய்மையற்ற தன்மை என்பது நம் மீது திணிக்கப்பட்டது மட்டுமே. அதனால் உங்களுடைய உண்மை இயல்பு மறைக்கப்பட்டுள்ளது. ஆனால் உண்மையான நீங்கள் ஏற்கனவே முழுமையாகவும் வலிமை வாய்ந்தவர்களாகவும் இருக்கிறீர்கள். உங்களை ஆள்வதற்கு உங்களுக்கு எந்த உதவியும் வேண்டாம். உங்களை ஆள்கின்ற சக்தி ஏற்கனவே உங்களிடம் உள்ளது. அதை நீங்கள் அறியவில்லை, அவ்வளவுதான். அதை அறிவதிலும் அறியாமல் இருப்பதிலும்தான் வேற்றுமை உள்ளது. அந்த வேற்றுமை, அந்தச் சிரமம்தான் அவித்யை என்ற ஒரே வார்த்தையில் கூறப்படுகிறது.

மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையில், மகானுக்கும் பாவிக்கும் இடையில் வேற்றுமையை உண்டாக்குவது எது?

அவித்யை, அதாவது அறியாமை. மிகவுயர்ந்த மனிதனுக்கும் அவன் காலடியில் நெளிகின்ற சாதாரண புழுவிற்கும் உள்ள வித்தியாசம் என்ன? அறியாமை. அதுதான் எல்லா வித்தியாசங்களையும் உண்டாக்குகிறது. நெளிகின்ற அந்தச் சிறு புழுவிற்குள் எல்லையற்ற ஆற்றலும் அறிவும் தூய்மையும் இறைவனின் எல்லையற்ற தெய்வீகமும் உள்ளது. அது வெளிப்படவில்லை, அது வெளிப்பட வேண்டும்.

மகத்தான இந்த உண்மையைத்தான் இந்தியா உலகிற்குப் போதிக்க வேண்டும். ஏனெனில் அது வேறெங்கும் இல்லை. அந்த உண்மையே ஆன்மீகம், ஆன்மாவைப் பற்றிய உண்மை. ஒரு மனிதனை நிமிர்ந்தெழுந்து செயல்புரிய வைப்பது எது? பலம். பலமே நன்மை, பலவீனம்தான் பாவம். வெடிகுண்டைப் போல் வெளிக் கிளம்பி, குண்டிலிருந்து பாயும் இரும்புச் சிதறல்கள்போல் அறியாமைத் திரள்கள் மீது பாயும் ஒன்று உபநிடதங்களில் இருக்குமானால், அது அச்சமின்மை என்னும் ஒரு சொல்லாகும். அச்சமின்மை என்பதே இப்போது போதிக்கப்பட வேண்டிய ஒரே மதம். உலக வாழ்விலும் சரி, மத வாழ்விலும் சரி அச்சம்தான் எல்லா அழிவுகளுக்கும் பாவங்களுக்கும் மறுக்க முடியாத காரணமாக இருக்கிறது. அச்சம்தான் துன்பத்தைக் கொண்டு வருகிறது. அச்சம்தான் சாவைக் கொண்டு வருகிறது. அச்சம்தான் தீமைகளைப் பெருக்குகிறது.

அச்சம் எதனால் உண்டாகிறது? நம் சொந்த இயல்பை அறியாததால்தான். நாம் ஒவ்வொருவரும் அரசர்களுக்கெல்லாம் பேரரசரின் வாரிசுகள். நாம் கடவுளின் அம்சமே, அல்ல அல்ல, வேதாந்தத்தின்படி நாம் கடவுளே. சிறிய மனிதர்களாக நம்மை நினைத்து, அதனால் சொந்த இயல்பை மறந்திருந்தாலும் நாம் கடவுளே. அந்த இயல்பு நிலையிலிருந்து நாம் வழுவி விட்டோம். அதனால்தான் நான் உன்னைவிடச் சிறிது மேலானவன் அல்லது நீ என்னைவிட மேலானவன், என்றெல்லாம் வேற்றுமைகளைக் காண்கிறோம். இந்த ஒருமைக் கருத்துதான் இந்தியா உலகிற்குத் தர வேண்டிய மகத்தான பாடம். நன்றாகக் கவனியுங்கள், இந்தக் கருத்தைப் புரிந்து கொண்டால் பொருட்களின் தன்மையையே இது மாற்றிவிடும். ஏனெனில் அப்போது நீங்கள் உலகத்தை இதுவரை பார்த்துவந்த கண்ணோட்டத்திலிருந்து வேறான கண்ணோட்டத்தில் பார்ப்பீர்கள். பிறந்து, பிறருடன் போராடி, வலிமையானவன்

வெல்லவும், வலிமையற்றவன் சாவதற்கும் அமைந்த போர்க்களம் அல்ல இந்த உலகம் என்பது அதன்பிறகு தெரியும். அப்போது இந்த உலகம் ஒரு விளையாட்டு மைதானமாகிவிடும். சிறு குழந்தைபோல் இறைவன் அங்கே விளையாடுவார். நாம் அவருடைய விளையாட்டுத் தோழர்களாக அவருடன் ஆடிக் களித்துச் செயல் புரிவோம். எவ்வளவு பயங்கரமாகவும் கொடூர மாகவும் ஆபத்தானதாகவும் காணப்பட்டாலும், இவை யாவும் வெறும் விளையாட்டே. அதன் உண்மையை நாம் புரிந்து கொள்ளத் தவறிவிட்டோம்.

ஆன்மாவின் இயல்பை அறியும்போது சிறிதும் வலிமை யற்றவர்களுக்கும், மிகவும் இழிவானவர்களுக்கும், மிகவும் துன்பப்படும் பாவிகளுக்கும்கூட நம்பிக்கை வருகிறது. 'நம்பிக்கை இழக்காதீர்கள்' என்றே நம் சாஸ்திரங்களும் முழங்கு கின்றன. நீ என்ன செய்தாலும் நீதான். உன் இயல்பை மாற்ற உன்னால் முடியாது. இயற்கையே இயற்கையை அழிக்க முடியாது. உங்கள் இயல்பு தூய்மை. அது லட்சக்கணக்கான யுகங்களாக மறைக்கப்பட்டு இருக்கலாம்; ஆனால் இறுதியில் அது வென்று மேலே வந்தேதீரும்.

எனவே அத்வைதம் ஒவ்வொருவருக்கும் நம்பிக்கையைக் கொண்டு வருகிறது. நம்பிக்கையை இழக்காதீர்கள். அத்வைதம் அச்சத்தின் வழியைக் கையாண்டு போதிப்பதில்லை; நீங்கள் கொஞ்சம் ஏமாந்தால் உங்களைப் பிடித்துக்கொள்கின்ற பேய் களைப்பற்றி போதிப்பதில்லை. அதில் பேய்களைப்பற்றி ஒன் றுமே இல்லை. உங்கள் விதி உங்கள் கைகளில் இருக்கிறது என்றுதான் அது கூறுகிறது. உங்களுடைய சொந்த வினைதான் உங்களுக்காக இந்த உடம்பை உற்பத்தி செய்திருக்கிறது. உங் களுக்காக இதை வேறு யாரும் செய்யவில்லை. எங்கும் நிறைந்த கடவுள் அறியாமை காரணமாக மறைந்துள்ளார். பொறுப்பு உங்களிடமே; உங்கள் விருப்பம் இல்லாமலே இந்த உலகத்திற்குக் கொண்டு வரப்பட்டு, இந்தப் பயங்கரமான இடத்தில் நீங்கள் விடப்பட்டு இருப்பதாக எண்ணாதீர்கள். நீங்களே உங்கள் உடம்பை உருவாக்கினீர்கள்; இப்போது உருவாக்கிக் கொண் டிருப்பதைப் போலவே சிறிதுசிறிதாக உருவாக்கினீர்கள் என் பதைத் தெரிந்து கொள்ளுங்கள். நீங்களே உண்கிறீர்கள், உங்களுக்காக வேறு யாரும் சாப்பிட முடியாது. உண்டதை நீங்களே செரிக்கிறீர்கள், வேறு யாரும் அதைச் செய்ய முடியாது. ரத்தம், தசை, உடம்பு முதலியவற்றை அந்த உணவிலிருந்து

நீங்களே உருவாக்கிக் கொள்கிறீர்கள், வேறு யாரும் அதை உங்களுக்காகச் செய்ய முடியாது. நீங்கள்தான் இவற்றை எப் போதும் செய்து வருகிறீர்கள். சங்கிலியில் உள்ள ஒரு வளையத்தைப் புரிந்து கொண்டால், எல்லையற்ற சங்கிலியையே தெரிந்துகொள்ளலாம். ஒரு கணம் உங்கள் உடம்பை நீங்கள் உற்பத்தி செய்வது உண்மையானால், கடந்து சென்ற மற்றும் வரப்போகின்ற ஒவ்வொரு கணத்திற்கும் அது உண்மையே. நன்மை தீமைகளுக்கான எல்லா பொறுப்பும் உங்களுடையதே. இது மகத்தான நம்பிக்கையைத் தருகிறது. நான் ஒன்றைச் செய்தேனானால் அதை இல்லாமல் ஆக்கவும் என்னால் முடியம்.

அதேவேளையில் நமது மதம் கடவுளின் கருணையையும் மனித குலத்திலிருந்து அப்பால் எடுத்துச் சென்று விடவில்லை, அது எப்போதும் அங்கேயே இருக்கிறது. ஆற்றல் மிக்கதான நன்மை-தீமை ஓட்டத்தின் பக்கத்தில் கடவுள் நிற்கிறார். அவர் பந்தமில்லாதவர், எப்போதும் கருணைமயமானவர், நாம் மறு கரையை அடைய உதவுவதற்கு எப்போதும் தயாராக இருப்பவர். அவரது கருணை மகத்தானது, தூய இதயத்தில் அது எப் போதும் நிறைகிறது.

புதிய சமூக அமைப்பிற்கு உங்கள் ஆன்மீகம் ஒரு குறிப் பிட்ட வகையில் அடிப்படையாக அமைய வேண்டும். அத் வைதத்தின் சில முடிவுகளிலிருந்து மேலைநாடு இன்னும் எவ் வளவோ கற்றுக் கொள்ள வேண்டியுள்ளது. எனக்கு இன்னும் சிறிது நேரம் கிடைத்திருந்தால் அவற்றைப் பற்றியெல்லாம் கூறியிருப்பேன். பௌதிக விஞ்ஞான அறிவு வளர்ந்துவிட்ட இந்தக் காலத்தில் சகுணக்கடவுள்-லட்சியம் எல்லாம் அதிகப் பயனைத் தராது. இருப்பினும் ஆரம்ப நிலையிலுள்ள மதத்தைச் சார்ந்த ஒருவன் கோயிலும் விக்கிரகங்களும் தேவை என்று கருதுவானானால், அவன் விருப்பம்போல் எத்தனை வேண் டுமோ அத்தனையும் வைத்துக் கொள்ளலாம். அவன் அன்பு செய்ய ஒரு சகுணக்கடவுள் தேவையானால் அது வேண்டிய அளவு இங்கு உள்ளது. சகுணக் கடவுளைப் பற்றிய இத்தகைய மிக உன்னதமான கருத்துக்களை உலகத்தில் வேறு எங்குமே காண முடியாது. ஆராய்ச்சி மனப்பான்மை கொண்ட ஒருவன் தன் அறிவைத் திருப்திப்படுத்த விரும்புவானானால், அவனுக்கு நிர்க்குணக் கடவுளைப் பற்றிய மிக ஆழ்ந்த கருத்துக்களும் இங்கே உள்ளன. ❑

# 5. சிவகங்கையிலும் மானாமதுரையிலும்

சிவகங்கை மற்றும் மானாமதுரை ஜமீன்தார்களாலும் மக்களாலும் மானாமதுரையில் சுவாமிஜிக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

## வரவேற்புக்குப் பதிலுரை

நீங்கள் எனக்களித்த இதமான வரவேற்புக்கான எனது ஆழ்ந்த நன்றியை வார்த்தைகளால் விளக்க முடியாது. நான் எவ்வளவுதான் விரும்பினாலும், துரதிர்ஷ்டவசமாக, மிகப் பெரிய சொற்பொழிவை நிகழ்த்தும் நிலையில் நான் இப்போது இல்லை. நமது சம்ஸ்கிருத நண்பர் மிகமிக அழகிய சொற்களால் என்னைப் பெருமைப்படுத்திக் கூறினார். என்னதான் முட்டாள் தனமாகத் தோன்றினாலும் எனக்கும் உடம்பொன்று உள்ளது. அது சில விதிகளையும் முறைகளையும் ஜடப் பொருட்களுக்கு உரிய சில நியதிகளையும் பின்பற்றவே செய்யும். எனவே களைப் பென்றும் சோர்வென்றும் சில விஷயங்கள் இந்த உடம்பையும் பாதிக்கவே செய்கிறது.

மேலை நாட்டில் என்னால் செய்யப்பட்ட சிறிய வேலை குறித்து நம் நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் ஆச்சரியப்படத் தக்க வகையில் மக்கள் தெரிவித்து வருகின்ற மகிழ்ச்சியும் பாராட்டும் காண்பதற்குப் பெருமைமிக்கக் காட்சியாக உள்ளது. எதிர்காலத்தில் வரப்போகின்ற மகான்களுக்கான வரவேற் பாகவே இதனை நான் காண்கிறேன். நான் செய்திருக்கும் இந்த மிகச் சிறிய வேலைக்கே இத்தகைய சிறப்பான வரவேற்பு கிடைக்கிறதென்றால், எனக்குப் பின்னால் வரப் போகின்ற, உலகத்தையே அசைக்கவல்ல ஆன்மீக வீரர்களுக்கு இந்த நாடு அளிக்கப் போகும் வரவேற்பு எவ்வளவு மகத்தானதாக இருக்கும்!

இந்தியா ஆன்மீக பூமி. ஆன்மீகத்தை, ஆன்மீகத்தை மட் டுமே இந்து புரிந்துகொள்கிறான். நூற்றுக்கணக்கான ஆண்டு களாக நமது கல்வி இந்த வழியில்தான் அமைந்துள்ளது. அதன் விளைவாக ஆன்மீகம் வாழ்வின் முக்கிய நோக்கமாக உள்ளது. இது உங்களுக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொருவரும் பெரிய வியாபாரியாக இருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை;

ஒவ்வொருவரும் ஆசிரியர்களாக இருக்க வேண்டுமென்றுகூட இல்லை; ஒவ்வொருவரும் போர்வீரராக இருக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை. ஆனால் வெவ்வேறு நாடுகள் சேர்ந்து ஒருங்கிணைந்து இந்த உலகில் ஒருமித்ததொரு விளைவை ஏற்படுத்த முடியும்.

உலக ஒற்றுமையில் ஆன்மீகமாகிய இசையை எழுப்ப வேண்டுமென்று இறைவன் நம்மை விதித்துள்ளார் போலும். எந்த நாடும் பெருமைப்படத் தக்கவர்களான மேன்மைமிக்க நமது முன்னோர்கள் நமக்கு அளித்துள்ள பாரம்பரியச் சிறப்பினை இன்னும் நாம் இழந்து விடாதிருப்பது கண்டு நான் குதூகலம் அடைகிறேன். இது எனக்கு நம்பிக்கையைத் தருகிறது; நமது இனத்தினுடைய விதியின்மீது உறுதியான நம்பிக்கையை அளிக்கிறது. எனது உற்சாகம் எல்லாம், எனக்குத் தனிப்பட்ட முறையில் நீங்கள் அளித்த பெருமைக்காக அல்ல, ஆனால் இந்த நாட்டின் இதயம் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறது, அதன் வலிமை குன்றவில்லை என்பதை அறிந்ததற்காகத்தான்.

இந்தியா இன்றும் வாழ்கிறது. அது இறந்துவிட்டதாக யார் சொன்னது? நாம் சுறுசுறுப்பாகச் செயல்பட வேண்டும் என்று மேலை நாடுகள் விரும்புகின்றன. ஆனால் அவர்கள் நம்மைப் போர்க்களத்தில் சுறுசுறுப்பாகக் காண விரும்பினால் ஏமாற்றமே அடைவார்கள். அது நமது களம் அல்ல. ஒரு ராணுவ நாடு ஆன்மீக மயமாக வேண்டும் என்று நினைத்தால் எப்படி நாம் ஏமாற்றம் அடைவோமோ அப்படித்தான் இதுவும். அவர்கள் இங்கு வரட்டும், நாமும் அவர்களுக்கு இணையாக எப்படித் துடிப்புடன் செயல்படுகிறோம், நம் நாடு எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறது, அன்றுபோலவே இன்றும் எப்படி உயிர்த்துடிப்போடு செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதைக் காணட்டும். நாமெல்லாம் தாழ்ந்த நிலையை அடைந்துவிட்டோம் என்ற கருத்தை மாற்றி அமைக்க வேண்டும். எவ்வளவு விரைவாக இதைச் செய்கிறோமோ அவ்வளவுக்கு நல்லது.

இப்பொழுது நான் சில கடினமான வார்த்தைகளைச் சொல்லியாக வேண்டியிருக்கிறது. நீங்கள் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்று நம்புகிறேன். ஐரோப்பியர்களின் உலகியல் நம்மை ஏறக்குறைய மூழ்கடித்துவிட்டது என்று சற்றுமுன் குற்றம் சாட்டினார்கள். தவறு ஐரோப்பியர்களுடையது மட்டுமல்ல, பெரும் பங்கு நம்முடையதே. வேதாந்திகள்

என்ற நிலையில் நாம் எந்தப் பொருளை எடுத்துக் கொண்டாலும், அதன் உள்நோக்கத்தை, அடிப்படைத் தன்மையைக் கண்டறிய வேண்டும். வேதாந்திகள் என்ற நிலையில், நம்மை நாமே காயப்படுத்திக் கொண்டாலன்றி, பிரபஞ்சத்தில் உள்ள எந்தச் சக்தியும் நம்மைக் காயப்படுத்த முடியாது என்பது உறுதியாக நமக்குத் தெரியும். இந்திய மக்கள்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினர் முகமதியர்களாகி விட்டனர். அதுபோலவே அதற்கு முன்னால் மூன்றில் இரண்டு பங்கினர் பௌத்தர் களாகியுள்ளனர். இப்பொழுது ஐந்தில் ஒரு பங்கினர் முகமதி யர்கள், ஒரு லட்சத்திற்கு மேல் ஏற்கனவே கிறிஸ்தவர்கள் உள்ளனர்.

இது யாருடைய தவறால் விளைந்தது? நம்முடைய வர லாற்று ஆசிரியர்களுள் ஒருவர் மறக்க முடியாத மொழியில் கேட்கிறார்: நிரந்தர வாழ்க்கையாகிய நீரூற்று, அருகிலேயே பொங்கிப் பெருகிச் செல்லும்போது, இந்த ஏழை அப்பாவி பசியாலும் தாகத்தாலும் ஏன் செத்து மடிய வேண்டும்? சொந்த மதத்தையே உதறிச் செல்பவர்களுக்காக நாம் என்ன செய்தோம் என்பதுதான் கேள்வி. அவர்கள் ஏன் முகமதியர்கள் ஆனார்கள்? நான் இங்கிலாந்தில் இருந்தபோது இந்தச் செய்தியைக் கேள்விப் பட்டேன்—ஒரு நல்ல குடும்பத்துப் பெண், விலைமகளாக விரும்பினாள். மற்றொரு பெண் அவளைத் தடுத்த போது அவள், 'அது ஒன்றுதான் நான் மற்றவர்களின் அனுதாபத்தைப் பெறுவதற்கு வழி. இப்போது எனக்கு உதவி செய்வார் யாருமே இல்லை. நான் வாழ்வு தவறி இழிவான பெண்ணானபின், கருணையுள்ளம் கொண்ட பெண்கள் என்னைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்று, எனக்கு வேண்டியதைச் செய்ய ஒருவேளை முன்வரலாம்' என்று சொன்னாள்.

பிற மதங்களுக்குப் போய்விட்ட நம் மக்களைக் குறித்து நாம் இப்போது அழுகிறோம். ஆனால் அவர்கள் மதம் மாறு வதற்கு முன் அவர்களுக்காக நாம் என்ன செய்தோம்? நாம் ஒவ் வொருவரும் நம்மையே இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொள் வோம். நாம் என்ன கற்றுக் கொண்டோம்? சத்திய ஜோதியை நாம் ஏந்தியுள்ளோமா? ஏந்தியுள்ளோம் என்றால், எவ்வளவு தொலைவு அதை எடுத்துச் சென்றோம்? இந்தக் கேள்வியை நாம் நம்மிடம் கேட்டே தீர வேண்டும். நாம் அப்போது அவர் களுக்கு உதவவில்லை. இது நாம் செய்த தவறு, நாம் செய்த வினை. எனவே இதற்காக யார்மீதும் பழிபோட வேண்டாம்,

நம் சொந்த வினையையே குறைகூறிக் கொள்வோம். நீங்கள் அனுமதிக்காமல், உலகாயதமோ, முகமதியமோ, கிறிஸ்தவமோ அல்லது வேறு எதுவுமோ உங்களை வெல்ல முடியாது. மோசமான உணவாலும் பட்டினியாலும் வெயிலாலும் மழையாலும் உடம்பு சிதைந்தும் சீர்குலைந்தும் போகாதவரை எந்தக் கிருமியும் அதனைத் தாக்க முடியாது. ஆரோக்கியமானவன் விஷக்கிருமிக் கூட்டத்தின் நடுவேகூட ஆபத்தின்றிச் சென்று வர முடியும்.

நமது வழிமுறைகளை மாற்றிக் கொள்வதற்கு இன்னும் அவகாசம் உள்ளது. முட்டாள்தனமான அந்தப் பழைய விவாதங்களையும், பொருளற்றவற்றைப் பற்றிய பழைய சண்டைகளையும் எல்லாவற்றையும் விட்டுவிடுங்கள். கடந்த அறுநூறு எழுநூறு ஆண்டுகளாக நாம் எவ்வளவு இழிநிலையை அடைந்துள்ளோம் என்பதை எண்ணிப் பாருங்கள். தண்ணீரை வலது கையால் குடிக்க வேண்டுமா, இடது கையால் குடிக்க வேண்டுமா? கைகளை மூன்றுமுறை கழுவுவதா, நான்கு முறை கழுவுவதா? வாயைக் கொப்பளிப்பது ஐந்துமுறையா, ஆறு முறையா?—இவைதான் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நமது அறிவுஜீவிகளின் வாதப் பிரதிவாதமாக இருந்து வந்துள்ளது. இத்தகைய ஈடிணையற்ற வாதங்களில் ஈடுபடுவதிலும், இவற்றிற்கு அற்புதமான தத்துவ விளக்கங்களை எழுதுவதிலும் காலத்தைக் கழிக்கின்ற மனிதர்களிடமிருந்து, நீங்கள் வேறு என்னதான் எதிர்பார்க்க முடியும்!

நமது மதம் சமையலறைக்குள் அடங்கிவிடுகின்ற ஆபத்து வந்துள்ளது. நாம் வேதாந்திகள் அல்ல, நம்மில் பெரும்பாலோர் பௌராணிகர்களும் அல்ல, தாந்திரிகர்களும் அல்ல; நாம் எல்லாம் வெறும் 'தீண்டாதே, தீண்டாதே' என்ற மதத்தைச் சார்ந்தவர்கள். நமது மதம் சமையலறையில் இருக்கிறது. பானைதான் நமது கடவுள். 'என்னைத் தொடாதே, நான் புனிதமானவன்' என்பதே நமது மதம். இது இன்னும் ஒரு நூறாண்டு காலம் இப்படியே சென்றால் நம்மில் பெரும்பாலோர் பைத்தியக்கார விடுதியில்தான் இருப்போம். நமது மூளை பலவீனமாகிவிட்டது என்பதற்கு அடையாளம் இது. நமது மனத்தால் வாழ்வின் உயர் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள முடியவில்லை; நமது தனித்தன்மையை நாம் இழந்துவிட்டோம்; மனம் எல்லா வலிமையையும் செயல்திறனையும் சிந்தனைத் திறனையும் இழந்து, எதிரில்பட்ட சின்னஞ்சிறு

பிரச்சினையைத் திரும்பத்திரும்பச் சுற்றிக் கொண்டிருக்கிறது என்பதே இதன் பொருள்.

இத்தகைய நிலைமையைத் தலைகீழாக மாற்ற வேண்டும். அதன்பின்னர் உறுதியோடு எழுந்து நிற்க வேண்டும்; செயல் திறனும் வலிமையும் மிக்கவர்களாக வேண்டும். அதன்பிறகுதான் நம் முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றதும், இன்று உலகம் முழுவதற்குமே தேவைப்படுவதுமான கருவூலத்தை, அளவற்ற புதையலாகிய நம் பாரம்பரியத்தை நாம் அறிந்து கொள்வோம். இந்தச் செல்வம் பகிர்ந்தளிக்கப்படவில்லை என்றால் உலகமே அழிந்து போகும். அதனை வெளியே கொண்டு வாருங்கள். எல்லோருக்கும் கொடுங்கள். உலகம் முழுவதற்கும் அதைப் பற்றிக் கூறுங்கள்.

தானம் ஒன்றுதான் கலியுகத்தில் செய்யக்கூடியது என்று வியாசர் கூறுகிறார். நம்மால் கொடுக்க முடிந்தவற்றுள் ஆன்மீக தானம்தான் மிக உயர்ந்தது. அதற்கு அடுத்ததாக லௌகீக அறிவு. அதற்கு அடுத்து, ஒருவரது உயிரைக் காப்பாற்றுதல். அதற்கு அடுத்து கடைசியாக, பசித்தவர்களுக்கு உணவைத் தரும் அன்னதானம். நாம் தேவையான அளவு அன்னதானம் செய்துவிட்டோம். வேறு எந்த நாடும் நம்மைப் போல் கொடையாளியாக இருந்ததில்லை. ஒரு பிச்சைக்காரன்கூட, தன் வீட்டில் ஒரு பிடிசோறு இருக்கும்வரை, அதில் பாதியைத் தானமாகக் கொடுக்கவே செய்வான். இத்தகைய விசித்திரத்தை இந்தியாவில் மட்டும்தான் காண முடியும். இது போதும். இப்போது மற்ற இரண்டு தானங்களான ஆன்மீக மற்றும் லௌகீக அறிவை அளிப்போம். நாம் எல்லோரும் வீரர்களாக, உறுதி வாய்ந்த உள்ளம் படைத்தவர்களாக, முழுக்கமுழுக்க உண்மையானவர்களாக இருந்து, சக்கரம் சுழலத் தோள் கொடுப்போமானால் இருபத்தைந்து ஆண்டுகளில் எல்லா பிரச்சினைகளும் தீர்ந்து போகும். அதன்பிறகு நாம் எதிர்த்துப் போரிட எதுவுமே இருக்காது. இந்தியா மீண்டும் ஆரிய நாடாகிவிடும்.

இப்போதைக்கு நான் உங்களிடம் சொல்ல வேண்டுவதெல்லாம் இவைதாம். எனது திட்டங்களைப் பற்றியெல்லாம் நான் அவ்வளவாக எதுவும் சொல்லவில்லை. சொல்வதைவிடச் செயலில் காட்டவே நான் விரும்புகிறேன். அதன் பின்னர் திட்டங்களைப்பற்றிப் பேசுகிறேன். எனக்கென்று திட்டங்கள் உள்ளன. இறைவன் திருவுளம் கொள்ளவும் எனக்கு நீண்ட ஆயுளை அளிக்கவும் செய்வாரானால் அவற்றைச்

செயல்படுத்துவதற்கான வழிமுறைகளும் கிடைக்கவே செய்யும். இதில் நான் வெற்றி பெறுவேனா, மாட்டேனா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் ஓர் உயரிய லட்சியத்தை மேற்கொள்வதும், அதற்காகத் தன் வாழ்நாளை அர்ப்பணிப்பதும் ஒரு மகத்தான காரியமாகும். அப்படி இல்லாமல் உணர்வற்ற கீழான ஜட வாழ்க்கை வாழ்வதில் என்ன பெருமை இருக்கிறது? ஓர் உயரிய லட்சியத்திற்கு அர்ப்பணிப்பதில் மட்டுமே வாழ்க்கை மதிப்புப் பெறுகிறது. இதுதான் இப்போது இந்தியாவில் செய்யப்பட வேண்டிய மகத்தான காரியம். தற்போதைய மத மறுமலர்ச்சியை நான் வரவேற்கிறேன். இரும்பு பழுத்திருக்கும் போதே அதை அடித்து நீட்டுவதற்கான வாய்ப்பை நழுவ விடுவது முட்டாள்தனம் அல்லவா? ❑

## 6. மதுரையில்

மானாமதுரையிலிருந்து பிப்ரவரி 2-ஆம் நாள் மதுரை வந்தார் சுவாமிஜி. அங்கே ராமநாதபுர மன்னரின் மாளிகை ஒன்றில் தங்கினார். மதுரை இந்துக்கள் சுவாமிஜிக்கு ஒரு வெல்வெட் உறையில் வரவேற்புரைப் பத்திரம் அளித்தனர்.

### வரவேற்புக்குப் பதிலுரை

நான் உங்களோடு பல நாட்கள் தங்கி, உங்கள் அவைத் தலைவர் விரும்பியதுபோல், நான்கு ஆண்டுகளாக மேலை நாட்டில் நான் செய்த பணிகளையும் பெற்ற அனுபவத்தையும் விளைவுகளையும் உங்களிடம் கூறுவதற்கு எனக்கும் விருப்பம் தான். ஆனால் துரதிர்ஷ்டவசமாக சாதுக்களுக்கும் உடம்பு என்ற ஒன்று உள்ளது. கடந்த மூன்று வாரங்களாகத் தொடர்ந்து நடைபெறுகின்ற பயணம் மற்றும் சொற்பொழிவுகளின் காரண மாக, இந்த மாலையில் நான் உங்கள் முன் நீண்டதொரு சொற் பொழிவை நிகழ்த்த முடியாமல் போய்விட்டது. எனவே நீங்கள் மிகுந்த அன்போடு அளித்த கனிவான வரவேற்புக்கு நன்றி மட்டும் தெரிவித்துக் கொண்டு, மற்றவைகளை, வாய்ப்பும் கிடைத்து, என் உடல்நிலையும் நன்றாகுமானால் எதிர்காலத்தில் எப்போதாவது பேசுகிறேன். இப்போது சுருக்கமாகக் கூறுவதை விட அப்போது பல விஷயங்களைப்பற்றி நாம் பேச முடியும்.

உங்களுக்கு நன்கு தெரிந்தவரும் சான்றோருமாகிய ராம நாதபுரம் அரசரின் விருந்தினனாக மதுரையில் தங்கியிருக்கின்ற என் மனத்தில் ஓர் எண்ணம் மேலெழுந்து தோன்றுகிறது. சிகாகோவிற்குப் போக வேண்டும் என்ற எண்ணத்தை முதன் முதலில் என் மனத்தில் எழுப்பியவரும் அதற்காகத் தம் இதயம் நிறைந்த உதவியையும் செல்வாக்கையும் எப்போதும் எனக்கு அளித்தவரும் மன்னரே என்பது உங்களில் பலருக்கும் தெரிந் திருக்கும். எனவே உங்கள் வரவேற்புரையில் என்னைப் பாராட்டிய பாராட்டுக்களில், கணிசமான பகுதி தென்னிந்தியா வின் அந்த உன்னத மனிதரையே சாரும். அவர் அரசராவதற்குப் பதிலாக ஒரு துறவியாகி இருக்க வேண்டும் என்பது என் விருப்பம்; அவர் அதற்கு முற்றிலும் தகுதியானவர்.

உலகத்தின் எந்தப் பகுதியிலாவது ஒரு பொருள் உண்மையாகத் தேவைப்படுமானால், அதை அளிக்கின்ற ஒன்று, வழியை அறிந்து, புதிய உயிருணர்வுடன் அதைக் கொண்டு வந்து தருகிறது. பௌதீக உலகத்திலும் அதைப் போலவே ஆன்மீக உலகத்திலும் இது உண்மையாக இருக்கிறது. உலகத்தின் ஒரு பகுதியில் ஆன்மீகம் தேவைப்பட்டு, அதே நேரத்தில் அது மற்ற எந்தப் பகுதியிலாவது இருக்கவும் செய்யுமானால், அதைப் பெறுவதற்கு நாம் மனப்பூர்வமாக விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், தேவைப்படுகின்ற இடத்தில் அது வந்துசேர்ந்து குலைந்த சமநிலையைச் சீர்செய்து விடுகிறது. மனித இன வரலாற்றைப் பார்த்தால், கடந்த காலத்தில் ஒருமுறை இருமுறை அல்ல, மீண்டும்மீண்டும் உலகத்திற்கு ஆன்மீகத்தை வழங்குவது இந்தியாவின் பணியாக இருந்து வந்துள்ளது. மிகப் பெரிய வெற்றிகளாலோ, வாணிப ஆதிக்கத்தாலோ உலகின் பல்வேறு பகுதிகள் இணைக்கப்பட்டு, மனித இனம் முழுவதும் ஒன்றுபடும்போது, ஒவ்வொரு நாடும் தன் பங்கைச் செலுத்த வேண்டியுள்ளது. அரசியல், சமுதாயம், ஆன்மீகம் என்று ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு குறிப்பிட்ட பங்கு உள்ளது. ஒட்டுமொத்த மனித அறிவிற்கு இந்தியாவின் பங்கு ஆன்மீகமும் தத்துவமும் ஆகும். இதைப் பாரசீக சாம்ராஜ்யம் தோன்றுவதற்கு மிக முன்பே ஒருமுறை இந்தியா வழங்கியது. இரண்டாவது முறையாக பாரசீக சாம்ராஜ்ய காலத்தின்போது வழங்கியது. மூன்றாவதாக, கிரேக்கப் பேரரசு உச்ச நிலையில் இருந்தபோது வழங்கியது. இப்போது நான்காவது முறையாக, ஆங்கிலேயர்கள் உச்ச நிலையில் இருக்கின்ற இந்தக் காலத்தில் மீண்டும் ஒருமுறை அதே காரியம் நிறைவேறப் போகிறது.

அமைப்புகளை உருவாக்குதல் மற்றும் புற நாகரீகம் பற்றிய மேலை நாட்டுக் கருத்துக்கள் நம் நாட்டினுள் புகுந்து ஊடுருவிச் சென்றுள்ளது. அவைகளை நாம் ஏற்கிறோமா இல்லையா என்பது வேறு விஷயம். அது போலவே இந்திய ஆன்மீகமும் தத்துவமும் மேலை நாடுகளில் வெள்ளமாகப் பாய்ந்துள்ளது. மேலை நாடுகளிலிருந்து வருகின்ற ஒருவிதமான உலகாயதம் போன்ற அந்த நாகரீகத்தை நம்மால் தடுக்க முடியாததைப் போல், இந்தியாவின் ஆன்மீக வெள்ளத்தையும் மேலை நாட்டால் தடுக்க முடியாது. சிறிது உலகியல் நமக்கு நல்லது, அவ்வாறே மேலை நாட்டிற்குச் சிறிது ஆன்மீகம் நல்லது. இவ்வாறு சமநிலை பிறழாமல் காக்கப்படுகிறது.

மேலை நாடுகளிலிருந்தே நாம் எல்லாவற்றையும் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதோ, மேலை நாட்டினர் ஒவ்வொன்றையும் நம்மிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்பதோ அல்ல. ஆனால் காலங்காலமாக இருந்து வருகின்ற, நாடுகளின் ஒருங்கிணைப்பு, லட்சிய உலகம் ஆகிய கனவுகளை நனவாக்குவதற்காக ஒவ்வொரு நாடும் தங்களிடம் உள்ளதை எதிர்கால சந்ததியருக்குக் கொடுத்தேயாக வேண்டும். இத்தகைய லட்சிய உலகம் எப்போதாவது உருவாகுமா என்பது எனக்குத் தெரியாது; சமுதாயம் என்றாவது நிறைநிலையை அடையுமா என்பதும் சந்தேகமே. அது வருகிறதோ இல்லையோ, ஆனால் நாம் ஒவ்வொருவரும் அது நாளைக்கே வரப்போகிறது, அது நம் உழைப்பால் மட்டுமே வர முடியும் என்ற எண்ணத்தோடு உழைக்க வேண்டும். எல்லோரும் தங்கள் பங்கைச் செய்து விட்டார்கள், உலகம் நிறைநிலையை அடைவதற்கு எஞ்சியிருப்பது. நான் செய்ய வேண்டிய வேலை மட்டுமே என்று நாம் ஒவ்வொருவரும் நம்ப வேண்டும். நாம் அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டிய பொறுப்பு இதுவே.

தற்போது இந்தியாவில் மகத்தான மத மறுமலர்ச்சி தோன்றியுள்ளது. இதில் பெருமை இருப்பதைப் போலவே ஆபத்தும் உள்ளது. ஏனெனில் சிலவேளைகளில் இந்த மறுமலர்ச்சி கொள்கைவெறியை வளர்க்கிறது, சிலநேரங்களில் அந்த வெறி எல்லை கடந்து போய்விடுகிறது. மறுமலர்ச்சிக்குக் காரணமானவர்கள்கூட அதைக் கட்டுப்படுத்த முடியாத நிலை வருகிறது. எனவே எச்சரிக்கையாக இருப்பது நல்லது. மூட நம்பிக்கை நிறைந்த பழமையான வைதீகமாகிய மலைக்கும், உள்ளீடற்ற, சீர்திருத்தம் என்று சொல்லப்படுகின்ற, மேலை நாட்டு வளர்ச்சியின் அடித்தளம் முழுவதிலும் ஊடுருவிப் பாய்ந்திருக்கின்ற ஐரோப்பாவின் உலகாயதம் என்னும் ஆழ் கடலுக்கும் இடையே நமக்குரிய பாதையை நாம் கண்டாக வேண்டும்.

ஆன்மீகம், லௌகீகம் இரண்டையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். முதலில் நம்மால் மேலை நாட்டினராக ஆக முடியாது. எனவே அவர்களைக் காப்பியடிப்பது பயனற்றது. ஒருவேளை நீ அவர்களைக் காப்பியடிப்பதாகவே வைத்துக் கொள்வோம். அந்தக் கணமே நீ செத்து விடுவாய், அதன்பின் உனக்கு வாழ்க்கை என்பதே இல்லாமல் போய் விடும். இரண்டாவதாக, அது முடியாத காரியமும் ஆகும்.

காலத்துடனேயே தோன்றி, யுகயுகங்களாக மனித வரலாற்றைக் கடந்து ஓடிக் கொண்டிருக்கின்றது ஆறு ஒன்று. அதனைத் தடுத்து நிறுத்தி, பின்னோக்கித் தள்ளிக் கொண்டுபோய், இமாலயப் பனிப் படலங்களில் சேர்த்துவிட எண்ணுகிறீர்களா? ஒருவேளை அதுகூட முடிகிற காரியமாக இருக்கலாம். ஆனால் உங்களால் ஐரோப்பியமயமாக முடியாது. சில நூற்றாண்டு களாக மட்டுமே உள்ள தங்கள் நாகரீகத்தைத் தூக்கி எறிவது ஐரோப்பியர்களால் முடியாமலிருக்கும்போது, ஆயிரக்கணக் கான ஆண்டுகளாகப் பிரகாசிக்கும் நமது பண்பாட்டைத் தூக்கி எறிவது சாத்தியம் என்றா நினைக்கிறீர்கள்? அது முடியாது.

ஒவ்வொரு சின்னஞ்சிறு கிராம தேவதைகளையும், மூட நம்பிக்கையில் தோய்ந்த சாதாரணமான பழக்க வழக்கங்களை யும்தான் நாம் மதம் என்று அழைத்து பழக்கப்பட்டிருக்கிறோம் என்பதை மறக்கக் கூடாது. வட்டாரப் பழக்கங்கள் கணக் கற்றவை, ஒன்றுக்கொன்று முரணானவை. இவற்றுள் நாம் எதை ஏற்றுக் கொள்வது, எதைத் தள்ளுவது? உதாரணமாக, ஒரு பிராமணன் இறைச்சி உண்பதைக் கண்டால் தென்னிந்திய பிராமணன், குலைநடுங்கிப் போய்விடுவான். ஆனால் அதையே வட இந்திய பிராமணன் மிகவும் பெருமைக்குரியதாக, புனித மானதாகக் கருதுகிறான்—யாகத்தில் நூற்றுக்கணக்கான ஆடுகளைப் பலியிடுபவன் அவன். இப்படி உங்கள் பழக்கம் சிறந்தது என்று நீங்கள் சொன்னால், தங்கள் பழக்கங்களே சிறந்தவை என்று காட்ட பலர் தயாராக உள்ளனர். இந்தியா முழுவதிலும் உள்ள பழக்க வழக்கங்கள் பல்வேறானவை. ஆனால் அவை வட்டார வழக்கங்களே. இந்த வட்டார வழக்கங்கள்தாம் நமது மதத்தின் சாரம் என்றே பாமர மக்கள் எண்ணிவருகிறார்கள். இது பெருந்தவறாகும்.

இதைக் கடந்து சென்றால் இன்னும் பெரிய பிரச்சினை உள்ளது. நமது சாஸ்திரங்கள் இரண்டு வகையான உண்மை களைக் கூறுகின்றன. ஒன்று, மனிதனின் அழியாத இயல்பை அடிப்படையாகக் கொண்டது; இறைவன், ஆன்மா, இயற்கை— இவற்றுக்கிடையிலான மாறாத உறவைப்பற்றி ஆராய்கிறது. மற்றொன்று, வட்டாரச் சூழ்நிலைகள், காலச் சூழ்நிலைகள், குறிப்பிட்ட அந்தக் காலத்தின் சமுதாய அமைப்புகள் முதலிய வற்றைப் பற்றியதாக உள்ளது. முதல் வகை உண்மைகள் பெரும் பாலும் நமது சாஸ்திரங்களான வேதங்களில் கூறப்பட்டுள்ளன.

இரண்டாவது வகை, ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும் கூறப் படுகின்றன. எல்லா காலங்களுக்கும் வேதங்களே இறுதியான லட்சியம், முடிவான அதிகாரம் உள்ளவை என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். எதிலாவது புராணங்கள் வேதங் களிலிருந்து மாறுபடுமானால் புராணத்தின் அந்தப் பகுதியை இரக்கமின்றி ஒதுக்கிவிட வேண்டும். இந்த ஸ்மிருதிகள் அனைத் திலும் கூறப்படும் போதனைகள் வெவ்வேறாக உள்ளன என்பது நமக்குத் தெரியும். இதுதான் வழக்கம், இந்த யுகத்தில் இதைத் தான் பின்பற்ற வேண்டும் என்று ஒரு ஸ்மிருதி கூறுகிறது. மற்றொரு ஸ்மிருதியோ இதுதான் இந்த யுகத்தின் நடைமுறை என்கிறது. இது சத்திய யுகத்தில் பழக்க வழக்கங்களாக இருக்க வேண்டும், இது கலியுகத்தில் வழக்கங்களாக இருக்க வேண்டும் என்று இன்னொரு ஸ்மிருதி சாதிக்கின்றது.

மனிதனின் இயல்பை அடிப்படையாகக் கொண்ட இந்த நிரந்தர உண்மைகள் மகத்தான கொள்கைகளுள் ஒன்றாகும். மனிதனின் இயல்பை ஆதாரமாகக் கொண்டுள்ளதால் மனிதன் வாழும்வரை இந்த உண்மைகளும் மாறவே மாறாது. அவை எல்லா காலங்களுக்கும் உரியவை, எல்லா இடங்களுக்கும் பொதுவானவை, உலகம் தழுவியவை. ஆனால் ஸ்மிருதிகள் பொதுவாக வட்டாரச் சூழ்நிலைகளையும், அங்கு நிலவுகின்ற பல்வேறான சூழ்நிலைகளின் காரணமாக எழுகின்ற கடமை களைப் பற்றியுமே கூறுகின்றன. இவை கால ஓட்டத்தில் மாறு தல்களுக்கு உள்ளாகின்றன. ஆனால் ஏதோ ஒரு சிறிய சமுதாய வழக்கம் மாறுவதால் உங்கள் மதமே அழிந்துவிடப் போவ தில்லை, அப்படி ஒருபோதும் நடக்காது. இதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். அந்தப் பழக்க வழக்கங்கள் ஏற்கனவே மாறிக் கொண்டிருப்பவை என்பதை மறக்காதீர்கள். மாட் டிறைச்சி தின்னாத பிராமணன், பிராமணனே அல்ல என்று கருதப்பட்ட காலம் ஒன்று முன்பு இதே இந்தியாவில் இருந்தது. சன்னியாசியோ அரசனோ அல்லது யாராவது மகானோ வீட்டுக்கு வந்தால் ஆடும் காளையும் கொல்லப்பட்ட விவரங் களையும், ஆனால் பயிர்த்தொழில் செய்யும் இனமாகிய நாம், மிகச் சிறந்த காளைகளைக் கொல்வது இறுதியில் நம் இனத்தின் அழிவிற்கே வழிவகுக்கும் என்பதைக் காலப்போக்கில் உணர்ந்து கொண்டதையும் நாம் வேதங்களில் படிக்கிறோம். எனவே பசு வதைக்கு எதிராகக் குரல்கள் எழுந்தன; அந்த வழக்கம் நிறுத்தப் பட்டது. கொடிய வழக்கங்கள் என்று இப்போது நாம்

கருதுகின்ற பல பழக்கங்கள் முன்பு சமுதாயத்தில் நிலவியதையும் அங்கொன்றும் இங்கொன்றுமாக நாம் பார்க்க முடிகிறது. காலப்போக்கில் வேறு விதிகளை உருவாக்க நேர்ந்தது. இந்த விதிகளும் காலப்போக்கில் மறையும். உடனே புதிய விதிகள் தோன்றவும் செய்யும். எனவே வேதங்கள் எல்லா காலங்களிலும் ஒன்றே. அவை நிலையானவை; ஸ்மிருதிகள் காலத்திற்குக் காலம் மாறுபவை என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

காலம் செல்லச்செல்ல ஸ்மிருதிகளில் கூறப்பட்ட விதிகள் மறைந்துகொண்டே போகும். மகான்கள் வருவார்கள். அவர்கள் சமுதாயத்தை மாற்றி, இன்னும் நல்ல பாதைகளிலும் காலத் திற்குத் தேவையான கடமைகளிலும் வழிகளிலும் சமுதாயத் தைச் செலுத்துவார்கள். இத்தகைய நிலை இல்லையெனில் சமுதாயம் வாழ்வது என்பது முடியாமல் போய்விடும். இவ்வாறு நம்முடைய வழியை இந்த இரண்டு ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இதன் பொருள் என்ன என் பதைப் புரிந்துகொள்வதற்கான போதிய பரந்த மனமும் அதே வேளையில் ஆழ்ந்த நம்பிக்கையும் இங்குள்ள ஒவ்வொருவரிட மும் இருக்கிறது என்று நான் நம்புகிறேன், எதையும் விலக்காமல் அனைத்தையும் ஏற்றுக்கொள்வது என்பதையே நான் குறிப்பிடு கிறேன். கொள்கைவெறியரின் தீவிரமும், லௌகீகரின் பரந்த நோக்கும் வேண்டுமென்று விரும்புகிறேன். கடல்போல் ஆழ்ந்து, எல்லையற்ற வானம் போல் விரிந்துள்ள இதயமே நமக்கு வேண்டும். உலகிலுள்ள வேறெந்த நாட்டினரைவிடவும் முற்போக்குடன் இருப்போம்; அதேவேளையில் நாம் நமது பரம்பரைப் பண்பில் நம்பிக்கையுடனும் பற்றுடனும் மாறாமல் நிலைத்திருப்போம். எவ்வாறு இப்படி இருப்பது என்பது இந்துக்களுக்குத்தான் தெரியும்.

இதைத் தெளிவான வார்த்தைகளில் சொல்வதென்றால், நாம் ஒவ்வொன்றிலும் முக்கியம் மற்றும் முக்கியமற்ற பகுதி களுக்கு இடையிலுள்ள வேறுபாட்டைத் தெரிந்துகொள்ள வேண்டும். முக்கியமானவை என்றும் இருப்பவை. முக்கிய மற்றவை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே பயன்படுபவை; அவை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு நீக்கப்பட்டு, முக்கியமானவற்றால் நிரப்பப்படவில்லை என்றால், கட்டாய மாக அவை ஆபத்தானவையாகிவிடும். உடனே நீங்களெல் லாம் எழுந்து நின்று, உங்கள் பழங்கால வழக்கங்களையும்

அமைப்புகளையும் தூற்ற வேண்டும் என்று நான் சொல்வதாக எண்ணிக் கொள்ளாதீர்கள். நான் சொல்வது அது அல்லவே அல்ல. அவற்றுள் மிகவும் தீய ஒன்றைக்கூட நிந்திக்காதீர்கள், எதையும் தூற்றாதீர்கள். இன்று மிகக் கொடிய ஒன்றாகத் தோன்றுகின்ற பழக்கங்கள், கடந்த காலத்தில் வாழ்வை வளப் படுத்திய பழக்கங்களாக இருந்திருக்கும். அவற்றை நாம் நீக்க நேருமானால்கூட சபித்துக்கொண்டே நீக்கக் கூடாது. நம் இனம் இன்றும் வாழ்ந்துகொண்டிருப்பதற்காக, கடந்த காலத்தில் அவை செய்த மகத்தான காரியங்களுக்காக அவைகளை வாழ்த்தியும் அவைகளிடம் நன்றியுணர்வுடனும் நீக்க வேண்டும்.

நமது சமுதாயங்களின் தலைவர்கள் ஒருபோதும் படைத் தலைவர்களோ அரசர்களோ அல்ல, மாறாக ரிஷிகளே என் பதை நன்றாக நினைவில்கொள்ள வேண்டும். ரிஷிகள் என்பவர் யார்? உபநிடதங்கள் ரிஷி என்று அழைக்கின்ற ஒருவர் சாதாரண மனிதர் அல்ல; அவர் மந்த்ர த்ரஷ்டா[1]. அவர் ஆன்மீகத்தை நேருக்கு நேர் காண்பவர். அவரைப் பொறுத்தவரை ஆன்மீகம் என்பது வெறும் புத்தகப் படிப்பல்ல; கற்பனைகளோ, வாதங் களோ அல்ல; வெற்றுப் பேச்சும் அல்ல; மாறாக, புலன்களைக் கடந்த உண்மைகளை நேருக்கு நேர் காண்பது அதாவது உண்மை அனுபூதியே. இதுதான் ரிஷித்துவம் என்பது.

ரிஷித்துவம் என்பது ஒரு குறிப்பிட்ட யுகத்திற்கோ காலத் திற்கோ நெறிக்கோ ஜாதிக்கோ சொந்தமானதல்ல. உண்மை உணரப்பட வேண்டும் என்கிறார் வாத்ஸ்யாயனர். எனவே நீங்கள், நான் மற்றும் இங்குள்ள ஒவ்வொருவருமே ரிஷி களாவதற்காக அழைக்கப்பட இருக்கிறோம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நமக்கு நம்பிக்கை வேண்டும். நாம் அனைவரும் உலகத்தை அசைப்பவர்களாக மாறியாக வேண்டும், ஏனெனில் எல்லாம் நம்மிடமே உள்ளது. ஆன்மீகம் என்பதை நாம் நேருக்கு நேராகக் கண்டாக வேண்டும், அனுபவிக்க வேண்டும், அதன்மூலம் அதுபற்றிய நமது சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அதன்பின்னர் ரிஷித்துவமாகிய அந்தப் பேரொளியில் திளைக்கும்போது, நாம் ஒவ்வொருவரும் மகத்தானவர்களாக இருப்போம். அப்பொழுது நம் உதடுகளிலிருந்து வெளிவருகின்ற ஒவ்வொரு

---

1. மந்திரங்களை நேருக்கு நேர் கண்டவர்.

வார்த்தையும் இணையற்ற பாதுகாப்பை அள்ளி வழங்குவதாக இருக்கும். அப்பொழுது யாரையும் நிந்திக்க வேண்டிய அவசியமே இல்லாமல், யாரையும் திட்ட வேண்டிய தேவையே இல்லாமல், இந்த உலகத்தில் யாருடனும் சண்டையிடும் அவசியமும் இல்லாமல் நம் முன்னர் தீமைகள் தாமாகவே மறைந்து போகும். சொந்த முக்திக்காகவும் பிறரது முக்திக்காகவும் இங்குள்ள ஒவ்வொருவரும் அத்தகைய ரிஷித்துவத்தை அடைய கடவுள் நமக்கு உதவுவாராக. ❑

# 7. கும்பகோணத்தில்

கும்பகோண இந்துக்கள் சுவாமிஜிக்கு வரவேற்பு அளித்த பின்னர் இந்து மாணவர்கள் ஒரு வரவேற்புரை அளித்தார்கள். அதன்பிறகு சுவாமிஜி பேசினார்:

## வேதாந்தப் பணி

மிகக் குறைந்த அளவே செய்யப்படுகின்ற மதப் பணிகூட மிகப் பெரிய விளைவைத் தருகிறது[1] —இதை கூறுகின்ற இந்த உண்மைக்கு விளக்கம் வேண்டுமானால் எனது எளிய வாழ்க்கையைப் பார்த்தால் போதும். அதன் நிரூபணத்தை நான் ஒவ்வொரு நாளும் என் வாழ்வில் கண்டு வருகிறேன். எனது பணி உண்மையில் மிகச் சாதாரணமானது. ஆனால் கொழும்பிலிருந்து இங்குவரை என் பயணத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் எனக்குத் தரப்படுகின்ற மனமுவந்த, கனிவான வரவேற்புகள் எல்லா எதிர்பார்ப்புகளையும் மீறியவை; அதே நேரத்தில் இது நம் இந்துப் பாரம்பரியத்திற்குத் தகுதியானவை, நமது இனத்திற்கும் தகுதியானவை. நம் இந்து இனத்தின் உயிர்ச் சக்தியும் வாழ்க்கைத் தத்துவமும் ஆதார நாடியும் மதத்தில்தான் இருக்கிறது. நான் கீழை மற்றும் மேலை நாடுகளில் பல்வேறு இன மக்களிடையே பயணம் செய்து, இந்த உலகத்தைக் கொஞ்சம் பார்த்திருக்கிறேன். ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு மகத்தான லட்சியம் இருப்பதை நான் கண்டேன். அதுவே அந்த இனத்தின் முதுகெலும்பாகத் திகழ்கிறது. சில நாடுகளில் இந்தத் தேசியப் பின்னணி அரசியலாக இருக்கிறது, சில நாடுகளில் சமுதாய கலாச்சாரமாக உள்ளது, மற்றும் சில நாடுகளில் அறிவுக் கலாச்சாரமாக உள்ளது. ஆனால் நமது தாய்நாட்டின், அடிப்படையாகவும் முதுகெலும்பாகவும் அதன் தேசிய வாழ்க்கை முழுவதும் கட்டப்படுவதற்கான உறுதியான அடித்தளப் பாறையாகவும் மதமே உள்ளது.

---

1. ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ।
—கீதை, 2. 40

சென்னை மக்கள் எனக்கு அமெரிக்காவில் அனுப்பிய அன்பான பாராட்டுரைக்கு நான் அனுப்பிய பதில் உங்களுள் பலரது நினைவில் இருக்கும்.[1] நம் நாட்டின் ஒரு குடியானவன், மேலை நாட்டிலுள்ள சீமான் ஒருவனைவிடப் பல வழிகளில் சிறந்த மத அறிவு பெற்றவனாக உள்ளான் என்று அதில் நான் குறிப்பிட்டிருந்தேன். எனது அந்தச் சொற்கள் சந்தேகத்திற்கு இடமின்றிச் சரியாக இருப்பதை இன்று நான் காண்கிறேன். சாதாரண இந்தியர்கள் பல விஷயங்களை அறியாதவர்களாக வும் புதிய செய்திகளை அறிவதில் ஆர்வம் இல்லாதவர்களாக வும் இருப்பதைக் கண்டு, ஒருகாலத்தில் நான் வெறுப்படைந்தது உண்டு. ஆனால் இப்போது அவர்களின் போக்கிற்கான காரணம் எனக்குப் புரிந்துவிட்டது. அவர்களுக்கு எதில் ஆர்வம் உள்ளதோ, அதைப் பற்றிய செய்திகளை அறிவதில், என் பயணத்தில் நான் கண்ட மற்ற நாட்டு மக்களைவிட அவர்கள் பேரார்வம் காட்டுகிறார்கள்.

ஐரோப்பாவின் பரபரப்பான அரசியல் மாற்றங்களையும் ஐரோப்பிய சமுதாயத்தில் நடைபெறும் எழுச்சிகளைப் பற்றியும் நம் குடியானவர்களைக் கேளுங்கள். அவர்களுக்கு அவை எது வும் தெரியாது; தெரிந்து கொள்வதில் அவர்களுக்கு ஆர்வமும் கிடையாது. ஆனால் இந்தியாவிலிருந்து பல வழிகளிலும் பிரிக்கப்பட்ட, இந்திய வாழ்க்கைமுறைகளிலிருந்து துண்டிக்கப் பட்ட இலங்கை விவசாயி—இலங்கையின் வயல்களில் உழைக் கின்ற அவர்கள்கூட, அமெரிக்காவில் ஒரு சர்வமத மகாசபை நடைபெற்றதையும், அதற்கு இந்திய சன்னியாசி ஒருவர் சென்றதையும், அங்கு அவர் ஏதோ சிறு வெற்றி பெற்றதையும் தெரிந்து வைத்திருக்கிறான். எனவே தாங்கள் விரும்புவதை அறிந்து கொள்வதில் இவர்களும் பிற நாட்டினரைப்போல் ஆர்வம் நிறைந்தவர்களாகவே இருக்கிறார்கள். மதம் ஒன்று தான் இந்தியர்கள் முழு நாட்டம் கொள்ளக்கூடிய ஒன்றாகும்.

ஓர் இனத்தின் ஆதார சக்தி முழுவதும் மத லட்சியத்தில் இருப்பது நல்லதா அல்லது அரசியல் கொள்கைகளில் இருப்பது நல்லதா என்பது பற்றி இப்போது நான் பேசவில்லை. நல்லதற்கோ கெட்டதற்கோ, நமது ஆதார சக்தி முழுவதும் மதத்தில்தான் ஒருமுனைப்படுத்தப் பட்டுள்ளது என்பது தெளிவு. இதை நீங்கள் மாற்ற முடியாது. அதை அழித்துவிட்டு

---

1. சுடர் 1. பக். 59 பார்க்க.

அதற்குப் பதிலாக வேறு ஒன்றை வைக்க உங்களால் முடியாது. வளர்ந்துவிட்ட பெரிய மரத்தை ஓர் இடத்திலிருந்து பிடுங்கி மற்றோர் இடத்தில் நட்டு, உடனடியாக அது அங்கே வேர் பிடித்து வளரும்படிச் செய்ய உங்களால் முடியாது. நல்லதற்கோ கெட்டதற்கோ ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இந்தியாவில் மத லட்சியம் நிறைந்து பரவிக் கொண்டிருக்கிறது. நல்லதற்கோ கெட்டதற்கோ இந்தியச் சூழ்நிலை மத லட்சியங்களால் நிரப்பப் பட்டு எத்தனையோ நூற்றாண்டுகளாக ஒளிவீசி வருகிறது. நல்லதற்கோ கெட்டதற்கோ நாம் இந்த மத லட்சியங்களின் நடுவிலே பிறந்து வளர்க்கப்பட்டு இருக்கிறோம், அவை நம் ரத்தத்தோடு கலந்து, ரத்தக்குழாயில் ஓடுகின்ற ஒவ்வொரு துளியிலும் சிலிர்ப்பை ஊட்டி, நம் உடம்போடு ஒன்றிப்போய் இருக்கிறது; நம் வாழ்வின் ஆதார சக்தியாக ஆகியிருக்கிறது.

அத்தகைய மதத்தை, எதிர்விளைவாக அதே அளவு சக்தியை எழுப்பாமல், ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ஓடிக் கொண்டிருக்கின்ற அந்தப் பேராறு தனக்கென்று உண்டாக்கிக் கொண்ட கால்வாயை நிரப்பாமல், உங்களால் விட்டுவிட முடியுமா? கங்கை மீண்டும் பனி மலைகளுக்குள் திரும்பிச் சென்று புதிய பாதையில் பாய வேண்டும் என்று விரும்பு கிறீர்களா? அதுகூட ஒருவேளை முடிகின்ற காரியமாக இருக் கலாம். ஆனால் தன் தனிப் பண்பான மத வாழ்க்கையை விட்டுவிட்டு, அரசியல் அல்லது அதுபோன்ற வேறு ஏதாவது ஒன்றைத் தன் பாதையாக ஏற்றுக் கொள்வது இந்தியாவால் முடியாத காரியம். நீங்கள் வேலை செய்ய வேண்டுமானால், இயன்ற அளவு எதிர்ப்பு குறைவாக இருக்க வேண்டும். இந்தியா வில் அத்தகைய ஒரு பாதை மதம்தான். இந்தியாவில் இதுதான் வாழ்க்கை வழி, இதுதான் வளர்ச்சிக்கான வழி. மதப்பாதையைப் பின்பற்றியே இந்தியா முன்னேற்றம் கண்டிருக்கிறது.

பிற நாடுகளைப் பொறுத்தவரை, வாழ்க்கையின் எத் தனையோ தேவைகளுள் மதமும் ஒன்று. நான் அடிக்கடிப் பயன்படுத்தும் ஓர் உவமையைக் கூறுகிறேன்: சீமாட்டியின் வரவேற்பறையில் பல்வேறு பொருட்கள் இருக்கும், ஜப்பானிய ஜாடி ஒன்றையும் வைப்பது இந்நாளில் ஒரு நாகரீகம் ஆயிற்றே! அதை அவள் வாங்கியே தீர வேண்டும், அது இல்லாமல் வர வேற்பறை நன்றாக இருக்குமா என்ன! அதைப்போல், அன்பர் களே, பிற நாட்டினருக்கு வாழ்க்கையில் பல்வேறு அம்சங்கள் உள்ளன; அதனை முழுமையாக்க மதம் என்பதும் கொஞ்சம்

தேவையாக இருக்கிறது. அதற்காக அவர்கள் அதையும் சிறிது வைத்திருக்கிறார்கள். ஒரே வார்த்தையில் சொல்வதென்றால் அரசியல், அதாவது சமுதாய முன்னேற்றம், அதாவது இந்த உலகம்தான் மேலை நாட்டினரின் லட்சியம். கடவுள், மதம் என்பதெல்லாம் அந்த லட்சியத்தை அடைவதற்காக உதவுபவை, அவ்வளவுதான். அவர்களைப் பொறுத்தவரை, கடவுள் என்பவர் இந்த உலகைத் தூய்மை செய்வதற்கும் அலங்கரிப் பதற்கும் அவர்களுக்கு உதவுகின்ற ஒருவர், அவரது மதிப்பெல்லாம் அவ்வளவுதான். அவர்களே இன்னும் கற்க வேண்டியுள்ளது, இதில் நம்மைவிடத் தெரிந்தவர்கள்போல் காட்டிக் கொள்கிறார்கள். கடந்த நூறு இருநூறு ஆண்டு களாகத் தொடர்ந்து இந்திய மதத்திற்கு எதிராக அவர்கள் கூறிவருவதெல்லாம் என்ன தெரியுமா? நமது மதம் இவ்வுலக வாழ்க்கைக்கு ஆவன செய்யவில்லை, அது நமக்குக் காசுபணங் களைத் தரவில்லை, நம்மை மற்ற நாடுகளைக் கொள்ளை அடிப்பவர்களாக ஆக்கவில்லை, பலசாலிகளைப் பலவீனர்கள் மீது நின்றுகொண்டு அவர்களின் உயிர்ச்சக்தியை உறிஞ்சி, தங்களை வளமாக்கிக் கொள்ளச் சொல்லவில்லை என்பதுதான். நிச்சயமாக நமது மதம் இதைச் சொல்லவில்லை. தன் காலடியில் உலகையே நடுங்கச் செய்கின்ற படைகளை அனுப்பி, மற்ற இனங்களைச் சூறையாடி நாசப்படுத்த அதனால் முடியாது. எனவே அவர்கள், இந்த மதத்தில் என்ன இருக்கிறது, வாய்க்குத் தீனியும் உடலுக்குப் பலமும் அளிக்காத ஒரு மதத்தில் என்னதான் இருக்க முடியும் என்று கேட்கிறார்கள்.

நமது மதம் இவ்வுலக வாழ்க்கைக்கு எதையும் செய்ய வில்லை, என்ற அவர்களுடைய இந்த வாதத்தை வைத்துக் கொண்டே நாம் நமது மதத்தின் சிறப்பை உறுதி செய்யலாம் என்பதை அவர்கள் உணரவில்லை. நமது மதம் மட்டுமே உண்மையான மதம். ஏனெனில் மூன்று நாட்களே நிலைப்பதும் புலன்களால் உணரப்படுவதுமான இந்தச் சின்னஞ்சிறு உலகை வாழ்வின் அனைத்துமாகக் கொள்ளக் கூடாது, நமது மகத்தான லட்சியம் அதுவல்ல என்று நமது மதம்தான் கூறுகிறது. சில அடிகளுக்குள் அடங்கிவிடுகின்ற பூமியாகிய இந்தக் கோளம், நமது மதத்தின் காட்சியைக் கட்டுப்படுத்தவில்லை. நமது மதத் தின் லட்சியம் இவைகளுக்கு அப்பால், இன்னும் அப்பால் உள்ளது; புலன்களுக்கு அப்பால், இடத்திற்கு (Space) அப்பால், காலத்திற்கு அப்பால், இன்னும் அப்பால் ஆன்மாவின் கடல்

போல் விரிந்த மகிமையில் இந்த உலகம் சூன்யமாகி, பிரபஞ்சமே ஒரு துளிபோலாகின்ற அந்த இடமே நமது லட்சியம்.

நமது மதம்தான் உண்மையான மதம். ஏனெனில், கடவுள் ஒருவரே உண்மையானவர், இந்த உலகம் பொய்யானது, கணம் தோன்றி மறைவது, உங்கள் காசு பணமெல்லாம் தூசியைத் தவிர வேறல்ல, அதிகாரமெல்லாம் வரம்பிற்கு உட்பட்டது, வாழ்க்கை பல நேரங்களில் தீமையாகவே இருக்கிறது என்று அது கூறுகிறது. எனவேதான் நமது மதம் உண்மை யானது.

நமது மதம்தான் உண்மையான மதம். ஏனெனில் எல்லா வற்றையும்விட மேலாக, அது துறவைப் போதிக்கிறது. காலங் காலமாகப் பெற்ற ஞானத்தோடு எழுந்து நின்று, இந்துக் களாகிய நம்மோடு ஒப்பிட்டால், நமது முன்னோர்களால் இங்கே இதே இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட பழுத்த பண் பட்ட ஞானத்தை உடையவர்களான நம்மோடு ஒப்பிட்டால், நேற்றுதான் பிறந்தவர்களாகத் தோன்றும் நாடுகளுக்குத் தெளி வான சொற்களில் அது கூறுகிறது: 'குழந்தைகளே, நீங்கள் புலன்களின் அடிமைகள். புலன்களுக்கு வரையறை இருக்கிறது, புலன்களில் அழிவு மட்டுமே உள்ளது. இரண்டொரு நாட்களே நிலைக்கின்ற இந்த ஆடம்பர வாழ்க்கை இறுதியில் அழிவைத் தான் கொண்டுவரும். இவை அனைத்தையும் விட்டுவிடுங்கள். புலன்களிடமும் உலகத்திடமும் கொண்டுள்ள பற்றை விடுங்கள்; அதுதான் மதத்தின் வழி'. போகத்தின் வழியாக அல்ல, துறவின் மூலமே லட்சியத்தை அடைய முடியும். அதனால் நம்முடையது மட்டுமே உண்மையான மதம்.

வினோதமானதோர் உண்மையைப் பாருங்கள்— ஒன்றன் பின் ஒன்றாக எத்தனையோ நாடுகள் உலக மேடைக்கு வந்து, ஒருசில கணங்கள் தங்கள் பாத்திரங்களை ஆரவாரமாக நடித்து விட்டு, காலப் பெருங்கடலில் நீர்க்குமிழி போல், ஏறக்குறைய எந்த அடையாளத்தையும் நிறுத்தாமல் அழிந்து போய்விட்டன. இங்கு நாமோ நிரந்தரமானது போன்ற வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மிகப் பெரும் தகுதி பெற்றதே வாழும் (Survival of the Fittest), என்பதைப் பற்றிய புதிய பல கொள்கை களையெல்லாம் அவர்கள் பெரிதாகப் பேசுகிறார்கள்; வாழ் வதற்கான மிகப் பெரும் தகுதியாக உடல் வலிமையையே கருதுகிறார்கள். அது உண்மையென்றால் பிற நாடுகளை ஆக்கிரமித்ததான பழைய நாடுகளுள் ஒன்றாவது இன்றும் பெருமையோடு வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும்,

ஒருபோதும் எந்த இனத்தையோ நாட்டையோ வெல்லாத பலவீனமான இந்துக்கள் அழிந்திருக்க வேண்டுமே! ஆனால் நாம் முப்பது கோடி பேர் இன்னும் வலிமையுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். (ஒரு முறை ஆங்கிலப் பெண்ணொருத்தி, 'இந்துக்கள் என்ன செய்தார்கள்? அவர்கள் ஓர் இனத்தைக்கூட வெற்றி கொள்ளவில்லையே!' என்று என்னைக் கேட்டாள்.)

இனி, நமது ஆற்றல்கள் எல்லாம் செலவழிந்துவிட்டன என்பதோ, நம் நாடு படிப்படியாக அழிந்து வருகிறது என்பதோ சிறிதும் உண்மை அல்ல. நம்மிடம் போதுமான வலிமை இருக்கிறது. தேவை ஏற்படும்போது சரியான நேரத்தில் அது வெள்ளமெனப் பொங்கியெழுந்து உலகை நிரப்பவே செய்கிறது.

மிகப் பழங்காலத்திலிருந்தே நாம் உலகத்திற்குச் சவால் விட்டுக்கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. ஒரு மனிதன் எவ்வளவு அதிகமாக வைத்துக் கொள்ள முடியும் என்ற பிரச்சினையைத் தீர்க்க மேலைநாட்டினர் முயன்று கொண் டிருக்கிறார்கள். இங்கோ ஒரு மனிதன் எவ்வளவு குறைவான உடைமைகளைக் கொண்டு வாழ முடியும் என்ற கேள்விக்கு விடைகாண முயன்று கொண்டிருக்கிறோம். இந்தப் போராட்ட மும் இந்த வேறுபாடும் பல நூற்றாண்டுகள் தொடரவே செய்யும். ஆனால் வரலாற்றில் ஏதாவது உண்மை இருக்கு மானால், ஆருடங்கள் எப்பொழுதாவது உண்மையாகி இருக்கிறதென்றால், அது, யார் குறைவான பொருட்களைக் கொண்டு வாழக் கற்றுக் கொள்கிறார்களோ, கட்டுப்பாட்டுடன் வாழ்கிறார்களோ அவர்களே முடிவில் வெல்கிறார்கள், யார் போகத்தின் பின்னாலும் ஆடம்பரத்தின் பின்னாலும் ஓடுகிறார்களோ அவர்களின் வாழ்க்கை எவ்வளவு பரபரப்பாக அந்த நேரத்தில் காணப்பட்டாலும் அவர்கள் அழிந்தே தீரவேண்டும், மாய்ந்தேயாக வேண்டும் என்பதுதான்

மனித வாழ்க்கையில், ஏன், நாடுகளின் வரலாற்றில்கூட ஒரு வகையான களைப்பு, வேதனை தரத்தக்க வகையில் அதிக மாக நிலவுகின்ற சில நேரங்கள் உண்டு. அத்தகையதோர் அலை இப்போது மேலைநாடுகளில் மோதுவதுபோல் தோன்று கிறது. அங்கும் மகத்தான சிந்தனையாளர்கள் இருக்கிறார்கள். இப்படிப் பணம், பதவி என்று அவற்றின் பின்னால் ஓடுவது வெறுமையிலும் வெறுமை என்று அவர்களும் கண்டுபிடித்து விட்டார்கள். அங்குள்ள பலரும், ஏன், பண்பட்டோருள் பெரும்பாலான ஆண்களும் பெண்களும் இந்தப் போட்டி,

போராட்டம், வாணிப நாகரீகத்தின் காட்டுமிராண்டித்தனம் இவைகளால் ஏற்கனவே களைத்துப் போய்விட்டார்கள். மேலான ஒன்றை அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதேவேளையில் ஐரோப்பாவின் தீமைகளுக்கெல்லாம் அரசியல் மற்றும் சமுதாய மாற்றங்களே ஒரே தீர்வு என்று சிலர் இன்னும் அங்கே பிடிவாதமாக நம்பிக் கொண்டுதான் இருக்கின்றனர்.

ஆனால் அங்குள்ள மகத்தான சிந்தனையாளர்களிடம் வேறு சிந்தனைகள் வளர்ந்து கொண்டிருக்கின்றன. மனித வாழ்வில் எவ்வளவுதான் அரசியல் மற்றும் சமுதாய மாற்றங்களைக் கொண்டு வந்தாலும் தீமைகளைத் தீர்க்க முடியாது என்பதை அவர்கள் கண்டுவிட்டார்கள். அக வாழ்வில் ஓர் உறுதியான மாற்றம் மட்டுமே வாழ்க்கையின் தீமைகளை நீக்கும். படைகளோ அரசாங்கமோ சட்டக்கொடூரங்களோ எவ்வளவு தான் இருந்தாலும் ஓர் இனத்தின் நிலையை மாற்ற முடியாது. ஆன்மீகப் பண்பாடும் நீதிநெறிப் பண்பாடும் மட்டுமே மனித இனத்தின் தவறான போக்குகளை மாற்றி, அதை நல்ல வழியில் திருப்ப முடியும். எனவே மேலை நாட்டினர் ஏதாவது புதிய சிந்தனைகளையும் புதிய தத்துவங்களையும் பெறுவதற்காக ஆர்வத்தோடு இருக்கிறார்கள். அவர்களது மதமான கிறிஸ்தவம் பல விஷயங்களில் நல்லதாகவும் பெருமை மிக்கதாகவும் இருந்தாலும் அதனை அவர்கள் முழுமையாக உணரவில்லை; உணர்ந்தபோதோ அது அவர்களுக்குப் போதுமானதாக இல்லை. எனவே மேலை நாட்டின் அறிவுஜீவிகள், நம் பழைய தத்துவங்களில், அதிலும் குறிப்பாக வேதாந்தத்தில், தாங்கள் தேடிக் கொண்டிருக்கின்ற புதிய சிந்தனைத் துடிப்பையும் தங்கள் பசிக்கும் தாகத்திற்கும் ஏற்ற ஆன்மீக உணவையும் நீரையும் காண்கிறார்கள். இதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.

ஒவ்வொரு மதத்திலும் உள்ள எத்தனை எத்தனையோ விந்தையான கருத்துக்களைக் கேட்பது எனக்குப் பழக்கமாகி விட்டது. சிறிதுகாலத்திற்கு முன்புகூட, கிறிஸ்தவ மதம் மட்டுமே உலகம்தழுவிய மதம் என்று என் சிறந்த நண்பரான டாக்டர் பரோஸ் உரிமை பாராட்டியதை நீங்கள் கேட்டிருக்கலாம். இந்த விஷயத்தைப்பற்றிச் சிறிது சிந்திக்க விரும்புகிறேன். வேதாந்தம், வேதாந்தம் மட்டுமே உலகம் தழுவிய மதமாக முடியும்; வேறெந்த மதமும் அத்தகைய ஒன்றாக இருக்க முடியாது என்றே நான் கருதுகிறேன். அதற்கான காரணங்களை இப்போது கூறுகிறேன்.

நமது மதத்தைத் தவிர, ஏறக்குறைய உலகின் மற்ற பெரிய மதங்கள் எல்லாமே அதைத் தோற்றுவித்த ஒருவர் அல்லது பலரது வாழ்க்கையோடு இணைக்கப்பட்டுள்ளன. அந்த மதங்களின் கொள்கைகளும் போதனைகளும் கோட்பாடுகளும் அற நெறிகளும் அவைகளைத் தோற்றுவித்தவர்களின் வாழ்க்கையைச் சுற்றியே அமைந்திருக்கின்றன. அவர்களின் வாழ்க்கையே அந்த மதங்களின் ஆதாரமாகவும் அதிகாரமாகவும் ஆற்றலாகவும் உள்ளது. விசித்திரம் என்னவென்றால் அத்தகைய மதங்களாகிய கட்டிடம் அவர்களது வாழ்க்கையின் வரலாற்று ஆதாரம் என்ற அஸ்திவாரத்தின் மீதுதான் முற்றிலும் கட்டப்பட்டுள்ளது. அந்த வரலாற்று ஆதாரத்தில் மட்டும் ஓர் அடி விழுமானால், பாறை போன்ற அஸ்திவாரம் என்று பெருமைப்பட்டுப் கொள்கிறார்களே அது மட்டும் அசைக்கப் படுமானால், தூளாக்கப்படுமானால் முழுக்கட்டிடமுமே நொறுங்கிச் சுக்கல்சுக்கலாகி விடும். அவை மீண்டும் பழைய பெருமையைப் பெறுவதே இல்லை. இன்று அப்படித்தான் நடைபெறுகிறது. அத்தகைய மதங்களைத் தோற்றுவித்தவர்களின் வாழ்க்கை வரலாற்றில் பாதி நிச்சயமான உண்மை என்று நம்பப்படவில்லை; மீதிப்பாதியும் தீவிரமான சந்தேகத்திற்கு உரியதாகக் கருதப்படுகிறது.

நமது மதத்தைத் தவிர மற்ற பெரிய மதங்கள் அனைத்தும் இத்தகைய வரலாற்று மனிதர்கள் மீதே அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் நமது மதம் தத்துவங்களின்மீது அமைக்கப்பட்டுள்ளது. வேதங்களை உருவாக்கியதாக எந்த ஆணோ பெண்ணோ உரிமை பாராட்ட முடியாது. அவை என்றும் அழியாத உண்மைகளின் திரண்ட வடிவாகும். ரிஷிகள் அவற்றைக் கண்டுபிடித்தார்கள். வேதங்களில் அந்த ரிஷிகளின் பெயர்கள், வெறும் பெயர்கள் மட்டுமே இங்குமங்குமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்கள் யார், என்ன செய்தார்கள் என்பது நமக்குத் தெரியாது. பலருடைய தந்தையின் பெயர் இல்லை; அவர்கள் எப்போது எங்கே பிறந்தார்கள் என்ற குறிப்புகூட பெரும்பாலும் இல்லை. அவர்கள், அந்த ரிஷிகள் தங்கள் பெயரைப்பற்றிக் கவலைப்பட்டார்களா என்ன! அவர்கள் உண்மைகளைப் போதித்தார்கள். தாங்கள் போதித்த உண்மைகளுக்கு, தங்களால் இயன்ற அளவு உதாரணமாக விளங்கினார்கள்.

நமது கடவுள் சகுணமாகவும் அதே வேளையில் நிர்க்குணமாகவும் இருப்பதைப்போல் நமது மதமும் அழுத்தமான

வகையில் தத்துவங்களின்மீது கட்டப்பட்ட ஒன்றாகவும், அதே நேரத்தில் மனிதர்களின் விருப்பங்களுக்கு ஏற்ப எண்ணற்ற விதங்களில் பின்பற்றுவதற்கு ஏற்ற விதமாகவும் அமைந்துள்ளது. நமது மதத்தைவிட அதிகமான அவதார புருஷர்களை, மகான் களை, தீர்க்கதரிசிகளை வேறு எந்த மதம் தந்துள்ளது, இன்னும் எண்ணற்றோரைத் தருவதற்கும் தயாராக இருக்கிறது?

அவதாரங்கள் கணக்கற்றவை என்று பாகவதம் கூறுகிறது;[1] நீங்கள் விரும்புகின்ற அளவு அதிகமாக இன்னும் வைத்துக் கொள்வதற்கும் போதுமான வாய்ப்பைத் தந்துள்ளது. ஆகையால் நம் இந்திய மத வரலாற்றிலுள்ள அவதார புருஷர்களிலும் சரி, மகான்களிலும் சரி, ஒருவரோ பலரோ வாழ்ந்ததற்கு வரலாற்று ஆதாரங்கள் இல்லை என்பது நிரூபிக்கப்பட்டாலும் அதனால் நம் மதத்திற்கு எந்தவிதத் தீங்கும் இல்லை. அப்போதும் நம் மதம் எப்போதும்போல் உறுதியாகவே இருக்கும். ஏனென்றால் அது தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டுள்ளதே தவிர மனிதர்களை அல்ல. உலகிலுள்ள அனைவரையும் ஒரே மனிதரைச் சுற்றித் திரளும் படிச் செய்ய முயல்வது வீண். ஏன், உலகம்தழுவியதும், அழிவேயில்லாத உண்மைகளின் கீழும்கூட உலக மக்கள் எல்லோரையும் ஒன்றுசேர்ப்பது என்பது முடியாத ஒன்று.

மதம் என்ற துறையில் மனித இனத்தின் பெரும் பகுதியை யேனும் ஒரேமாதிரியாகச் சிந்திக்கச் செய்ய வேண்டுமானால், அது தத்துவ உண்மைகளின் மூலம்தான் முடியுமே தவிர, மனிதர்களின்மூலம் முடியாது என்பதைக் குறித்துக் கொள் ளுங்கள். நான் முன்பு கூறியதுபோல் நமது மதம் அதற்கு வேண்டிய அதிகாரத்தையும் ஆற்றலையும் மிகுதியாகப் பெற்ற தாக உள்ளது. இஷ்டதெய்வக் கொள்கை இருக்கிறதே, அது அற்புதமானது. உங்களுக்கு உகந்த மகான்களை நீங்கள் தேர்ந் தெடுத்துக் கொள்வதற்கு முழுமையான சுதந்திரத்தை இது அளிக்கிறது. இவர்களுள் எந்த மகானையோ ஆச்சாரியரையோ உங்கள் வழிகாட்டியாக, வழிபாட்டிற்கு உரியவராக நீங்கள் ஏற்றுக்கொள்ளலாம்; அது மட்டுமல்ல, நீங்கள் தேர்ந்தெடுப் பவரே மகான்களுள் மிக மேலானவர், அவதார புருஷர்களுள் மிக உயர்ந்தவர் என்று நினைக்கவும் அனுமதிக்கப்பட்டிருக் கிறது; அதில் தவறில்லை. ஆனால் அதற்குப் பின்னணியாக

---

1. அவதாரா ஹ்யஸங்க்யேயா: ॥ —பாகவதம், 1.3.26

உறுதியான, நிரந்தரமான தத்துவ உண்மைகள் இருக்க வேண்டும். ஓர் ஆச்சரியகரமான உண்மை என்னவென்றால், நமது அவதார புருஷர்களின் மதிப்பெல்லாம், அவர்களின் வாழ்க்கை வேத உண்மைகளுக்கு விளக்கமாக அமையும்போது மட்டுமே. ஸ்ரீகிருஷ்ணரின் பெருமையெல்லாம், அவர் நமது சனாதன தர்மத்தின் கொள்கைகளை மிகச் சிறப்பாகப் போதித்தவர் என்பதிலும், இந்தியாவில் இதுவரை வாழ்ந்த வேதாந்த ஆச்சாரியர்களுள் மிகச் சிறந்தவர் என்பதிலும்தான் இருக்கிறது.

உலகின் கவனத்திற்கு வேதாந்தம் விடுக்கின்ற இரண்டாவது கருத்து: உலக சாஸ்திரங்கள் அனைத்திலும் வேதாந்த போதனைகள் மட்டுமே, இக்கால விஞ்ஞானத்தின் புறவுலக ஆராய்ச்சி முடிவுகளோடு முழுக்கமுழுக்க இயைபு உடையதாக உள்ளது. அடிப்படை, பரஸ்பரத் தொடர்பு, மற்றும் உறவு இவற்றைப் பொறுத்தவரை ஒரே மூலத்தைக் கொண்ட இரண்டு மனங்கள் வரலாற்றின் மங்கலான கடந்தகாலத்தில் வெவ்வேறு பாதைகளில் புறப்பட்டன. ஒன்று புராதனமான இந்து மனம், மற்றொன்று புராதனமான கிரேக்க மனம். இந்துக்கள் அகவுலகத்தை ஆராய்வதன்மூலம் பயணத்தைத் தொடங்கினார்கள், கிரேக்கர்கள் புறவுலகத்தை ஆராய்வதன்மூலம், அப்பாலுள்ள அந்த லட்சியத்தை நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடங்கினர். மனங்களின் பயண வரலாறுகள் எவ்வளவோ வேறுபாடுகளை உடையதாக இருந்தாலும், அந்த இரண்டு வகையான சிந்தனை அலைகளும் அப்பாலுள்ள அந்த லட்சியத்தின் ஒரேமாதிரியான எதிரொலிகளையே எழுப்புகின்றன; இதனை நாம் எளிதாக அறிய முடிகிறது. தற்கால விஞ்ஞானத்தின் முடிவுகள் வேதாந்திகள் அல்லது இந்துக்களின் மதத்தோடுதான் இயைபாகப் பொருந்துவதாகத் தோன்றுகிறது. தற்கால விஞ்ஞானம் தன் முடிவுகளை வைத்துக் கொண்டு, அதே நேரத்தில் வேதாந்தத்தின் முடிவுகளின் வாயிலாக ஆன்மீகத்தையும் நாடலாம் என்றே தோன்றுகிறது. இன்றைய விஞ்ஞானத்தின் முடிவுகள் நெடுங்காலத்திற்கு முன் வேதாந்தம் கண்ட முடிவே என்றுதான், நமக்கு மட்டுமல்லாமல் ஆராய்ச்சியில் விருப்பம் உள்ள அனைவருக்கும் தோன்றுகிறது. ஒரு வித்தியாசம் என்னவென்றால், இன்றைய விஞ்ஞானம் தூல மொழியில் (Language of Matter) எழுதப்பட்டுள்ளது.

தற்கால மேலை நாட்டறிஞர்களை வேதாந்தம் கவர்வதற்கான மற்றொரு காரணம், வேதாந்தத்தின் அற்புதமான

பகுத்தறிவுக் கொள்கை (Rationalism). வேதாந்தத்தின் முடிவுகள் மிகவும் ஆச்சரியமான வகையில் அறிவுபூர்வமாக இருப்பதாக இன்றைய மிகச் சிறந்த மேலை நாட்டு அறிஞர்கள் பலர் என்னிடம் கூறினர். அவர்களுள் ஒருவரை எனக்கு நெருக்கமாகத் தெரியும். உண்பதற்கோ தன் ஆராய்ச்சிக்கூடத்தை விட்டு வெளியே செல்வதற்கோகூட நேரமில்லாத அவர் என் வேதாந்தச் சொற்பொழிவுகளைக் கேட்பதற்காக மணிக்கணக்கில் காத்திருப்பார். வேதாந்தம் மிகவும் அறிவுபூர்வமானது; காலத்தின் தேவையை முழுக்கமுழுக்க அது பூர்த்தி செய்கிறது; தற்கால விஞ்ஞானம் வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்ற முடிவுகளுடன் அப்படியே இயைந்திருக்கிறது என்பார் அவர்.

மத ஒப்புமையிலிருந்து (Comparative Religion) பெறப்பட்டுள்ள அத்தகைய இரண்டு விஞ்ஞான முடிவுகள் மீது உங்கள் கவனத்தைச் சிறிது திருப்ப விரும்புகிறேன் — ஒன்று, மதங்களின் சமரசம்; மற்றொன்று, எல்லாம் ஒன்றே என்னும் கொள்கை (Oneness of things). பாபிலோனிய வரலாற்றிலும் யூத வரலாற்றிலும் ஒரு சுவையான விஷயத்தை நாம் காணலாம். பாபிலோனியர்களும் யூதர்களும் பல்வேறு குழுக்களாகப் பிரிந்துள்ளனர். ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தெய்வம் உண்டு. இந்தத் தெய்வங்கள் பெரும்பாலும் ஒரு பொதுவான பெயரைப் பெற்றிருந்தனர். பாபிலோனியர்களின் தெய்வங்கள் பால் என்று வழங்கப்பட்டனர். இவர்களுள் பால் மெரோடக் தலைமை தெய்வம். நாளடைவில் இந்தக் குழுக்களில் ஒன்று மற்றவற்றை வென்று, அவற்றைத் தன்னுடன் சேர்த்துவிட்டது. அதன் விளைவாக, வென்ற குழுவின் தெய்வம் எல்லா குழுக்களின் தெய்வங்களுக்கும் தலைமை தெய்வமாகிவிடுவார். இவ்வாறு தான், இன்று தம்பட்டம் அடித்துக் கொள்வதான, செமிட்டிக் இனத்தின் ஒரே கடவுள் கொள்கை (Monotheism) உருவாகியது.

யூதர்களின் தெய்வங்கள் மொலாக் என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். இவர்களுள் இஸ்ரேல் என்னும் குழுவிற்குச் சொந்தமானவர் மொலாக்-யஹ்வா அல்லது மொலாக்-யாவே என்று அழைக்கப்பட்டார். காலப்போக்கில் இஸ்ரேல் குழு அதே இனத்தைச் சேர்ந்த மற்ற குழுக்களை வென்று, அவர்களின் மொலாக்குகளை எல்லாம் அழித்துத் தங்கள் சொந்த மொலாக்தான் மொலாக்குகள் அனைவரிலும் உயர்ந்தவர் என்று அறிவித்தது. இத்தகைய ஒரு மத வெற்றிக்காகச் சிந்தப்பட்ட ரத்த வெள்ளமும், நடத்தப்பட்ட

கொடுமைகளும், செய்யப்பட்ட கொடூரத்தனங்களும் எவ்வளவு என்பது உங்களுள் பலருக்கும் தெரியும். பிற்காலத்தில் பாபிலோனியர்கள் இஸ்ரேலியர்களின் மொலாக்-யஹ்வாவின் தலைமையை அழிக்க முயன்றார்கள், ஆனால் முடியவில்லை.

மத விஷயங்களில் தங்களை நிலைநிறுத்திக் கொள்வதற்காகப் பல்வேறு குழுக்கள் நிகழ்த்திய இத்தகைய போராட்டம் இந்திய எல்லைக்குள்ளும் நடந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இங்கும் ஆரியர்களின் பல்வேறு இனங்களுக்குள் தங்கள் தெய்வங்களின் தலைமைக்காகக் கருத்துவேற்றுமைகள் நிலவியிருக்கலாம். ஆனால் இங்கு நிகழ்ந்தது வேறு. இந்திய வரலாறு யூதர்களின் வரலாற்றிலிருந்து மாறுபட்டதாக இருக்க வேண்டியிருந்தது. மற்ற நாடுகள் எதைவிடவும் சகிப்புத் தன்மைக்கும் ஆன்மீகத்திற்கும் இருப்பிடமான நாடாக இந்தியா மட்டுமே இருக்க வேண்டியிருந்தது. எனவே இனச் சண்டைகள் இங்கு நெடுங்காலம் நீடிக்கவில்லை.

வரலாறு எட்ட முடியாத, பாரம்பரியங்கள் தங்கள் பார்வையைச் செலுத்தத் துணியாத அளவிற்கு மிகத் தொலைவான, அடர்ந்ததான அந்தப் பழங்காலத்தில் இந்தியாவில் தோன்றிய மகத்தான ரிஷிகளுள் ஒருவர், 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி—இருப்பவர் ஒருவரே, ரிஷிகள் அவரைப் பல வாறாக அழைக்கிறார்கள்' என்று கூறினார். இது, இதுவரை கூறப்பட்ட வாக்கியங்களுள் நினைவில் நிறுத்த வேண்டிய ஒன்றும், இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மகத்தான உண்மைகளுள் மிகச் சிறந்த உண்மையும் ஆகும். இந்துக்களாகிய நமக்கு இந்த உண்மை, தேசிய வாழ்வின் முதுகெலும்பாக அமைந்துள்ளது. ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி என்கின்ற இந்த ஒரு கருத்து நமது தேசிய வாழ்வில் எத்தனையோ நூற்றாண்டுகளைக் கடந்து நம்மிடம் வந்துள்ளது; காலந்தோறும் அளவிலும் நிறைவிலும் புதிய வேகம் பெற்று இன்று அது நமது தேசிய வாழ்வில் இரண்டற ஒன்றுபட்டுள்ளது, ரத்தத்தில் ரத்தமாகக் கலந்து நம்மில் ஒன்றாகியுள்ளது. இந்த உண்மை நம் ரத்தக்குழாய்தோறும் ஓடிக் கொண்டிருக்கிறது; நம் நாடு மத சகிப்புத்தன்மையின் மகத்தான நிலமாக ஆகிவிட்டது. இங்கே, இந்த நாட்டில் மட்டுமே மக்கள் தங்கள் மதத்தையே இகழ வந்த மதங்களுக்கும் கோயில்களும் சர்ச்சுகளும் கட்டித் தருகின்றனர். இந்த மகத்தான ஒரு கருத்தைத்தான் உலகம் நம்மிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது.

மேலை நாடுகளில் எந்த அளவிற்குச் சகிப்பற்ற தன்மை நிலவுகிறது என்பதுபற்றி உங்களுக்குப் பெரிதாக எதுவும் தெரியாது. அங்கேயே உயிரைவிட நேருமோ என்றுகூட நான் பலமுறை நினைக்கின்ற அளவிற்கு அங்கே மதச் சகிப்பின்மை தலைவிரித்தாடுகிறது. மதத்திற்காக ஒரு மனிதனைக் கொல்வது என்பது அங்கே சர்வ சாதாரணமான ஒன்று. தங்கள் நாகரீகத்தைப்பற்றிப் பெருமையடித்துக் கொள்கின்ற அவர்கள், அதையும் ஒரு நாகரீகமாகச் சொல்லி, இன்று இல்லாவிட்டால் நாளைக்குச் செய்யலாம். மேலைநாட்டில், நாடு ஏற்றுக் கொண்டுள்ள மதத்திற்கு எதிராக யாராவது ஒரு வார்த்தை சொன்னால் போதும், அவன் மிகக் கொடூரமான வகையில் சமுதாயத்தைவிட்டு விலக்கப்படுவான். அவர்கள் நமது ஜாதி முறைகளைப்பற்றிச் சரளமாக அதேவேளையில் நயமாகக் குறை கூறுவார்கள். நீங்கள் மேலைநாடுகளுக்குச் சென்று என்னைப்போல் அங்கே சில ஆண்டுகள் வாழ்ந்து பாருங்கள். மிகப்பெரிய பேராசிரியர்கள் என்று நீங்கள் கேள்விப்படுகின்ற சிலர்கூட மதத்தைப்பற்றித் தாங்கள் கொண்டுள்ள கருத்தில், நூற்றில் ஒரு பங்கைக்கூட வெளியே சொல்வதற்குத் தைரியம் இல்லாத வடிகட்டின கோழைகளாக இருப்பதைக் காண்பீர்கள்.

இந்தச் சகிப்புத்தன்மை என்னும் மகோன்னதமான கருத்திற்காக உலகம் காத்திருக்கிறது. நாகரீகத்திற்கு அது ஒரு மகத்தான செல்வமாக விளங்கும்; அது மட்டுமல்ல, இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளாமல் எந்த நாகரீகமும் நீண்ட காலம் வாழ முடியாது. வெறியும் ரத்த வெள்ளமும் கொடூரமும் நிறுத்தப் படாமல் எந்த நாகரீகமும் வளர முடியாது. மனிதர்கள் ஒருவருக் கொருவரை அன்புணர்வுடன் அணுகாதவரை எந்த நாகரீகமும் தலைநிமிர முடியாது. மிகவும் தேவையான அந்த அன்புணர்வின் முதல் படி, பிற மதக் கருத்துக்களை அன்போடும் கனிவோடும் பார்ப்பதாகும். அன்புணர்வுடன் இருந்தால் மட்டும் போதாது, நமது மதக் கொள்கைகளும் நம்பிக்கைகளும் எவ்வளவுதான் வேறுபட்டதாக இருந்தாலும், அந்த மதங்களுக்கு ஊக்கத்துடன் உதவவும் வேண்டும். சற்றுமுன்பு நான் கூறியதுபோல் இந்தியாவில் அதையே இப்போது செய்து கொண்டிருக்கிறோம். இங்கே இந்தியாவில்தான் இந்துக்கள் கிறிஸ்தவர்களுக்கு சர்ச்சுகளும், முகமதியர்களுக்கு மசூதியும் கட்டித் தந்தனர்; இன்றும் கட்டித் தருகின்றனர். அதுதான் செய்யப்பட வேண்டிய காரியம். அவர்கள் நம் மீது காட்டுகின்ற

வெறுப்பு, கொடூரங்கள், அவர்களின் கொடுமைகள், ஆதிக்க வெறி இவற்றிற்கு இடையிலும், நம்மைப்பற்றிப் பேசும் இழிவான பேச்சுக்களுக்கு இடையிலும், நாம் அவர்களை அன்பினால் வெற்றிகொள்ளும்வரை, நிச்சயம் கிறிஸ்தவர்களுக்குச் சர்ச்சுகளையும் முகமதியர்களுக்கு மசூதிகளையும் கட்டிக் கொடுப்போம்; கொடுத்துக்கொண்டே இருப்போம். அன்பு மட்டுமே நிலைக்கக்கூடிய ஒன்று, வெறுப்பு அல்ல; மென்மை தான் நெடுங்காலம் வாழ்வதற்குரிய வலிமையையும் பலனையும் தரவல்லது அன்றி, வெறும் காட்டுமிராண்டித்தனமோ உடம்பின் வலிமையோ அல்ல என்பதை உலகத்திற்கு நிரூபிக்கும் வரை நாம் இவ்வாறு செய்து கொண்டே இருக்க வேண்டும்.

நம்மிடமிருந்து இன்றைக்கு உலகம் பெற விரும்புகின்ற மற்றொரு மகத்தான கருத்து, உலகம் முழுமையின் ஆன்மீக ஒருமை (Spiritual Oneness) ஐரோப்பாவின் சிந்தனையாளர்களுக்கு, இல்லை, இந்த உலகம் முழுவதற்கும்—உயர்ந்தோரைவிடத் தாழ்ந்த பிரிவினருக்கு, பண்பட்டோரைவிடப் பாமரருக்கு, படித்தவர்களைவிடப் படிக்காதவர்களுக்கு, பலசாலிகளைவிடப் பலவீனருக்கு—தேவையானது இந்தக் கருத்தே. மேலை நாட்டின் தற்கால ஆராய்ச்சிகள், தூல உபகரணங்கள் மூலமே பிரபஞ்சத்தின் ஒருமைப்பாட்டையும், பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள எல்லாமே ஒன்றையொன்று சார்ந்திருப்பதையும் நிரூபித்துள்ளது. ஜடப்பொருள் நிலையில் நீங்கள், நான், சூரியன், நட்சத்திரங்கள் எல்லாமே எல்லையில்லாத ஒரே ஜடப்பொருட்கடலில், சின்னஞ்சிறு அலைகளாகவோ அலைத் தொகுதிகளாகவோ இருக்கிறோம்; அது போலவே உடம்பும் மனமும் ஜடப்பொருளாகிய கடலில் சின்னஞ்சிறு அலைகளே, அதாவது பெயர்வேறுபாடே என்பதை நெடுங்காலத்திற்கு முன்பே இந்திய மனஇயல் காட்டியுள்ளது. வேதாந்தம் இதற்கும் ஒரு படி மேலாகச் சென்று, இந்தப் பிரபஞ்சத்தின் ஒருமைப் பாட்டுக் கருத்தின் பின்னணியில் மகத்தான, ஒன்றேயான உண்மை ஆன்மா இருக்கிறது என்பதைக் காட்டியிருக்கிறது. இவற்றையெல்லாம் சென்னைப் பல்கலைக் கழகப் பட்டதாரிகளாகிய உங்களுக்கு நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. பிரபஞ்சம் முழுவதிலும் ஒரே ஓர் ஆன்மாதான் உள்ளது, இருப்பவை எல்லாம் ஒன்றே.

பிரபஞ்சம் முழுமையின் இந்த அடிப்படை ஒருமைப் பாட்டுக் கருத்து இந்த நாட்டில்கூடப் பலரைப் பயமுறுத்தி

இருக்கிறது. இன்றும் சிலநேரங்களில் அந்தக் கருத்தை ஆதரிப்பவர்களைவிட எதிர்ப்பவர்களே அதிகம் உள்ளனர். என்றாலும் நான் உங்களுக்குச் சொல்கிறேன்: புத்துயிர் அளிக்கின்ற இந்த ஒரு மகத்தான கருத்தைத்தான் இன்றைக்கு உலகம் நம்மிடம் வேண்டி நிற்கிறது. தங்கள் உரிமைக்காகக் குரல் எழுப்ப முடியாத பாமர மக்களின் விடிவிற்கு இந்தக் கருத்துதான் தேவை. அனைத்தின் இந்த ஒருமைப்பாட்டுக் கருத்தை நடைமுறையிலும் அன்றாட வாழ்க்கையிலும் செயல்படுத்தாமல் யாராலும் நமது நாட்டில் முன்னேற்றத்தைக் கொண்டு வர முடியாது.

எதையும் ஆராய்ச்சிக் கண்ணுடன் அணுகுகின்ற மேலை நாடு தன் தத்துவம், நீதிநெறி முதலிய அனைத்திற்கும் ஆதாரமான பகுத்தறிவை ஆர்வத்துடன் தேடுகிறது. எவ்வளவு மகத்தானவர்களாக இருந்தாலும் தெய்வீகமானவர்களாக இருந்தாலும், ஒரு தனிமனிதனின் ஒப்புதலினால் மட்டுமே நீதிநெறியை உண்டாக்க முடியாது என்பது உங்களுக்கு நன்றாகவே தெரியும். நீதிநெறிக்கு இத்தகைய ஆதாரத்தை உலகின் சிந்தனையாளர்கள் யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். நீதிநெறியும் ஒழுக்க விதிகளும் மக்களைக் கட்டுப்படுத்த வேண்டுமானால், மனித ஆதாரத்தைவிடச் சற்று மேலான ஆதாரம் ஏதாவது வேண்டும் என்று அவர்கள் கேட்கிறார்கள். நிரந்தரமான சில உண்மைத் தத்துவம் இந்த நீதிநெறிக்கு ஆதாரமாக அமைய வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். உங்களிலும், என்னிலும், எல்லோரின் மனத்திலும், உயிரிலும் உறைவதான அந்த எல்லையற்ற ஒரே உண்மையிலிருந்து அல்லாமல், அந்த நிரந்தர ஆதாரத்தை வேறு எங்கே காண முடியும்? ஆன்மாவின் எல்லையற்ற ஒருமையே எல்லா ஒழுக்க விதிகளின் ஆதாரமாகும். மனிதனின் முக்திக்கான போராட்டத்தைப்பற்றிச் சொல்கின்ற ஒவ்வொரு நூலும் கூறி வந்துள்ளதே அதுபோல் நீங்களும் நானும் சகோதரர்கள் என்பது மட்டுமல்ல, உண்மையில் நீங்களும் நானும் ஒன்றே. இதுதான் இந்தியத் தத்துவத்தின் ஆணித்தரமான கருத்து. இந்த ஒருமைதான் எல்லா நீதிநெறிக்கும் ஆன்மீகத்திற்கும் அடிப்படை. இது நமது பாமர மக்களுக்கு எவ்வளவு அவசரமாகத் தேவையோ, அவ்வளவு அவசரமாக ஐரோப்பியர்களுக்கும் தேவைப்படுகிறது. இங்கிலாந்திலும் பிரான்சிலும் அமெரிக்காவிலும் இன்று உருவாகி வருகின்ற நவீன அரசியல் மற்றும் சமுதாய மலர்ச்சிகளுக்கு, அவர்கள்

அறியாமலே, இந்த மகத்தான கருத்துதான் அடிப்படையாக இருக்கிறது.

நண்பர்களே, நன்றாகத் தெரிந்துகொள்ளுங்கள். தனி மனித முக்திக்காகவும், சர்வ முக்திக்காகவும் மனிதனின் போராட்டத்தைப்பற்றிக் கூறுகின்ற எல்லா நூல்களிலும் இந்திய வேதாந்தக் கருத்துக்கள் மிகவும் அதிகமாகக் காணப் படுகின்றன. அவற்றை எழுதியவர்களுள் சிலருக்குத் தாங்கள் எழுதியுள்ளவற்றின் மூலகாரணம் எது என்பது தெரியவில்லை. சிலரோ அவை தங்கள் சொந்தக் கருத்துக்கள்போல் தோன்று கின்ற அளவிற்கு எழுதியுள்ளனர். தைரியமும் நன்றியுணர்வும் கொண்ட ஒரு சிலர் மட்டுமே மூல நூலைக் குறிப்பிட்டுத் தங்கள் நன்றியைச் செலுத்தியுள்ளனர்.

நான் அளவுக்கு அதிகமாக அத்வைதத்தைப் போதிப்பதாக வும் பக்தியைப்பற்றிக் குறைவாகவே கூறுவதாகவும் குற்றம் சாட்டப்படுவதை அமெரிக்காவில் இருந்தபோது கேள்விப்பட் டேன். துவைத நெறிகளிலும் அதன் பக்திக் கொள்கைகளிலும் வழிபாட்டிலும் உள்ள பிரேம பக்தியும் பரவச நிலைகளும் அவை தருகின்ற எல்லையற்ற ஆனந்தமும் எனக்கு நன்றாகவே தெரியும். அவை எல்லாவற்றையுமே நான் அறிவேன். ஆனால் நமக்கு இது அழுவதற்கான நேரமல்ல. ஆனந்தக் கண்ணீர்கூட இப்போது கூடாது. போதுமான அளவு நாம் அழுதாயிற்று. மென்மையானவர்கள் ஆவதற்கு இது தருணம் அல்ல. மென்மை மென்மை என்று நாம் வெறும் பஞ்சுப் பொதிகளாகிவிட்டோம், பிணங்களாக மாறிவிட்டோம். நமது நாட்டிற்கு இப்போது வேண்டுவது இரும்பாலான தசையும், எஃகாலான நரம்புகளும், அவற்றுடன், இந்தப் பிரபஞ்சத்தின் உண்மைகளையும் ரகசியங் களையும் ஊடுருவிப் பார்க்கவும், அவசியமானால் அதற்காகக் கடலின் அடியாழம்வரை சென்று மரணத்தையும் நேருக்கு நேராகச் சந்திக்கக்கூடிய மகத்தான சக்தி வாய்ந்த, யாராலும் தடுக்க முடியாததான சங்கல்பமும் (Will) தான் நமக்கு இப்போது தேவை. நமக்குத் தேவையானது இதுதான். இதனை உருவாக்கி நிலைநிறுத்தி பலப்படுத்த, எல்லாம் ஒன்றே என்பதான அந்த அத்வைத லட்சியத்தை நன்குணர்ந்து, அதனை அனுபவத்தில் கொண்டு வருவதால்தான் முடியும்.

நம்பிக்கை, நம்பிக்கை, நம்மிடம் நம்பிக்கை, நம்பிக்கை, இறைவனிடம் நம்பிக்கை இதுவே மகோன்னதத்தின் ரகசியம். உங்களுடைய புராண தெய்வங்கள் முப்பத்து முக்கோடி

பேரிடமும், வெளி நாட்டினர் அவ்வப்போது உங்களிடம் திணிக்கின்ற அனைத்து தெய்வங்களிடமும் நம்பிக்கை வைத்து, அதே வேளையில் உங்களிடமே உங்களுக்கு நம்பிக்கையில்லை என்றால் உங்களுக்குக் கதிமோட்சமில்லை. உங்களிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். அந்த நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு எழுந்து நில்லுங்கள், வலிமை உடையவர்களாக இருங்கள். நமக்குத் தேவைப்படுவது இதுதான்.

வருவோரும் போவோருமான, விரல்விட்டு எண்ணக் கூடிய அன்னியர் சிலர் முப்பத்து மூன்று கோடி மக்களாகிய நம்மை மிதித்து அரசாளக் காரணம் என்ன? அவர்களுக்குத் தன்னம்பிக்கை இருந்தது, நமக்கு இல்லை. மேலை நாட்டில் நான் என்ன கற்றுக் கொண்டேன்? மனிதன் பாவி, இழிந்தவன் என்று திருப்பித்திருப்பிச் சொல்கின்ற கிறிஸ்தவ மதப் பிரிவு களின் வெற்று உபதேசங்களுக்குப் பின்னால் நான் கண்டது என்ன? மனிதர்கள் தங்களிடமே கொண்டுள்ள நம்பிக்கையாகிய மாபெரும் சக்தி ஐரோப்பா மற்றும் அமெரிக்காவின் தேசிய நீரோட்டத்தின் மையத்தில் ததும்பி நிற்பதுதான் எனக்குத் தெரிந்தது. 'நான் ஆங்கிலேயன், என்னால் எதையும் செய்ய முடியும்' என்றே ஆங்கிலேயச் சிறுவன் ஒருவன் சொல்வான். அமெரிக்கச் சிறுவனும் இதையே சொல்வான், ஐரோப்பா விலுள்ள எந்தச் சிறுவனும் இதையேதான் சொல்வான். ஆனால் இங்குள்ள நம் சிறுவர்கள் இதைச் சொல்வார்களா? மாட் டார்கள். சிறுவர்கள் ஏன், அவர்களின் தந்தையரே சொல்ல மாட்டார்கள். நாம் தன்னம்பிக்கையை இழந்து விட்டோம். எனவே தங்கள் சொந்த ஆன்மாவின் மகிமையை மக்களுக்குக் காட்டுவதற்கும் அவர்களுடைய இதயத்தில் உறைந்துள்ள ஆற் றலைக் கிளர்ந்தெழச் செய்வதற்கும் வேதாந்தத்தின் அத்வைதக் கருத்தை உபதேசித்தேயாக வேண்டும். அதனால்தான் நான் அத்வைதத்தைப் போதித்தேன். வேதாந்த மதத்தைச் சார்ந்தவன் என்ற ஒரு பிரிவு மனப்பான்மையுடன் அதை நான் கூறவில்லை; அது மிகப் பரந்த அளவில் உலகம் முழுவதிலும் ஒப்புக் கொள்ளப்படுவதான ஒன்று என்பதால்தான் கூறினேன்.

துவைதியையோ விசிஷ்டாத்வைதியையோ வருத்தமுறச் செய்யாமல் எளிதாக ஓர் இணைப்பு வழியைக் கண்டறிய முடி யும். கடவுள் நம்முள் இருக்கிறார், எல்லாவற்றிலும் தெய்வீகம் உறைகிறது என்ற கொள்கை இல்லாத ஒரு நெறிகூட இந்தியாவில் இல்லை. தூய்மையும் பூரணத்துவமும் வலிமையும்

எல்லாமே நம் ஆன்மாவில் முழுமையாக இருக்கிறது என்பதை எல்லா வேதாந்த நெறிகளும் ஏற்றுக் கொள்கின்றன. இந்தப் பூரணத்துவம் சில வேளைகளில் சுருங்குவது போலவும் சில நேரங்களில் விரிவது போலவும் ஆகிறது, ஆனாலும் அது இருக்கவே செய்கிறது என்று வேதாந்தத்தின் சில நெறிகள் கூறுகின்றன. அத்வைதத்தின்படி அது சுருங்குவதும் இல்லை, விரிவதும் இல்லை; அவ்வப்போது மறைக்கப்படவும், மீண்டும் மறைப்பு விலக்கப்படவும் செய்கிறது. ஏறக்குறைய விஷயம் ஒன்றுதான். ஒன்று மற்றொன்றைவிடச் சற்று தர்க்கரீதியானதாக இருக்கலாம், ஆனால் விளைவும் நடைமுறை விளக்கங்களும் ஒன்றுபோலவே உள்ளன. இந்த ஒரு முக்கியக் கருத்தே இப்போது உலகத்திற்குத் தேவையாக உள்ளது; மற்ற இடங்களை விட நம் நாட்டிற்குத்தான் இதன் தேவை அதிகமாக உள்ளது.

நண்பர்களே, வருத்தம் தரக்கூடிய சில உண்மைகளை உங்களுக்கு சொல்லியே ஆகவேண்டும். நம் இந்தியன் ஒருவன் ஓர் ஆங்கிலேயனால் கொலை செய்யப்பட்டான் என்றோ கேவலமாக நடத்தப்பட்டான் என்றோ பத்திரிகையில் வருகிறது. உடனே நம் நாடு முழுதும் கூக்குரல்கள் எழுகின்றன. நானும் படிக்கிறேன், அழுகிறேன். அடுத்த வினாடியே இதற்கெல்லாம் யார் பொறுப்பு என்ற கேள்வி என் மனத்தில் எழுகிறது. ஒரு வேதாந்தி என்ற முறையில் எனக்குள்ளே இந்தக் கேள்வியைக் கேட்காமல் இருக்க என்னால் முடியாது. இந்து தனக்குள் மூழ்குபவன். அவன் தனக்குள்ளும், தன் மூலமும், தன்னை அடிப்படையாகக் கொண்டுமே எதையும் பார்க்க விரும்புகிறான். எனவே என்னையே நான் கேட்டுக் கொள்கிறேன்—இதற்கு யார் பொறுப்பு? எனக்கு ஒவ்வொரு முறையும் கிடைக்கின்ற பதில் இதுதான்: ஆங்கிலேயர்கள் அல்ல, அவர்கள் பொறுப்பல்ல; நமது எல்லா துன்பங்களுக்கும் எல்லா இழிவுகளுக்கும் நாம், நாம் மட்டுமே பொறுப்பாளிகள்.

பிரபுத்துவ வெறி பிடித்த நமது முன்னோர்கள் இந்த நாட்டுப் பாமர மக்களைத் தங்கள் காலின் கீழிட்டு மிதித்துக் கொடுமைப்படுத்தினார்கள். பாவம் அவர்களுக்கு எந்த உதவியும் இல்லை. காலப்போக்கில் அந்த ஏழைகள் தாங்கள் மனிதர்கள் என்பதையே மறந்து விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். பல நூற்றாண்டுகளாக அவர்கள் வெறும் விறகுவெட்டிகளாகவும் தண்ணீர் இறைப்பவர்களாகவுமே

வாழ்வதற்குக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். விளைவு? அவர்கள் தங்களைப் பிறவி அடிமைகள் என்றும் விறகு வெட்டவும் தண்ணீர் இறைக்கவும் மட்டுமே பிறந்தவர்கள் என்றும் நம்பவே தொடங்கி விட்டார்கள். இன்றைய நவீனக் கல்வியைப்பற்றி இவ்வளவு பெருமையடித்துக் கொள்கிறோம். ஆனால் யாராவது அவர்களுக்குப் பரிந்து ஒரு வார்த்தை சொன்னாலும், தாழ்த்தப்பட்ட அந்த அப்பாவிகளைக் கைதூக்கி விடுவதான கடமையை விட்டுவிட்டு, நம் மக்கள் பின்வாங்குவதையே நான் காண்கிறேன். முட்டாள்தனமான சில பரம்பரைக் காரணங்கள், அவை போன்ற சில மேலை நாட்டு உளறல்கள், இவற்றிலிருந்த சில காட்டுமிராண்டித் தனமான, மிருகத்தனமான வாதங்கள்— இவையெல்லாம் அந்த ஏழைகளை மேலும் அடக்கி ஒடுக்குவதற்காக முன்வைக்கப் படுகின்றன.

அமெரிக்காவின் சர்வமத மகாசபையில் நீக்ரோ இளைஞன் ஒருவன் கலந்து கொண்டான். உண்மையான ஆப்ரிக்க நீக்ரோ அவன். அழகாகப் பேசினான். அவனிடம் பேச வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. எனவே அவ்வப்போது பேசினேன். ஆயினும் அவனைப்பற்றி எதையும் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஒருமுறை இங்கிலாந்தில் இருந்தபோது சில அமெரிக்கர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர்கள் அவனைப்பற்றிக் கீழ்வரும் செய்தியைச் சொன்னார்கள்: அந்த இளைஞன் மத்திய ஆப்ரிக்காவில் வாழ்ந்த ஒரு நீக்ரோ இனத் தலைவனின் மகன். ஒருநாள் மற்றோர் இனத்தின் தலைவன் அந்த இளைஞனின் தந்தைமீது கோபம்கொண்டு அவனது தந்தையையும் தாயையும் கொன்றுவிட்டான். கொன்றதுடன் தின்றும் விட்டான். குழந்தையையும் கொன்று சமைக்கக் கட்டளையிட்டான் அவன். ஆனால் சிறுவன் தப்பிவிட்டான். பல பயங்கர இன்னல்களை அனுபவித்து, பல நூறு மைல்கள் பயணம் செய்து கடற்கரையை அடைந்தான். பின்னர் அமெரிக்கக் கப்பல் ஒன்றில் அமெரிக்கா கொண்டு வரப்பட்டான். அந்தப் பையன்தான் அவ்வளவு சிறப்பாக உரையாற்றினான்! அதைக் கேட்ட பிறகு உங்கள் பரம்பரை வாதத்தைப்பற்றி என்னதான் எண்ண இருக்கிறது?

ஏ பிராமணர்களே, பரம்பரை காரணமாக பிராமணர்களுக்குக் கீழ்ஜாதியினரைவிட நன்றாகப் படிக்கின்ற திறமை இருக்கிறது என்றால், பிராமணர்களின் படிப்பிற்காக எந்தப்

பணமும் இனி செலவழிக்காதீர்கள்; எல்லாவற்றையும் கீழ் ஜாதியினருக்காகச் செலவிடுங்கள். உதவியற்றவர்களுக்குக் கொடுங்கள். ஏனெனில் அவர்களுக்குத்தான் எல்லா செல்வமும் தேவைப்படுகிறது. பிராமணன் பிறவியிலேயே அறிவாளி என்றால் எந்த உதவியும் இல்லாமல் அவனே படித்துக்கொள்ள முடியும். பிறவியிலேயே அறிவாளி அல்லாத பிறர் எல்லா போதனைகளையும் ஆசிரியர்களையும் பெறட்டும். இதுதான் நான் புரிந்துகொண்ட நீதியும் பகுத்தறிவுமாகும்.

நமது ஏழைகளும் தாழ்த்தப்பட்ட இந்தப் பாமர ஜனங்களும்தான் உண்மையில் தாங்கள் யார் என்பதைக் கேட்கவும் அறிந்து கொள்ளவும் வேண்டியிருக்கிறது. ஜாதி-குலம், பலம்-பலவீனம் போன்ற எவ்விதப் பாகுபாடுமின்றி ஒவ்வோர் ஆணும் பெண்ணும் குழந்தையும் இதைக் கேட்கட்டும்: வலிமையானவர்-வலிமையற்றவர், உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்று ஒவ்வொருவரின் உள்ளேயும் அந்த எல்லையற்ற ஆன்மா உள்ளது; மகத்தானவர்களாக, மேலோர்களாக ஒவ்வொருவரும் மாறுவதற்கான எல்லையற்ற வாய்ப்பும் எல்லையற்ற ஆற்றலும் அந்த ஆன்மாவில் உள்ளது என்பதை அவர்கள் தெரிந்துகொள்ளட்டும். 'உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வரான் நிபோதத'[1]. எழுந்திருங்கள், விழித்திருங்கள், லட்சியத்தை அடையும்வரை நில்லாமல் செல்லுங்கள் என்று ஒவ்வொருவரிடமும் முழங்குவோம். எழுந்திருங்கள், விழித்திருங்கள்! பலவீனமாகிய இந்த மனமவசியத்திலிருந்து (Hypnotism) விடுபட்டெழுங்கள். உண்மையில் யாரும் பலவீனர் இல்லை. ஆன்மா எல்லையற்றது, எல்லா ஆற்றல்களும் உடையது, எல்லாம் அறிந்தது. எழுந்து நில்லுங்கள், உங்களை உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள், உங்களுள் உறைகின்ற இறைவனை வெளிப்படுத்துங்கள், அவரை மறுக்காதீர்கள்.

அளவுக்கு அதிகமான சோம்பல், அளவை மீறிய பலவீனம், ஆழ்ந்த மனவசியம் இவை நம் இனத்தின்மீது படிந்துள்ளது, படிந்தவண்ணம் உள்ளது. ஓ தற்கால இந்துக்களே, மன வசியத்திலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள். அதற்கான வழி உங்கள் சாஸ்திரங்களில் உள்ளது. அதைப் படியுங்கள். ஒவ்வொருவருக்கும் அவர்களின் உண்மை இயல்பைப் போதியுங்கள். உறங்கும் ஆன்மாவை எழுப்புங்கள், அது எவ்வாறு

1. கடோபநிடதம், 1. 3. 14—'எழுந்திருங்கள், விழித்திருங்கள், மேலோரை அணுகி உயர் ஞானம் பெறுங்கள்'.

விழித்தெழுகிறது என்பதைப் பாருங்கள். உறங்குகின்ற ஆன்மா மட்டும் விழித்தெழுந்து தன்னுணர்வுடன் (self-conscious) செயலில் ஈடுபடுமானால் சக்தி வரும், பெருமை வரும், நன்மை வரும், தூய்மை வரும், எவையெல்லாம் மேலானதோ அவை அத்தனையும் வரும். கீதையில் நான் விரும்பும் பகுதி ஏதாவது ஒன்று இருக்கிறது என்றால், அதன் சாரமாகவும் சுருக்கமாகவும் உள்ள கண்ணனின் இந்த இரண்டு சுலோகங்கள் தான்— 'யார் எல்லா உயிர்களிலும் பரம்பொருள் சமமாக உறைவதைக் காண்கிறானோ, அழிகின்ற பொருட்களில் அழியாதவரான இறைவனைக் காண்கிறானோ அவனே உண்மையில் காண்கிறான். ஏனெனில் எங்கும் இறைவன் சமமாக உறைவதைக் காண்பவன் ஆன்மாவை (self) ஆன்மாவால் (Self) அழிக்க மாட்டான். இவ்வாறு அவன் உயர் லட்சியத்தை அடைகிறான்.'[1]

இங்கும் இதர நாடுகளிலும் வேதாந்தத்தின்மூலம் பயனுள்ள காரியங்கள் செய்வதற்கு இவ்வாறு மகத்தான வாய்ப்பு உள்ளது. மனித இன வளர்ச்சிக்காகவும் மேன்மைக்காகவும் இந்த அற்புதக் கருத்தை, ஆன்மா ஒன்றே, அது எங்கும் நிறைந்தது என்பதான அற்புதக் கருத்தை இங்கும் பிற இடங்களிலும் பிரச்சாரம் செய்ய வேண்டும். எங்கெல்லாம் தீமை இருக்கிறதோ, எங்கெல்லாம் அறியாமை நிலவுகிறதோ, அஞ்ஞானம் உள்ளதோ அங்கெல்லாம் அவற்றிற்கு மூலகாரணமாகக் காணப்படுவது வேறுபாட்டு உணர்ச்சிகளே. சமத்துவம், பொருட்களின் அடிப்படையாகத் திகழ்கின்ற சம நிலை மற்றும் ஒருமைப்பாடு (One ness)—இவற்றின் மீதுள்ள நம்பிக்கையிலிருந்தே எல்லா நன்மைகளும் பிறக்கின்றன. நம் சாஸ்திரங்கள் இவ்வாறே கூறுகின்றன. என் அனுபவமும் இதையே சொல்கிறது. இதுவே வேதாந்தத்தின் மகத்தான லட்சியம். ஒரு லட்சியத்தைக் கொள்வது என்பது ஒன்று, அதனை அன்றாட வாழ்வின் அனைத்து அம்சங்களிலும் நடைமுறையில் கடைபிடிப்பது என்பது முற்றிலும் வேறான ஒன்று. ஒரு லட்சியத்தைக் காட்டுவது, மிகவும் நல்லதுதான், ஆனால் அதை அடைவதற்கு உரிய செயல்முறை எங்கே இருக்கிறது?

பல நூற்றாண்டுகளாகவே நம் மக்களின் மனத்தை ஆக்கிரமித்திருப்பவையும் வெறுப்படையச் செய்து வருபவையுமான ஜாதி மற்றும் சமூகச் சீர்திருத்தம் பற்றிய கடினமான

---

1. கீதை, 13.28,29.

சில கேள்விகள் இந்த இடத்தில் இயல்பாகவே எழுகின்றன. நான் ஜாதிகளை உடைப்பவனோ, வெறும் சமூகச் சீர்திருத்த வாதியோ அல்ல என்பதை வெளிப்படையாக உங்களிடம் சொல்லிக் கொள்கிறேன். உங்கள் ஜாதிகளிலோ சமூகச் சீர்திருத் தத்திலோ நேரடியாக எனக்கு எந்தத் தொடர்பும் இல்லை. நீங்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவராக வேண்டுமானாலும் இருங்கள். ஆனால் அதற்காக ஏன் மற்றொருவனை, மற்றொரு ஜாதியை நீங்கள் வெறுக்க வேண்டும்? நான் போதிப்பது அன்பு, அன்பு ஒன்றை மட்டுமே. பிரபஞ்சம் முழுவதன் ஆன்மா ஒன்றே, அது எங்கும் நிறைந்தது என்ற மகத்தான வேதாந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டுதான் நான் பிரச்சாரம் செய்கிறேன்.

ஏறக்குறைய கடந்த நூறு ஆண்டுகளாக நமது நாடு சமூகச் சீர்திருத்தவாதிகளாலும் பல வகையான சமுதாயச் சீர்திருத்தத் திட்டங்களாலும் மூழ்கடிக்கப்பட்டு வருகிறது. இந்தச் சீர்திருத்தவாதிகளிடம் என்னால் தவறு எதையும் காண முடியவில்லை. அவர்களுள் பெரும்பாலானோர் நல்லவர்கள், தெளிவான சிந்தனையுடையவர்கள், சில விஷயங்களில் அவர் களது நோக்கங்கள்கூடப் பாராட்டத் தக்கவையாகவே உள்ளன. அதேவேளையில், இந்த நூறு ஆண்டுகளின் சமுதாயச் சீர்திருத்தம் உருப்படியான, பாராட்டத்தக்க, நிலையான எந்த விளைவையும் இந்த நாட்டில் எங்குமே தோற்றுவிக்கவில்லை என்பதும் மறுக்க முடியாத உண்மை. ஆயிரக்கணக்கானோர் மேடையில் முழங்குகிறார்கள். அப்பாவியான இந்துஇனத்தின்மீதும் அதன் நாகரீகத்தின் மீதும் மூட்டைமூட்டையாகக் கண்டனங்கள் சுமத்தப்படுகின்றன. ஆனாலும் நடைமுறையில் எந்த நல்ல பலனையும் காணோம். ஏன்? இதற்கான காரணத்தைக் கண்டுபிடிப்பது அப்படி ஒன்றும் சிரமமான காரியம் அல்ல. அது அவர்களின் கண்டனத்திலேயே உள்ளது. நான் முன்பு கூறியதுபோல், முதலில் காலங்காலமாக நாம் பெற்று வந்துள்ள நமது நாட்டின் பண்பைப் பாதுகாக்க முயல வேண்டும். பிற நாடுகளிலிருந்து பல விஷயங்களை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும், வெளியிலிருந்து பல பாடங்களை நாம் கற்றாக வேண்டும் என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் பெரும்பாலான நமது நவீனச் சீர்திருத்த இயக்கங்கள் சிறிதும் சிந்திக்காமல் மேலை நாடுகளின் வேலை முறைகளைக் காப்பியடிப்பவைகளாக உள்ளன. இது இந்தியாவிற்கு ஏற்றதல்ல

என்பதையும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். அதனால்தான் நமது சமீப காலச் சீர்திருத்த இயக்கங்கள் எதுவும் எந்தப் பலனையும் அளிக்கவில்லை.

இரண்டாவதாக, கண்டனம் ஒருபோதும் நன்மை செய்வதற்கான வழியல்ல. நம்முடைய சமூகத்தில் சில கேடுகள் இருக்கின்றன, இதை ஒரு குழந்தையாலும் காண முடியும். எந்தச் சமூகத்தில்தான் தீமைகள் இல்லை? என் நாட்டு மக்களே, நான் பார்த்த பல்வேறு இன மற்றும் நாட்டு மக்களோடு, நம் மக்களை ஒப்பிட்டபின் நான் கண்ட முடிவை இந்த வேளையில் உங்களோடு பகிர்ந்துகொள்ள ஆசைப் படுகிறேன். அது என்னவென்றால், நம் மக்களே எல்லோரையும்விட மிகவும் ஒழுக்கம் வாய்ந்தவர்கள், மிகவும் தெய்வீகமானவர்கள். நமது சமுதாய அமைப்புக்களே மனித குலத்தை மகிழ்ச்சிகரமாக்க, அமைப்பிலும் நோக்கத்திலும் மிகவும் பொருத்தமானவை. எனவே நான் எந்தச் சீர்திருத்தத்தையும் விரும்பவில்லை. எனது லட்சியம் வளர்ச்சி, விரிவு, தேசியப் பாதையில் முன்னேற்றம். நம் நாட்டின் வரலாற்றைத் திரும்பிப் பார்க்கும்போது, இந்த உலகம் முழுவதிலும் எந்த நாடும் இதைப்போல மனித மனத்தின் வளர்ச்சிக்காக அதிகமான காரியங்களைச் செய்யவில்லை என்பதை நாம் காண முடியும். எனவே என் நாட்டை நிந்திக்கும் எந்த வார்த்தையும் என்னிடம் இல்லை. அவர்களுக்கு நான் சொல்வதெல்லாம், 'நீங்கள் நன்றாகச் செய்திருக்கிறீர்கள், இன்னும் நன்றாகச் செய்ய முயலுங்கள்' என்பதுதான். இந்த நாட்டில் மகத்தான காரியங்கள் கடந்த காலத்தில் செய்யப் பட்டுள்ளன. அதைவிடச் சிறப்பான காரியங்களைச் செய்வதற்கான நேரமும் வாய்ப்பும் இப்போது உள்ளது. எதுவும் செய்யாமல் நம்மால் இருக்க முடியாது என்பது உங்களுக்குத் தெரியும் என்பது உறுதி. எதுவும் செய்யாமலிருந்தால் செத்துப் போவோம். ஒன்று நாம் முன்னே செல்ல வேண்டும் அல்லது பின்னே செல்ல வேண்டும்; முன்னேற வேண்டும் அல்லது வீழ்ச்சி அடைய வேண்டும். கடந்த காலத்தில் நம் முன்னோர்கள் மகத்தான காரியங்களைச் செய்தார்கள். நாமும் வாழ்க்கையை முழுமையாக வாழ்ந்து, அவர்கள் செய்ததைவிட மகத்தான காரியங்களைச் சாதிக்க வேண்டும். இந்த நிலையில் நம்மால் எப்படிப் பின்னே சென்று நம்மையே இழிவுபடுத்திக் கொள்ள முடியும்? அது முடியாது, அப்படிச் செய்யவும் கூட 'து. பின்னால் செல்வது என்பது இந்த நாட்டை நாசத்திற்கும்

மரணத்திற்குமே அழைத்துச் செல்லும். எனவே முன்னேறிச் செல்வோம், மகத்தான காரியங்களைச் செய்வோம். நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியது இதுதான்.

அவ்வப்போதைய தேவைகளை மட்டும் நிறைவேற்று வதான சமூகச் சீர்திருத்தத்தைப் போதிக்கின்ற பிரச்சாரகன் அல்ல நான். தீமைகளை நீக்குவதற்கும் நான் முயலவில்லை, ஆனால் மனித இனத்தின் முன்னேற்றத்திற்காக நமது முன் னோர்கள் மிகவும் சிறப்பாக வகுத்துத் தந்துள்ள திட்டத்தைச் செயல்படுத்த முனைந்து முன் செல்ல வேண்டும் என்று மட்டும் கேட்டுக் கொள்கிறேன். மனிதனின் சார்புத்தன்மை (Solidarity) மற்றும் அவனது தெய்வீக இயல்பு போன்ற வேதாந்த லட்சியத்தை உணர்ந்துகொள்ளப் பாடுபட வேண்டும் என்று மட்டும்தான் கூறுகிறேன்.

எனக்கு நேரம் இருந்திருந்தால், நாம் இப்போது என்ன செய்ய வேண்டும் என்பதைச் சட்டங்களை வகுத்துத் தந்த நமது முன்னோர்கள் எப்படி பல்லாண்டுகளுக்கு முன்பே எழுதி வைத்துள்ளார்கள், நமது தேசிய அமைப்புக்களில் இது வரை நிகழ்ந்துள்ள மாற்றங்களையும் இனி வரப் போகின்ற மாற்றங்களையும் எப்படி அன்றே உணர்ந்திருக்கிறார்கள் என் பதையெல்லாம் மகிழ்ச்சியுடன் எடுத்துச் சொல்லியிருப்பேன். அவர்களும் ஜாதியை ஒழிக்கவே விரும்பினார்கள். ஆனால் அவர்கள் தற்கால மனிதர்களைப் போன்றவர்கள் அல்ல. ஜாதியை ஒழிக்க வேண்டும் என்றால் அதற்காக, நகர மக்கள் அனைவரும் ஓர் இடத்தில் திரண்டு, எல்லோரும் மதுவும் மாட்டிறைச்சியுமாக விருந்துண்டு களிக்க வேண்டும்; முட்டாள் களும் பைத்தியங்களும், அவர்கள் யாரை விரும்புகிறார் களோ அவர்களை எங்கு வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் திருமணம் செய்துகொண்டு இந்த நாட்டை ஒரு பைத்தியக்கார விடுதியாக மாற்ற வேண்டும் என்றெல்லாம் அவர்கள் கூறவும் இல்லை. எத்தனை விதவைகளுக்குக் கணவன் கிடைத்திருக்கிறான் என்பதை வைத்தே ஒரு நாட்டின் வளத்தைக் கணக்கிட வேண்டும் என்று அவர்கள் நம்பவும் இல்லை. அவ்வாறு வளம் பெற்ற ஒரு நாட்டை நான் இனிதான் காண வேண்டும்.

நம் முன்னோர்களின் லட்சிய மனிதனாகத் திகழ்ந் தவன் பிராமணன். நம் சாஸ்திரங்களிலும் இந்த பிராமண லட்சியம் சிறப்பாகக் காணப்படுகிறது. ஐரோப்பாவின்

கார்டினல் பிரபு[1] தன் முன்னோர்கள் மேன்மையானவர்கள் என்பதை நிரூபிக்க எவ்வளவோ சிரமப்பட்டு ஆயிரமாயிரம் பணத்தைச் செலவழிக்கிறார். இறுதியில் அந்த முன்னோர்கள் ஏதோ ஒரு மலையில் வாழ்ந்து, வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் யாத்திரிகர்களைக் கொள்ளையடித்து வாழ்ந்த சில கொடுங்கோலர்கள் என்பதை அறியும்வரை அமைதி அடைய மாட்டார். மேலை நாட்டின் மேன்மை மிக்க முன்னோர்களின் தொழில் இதுதான். ஆனால் கார்டினல் பிரபுவுக்கோ இவர்களிலிருந்தே தன் பரம்பரை வந்துள்ளது என்பதை அறிந்தால்தான் திருப்தி. மாறாக இந்தியாவிலோ, கோவணம் அணிந்து, காடுகளில் வாழ்ந்து, கிழங்குகளை உண்டு, வேதங்களை ஓதிய ஏதோ ஒரு ரிஷியின் சந்ததியாக இருப்பதையே பேரரசர்களும் விரும்புவார்கள். அங்குதான் இந்திய மன்னர்கள் தங்கள் பாரம்பரியத்தைத் தேடினார்கள். உங்கள் பரம்பரை ஒரு ரிஷியிடமிருந்து தொடங்குமானால்தான் நீங்கள் உயர்ந்த ஜாதியினர், இல்லையென்றால் உயர்ந்த ஜாதியினர் அல்ல.

எனவே உயர்குலப் பிறப்பைப் பற்றிய நமது லட்சியம் மற்றவர்களிலிருந்து வேறானது. ஆன்மீகப் பண்பாடும் துறவும் கொண்ட பிராமணனே நமது லட்சியம். பிராமண லட்சியம் என்று நான் எதைக் குறிப்பிடுகிறேன்? உலகியல் சிறிதும் இல்லாத உண்மை அறிவு வளம் மிக்க பிராமணத்துவத்தையே நான் கூறுகிறேன். இதுதான் இந்து இனத்தின் லட்சியம். பிராமணன் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவனல்ல, அவனுக்குச் சட்டமே இல்லை, அவன் அரசனுடைய ஆளுகைக்கு உட்பட்டவனல்ல அவனை யாரும் துன்புறுத்தக் கூடாது என்றெல்லாம் நமது நீதி நூல்கள் கூறுவதை நீங்கள் கேட்டதில்லையா? அது முற்றிலும் உண்மை. சுயநலமிக்க முட்டாள்களின் விளக்கத்தின்படி இதனை நீங்கள் புரிந்துகொள்ளக் கூடாது, வேதாந்தத்தின் உண்மையான ஆதாரபூர்வமான விளக்கத்தின்படி புரிந்து கொள்ள வேண்டும். அறிவையும் அன்பின் ஆற்றலையும் பெறுவதிலும், அதைப் பரப்புவதிலும் முனைந்து ஈடுபடுபவனாகவும், சுயநலம் என்பதே இல்லாதவனாகவும் இருப்பவனே பிராமணன் என்றால், சுயநலமும் ஆன்மீகமும் நல்லொழுக்கமும் நற்பண்புகளும் மிக்க இத்தகைய ஆண்களும் பெண்களுமாகிய

1. கிறிஸ்தவ மத போதகர்.

பிராமணர்கள் மட்டுமே ஒரு நாட்டில் வாழ்வார்கள் என்றால், அந்த நாட்டைச் சட்டங்களுக்குக் கட்டுப்படாததாகவும் சட்டங்களைக் கடந்ததாகவும் கருதுவதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்? அவர்களை ஆள போலீசோ ராணுவமோ எதற்கு? அவர்களை ஏன் ஒருவர் ஆட்சி செய்ய வேண்டும்? அவர்கள் ஏன் ஓர் அரசாங்கத்தின் கீழ் வாழ வேண்டும்? அவர்கள் நல்லவர்கள், சான்றோர்கள், மனித தெய்வங்கள். இவர்கள்தான் நமது லட்சிய பிராமணர்கள்.

சத்திய யுகத்தில் ஒரே ஒரு ஜாதிதான் இருந்ததாகவும் அந்த ஒரே ஜாதி பிராமண ஜாதியே என்றும் சாஸ்திரங்களில் நாம் படிக்கிறோம். ஆரம்பக் காலத்தில் உலகம் முழுவதிலும் பிராமணர்கள் மட்டுமே இருந்தார்கள், அவர்கள் இழிவடைய ஆரம்பித்த பின்னரே பல்வேறு ஜாதிகளாகப் பிரிந்தனர், இந்தச் சுழற்சி ஒரு சுற்று முடியும்போது எல்லோரும் மீண்டும் பிராமணர்களாகி விடுவர் என்று மகாபாரதத்தில் படிக்கிறோம். இந்த யுகச் சுழற்சி இப்போது ஒரு சுற்றை நிறைவு செய்யும் நிலையில் உள்ளது. இந்த விஷயத்தில் நீங்கள் கவனம் கொள்ளுமாறு வேண்டுகிறேன். எனவே உயர்ந்த நிலையில் இருப்போரைக் கீழ்நிலைக்கு இழுப்பதோ, குடித்துக் கும்மாளம் அடிப்பதோ, அதிக போகத்தை நாடி எல்லை மீறிக் குதிப்பதோ ஜாதிப் பிரச்சினைக்கான நமது தீர்வு அல்ல. நாம் ஒவ்வொரு வரும் ஆன்மீகத்தை நாட வேண்டும், வேதாந்த மதத்தின் நியதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும், லட்சிய பிராமணர் களாக வேண்டும். ஜாதிப் பிரச்சினைக்குத் தீர்வு இவ்வாறுதான் ஏற்பட முடியும்.

நீங்கள் ஆரியர்களோ, ஆரியர் அல்லாதவர்களோ, ரிஷிகளோ, பிராமணர்களோ, மிகவும் தாழ்த்தப்பட்ட ஜாதியினரோ யாராக இருந்தாலும், இந்த நாட்டில் உங்கள் ஒவ்வொருவருக்கும் உங்கள் முன்னோர்கள் ஒரு நியதியை வகுத்து வைத்துள்ளனர். உங்கள் அனைவருக்கும் நியதி, ஆணை ஒன்றுதான்—மிக உயர்நிலை மனிதனிலிருந்து மிகவும் கீழான நிலையில் இருப்பவன்வரை இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு வரும் முயன்று, நில்லாமல் முன்னேறி லட்சிய பிராமணன் ஆக வேண்டும். இந்த வேதாந்தக் கருத்து நமது நாட்டிற்கு மட்டுமல்ல, உலகிற்கே ஏற்புடைய ஒன்றாகும். அஹிம்சையில் வேரூன்றிய, அமைதியான, உறுதியான, வணங்கத்தக்க, தூய்மை யான, தியான நிலையில் திளைக்கின்ற ஓர் ஆன்மீக மனிதன்

என்ற உயர் லட்சியத்திற்கு மனித குலத்தையே நிதானமாகவும் மென்மையாகவும் உயர்த்துவதே ஜாதி பற்றிய நமது லட்சிய மாகும். இந்த லட்சியத்தில் இறைவன் குடிகொள்கிறார்.

இவற்றையெல்லாம் செய்வது எப்படி? சபிப்பதாலும் கேவலப் படுத்துவதாலும் நிந்திப்பதாலும் எந்த நல்ல விளைவை யும் கொண்டுவர முடியாது என்பதை நான் உங்களுக்கு அழுத்த மாகச் சொல்ல விரும்புகிறேன். இந்த வழிகளில் எல்லாம் ஆண்டுக்கணக்காக முயற்சி செய்தாகிவிட்டது. குறிப்பிடத்தக்க எந்த விளைவும் கிடைக்கவில்லை. அன்பு, கனிவு இவற்றின் மூலமே நன்மை உண்டாக முடியும். இது ஒரு மகத்தான விஷயம். இது சம்பந்தமான எனது திட்டங்களையும் இதுபற்றி என் மனத்தில் நாள்தோறும் தோன்றிக் கொண்டிருக்கின்ற கருத்துக்களையும் உங்களிடம் சொல்வதென்றால், அதற்குப் பல சொற்பொழிவுகள் நிகழ்த்த வேண்டியிருக்கும்.

எனவே ஓர் உண்மையை மட்டும் நினைவுபடுத்தி, எனது சொற்பொழிவை நிறைவு செய்கிறேன். இந்துக்களே, நமது நாடாகிய இந்தக் கப்பல் காலங்காலமாக நமக்கு எவ்வளவோ நன்மை செய்தபடி பயணம் செய்து கொண்டிருக்கிறது. இன்று ஒருவேளை அதில் ஓர் ஓட்டை விழுந்திருக்கலாம், ஒருவேளை கொஞ்சம் பழுதுபட்டிருக்கலாம். இந்த நிலையில் ஓட்டைகளை அடைத்து தண்ணீர் உள்ளே செல்வதைத் தடுப்பதுதான் நீங்கள், நான் என்று நாம் ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய வேலை. நம் நாட்டு மக்களுக்கு ஆபத்தை எடுத்துச் சொல்வோம்; அவர்கள் விழித்தெழட்டும், விழித்து நமக்கு உதவட்டும். மக்களுக்கு நிலைமையை எடுத்துக்கூறி அவர்களின் கடமையை உணர்த்துவதற்காக, நான் இந்த நாட்டின் ஒவ்வொரு மூலைக்கும் சென்று, உரத்த குரலில் அவர்களை அழைக்கப் போகிறேன்! என் குரலை அவர்கள் கேட்காமல் போகலாம். என்றாலும் அவர்களைப்பற்றி ஒரு நிந்தனைச் சொல்லோ ஒரு சாபமோ என் வாயிலிருந்து வராது. கடந்த காலத்தில் நாம் அரிய காரியங்களைச் சாதித்திருக்கிறோம். எதிர்காலத்தில் அத்தகைய காரியங்களைச் செய்யமுடியாமல் போனால், கடந்த காலத்தில் செய்திருக்கிறோம் என்ற ஆறுதலுடன் அனைவரும் ஒன்றாக மூழ்கி, அமைதியாக இறப்போம்.

நாட்டுப்பற்று உடையவர்களாக இருங்கள். கடந்த காலத் தில் இவ்வளவு மகத்தான காரியங்களைச் செய்த இந்த இனத்தை நேசியுங்கள். என் நாட்டு மக்களே, உங்களை மற்ற நாட்டு

மக்களுடன் ஒட்டிட்டு நோக்குந்தோறும் உங்களை அதிகமாக நான் நேசிக்கிறேன். நீங்கள் நல்லவர்கள், தூயவர்கள், மென்மையானவர்கள். நீங்கள் எப்போதும் அடக்குமுறைக்கே ஆளாகியிருக்கிறீர்கள், இந்த ஜடவுலக மாயையின் கொடுமை அது. அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். காலப்போக்கில் உணர்வுப் பொருளே வெற்றி பெறும். இதற்கிடையே நாம் உழைப்போம், நம் நாட்டைக் குறை கூறாதிருப்போம். காலத்தின் கடுமைகளைத் தாங்கி, உழைப்பால் களைத்துத் தேய்ந்து கொண்டிருக்கின்ற நமது புனிதமிக்க நாட்டின் அமைப்புக்களைச் சபிக்கவோ பழிக்கவோ வேண்டாம். மூட நம்பிக்கைகள் மலிந்த, அறிவுக்குப் பொருந்தாத அமைப்புகளைக்கூட நிந்திக்காதீர்கள். ஏனென்றால் கடந்தகாலத்தில் அவை ஏதோ நன்மை செய்திருக்கும். நம் நாட்டு அமைப்புகளைவிட உண்மையிலேயே சிறந்த நோக்கங்களையும் முடிவுகளையும் கொண்ட அமைப்புகள் உலகில் வேறு எங்குமே இல்லை என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்.

ஏறக்குறைய உலகின் எல்லா நாடுகளிலுமே ஜாதிகள் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் அவற்றின் திட்டமும் நோக்கமும், நம் நாட்டைப்போல் வேறெங்கும் அவ்வளவு சிறப்பாக இல்லை. ஜாதி என்பது தவிர்க்க முடியாதது என்றால், பணத்தால் உருவாகின்ற ஜாதியை விட, தூய்மை, பண்பாடு, தன்னலமின்மை இவற்றை அடிப்படையாகக் கொண்ட ஜாதியையே நான் விரும்புகிறேன். எனவே ஒரு கண்டனச் சொல் கூட வேண்டாம். உதடுகளை மூடிக்கொள்ளுங்கள், உங்கள் உள்ளங்கள் திறக்கட்டும். உங்கள் ஒவ்வொருவரின் தோள்மீது தான் முழுப் பொறுப்பும் இருப்பதாக எண்ணி, இந்த நாட்டின் மற்றும் உலகம் முழுவதன் நற்கதிக்காகப் பாடுபடுங்கள். வேதாந்தத்தின் ஒளியையும் வழியையும் ஒவ்வொரு வாயிலுக்கும் ஏந்திச் செல்லுங்கள்; ஒவ்வோர் ஆன்மாவிலும் மறைந்துள்ள தெய்வீகத்தை விழித்தெழச் செய்யுங்கள். இதன்பிறகு, எந்த அளவிற்கு உங்களுக்கு வெற்றி கிடைத்தாலும், நீங்கள் ஒரு மகத்தான லட்சியத்திற்காக வாழ்ந்தீர்கள், உழைத்தீர்கள் என்ற மனநிறைவோடு இறந்து போகலாம். எப்படியானாலும், இந்த லட்சியத்தின் வெற்றியைப் பொறுத்தே இப்போதும் இனி வரும் காலத்திலும் மனித குலத்தின் கதிமோட்சம் நிர்ணயிக்கப்படும். ❑

# 8. சென்னையில்

சுவாமிஜி வந்த ரயில் பிப்ரவரி 6-ஆம் நாள் காலை 7.00 மணிக்கு, சென்னை எக்மோர் ரயில் நிலையத்திற்கு வந்து சேர்ந்தது. அங்கே சுவாமிஜிக்கு விமரிசையான வரவேற்பு அளிக்கப்பட்டது. 24 வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பட்டன. சுவாமிஜி சென்ற குதிரை வண்டியிலிருந்து குதிரைகளை அவிழ்த்து விட்டுவிட்டு இளைஞர்களே அதனை இழுத்துச் சென்றனர். மெரீனா கடற்கரையில் காஸில் கெர்னன் (Castle Kernan, இது ஐஸ் ஹவுஸ் என்றும் அழைக்கப்பட்டது. தற்போதைய விவேகானந்தர் இல்லம்) என்ற மாளிகையில் சுவாமிஜி ஒன்பது நாட்கள் தங்கினார். சென்னையில் அவர் ஏழு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்.

பிப்ரவரி 7-ஆம் நாள் அவருக்கு விக்டோரியா ஹாலில் வரவேற்பு அளிக்கப்பட்டது. பத்தாயிரத்திற்கும் அதிகமான மக்கள் கூட்டம் உள்ளும் புறமும் நிரம்பி வழிந்தது. திறந்த வெளியில் அவர் பேச வேண்டும் என்று மக்கள் குரல் எழுப்பியவண்ணம் இருந்தனர்.

வரவேற்புரைகளை வாசித்து முடிவதற்குள், ஹாலுக்கு வெளியே இருந்தோர், திறந்த வெளியில் சுவாமிஜி பேச வேண்டும் என்று கோஷமிடத் தொடங்கினர்: அதற்கு மேலும் பொறுக்க முடியாத சுவாமிஜி விருட்டென்று எழுந்து, 'நான் மக்களுக்காக வந்தவன். வெளியில் இருப்போரையும் நான் சந்தித்தாக வேண்டும், என்று கூறிவிட்டு வெளியே வந்தார். அவருக்காகக் காத்திருந்த 'கோச்' வண்டியின்மீது ஏறி நின்றார். அங்கே பெருந்திரளாகக் கூடியிருந்த மக்களிடம் உற்சாகம் கரைபுரண்டு ஓடியது. சுவாமிஜி யால் சிறிய உரை மட்டுமே நிகழ்த்த முடிந்தது. இன்னொரு நாள் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தலாம் என்று தெரிவித்தார் அவர். சுவாமிஜியின் உரை வருமாறு:

## 1. வரவேற்புக்குப் பதிலுரை

நாம் ஒன்று நினைக்கிறோம், தெய்வம் மற்றொன்று நினைக்கிறது. இந்த வரவேற்பும் சொற்பொழிவும் ஆங்கில முறையில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் கடவுளோ அதனை வேறு வகையில் நடத்தத் திருவுள்ளம் கொண்டுள்ளார் —சிதறிக் கிடக்கின்ற இந்த மக்கள் கூட்டத்தில் இதோ இந்த ரதத்திலிருந்து கீதை பாணியில் பேசுகிறேன். இப்படித்தான் நடந்திருக்க வேண்டும், எனவே அதற்கு நமது நன்றி. இது சொற்பொழிவிற்கு ஓர் உத்வேகத்தைக் கொடுக்கும், நான் உங்களுக்குச் சொல்லப் போகின்றவை எல்லாம் வலிமையுடன்

வெளிவரும். என் குரல் அனைவருக்கும் கேட்குமா என்பது சந்தேகமே. எனினும் இயன்றஅளவு முயற்சி செய்கிறேன். திறந்த வெளியில் இவ்வளவு பெரிய கூட்டத்தில் நான் இதுவரை பேசியதில்லை.

கொழும்பிலிருந்து சென்னைவரை என்னிடம் மக்கள் காட்டி வருகின்ற அற்புதமான கனிவும், ஊக்கமும் உற்சாகமும் உறுதியும் நிறைந்த வரவேற்பும் எனது எதிர்பார்ப்புகள் அனைத்தையும் கடந்ததாக உள்ளது. இந்தியா முழுவதும் இப்படி இருக்கும் என்றுதான் தோன்றுகிறது. இது எனக்கு மகிழ்ச்சியையே தருகிறது. ஏனெனில் இது, கடந்த நாட்களில் நான் மீண்டும்மீண்டும் வலியுறுத்தி வந்ததை மெய்ப்பிப்ப தாகவே உள்ளது— ஒவ்வொரு நாட்டிற்கும், அதற்கே உரிய பாதை ஒன்று உண்டு; அது போலவே ஒவ்வொரு நாட்டிற்கும் உயிர்நாடியான லட்சியமும் ஒன்று உள்ளது; இந்திய மனத்தின் வளர்ச்சி மதத்தைப் பொறுத்தே அமைகிறது.

பிற நாடுகளில் மதம் என்பது வாழ்க்கையின் எத்தனையோ அம்சங்களுள் ஒன்று; உண்மையைச் சொல்வதானால், அது மிகச் சாதாரண அம்சமே. எடுத்துக்காட்டாக, இங்கிலாந்தில் தேசியக் கொள்கையின் ஒரு பகுதியே மதம். ஆங்கில சர்ச், ஆளும் வர்க்கத்தினரின் உடைமை. எனவே மக்கள் தாங்கள் நம்பினாலும் நம்பாவிட்டாலும் தங்களுடைய சர்ச் என்று கருதி அதை ஆதரிக்கிறார்கள். கனவான்களும் சீமாட்டிகளும் சர்ச்சைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்று எதிர் பார்க்கப்படுகின்றனர். பெரியமனிதத்தனத்திற்கு அது அடை யாளம். இவ்வாறுதான் இதர நாடுகளிலும் அரசியல், அறிவுத் தேடல்கள், போர்க் கலை, வாணிபம் என்று ஏதாவது ஒன்று மகத்தான தேசிய ஆற்றலாகத் திகழ்கிறது. அதுவே அந்த நாட்டின் இதயமாகத் துடிக்கிறது. இரண்டாம் பட்சமான எத்தனையோ அலங்காரங்களுள் மதம் என்பதும் ஒன்று, அவ்வளவுதான்.

இங்கே இந்தியாவிலோ நாட்டின் இதயமே மதத்தால்தான் உருவாகியுள்ளது. இதுவே முதுகெலும்பு, இதுவே அடிப்படை, இந்த அஸ்திவாரத்தின் மீதுதான் நமது தேசிய வாழ்வாகிய கட்டிடம் எழுப்பப்பட்டுள்ளது. அரசியல், அதிகாரம், ஏன், அறிவுகூட இரண்டாம் பட்சமே; மதம் ஒன்றே முக்கியமானதாக இங்குக் கருதப்படுகிறது. நமது நாட்டுப் பாமர மக்கள் எதுவும் தெரியாதவர்கள் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்;

ஒருமுறையல்ல, நூறுமுறை கேட்டிருக்கிறேன். அது உண்மை தான். கொழும்புவில் வந்து இறங்கியது முதல் அதையே நான் காண்கிறேன். ஐரோப்பாவில் நடைபெறுகின்ற அரசியல் கிளர்ச்சிகள் பற்றியோ, மாற்றங்கள் பற்றியோ, அல்லது மந்திரி சபைகளின் வீழ்ச்சி பற்றியோ அவர்களுக்கு எதுவும் தெரிய வில்லை; சோஷலிசம் (Socialism), அனார்க்கிசம் (Anarchism) என்பவைபற்றியோ ஐரோப்பாவின் பிற அரசியல் மாற்றங்கள் பற்றியோ அவர்களுள் ஒருவர்கூட கேள்விப்பட்டதே இல்லை. ஆனால் சர்வசமயப் பேரவைக்கு இந்திய சன்னியாசி ஒருவர் அனுப்பப்பட்டது பற்றியும், அவர் அங்கு ஏதோ ஒருவகையில் வெற்றி பெற்றார் என்பது பற்றியும் இலங்கையில் உள்ள ஆண், பெண், சிறுவர் ஒவ்வொருவருக்கும் தெரிந்திருந்தது. அப்படி யானால் மக்கள் எதுவும் தெரியாதவர்களா, இல்லை தெரிந்து கொள்ளும் ஆர்வம் இல்லாதவர்களா? இரண்டும் இல்லை. அவர்களின் பண்புடன் எது ஒத்துப்போகுமோ, எது அவர் களின் வாழ்க்கைத் தேவைகளுள் ஒன்றாக இருக்குமோ அதைப் பற்றி அவர்கள் அறிந்தே இருக்கிறார்கள். அரசியலும் பிறவும் வாழ்க்கைத் தேவைகளாக இந்தியாவில் ஒருபோதும் இருந்ததில்லை. இந்திய வாழ்க்கை வாழ்ந்ததும் வளம் பெற்றதும் மதம், ஆன்மீகம் என்ற அடிப்படைமீது மட்டுமே; இனியும் அவ்வாறே அது வாழும், வளம் பெறும்.

உலக நாடுகளின் முன் இரண்டு பிரச்சினைகள் உள்ளன. இவற்றிற்குத் தீர்வு காண இந்தியா ஒருபுறமும், பிற நாடுகள் மறுபுறமுமாக நின்று முயற்சியில் ஈடுபடுகின்றன. பிரச்சினை இதுதான்— யார் வாழ வேண்டும்? ஒரு நாட்டை வாழ வைப்பதும் பிற நாடுகளை அழிய வைப்பதும் எது? வாழ்க்கைப் போரில் வெற்றி பெற வேண்டுவது எது—அன்பா, பகையா? போகமா, துறவா? ஜடமா, உணர்வா? வரலாறு காணாத அந்தக் காலத்தில் நமது முன்னோர்கள் என்ன எண்ணினார் களோ அவ்வாறே நாமும் சிந்திக்கிறோம். எந்தப் பரம்பரையும் தலைநீட்ட முடியாத அந்தத் தொலைநாளில், மேன்மை மிக்கவர் களாகிய நமது முன்னோர்கள் இந்தப் பிரச்சினையில் தங்கள் பக்கத்தை எடுத்துக்கொண்டு, உலகிற்கே சவால் விட்டுள்ளனர். நமது தீர்வு துறவு, விட்டுவிடுதல், அச்சமின்மை, அன்பு. இவையே வாழத் தக்கவை. புலனின்பங்களை விடுவது ஒரு நாட்டை வாழச் செய்யும். இதற்கு வரலாறே சான்று. ஏறக்குறைய ஒவ்வொரு நூற்றாண்டிலும் காளான்கள்போல் எத்தனையோ

நாடுகள் தோன்றி மறைகின்றன. சூன்யத்திலிருந்து அவை எழு கின்றன, ஏதோ சில காலம் ஆர்ப்பரிக்கின்றன, பின்னர் மறைந் தும் விடுகின்றன. ஆனால் நமது மாபெரும் நாடோ இதுவரை எந்த நாட்டிற்கும் எந்தக் காலத்திலும் ஏற்பட்டிராத அளவிற்கு பெரும் சோதனைகள், ஆபத்துக்கள், சூழ்நிலை மாற்றங்கள் என்று எத்தனையோ துரதிர்டங்களைத் தாங்கியுள்ளது; இருந்தும் பிழைத்திருக்கிறது. ஏன்? ஏனெனில் அது துறவு என்ற பக்கத்தை எடுத்துள்ளது. துறவு இல்லாவிடில் மதம் ஏது? ஆனால் ஐரோப்பிய நாடுகளோ பிரச்சினைக்கு மறுபக்கத் தீர்வை எடுத்துள்ளன— நல்ல வழியோ, தீய வழியோ ஒருவன் எவ்வளவு அதிகம் பொருள் சேர்க்கலாம், எவ்வளவு அதிகமாக அதிகாரம் இருக்க வேண்டும்! போட்டி, கொடுமையான இதய மற்ற இரக்கமற்ற போட்டி— இதுவே ஐரோப்பியச் சட்டம். ஆனால் நமது சட்டமோ ஜாதியாகும், போட்டியை முறியடிப்ப தாகும், போட்டியின் ஆற்றல்களைத் தடுப்பதாகும், அதன் கொடுமைகளைக் குறைப்பதாகும், புதிரான இந்த வாழ்க்கைப் பாதையில் மனிதனின் பயணத்தை மென்மையாக்குவதாகும்.

இந்த வேளையில் கூட்டம் கட்டுக்கடங்காமல் போயிற்று. சொற்பொழிவு காதில் விழவில்லை. எனவே பின்வருமாறு கூறி முடித்தார் சுவாமிஜி—

நண்பர்களே! உங்கள் உற்சாகம் கண்டு மகிழ்கிறேன். மிக வும் மகிழ்ச்சி. எனக்கு உங்கள்மீது வருத்தம் என்று எண்ணி விடாதீர்கள். மாறாக, உங்கள் ஆர்வம் எனக்கு எல்லையற்ற திருப்தியையே அளிக்கிறது. அளவு கடந்த உற்சாகமே நமக்குத் தேவை. ஆனால் இது நிலையாக இருக்குமாறு பார்த்துக்கொள் ளுங்கள், மேலும் வளர்த்துக் கொள்ளுங்கள். தீ அணையாமல் இருக்கட்டும். இந்தியாவில் நாம் மகத்தான காரியங்களைச் செய்ய வேண்டியுள்ளது. அதற்கு உங்கள் உதவி தேவை. இத் தகைய உற்சாகம் வேண்டும். இனியும் இந்தச் சொற்பொழிவைத் தொடர முடியாது. ஆர்வமிக்க உங்கள் கனிவான வரவேற்புக்கு நன்றி. அமைதியான வேளையில் இன்னும் சிறப்பான கருத்துக் களையும் எண்ணங்களையும் பரிமாறிக் கொள்வோம். நண்பர்களே, இப்போதைக்கு விடைபெற்றுக் கொள்கிறேன்.

நீங்கள் எல்லோரும் கேட்கக்கூடிய வகையில் பேச முடியாது. எனவே இன்றைக்கு என்னைப் பார்த்தவரையில் திருப்தியடையுங்கள். இன்னொரு சந்தர்ப்பத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவேன். உற்சாகம் மிக்க உங்கள் வரவேற்புக்கு நன்றி. ❑

## 2. நம் முன் உள்ள பணி

பிப்ரவரி 9 காலை, திருவல்லிக்கேணி இலக்கிய சங்கம்

காலம் போகப்போக வாழ்க்கை என்னும் பிரச்சினை ஒவ்வொரு நாளும் ஆழமானதாகவும் அகன்றதாகவும் மாறிக் கொண்டிருக்கிறது. அதன் உண்மையும் சாரமும் எது என்பது வேதாந்த உண்மை முதலில் கண்டுபிடிக்கப்பட்ட அந்த நாளிலேயே போதிக்கப்பட்டது—அது ஒருமை, வாழ்க்கையின் ஒருமை. பிரபஞ்சத்திலுள்ள ஓர் அணுக்கூடத் தனியே இயங்க முடியாது, அது தன்னுடன் இந்த உலகம் முழுவதையும் இழுத்துக் கொண்டுதான் இயங்க வேண்டும். உலகம் முழுவதும் தொடர்ந்து வராமல் எந்த முன்னேற்றமும் ஏற்பட முடியாது. நாடு, இனம் போன்ற குறுகிய கண்ணோட்டத்தில் எந்தப் பிரச்சினைக்கும் தீர்வு காண முடியாது என்பது ஒவ்வொரு நாளும் தெளிவாகிக் கொண்டு வருகிறது. ஒவ்வொரு கருத்தும் விரிந்துவிரிந்து உலகம் முழுவதையும் தன்னுள் கொள்ளத்தக்க அளவு விரிய வேண்டும். ஒவ்வொரு லட்சியமும் விரிந்து மனித குலம், இல்லை இல்லை, உயிர்க்குலம் முழுவதையும் உள்ளடக்கும்படி விரிய வேண்டும். அப்படி இல்லாததால் தான் நம் நாடு கடந்த சில நூற்றாண்டுகளாகத் தன் பண்டைய பெருமையை இழந்துவிட்டிருக்கிறது. இந்த இழிநிலைக்கான காரணங்களுள் ஒன்று நமது குறுகிய கண்ணோட்டமாகும்; நமது செயல்களின் எல்லை குறுகி விட்டதாகும்.

ஒரே இனத்திலிருந்து இரண்டு விசித்திரமான நாடுகள் எழுந்தன. அவை நிலைபெற்றது வெவ்வேறான சூழ்நிலையிலும் இயற்கை அமைப்பிலும் ஆகும். வாழ்க்கைப் பிரச்சினைகளையும் அவை தங்களுக்கே உரிய தனி வழிகளிலேயே தீர்க்க முனைந்தன. புராதனமான இந்து மற்றும் கிரேக்க இனங்களையே நான் குறிப்பிடுகிறேன். வடதிசையில் பனி படர்ந்த இமயமலை; சம நிலத்தில் பொங்கும் கடல்போல் சுற்றிலும் பாய்ந்த நன்னீர் ஆறுகள், உலகின் எல்லை வந்துவிட்டதோ என நீண்டு பரந்து கிடந்த அடர்ந்த காடுகள்—இவையெல்லாம்

நாற்புறமும் கட்டுப்படுத்தியபோது இந்திய ஆரியனின் பார்வை அகமுகமாகியது. இதனுடன் அவனது இயல்பான உள் ளுணர்ச்சி, கூர்த்த நுண்ணறிவு, அவனைச் சுற்றிச் சூழ்ந்து கிடந்த இயற்கையழகு—இவையெல்லாம் சேர்ந்து அவனைத் தனக்குள்ளேயே மூழ்குகின்ற சிந்தனையாளனாக மாற்றின. சொந்த மனத்தை ஆராய்வது இந்தோ-ஆரியனின் மகத்தான நோக்கமாக இருந்தது. மாறாக, கிரேக்கர்கள் இயற்கை எழில் கொஞ்சித் தவழும் கிரேக்கத் தீவுகளில் குடியேறினார்கள். சூழ்ந்து கிடந்த இயற்கை, அவர்கள் மனத்தில் நுண்ணுணர்வு களைவிட அழகுணர்ச்சியையே தட்டியெழுப்பியது; அது எல்லையற்றுப் பரந்து கிடந்தாலும் எளிமை நிரம்பியதாக இருந்தது. எனவே அவர்கள் மனம் புறத்தை நாடியது, புறவுலகை ஆராய விழைந்தது.

இந்த ஆராய்ச்சிகளின் விளைவாக இந்தியாவிலிருந்து, பகுத்தறியும் (Analytical) விஞ்ஞானங்களும், கிரீஸிலிருந்து பொதுமைப்படுத்தும் (Generalising) விஞ்ஞானங்களும் தோன் றின. இந்துவின் மனம் தன் சொந்த வழியிலேயே சென்று அற்புதமான பலன்களைக் கண்டது. இன்றும்கூட இந்துவின் வாதத் திறமையும் அவனது மூளையின் மாபெரும் ஆற்றலும் ஈடிணையற்றதாகவே உள்ளன. போட்டி என்று வருமானால் நம் இளைஞர்கள் உலகிலுள்ள எந்த இளைஞர்களையும் வெல்வார்கள் என்பது நமக்குத் தெரிந்த ஒன்று. ஆனால் இந்தத் தேசிய வலிமை இன்று ஒடுங்கிவிட்டது. ஒருவேளை முகமதியர் இந்தியாவை வெல்வதற்கு ஓரிரு நூற்றாண்டுகளுக்கு முன்பு இந்த வீழ்ச்சி நேர்ந்திருக்கலாம். அப்போது நமது இந்தத் தேசியப் பண்பைக் குறித்து அவ்வளவு ஆரவாரம் செய்யப்பட்டது, அதுவே அதன் வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று.

அந்த வீழ்ச்சியின் அடையாளங்களை, இந்தியாவின் கலை, இசை, விஞ்ஞானம் என்று ஒவ்வொன்றிலும் நாம் இன்றும் காண முடிகிறது. இன்றைய கலையில் பரந்த நோக்கு இல்லை, ஒழுங்கு இல்லை, நுண்ணுணர்வுகளின் வெளிப்பாடு இல்லை; வெறும் பகட்டும் ஆடம்பரமும் மேலோங்கிய ஒரு நிலைமை தற்போது உள்ளது. இந்த இனத்தின் தனித்தன்மை அழிந்து போய் விட்டதைப்போல் தோன்றுகிறது. இசையிலும் அது போலவே. புராதன இசைமரபில் இருந்தது போன்ற, ஆன்மாவைக் கிளர்ந்தெழச் செய்கின்ற கருத்துக்கள் இல்லை, தன் சொந்த அமைப்பில் நின்று அற்புதமான இசைவு

எழுப்பக்கூடிய ராகங்கள் இல்லை. ஒவ்வொரு ராகமும் தன் தனித்தன்மையை இழந்துவிட்டது. தற்கால இசை, ராகங்களின் வெறும் கலப்படமாகவும் குழப்பக் கலவையாகவுமே உள்ளது. இசையின் தரம் தாழ்ந்து விட்டதையே இது காட்டுகிறது. உங்கள் லட்சியக் கருத்துக்களை ஆராய்ந்தால் அங்கும் இதே நிலைமைதான்—தனித்தன்மையை இழந்து, வெறும் வார்த்தை ஜாலங்களாக மாறிவிட்ட நிலைமை. உங்கள் சிறப்புத் துறை யான மதத்திலோ மிகவும் பயங்கரமான வீழ்ச்சியே தென்படு கிறது. தண்ணீரை வலது கையால் குடிப்பதா, இடது கையால் குடிப்பதா என்பன போன்ற அதிமுக்கியமான பிரச்சினைகளை விவாதிப்பதில் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்த ஓர் இனத்திடமிருந்து வேறு நாம் எதைத்தான் எதிர்பார்க்க முடியும்? நாட்டின் மிகச் சிறந்த மேதைகள், நூற் றாண்டுகளாகச் சமையலறையைப் பற்றியும், நான் உங்களைத் தொடலாமா, நீங்கள் என்னைத் தொடலாமா, அப்படித் தொட்டுவிட்டால் என்ன பிராயச்சித்தம் என்பது பற்றியும் விவாதித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றால் அந்த இனத் திற்கு அதைவிடப் பெரிய சீரழிவு வேறென்ன வேண்டும்! வேதாந்தக் கருத்துக்களும், இதுவரை பூமியில் போதிக்கப் பட்டவற்றுள் நிகரற்றவையான இறைவன், ஆன்மா பற்றிய அதிநுண்மையான மகத்தான கோட்பாடுகளும் ஏறக்குறைய தொலைந்துவிட்டது போல்தான். ஏதோ காடுகளில் முடங்கி, ஒரு சில துறவியரால் அவை காக்கப்பட்டு வருகின்றன. நாட்டின் மீதிப்பகுதியினர், ஒருவரை ஒருவர் தொடுவது, உடை, உணவு போன்ற அதிமுக்கியமான விஷயங்களை விவாதிப்பதில் காலத்தைக் கழிக்கின்றனர்.

மிகக் கீழானவனும் மிக உயர்ந்தவனுக்குச் சிலவற்றைக் கற்பிக்க முடியும். முகமதியர்களின் ஆக்கிரமிப்பு சந்தேகமின்றி, நமக்குப் பல நல்லவற்றைத் தந்துள்ளது. ஆனால் நம் இனத்திற்கு அதனால் உத்வேகத்தைத் தர முடியவில்லை. நல்லதற்கோ கெட்டதற்கோ அதன்பிறகு ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆக்கிரமித்தனர். ஆக்கிரமிப்பு என்பதே கெட்டதுதான். ஏனெ னில் ஆக்கிரமிப்பு ஒரு தீமை, அன்னிய அரசாங்கம் ஒரு தீமை. இதில் சந்தேகமே இல்லை. ஆனால் சிலவேளைகளில் தீமை மூலமும் நன்மை வரவே செய்கிறது. ஆங்கிலேயர்களின் ஆக்கிரமிப்பினால் விளைந்த நன்மை இதுதான்: இங்கிலாந்து, இல்லை இல்லை, ஐரோப்பா முழுவதுமே இப்பொழுது

பெற்றிருக்கின்ற நாகரீகத்திற்காக கிரீஸிற்கு நன்றி சொல்ல வேண்டும். ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொன்றின்மூலமும் கிரீஸ் தான் பேசுகிறது. ஒவ்வொரு கட்டிடமும் ஒவ்வொரு பொருளும் கிரீஸின் முத்திரையையே கொண்டுள்ளது. ஐரோப்பியர்களின் விஞ்ஞானமும் கலையும் கிரேக்கர்களுடையதே. இன்று புராதன கிரேக்கன் புராதன இந்துவை இந்திய மண்ணில் சந்திக்கிறான். இவ்வாறு நிதானமாக அமைதியாக உத்வேகம் மிக்கச் சூழ்நிலை வந்து சேர்ந்துள்ளது. இந்தச் சக்திகள் ஒன்றுசேர்ந்துதான், நாம் நம்மைச் சுற்றிக் காண்கின்ற விசாலமானவையும், உயிர்த் துடிப்பைத் தருபவையுமான மறுமலர்ச்சி இயக்கங்கள் அனைத்தையும் உருவாக்கியுள்ளன. வாழ்வு பற்றிய மேலும் தாராளமான விரிந்த கருத்து நம் முன் உள்ளது. முதலில் நாம் சற்று குழம்பி, எல்லாவற்றையும் குறுக்கிக்கொள்ள முயன்றோம். ஆனால் இன்று நம்மைச் சுற்றி இயங்கி வருகின்ற மறுமலர்ச்சி இயக்கங்கள் மற்றும் வாழ்க்கையைப் பற்றிய பரந்த கோட்பாடுகள் எல்லாமே நமது பழைய நூல்களில் உள்ள கருத்துக் களைத் தர்க்கரீதியில் வெளிப்படுத்தும் முயற்சியே என்பதை அறிந்துவிட்டோம். நம் சொந்த முன்னோர்கள் கொண்டிருந்த அடிப்படைக் கருத்துக்களைக் கட்டுக்கோப்பான தர்க்கரீதியில் வெளிப்படுத்துவதற்கான முயற்சிகளே அவை. பரந்த மனப் பான்மை பெறுவது, பிற நாடுகளுக்குச் செல்வது, மற்றவர் களோடு கலப்பது, நம் கருத்துக்களை உலகம்தழுவியதாக அமைப்பது இவையே நம் லட்சியத்தின் எல்லை. ஆனால் எப்போதுமே நாம் நமது சாஸ்திரங்களின் திட்டங்களுக்கு மாறாக, நம்மை மேலும்மேலும் சிறுசிறு கூட்டமாக ஆக்கிக் கொள்வதற்கே முயன்று கொண்டிருக்கிறோம்; மற்றவர்களோடு பழகுவதிலிருந்து விலகி வருகிறோம்.

இதனால் பல அபாயங்கள் நேர்ந்துள்ளன. நாம்தான் உலகத்திலேயே சிறந்தவர்கள் என்று நினைத்துக் கொண்டிருக் கிறோமே, அது அவற்றுள் மிக மோசமான ஒன்று. நான் இந்தியாவை நேசிக்கிறேன், தேசப் பற்றுடையவன் நான், முன் னோர்களிடம் மதிப்பு வைத்திருக்கிறேன். ஆனாலும் நாம் பிற நாடுகளில் இருந்து கற்றுக்கொள்ள வேண்டியவை எவ்வளவோ உள்ளன என்று நினைப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. பிறருடைய காலடியில் அமர நாம் எப்போதும் தயாராக இருக்க வேண்டும். ஏனெனில் ஒவ்வொருவரும் நமக்கு மகத்தான பாடங்களைப் போதிக்க முடியும். இதை மறக்கக் கூடாது.

நமது சமுதாயச் சட்டங்களை அமைத்தவராகிய மனு, ‘இழிந்த குலத்தில் பிறந்தவரிடமிருந்தாயினும் சிறிது நல்லறிவு பெற்றுக் கொள்ளுங்கள். மிகத் தாழ்ந்த பிறவியாளருக்கும் சேவை செய்து சொர்க்கம் செல்லும் பாதையை அறிந்துகொள் ளுங்கள்’ என்று கூறுகிறார். எனவே மனுவின் உண்மையான பிள்ளைகளான நாம், அவரது கட்டளைக்குப் பணிந்து, இந்த வாழ்வு மற்றும் மறு வாழ்வு பற்றிய பாடங்களை நமக்கு போதிக்கக்கூடிய யாரிடமிருந்தேனும் கற்றுக்கொள்ள வேண்டும். அதே நேரத்தில் உலகத்திற்கு மகத்தானதொரு பாடத்தை நாம் போதிக்க வேண்டும் என்பதையும் மறந்துவிடக் கூடாது. இந்தியாவிற்கு வெளியே உள்ள உலகின் தொடர்பு இல்லாமல் நாம் வாழ முடியாது; வாழ முடியும் என்று நினைப் பது முட்டாள்தனம். அதற்கான தண்டனையாகத்தான் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக இந்த அடிமை வாழ்வை அனுபவிக்கிறோம்.

நாம் எதையும் பிற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக வெளியே செல்லவில்லை, நம்மைச் சுற்றி நடந்து கொண்டிருக் கும் செயல்பாடுகளைக் கவனிக்கவில்லை—இந்திய மனத்தின் வீழ்ச்சிக்கு இது ஒரு முக்கியக் காரணம். அதற்கான தண்டனையை நாம் பெற்றுவிட்டோம், இனியும் அவ்வாறு இருக்க வேண்டாம். இந்தியர்கள் வெளியே போகக் கூடாது என்பது போன்ற முட்டாள்தனமான கருத்துக்கள் சிறு பிள்ளைத்தனமானவை. அத்தகைய கருத்துக்களின் தலையில் ஓங்கி அடிக்க வேண்டும். நீங்கள் பிற நாடுகளில் எந்த அளவிற்குப் பயணம் செய்கிறீர்களோ, அந்த அளவிற்கு உங்களுக்கு நல்லது, உங்கள் நாட்டிற்கும் நல்லது. இதை நீங்கள் கடந்த நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே செய்திருந் தால், இன்று நீங்கள் உங்களை ஆள விரும்பும் ஒவ்வொரு நாடுகளுக்கும் அடிமையாக அவைகளின் கால்களில் வீழ்ந்து கிடக்க மாட்டீர்கள். வாழ்வின் வெளிப்பட்டுத் தோன்றுகின்ற முதல் அடையாளம்—விரிவடைதல். நீங்கள் வாழ வேண்டுமா னால் கட்டாயம் விரிவடைய வேண்டும். நீங்கள் விரிவடை யாமல் நிற்கின்ற அந்தக் கணமே மரணம் உங்கள் தலைக்கு வந்துவிட்டது; ஆபத்து அருகில் வந்துவிட்டது.

நான் அமெரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் சென்றேன். அதற்காக நீங்கள் என்னைக் கனிவுடன் பாராட்டினீர்கள். நான் போகத்தான் வேண்டும். ஏனெனில் அதுதான் நம்

தேசிய வாழ்வினுடைய விரிவின், மறுமலர்ச்சியின் முதல் அடையாளம். தன்னுள் விரிந்து மலர்ந்த இந்தத் தேசிய வாழ்க்கை, இங்கிருந்து என்னை வெளிநாடுகளுக்குத் தூக்கி எறிந்தது, ஆயிரக்கணக்கானோர் இவ்வாறே தூக்கி எறியப்படுவர். என் வார்த்தையைக் குறித்துக் கொள்ளுங்கள்— இந்த நாடு வாழ்ந்தாக வேண்டுமென்றால் இது நடந்தாக வேண்டும். தேசிய வாழ்வின் மகத்தான மறுமலர்ச்சியின் அடையாளமான விரிவின்மூலமாக, அதாவது நம் மனம் இவ்வாறு விரிவடைந்து, நாம் மேலைநாடுகளுக்குச் செல்வதன் மூலமாக, மனித சமுதாயத்தின் பொதுவான வளர்ச்சிக்கு நமது பங்கை அளிக்க முடியும், உலகின் பொதுவான வளர்ச்சிக்கு நமது கொடையை வழங்க முடியும்.

வாழ வேண்டுமானால் ஒவ்வொரு நாடும் நிச்சயம் எதை யாவது கொடுத்தேயாக வேண்டும். உயிர் கொடுத்தால் உயிர் பெறலாம். நீங்கள் ஒன்றைப் பெற்றால் மற்றவர்க்கு வழங்குவதன் மூலம் அதற்கான விலையை அளிக்க வேண்டும். நாம் பல்லா யிரம் ஆண்டுகளாக வாழ்ந்து வருகிறோம் என்பது நிதரிசன மான உண்மை. அது எப்படி? அறிவிலிகள் எதையாவது நினைத்துவிட்டுப் போகட்டும், நாம் வாழ்ந்து வருவதற்கான காரணம் நாம் வெளியுலகிற்கு எப்போதும் கொடுத்துக் கொண் டிருக்கிறோம் என்பதுதான். மதம், தத்துவம், ஞானம், ஆன்மீகம் இவையே உலகிற்கு இந்தியா வழங்கும் கொடை. மதம் பிற நாடுகளுக்குச் செல்வதற்கான வழியை ஏற்படுத்தப் படைகளின் அணிவரிசைகள் தேவையில்லை. ரத்த வெள்ளங்கள்மூலம் ஞானமும் தத்துவமும் எடுத்துச் செல்லப்பட வேண்டியதில்லை; ரத்தம் பீறிடக் கிடக்கின்ற மனித உடம்புகளின்மீது அணி வகுத்து ஞானமும் தத்துவமும் செல்வதில்லை. வன்முறையின் துணையோடு அவை செல்வதில்லை; அமைதி, அன்பு ஆகிய இறகுகளை விரித்தே அவை செல்கின்றன. எப்போதும் இப்படித் தான் நடந்து வந்துள்ளது. மேலும் இது புதிதான ஒரு விஷயமும் அல்ல. இந்துக்கள் எப்போதும் தங்கள் நாடாகிய நான்கு சுவர்களுக்குள்ளேயே இருந்தார்கள் என்று உங்களுள் யாராவது நினைத்தால் அது முற்றிலும் தவறானதாகும். நீங்கள் பழைய நூல்களைப் படிக்கவில்லை, இந்த நாட்டு மக்களின் வரலாற் றைச் சரியாகப் படிக்கவில்லை.

எனவே நாம் கொடுத்தாக வேண்டியிருந்தது. நான் லண்டனில் இருந்தபோது ஓர் ஆங்கிலேய இளம்பெண்

என்னிடம், 'இந்துக்களாகிய நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்? ஒரு நாட்டைக்கூட நீங்கள் இதுவரை வெல்லவில்லையே?' என்று கேட்டாள். வீரமும் தீரமும் உடைய க்ஷத்திரியர்களான ஆங்கிலேயர்களுக்கு இந்தக் கேள்வி சரிதான். ஒருவனை மற்ற வன் வெல்வதுதான் அவர்களைப் பொறுத்தவரை பெருமைக்கு உரியது. இது அவர்களின் கண்ணோட்டத்தில் சரியானது. ஆனால் நம் கண்ணோட்டம் இதற்கு மாறானது. இந்தியாவின் பெருமைக்கான காரணம் என்னவென்று என்னையே நான் கேட்டுக்கொண்டால், நாம் எப்போதும் யாரையும் வெல் லாததே, என்றுதான் பதில் சொல்வேன். அதுதான் நமது பெருமை. சிலவேளைகளில் அரைகுறை ஆசான்கள் சிலர், நமது மதத்தைப்பற்றி, அது பிறரை வெல்கின்ற மதமாக இல்லை என்று குறை கூறுவதை நீங்கள் தினமும் கேட்கிறீர்கள். அவர்கள் கூறுகின்ற குறைதான் என்னைப் பொறுத்தவரையில் நமது நிறை. நமது மதம் பிற மதங்களைவிட உண்மையாக இருப்பதற் கான காரணம், அது எப்போதும் யாரையும் வெற்றி கொள்ள வில்லை, அது ஒருபோதும் ரத்தம் சிந்தவில்லை; அதன் உதடு களிலிருந்து வாழ்த்துச் சொற்களே, அமைதியும் அன்பும் கனி வும் நிறைந்த வார்த்தைகளே எப்போதும் வந்தன. இங்கு, இங்கு மட்டும்தான் சகிப்புத் தன்மை பற்றிய லட்சியங்கள் முதலில் பிரச்சாரம் செய்யப்பட்டன. இங்கு, இங்குமட்டும்தான் சகிப்புத் தன்மை, அனுதாபம் முதலியவை செயல்படுத்தப்பட்டன. மற்ற எல்லா நாடுகளிலும் இவை வெறும் கொள்கையளவில்தான் இருக்கின்றன. இங்கு, இங்கு மட்டுமே இந்துக்கள் முகமதியர் களுக்கு மசூதிகளையும், கிறிஸ்தவர்களுக்குச் சர்ச்சுகளையும் கட்டுகிறார்கள்.

எனவே நம்முடைய செய்தி பலமுறை வெளியுலகிற்குச் சென்றிருக்கிறது. ஆனால் நிதானமாக அமைதியாக பிறர் தெரிந்து கொள்ளாதவகையில் சென்றிருக்கிறது. இந்தியாவில் ஒவ்வொன்றும் இவ்வாறே நடைபெறுகிறது. இந்தியச் சிந்தனையின் ஒரு பண்பு அதன் மௌனம், அதன் அமைதி. அதே வேளையில் வன்முறையின்மூலம் ஒருபோதும் வெளிப்படுத்த முடியாத மாபெரும் ஆற்றல் அதன் பின்னால் இருக்கிறது. அமைதியாகப் பிறர் மனத்தை வசீகரிப்பதே எப்போதும் இந்தியச் சிந்தனையின் தன்மை.

வெளிநாட்டினர் நம் இலக்கியங்களைப் படிக்கத் தொடங் கினால், முதலில் அவர்களுக்கு அது சலிப்பை அளிப்பதாக

உள்ளது. பிற நாட்டு இலக்கியங்களைப்போல், உடனடியாக மனத்தை எழுச்சி பெறவோ கிளர்ச்சி பெறவோ செய்யும் தன்மை அவற்றில் இல்லை. ஐரோப்பாவின் சோக காவியங் களை நமது சோக காவியங்களுடன் ஒப்பிடுங்கள். முன்னது முழுக்கமுழுக்கச் செயல்வேகம் நிறைந்தது, படிக்கும்போது உங்கள் கிளர்ச்சியைத் தூண்டுகிறது. ஆனால் படித்து முடித்த மறுகணமே எல்லாம் போய்விடுகிறது, உங்கள் மூளையிலிருந்து மொத்தமாகக் கழுவப்பட்டுவிடுகிறது. இந்தியச் சோக இலக்கியங்களோ ஒருவித மயக்கும் சக்தி உடையது, அமைதி யானது, இதமானது; நீங்கள் தொடர்ந்து படித்துக் கொண் டிருந்தால், உங்களை அவை அப்படியே வசீகரித்துவிடும், உங்களால் நகர முடியாது, நீங்கள் கட்டப்படுவீர்கள். நம் இலக்கியங்களைத் தைரியமாகத் தொடுபவர்கள் அந்தப் பந்தத்தை உணர்கிறார்கள்; என்றென்றைக்குமாக அதில் கட்டப்பட்டு விடுகிறார்கள்.

மெல்லென பனி பெய்கிறது, அதை யாரும் காண்பதில்லை, கேட்பதுமில்லை. எனினும் அழகிய ரோஜாக்களை அது எவ் வளவு அற்புதமாக மலரச் செய்துவிடுகிறது! சிந்தனை உலகிற்குத் தன் நன்கொடையை இந்தியா வழங்கியதும் இவ்விதமே. மௌனம் யாரும் அறிய முடியாததுதான், எனினும் விளைவு களைத் தருவதில் எல்லாம் வல்லது. உலகச் சிந்தனையையே அது மாற்றி உள்ளது. ஆனால் இது எப்போது நடந்தது என்பது யாருக்கும் தெரியாது. ‘இந்திய சாஸ்திரங்களை எழுதிய வர்களின் பெயர்களை உறுதி செய்வது எவ்வளவு கடினமாக இருக்கிறது!’ என்று என்னிடம் ஒருமுறை சொன்னார்கள். ‘அதுதான் இந்தியாவின் கொள்கை’ என்று நான் சொன்னேன். பிறர் எழுதியதிலிருந்து தொண்ணூறு சதவீதத்தைத் திருடி, பத்து சதவீதம் சொந்தக் கருத்தையும் சேர்த்து, முன்னுரையில் மட்டும், ‘இவை என் சொந்தக் கருத்துக்கள்’ என்று எழுதுகின்ற தற்கால எழுத்தாளர்கள் போன்றவர்கள் அல்ல பழங்கால இந்திய எழுத்தாளர்கள். மனித குலத்தின் இதயத்தில் முக்கிய மான விளைவுகளை ஏற்படுத்துகின்ற அந்த மாபெரும் சிந்தனை யாளர்கள், தங்களை ஆசிரியர் என்று அறிவித்துக்கொள்ளாமல் நூல்களை மட்டும் எழுதுவதில் திருப்தி கண்டார்கள். அந்த நூல்களைச் சந்ததிக்கு விட்டுவிட்டு அமைதியாக மறைந்து போனார்கள். நமது தத்துவங்களை எழுதியவர் யார்? நமது புராணங்களை எழுதியவர்கள் யார்? யாருக்குத் தெரியும்?

அத்தனைபேரும் பொதுப்பெயர்களான வியாசர், கபிலர் போன்ற பெயர்களின்கீழ் மறைந்து போனார்கள். அவர்கள் ஸ்ரீகிருஷ்ணரின் உண்மையான குழந்தைகள், அவர்கள் கீதையை உண்மையாகப் பின்பற்றுபவர்கள்; 'வேலை செய்வதற்கு மட்டுமே உனக்கு உரிமை உண்டு, அதன் பலனில் இல்லை' என்ற மகத்தான ஆணையை நடைமுறையில் வாழ்ந்து காட்டியவர்கள்.

இவ்வாறு இந்தியா உலகின்மீது செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் ஒரு நிபந்தனை நிறைவேற்றப்பட வேண்டும். கருத்துக்கள் எவ்வாறு பரவும்? வியாபாரத்திற்கான சரக்குகள்போல், அவையும் மற்றவர்களால் உண்டாக்கப்பட்ட வழியில்தான் செல்ல முடியும். சிந்தனைகளும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்வதற்குப் பாதைகள் அமைக்கப் பட வேண்டும். எப்போதெல்லாம் உலக வரலாற்றில் பெரிய சாம்ராஜ்யங்கள் தோன்றி, உலக நாடுகளை வென்று அவற்றை இணைக்கிறதோ, அப்போதெல்லாம் அந்த இணைப்புப் பாதை வழியாக இந்தியக் கருத்துக்கள் பாய்ந்து, ஒவ்வோர் இனத்தின் ரத்தத்திலும் கலந்துள்ளது. பௌத்தர்கள் தோன்றுமுன்னரே, இவ்வாறு இந்தியச் சிந்தனைகள் உலக நாடுகளுள் ஊடுருவிச் சென்றதற்கான ஆதாரங்கள் ஒவ்வொரு நாளும் கிடைத்த வண்ணம் உள்ளன. புத்த மதத்திற்கு முன்னாலேயே சீனா, பாரசீகம் மற்றும் கீழைத் தீவுகளில் வேதாந்தம் பரவி இருந்திருக்கிறது. பின்னர் கிரீஸின் மகத்தான சிந்தனைகள் கீழ்த்திசை உலகின் பல்வேறு பகுதிகளை இணைத்தபோது இந்தியச் சிந்தனைகள் மறுபடியும் பரவத் தொடங்கின. இன்று தன் நாகரீகத்தைப்பற்றி இவ்வளவு பெருமையடித்துக் கொள்கின்ற கிறிஸ்தவ மதம், இந்தியச் சிந்தனைகளுடைய சின்னஞ்சிறு துணுக்குகளின் சேர்க்கையே தவிர வேறல்ல. நமது மதம் எவ்வளவு மகிமை வாய்ந்தது தெரியுமா! எவ்வளவோ பெருமை வாய்ந்த புத்த மதம் இருக்கிறதே, அது நம் மதத்தின் வெறும் ஒரு துடுக்குக் குழந்தை மட்டுமே! கிறிஸ்தவ மதமோ நமது சில சிந்தனைத் துணுக்குகளை இணைத்து ஒட்டுபோடப்பட்ட ஒரு போலி மட்டுமே.

இந்தச் சுற்றுக்களில் ஒன்று மறுபடியும் வந்துள்ளது. இங்கிலாந்தின் மகத்தான ஆற்றல் உலகத்தின் பல்வேறு பகுதிகளை இணைத்திருக்கிறது. ஆங்கிலேயரின் பாதைகள் ரோமப் பேரரசின் பாதைகளைப்போல் நிலங்களில் ஓடுவதுடன் மட்டும்

திருப்தி அடையவில்லை, அவர்கள் கடலின் உள்ளேயும் எல்லா திசைகளிலும் நுழைந்துள்ளார்கள். எல்லா கடல்களிலும் இங்கிலாந்தின் பாதைகள் செல்கின்றன. உலகத்தின் ஒவ்வொரு பகுதியும் மற்ற பகுதியோடு இணைக்கப்பட்டுள்ளது. மின்சாரம் புதிய தூதனைப்போல் மிக அற்புதமான காரியங்களைச் செய்கிறது.

இந்தச் சூழ்நிலையிலும் இந்தியா மீண்டும் உணர்ச்சி பெற்றெழுந்து, உலக நாகரீகத்தின் வளர்ச்சிக்குத் தன் பங்கைத் தரத் தயாராக இருப்பதைக் காண்கிறோம். அதன் விளைவாகத்தான், ஏதோ இயற்கையே வற்புறுத்தி அனுப்பியதுபோல் நான் அமெரிக்காவிற்கும் இங்கிலாந்திற்கும் சென்று பிரச்சாரம் செய்ய நேர்ந்தது. காலம் கனிந்திருப்பதை உணர வேண்டும். ஒவ்வொன்றும் நல்ல சகுனமாகவே காணப்படுகிறது. இந்தியத் தத்துவம் மற்றும் ஆன்மீகச் சிந்தனைகள் மீண்டும் வெளியே சென்று உலகை வெல்ல வேண்டும். எனவே நம் முன் உள்ள பிரச்சினை பரிமாணத்தில் நாளுக்குநாள் பெரிதாகிக் கொண்டே இருக்கிறது. நாம் நமது நாட்டை மறுமலர்ச்சி பெறச் செய்தாக வேண்டும், அது ஒன்றும் பெரிய காரியம் அல்ல; நான் ஒரு கற்பனாவாதி, இந்து இனம் உலகம் முழுவதையும் வெல்ல வேண்டும் என்பதே என் ஆவல்.

பிற நாடுகளை வென்று ஆட்சிபுரிந்த எத்தனையோ பேரரசுகள் இருந்தன. நாம்கூட எத்தனையோ நாடுகளை நம் குடையின் கீழ் ஆண்டிருக்கிறோம். ஆனால் நமது வெற்றியை மதம் மற்றும் ஆன்மீகத்தின் வெற்றி என்றே வர்ணிக்கிறார் மாமன்னரான அசோகர். இந்தியா மீண்டும் உலகை வெல்ல வேண்டும். இதுவே என் வாழ்க்கைக் கனவு. இங்கே எனது பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும் நீங்கள் ஒவ்வொருவரும் இத்தகைய கனவைக் கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அந்தக் கனவு நனவாகும்வரை ஓயாதீர்கள்.

முதலில் நமது நாட்டைச் சரி செய்வோம், பிறகு உலகைச் சீர்படுத்த முயற்சிக்கலாம் என்று உங்களிடம் சிலர் கூறலாம். ஆனால் நான் தெளிவான மொழியில் உங்களுக்குச் சொல்கிறேன்: பிறருக்காக வேலை செய்யும்போதுதான் நீங்கள் சிறப்பாக வேலை செய்கிறீர்கள். உங்களுக்காக நீங்கள் சிறப்பாகப் பணியாற்றியது எப்போது? எப்போது நீங்கள் பிறருக்காக உழைத்தீர்களோ, அப்போதுதான்; உங்கள் கருத்துக்களைக் கடல்களுக்கு அப்பாலும் எடுத்துச்சென்று அன்னிய

மொழிகளிலும் பரப்புவ்தற்கு முயன்ற போதுதான். மற்ற நாடுகளுக்கு ஒளியைத் தருகின்ற அத்தகைய முயற்சி எந்த அளவிற்கு உங்கள் நாட்டிற்கும் உதவும் என்பதற்கு, இங்கே கூடியுள்ள கூட்டமே சான்று. நான் இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் போகாமல் என் கருத்துக்களை இந்தியா விற்குள் மட்டும் கூறியிருந்தால், இப்போது ஏற்பட்டுள்ளதில் நாலில் ஒரு பங்கு பலன்கூட விளைந்திருக்காது. நம் முன் உள்ள மகத்தான லட்சியம் இது. ஒவ்வொருவரும் தயாராக இருக்க வேண்டும். உலகம் முழுவதையும் இந்தியா வெல்ல வேண்டும், அதற்குக் குறைந்த எதுவும் நம் லட்சியமல்ல. நாமெல்லாம் அதற்குத் தயாராவோம், அதற்காக நம் நரம்புகள் ஒவ்வொன்றையும் முறுக்கேற்றுவோம்.

அன்னியர் வரட்டும், படைகளைக் கொண்டுவந்து குவிக் கட்டும். பொருட்படுத்த வேண்டாம். ஓ இந்தியா விழித்தெழு, உனது ஆன்மீகத்தால் உலகை வெற்றிகொள்! ஆம், இந்த மண்ணில் முதலில் முழங்கியதைப்போல், அன்பு வெறுப்பை வெல்ல வேண்டும். பகை பகையை வெல்ல முடியாது. உலகாய தத்தையும் அதன் விளைவான எல்லா துன்பங்களையும் உலகாயதத்தால் வெற்றிகொள்ள முடியாது. படைகள் படைகளை வெல்ல முயலும்போது துன்பங்கள் பெருகுவதும் மனித சமுதாயம் மிருக நிலைக்குப் போவதும்தான் நிகழ்கிறது. ஆன்மீகம் மேலை நாடுகளை வென்றாக வேண்டும்.

தாங்கள் ஒரு தேசிய இனமாக நிலைநிற்க வேண்டுமானால், அதற்குத் தேவையானது ஆன்மீகம் என்பதைப் பிற நாட்டினர் மெல்லமெல்ல அறிந்து வருகிறார்கள். அதற்காக அவர்கள் ஆர்வத்தோடு காத்திருக்கிறார்கள். அந்தத் தேவையைப் பூர்த்தி செய்வது யார்? இந்தியாவின் மகத்தான ரிஷிகள் விட்டுச் சென்ற செய்திகளை உலகத்திலுள்ள ஒவ்வொரு நாடுகளுக்கும் சென்று பரப்புவதற்கான மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள்? இந்தச் செய்தி உலகின் ஒவ்வொரு மூலைக்கும் சென்றடைவதற் காகத் தங்கள் அனைத்தையும் தியாகம் செய்யக்கூடிய மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள்? உண்மையைப் பரப்புவதற்கு அத் தகைய துணிச்சலான பெருமக்கள்தாம் தேவை. வீரமிக்க அத்தகைய செயல்வீரர்கள் வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டும், வேதாந்தத்தின் மகத்தான உண்மைகளை அங்கே பரப்புவதில் உதவ வேண்டும். இது உலகின் தேவை, இதைச் செய்யாவிடில் உலகம் அழிந்துபோகும். மேலை உலகம்

முழுவதுமே எரிமலையின்மீது உள்ளது, அது நாளைக்கே வெடிக்கலாம், நாளைக்கே சிதறித் தூள்தூளாகலாம். அவர்கள் உலகத்தின் ஒவ்வொரு மூலையிலும் தேடினார்கள், ஆனால் நிம்மதி கிடைக்கவில்லை. இன்பக் கோப்பையின் அடிவரை குடித்துப் பார்த்தார்கள், அது வெறுமை என்பதைக் கண்டு விட்டார்கள். இந்தியாவின் ஆன்மீகக் கருத்துக்கள் மேலை நாடுகளில் ஆழமாக ஊடுருவும்படி நாம் வேலைசெய்ய வேண் டிய தருணம் இதுதான். அதனால் சென்னை இளைஞர்களே! இதை நினைவில் கொள்ளுமாறு நான் உங்களைத் தனிப்பட்ட முறையில் கேட்டுக் கொள்கிறேன். நாம் வெளியே சென்றாக வேண்டும், உலகை ஆன்மீகத்தாலும் தத்துவத்தாலும் வென்றாக வேண்டும். இதைச் செய்வோம் அல்லது செத்து மடிவோம்; வேறு வழியில்லை. இந்தியச் சிந்தனைகளால் உலகை வெல்ல வேண்டும். நம் தேசிய வாழ்வுக்கு, விழிப்புற்ற சக்தி பெற்ற தேசிய வாழ்விற்கான நிபந்தனை இதுவே.

ஆனால் ஆன்மீகச் சிந்தனைகளால் உலகை வெல்ல வேண்டும் என்று நான் கூறியதன் உண்மையான பொருளை மறந்துவிடக் கூடாது. உயிருணர்வு அளிக்கக்கூடிய கோட்பாடு களையே நான் ஆன்மீகச் சிந்தனைகள் என்று குறிப்பிட்டேன். அவற்றை வெளியுலகில் பரப்ப வேண்டுமே தவிர, நாம் நெஞ் சோடு நெஞ்சாக இறுகப் பிடித்துக் கொண்டிருக்கின்ற மூட நம்பிக்கைகளை அல்ல. அந்த மூட நம்பிக்கைகளை ஒரேயடியாக இந்த மண்ணிலிருந்தே பிடுங்கி எறிய வேண்டும். அவை மீண்டும் தலையெடுக்கவே கூடாது. இந்த மூட நம்பிக்கைகள்தான் நம் இனத்தின் வீழ்ச்சிக்குக் காரணம், நம் மூளையைப் பலவீனப் படுத்துவதும் இவைதான். உயரிய கருத்துக்களைச் சிந்திக்கும் திறனற்ற, சுயமாகச் சிந்திக்கும் ஆற்றலை இழந்த, சுறுசுறுப்பை இழந்த, கண்டகண்ட மூட நம்பிக்கைகளை எல்லாம் மதம் என்ற பெயரில் அனுமதித்துத் தன்னைத்தானே பாழ்படுத்திக் கொள்கின்ற மூளையிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இங்கே இந்தியாவில் பல்வேறு அபாயங்கள் நம் கண்முன் உள்ளன. அவற்றுள் ஒன்று வடிகட்டின உலகாயதம்; மற்றொன்று அதற்கு நேர் எதிரான வடிகட்டின மூட நம்பிக்கை. இரண்டையும் நாம் தவிர்த்தாக வேண்டும். இன்றைய மனிதன் மேலைநாட்டு அறிவு பெற்றவுடனே தன்னை எல்லாம் தெரிந்த வனாக எண்ணிக் கொள்கிறான்; நமது புராதன ரிஷிகளைப் பார்த்து கேலிச் சிரிப்புச் சிரிக்கிறான். அவனுக்கு இந்துச்

சிந்தனை எல்லாம் வெறும் குப்பை, தத்துவம் எல்லாம் குழந்தையின் வெறும் உளறல், மதம் என்பது முட்டாள்களின் மூட நம்பிக்கை.

இதற்கு மாறாக இன்னொருவன் இருக்கிறான். அவன் கல்வியறிவு பெற்றவன். ஆனால் ஒன்றைப் பற்றிக்கொண்டு அதுதான் சரி என்று சாதிப்பவன் அவன். சகுனத்திற்கும்கூட அது இது என்று விளக்கங்கள் தருகின்ற மற்றோர் எல்லையை நோக்கி ஓடுகிறான் அவன். விசித்திரமான தனது இனம் ஆகட்டும், விசித்திரமான தனது குட்டி தேவதைகள் ஆகட்டும், விசித்திரமான தனது கிராம வழக்கம் ஆகட்டும்—இவை பற்றிய ஒவ்வொரு மூட நம்பிக்கைக்கும் தத்துவ விளக்கம் தேவையா, இல்லை உவமான உவமேயங்களுடன் விளக்கம் தேவையா, எல்லாம் அவனிடம் உண்டு. இன்னும் என்னென்ன விளக்கங்கள் வைத்திருக்கிறானோ கடவுளுக்குத்தான் வெளிச்சம். ஒவ்வொரு சின்னஞ்சிறு கிராமத்தின் மூட நம்பிக்கையும் அவனுக்கு வேத விதி. அவனைப் பொறுத்தவரை, அவைகளைப் பின்பற்றுவதைச் சார்ந்துதான் தேசிய வாழ்க்கையே இருக்கிறது. இத்தகையவர்களிடமும் நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட மூட நம்பிக்கைகளை உடைய முட்டாள்களாக இருப்பதைவிட நீங்கள் நாத்திகர்களாக இருப்பதையே நான் விரும்புகிறேன். ஏனென்றால் நாத்திகனிடம் உயிர்த்துடிப்பு இருக்கிறது, அவனிடம் நீங்கள் ஏதாவது நல்லதை உருவாக்க முடியும். ஆனால் மூட நம்பிக்கை மட்டும் நுழைந்து விடுமானால் சிந்திக்கும் திறன் போய்விடுகிறது, மூளை மழுங்கிவிடுகிறது. வாழ்க்கை சீரழிவுப் பாதையில் போக ஆரம்பித்து விடுகிறது. இந்த இரண்டையும் தவிர்த்து விடுங்கள். துணிச்சலான வீரம் மிக்கவர்களே இப்போது நமக்குத் தேவை. நமது தேவையெல்லாம் ரத்தத்தில் வேகம், நரம்புகளில் வலிமை, இரும்பை ஒத்த தசைகள், எஃகை ஒத்த நரம்புகள். பலவீனப் படுத்துகின்ற வளவளகொளகொள கருத்துக்கள் எதுவும் நமக்குத் தேவையில்லை. இவை எல்லாவற்றையும் தவிர்த்து விடுங்கள்.

ரகசிய வித்தைகளை எல்லாம் தவிர்த்து விடுங்கள். மதத்தில் மர்மத்திற்கு இடமில்லை. வேதாந்தத்திலோ, வேதங்களிலோ, சம்ஹிதைகளிலோ, புராணங்களிலோ மர்மமாக ஏதாவது இருக்கிறதா? மதத்தைப் போதிக்க பழங்கால ரிஷிகள் எந்த ரகசிய சங்கங்களை வைத்திருந்தார்கள்? மகத்தான உண்மைகளை மனித குலத்திற்கு அளிப்பதற்காக அவர்கள் மாய ஜாலமோ

மந்திர ஜாலமோ செய்ததாக எங்காவது எழுதப்பட்டிருக்கிறதா? மர்ம வித்தைகளை நாடுவதும் சரி, மூட நம்பிக்கைகளும் சரி இரண்டுமே பலவீனத்தின் அடையாளங்கள்; சீரழிவின் அடையாளங்கள்; மரணத்தின் அடையாளங்கள். அவற்றைக் குறித்து எச்சரிக்கையாக இருங்கள். வலிமையாக இருங்கள், உங்கள் சொந்தக் கால்களில் நில்லுங்கள். மகத்தான, மிகவும் அதிசயப் படத்தக்க விஷயங்கள் இருக்கின்றன. இயற்கையைப் பற்றிய நமது கருத்துக்கள் செல்கின்றவரை, அவைகளை நாம் இயற்கையைக் கடந்தவை என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் அவற்றுள் எதுவுமே மர்மமானதில்லை. மத உண்மைகள் மர்மமானவை என்றோ, பனி மூடிய இமயத்தில் இருக்கின்ற ஏதோ ரகசிய சங்கங்களின் சொத்துக்கள் என்றோ இந்த மண்ணில் ஒருபோதும் உபதேசிக்கப்பட்டதில்லை. நான் இமயமலைகளில் இருந்திருக்கிறேன். நீங்கள் அங்கே இருந்ததில்லை, இங்கிருந்து அது பல நூறு மைல்கள் தொலைவில் உள்ளது. நான் ஒரு துறவி, கடந்த பதினான்கு ஆண்டுகளாக பயணம் செய்தபடியே இருக்கிறேன். இத்தகைய ரகசிய சங்கங்கள் எதுவும் அங்கு எங்குமே இல்லை. இந்த மூட நம்பிக்கைகளின் பின்னால் ஓடாதீர்கள். அதைவிட நீங்கள் உறுதியான நாத்திகர்களாகி விடுங்கள், அது உங்களுக்கும் நல்லது, உங்கள் இனத்திற்கும் நல்லது. ஏனென்றால் அதன்மூலம் நீங்கள் வலிமை பெறுவீர்கள். ஆனால் இவையோ, சீரழிவையும் மரணத்தையும் தவிர எதுவும் அல்ல. வலிமை வாய்ந்த மனிதர்கள் இந்த மூட நம்பிக்கைளில் காலம் கழிப்பதும், கேடுகெட்ட இந்த மூட நம்பிக்கைகளை விளக்குவதற்குக் கதைகளைக் கண்டுபிடிப்பதில் நேரம் முழுவதையும் செலவழிப்பதும் மனித குலத்திற்கே அவமானம்! தைரியமாக இருங்கள், எல்லாவற்றையும் இப்படி விளக்க முயலாதீர்கள். நம் உடம்பில் புண்களும் ரணங்களும் இருக்கலாம். இவற்றை அகற்ற வேண்டும், வெட்ட வேண்டும், அழித்துவிட வேண்டும். அதுபோல் நம்மிடம் பல மூட நம்பிக்கைகள் இருக்கின்றன என்பது உண்மை. அவை நமது மதத்தையோ, நமது தேசிய வாழ்க்கையையோ, நமது ஆன்மீகத்தையோ அழித்துவிடாது. மதத்தின் ஒவ்வொரு கோட்பாடும் பாதுகாப்பாகவே இருக்கிறது. இந்த ரணங்களை எவ்வளவு சீக்கிரம் அகற்றுகிறோமோ, அந்த அளவுக்கு இந்தக் கோட்பாடுகளும் மகத்தான பெருமையோடு ஒளி வீசும். அந்தக் கோட்பாடுகளை உறுதியாகப் பற்றுங்கள்.

ஒவ்வொரு மதமும் தன்னை உலகம்தழுவிய மதம் என்றே உரிமை பாராட்டுவதை நீங்கள் கேட்கிறீர்கள். ஆனால் நான் சொல்கிறேன்— அப்படி ஒன்று இருக்கவே முடியாது. அப்படி ஒன்று இருந்து அத்தகைய உரிமை கொண்டாட இயலும் என்றால், அது நமது மதமாக மட்டுமே இருக்க முடியும், வேறு எந்த மதமாகவும் இருக்க முடியாது. ஏனென்றால் மற்ற மதங்கள் ஒவ்வொன்றும் மனிதர்களை, ஒருவரையோ சிலரையோ நம்பி யிருக்கிறது. அந்த மதத்தினர் வரலாற்று மனிதராகக் கருதுகின்ற ஒருவரைச் சுற்றியே அந்த மதங்கள் எழுப்பப் பட்டுள்ளன. தங்கள் மதத்திற்கு வலிமை என்று அவர்கள் நினைக்கின்ற அது உண்மையில் பலவீனமாகும். ஏனென்றால் வரலாற்று மனித ராகக் கருதப்படுபவர் வரலாற்று மனிதர் அல்ல என்று நிரூபித்து விட்டால் போதும், அவரைச் சுற்றி எழுப்பப்பட்ட மதம் அப் படியே சிதறிப்போகும். இந்த மதங்களை உருவாக்கியவர்களின் வாழ்க்கையில் இப்பொழுதே பாதி உடைந்து நொறுங்கி விட்டன, மறுபாதியைப் பற்றியோ தீவிரமான சந்தேகங்கள் நிலவுகின்றன. இந்த நிலையில் இவர்களின் வார்த்தைகளை மட்டுமே அத்தாட்சியாகக் கொண்ட அந்த மத உண்மைகள் எல்லாம் காற்றில் கரைந்து மறைகின்றன.

நமது மதத்தில் அவதார புருஷர்கள் எண்ணற்றோர் உள்ள னர். ஆனாலும் நமது மத உண்மைகள் அவர்கள் யாரையும் நம்பி இருக்கவில்லை. கிருஷ்ணரின் பெருமை அவர் கிருஷ்ண ராக இருந்தார் என்பதில் இல்லை, வேதாந்தத்தின் மகத்தான ஆச்சாரியராக இருந்தார் என்பதிலேயே உள்ளது. அவர் அப்படி வேதாந்த ஆச்சாரியராக இல்லாதிருந்தால், புத்தரின் பெயர் இந்தியாவிலிருந்து மறைந்து போனதைப்போல் அவரது பெயரும் அழிந்திருக்கும். இவ்வாறு நமது சார்பு எப்போதும் கோட்பாடுகளிடமே தவிர தனி மனிதர்களிடம் அல்ல. அவதார புருஷர்கள் என்பவர்கள் கோட்பாடுகளின் திரண்ட வடிவமாக அவற்றை வாழ்ந்துகாட்ட வருபவர்களே தவிர வேறல்ல. கோட் பாடுகள் இருக்குமானால், பின்பற்ற ஆயிரக்கணக்கானோர், லட்சக்கணக்கானோர் வருவார்கள். கோட்பாடு பாதுகாப்பாக இருக்குமானால் புத்தரைப் போன்றோர் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் பிறப்பார்கள். கோட்பாடுகள் அழிந்து போகுமானால், மறக்கப்படுமானால், வரலாற்று மனிதர் என்று சொல்லப்படுகின்ற ஒருவரைப் பற்றிக்கொண்டு தேசிய வாழ்க்கை முழுவதுமே இயங்க நேருமானால் அந்த

மதத்தின் நிலை, அந்தோ பரிதாபம்! அதற்கு ஆபத்தே வந்து சேரும்.

நமது மதம் ஒன்றுதான் தனி மனிதர்களைச் சார்ந்திருக்க வில்லை. அதேவேளையில், லட்சக்கணக்கான மனிதர்களுக்கு அதில் இடமும் உண்டு, இன்னும் எத்தனையோ பேரை நுழைப் பதற்குப் போதுமான இடமும் நமது மதத்தில் உள்ளது. ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் கட்டாயம் கோட்பாடுகளின் விளக்க மாக இருக்க வேண்டும். இதை நாம் மறக்கக்கூடாது. நமது மதத்தின் இந்தக் கோட்பாடுகள் பத்திரமாக உள்ளன; அதைப் பத்திரமாகப் பாதுகாப்பதும் காலங்காலமாக அதில் சேரும் மலினங்களிலிருந்து அதைப் பேணுவதும் நம் ஒவ்வொருவரின் தலையாய கடமையாகும்.

திரும்பத்திரும்ப எத்தனையோ முறை நமது இனம் சீரழிவு களுக்கு உள்ளானபோதும் இந்த வேதாந்தக் கோட்பாடுகள் ஒருசிறிதும் மாசுபடாமல் இருப்பது ஆச்சரியம்தான். எவ்வளவு கெட்டவர்களாக இருந்தாலும் யாருக்கும் அவைமீது சேற்றை வாரி இறைக்கும் துணிச்சல் இல்லை. உலகிலேயே மிகச் சிறந்த முறையில் பாதுகாக்கப்பட்டவை நமது சாஸ்திரங்களே. பிற மத நூல்களுடன் ஒப்பிடும்போது இவைகளில் இடைச்செரு கல்கள் இல்லை, மூலப்பாடத்தை மாற்றும் சித்திரவதைகள் இல்லை, முக்கியக் கருத்துக்களின் சாரத்தை அழிக்கும் வேலை யும் இல்லை. தோன்றிய காலத்தில் இருந்ததைப்போல் அப்படியே இருந்தவாறு, அது மனித மனங்களை லட்சியத்தை நோக்கி, குறிக்கோளை நோக்கிச் செலுத்திக் கொண்டிருக்கிறது. இந்த நூல்களுக்கு பல்வேறு உரையாசிரியர்கள் உரை எழுதி யிருக்கிறார்கள், மகத்தான ஆச்சாரியர்கள் உரை எழுதியிருக் கிறார்கள், மகத்தான ஆச்சாரியர்கள் பிரச்சாரம் செய்துள் ளார்கள். இவற்றை அடிப்படையாகக் கொண்டு பல நெறிகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன.

ஒன்றுக்கொன்று முரணானவைபோல் தோன்றுகின்ற கருத்துக்களையும் இந்த வேதங்களில் காணலாம். சில பகுதிகள் முற்றிலுமாக துவைதக் கருத்தைக் கூறுகின்றன, மற்றவை அத் வைதத்தை மட்டுமே கூறுகின்றன. துவைத உரையாசிரியர்கள் வேறு வழி தெரியாமல், அத்வைதப் பகுதிகளை அப்படியே அமுக்க விரும்புகிறார்கள். மத போதகர்களும் புரோகிதர்களும் அவைகளுக்கு துவைதப் பொருள் கூற விரும்புகின்றனர். அத்வைத உரையாசிரியர்களோ துவைதப் பகுதிகளை

அதுபோல் செய்ய விரும்புகின்றனர். இது வேதங்களின் தவறு அல்ல. வேதங்கள் முழுவதுமே துவைதபரமானவை என்று நிரூபிக்க முயல்வது முட்டாள்தனம். வேதங்கள் முழுவதையும் அத்வைதமாகக் காட்ட முயல்வதும் அதைப் போன்ற முட்டாள் தனமே. வேதங்கள் துவைதமாகவும் அத்வைதமாகவும் உள்ளன.

புதிய கருத்துக்களின் துணையில் அதை நாம் நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். அவை இறுதியான லட்சியத்திற்கு அழைத்துச் செல்கின்ற இருவேறு கொள்கைகள். மனத்தின் படிப்படியான வளர்ச்சிக்கு துவைதம், அத்வைதம் இரண்டும் தேவை. அதனால்தான் வேதங்கள் இரண்டையும் உபதேசிக் கின்றன. மனித இனத்தின்மீது கொண்ட கருணையின் காரண மாக வேதங்கள் உயர் லட்சியத்தை அடைய பல்வேறு படிகளைக் காட்டியுள்ளன. குழந்தைகளைக் குழப்புவதற்காக வேதங்கள் பயன்படுத்துகின்ற ஒன்றுக்கொன்று முரணான வீண் வார்த்தைகள் அல்ல அவை. அவை குழந்தைகளுக்கு மட்டுமல்ல, வளர்ந்தவர்களுக்கும் தேவையானவையே.

நமக்கு உடம்பு இருக்கும்வரை, உடம்பும் நாமும் ஒன்றே என்ற கருத்தில் நாம் மயங்கியிருக்கும்வரை, நமக்கு ஐம்புலன்கள் உள்ளதுவரை, அவற்றால் வெளியுலகை உணரும்வரை சகுணக் கடவுள் அவசியமே. இத்தகைய கருத்துக்களைக் கொண்டிருக் கும்வரை, மகத்தான ஆச்சாரியரான ராமானுஜர் நிரூபித்தது போல், இறைவன், இயற்கை, ஜீவாத்மா போன்ற கருத்துக் களையும் ஏற்றேயாக வேண்டும். முக்கோணத்தின் ஒரு பக்கத்தை ஏற்றால், அதை முழுவதுமாக ஏற்றுக்கொண்டே தீர வேண்டும்; நம்மால் அதைத் தவிர்க்க முடியாது. எனவே புறவுலகைக் காணும்வரை சகுணக் கடவுளையும் ஜீவாத்மாவையும் மறுக்க முயல்வது சுத்தப் பைத்தியக்காரத்தனம்.

ஆனால் ரிஷிகளின் வாழ்வில் சிலவேளைகளில், மனம் தன் எல்லைகளைக் கடந்து சென்றது போலாகிறது, மனிதன் இயற்கைக்கு அப்பால் செல்கிறான், 'அதை அடைய முடியாமல் வார்த்தைகளும் மனமும் எந்த இடத்திலிருந்து திரும்புகின் றனவோ'[1] என்று சுருதிகள் சொல்கின்றதே, 'வார்த்தைக்கும் மனத்திற்கும் எட்டாதது' அந்த இடத்தையும் கடந்து செல் கிறான். 'அங்கே கண்கள் பார்க்க முடியாது, காதுகள் கேட்க முடியாது.'[2] 'அதை அறிந்தோம் என்றும் சொல்ல முடியாது;

1. தைத்திரீய உபநிடதம், 2. 9.
2. கேன உபநிடதம், 1. 3.

அறியவில்லை என்றும் சொல்ல முடியாது.'[1] அங்கே மனித ஆன்மா எல்லா எல்லைகளையும் கடக்கிறது. அப்பொழுது, அப்பொழுது மட்டுமே மனித ஆன்மாவில் அத்வைத உணர்வு ஒளிர்கிறது— நானும் பிரபஞ்சம் முழுவதும் ஒன்று, நானும் பிரம்மமும் ஒன்றே.[2] இந்த நிலையை ஞானத்தாலோ தத்துவத்தாலோ மட்டும்தான் நாம் அடைய முடியும் என்பதல்ல. அதன் சில அம்சங்களை பக்தியின் வலிமையாலும் பெற முடியும். பாகவதத்தில் இதற்குச் சான்று உள்ளது. கோபியரைவிட்டு கண்ணன் பிரிந்து சென்றுவிட்டான்; அவனுடைய பிரிவுத் துயரால் கோபியர் துடிக்கின்றனர், கண்ணனைப் பற்றிய நினைவு அவர்கள் மனத்தில் அவ்வளவு ஆழமாகப் பதிந்து, அவர்கள் தங்கள் உடம்பையே மறந்துவிட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தாங்களே கிருஷ்ணன் என்று நினைத்து, தங்களையே கிருஷ்ணனாக அலங்கரித்துக் கொண்டு, கிருஷ்ணன் விளையாடுவதைப்போல் விளையாடினார்கள்.[3] எனவே ஒன்றாகும் இந்த நிலை பக்தியின் மூலமாகவும் வருகிறது என்பதை நாம் புரிந்துகொள்ள முடிகிறது.

பழைய காலத்தில் பாரசிக சூஃபி கவிஞர் ஒருவர் இருந்தார். அவர் தமது பாடல் ஒன்றில் கூறுகிறார்:

நான் என் காதலியிடம் வந்தேன், கதவு மூடியிருந்தது.
நான் கதவைத் தட்டினேன், உள்ளிருந்து ஒரு குரல் வந்தது—
'யார் அங்கே?'
'நான்தான்' என்றேன், கதவு திறக்கவில்லை.
மறுமுறை கதவைத் தட்டினேன்.
அதே குரல், 'யார் அங்கே?' என்று கேட்டது.
'நான் இன்னார்' என்று சொன்னேன்.
கதவு திறக்கப்படவில்லை.
மூன்றாவது முறையும் நான் கதவைத் தட்டினேன்.
அதே குரல் கேட்டது: 'யார் அங்கே?'
'என் அன்பே, நீயேதான் நான்' என்றேன்,
கதவு திறந்தது.

எனவே பல படிகள் இருக்கின்றன. பழைய உரையாசிரியர்களுக்கு இடையே சச்சரவுகள் இருந்தாலும், நாம் சண்டையிட

---

1. கேன உபநிடதம், 1. 4.
2. பிருஹதாரண்யக உபநிடதம், 1. 4. 10.
3. பாகவதம், 10. 30. 3.

வேண்டியதில்லை. அந்த உரையாசிரியர்கள் அனைவரும் நம்மால் மதிக்கப்பட வேண்டியவர்கள். அறிவிற்கு எல்லை எதுவும் இல்லை. முற்காலத்திலும் சரி, தற்காலத்திலும் சரி எல்லாம் அறிகின்ற தன்மை என்பது யாருக்கும் தனிப்பட்ட சொத்தாக இருக்கவில்லை. அன்று மகான்களும் ரிஷிகளும் இருந்தார்கள் என்றால், இன்றும் பலர் இருந்தாக வேண்டும். அன்று வியாசர்களும் வால்மீகிகளும் சங்கரர்களும் இருந்தார்கள் என்றால், நீங்கள் ஒவ்வொருவரும் ஏன் ஒரு சங்கரராகக் கூடாது? இது நமது மதத்தின் நினைவில்கொள்ள வேண்டிய மற்றொரு முக்கியக் கருத்தாகும். பிற எல்லா மத சாஸ்திரங்களுக்கும் தெய்வப் பேருணர்வே (Inspiration) பிரமாணமாகக் கூறப்படுகிறது, ஆனால் இந்தப் பேருணர்வு ஏதோ சிலருக்கு மட்டுமே ஏற்படும், உண்மைகள் அவர்களின் மூலம்தான் சாதாரண மக்களுக்கு வந்தன. மற்ற அனைவரும் அதற்கு அடிபணிந்தாக வேண்டும். நாசரேத்தின் ஏசுவிற்கு அவ்வாறு உண்மை உதித்தது, நாம் அனைவரும் அவருக்கு அடிபணிய வேண்டும். மந்திரத்தைத் தரிசித்த, சிந்தனைகளை நேரில் கண்ட இந்திய ரிஷிகளிடம் உண்மை மலர்ந்தது. அந்த உண்மைகள் எதிர்காலத்தில் எல்லா ரிஷிகளிடமும் தோன்றும். வாய்ச்சொல் வீரர்களிடமோ, புத்தகப் புழுக்களிடமோ, பண்டிதர்களிடமோ, மொழி வல்லுனர்களிடமோ அந்த உண்மை தோன்றுவதில்லை. சிந்தனைகளை நேரில் காண்கின்ற ரிஷிகளிடம் மட்டுமே அது தோன்றும். அதிகமான பேச்சாலோ மிகவுயர்ந்த அறிவாலோ சாஸ்திரங்களைப் படிப்பதாலோ ஆன்மாவை அடைய முடியாது.[1] பாருங்கள், இதை நம் சாஸ்திரங்களே கூறுகின்றன. உலகத்தில் உள்ள வேறு எந்த மதத்தின் சாஸ்திரத்திலாவது, நமது சாஸ்திரங்கள் சொல்வதுபோல் இவ்வளவு தைரியமாக அந்த சாஸ்திரங்களையே படிப்பதால்கூட, நீங்கள் ஆன்மாவை அடைய முடியாது என்று கூறப்பட்டுள்ளதா? மனம் திறந்து சொல்லுங்கள்.

சர்ச்சுக்குப் போவதோ, நெற்றியில் சின்னங்களை இட்டுக் கொள்வதோ, விசித்திரமாக உடை அணிந்து கொள்வதோ மதம் ஆகிவிடாது. வானவில்லின் அத்தனை வண்ணங்களையும் நீங்கள் உங்கள்மீது தீட்டிக் கொள்ளலாம்; ஆனால் உங்கள் இதயம் திறக்கவில்லை என்றால், நீங்கள் கடவுளை

1. கட உபநிடதம், 1.2.23.

விலங்குகளுக்கும் இடைப்பட்ட நிலையில் இருப்பதை அப்போது அறிவீர்கள். முதலில் உடல் வலிமையை வளர்த்துக் கொள்ளுங்கள். அதன் பிறகே மனத்தைக் கட்டுப்படுத்த முடியும். ''நாயமாத்மா பலஹீனேன லப்ய:—இந்த ஆன்மா பலவீனர்களால் அடையப்படுவதில்லை.''[1] புரிகிறதா?'

சீடர்: 'சுவாமிஜி, இந்தப் பலவீனம் என்ற சொல்லுக்கு பிரம்மச்சரியத்திலிருந்து வழுவுவது என்று அல்லவா உரையாசிரியர் (சங்கரர்) பொருள் கொள்கிறார்.'

சுவாமிஜி: 'கொள்ளட்டுமே! உடல் பலவீனமானவன் ஆன்மாவை அடையத் தகுதியற்றவன் என்று நான் சொல்கிறேன்.'

சீடர்: 'ஆனால் மூடர்கள் பலர் வலிமையான உடலைப் பெற்றிருக்கிறார்களே!'

சுவாமிஜி: 'சற்று சிரமப்பட்டு ஒருமுறை அவர்களுக்கு நல்ல கருத்துக்களைக் கொடுக்க முடியுமானால், உடல் வலிமையற்றவனைவிட அவர்கள் வெகுசீக்கிரத்தில் அதை நடைமுறையில் பின்பற்றுவார்கள். பலவீனமான உடம்பு உடையவர்களால், காமத்தையோ கோபத்தையோ கட்டுப்படுத்துவது மிகவும் கடினமாக இருப்பதை நீ பார்க்கவில்லையா? மெலிந்த உடலுடன் இருப்பவர்கள் மிக எளிதாகக் கோப வசப்படுவார்கள்; காமவசப் படுவார்கள்.'

சீடர்: 'ஆனால் இந்த விதிக்கு விலக்கானவர்களும் இருக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'அதை யார் இல்லை என்றது? ஒருமுறை மனம் கட்டுப்பட்டுவிட்டது என்றால் பிறகு அவனது உடம்பு வலிமையாக இருக்கிறதா அல்லது மெலிந்து போனதா என்பதுபற்றிக் கவலையே இல்லை. உண்மை என்னவென்றால், வலிமையான உடல் இல்லாதவன் ஆன்ம ஞானத்திற்குத் தகுதி உடையவன் ஆக மாட்டான். ''உடம்பில் ஒரு தழும்பு இருந்தாலும் கூட அவனால் நிறைநிலையை அடைய முடியாது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு.'

சுவாமிஜி உணர்ச்சிவசப்பட்டுப் பேசுவதைக் கண்ட சீடர், அதற்கு மேலும் அந்தப் பேச்சை வளர்க்க விரும்பவில்லை. சுவாமிஜி கூறுவதை ஏற்றுக்கொண்டு அமைதியாக இருந்தார். சிறிதுநேரம் கழிந்தது. சுவாமிஜி அங்குக் கூடியிருப்பவர்களைப்

---

1. முண்டக உபநிடதம், 3. 2. 4.

பார்த்து, 'இந்தப் புரோகிதன் இன்று நிவேதிதை தொட்ட உணவைச் சாப்பிட்டான் தெரியுமா! அவள் தொட்ட இனிப்பைச் சாப்பிட்டான். அதாவது பரவாயில்லை, (சீடரைப் பார்த்து), ஆனால் அவள் தொட்ட தண்ணீரை நீ எப்படிக் குடித்தாய்?' என்றார்.

சீடர்: 'அப்படிச் செய்யும்படிக் கட்டளையிட்டது நீங்கள். குரு கட்டளையிட்டால் நான் எதையும் செய்வேன். தண்ணீரைக் குடிக்க எனக்குப் பிடிக்கவில்லைதான். ஆனால் நீங்கள் குடித்து விட்டு என்னிடம் தந்தீர்கள். அதை நான் பிரசாதமாக ஏற்றுக் கொண்டேன்.'

சுவாமிஜி: 'அப்படியா! இப்போது உன் ஜாதி போய் விட்டது. இனிமேல் உன்னை யாரும் பிராமணன் என்று மதிக்கமாட்டார்கள்.'

சீடன்: 'மதிக்காவிட்டால் போகட்டும், நீங்கள் கட்டளை யிட்டால் சண்டாளனின் வீட்டிலும் உண்பேன்.'

சீடரின் இந்த வார்த்தைகள் சுவாமிஜியையும் அங்கிருந் தவர்களையும் பலத்த சிரிப்பில் ஆழ்த்தின.

நடு இரவு ஆகியிருந்தது. சீடர் தாம் தங்கியிருந்த இடத்திற்கு வந்தார், வீடு பூட்டப்பட்டு இருந்தது. எனவே வீட்டிற்கு வெளி யிலேயே படுத்துக்கொண்டார்.

காலத்தின் சக்கரம், தனது வேகத்தில் சிறிதும் மாற்றம் இல்லாமல் சுழன்றுகொண்டே இருக்கிறது. சுவாமிஜியும் நிவேதிதையும் யோகானந்தரும் இந்த உலகத்தில் இப்போது இல்லை. ஆனால் அவர்கள் விட்டுச்சென்ற புனிதமான நினைவுகள் மனத்தில் உள்ளன. அந்த நினைவுகளைத் தம்மால் இயன்றவரை எழுதி வைப்பதைப் பெரியதோர் ஆசீர்வாதமாகச் சீடர் நினைக்கிறார்.

## 21

பேலூரில் வாடகை மடம், 1898

சீடர் மடத்திற்கு வந்திருந்தார். மடம் இப்போது நீலாம்பர் பாபுவின் மாளிகைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. இதன் அருகில் தான் புதிய மடத்திற்கான இடம் வாங்கப்பட்டுள்ளது. மாலை நான்கு மணி.

சுவாமிஜி சீடரை அழைத்துக்கொண்டு புதிய இடத்தைப் பார்ப்பதற்காகச் சென்றார். அந்த இடம் காடாக இருந்தது. வடக்குப் பக்கத்தில் செங்கல்லால் கட்டப்பட்ட ஒற்றை மாடிக் கட்டிடம் ஒன்று இருந்தது. சுவாமிஜி நடந்துகொண்டே

## 3. எனது போர் முறை

பிப்ரவரி 9 மாலை, விக்டோரியா ஹால்

கூட்ட மிகுதியால் அன்று நம்மால் சொற்பொழிவைத் தொடர்ந்து நடத்த முடியவில்லை. எனவே சென்னை மக்கள் எனக்கு அளித்த அன்புமயமான வரவேற்புக்கு இப்போது நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். அந்த வரவேற்புரையில் அழகிய சொற்கள் பல கூறப்பட்டன. மனம்திறந்து பாராட்டப் பட்ட அந்தக் கனிவான சொற்களுக்குத் தகுதியானவனாக என்னை ஆக்குமாறு எம்பெருமானைப் பிரார்த்திப்பதையும், நமது மதத்திற்காகவும் நமது தாய்நாட்டின் சேவைக்காகவும் என் வாழ்நாள் முழுவதும் பாடுபடுவதையும் தவிர வேறு எப்படி என் நன்றியுணர்வைத் தெரிவிப்பது என்பது எனக்குத் தெரியவில்லை. அந்தப் பாராட்டுரைகளுக்குத் தகுதி படைத் தவனாக இறைவன் என்னை ஆக்குவாராக!

என்னிடமுள்ள எல்லா குறைபாடுகளுடன், என்னிடம் சிறிது தைரியம் இருப்பதாக நான் நினைக்கிறேன். இந்தியா விலிருந்து மேலை நாட்டிற்குத் தருவதற்கான செய்தி ஒன்று என்னிடம் இருந்தது. தைரியமாக அதை அமெரிக்கர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அளித்தேன். இன்றைய தலைப்பை எடுத்துக் கொள்ளுமுன் சில வார்த்தைகளைத் தைரியமாக உங்களிடம் கூற விரும்புகிறேன். என்னை நிலைகுலையச் செய்யவும், என் வளர்ச்சியைத் தடுக்கவும், முடியுமானால் என்னையே நசுக்கி எறிந்துவிடவும் சில சூழ்நிலைகள் என்னைச் சுற்றி உருவாகியது உண்டு. அத்தகைய முயற்சிகள் எப்போதும் தோல்வி அடைவதைப்போல் இவையும் தோல்வியையே தழுவின. அதற்காகக் கடவுளுக்கு நன்றி. ஓரளவுக்குத் தவறான அபிப்பிராயமும் கடந்த மூன்று ஆண்டுகளாக நிலவி வருகிறது. அன்னிய நாட்டில் இருந்தவரை ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அமைதி காத்தேன். ஆனால் இப்பொழுது, என் தாய்நாட்டு மண்ணின்மீது நின்றுகொண்டு சில விளக்கங்களைக் கூற விரும்புகிறேன். இதன் விளைவு என்ன என்பதைப்பற்றி நான்

கவலைப்படவில்லை. அந்தச் சொற்கள் உங்களிடம் எத்தகைய உணர்ச்சியை எழுப்பும் என்பதையும் நான் பொருட்படுத்த வில்லை; அது எனக்கு ஒரு பிரமாதமான விஷயமல்ல; ஏனெனில் நான் ஒரு துறவி. ஒரு தடியோடும் கமண்டலத்தோடும் நான்கு ஆண்டுகளுக்கு முன் இந்த நகரத்திற்குள் நுழைந்த அதே சன்னியாசியாகவே நான் இப்போதும் இருக்கிறேன். விரிந்து பரந்த உலகம் என் முன் இருக்கவே செய்கிறது. முன்னுரையை மேலும் நீட்டாமல் விஷயத்திற்கு வருகிறேன்.

முதன்முதலில் தியாசஃபிகல் சொசைட்டியைப் (Theosophical Society) பற்றி நான் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும். அவர்கள் நம் நாட்டிற்கு நல்லது செய்திருக்கிறார்கள் என்பதை நான் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. அதற்காக ஒவ்வோர் இந்துவும் அவர்களுக்கு, அதிலும் குறிப்பாக அன்னி பெசன்ட் அம்மையாருக்கு நன்றியுடையவனே. அவரைப்பற்றி எனக்கு அதிகமாக எதுவும் தெரியாது. ஆனால் நான் அறிந்த திலிருந்தே அவர் நமது தாய்நாட்டிடம் உண்மையான அனு தாபம் உள்ளவர், நம் நாட்டை உயர்த்துவதற்காகத் தமது சக்திக்கு உட்பட்ட அனைத்தையும் செய்து வருபவர் என்பதை என்னுள் ஆழமாக உணர்ந்து கொண்டேன். அதற்காக உண்மை யான ஒவ்வோர் இந்தியனும் நிரந்தரமாக அவருக்கு நன்றிக்கடன் பட்டவன். அவர்மீதும் அவரைச் சேர்ந்தவர்கள் மீதும் எல்லா ஆசிகளும் என்றென்றைக்கும் பொழியட்டும்!

ஆனால் அது ஒரு விஷயம், அந்த சொசைட்டியில் சேர்வது என்பது மற்றொரு விஷயம். மதிப்பும் மரியாதையும் அன்பும் கொள்வது ஒரு விஷயம்; ஒருவர் எதைச் சொன்னாலும் அதனை அலசி ஆராயாமல் பகுத்தறியாமல் அப்படியே ஏற்றுக்கொள்வது மற்றொரு விஷயம். அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் நான் சாதித்த ஏதோ அந்தச் சிறிய வெற்றிக்கு தியாசஃபிகல் சொசைட்டியினர் எனக்கு உதவியதாக இங்கெல்லாம் பேசப்படுகிறது. அந்த ஒவ்வொரு சொல்லும் தவறு, ஒவ்வொரு சொல்லும் பொய் என்பதை வெளிப்படை யாக உங்களுக்கு நான் சொல்லியாக வேண்டும்.

தாராளமயமான சிந்தனைகள், மாறுபட்ட கருத்துக் களிடமும் பெருந்தன்மை என்றெல்லாம் பெரிய பேச்சுக் களைக் கேட்கிறோம். மிக நல்லது. நிஜ வாழ்க்கையிலோ, இந்தத் தாராளம், பெருந்தன்மை எல்லாம் ஒருவன் சொல்வதை அப்படியே நம்பும்வரைதான். சிறிது மாறுபட்டால்போதும்

பெருந்தன்மை பறந்துவிடும், அன்பு மறைந்துவிடும். இன்னும் சிலர் இருக்கிறார்கள், அவர்களுக்கென்று சுயநலப் பாதைகளும் உள்ளன. அவர்களின் பாதையில் ஏதாவது தடை குறுக்கிட்டால் போதும், அவர்களின் இதயங்கள் எரியும், வெறுப்பு கொப்புளித்து வெளிப்படும், என்ன செய்வது என்றே அவர்களுக்குத் தெரியாது.

இந்துக்கள் தங்கள் வீடுகளைச் சுத்தம் செய்ய முயன்றால், இந்தக் கிறிஸ்தவப் பாதிரிகளுக்கு வந்தத் துன்பம் என்ன? இந்துக்கள் தங்களையே சீர்திருத்த முனைந்தால் பிரம்ம சமாஜத்தினருக்கும் மற்ற சீர்திருத்த அமைப்புகளுக்கும் நேர்ந்த தொல்லைதான் என்ன? அவர்கள் ஏன் எதிராக நிற்க வேண்டும்? ஏன் இந்த இயக்கங்களின் பெரிய பகைவர்களாக வேண்டும்? நான் கேட்கிறேன், ஏன்? ஏன் என்றோ, எப்படியென்றோ கேட்கக் கூடாத அளவிற்கு அவர்களது வெறுப்பும் பொறாமையும் கடுமையாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.

வசதியற்ற, யாருக்கும் தெரியாத, நண்பர்களோ அறிமுகமோ இல்லாத ஒரு சன்னியாசியாக, கடல்கடந்து நான்கு ஆண்டுகளுக்குமுன் அமெரிக்கா சென்றேன். அங்கே சென்று தியாசஃபிகல் சொசைட்டியின் தலைவரைச் சந்தித்தேன். அவர் ஓர் அமெரிக்கர், இந்தியாவை நேசிப்பவர். ஒருவேளை அவர் அங்குள்ள யாருக்காவது ஓர் அறிமுகக் கடிதம் தருவார் என எண்ணினேன். அவரோ என்னிடம், 'நீங்கள் எங்கள் சொசைட்டியில் சேர்வீர்களா?' என்று கேட்டார். 'முடியாது, எப்படி முடியும்? உங்கள் கொள்கைகளுள் பெரும்பாலானவற்றில் எனக்கு நம்பிக்கையில்லை' என்றேன் நான். இதைக் கேட்டதும் அவர், 'பொறுக்க வேண்டும், என்னால் உங்களுக்கு எதுவும் செய்ய முடியாது' என்று கூறிவிட்டார். இது எனக்குப் பாதை வகுத்துத் தரும் வழியல்லவே!

சென்னை நண்பர்கள் சிலரின் உதவியால் நான் அமெரிக்கா சென்றது உங்களுக்குத் தெரியும். அவர்களுள் பெரும்பாலோர் இங்கே உள்ளார்கள். நான் மிகுந்த நன்றிக் கடன்பட்டிருக்கும் நீதிபதி திரு. சுப்பிரமணிய ஐயர் மட்டும் இல்லை. ஒரு மேதையின் உள்ளுணர்வு பெற்றவர் அவர், எனது மிக நெருங்கிய நண்பர்களுள் ஒருவர், ஓர் உண்மை நண்பர், இந்தியாவின் உண்மையான ஒரு குடிமகன்.

சர்வ மத மகாசபை கூடுவதற்குப் பல மாதங்களுக்கு முன்பே நான் அமெரிக்கா சென்றுவிட்டேன். பணம் மிகக்

குறைவாகத்தான் என்னிடம் இருந்தது, அதுவும் விரைவில் செலவாகிவிட்டது. குளிர்காலம் நெருங்கிக் கொண்டிருந்தது, என்னிடமோ வெயில் காலத்திற்குரிய மெல்லிய ஆடைகளே இருந்தன. உறையச் செய்கின்ற அந்தக் குளிரில் என்ன செய்வ தென்றே எனக்குத் தெரியவில்லை. தெருக்களில் பிச்சையெடுத் தாலோ சிறையில்தான் இடம் கிடைக்கும். சில டாலர்களைத் தவிர எல்லாம் கரைந்துவிட்டன. சென்னை நண்பர்களுக்குத் தந்தி கொடுத்தேன். என் நிலை தியாசபிக் சொசைட்டியினருக் குத் தெரியவந்தது. அவர்களுள் ஒருவர் எழுதினார்— 'அந்தப் பிசாசு ஒழியப் போகிறது. நமக்கு இறைவன் அருள்புரிந்து விட்டார்'. இதுதான் எனக்குப் பாதை அமைத்துத் தருவதா?

இதையெல்லாம் இப்போது சொல்லியிருக்க மாட்டேன். நம் நாட்டு மக்கள் விரும்பியதால் கூற வேண்டியதாயிற்று. கடந்த மூன்று ஆண்டுகளாக இதைப்பற்றி நான் வாயைத் திறந்ததே இல்லை. மௌனமே என் குறிக்கோளாக இருந்தது. ஆனால் இன்று வெளியே வந்துவிட்டது. விஷயம் அத்துடன் முடியவில்லை. தியாசபிக் சொசைட்டியினர் சிலரை நான் சர்வ சமயப் பேரவையில் பார்த்தேன், அவர்களோடு பேசவும் கலந்து பழகவும் விரும்பினேன். அப்போது அவர்கள் முகத்தில் தோன்றிய வெறுப்பு இன்னும் என் நினைவில் இருக்கிறது. 'தேவர்கள் கூடும் இடத்தில் இந்தப் புழுவிற்கு என்ன வேலை?' என்று கேட்பதைப்போல் இருந்தது அது. சர்வமத மகாசபை யில் நான் பெயரும் புகழும் பெற்றதைத் தொடர்ந்து பல்வேறு பணிகளும் வந்தன. ஆனால் ஒவ்வொரு படியிலும் தியாசஃபிகல் சொசைட்டியினர் என்னைச் சிறுமைப்படுத்தவே முயன்றனர். என் சொற்பொழிவுகளுக்கு வர வேண்டாம் என்று தியாசஃபிகல் சொசைட்டியினர் தடுக்கப்பட்டனர். நான் பேசுவதைக் கேட்டால் அவர்களுக்கு இந்த சொசைட்டியிடம் நம்பிக்கை போய்விடும் என்ற பயம்தான் காரணம். குறிப்பிட்ட சிலர் மட்டுமே புரிந்து கொள்ளக்கூடிய அவர்களின் நியதிகளும் அதையே கூறுகின்றன— அங்கு சேர்பவர்கள் குதுமி[1] மற்றும் மொரியாவிடமிருந்தும்,[1] அவர்களின் பிரதிநிதிகளான திரு. ஜட்ஜ் மற்றும் திருமதி. அன்னிபெசன்டின்மூலமே உபதேசங்களைக் கேட்க வேண்டும். இந்த சொசைட்டியில்

1. தியாசஃபிகல் சொசைட்டியினரின் மகாத்மாக்களுள் (Master) இருவர். இவர்கள் நுண்ணுடலில் வாழ்வதாகவும் நடுவாளர்களின் (Medium) மூலம் சொசைட்டியினருடன் தொடர்புகொள்வதாகவும் கூறப்படுகிறது.

சேர்வது என்பது ஒருவர் தன் சுதந்திரத்தையே அடகு வைப்பதாகும். இப்படிப்பட்ட ஒரு காரியத்தை நிச்சயமாக என்னால் செய்ய முடியாது. அப்படிச் செய்கின்ற ஒருவனை இந்து என்று அழைக்கவும் என்னால் இயலாது. திரு. ஜட்ஜிடம் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அவர் உயர்ந்தவர், திறந்த மனம் படைத்தவர், நாணயமானவர், எளிமையானவர், தியாசஃபிகல் சொசைட்டியின் இதுவரையிலான பிரதிநிதிகளுள் மிகவும் சிறந்தவர். இவரும் திருமதி. பெசன்டும் தங்கள் மகாத்மாக்களே சரியானவர்கள் என்று அடித்துக் கொள்கிறார்கள். இதைக் குறை கூற எனக்கு எந்த உரிமையும் இல்லை. வினோதம் என்னவென்றால், இரண்டு பேரும் உரிமை கொண்டாடுவது ஒரே மகாத்மாவையே. உண்மை, கடவுளுக்குத்தான் வெளிச்சம். அவரே நீதிபதி, இரண்டு பக்கமும் சமமாக இருக்கும்போது நீதி வழங்க யாருக்கும் அதிகாரம் இல்லை. இப்படியெல் லாம்தான் அவர்கள் அமெரிக்கா முழுவதும் என் வளர்ச்சிக் கான வழி வகுத்தார்கள்!

அங்கே என்னை எதிர்ப்பவர்களான கிறிஸ்தவப் பாதிரி களுடன் வேறு சேர்ந்துகொண்டனர். எனக்கு எதிராக இந்தப் பாதிரிகளின் கற்பனையில் தோன்றாத ஒரு பொய்கூடக் கிடை யாது. நண்பர்களோ பணமோ யாரும் இல்லாத ஒருவனாக ஓர் அன்னிய நாட்டில் நான் உள்ளேன். என் நடத்தையைப்பற்றிக் கேவலமாக நகரம்தோறும் பரப்பினார்கள். ஒவ்வொரு வீட்டி லிருந்தும் என்னைத் துரத்தியடிக்க முயன்றார்கள். எனக்கு நண்பர்களான ஒவ்வொருவரையும் பகைவனாக்க முயன்றார் கள். என்னைப் பட்டினிபோட்டுச் சாகடிக்க முயன்றார்கள். இதில் என் சொந்த நாட்டினர் ஒருவரும்[1] எனக்கு எதிராகச் செயல்பட்டார் என்பதை வருத்தத்துடன் சொல்லிக் கொள் கிறேன். அவர் இந்தியாவிலுள்ள சீர்திருத்தக் கட்சி ஒன்றின் தலைவர்; 'ஏசு இந்தியாவிற்கு வந்திருக்கிறார்' என்று அவர் ஒவ்வொரு நாளும் முழங்குகிறார். ஏசு இந்தியாவிற்கு வரும் வழி இதுதானா? இதுதான் இந்தியாவைச் சீர்திருத்துகின்ற வழியா? இளமைப் பருவத்திலிருந்தே அவரை எனக்குத் தெரியும். என் சிறந்த நண்பர்களுள் ஒருவராக இருந்தவர். அன்னிய நாட்டில் நெடுநாட்களாக நம் நாட்டினர் யாரையும் காணாமலிருந்து அவரைக் கண்டபோது மிகவும் மகிழ்ந்தேன்.

---

1. பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த பிரதாப் சந்திர மஜூம்தார்.

ஆனால் அவரிடமிருந்து எனக்குக் கிடைத்த பரிசு இது. என்று என்னை சர்வமத மகாசபை ஆரவாரம் செய்து வரவேற்றதோ, என்று நான் சிகாகோவில் பிரபலம் ஆனேனோ அன்றிலிருந்து அவரது போக்கு மாறிவிட்டது. என்னைத் துன்புறுத்துவதற்குத் தன்னால் இயன்ற அனைத்தையும் திரைமறைவில் செய்தார். இந்த வழியாகத்தான் ஏசு இந்தியாவிற்கு வரப் போகிறாரா? கிறிஸ்துவின் காலடியில் இருபத்தைந்து ஆண்டுகள் உட்கார்ந்து அவர் கற்றுக்கொண்ட பாடம் இதுதானா? கிறிஸ்தவ மதமும் கிறிஸ்தவ சக்தியும்தான் இந்திய மக்களைக் கைதூக்கிவிடப் போகிறது என்று நமது மகத்தான சீர்த்திருத்தவாதிகள் முழங்குகிறார்கள். அதைச் செய்கின்ற வழி இதுதானா? அவர்தான் அதற்கு ஓர் எடுத்துக்காட்டு என்றால், அது நம்பிக்கைக்குரிய ஒன்றாகத் தோன்றவில்லை.

இன்னும் ஒரு வார்த்தை. சமூகச் சீர்திருத்தவாதிகளின் பத்திரிகை ஒன்றில், என்னைச் சூத்திரன் என்று எழுதி, சன்னியாசி ஆவதற்கு எனக்கு என்ன உரிமையிருக்கிறது என்று சவால் விடப்பட்டிருந்ததை நான் படித்தேன். அதற்கு என்பதில்: ஒவ்வொரு பிராமணனும், 'யமாய தர்மராஜாய சித்ரகுப்தாய வை நம:'[1] என்று ஓதிக்கொண்டு, யாருடைய திருவடிகளில் மலர்களை அர்ப்பிக்கிறானோ, தூய க்ஷத்திரியர்கள் யாருடைய வழியில் தோன்றியவர்களோ, அவரது பரம்பரையில் தோன்றியவன் நான். நீங்கள் உங்கள் புராணங்களையும் சாஸ்திரங்களையும் நம்புபவர்களானால், என் ஜாதி கடந்த காலத்தில் செய்திருக்கும் பல சேவைகளுடன், பாதி இந்தியாவைப் பல நூற்றாண்டுகளாக ஆட்சி செய்தும் இருக்கிறது என்பதைச் சீர்திருத்தவாதிகள் என்று அழைக்கப்படுகின்ற இவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். எனது ஜாதி ஒதுக்கப்படுமானால் இன்றைய இந்திய நாகரீகத்தில் என்ன மிஞ்சும்? வங்காளத்தை எடுத்துக்கொள்ளுங்கள்; இந்தியாவின் மகத்தான தத்துவ அறிஞர், மகத்தான கவிஞர், மகத்தான வரலாற்று அறிஞர், மகத்தான தொல்பொருள் ஆய்வாளர், மகத்தான சமய போதகர் என்று ஒவ்வொருவரும் என் ஜாதியைச் சேர்ந்தவர்களே. இக்கால விஞ்ஞானிகளுள் மகத்தான விஞ்ஞானி ஒருவரை

1. 'தர்மராஜாவாகிய எமனையும் சித்திரகுப்தனையும் வணங்குகிறேன்.'— தர்ப்பண காலத்தில் ஓதப்படுகின்ற மந்திரத்தில் ஒரு பகுதி இது. எமன், சித்திர குப்தன் போன்றோர் காயஸ்த குலத்தினரின் ஆதிபுருஷர்களாகப் போற்றப் படுகிறார்கள்.

இந்தியாவிற்கு அளித்துள்ளதும் என் ரத்தமே.[1] உண்மையைத் திரித்துக் கூறுகின்ற இவர்கள் நம் வரலாற்றைப்பற்றிச் சிறிதாவது அறிந்திருக்க வேண்டும்; பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் ஆகிய மூன்று ஜாதியினருமே சன்னியாசத்திற்குச் சம உரிமை படைத்தவர்கள் என்பதைப் படித்திருக்க வேண்டும்; மூன்று ஜாதியினரும் வேதம் படிக்கச் சமஉரிமை பெற்றவர்கள்.

சொல்ல வேண்டும் என்பதற்காக மட்டுமே இதையெல்லாம் சொன்னேன். ஆனால் அவர்கள் என்னைச் சூத்திரன் என்று அழைப்பதால் நான் எந்த வகையிலும் வேதனைப்படவில்லை. எனது முன்னோர்கள் ஏழைகளுக்கு இழைத்த கொடுமைகளுக்கு இது ஒரு சிறிய பிராயச்சித்தமாகவே இருக்கும். நான் தாழ்ந்த குலத்தினனாக இருந்தால் மகிழ்ச்சியே அடைவேன். ஏனென்றால் பிராமணர்களுக்கெல்லாம் பிராமணராக இருந்துகொண்டு, ஒரு தாழ்ந்த குலத்தினனின் வீட்டைச் சுத்தம் செய்ய விரும்பிய ஒருவரது சீடன் நான். அவன் இதை அனுமதிக்க மாட்டான்; ஒரு பிராமண சன்னியாசி தன் வீட்டிற்கு வந்து வீட்டைச் சுத்தம் செய்வதை அவன் எப்படி அனுமதிப்பான்? எனவே இந்த மனிதர் நள்ளிரவில் விழித்தெழுந்து, யாருமறியாமல் அவனது வீட்டிற்குள் நுழைந்து கழிவறைகளைச் சுத்தம் செய்து, தம் நீண்ட தலைமுடியால் அந்த இடத்தைத் துடைக்கவும் செய்வார். எல்லோருக்கும் சேவகனாகத் தம்மை ஆக்கிக்கொள்வதற்காகப் பல நாட்கள் இவ்வாறு செய்தார். அவரது திருப்பாதங்களை என் தலைமீது தாங்கிக் கொண்டிருக்கிறேன். அவரே என் தலைவர். அவரது வாழ்க்கையைப் பின்பற்றவே நான் முயல்வேன்.

எல்லோருக்கும் சேவகனாக இருப்பதன்மூலம்தான் ஓர் இந்து தன்னை உயர்த்திக்கொள்ள வழி தேடுகிறான். பாமரர்களைக் கைதூக்கிவிட இப்படித்தான் இந்துக்கள் முயற்சிக்க வேண்டுமே தவிர, எந்த வெளிநாட்டுச் செல்வாக்கையும் எதிர்பார்த்து அல்ல. மேலை நாகரீகத்தின் விளைவைப் பாருங்கள். இருபது ஆண்டுகள் அதன் ஆதிக்கத்தில் வாழ்ந்ததால் தன் சொந்த நண்பனையே அன்னிய நாட்டில் பட்டினிபோட விரும்பிய அந்த மனிதரின் நினைவுதான் எனக்கு வருகிறது. அவர் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்? நண்பன் பிரபலமாகி

---

1. ஆச்சார்ய வ்ரஜேந்திர சீல் (?), மைக்கேல் மதுசூதன தத்தர், ரமேஷ் சந்திர தத்தர், ராஜேந்திரலால் மித்ரர், ஆசார்ய ஜகதீஷ் போஸ் ஆகியோரை சுவாமிஜி இங்கே குறிப்பிடுகிறார்.

விட்டான், தான் பணம் சம்பாதிப்பதற்குக் குறுக்கே நிற்கிறான், அவ்வளவுதான் காரணம். அதேநேரத்தில், வைதீக இந்து சமயம் என்ன செய்கிறது என்பதற்கு, சொந்த நாட்டில் என் குருதேவ ரின் வாழ்க்கை ஓர் உதாரணம். நமது சீர்திருத்தவாதிகளுள் யாராவது தாழ்ந்த குலத்தினனுக்கும் சேவை செய்யத் தயாராக இருந்து, அந்த வாழ்க்கையை வாழ்ந்து காட்டட்டும்; அப்போது நான் அவர்களின் காலடியில் அமர்ந்து கற்றுக் கொள்கிறேன், அதற்கு முன்னால் அல்ல. ஒருதுளி செயல் இருபதாயிரம் வெற்றுப் பேச்சுக்களைவிடச் சிறந்தது.

இப்போது சென்னையிலுள்ள சீர்திருத்தச் சங்கங்களுக்கு வருகிறேன். அவர்கள் என்னிடம் கனிவு காட்டினார்கள், அன்போடு பேசினார்கள். தங்களுக்கும் வங்காள சீர்திருத்தவாதி களுக்கும் வேறுபாடு உள்ளது என்பதைச் சுட்டிக் காட்டி னார்கள். நானும் மனமுவந்து அதனை ஏற்றுக் கொள்கிறேன். சென்னை மிக அழகிய நிலையில் உள்ளது என்று நான் அடிக்கடிச் சொல்வது உங்களுள் பலருக்கு நினைவிருக்கும். ஒன்றைச் செய்வது, உடனே அதற்கு எதிராக இன்னொன்றைச் செய்வது— வங்கச் சீர்திருத்தவாதிகளின் இந்த விளையாட்டை சென்னை இன்னும் பின்பற்றவில்லை. இங்கு எல்லாவற்றிலும் நிதானமான அதேவேளையில் உறுதியான முன்னேற்றம் காணப்படுகிறது. இங்கே வளர்ச்சி உள்ளது, எதிர்ச்செயல் இல்லை. வங்காளத்தில் பல விஷயங்களில் ஒரு குறிப்பிட்ட அளவு ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆனால் சென்னையில் மறுமலர்ச்சி இல்லை; வளர்ச்சி, இயற்கையான வளர்ச்சி காணப் படுகிறது. எனவே இந்த இரண்டு இனங்களுக்கும் இடையே இருப்பதாகச் சீர்திருத்தவாதிகள் சுட்டிக்காட்டுகின்ற வேறுபாடுகளை நான் முற்றிலுமாக ஏற்றுக்கொள்கிறேன்; ஆனால் இவர்கள் புரிந்துகொள்ள முடியாத வேறுபாடும் ஒன்று உள்ளது.

இந்த சொசைட்டிகளுள் சில, தங்களோடு சேர்ந்து கொள்ளுமாறு என்னைப் பயமுறுத்துகிறார்களோ என்று தோன்றுகிறது. இது ஒரு விபரீத முயற்சி. பதினான்கு வருடங்கள் பட்டினியை நேருக்கு நேராகச் சந்தித்த ஒருவனை, அடுத்த வேளைக்கான உணவும் படுக்க இடமும் எங்கே கிடைக்கும் என்று தெரியாத ஒருவனை அவ்வளவு சுலபமாகப் பயமுறுத்தி விட முடியாது. பூஜ்யத்திற்குக் கீழே முப்பது டிகிரி என்று வெப்பமானி காட்டுகின்ற பிரதேசத்தில், ஏறக்குறைய

உடைகளே இல்லாமலும், அடுத்தவேளை உணவு எங்கிருந்து வரும் என்று தெரியாமலும் வாழத் துணிந்த ஒருவனை இந்தியாவில் பயமுறுத்துவது என்பது அவ்வளவு சுலபமல்ல. நான் அவர்களுக்கு முதலில் சொல்வது இதுதான்— எனக்கென்று ஒரு சுயேச்சை உள்ளது, எனக்கென்று சிறிது அனுபவமும் இருக்கிறது, உலகிற்குத் தர என்னிடம் ஒரு செய்தி இருக்கிறது, அதை அச்சமின்றியும் எதிர்காலத்தைப்பற்றிக் கவலைப்படாமலும் நான் கொடுக்கவே செய்வேன். அவர்களை விடப் பெரிய சீர்திருத்தவாதி நான் என்பதையும் இந்தச் சீர்திருத்தவாதிகளுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் விரும்புவது அங்கொன்றும் இங்கொன்றுமான சீர்திருத்தத்தை; நானோ அடிமுதல் முடி வரையிலான மொத்தச் சீர்திருத்தத்தை விரும்புகிறேன். அந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டு வருவதற்கான வழியில்தான் இருவரும் வேறுபடுகிறோம். அவர்களுடையது அழிவுப் பாதை; என்னுடையது ஆக்கப் பாதை. நான் மறுமலர்ச்சியை நம்பவில்லை, வளர்ச்சியையே நம்புகிறேன். என்னைக் கடவுள்நிலையில் வைத்துக்கொண்டு, 'இந்த வழியில்தான் நீங்கள் போக வேண்டும், இந்த வழியில் போகக் கூடாது' என்று சமுதாயத்திற்குக் கட்டளையிட நான் துணிய மாட்டேன். ராமர் பாலம் கட்டும்போது, தன் பங்காக ஏதோ கொஞ்சம் மணலைப் போட்ட அந்தச் சிறிய அணிலைப்போல் இருக்கவே நான் விரும்புகிறேன். அதுதான் என் நிலை.

அற்புதமான இந்தத் தேசிய எந்திரம் காலங்காலமாக வேலை செய்துகொண்டிருக்கிறது. தேசிய வாழ்க்கை என்னும் இந்த ஆச்சரியமான ஆறு நம் முன் ஓடிக் கொண்டிருக்கிறது. இது நல்லதா, எந்த வழியாக இது செல்லும் என்பது யாருக்குத் தெரியும்? அதைச் சொல்லும் தைரியம்தான் யாருக்கு இருக்கிறது? ஆயிரக்கணக்கான சூழ்நிலைகள் அதைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு தனிப்பட்ட சில உணர்வுகளைக் கொடுத்து, அதைச் சிலகாலத்தில் நிதானமாகவும் மற்ற காலங்களில் வேகமாகவும் ஓடச் செய்கின்றன. அதன் இயக்கத்தைப்பற்றிக் கட்டளையிட யாருக்குத் தைரியம் உள்ளது? கீதை சொல்வது போல், நம்முடையதெல்லாம் பலன்களை எதிர்பார்க்காமல் வேலை செய்வது ஒன்றுதான்.

தேசிய வாழ்க்கைக்குத் தேவையான உணவைக் கொடுங்கள், ஆனால் வளர்ச்சி அதைப் பொறுத்தது. அது வளர்வதற்கு

யாரும் கட்டளையிட முடியாது. நம் சமூகத்தில் தீமைகள் அதிகமாக உள்ளன, ஆனால் அதுபோல் மற்ற ஒவ்வொரு சமூகத்திலும் தீங்குகள் இருக்கவே செய்கின்றன. இங்கு பூமி, சிலவேளைகளில் விதவைகளின் கண்ணீரால் நனைகிறது என்றால், அங்கே மேலை நாட்டின் காற்று திருமணமாகாத பெண்களின் ஏக்கப் பெருமூச்சால் நிறைந்துள்ளது. இங்கு வறுமை வாழ்க்கையின் ஒரு பெரிய சாபமாக இருக்கிறது, அங்கே ஆடம்பரக் களைப்பு அந்த இனத்தின் சாபமாக உள்ளது. இங்கே மனிதர்கள் தற்கொலையை நாடுகிறார்கள், ஏனெனில் அவர்களுக்கு உண்ண எதுவும் இல்லை; அங்கே உணவு குவிந்து கிடப்பதால் தற்கொலை செய்துகொள்கிறார்கள். தீமை எல்லா இடத்திலும் இருக்கிறது. அது தீராத வாத நோய் போன்றது. அதைக் காலிலிருந்து விரட்டுங்கள், தலைக்குப் போகும்; அங்கிருந்து துரத்துங்கள், வேறு எங்காவது போகும். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடம் என்று ஒவ்வோரிடமாகத் துரத்தலாம், அவ்வளவுதான். ஆனால் குழந்தைகளே, தீமையை ஒழிப்பதுதான் உண்மையான வழி.

தீமையும் நன்மையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப்போல் எப்போதும் சேர்ந்தே உள்ளன என்று நம் தத்துவம் போதிக்கிறது. ஒன்று வேண்டுமென்றால் மற்றதை ஏற்றாக வேண்டும். கடலில் ஓரிடத்தில் அலை எழுந்தால் மற்றோர் இடத்தில் பள்ளம் உண்டாகியிருக்கிறது. ஏன், வாழ்க்கையே தீமைதான். உயிரைக் கொல்லாமல் மூச்சுக்கூட விட முடியாது. யாரிடமிருந்தோ பறிக்காமல் ஒருபிடி சோறு கூட உண்ண முடியாது. இதுதான் நியதி, இதுதான் தத்துவம். எனவே தீமைகளை எதிர்ப்பதற்காகச் செய்யப்படுகின்ற பணிகள் யாவும் எந்தப் புற அளவுகோலாலும் அளக்கப்படக் கூடியவையல்ல, அவை அகம் சம்பந்தப்பட்டவை, மனிதனுக்கு மனிதன் வேறுபடக்கூடியவை என்பதைப் புரிந்துகொள்வது மட்டுமே நாம் செய்யக் கூடியது. எவ்வளவோ பெரியவை என்றெல்லாம் நாம் பேசினாலும் அத்தகைய பணிகள் சொந்தப் படிப்பினைக்காகவே தவிர, அவற்றால் தீமைகள் எல்லாம் உடனே அழிந்துவிடப் போவதில்லை.

தீமைக்கு எதிரான வேலையைப் பற்றிய முதல் கருத்து இதுதான்—அது நம்மை மேலும்மேலும் அமைதியானவர்களாக ஆக்க வேண்டும், கொள்கைவெறியை நம் ரத்தத்திலிருந்து அகற்ற வேண்டும். கொள்கைவெறியுடன் செய்யப்பட்ட

சீர்திருத்தங்கள் எல்லாம் தங்கள் தோல்வியைத் தாமாகவே தேடிக்கொண்டன என்பதை உலகின் வரலாறு நமக்குக் காட்டு கிறது. உரிமையையும் சுதந்திரத்தையும் நிலைநாட்டுவதற்காக நடைபெற்ற புரட்சிகளுள், அமெரிக்காவின் அடிமை முறை ஒழிப்புப் போரைவிடப்[1] பெரிய ஒன்றைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. உங்கள் எல்லோருக்கும் அதைப்பற்றித் தெரியும். ஆனால் அதன் விளைவுகள் என்ன? இன்றைக்கு அந்த அடிமைகள், அடிமைமுறையை ஒழிப்பதற்கு முன்னால் இருந்ததைவிட நூறு மடங்கு மோசமான நிலையில் உள்ளனர். அடிமைமுறையை நீக்குவதற்கு முன்பு இந்த அப்பாவி நீக்ரோக்கள் சிலருடைய சொத்துக்களாகவேனும் இருந்தார்கள். சொத்துக்கள் அழிந்து போய்விடக் கூடாது என்ற அளவில் பராமரிக்கப்பட்டும் வந்தார்கள். இன்றைக்கோ அவர்கள் யாருடைய சொத்தும் இல்லை, அவர்களுடைய உயிருக்கு மதிப்பே இல்லை. ஏதேதோ சாக்குப்போக்குகளைக் காரணம் காட்டி அவர்கள் உயிருடன் எரிக்கப்படுகிறார்கள். அவர்களைச் சுட்டுக் கொல்கின்ற கொலைகாரர்களைத் தண்டிக்க எந்தச் சட்டமும் இல்லை. ஏனென்றால் அவர்கள் நீக்ரோக்கள், அவர்கள் மனிதர்கள் அல்ல, ஏன், அவர்கள் மிருகங்கள்கூட அல்ல. சட்டத்தின் மூலமோ கொள்கைவெறியின் மூலமோ பலாத்காரமாகத் தீமையை நீக்க முற்பட்டால் விளைவு இதுதான். நல்லது செய்வதற்காகவேயானாலும் கொள்கைவெறி யுடன் செயல்பட்ட ஒவ்வோர் இயக்கத்தையும் வரலாறு நமக்கு இவ்வாறுதான் இனம்காட்டுகிறது. என் அனுபவமும் அதுவே. எனவே கண்டனக் குரல் எழுப்புகின்ற எந்த இயக்கத்திலும் என்னால் சேர முடியாது.

ஒவ்வொரு சமுதாயத்திலும் தீமைகள் உள்ளன. எல்லோருக்கும் இது தெரியும். இன்றைய குழந்தைகள் ஒவ்வொன்றும் இதை அறியும். அதுகூட மேடையேறி இந்து சமுதாயத்தில் நிலவுகின்ற பயங்கரத் தீமைகளைப்பற்றி ஒரு பெரிய சொற் பொழிவு நிகழ்த்த முடியும். இந்தியாவிற்கு வருகின்ற, கல்வி யறிவற்ற மேலைநாட்டு யாத்திரிகன் ஒவ்வொருவனும் ஒரு ரயில் பயணத்திலேயே ஏதோ இந்தியாவையே எடைபோட்ட வன் ஆகிவிடுகிறான், பின்னர் இந்தியாவிலுள்ள பயங்கரத் தீமைகளைப்பற்றிப் பிரமாதமான சொற்பொழிவுகளையும்

---

1. 1861 முதல் 1863 வரை நடைபெற்ற American Civil War.

பொழிந்துவிடுகிறான். தீமைகள் உள்ளன என்பதை நாம் ஏற்றுக் கொள்கிறோம். தீமையை இனம்காட்டவும் எல்லோராலும் முடியும். ஆனால் பிரச்சினையிலிருந்து விடுபட வழி காண்பவன் அல்லவா மனித குலத்தின் நண்பன்! நீரில் மூழ்கிக் கொண் டிருக்கின்ற சிறுவனும் தத்துவ அறிஞரும் போல்— தத்துவ அறிஞர் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார். தண்ணீரில் தத்தளித்த சிறுவனோ, 'முதலில் என்னைத் தண்ணீரிலிருந்து கரையேற்றுங்கள்' என்று கதறினான்.[1] அப்படித்தான் நமது மக்களும், 'நாங்கள் வேண்டிய அளவு சொற்பொழிவு கேட்டு விட்டோம், போதுமான அளவு சங்கங்களையும் பத்திரிகை களையும் பார்த்துவிட்டோம். எங்களைக் கரையேற்றுவதற்குக் கைகொடுக்கும் மனிதன் எங்கே இருக்கிறான்? எங்களை உண்மையாகவே நேசிக்கும் மனிதன் எங்கு இருக்கிறான்? எங் களிடம் கருணை காட்டும் மனிதன் எங்கு இருக்கிறான்?' என்று கதறுகிறார்கள். அந்த மனிதன்தான் தேவைப்படுகிறான்.

இந்த இடத்தில்தான் நான் இந்தச் சீர்திருத்த இயக்கங் களிலிருந்து முற்றிலுமாக வேறுபடுகிறேன். ஒரு நூறு ஆண்டு களாக அவர்கள் இங்கே இருக்கிறார்கள். மிக மோசமாக வசை மாரி பொழிகின்ற, மிகக் கேவலமாக நிந்தனை செய்கின்ற நூல் களைத் தோற்றுவிப்பதைத் தவிர இவர்களால் வேறு எந்த நன்மை செய்ய முடிந்தது? இறையருளால் இவை இல்லாமலிருந் தால் எவ்வளவோ நல்லதாயிருக்கும்! இவர்கள் வைதீகர்களைக் கேலி செய்தார்கள், வெறுத்தார்கள், தூற்றினார்கள். வைதீகர்கள் இவர்களது போக்கைப் புரிந்துகொண்டதும் பதிலுக்குப் பதில் அதே பாணியில் திருப்பிக் கொடுத்தார்கள். விளைவு? நமது இனத்திற்கே வெட்கக்கேடான, நமது நாட்டிற்கே மானக் கேடான இலக்கியங்கள் நமது நாட்டின் ஒவ்வொரு மொழி களிலும் உருவாயின. இதுவா சீர்திருத்தம்? இதுவா நாட்டைப் பெருமையின் பாதையில் அழைத்துச் செல்வது? யாருடைய தவறு இது?

நாம் சிந்திக்க வேண்டிய மற்றொரு முக்கியமான விஷயமும் உள்ளது. இந்தியாவில் நாம் எப்போதும் அரசர்களாலேயே ஆளப்பட்டு வருகிறோம். அவர்களே நமது சட்டங்கள் அனைத் தையும் இயற்றினார்கள். இப்போது அரசர்கள் இல்லை, அவர்களுக்குப் பின்னர் அதைச் செய்வதற்கு யாரும் இல்லை.

---

1. ஈசாப் கதைகளுள் ஒன்றில் வரும் பகுதி.

அரசாங்கத்திற்கு அந்தத் துணிவு இல்லை. ஏனெனில் பொதுமக்களின் கருத்து வளர்ச்சிக்கு ஏற்பவே அது தன் பாதைகளை வகுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. தன் பிரச்சினைகளைத் தானே தீர்த்துக்கொள்ளத்தக்க ஆரோக்கிய மான, ஆற்றல் மிக்கதான பொதுமக்கள் கருத்தை உருவாக்க நீண்ட, மிக நீண்ட காலமாகும். அதுவரையில் நாம் காத்திருக்கத் தான் வேண்டும். எனவே சமூகச் சீர்திருத்தம் என்ற பிரச்சினையை அணுகிப் பார்த்தோமானால் அது, சீர்திருத்தம் தேவைப்படுபவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்ற கேள்வியில் தான் முடியும். அவர்களை முதலில் உருவாக்குங்கள். அவர்கள் எங்கே இருக்கிறார்கள்? சிறுபான்மையினரின் அடக்குமுறையே உலகம் கண்டவற்றுள் மிகவும் கொடியது. ஏதோ சிலவற்றைத் தீமை என்று நினைக்கின்ற ஒரு சிலரால் நாட்டை முன்னேற்ற முடியாது. அந்த நாடு ஏன் முன்னேறக் கூடாது? முதலில் நாட்டு மக்களுக்குக் கல்வியை அளியுங்கள். பிறகு உங்கள் சட்டசபையை உருவாக்குங்கள். அதன்பிறகே உங்கள் சட்டம் தயாராக வேண்டும். முதலில் அதிகாரத்தை உருவாக்குங்கள். அதிலிருந்து சட்டத்திற்கான ஆதரவு தானாகவே கிடைக்கும். மன்னர்கள் போய்விட்டார்கள். மக்கள்சக்தி என்ற அந்தப் புதிய ஆற்றல் எங்கே? புதிய அதிகாரம் எங்கே? அதைக் கொண்டு வாருங்கள். ஆகையால் சமுதாயச் சீர்திருத்தத்திற்குக் கூட முதலில் செய்ய வேண்டிய கடமை மக்களுக்குக் கல்வி அளிப்பதுதான். அந்தக் காலம் வரும்வரை நீங்கள் காத்திருக்க வேண்டும்.

கடந்த நூற்றாண்டில் ஆர்ப்பரித்த சீர்திருத்தங்கள் எல்லாம் வெறும் ஆரவாரம் மட்டுமே. இந்த ஒவ்வொரு சீர்திருத்தமும் முதல் இரண்டு ஜாதிகளை மட்டுமே தொடுகிறது, மற்றவை களைத் தொடுவதில்லை. விதவைத் திருமணப் பிரச்சினை இந்தியப் பெண்களுள் எழுபது சதவீதத்தினரைத் தொடுவதே இல்லை. இத்தகைய பிரச்சினைகள் எல்லாம் பாமர மக்களின் பணத்தால் கல்வியறிவு பெற்ற, உயர்ஜாதிப் பெண்களுக்காகவே பேசப்படுகிறது. இதைக் கவனத்தில் வையுங்கள். ஒவ்வொரு முயற்சியும் அவர்களின் சொந்த நன்மைக்காகவே செய்யப்படு கிறது. இது சீர்திருத்தம் ஆகாது. பிரச்சினையின் அடிமட்டத் திற்கு, அதன் வேருக்கே நீங்கள் செல்ல வேண்டும். இதையே நான் முற்றிலுமான, நுனி வரையிலான சீர்திருத்தம் (Radical reform) என்று சொல்கிறேன். நெருப்பை அடியில் மூட்டுங்கள்,

அது மேல்நோக்கி எரியட்டும். அதிலிருந்து இந்திய நாடு உருவாகட்டும். பிரச்சினைக்கான தீர்வு காண்பது அவ்வளவு சுலபமல்ல, ஏனெனில் அது பெரியது, பரந்தது. அவசரப்படாதீர்கள். பல நூறு ஆண்டுகளாக இந்தப் பிரச்சினைகள் இருந்தே வருகின்றன.

புத்த மதத்தைப் பற்றியும் அதன் ஆஜ்ஞேயவாதத்தைப் (Agnosticism) பற்றியும் பேசுவது இப்போதெல்லாம் குறிப்பாக தென்னிந்தியாவில் ஒரு நாகரீகமாக இருக்கிறது. இன்று நம் நாட்டில் நிலவுகின்ற இழிநிலை, புத்த மதம் விட்டுச் சென்றதுதான் என்பது பாவம், அவர்களுக்குச் சிறிதும் தெரியவில்லை. புத்த மதம் நமக்கு விட்டுச் சென்ற பாரம்பரியம் இதுதான். புத்த மதம் பரவியதற்குக் காரணம் அதன் அற்புதமான நல்லொழுக்கக் கோட்பாடும் கௌதம புத்தரின் அற்புதமான ஆளுமைத் தன்மையுமே என்று நீங்கள் நூல்களில் படிக்கலாம். இந்த நூல்கள் எழுதியவர்களோ புத்த மதத்தின் எழுச்சி வீழ்ச்சி இவைபற்றிச் சிறிதும் படித்தறியாதவர்கள். பகவான் புத்தரிடம் எனக்கு அளவற்ற மதிப்புண்டு, பக்தியும் உண்டு. ஆனால், நான் சொல்வதைக் குறித்துக் கொள்ளுங்கள்: புத்த மதம் பரவியதன் காரணம் அதன் கொள்கைகளைவிட புத்தரின் ஆளுமையைவிட, கட்டப்பட்ட கோயில்களும், நிறுவப்பட்ட சிலைகளும், நாட்டு மக்களுக்கு முன் வைக்கப்பட்ட ஆடம்பரமான சடங்குகளும், விழாக்களுமே ஆகும். இவ்வாறுதான் புத்த மதம் வளர்ந்தது. மக்கள் தங்கள் வீடுகளில் ஆஹுதி[1] அளித்து வந்த சிறிய ஹோம குண்டங்கள் புத்த மதத்தின் ஆடம்பரமான கோயில்கள் மற்றும் சடங்குகளின் முன் நிற்க முடியவில்லை. ஆனால் பின்னாளில் எல்லாமே இழிநிலையை அடைந்தன, கேடுகளின் மொத்த உருவமாயின. அதைப்பற்றி இங்கு என்னால் பேச முடியாது. அவைகளைப்பற்றி அறிய விரும்புபவர்கள் தென்னிந்தியாவின் சிற்பங்கள் நிறைந்த அந்தப் பிரம்மாண்டமான கோயில்களில் ஏதோ சிறிது காணலாம். இதுதான் பௌத்தர்களிடமிருந்து நாம் பெற்ற பாரம்பரியம்.

அதன்பிறகு மகத்தான சீர்திருத்தவாதியாகிய சங்கராச்சாரியாரும் அவரது சீடர்களும் தோன்றினர். அன்றிலிருந்து இன்றுவரை இந்தியாவின் பாமர ஜனங்கள் வேதாந்த மதத்திற்கு, அது ஆரம்பத்திலிருந்த புனித நிலைக்கு மெள்ளமெள்ளத்

---

1. வேள்வித்தீயில் அர்ப்பிக்கப்படும் பொருள்.

திருப்பி அழைத்துச் செல்லப்படுகிறார்கள். சமூகத்திலிருந்த எல்லா தீமைகளையும் இந்தச் சீர்திருத்தவாதிகள் முழுமையாக நன்றாக அறிவார்கள், என்றாலும் அவர்கள் எதையும் நிந்திக்க வில்லை; 'உங்களிடம் இருப்பவை அனைத்தும் தவறானவை. அவைகளை வீசி எறிந்தே தீர வேண்டும்' என்று சொல்ல வில்லை. ஒருபோதும் அப்படி நடக்கவும் முடியாது.

இன்னும் முன்னூறு ஆண்டுகளுள் கிறிஸ்தவ மதம், ரோமானிய மற்றும் கிரேக்க மதங்களின் தாக்கத்தை விலக்கி விடும் என்று என் நண்பரான டாக்டர் பரோஸ் கூறியிருப்பதைப் படித்தேன். ஐரோப்பாவையும் கிரீசையும் ரோமையும் பார்த்த ஒரு மனிதனின் பேச்சு அல்ல அவை. ரோமானிய, கிரேக்க மதங்களின் செல்வாக்கு இருக்கவே செய்கிறது; ப்ராடஸ் டென்ட் நாடுகளில்கூட அப்படியே உள்ளது; பெயர்கள் மாற்றப் படுகின்றன, பழைய தெய்வங்களுக்குப் புதிய பெயர்கள் சூட்டப் பட்டுப் புதிய முறையில் வழிபடப்படுகின்றன, அவ்வளவுதான். அவர்கள் பெயரை மாற்றி இருக்கிறார்கள். பெண் தெய்வங்கள் மேரிகளாக ஆகியுள்ளனர், ஆண் தெய்வங்கள் புனிதர்களாக ஆகியுள்ளனர், சடங்குகள் புதியதாக மாறியுள்ளன. பழைய பட்டமாகிய போன்டிபக்ஸ் மேக்ஸிமஸ் (Pontifex Maximus)[1] கூட இன்னும் இருக்கிறது.

எனவே திடீரென்று எந்த மாற்றமும் நிகழ முடியாது. சங்கராச்சாரியார் இதை அறிந்திருந்தார், ராமானுஜருக்கும் இது தெரியும். அவர்களுக்கு இருந்த ஒரே வழி, இருக்கின்ற மதத்தை மெள்ளமெள்ள உயர்நிலைக்குக் கொண்டுவருவது ஒன்றே. இதைத் தவிர வேறு ஏதாவது முறையைப் பின்பற்றி யிருந்தால் அவர்கள் ஏமாற்றுக்காரர்களாகி இருப்பார்கள். ஏனெனில் அவர்களது நெறியின் அடிப்படைக் கொள்கையே பரிணாமம்தான், அதாவது இத்தகைய பல்வேறு படிகள் மற்றும் நிலைகளின் வழியாக ஆன்மா உயர் லட்சியத்தை நோக்கிச் செல்கிறது என்பதுதான். எனவே இந்தப் பல்வேறு படிகள் எல்லாம் தேவையானவை, உதவிகரமானவை. அவற்றை நிந்திக்க யாருக்குத் தைரியம் இருக்கிறது?

உருவ வழிபாடு தவறானது என்று கூறுவதைக் கேட்டுக் கேட்டுப் புளித்துவிட்டது. இன்று இதைக் கேள்விப்படுகின்ற

1. ரோமானியர்களின் மதகுருக்களைப் பயிற்றுவிக்கும் கலாசாலையின் முக்கியத் தலைவர். இந்த வார்த்தையின் பொருள் 'தலைமை மதகுரு' என்பதாகும். தற்போது போப் இவ்வாறு அழைக்கப்படுகிறார்.

எல்லோருமே அதைப்பற்றி எந்தக் கேள்வியும் கேட்காமலே ஏற்றுக் கொள்கிறார்கள். நானும் ஒருகாலத்தில் அப்படித்தான் நினைத்தேன். அதற்குத் தண்டனைபோல், எல்லாவற்றையும் உருவ வழிபாட்டின்மூலமே பெற்ற ஒருவரின் காலடியில் அமர்ந்து கற்க வேண்டியதாயிற்று. இங்கே நான் ராமகிருஷ்ண பரமஹம்சரைத்தான் குறிப்பிடுகிறேன். உருவ வழிபாட்டின் மூலம் இத்தகைய ராமகிருஷ்ண பரமஹம்சர்கள் உருவாகலாம் என்றால் உங்களுக்கு எது வேண்டும்? சீர்திருத்தவாதியின் கொள்கையா அல்லது கணக்கற்ற உருவங்களா? பதில் சொல் லுங்கள். உருவ வழிபாட்டின்மூலம் ராமகிருஷ்ண பரமஹம்சர் களை உங்களால் உருவாக்க முடியுமானால் இன்னும் ஆயிரக் கணக்கான உருவங்களை வைத்துக் கொள்ளுங்கள். அதற்கான ஆற்றலை உங்களுக்கு இறைவன் அருள்வாராக! உங்களால் முடிந்த எந்த வழியிலேனும் அவரைப் போன்ற மேலோரை உருவாக்குங்கள்.

என்றாலும் உருவ வழிபாடு நிந்திக்கப்படுகிறது. ஏன்? யாருக்கும் தெரியாது. ஏனென்றால் சில நூறு ஆண்டுகளுக்கு முன் ஏதோ யூதர்கள் சிலர் அதை நிந்தித்தார்கள் என்பதாலா? தங்கள் சொந்த விக்கிரகங்களைத் தவிர மற்ற எல்லோருடைய திருவுருவங்களையும் கண்டனம் செய்வது அவர்களுக்கு வழக்க மான ஒன்று. கடவுள் அழகியதோர் வடிவமாகவோ, அடையாள வடிவிலோ குறிக்கப்பட்டால் அது மிகவும் மோசமானது, அது பாவம் என்பான் யூதன்; அது பாவம். ஆனால் இரு புற மும் இரண்டு தேவதைகள் அமர்ந்திருக்க, மேலே மேகங்கள் பரவி நிற்க, கடவுளை ஒரு பெட்டியாக உருவகம் செய்தால் அது புனிதமானவை அனைத்திலும் புனிதமானது. கடவுள் ஒரு புறாவின் வடிவில் வந்தால் அது புனிதமானது; ஆனால் அவரே பசுவின் வடிவில் வந்தால் அது முட்டாள்களின் மூடநம்பிக்கை, அதைக் கண்டிக்க வேண்டும்! இதுதான் உலகின் போக்கு. அதனால்தான் ஒரு கவிஞர், 'மனிதர்களாகிய நாம் எவ்வளவு முட்டாள்கள்!' என்றார். அடுத்தவனின் கண்ணோட் டத்தில் உலகைப் பார்ப்பது எவ்வளவு கடினமாக இருக்கிறது! அப்படிப் பார்க்க முடியாததுதான் மனித குலத்தின் சாபக் கேடாக உள்ளது. வெறுப்பு, பொறாமை, சண்டை, சச்சரவு அனைத்திற்கும் அதுதான் மூலகாரணம்.

சிறுவர்களே, மீசை முளைத்த குழந்தைகளே, சென்னை யைத் தாண்டிச் செல்லாத நீங்கள் எழுந்து, ஆயிரக்கணக்கான

ஆண்டுகளின் பாரம்பரியத்தையுடைய முப்பது கோடி மக்களின் பின்னால் நின்றுகொண்டு அவர்களுக்குக் கட்டளையிட விரும்புகிறீர்கள்! வெட்கமாக இல்லை? அத்தகைய அதர்மச் செயலிலிருந்து விலகி நில்லுங்கள். நீங்கள் படிக்க வேண்டிய வற்றை முதலில் கற்றுக் கொள்ளுங்கள்! மரியாதையற்ற சிறுவர் களே, வெறுமனே தாளில் சில வரிகளைக் கிறுக்கி, சில முட்டாள்களின்மூலம் அவற்றைப் பிரசுரித்து விட்டால், நீங்கள் உலகிற்கே போதகராகிவிட்டீர்கள் என்று எண்ணமா? நீங்கள் சொல்வதுதான் இந்தியப் பொதுமக்களின் கருத்து என்றா நினைக்கிறீர்கள்! இதுவா உங்கள் எண்ணம்?

சென்னையின் சீர்திருத்தவாதிகளுக்கு நான் ஒன்று சொல்ல வேண்டும். நான் அவர்களிடம் பெருமதிப்பும் அன்பும் கொண்டிருக்கிறேன். அவர்களது பரந்த உள்ளத்திற்காகவும், தங்கள் நாட்டிடமும் ஏழைகளிடமும் தாழ்த்தப்பட்டவர்களிட மும் அவர்கள் கொண்டுள்ள அன்பிற்காகவும் நான் அவர்களை நேசிக்கிறேன். சகோதர பாசத்துடன் நான் அவர்களுக்குச் சொல்வதெல்லாம் அவர்களுடைய வழி தவறு என்பதுதான். நூறு ஆண்டுகளாகப் பின்பற்றப்பட்டு, தோல்வி கண்ட வழி அது. நாம் ஏதாவது புதிய வழியை முயற்சி செய்வோமே!

இந்தியாவில் எப்போதாவது சீர்திருத்தவாதிகளுக்குக் குறைவு இருந்ததுண்டா? இந்தியாவின் வரலாற்றை நீங்கள் படித்திருக்கிறீர்களா? ராமானுஜர் யார்? சங்கரர் யார்? நானக் யார்? சைதன்யர் யார்? கபீர் யார்? தாது யார்? ஒளி மிகுந்த நட்சத்திரக் கூட்டங்களின் வரிசைகள்போல், ஒருவர் பின்னால் ஒருவராக வந்த இந்த முதல்தர ஆச்சாரியர்கள் எல்லாம் யார்? தாழ்ந்த குலத்தினரை எண்ணி ராமானுஜர் உருகவில்லையா? மிகவும் தாழ்ந்த குலத்தினரைக்கூடத் தமது நெறியில் அனுமதிப் பதற்கு அவர் வாழ்நாள் முழுவதும் பாடுபடவில்லையா? முகமதி யர்களையும் தமது நெறியில் சேர்த்துக்கொள்ள அவர் முயல வில்லையா? இந்துக்களுடனும் முகமதியர்களுடனும் உறவாடி, ஒரு புதிய நிலையைக் கொண்டுவர நானக் முயலவில்லையா? அவர்கள் எல்லோரும் முயன்றார்கள், அவர்களுடைய பணி இன்னும் நடந்துகொண்டே இருக்கிறது. வித்தியாசம் இதுதான்: அவர்கள் இன்றைய சீர்திருத்தவாதிகளைப்போல் தம்பட்டம் அடித்துக் கொள்ளவில்லை; இன்றைய சீர்திருத்தவாதிகளைப் போல் யாரையும் சபிக்கவில்லை. வாழ்த்துக்களை மட்டுமே அவர்களுடைய உதடுகள் மொழிந்தன. அவர்கள் ஒருபோதும்

நிந்திக்கவில்லை. நம் இனம் எப்போதும் வளர்ந்துகொண்டே இருக்க வேண்டும் என்பதையே அவர்கள் மக்களிடம் கூறினார்கள். அவர்கள் கடந்தகாலத்தைத் திரும்பிப் பார்த் தார்கள்; பின்னர் மக்களை நோக்கி, 'இந்துக்களே, இதுவரை நீங்கள் செய்ததவை எல்லாம் நல்லதே. ஆனால் என் சகோதரர் களே, அதைவிட இன்னும் நல்லவற்றைச் செய்வோம்' என்றே கூறினர். 'நீங்கள் தீயவர்களாக இருந்தீர்கள், இப்போது நல்லவர் களாவோம்' என்று அவர்கள் சொல்லவில்லை. 'நீங்கள் நல்லவர் களாக இருந்தீர்கள். இப்போது மேலும் நல்லவர்களாவோம்' என்றே கூறினார்கள். எவ்வளவு பெரிய வித்தியாசம்!

நம் இயல்பிற்கு ஏற்பவே நாம் வளர வேண்டும். வெளி நாட்டுச் சங்கங்கள் நம்மீது திணித்துள்ள செயல்முறைகளைப் பின்பற்ற முயல்வது வீண், அவ்வாறு நடக்கவும் முடியாது. அப்படி முடியாததற்காக இறைவனுக்கு நன்றி சொல்வோம். வளைத்து நீட்டி, கொடுமைப்படுத்துவதன் மூலம் நம்மை மற்ற நாடுகளின் அமைப்பில் உருவாக்க முடியாது. மற்ற இனங்களின் சமூக அமைப்புகளை நான் நிந்திக்கவில்லை; அவை அவர் களுக்கு நல்லது, நமக்கு அல்ல. அவர்களுக்கு இறைச்சியாக இருப்பது நமக்கு விஷமாகலாம். கற்க வேண்டிய முதல் பாடம் இது. தங்கள் பல்வேறு அறிவியல், மற்ற அமைப்புக்கள், மற்ற மரபுகளின் பின்னணியில் தற்போதைய அமைப்பு முறையை அவர்கள் பெற்று இருக்கிறார்கள். நமது பாரம்பரியத்திற்கு ஏற்ப, ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் செயல்களின் பின்னணி யில் அமைந்த, நமக்குச் சொந்தமான முறையில்தான் நாம் இயல்பாகச் செல்ல முடியும். நமது சொந்தப் பாதையில் தான் சுலபமாகச் செல்ல முடியும். அதை நாம் செய்தாக வேண்டும்.

எனது திட்டம்தான் என்ன? பழங்காலத்தின் மகத்தான ஆச்சாரியர்களுடைய கருத்துக்களைப் பின்பற்றுவதே. நான் அவர்களது செயல்களைப் படித்தேன். அவர்கள் மேற்கொண்ட பணிகளின் போக்கை என்னால் கண்டுகொள்ள முடிந்தது. அவர்கள் சமூகத்தின் மகத்தான ஆரம்பகர்த்தாக்கள். அவர்கள் மாபெரும் வலிமையும் தூய்மையும் வாழ்வும் தந்தவர்கள். அவர்கள் மிக அற்புதமான செயல்களைச் செய்தார்கள். நாமும் அற்புதமான வேலைகளைச் செய்தாக வேண்டும். சூழ்நிலைகள் கொஞ்சம் மாறியுள்ளன. எனவே நமது செயல்முறையும் சிறிது மாற வேண்டும், அவ்வளவுதான்.

வாழ்வில் ஒரு தனி மனிதன் கொண்டிருப்பதுபோல் ஒவ்வொரு நாடும் ஒரு தனிப் பண்பைப் பெற்றிருப்பதைக் காண்கிறேன். அதுவே அதன் மையம், அதுதான் ஆதார சுருதி, அதைச் சுற்றியே பல்வேறு இசையும் இயைபுடன் கலந்து இனிய பண் ஆகிறது. இங்கிலாந்தைப் போன்ற நாட்டில் அரசியல் அதிகாரம் ஆதாரமாக உள்ளது. மற்றொரு நாட்டில் கலை வாழ்க்கை முக்கியமாக உள்ளது. இப்படியே ஒவ்வொரு நாட்டிலும் உள்ளது. இந்தியாவில் மத வாழ்வே மையமாக, தேசிய வாழ்வு என்னும் பண்ணின் ஆதார சுருதியாக அமைந்துள்ளது. பரம்பரைபரம்பரையாக நூற்றாண்டுகளைக் கடந்து வந்த அந்தச் சொந்தத் தேசிய ஆதாரத்தை எந்த நாடாவது உதறிவிட முயலுமானால், அதன் போக்கிலிருந்து விலக முயலுமானால், அந்த முயற்சியில் வெற்றி காணுமானால் அந்த நாடு அழிந்துவிடும். எனவே மதத்தைத் தூக்கி எறிந்து விட்டு, அரசியலையோ சமுதாயத்தையோ மற்ற எதையோ உங்கள் மையமாக, உங்கள் தேசிய வாழ்வின் ஆதாரமாகக் கொண்டீர்களானால், நீங்கள் மறைந்துபோய்விடுவதுதான் அதன் விளைவாக இருக்கும். இதைத் தடுக்க வேண்டுமானால் உங்கள் எல்லா வேலைகளையும் மதம் என்ற அடிப்படையின் மூலமாகச் செய்யுங்கள். மதம் என்ற முதுகெலும்பின் வழியாக உங்கள் அனைத்து நரம்புகளும் அதிரட்டும்.

சமுதாய வாழ்வில் அதன் செயல்முறை விளைவைக் காட்டாமல் அமெரிக்கர்களிடம் மதத்தைப் போதிக்க முடியாது என்பதை நான் கண்டேன். வேதாந்தம் கொண்டுவரக்கூடிய அற்புதமான அரசியல் மாற்றங்களைக் காட்டாமல் என்னால் இங்கிலாந்தில் மதத்தைப் பிரச்சாரம் செய்ய முடியவில்லை. அதுபோலவே இந்தியாவில் சமூகச் சீர்திருத்தம்கூட, அது ஒரு வரது வாழ்வை எவ்வாறு மேலும் ஆன்மீகமயமாக்கும் என்பதை விளக்கித்தான் போதிக்கப்பட வேண்டும்; அரசியலைப் போதிக்க வேண்டுமானால், தேசம் வேண்டுகின்ற ஒரே விஷயமான ஆன்மீகத்தை அது எவ்வளவு தூரம் வளப்படுத்தும் என்பதை விளக்கிக் காட்டுவதன்மூலமே செய்ய வேண்டும்.

ஒவ்வொரு மனிதனும் தனக்கு வேண்டியதைத் தானே தேர்ந்தெடுக்க வேண்டும். அதைப் போலவே ஒவ்வொரு நாடும். பல் காலத்திற்கு முன்பே நாம் நமக்கு வேண்டியதைத் தேர்ந்தெடுத்து விட்டோம், அதை நாம் பின்பற்றியாக வேண்டும். அதோடு, நாம் தேர்ந்தெடுத்தது ஒன்றும் மோசமானது அல்ல.

ஜடப்பொருள் அல்லாமல் ஆன்மாவை, மனிதன் அல்லாமல் இறைவனைச் சிந்திக்க விரும்பியது அத்தனை மோசமான ஒன்றா? மறுவுலகத்தில் திடநம்பிக்கை, இந்த உலகத்தில் தீவிர வெறுப்பு, துறவின் அபரிமித ஆற்றல், கடவுளிடம் அசையா நம்பிக்கை, அழியா ஆன்மாவில் மாறா நம்பிக்கை— எல்லாம் உங்களிடம் உள்ளது. உங்களுள் யாராலாவது அதை மறுத்து விலக்க முடியுமா? நான் சவால் விடுகிறேன், உங்களால் முடியாது. சில மாதங்கள் உலகாயதம்பற்றிப் பேசுவதன்மூலம் நீங்கள் ஓர் உலகாயதவாதியாக மாறிவிட்டதாக என்னை நம்ப வைக்க முயலலாம். ஆனால் உண்மையில் நீங்கள் எப்படிப்பட்டவர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் உங்கள் கைகளைப் பிடித்து அழைத்துச் சென்றால், சிறந்த ஆத்திகர்களாக என்னைத் தொடர்ந்து வருவீர்கள். உங்கள் சொந்த இயல்பை நீங்கள் எப்படி மாற்ற முடியும்?

இந்தியாவில் ஒவ்வொரு முன்னேற்றமும் மத எழுச்சியைத் தொடர்ந்தே வர முடியும். சமுதாயக் கருத்துக்களாலோ, அரசியல் கருத்துக்களாலோ மூழ்கடிக்குமுன் இந்தியாவை ஆன்மீகக் கருத்துக்களால் நிரப்புங்கள். நமது உபநிடதங்களிலும் நமது சாஸ்திரங்களிலும் நமது புராணங்களிலும் புதைந்து கிடைக்கின்ற அற்புதமான உண்மைகளை அந்த நூல்களிலிருந்து கொண்டு வர வேண்டும், ஆசிரமங்களிலிருந்து வெளியே கொண்டு வர வேண்டும், காடுகளிலிருந்து வெளியே கொண்டு வர வேண்டும், குறிப்பிட்ட சிலரின் ஆதிக்கத்திலிருந்து கொண்டு வர வேண்டும். அந்த உண்மைகள் வடக்கிலிருந்து தெற்குவரை, கிழக்கிலிருந்து மேற்குவரை, இமயம் முதல் குமரிவரை, சிந்து முதல் பிரம்மபுத்திராவரை நெருப்பைப் போல் பரவுமாறு நாடு முழுவதும் அவற்றைப் பறைசாற்ற வேண்டும். இதுவே நாம் கவனம் செலுத்த வேண்டிய முதல் வேலை. ஒவ்வொருவரும் அதை அறியவேண்டும். ஏனெனில் 'இது முதலில் கேட்கப்பட வேண்டும், பிறகு சிந்திக்கப்பட வேண்டும், பிறகு தியானிக்கப்பட வேண்டும்'[1] என்று கூறப்பட்டுள்ளது. மக்கள் முதலில் கேட்கட்டும், தங்கள் சொந்த சாஸ்திரங்களிலேயே உள்ள மகத்தான உண்மைகளை மக்கள் கேட்பதற்கு உதவுபவர்களுக்கு அதைவிடச் சிறந்த புண்ணியச்

1. ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:
—பிருஹதாரண்யக உபநிடதம் 2. 4. 5.

செயல் இன்று வேறில்லை. 'இந்தக் கலியுகத்தில் செய்வதற்கு ஒரு செயல்தான் உள்ளது. யாகங்களாலும் கடின தவங்களாலும் இன்று எந்தப் பலனும் இல்லை. எஞ்சியுள்ள ஒரு செயல் தானம்தான்'[1] என்கிறார் வியாசர். ஆன்மீகத்தையும் ஆன்மீக ஞானத்தையும் அளிப்பது தானங்களுள் மிகவுயர்ந்தது, அடுத்தது உலக அறிவை அளிப்பது, அடுத்தது உயிரைக் காப்பது. நான்காவதாக வருவது உணவைத் தருவது.

தானசீலம் மிக்க இந்த அற்புதமான இனத்தைப் பாருங்கள். ஏழையான மிக ஏழையான, இந்த நாட்டில் செய்யப்படுகின்ற வகைவகையான தானங்களைப் பாருங்கள். வடக்கிலிருந்து தெற்கிற்குப் பயணம் செய்கின்ற ஒருவன் பெறும் உபசாரத்தைப் பாருங்கள். நாட்டின் மிக நல்லது அவனுக்குக் கொடுக்கப்படு கிறது. அவனை ஒவ்வொருவரும் முற்றிலும் நண்பனைப் போலவே நடத்துகிறார்கள். எங்காவது ஒருபிடி உணவு இருக்கும்வரை ஒரு பிச்சைக்காரன்கூடப் பட்டினியால் சாக மாட்டான்.

தானசீலம் மிக்க இந்த நாட்டின் முதல் தானமான ஆன்மீக ஞானத்தை அளிப்பதை முதலில் மேற்கொள்ள வேண்டும். அந்தத் தானம் இந்தியாவின் எல்லைக்குள் மட்டுமே அடங்கி விடக் கூடாது; அது உலகம் முழுவதும் பரவ வேண்டும். இது தான் வழக்கமாக இருந்து வந்துள்ளது. இந்தியச் சிந்தனைகள் இந்தியாவைத் தாண்டி ஒருபோதும் சென்றதில்லை என்று சொல்பவர்களும் சரி, வெளிநாடுகளுக்குப் பிரச்சாரம் செய்வதற் காகச் சென்ற முதல் சன்னியாசி நான்தான் என்று கூறுபவர் களும் சரி, தங்கள் சொந்த இனத்தின் வரலாற்றை அறியாத வர்கள். இது திரும்பத்திரும்ப நடந்துள்ளது. உலகில் தேவை ஏற்பட்டபோதெல்லாம் வற்றாத இந்த ஆன்மீகப் பெருவெள் ளம் பொங்கிப் பாய்ந்து சென்று உலகை நிரப்புகிறது. போர்ப் பறையின் முழக்கங்களோடும் படைகளின் அணிவகுப்போடும் அரசியல் அறிவு தரப்படலாம். நெருப்பு மற்றும் வாளின் துணையுடன் உலக அறிவும் சமுதாய அறிவும் தரப்படலாம். ஆனால் ஆன்மீக ஞானமோ, பிறர் காணாமல் எவ்வித ஓசை யின்றி மெல்லெனப் பெய்தாலும் ரோஜா மலர்களை மலர்ந்து விகசிக்கச் செய்கின்ற பனித்துளிபோல், அமைதியான முறையில்

---

1. தப: பரம் க்ருதயுகே தரேதாயாம் ஜ்ஞானமுத்தமம் ।
த்வாபரே யஜ்ஞமேவாஹுர்தானமேகம் கலௌயுகே ॥
—மகாபாரதம், சாந்தி பர்வம், 231. 28 & மனு, 1. 86.

மட்டுமே தர முடியும். திரும்பத் திரும்ப உலகத்திற்கு இந்தியா தந்து வந்துள்ள தானம் இதுவாகும்.

ஒரு மகத்தான இனம் உலகை வென்று, நாடுகளுக்கிடையே பாதைகளையும் பயணத்தையும் ஏற்படுத்தி, அவற்றை இணைக்கும்போது இந்தியா எழுந்து, ஒருங்கிணைந்த உலகத்தின் முன்னேற்றத்தில் தன் பங்கான ஆன்மீக சக்தியை அளித்து வருகிறது. புத்தர் பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இது நிகழ்ந்தது. அதற்கான சாட்சியங்கள் சீனா, ஆசியா மைனர் மற்றும் மலாயா தீவுகளின் மையங்களில் இன்றும் காணப்படுகின்றன. கிரேக்கப் பெருவீரனான அலெக்சாண்டர், தன் வெற்றியால், அன்று அறியப்பட்ட உலகின் நான்கு எல்லைகளையும் இணைத்தபோது இது நிகழ்ந்தது. அப்போது இந்திய ஆன்மீகம் உலகம் முழுவதிலும் பாய்ந்து பரந்தது. இன்று பெருமையடித்துக் கொள்கின்ற மேலைநாட்டு நாகரீகம் இப்படிச் சென்றதில் எஞ்சிய பகுதிதான். அத்தகைய வாய்ப்பு இப்போது மீண்டும் வந்துள்ளது. இங்கிலாந்தின் அதிகாரம் உலக நாடுகளை, இதற்கு முன் எப்போதும் இல்லாத வகையில் இணைத்திருக்கிறது. ஆங்கிலேயர்களின் சாலைகளும் தொடர்பு வசதிகளும் உலகின் ஒரு மூலையிலிருந்து மறுமூலைவரை பரவியுள்ளது. ஆங்கிலேய அறிவுத்திறனின் காரணமாக இன்றைக்கு உலகம் இதுவரை கண்டிராத வகையில் இணைக்கப்பட்டுள்ளது. மனித வரலாறு கண்டிராத அளவிற்கு இன்று வியாபார மையங்கள் நிறுவப்பட்டுள்ளன. அறிந்தோ அறியாமலோ இந்தியா உடனடியாக எழுகிறது, தனது ஆன்மீகச் செல்வங்களை மழையெனப் பொழிகிறது. அந்தப் பெருவெள்ளம் இந்தப் பாதைகளின் வழியாகப் பாய்ந்துசென்று உலகின் மறுகோடியை அடைகிறது.

நான் அமெரிக்கா சென்றது என் செயல் அல்ல, உங்கள் செயலும் அல்ல. இந்தியாவின் தலைவிதியை நிர்ணயிக்கின்ற இறைவன்தான் என்னை அனுப்பினார்; என்னைப் போன்ற நூற்றுக்கணக்கானோரை எல்லா நாடுகளுக்கும் அனுப்பப் போகிறார். உலகின் எந்தச் சக்தியாலும் இதைத் தடுக்க முடியாது. இதையும் செய்தாக வேண்டும். உங்கள் மதத்தைப் பிரச்சாரம் செய்வதற்காக, நீங்கள் நாட்டைவிட்டு வெளியே செல்ல வேண்டும். சூரியனின் கீழ் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு மனிதரிடமும் அதைப் பிரச்சாரம் செய்தாக வேண்டும். நாம் செய்ய வேண்டிய முதல் வேலை இதுதான். ஆன்மீக ஞானத்தைப் போதித்தால், அதன்பின்னர் உலகஅறிவும்

நீங்கள் விரும்புகின்ற மற்ற எல்லா அறிவும் உங்களைத் தொடர்ந்து வரும். ஆனால் மதத்தை விலக்கிவிட்டு வேறு எந்த அறிவைப் பெற நீங்கள் முயன்றாலும் இந்தியாவில் உங்கள் முயற்சி வீண் என்பதைத் தெளிவாகச் சொல்லிக் கொள்கிறேன். அது மக்களிடம் எந்தத் தாக்கத்தையும் ஒருபோதும் ஏற்படுத் தாது. மகத்தான பௌத்த இயக்கத்தின் தோல்விக்குக்கூட இதுவும் ஒரு காரணம்.

எனவே என் நண்பர்களே, நம் சாஸ்திர உண்மைகளை இந்தியாவிலும் வெளியிலும் பிரச்சாரம் செய்ய நமது இளைஞர் களுக்குப் பயிற்சி அளிப்பதற்காக இந்தியாவில் சில இயக்கங் களைத் துவக்குவதுதான் என் திட்டம். மனிதர்கள், மனிதர்கள், மனிதர்கள்தான் தேவை. மற்ற எல்லாம் தயாராகி விடும். ஆற்றல் மிக்க, தீவிரமான, நம்பிக்கையுள்ள, மனசாட்சிக்கு மாறாக நடக்காத இளைஞர்கள் இத்தகைய நூறு பேர் போதும், உலகையே புரட்டி விடலாம். எல்லாவற்றைவிடவும் சங்கல்பம் வலிமை வாய்ந்தது. அதன்முன் எல்லாம் அடிபணிந்தே ஆக வேண்டும், ஏனெனில் அது கடவுளிடம் கடவுளிடமிருந்து மட்டுமே வருகிறது. தூய, ஆற்றல்மிக்க சங்கல்பம் எல்லாம் வல்லது. உங்களுக்கு இதில் நம்பிக்கை இல்லையா?

பரப்புங்கள், உங்கள் மதத்தின் மகத்தான உண்மைகளை உலகம் முழுவதும் பரப்புங்கள். உலகம் அவற்றிற்காகக் காத்திருக் கிறது. மக்களை இழிந்தவர்களாக்கும் கொள்கைகளே பல நூற்றாண்டுகளாகப் போதிக்கப்பட்டு வந்துள்ளன. மக்கள் எதற்குமே உதவாதவர்கள் என்று போதிக்கப்பட்டுள்ளனர். உலகம் முழுவதுமே, பாமரர்கள் என்றால் அவர்கள் மனிதர் களே அல்ல என்றுதான் அவர்களிடம் கூறப்பட்டு வந்துள்ளது. பல நூற்றாண்டுகளாகப் பயமுறுத்தி பயமுறுத்தியே அவர்கள் ஏறக்குறைய மிருகங்களாகிவிடும் நிலைக்குச் சென்றுவிட்டனர். ஆன்மா என்ற ஒன்றைப்பற்றிக் கேள்விப்பட அவர்கள் அனு மதிக்கப் படவே இல்லை. அவர்கள் ஆன்மாவைப்பற்றிக் கேள்விப்படட்டும்—தாழ்ந்தவருள் தாழ்ந்தவரிலும் ஆன்மா உள்ளது, அது இறப்பதோ பிறப்பதோ இல்லை, அந்த ஆன்மாவை வாள் வெட்ட முடியாது; நெருப்பு எரிக்க முடியாது. அது தோற்றமும் முடிவும் இல்லாதது, முற்றிலும் தூய்மையானது, எல்லாம் வல்லது, எங்கும் நிறைந்தது.

முதலில் உங்களிடமே உங்களுக்கு நம்பிக்கை வேண்டும். உங்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் உள்ள வித்தியாசம்தான்

என்ன? தங்கள் மதம், கடமை என்றெல்லாம் அவர்கள் என்ன வேண்டுமானாலும் பேசட்டும். அந்த வித்தியாசம் என்ன வென்று தெரிந்துவிட்டது. அது இதுதான்: ஆங்கிலேயன் தன்னை நம்புகிறான், நீங்கள் உங்களை நம்பவில்லை. தான் ஆங்கிலேயன், எனவே, தான் விரும்புகின்ற எதையும் தன்னால் செய்ய முடியும் என்பதை அவன் நம்புகிறான். அது அவனுள் இருக்கும் தெய்வீக சக்தியை வெளிப்படுத்துகிறது, அவனும் தான் விரும்பியதைச் செய்து முடிக்கிறான். ஆனால் உங்களால் எதுவுமே செய்ய முடியாது என்றுதான் உங்களுக்குச் சொல்லப் படுகிறது, போதிக்கப்படுகிறது. நீங்களும் நாளுக்குநாள் எதற்குமே பயனற்றவர்களாகி வருகிறீர்கள். நமக்குத் தேவை வலிமையே; எனவே உங்களிடம் நம்பிக்கை கொள்ளுங்கள்.

நாம் பலவீனர்களானோம், அதனால்தான் ரகசியவாதங் களும் ரகசிய வித்தைகளுமாகிய அற்ப விஷயங்கள் எல்லாம் நம்மிடம் வந்தன. அவைகளில் சிறந்த உண்மைகூட இருக்க லாம். ஆனால் அவை ஏறக்குறைய நம்மை அழித்தேவிட்டன. உங்கள் நரம்புகளை வலிமையாக்கிக் கொள்ளுங்கள். இரும்பாலான தசையும் எஃகாலான நரம்புகளுமே நமக்குத் தேவை. காலங்காலமாக அழுதுவிட்டோம். இனியும் அழுகை கூடாது, சொந்தக் காலில் நில்லுங்கள், மனிதர்கள் ஆகுங்கள். மனிதனை உருவாக்குகின்ற ஒரு மதமே நமக்குத் தேவை, மனிதனை உருவாக்குகின்ற கொள்கைகளே நமக்குத் தேவை. எல்லா வகையிலும் மனிதனை உருவாக்கும் கல்வியே நமக்கு வேண்டும். உண்மையை அறிந்து கொள்வதற்கான சோதனை இதோ இதுதான்: ஏதாவது ஒன்று உங்கள் உடலை, அறிவை, ஆன்மீக உணர்வைப் பலவீனமாக்குமானால் அதனை விஷமென ஒதுக்குங்கள், அதில் உயிர்த் துடிப்பில்லை, அது உண்மையாக இருக்க முடியாது. உண்மையே வலிமை தரும், உண்மையே தூய்மை. உண்மையே எல்லா அறிவும். உண்மை வலிமை தருவதாக இருக்கும், அறிவை ஒளிரச் செய்வதாக இருக்கும், அக ஆற்றலை வளர்ப்பதாக இருக்கும்.

இந்த ரகசிய வித்தைகளுள் ஏதோ சிறிய அளவில் உண்மை இருக்கலாம். ஆனாலும் அவை பொதுவாகப் பலவீனத்தையே வளர்க்கின்றன. அதில் நீண்டகால அனுபவம் உடையவன் நான். நான் சொல்வதை நம்புங்கள். அதிலிருந்து நான் பெற்ற ஒரே முடிவு அது பலவீனத்தைத் தருகிறது என்பதே. நான் இந்தியா முழுவதும் பயணம் செய்திருக்கிறேன், ஏறக்குறைய

இங்குள்ள எல்லா குகைகளிலும் தேடியிருக்கிறேன், இமய மலையில் வசித்திருக்கிறேன். தங்கள் வாழ்நாள் முழுவதும் அங்கு வசித்தவர்களை எனக்குத் தெரியும். நான் என் நாட்டை நேசிக்கிறேன். இப்போதிருப்பதைவிடத் தாழ்ந்தவர்களாக, பலவீனர்களாக நீங்கள் மாறுவதை என்னால் பார்க்க முடியாது. உங்களுக்காகவும் உண்மையின் பொருட்டும் நான் கடமைப் பட்டுள்ளேன். ஆகவேதான் என் இனம் இழிநிலையை அடை வதை எதிர்த்து, 'போதும், போதும்' என்று கதறுகிறேன்.

பலவீனப் படுத்துகின்ற இந்த ரகசிய வித்தைகளை விட்டுத் தள்ளுங்கள். வலிமை உடையவர்களாகுங்கள். ஒளி வீசுகின்ற, வலிமை தருகின்ற, மேலான தத்துவமாகிய உங்கள் உபநிடதங் களுக்குத் திரும்பிச் செல்லுங்கள். இந்த எல்லா ரகசிய வித்தை களிலிருந்தும் எல்லா பலவீனப் பொருட்களிலிருந்தும் விலகி விடுங்கள். உபநிடதத் தத்துவத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மகத்தான உண்மைகள் மிகவும் எளிமையாகவே இருக்கின்றன. நீங்கள் உயிர்வாழ்வது என்பது எவ்வளவு எளிமையான உண்மை! அதுபோல்தான். உபநிடத உண்மைகள் உங்கள் முன்னால் உள்ளன. அவற்றைப் பின்பற்றி வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுங்கள். அப்போது இந்தியாவின் கதிமோட்சம் உறுதி.

இன்னும் ஒரு வார்த்தை, அத்துடன் என் சொற்பொழிவை முடித்துக் கொள்கிறேன். எல்லோரும் தேசப்பற்றைப்பற்றிப் பேசுகிறார்கள். நானும் தேசப்பற்றில் நம்பிக்கை உள்ளவன், தேசப்பற்றைப்பற்றி எனக்கென்று சொந்தக் கருத்தும் உண்டு. எந்த மகத்தான சாதனைகளுக்கும் மூன்று விஷயங்கள் அவசிய மானவை. முதலில் இதயபூர்வமான உணர்ச்சி. அறிவிலும் ஆராய்ச்சியிலும் என்ன இருக்கிறது? அது சில அடிகள் செல் லும், பிறகு நின்றுவிடும். ஆனால் இதயத்தின் மூலம்தான் உத்வேகம் பிறக்கிறது. திறக்க முடியாத கதவுகளை எல்லாம் அன்பு திறக்கிறது. பிரபஞ்சத்தின் எல்லா ரகசியங்களுக்கும் வாசல் அன்புதான்.

எனவே உணர்ச்சி கொள்ளுங்கள், என் எதிர்கால சீர்திருத்த வாதிகளே, வருங்கால தேச பக்தர்களே, நீங்கள் உணர்ச்சி கொள்கிறீர்களா? தேவர்கள் மற்றும் ரிஷிகளின் பரம்பரையில் வந்த கோடானுகோடி பேர் மிருகங்களுக்கு அடுத்த நிலையில் வாழும் கொடுமையை உணர்கிறீர்களா? பட்டினியால் இன்று லட்சக்கணக்கானோர் வாடுவதையும், காலங்காலமாக

லட்சக்கணக்கானோர் பட்டினியால் துடிப்பதையும் உணர் கிறீர்களா? இந்த நாட்டின்மீது ஒரு கரிய மேகம்போல் அறியாமை கவிந்துள்ளதை உணர்கிறீர்களா? இந்த உணர்ச்சி உங்களை அமைதியிழந்து தவிக்கச் செய்கிறதா? இந்த உணர்ச்சி உங்களைத் தூக்கம் கெட்டு வாடச் செய்கிறதா? இந்த உணர்ச்சி உங்கள் ரத்தத்தில் கலந்து, உங்கள் நாடிநரம்புகள் தோறும் ஓடி, உங்கள் இதயத்துடிப்புடன் கலந்து துடிக்கிறதா? இது உங்களை ஏறக்குறைய பைத்தியமாகவே ஆக்கிவிட்டதா? அழிவுத்துன்பம் என்ற ஒரே கருத்து உங்களைப் பற்றிப் பிடித்துள்ளதா? உங்கள் பெயர், உங்கள் புகழ், உங்கள் மனைவி, உங்கள் குழந்தைகள், உங்கள் சொத்து, ஏன், உங்கள் உடம்பு போன்ற எல்லாவற்றையும் மறந்துவிட்டீர்களா? இதை நீங்கள் செய்துவிட்டீர்களா? இதுதான் தேசப்பற்று உடையவன் ஆவதற்கு முதற்படி. வெறும் முதற்படி இது.

சர்வமத மகாசபையில் கலந்துகொள்வதற்காகவென்று நான் அமெரிக்கா போகவில்லை, உங்களுள் பலரும் இதை அறிவீர்கள். என்னுள், என் உயிரில் நிலவிய இந்த உணர்ச்சி என்ற பூதம் என்னை ஆட்டிப் படைத்ததாலேயே நான் செல்ல நேர்ந்தது. என் நாட்டு மக்களுக்காக உழைப்பதற்கான வழிதேடி பன்னிரண்டு ஆண்டுகள் இந்தியா முழுவதும் அலைந்தும், வழியேதும் கிடைக்காததால்தான் அமெரிக்கா சென்றேன். அப்பொழுது என்னை அறிந்த பெரும்பாலோருக்கு இது தெரியும். இந்த சர்வசமயப் பேரவையைப்பற்றி இங்கு யாருக்கு அக்கறை? என் தசையாகவும் ரத்தமாகவும் இருக்கின்ற மக்கள் இங்கே ஒவ்வொரு நாளும் மூழ்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்காக யார் கவலைப்பட்டார்கள்? இதுதான் என் முதல் படி. நீங்கள் உணரலாம். ஆனால் வெட்டிப்பேச்சில் உங்கள் ஆற்றல்களை வீணாக்குவதற்குப் பதிலாக, ஏதாவது வழி கண்டுபிடித்தீர்களா? அவர்களை நிந்திப்பதற்குப் பதிலாக உதவி செய்வதற்கு, அவர்களின் துன்பங்களைத் தணிக்கின்ற சில இதமான வார்த்தைகளைக் கூறுவதற்கு, அவர்கள் நடைப் பிணங்களாகிக் கிடக்கும் கேவல நிலையிலிருந்து மீட்க ஏதாவது செயல்முறை வழி கண்டீர்களா?

அதோடும் தேசப்பற்று முடிந்து விடுவதில்லை. மலைகளை யொத்த எதிர்ப்புகளை வெல்வதற்கான மனவுறுதி உங்களிடம் இருக்கிறதா? கையில் வாளுடன் இந்த உலகம் முழுவதுமே எதிர்த்து நின்றாலும், நீங்கள் சரி என்று நினைப்பதைச் செய்து

முடிக்கின்ற தைரியம் உங்களிடம் இருக்கிறதா? உங்கள் மனைவியும் பிள்ளைகளும் எதிர்த்தாலும், உங்கள் பணம் எல்லாம் கரைந்து போனாலும், உங்கள் பெயர் அழிந்து செல்வம் எல்லாம் மறைந்தாலும் அதையே உறுதியாகப் பற்றிநிற்பீர்களா? அதையே உறுதியாகத் தொடர்ந்து, உங்கள் லட்சியத்தை நோக்கிச் செல்வீர்களா? பர்த்ருஹரி மன்னர் கூறியதுபோல், 'மகான்கள் பழிக்கட்டும் அல்லது புகழட்டும், அதிர்ஷ்ட தேவியான மகாலட்சுமி வரட்டும் அல்லது அவள் விரும்புகின்ற இடத்திற்குச் செல்லட்டும், மரணம் இன்று வரட்டும் அல்லது நூறு ஆண்டுகள் கழித்து வரட்டும்— எது நேர்ந்தாலும் சத்தியத்தின் பாதையிலிருந்து அங்குலம்கூட விலகாதவனே உண்மை மனிதன்'.[1] இத்தகைய உறுதி உங்களிடம் இருக்கிறதா? உங்களிடம் இந்த மூன்று விஷயங்களும் இருக்குமானால் நீங்கள் ஒவ்வொருவரும் பிறர் பிரமிக்கத்தக்க செயல்களைச் செய்வீர்கள். செய்தித்தாள்களில் எழுத வேண்டியதில்லை, மேடையேறி பிரசங்கம் செய்ய வேண்டியதில்லை. உங்கள் முகமே ஒளி வீசித் துலங்கும். நீங்கள் ஒரு குகையுள் வாழலாம்; ஆனால் உங்கள் சிந்தனைகள் அந்தப் பாறைச் சுவர்கள் வழியாக ஊடுருவி வந்து உலகம் முழுவதுமே நூற்றுக்கணக்கான ஆண்டுகள் அதிர்ந்து பரவிக் கொண்டிருக்கும். என்றாவது அவை ஏதாவதொரு மூளையில் புகுந்து செயல்படும். உண்மையான, தூய்மையான லட்சியத்தைக் கொண்ட சிந்தனையின் ஆற்றல் அத்தகையது.

உங்களை நெடுநேரம் காக்க வைக்கிறேனோ என்று நான் அஞ்சுகிறேன். இன்னும் ஒரு வார்த்தை. என் நாட்டு மக்களே, என் நண்பர்களே, என் குழந்தைகளே, நம் நாடாகிய இந்தத் தேசியக் கப்பல் லட்சக்கணக்கானோரை வாழ்க்கைப் பெருங்கடலைக் கடத்தி அழைத்துச் சென்றிருக்கிறது. எத்தனையோ நூற்றாண்டுகளாக இது நல்லமுறையில் இந்தக் கடலைக் கடந்து வந்துபோய்க் கொண்டிருக்கிறது. இதன் மூலமாக லட்சோப லட்சம் பேர் பேரின்பமாகிய கரைக்குப் போய்ச் சேர்ந்திருக்கின்றனர். ஆனால் இன்றோ, ஒருவேளை உங்கள் சொந்தத் தவறின் காரணமாக இந்தக் கப்பல் சிறிது பழுதடைந்துள்ளது, ஓட்டைகள் விழுந்திருக்கிறது. அதற்காக அதைச் சபிப்பீர்களா? இந்த உலகத்தில் வேறு எதைவிடவும் அதிகமாக உழைத்துள்ள

1. நீதி சதகம், 74.

இந்தத் தேசியக் கப்பலின்மீது சாப மழையைப் பொழிவது உங்களுக்குத் தகுதியானதா? தேசியக் கப்பலில், நம் சமூகமாகிய அந்தக் கப்பலில் ஓட்டைகள் இருந்தாலும் நாம் அதன் பிள்ளைகள் அல்லவா! நாம் சென்று அந்த ஓட்டைகளை அடைப்போம். நம் இதய ரத்தத்தைக் கொட்டி, மகிழ்ச்சியோடு அந்தக் காரியத்தைச் செய்வோம். முடியவில்லை என்றால் எல்லோரும் இறப்போம். நம் மூளைகளைக் கொண்டு அடைப்பான் செய்து அந்த ஓட்டைகளை அடைப்போம். ஆனால் அதை ஒருபோதும் நிந்திக்க வேண்டாம். இந்தச் சமூகத்திற்கு எதிராக ஒரு கடின வார்த்தைகூடப் பேசாதீர்கள். நான் அதை அதன் கடந்தகால மகோன்னதத்திற்காக நேசிக் கிறேன். நான் உங்கள் அனைவரையும் நேசிக்கிறேன். ஏனென் றால் நீங்கள் தெய்வங்களின் குழந்தைகள், மேன்மை மிக்க முன்னோர்களின் குழந்தைகள். நான் எப்படி உங்களைச் சபிக்க முடியும்? ஒருபோதும் முடியாது.

எல்லா ஆசிகளும் உங்கள்மீது பொழிவதாக! என் குழந்தை களே, என் திட்டத்தைச் சொல்வதற்காக உங்களிடம் வந்திருக் கிறேன். நீங்கள் அவற்றை ஏற்றுக்கொண்டால் நானும் உங்க ளோடு சேர்ந்து பணி புரியத் தயாராக இருக்கிறேன். ஆனால் நீங்கள் அதைக் கேட்காமல் என்னை உதைத்து இந்தியாவிற்கு வெளியே துரத்தினால்கூட நான் மறுபடியும் உங்களிடம் வரு வேன். வந்து, நாம் எல்லோரும் மூழ்கிக் கொண்டிருக்கிறோம் என்பதைச் சொல்வேன். உங்களோடு ஒருவனாகக் கூடி யிருக்கவே நான் வந்திருக்கிறேன். மூழ்கத்தான் வேண்டுமென் றால், நாம் எல்லோருமே சேர்ந்து மூழ்குவோம். ஆனால் நம் உதடுகளிலிருந்து சாபங்கள் வராமல் இருக்கட்டும்! ❑

# 4. இந்திய ரிஷிகள்

பிப்ரவரி 11, விக்டோரியா ஹால்

இந்திய ரிஷிகளைப்பற்றிப் பேச நினைக்கும்போது, என் மனம், வரலாறுகளில் எழுதப்படாத, மரபுகள் அதன் ரகசியங் களை அறிய முயன்று முடியாமல் போய்விட்ட அந்த அடர்ந்த கடந்தகாலத்தை நோக்கிச் செல்கிறது. இந்தியாவின் ரிஷிகள் கணக்கற்றவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆயிர மாயிரம் ஆண்டுகளாக ரிஷிகளைத் தோற்றுவிப்பதைத் தவிர இந்த இந்து நாடு வேறு எதைத்தான் செய்து கொண்டிருக்கிறது? எனவே நான் அவர்களுள், சகாப்தத்தை உருவாக்கிய மகத்தான சிலருடைய வாழ்க்கை வரலாற்றை உங்களிடம் கூற விரும்பு கிறேன், சரியாகச் சொல்வதென்றால், நான் அறிந்தவற்றை உங்கள்முன் வைக்கிறேன்.

அதற்கு முதற்படியாக நாம் நமது சாஸ்திரங்களைப்பற்றிச் சிறிது அறிந்துகொள்ள வேண்டும். நம்முடைய சாஸ்திரங்களில் உண்மையின் இரண்டு விதமான கோட்பாடுகள் உள்ளன: ஒன்று, நிரந்தரமானது; மற்றொன்று, அவ்வளவு அதிகாரபூர்வ மானதல்ல, என்றாலும் சில குறிப்பிட்ட சூழ்நிலைகள், காலங் கள் மற்றும் இடங்களில் நம்மைக் கட்டுப்படுத்தக் கூடியவை. நிரந்தரமான கோட்பாடுகள் ஆன்மாவின் இயல்பு, கடவுளின் இயல்பு, கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவுகள்பற்றிக் கூறுகின்றன. இந்தக் கருத்துக்கள், நாம் சுருதிகள் என்று அழைக் கின்ற வேதங்களில் உள்ளன. அடுத்ததான கோட்பாடுகள் ஸ்மிருதிகள் என்று அழைக்கப்படுகின்றன. மனு, யாஜ்ஞவல் கியர் மற்றும் பலர் எழுதிய நூல்களிலும் புராணங்கள் மற்றும் தந்திரங்களிலும் இவை உள்ளன. இந்த ஸ்மிருதிகள் சுருதி களுக்கு அடுத்த படியில் உள்ளவை. அவை சுருதிகளோடு ஏதாவது ஒரு கருத்தில் மாறுபட்டால், சுருதிகளின் கருத்தைத் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுவே நியதி. அதாவது மனிதனின் விதி, அவனது லட்சியம் போன்ற எல்லாமே வேதங்களில் சொல்லப்பட்டுள்ளன. அவற்றின் செயல்முறை விளக்கங்கள் ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும் உள்ளன.

சாதாரண வழிகாட்டுதலுக்கு வேதங்களே போது மானவை. ஆன்மீக வாழ்வைப் பொறுத்தவரையில் அதில் உள்ளதைவிட அதிகமாகச் சொல்லவும் முடியாது, அதிகமாக அறிந்துகொள்ளவும் முடியாது. அறிந்துகொள்ள வேண்டிய அனைத்தும் அங்கே சொல்லப்பட்டுள்ளன. ஆன்மா நிறை நிலையை அடைவதற்குத் தேவையான உபதேசங்கள் அனைத்தும் சுருதிகளில் முழுமையாக உள்ளன. அவற்றின் விளக்கங்களைக் காலத்திற்குக் காலம் ஸ்மிருதிகள் தருகின்றன.

சுருதிகளில் உள்ள உண்மைகளைக் குறித்து வைத்த ரிஷி களுள் பெரும்பாலானோர் ஆண்கள், சில பெண்களும் இருக் கிறார்கள்; இது சுருதியின் மற்றொரு சிறப்புத்தன்மை. அவர்கள் எப்போது பிறந்தார்கள் என்பன போன்ற விவரங்கள் மிகக் குறைவாகவே நமக்குத் தெரியும். ஆனால் அவர்களுடைய மிகச் சிறந்த சிந்தனைகள், மிகச் சிறந்த கண்டுபிடிப்புகள் எல் லாம் நம் நாட்டின் புனித இலக்கியமான வேதங்களில் பாது காக்கப்பட்டு வருகின்றன. மாறாக, ஸ்மிருதிகளில் தனிப் பட்டவர்களின் பல விவரங்கள் உள்ளன. அவற்றைப் படிக்கும் போது பிரமிக்க வைக்கின்ற, மகோன்னதமான, மனத்தில் பதி கின்ற, உலகையே அசைக்கவல்ல மனிதர்கள் நம் கண்முன் அப்படியே நிற்பது போலுள்ளது. சில இடங்களில் அவர்களது உபதேசங்களைவிட அவர்களே நம் மனத்தில் விசுவரூபம் எடுத்து நிற்கின்றனர்.

நமது மதம் அருவ-உருவக் கடவுளைப் போதிக்கிறது— இது நாம் புரிந்துகொள்ள வேண்டியதொரு விநோதமாகும். உருவமற்ற ஒன்றைப் பற்றிய எண்ணற்ற விதிகளையும் அதே வேளையில் எண்ணற்ற உருவங்களைப் பற்றியும் போதிக்கிறது. ஆனால் நம் மதத்தின் அடிப்படை ஊற்று சுருதிகளிலேயே, வேதங்களிலேயே உள்ளது. அவை முழுக்கமுழுக்க நிர்க்குண நிலையைக் கூறுகின்றன. மகத்தான அவதார புருஷர்கள், தேவ தூதர்கள் போன்ற அனைவரும் ஸ்மிருதிகளிலும் புராணங் களிலும்தான் வருகிறார்கள்.

நமது மதத்தைத் தவிர, உலகின் பிற மதங்கள் ஒவ் வொன்றும் அதை உருவாக்கிய ஒருவரது அல்லது சிலரது வாழ்க்கையையே நம்பியிருக்கின்றன. கிறிஸ்தவ மதம் ஏசுவின் வாழ்க்கயின்மீது கட்டப்பட்டுள்ளது; இஸ்லாம் முகமதுவின் வாழ்விலும், புத்த மதம் புத்தரின் வாழ்வின்மீதும், சமண மதம் ஜீனர்களின் வாழ்க்கைமீதும் கட்டப்பட்டுள்ளது. இப்படியே

எல்லா மதங்களும். இந்த மாமனிதர்களுக்கான வரலாற்று ஆதாரங்கள் என்று அவர்கள் கூறிக்கொள்கின்ற கூற்றுக்களை ஒட்டி, இந்த மதங்களுக்குள் வேண்டிய அளவு சண்டை சச்சரவுகள் நிலவவே செய்யும்; அது எதிர்பார்க்கக்கூடியதுதான். என்றாவது இந்த மனிதர்கள் வாழ்ந்ததற்கான வரலாற்று ஆதாரங்கள் ஆட்டம் காணுமானால், அந்த மதங்களும் வீழ்ந்து தூள் தூளாகிவிடும்.

இத்தகையதொரு விதியிலிருந்து நாம் தப்பித்துக் கொண்டோம். ஏனெனில் நமது மதம் மனிதர்களை அல்லாமல் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது. நாம் நமது மதத்திற்குக் கட்டுப்படுகிறோம் என்றால் அதன் காரணம், அது ஒரு மகானின் அதிகாரத்திலிருந்து வந்தது என்பதனால் அல்ல, ஏன், ஓர் அவதார புருஷரின் அதிகாரத்திலிருந்து வந்தது என்பதால்கூட அல்ல. ஸ்ரீகிருஷ்ணர் வேதங்களுக்கு அதிகாரி அல்ல, வேதங்களே ஸ்ரீகிருஷ்ணருக்கு அதிகாரி. என்றென்றைக்கும் நிலைத்திருப்பவையான வேதங்களின் மகத்தான பிரச்சாரகர் என்பதே ஸ்ரீகிருஷ்ணரின் பெருமை. இதே நிலை தான் மற்ற அவதாரங்களுக்கும், மற்ற நமது ரிஷிகளுக்கும்.

நமது முதல் கோட்பாடு, மனிதன் நிறைநிலையை அடைவதற்கும் முக்தி பெறுவதற்கும் தேவையான அனைத்தும் வேதங்களில் உள்ளன என்பதாகும். புதிதாக நீங்கள் எதையும் கண்டு பிடிக்க முடியாது. எல்லா அறிவுக்கும் லட்சியமானதொரு முழு ஒருமைக்கு அப்பால் உங்களால் போக முடியாது. வேதங்களில் அந்த ஒருமை ஏற்கனவே அடையப்பட்டுவிட்டது. அந்த ஒருமையைக் கடந்து செல்வது என்பது முடியாத காரியம். 'தத் த்வம் அஸி'[1] (நீ அதுவாக இருக்கிறாய்) என்பது எப்போது கண்டுபிடிக்கப்பட்டதோ அப்போதே மத அறிவு முழுமை பெற்று விட்டது. இது வேதங்களில்தான் உள்ளது. காலம், இடம், பல்வேறான சந்தர்ப்பங்கள் மற்றும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மக்களுக்கு அவ்வப்போது வழிகாட்ட வேண்டியது மட்டுமே எஞ்சியிருந்தது. பழைய அதே புராதன வழியில் மக்களை வழிகாட்டிச் செல்ல வேண்டியிருந்தது. அதற்காகவே இந்த மகத்தான ஆச்சாரியர்களும் மாபெரும் ரிஷிகளும் வந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணரின் அந்தப் பிரபலமான சொற்கள் இதைத் தெளிவாக விளக்குகின்றன: 'எப்போதெல்லாம் தர்மம்

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 8. 7.

குன்றி அதர்மம் தலைதூக்குகிறதோ, அப்போதெல்லாம், தர்மத்தைக் காப்பதற்காக என்னை நானே படைத்துக் கொள் கிறேன், எல்லா ஒழுக்கக் கேடுகளையும் ஒழிப்பதற்காக அவ்வப்போது நான் வருகிறேன்.'[1] இதுதான் இந்தியக் கருத்து.

தொடர்வது என்ன? ஒருபுறம், எந்தக் காரணத்தையும் சாராமல், அதைவிடக் குறைவாக, எவ்வளவுதான் மகத்தான வர்களாக இருந்தாலும் எந்த ரிஷிகளையோ, எவ்வளவு அறிவுத் திறம் மிக்கவர்களாக இருந்தாலும் எந்த அவதார புருஷர்களை யோகூட அதிகாரத்திற்காக நம்பி இருக்காமல், தன் சொந்த அடித்தளத்தின்மீது நிலைத்து நிற்கின்ற நிரந்தர உண்மைகள் உள்ளன. இது இந்தியாவின் ஒரு தனிப்பெரும் நிலை என்று நாம் துணிந்து கூற முடியும். நாம் உறுதியாகச் சொல்வதெல் லாம், வேதாந்தம் மட்டுமே உலகம்தழுவிய மதமாக (Universal Religion) இருக்க முடியும், ஏற்கனவே இருக்கின்ற உலகம் தழுவிய மதம் அது ஒன்றே என்பதுதான். ஏனெனில் அது தனி மனிதர் களை அல்ல, உண்மைகளையே போதிக்கிறது. தனி மனிதன்மீது எழுப்பப்பட்ட மதம் எதுவாக இருந்தாலும் அது மனிதகுலம் முழுமைக்குமான ஒரு மதமாக இருக்க முடியாது. நம் சொந்த நாட்டிலேயே எத்தனையோ மாமனிதர்களைக் காண்கிறோம். ஒரு சிறிய நகரத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். பல்வேறு மக்கள் தங்கள் மன அமைப்பிற்கு ஏற்ப பலரைத் தங்கள் தலைவராகக் கொண்டாடுவதைக் காணலாம். அப்படியிருக்க முகமது ஆகட்டும், புத்தர் ஆகட்டும், ஏசு ஆகட்டும்— ஒரு மனிதரை உலகம் முழுவதற்கும் மாதிரி-மனிதராக எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? அந்த ஒருவரிடமிருந்து, ஒரு மனிதரிட மிருந்து மட்டும் வந்தால்தான் நல்லொழுக்க நியதி, நீதிநெறி, ஆன்மீகம், மதம் எல்லாமே உண்மையாக இருக்க இயலும் என்று எப்படிக் கொள்ள முடியும்? வேதாந்த மதத்திற்கு இத்தகைய தனிப்பட்ட மனிதர்களின் அத்தாட்சி தேவை யில்லை; மனிதனின் அழியா இயல்பே அதன் அத்தாட்சி, அவனது நிலையான ஆன்மீக ஒருமையை அடிப்படையாகக் கொண்டதே அதன் நீதிநெறி, அவை ஏற்கனவே இருப்பவை, ஏற்கனவே அடையப்பட்டவை.

இனி மறுபுறம், மக்களுள் மிகப் பெரும்பாலோருக்கு ஒரு லட்சிய மனிதன் தேவை என்பதை அன்றே நம் மகான்கள்

---

1. கீதை, 4.7,8.

உணர்ந்திருந்தனர். அவர்களுக்கு ஏதாவது ஓர் உருவக் கடவுள் கண்டிப்பாக வேண்டும். உருவமற்ற கடவுளை எதிர்த்து முழக்கம் செய்த அதே புத்தர் மறைந்து ஐம்பது ஆண்டுகளுக்குள் அவரது சீடர்கள் அவரையே ஒரு கடவுளாக ஆக்கிவிட்டார்கள். உருவக் கடவுள் அவசியம். ஆனால் உருவக் கடவுள்களை வழிபடுவதற்குப் பதிலாக, ஏன், அதைவிடச் சிறப்பான ஒன்று, இந்த உலகத்தில் அவ்வப்போது தோன்றி நம்மிடையே உலவுகின்ற நடமாடும் தெய்வங்களை வழிபடுவது. ஏனெனில் வீண் கற்பனைகளான இந்த உருவக் கடவுளருள் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் பேரும் வழிபடத் தகுதியற்றவர்களே. ஆனால் எந்த கற்பனைக் கடவுளையும்விட, நமது கற்பனைப் படைப்புகளைவிட, அதாவது, நம்மால் கற்பனையில் உருவாக்க முடிந்த எந்தக் கருத்தையும்விட இந்த நடமாடும் தெய்வங்கள் வழிபடத் தகுந்தவர்கள். நீங்களோ நானோ கற்பனையில் உருவாக்க முடிகின்ற எந்தக் கருத்தையும்விட ஸ்ரீகிருஷ்ணர் மகத்தானவர். நீங்களோ நானோ சிந்தித்து உருவாக்க முடிகின்ற எந்த லட்சியத்தையும் விட புத்தர் என்பது மிகவுயர்ந்த, உயிர்த்துடிப்பு மிக்க, நிதரிசனமானதொரு கருத்து. எனவே கற்பனைக் கடவுள்களை விலக்கி வைத்துவிட்டுக்கூட, மனித குலம் அவர்களைப் போற்றி வழிபடுகிறது.

இதை நமது ரிஷிகள் அறிந்திருந்தார்கள். எனவே இந்த மாமனிதர்களையும் அவதார புருஷர்களையும் இந்தியர்கள் அனைவரும் வழிபட அவர்கள் அனுமதித்திருந்தனர். அவதாரங்களுள் மிகச் சிறந்தவராகிய ஸ்ரீகிருஷ்ணர் இன்னும் ஒருபடி மேலே செல்கிறார்; 'எந்த மனிதனிடமாவது அசாதாரணமான ஆன்மீக சக்தி வெளிப்படுமானால், நான் அங்கே இருக்கிறேன் என்பதை அறிந்துகொள். என்னிடமிருந்தே அந்தச் சக்தி வெளிப்படுகிறது'[1] என்கிறார் அவர். உலகம் முழுவதிலும் உள்ள அவதார புருஷர்களையும் இந்துக்கள் வணங்குவதற்கான கதவை இந்தக் கருத்து திறந்துவிடுகிறது. எந்த நாட்டில் வேண்டுமானாலும் தோன்றிய எந்த மகானையும் ஓர் இந்து வழிபட முடியும். கிறிஸ்தவர்களின் சர்ச்சுக்கும் முகமதியர்களின் மசூதிக்கும் சென்று நாம் வழிபடுகிறோம். இது நல்லது. ஏன் வழிபடக் கூடாது? நான் முன்பே சொல்லியதுபோல் நம்முடையது உலகம்தழுவிய மதம். எல்லா கருத்துக்களையும் தன்னுள்

---

1. கீதை, 4.7,8.

சேர்த்துக் கொள்ளும் அளவிற்கு அது பரந்தது. தற்போது உலகில் காணப்படுகின்ற மத லட்சியங்கள் அனைத்தையும் அதில் உடனேயே சேர்த்துக் கொள்ளலாம். அது மட்டுமின்றி, எதிர்காலத்தில் வரப்போகின்ற லட்சியங்களையும் சேர்த்து அணைத்துக்கொள்வதற்கு நம்மால் அமைதியாகக் காத்திருக்கவும் முடியும். ஏனெனில் வேதாந்த மதத்தின் கரங்கள் எண்ணற்றவை.

இதுதான் ஏறக்குறைய ரிஷிகள் மற்றும் அவதாரம் பற்றிய நமது கருத்தாக உள்ளது. இவர்களுக்கு அடுத்த நிலையிலும் சிலரை நாம் காண்கிறோம். வேதங்களில் ரிஷி என்ற சொல் திரும்பத்திரும்பப் பயன்படுத்தப்படுகிறது. தற்போது இந்தச் சொல் மிகவும் பரவலாக உள்ளது. இந்த ரிஷிகள் மிகுந்த அத்தாட்சியை உடையவர்கள், இதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். ரிஷி என்பதற்கு 'மந்த்ர த்ரஷ்டா' அதாவது மந்திரத்தைக் கண்டவர் என்பது பொருள். மதம் உண்மை என்பதற்கு நிரூபணம் என்ன? மிகப் பழங்காலத்திலேயே இந்தக் கேள்வி கேட்கப்பட்டுள்ளது. புலன்களால் அதை நிரூபிக்க முடியாது என்பதே பதில். 'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ[1]—லட்சியத்தை அடையாமல் எங்கிருந்து சொற்களும் எண்ணமும் திரும்பி வருகிறதோ', ந தத்ர சக்ஷுர்கச்சதி நோ வாக்கச்சதி நோ மன:[2]— அங்கே கண்கள் போக முடியாது, மனம் போக முடியாது, எந்தப் புலன்களும் போக முடியாது.'— இதுதான் காலங்காலமாகச் சொல்லப்பட்டு வந்த பதில்.

ஆன்மா உள்ளது, கடவுள் இருக்கிறார், அழிவற்ற வாழ்க்கை, மனிதனின் லட்சியம் இவை போன்ற எதற்கும் புற இயற்கை நமக்கு எந்தப் பதிலும் தர முடியாது. மனம் தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது; எந்த நேரமும் நில்லாமல் ஓடிக் கொண்டே இருக்கிறது. அது எல்லைக்கு உட்பட்டது, துண்டு துண்டாகப் பிளவுபட்ட ஒன்று. எல்லையற்ற, மாறாத, பிளவற்ற, பிரிக்க முடியாத, என்றும் நிலைத்திருக்கும் ஒன்றைப்பற்றி இயற்கை எவ்வாறு சொல்ல முடியும்? ஒருபோதும் முடியாது. உயிரற்ற ஜடப் பொருளிலிருந்து பதிலைப் பெற மனிதகுலம் முயன்ற போதெல்லாம், அதன் விளைவுகள் எவ்வளவு நாசகரமானதாக இருந்தது என்பதை வரலாறு காட்டுகிறது. வேதங்கள்

---

1. தைத்திரீய உபநிடதம், 2. 8.
2. கேனோபநிடதம், 1. 3.

முழங்குகின்ற அந்த அறிவு பின் எப்படி வரும்? ரிஷியாக இருப் பதன்மூலமே அது வரும். அந்த அறிவு புலன்களில் இல்லை. ஆனால் புலன்களே மனிதனின் அனைத்துமா, என்ன? மனித னின் எல்லாமே புலன்கள்தான் என்று சொல்வதற்கு யாருக்குத் தைரியம் இருக்கிறது? நம் வாழ்க்கையில், இங்கு இருக்கின்ற நம் ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் அமைதிமயமான சில கணங்கள் வருகின்றன. அது, நமது அன்பிற்குரிய ஒருவரின் மரணத்தைக் கண் முன்னால் பார்க்கும்போதாக இருக்கலாம், ஏதாவது அதிர்ச்சியைச் சந்திக்கின்ற கணமாக இருக்கலாம், இல்லை எல்லையற்ற மகிழ்ச்சியில் திளைக்கும் வேளையாக இருக்கலாம், அல்லது இது போன்ற எத்தனையோ சந்தர்ப்பங் களுள் ஒன்றாக இருக்கலாம். அப்போது மனம் அமைதியுற்று, அந்த நேரத்திற்கு அது தன் சொந்த இயல்பை உணர்வது போலாகிவிடுகிறது; சொற்கள் எட்ட முடியாத, மனம் செல்ல முடியாத, அனைத்திற்கும் அப்பாலுள்ள எல்லையற்ற ஒன்றின் காட்சி கண நேரத்திற்கு நமக்குக் கிடைத்தது போலாகிவிடுகிறது. சாதாரண வாழ்வில் நிகழ்கின்ற இதனை உயர்த்த வேண்டும், பயிற்சிகள் செய்து முழுமையாக்க வேண்டும்.

ஆன்மா புலன்களால் கட்டுப்படுத்தப்பட்டதோ, வரை யறை செய்யப்பட்டதோ அல்ல. புலன்களால் மட்டுமல்ல, புத்தியால்கூடக் கட்டுப்படுத்தப் படாதது அது என்பதை நெடுங் காலத்திற்கு முன்பே மனிதர்கள் அறிந்திருந்தனர். இந்தப் புத்தி என்பது எல்லையற்ற சங்கிலியின் ஒரு வளையத்திற்கு வைக்கப் பட்டுள்ள பெயர் மட்டுமே என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். ஸத் அல்லது இருப்பு (Being) என்பதும் புத்தியும் ஒன்றல்ல; ஸத்தின் ஓர் அம்சமே புத்தி. புத்திக்கு அப்பால் சென்று ஆராய்கிறான் தைரியசாலி. புத்தி புலன்களால் கட்டுப் படுத்தப்படுகிறது. ஆன்மீக உலகின் உண்மைகளை அறிய வேண்டுமானால் ஒருவர் புலன்களுக்கு அப்பால், புத்திக்கு அப்பால் செல்ல வேண்டும். இவ்வாறு புலன்களின் எல்லை யைக் கடந்து செல்வதில் வெற்றி பெற்ற மனிதர்கள் இப் பொழுதுகூட இருக்கிறார்கள். அவர்கள் ரிஷிகள் என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் ஆன்மீக உண்மைகளை நேருக்குநேர் காண்கிறார்கள்.

எனவே வேதங்கள் உண்மையானவை என்பதற்கு நிரூ பணம், இதோ எனக்கு முன் இருக்கின்ற மேஜைக்கான நிரூ பணம்தான்—அதாவது பிரத்தியட்ச அனுபவம் என்பதுதான்.

இந்த மேஜையை என் புலன்களால் பார்க்கிறேன், ஆன்மீக உண்மைகளை ஆன்மாவின் உயர் உணர்வு நிலைகளில் காண்கிறோம். இந்த ரிஷிநிலை காலம், இடம், பால், இனம் இவைகளைக் கடந்தது, இந்த ரிஷி நிலை என்பது ரிஷிகளின் வழியில் தோன்றிய ஆரியர், ஆரியர் அல்லாதவர், மிலேச்சர் அனைவருக்கும் பொதுச் சொத்து என்று தைரியமாக முழங்குகிறார் வாத்ஸ்யாயனர். இதுதான் வேதங்களில் உள்ள ரிஷி நிலை. இந்திய மதத்தின் இந்த லட்சியத்தை நாம் நினைவில் கொள்ள வேண்டும். பிற நாடுகளும் இதனை நினைக்க வேண்டும், கற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அப்போதுதான் உலகத்தில் சச்சரவுகளும் சண்டைகளும் குறையும்.

மதம் என்பது நூல்களில் இல்லை, கொள்கைகளில் இல்லை, கோட்பாடுகளில் இல்லை, பேச்சில் இல்லை, ஆராய்ச்சியில்கூட இல்லை. அது வாழ்வதும் வளர்வதும் ஆகும். என் நண்பர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் ரிஷிகள் ஆகாத வரை, ஆன்மீக உண்மைகளை நேருக்குநேர் காணாதவரை ஆன்மீக வாழ்க்கை என்பது உங்களுக்கு ஆரம்பிக்கவில்லை. உயர் உணர்வு நிலை மலராதவரை, ஆன்மீகம் என்பதெல்லாம் வெறும் பேச்சுதான், ஆரம்பப் பயிற்சிதானே தவிர வேறல்ல.

யாரோ, யாரிடமோ, எங்கோ பேசியவற்றையெல்லாம் நீங்கள் எடுத்துப் பேசிக்கொண்டு இருக்கிறீர்கள். புத்தர் கூறிய அழகிய கருத்து ஒன்று இங்குப் பொருத்தமாக இருக்கும். அவர் ஒருமுறை சில பிராமணர்களுடன் கலந்துரையாட நேர்ந்தது. அவர்கள் பிரம்மத்தின் இயல்பை விளக்கினார்கள்.

புத்தர் பெருமான் அவர்களிடம் கேட்டார்: 'நீங்கள் பிரம்மத்தைப் பார்த்ததுண்டா?' 'இல்லை' என்றார் பிராமணர்.

'உங்கள் தந்தை?'

'இல்லை, அவரும் பார்த்ததில்லை.'

'சரி, உங்கள் பாட்டனார்?'

'இல்லை, அவரும் பார்த்திருப்பார் என்று தோன்றவில்லை.'

புத்தர் கேட்டார்: 'என் நண்பா, உங்கள் பாட்டனாரோ, உங்கள் தந்தையோ, நீங்களோ பார்க்காத ஒன்றைப்பற்றி வாதம் செய்து ஒருவரையொருவர் மட்டம்தட்ட ஏன் முயல்கிறீர்கள்?'

உலகம் முழுவதும் இதைத்தான் செய்து கொண்டிருக்கிறது.

இதையே நாம் வேதாந்த மொழியில் கூறுவோம்: 'இந்த ஆன்மா வெற்றுப் பேச்சினாலோ, மிகக் கூர்மையான அறிவி னாலோ, ஏன், வேதங்களையே படிப்பதால்கூட அடையக் கூடியதல்ல.'[1] உலக நாடுகள் அனைத்திடமும் வேதங்களின் மொழியில் பேசுவோம். உங்கள் சண்டைகளும் சச்சரவுகளும் வீண். நீங்கள் பிரச்சாரம் செய்ய விழைகின்ற கடவுளை நீங்கள் கண்டிருக்கிறீர்களா? காணவில்லை என்றால் உங்கள் பிரச்சாரம் வீண். ஏனெனில் நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்பது உங்களுக்கே தெரியாது. நீங்கள் அவரைப் பார்த்திருப்பீர்களா னால் சண்டையிட மாட்டீர்கள். உங்கள் முகமே ஒளி வீசும்.

பழங்கால உபநிடத ரிஷி ஒருவர் பிரம்மத்தைப்பற்றிக் கற்றுக்கொள்வதற்காகத் தம் மகனை அனுப்பினார். அவன் திரும்பி வந்ததும் அவனிடம் அவர், 'என்ன கற்று வந்தாய்?' என்று கேட்டார். தான் கற்று வந்திருந்த சாஸ்திரங்களை எல் லாம் ஒப்பித்தான் மகன். அதைக் கேட்ட அவர், 'இதெல்லாம் ஒன்றுமே இல்லை; மறுபடியும் போ' என்று சொன்னார். மகனும் திரும்பிச் சென்றான், சில காலம் கழித்துத் திரும்பி வந்தபோது அதே கேள்வியை ரிஷி கேட்டார். அதே பதில் வந்தது. மறுபடியும் அவன் திருப்பி அனுப்பப்பட்டான். அடுத்த முறை அவன் திரும்பி வந்தபோது அவனது முகம் ஒளி வீசிற்று. அதைக் கண்டதும் ரிஷி எழுந்து நின்று, 'ஆகா, என் மகனே, உன் முகம் பிரம்மத்தை அறிந்தவனின் முகம்போல் ஒளி வீசு கிறது' என்றார்.[2]

நீங்கள் இறைவனை உணர்ந்தால் உங்கள் முகம் மாறிவிடும், உங்கள் குரல் மாறிவிடும், உங்கள் தோற்றமே மாறிவிடும். நீங்கள் மனித குலத்திற்கு ஒரு வரப்பிரசாதமாக இருப்பீர்கள். ரிஷியைத் தடுக்க யாராலும் முடியாது. நமது மதத்தின் லட்சிய மான ரிஷி நிலை இதுதான். மற்றபடி இந்தப் பேச்சுக்கள், வாதங்கள், தத்துவங்கள், துவைதங்கள், அத்வைதங்கள், ஏன், வேதங்கள்கூட வெறும் படிக்கற்களே, இரண்டாம் நிலையில் உள்ளவைகளே; நேரடி அனுபவமே முதன்மையானது. வேதங்கள், இலக்கணம், வான நூல் போன்ற எல்லாமே இரண் டாம் நிலையில் உள்ளவைதான். மாறாத ஒன்றை நாம் உணரும் படி எது செய்கிறதோ, அதுவே மேலான அறிவு. அதனை உணர்ந்தவர்கள் ரிஷிகள். அவர்களையே நாம் வேதங்களில்

1. கடோபநிடதம், 2. 23.
2. சாந்தோக்கிய உபநிடதம், 4. 9. 2.

காண்கிறோம். மேலும், ரிஷிநிலை என்பது ஒரு தனி நிலை. உண்மை இந்துக்களாகிய நாம் ஒவ்வொருவரும் ஒருநாள் இல்லாவிடில் ஒருநாள் இந்த நிலையை அடைந்தேயாக வேண்டும். ஓர் இந்துவைப் பொறுத்தவரை, ரிஷி நிலையை அடைவது என்பது முக்தி பெறுவதே. இது நமக்குத் தெரிய வேண்டிய ஒன்று. கோட்பாடுகளை நம்புவதோ, ஆயிரக்கணக்கான கோயில்களுக்குப் போவதோ, உலகத்தில் உள்ள எல்லா நதிகளிலும் குளிப்பதோ அல்ல, ரிஷி ஆவதே, மந்த்ர த்ரஷ்டா ஆவதே முக்தி, முக்தி பெறுதல்.

பிற்காலத்திற்கு வரும்போது, உலகையே அசைத்த பல மகரிஷிகளையும் மகத்தான அவதார புருஷர்களையும் காண்கிறோம். அவர்கள் பலர். பாகவத புராணத்தின்படி, அவர்களின் எண்ணிக்கை கணக்கற்றது.[1] அவர்களுள் ராமரும் கிருஷ்ணரும் இந்தியாவில் அதிகமாக வழிபடப்படுகின்ற இருவர் ஆவர். ராமர் வீரகாலத்தின் லட்சிய புருஷர், சத்தியம் மற்றும் ஒழுக்கத்தின் திரண்ட வடிவம், லட்சிய மகன், லட்சியக் கணவன், லட்சியத் தந்தை, இவைகளுக்கு மேலாக, லட்சிய மன்னன். இந்த ராமரை நம்முன் வைப்பவர் வால்மீகி மகரிஷி. மகத்தான கவிஞரான வால்மீகி, ராமரின் வாழ்க்கையை எழுதியிருப்பது போன்ற அவ்வளவு தூய்மையான, இனிய, அழகிய, அதே வேளையில் எளிமையான மொழியை வேறெங்கும் காண முடியாது.

சீதையைப்பற்றி என்ன சொல்வது! உலகம் முழுவதும் உள்ள கடந்தகால இலக்கியங்கள் முழுவதையும் அலசிப் பாருங்கள், அதுபோலவே எதிர்கால இலக்கியங்களையும் முடிந்தால் ஆராயுங்கள்; இன்னொரு சீதையை நீங்கள் காண முடியாது. இது உறுதி. சீதை இணையற்றவள். இனி அதைப்போல் ஒரு பாத்திரத்தைப் படைக்க முடியாது என்னும்படி அவள் படைக்கப்பட்டுள்ளாள். ஒருவேளை ராமர்கள் பலர் இருக்கலாம், ஆனால் இரண்டாவதாக ஒரு சீதை இருக்க முடியாது என்றுதான் சொல்ல வேண்டும். உண்மையான இந்தியப் பெண்மை வார்க்கப்பட வேண்டிய அச்சு அவள். ஏனெனில் பூரணப் பெண்மை என்பதன் இந்திய லட்சியங்கள் அனைத்து அந்த ஒரு சீதையின் வாழ்க்கையிலிருந்தே தோன்றியிருக்கின்றன. கடந்த ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்தியாவின் ஆண்,

---

1. அவதாரா ஹ்யஸங்க்யேயா:|| —பாகவதம், 1. 3. 26.

பெண், குழந்தைகள் அனைவரின் வழிபாட்டைப் பெற்றவாறு வாழ்ந்து கொண்டிருக்கிறாள் அவள். பெருமைக்குரிய இந்தச் சீதை தூய்மையினும் தூய்மையானவள். பொறுமைக்கும் சகிப்புத்தன்மைக்கும் உறைவிடமாகத் திகழ்ந்தவள். துன்ப வாழ்வை ஒரு சிறு முணுமுணுப்பும் இல்லாமல் தாங்கித் துயரப்பட்டவள். அவள் கற்பின் திருவுரு, தூய்மையின் உறைவிடம். அவள் மக்களின் லட்சியம், தேவர்களின் லட்சியம். அந்த மகத்தான சீதை நம் தேசிய தேவியாக எப்போதும் நிலைத்து வாழ்வாள். சீதையைப்பற்றி அறியாத யாரும் இருக்க மாட்டார்கள், எனவே இங்கு எந்த விளக்கமும் தேவையில்லை. நமது புராணங்கள் எல்லாம் மறையலாம், வேதங்கள்கூட அழிந்து போகலாம், நமது சம்ஸ்கிருத மொழி ஒரேயடியாக அழிந்து போகலாம். ஆனால் இந்த நாட்டில் ஐந்து இந்துக்கள் உயிர்வாழ்ந்தாலும்கூட, அவர்கள் கொச்சை மொழி பேசி னாலும்கூட, அங்கு சீதையின் கதை இருக்கவே செய்யும். என் வார்த்தைகளைக் குறித்துக் கொள்ளுங்கள். அவள் நம் இனத்தின் உயிரோட்டத்தில் ஊடுருவி இருக்கிறாள், இந்துக்களான ஆண், பெண் ஒவ்வொருவரின் ரத்தத்திலும் கலந்திருக்கிறாள். நாமெல் லாம் சீதையின் குழந்தைகள். பெண்களின் முன்னேற்றம் என்ற பெயரில் அவர்களை சீதை-லட்சியத்திலிருந்து விலகச் செய்தால் அந்த முயற்சிகள் தோல்வியையே தழுவும். அதையே நாம் அனுதினமும் கண்டு வருகிறோம். சீதையின் அடியொற்றியே நம் பெண்கள் வளர வேண்டும், முன்னேற வேண்டும். அது ஒன்றே வழி.

அடுத்து நாம் எடுத்துக்கொள்பவர் பல்வேறு வடிவங்களில் வழிபடப்படுபவர். ஆண்களும் அதுபோலவே பெண்களும், குழந்தைகளும், அதுபோலவே வளர்ந்தவர்களும் விரும்பிப் போற்றுகின்ற லட்சிய புருஷர் அவர். பாகவத புராணத்தை எழுதியவர் அவரை அவதார புருஷர் என்று சொல்லியதுடன் திருப்தி அடையாமல் 'மற்ற அவதாரங்கள் எல்லாம் கடவுளின் அம்சங்கள் மட்டுமே. கிருஷ்ணரோ முழுமுதற்கடவுளே'[1] என்று குறிப்பிட்ட ஸ்ரீகிருஷ்ணரைத்தான் நான் இங்கு குறிப்பிடு கிறேன். அவரது பலமுகப் பரிமாணங்களைப் பார்க்கும்போது அத்தகைய பாராட்டுக்களால் அவரை வர்ணிப்பதில் விசித்திரம் எதுவுமில்லை என்றே தோன்றுகிறது.

---

1. ஏதே சாம்ச கலா: பும்ஸ: க்ருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம் ||
—பாகவதம், 1. 3. 28.

அவர் மிகவும் ஆச்சரியமான சன்னியாசி, அதேவேளை யில் மிக ஆச்சரியமான இல்லறவாசி. அவரிடம் ஆச்சரியகர மான ரஜஸ், அதாவது அதிகாரம் இருந்தது; அதே நேரத்தில் மிக ஆச்சரியமான துறவு உணர்வுகளுக்கு இடையில் அவர் வாழ்ந்தார். கீதையைப் படிக்காமல் கிருஷ்ணரைப் புரிந்து கொள்ள முடியாது. தமது போதனையின் திரண்ட வடிவம் அவர். தாங்கள் பிரச்சாரம் செய்ய வந்த உண்மையின் நடை முறை விளக்கங்களாகவே ஒவ்வோர் அவதார புருஷர்களும் வாழ்ந்தார்கள். பகவத்கீதையைப் போதித்தவரான ஸ்ரீகிருஷ்ண ரின் வாழ்வு அந்த தெய்வீகக் கவிதையான கீதையின் விளக்க மாகவே திகழ்ந்தது. பற்றின்மைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட் டாக அவர் விளங்கினார். தமது மணிமுடியைத் துறந்து விடு கிறார், பின்னர் அதைப்பற்றி அவர் கவலைப்படவே இல்லை. இந்தியாவின் தலைவர் அவர். அவரது ஆணையில் மன்னர்கள் முடி துறந்தார்கள், ஆனால் அவர் ஒருபோதும் மன்னராக விரும்பவில்லை. கோபியருடன் ஆடிக்களித்த எளிய கிருஷ்ண ராகவே எப்போதும் இருந்தார் அவர்.

ஆகா, அவரது வாழ்க்கையின் அந்த அற்புதப் பகுதியான ராசலீலை! அதைப் புரிந்துகொள்வதுதான் எவ்வளவு கடின மானது! முழுக்கமுழுக்கத் தூய்மையும் ஒழுக்கமும் இல்லாத யாரும் அதைப் புரிந்துகொள்ள முயற்சிக்கவே கூடாது. அற்புதக் காதலின் ஆனந்தப் பூரிப்பே அந்த பிருந்தாவன லீலையில் உருவகமாக விளக்கப்பட்டுள்ளது. அன்பினால் பித்தேறி, அன்பெனும் மதுவை அருந்தி, அன்புப் பித்தேறியவர்களைத் தவிர யாரும் அதைப் புரிந்துகொள்ள முடியாது. கோபியரின் அன்புதான் எத்துணை மகத்தானது! அது அன்பின் மொத்த வடிவம், வேறு எதையும் விரும்பாதது, சொர்க்கத்தைப் பற்றிக்கூட கவலைப்படாதது. இவ்வுலகில் மட்டுமல்ல மறு வுலகிலும் எதையும் நாடாதது. அந்த அன்பின் தாபங்களை யார்தான் புரிந்துகொள்ள முடியும்?

என் நண்பர்களே, இங்கே, இந்தக் கோபியரின் அன்பில் தான் உருவக்கடவுள்-அருவக் கடவுள் பிரச்சினைக்குத் தீர்வு உள்ளது. மனிதனால் ஏற்க முடிந்த மிகவுயர்ந்த லட்சியம் உருவக் கடவுள் என்பது நமக்குத் தெரியும். பிரபஞ்சமெங்கும் நிறைந்தும், தனது வெளிப்பாடாகவே இந்தப் பிரபஞ்சத்தைக் கொண்டும் விளங்குகின்ற அருவக் கடவுளில் நம்பிக்கை கொள் வது தத்துவ மயமானது என்பதை நாம் அறிவோம். நம்மால்

பார்க்கக்கூடிய, நம்மால் புரிந்துகொள்ளக்கூடிய ஒரு வடிவத்தை, இதய தாபங்களையெல்லாம் பாதங்களில் கொட்டி ஆறுதல் பெற்றிட ஓர் உருவத்தையே நம் மனம் நாடுகிறது. எனவே மனிதனால் சிந்தனை செய்ய முடிந்த மிகவுயர்ந்த கருத்து உருவக் கடவுள். ஆனால் அறிவோ இத்தகைய கருத்தைக் கண்டு திகிலடைந்து நிற்கிறது.

இந்தப் பிரச்சினை ஒன்றும் புதிதல்ல; பிரம்ம சூத்திரத்திலும்,[1] காட்டில் திரௌபதி தர்மபுத்திரருடன் விவாதித்த போதும்[2] எழுப்பப்பட்ட அதே பழைய கேள்விதான்—கருணையே வடிவான, எல்லாம் வல்ல சகுணக் கடவுள் ஒருவர் இருந்தால், இந்தப் பூமி ஏன் நரகமாக உள்ளது? அவர் ஏன் இப்படி ஒன்றைப் படைக்க வேண்டும்? அந்தக் கடவுள் ஒருதலைப் பட்சமானவரே. இந்தப் பிரச்சினைக்கு ஒரு பதில் இருப்பதாகத் தெரியவில்லை, இருக்கின்ற ஒரே பதிலைக் கோபியர் கொண்ட அன்பில்தான் காண முடியும். அவர்கள் கிருஷ்ணரைப்பற்றிய புகழ்மொழிகள் அனைத்தையும் வெறுத்தார்கள். அவர் படைப்பின் தலைவனான இறைவனா என்பதை அறிய அவர்கள் விரும்பவில்லை, அவர் எல்லாம் வல்லவரா, எல்லா ஆற்றல்களும் நிறைந்தவரா என்பன போன்ற எதையும் அறிந்துகொள்ள விரும்பவில்லை. கிருஷ்ணன் என்றால் எல்லையற்ற அன்பு—இது ஒன்றை மட்டுமே அவர்கள் புரிந்து கொண்டிருந்தனர், அவ்வளவுதான். பிருந்தாவன கிருஷ்ணனை மட்டுமே அவர்கள் அறிந்திருந்தார்கள். இடையர் குலத் தலைவனாகவும் மன்னாதி மன்னனாகவும் விளங்கிய கண்ணன் அந்தக் கோபியரைப் பொறுத்தவரை மாடு மேய்ப்பவர், என்றென்றைக்கும் மாடு மேய்ப்பவர் மட்டுமே. 'எனக்குச் செல்வம் வேண்டாம், மக்கள் வேண்டாம், கல்வியும் வேண்டாம், சொர்க்கத்திற்குக்கூட நான் போக வேண்டாம். நான் மறுபடி மறுபடி பிறப்பேனாக; ஆனால் என் இறைவா, அந்தப் பிறவியில் எல்லாம் நான் உன்னை அன்பு செய்ய வேண்டும், அன்பிற்காகவே அன்புகொள்ள வேண்டும்— இந்த

---

1. வைஷம்ய நைர்க்ருண்யே ந, ஸாபேக்ஷத்வாத் ||
—இறைவனிடம் ஒருதலைப் பட்சமோ கொடுமையோ இருப்பதாகக் கூற முடியாது. ஏனெனில் அவரவர் புண்ணிய பாவத்திற்கு ஏற்பவே அவர் பலன்களை அளிக்கிறார்.

—பிரம்ம சூத்திரம், 2. 1. 34.

2. மகாபாரதம், வன பர்வம் மூன்றாம் அத்தியாயம் பார்க்க.

வரத்தை எனக்கு அருள்வாயாக!'[1] மத வரலாற்றில் ஒரு மைல்கல்லை இங்கு நாம் காண முடிகிறது; அன்பிற்காக அன்பு, பணிக்காகப் பணி, கடமைக்காகக் கடமை போன்ற லட்சியங்களை இங்கு நாம் காண்கிறோம். மனித சமுதாய வரலாற்றிலேயே முதன்முறையாக, அவதாரங்களுள் தலைசிறந்த வராகிய கிருஷ்ணரின் திருவாயினின்று இந்த லட்சியம் உதிர்ந்துள்ளது. பயமுறுத்துவதும் ஆசை காட்டுவதுமாக இருந்த மதங்கள் எல்லாம் அடியோடு ஒழிந்து போய்விட்டன. நரகத்தைப் பற்றிய பயம், சொர்க்கத்தில் இன்பங்களை அனுபவிக்கும் ஆசை போன்றவற்றின் இடத்தில், அன்பிற்காக அன்பு, கடமைக்காக கடமை, பணிக்காகப் பணி போன்ற மகத்தான லட்சியங்கள் தோன்றின.

எத்தகைய அன்பு அது! கோபியரின் அன்பைப் புரிந்து கொள்வது கடினம் என்று சற்றுநேரத்திற்கு முன்பு சொன் னேன். கண்ணனின் வரலாற்றிலேயே ஈடிணையற்ற பகுதியான இந்த ராசலீலையின் உட்பொருளைப் புரிந்துகொள்ள முடியாத மூடர்கள் நம்மிடமும் இல்லாமலில்லை. ஏதோ அசுத்தத்தைத் தவிர்ப்பதுபோல் இதிலிருந்து விலகியோட முயற்சிக்கின்ற, நம் ரத்தத்தில் பிறந்தும் தூய்மையற்றவர் களான அத்தகைய முட்டாள்கள் இருக்கவே செய்கின்றனர் என்பதை மீண்டும் சொல்ல என்னை அனுமதியுங்கள். அவர்களுக்கு நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன்: முதலில் நீங்கள் தூய்மை பெறுங்கள், கோபியரின் பிரேமை வரலாற்றைச் சொல்லியவர் வேறு யாரும் அல்ல, சுகதேவர் என்பதை நினை வில் கொள்ளுங்கள். கோபியரின் இந்த அற்புதப் பிரேமையை எழுத்தில் வடித்த சுக தேவர் பிறப்பிலிருந்தே தூய்மையானவர், என்றென்றுமே தூயவர், வியாசரின் மகன்.

மனத்தில் சுயநலம் இருக்கும்வரை கடவுளிடம் அன்பு தோன்றுவது சாத்தியமல்ல. சுயநல அன்பு வெறும் வியாபாரமே தவிர வேறல்ல—'பகவானே! நான் உனக்குச் சிலவற்றைத் தருகிறேன், அதற்குப் பதிலாக நீ சிலவற்றைக் கொடு' என்கிறார்கள் இவர்கள். உடனே பகவான்: 'நீ இன்னதைச் செய்யாமல் இருந்தால் உன்னை நான் உன் மரணத்திற்குப் பின்னர் கவனித்துக் கொள்கிறேன்' என்பார். அல்லது

---

1. ந தனம் ந ஜனம் ந ஸுந்தரீம் கவிதாம் வா ஜகதீச காமயே ।
மம ஜன்மனி ஜன்மனீச்வரே பவதாத்பக்திரஹைதுகீ த்வயி ॥
—ஸ்ரீசைதன்யர், சிக்ஷாஷ்டகம்.

ஒருவேளை 'வரும் பிறவிகள்தோறும் உன்னை நெருப்பில் வறுத்து எடுப்பேன்' என்பார்— இப்படிப் போகிறது இவர்களின் அன்பு. இத்தகைய தாழ்ந்த எண்ணங்கள் மூளையில் இருக்கும்வரை கோபியரின் அன்புப்பித்தினை, பிரேம தாபங்களை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? 'ஓ, ஒரு முத்தம், அந்த இதழ்களிலிருந்து ஒரே ஒரு முத்தம்! நீ ஒருவனை முத்தமிட்டுவிட்டால் உன்மீது அவனது தாகம் அதிகரித்துக் கொண்டே போகிறது, அவனது துன்பமெல்லாம் தொலைந்து போகிறது, உன்னைத் தவிர மற்றவற்றின் மீதுள்ள பற்றினை அவன் மறக்கிறான், உன்னை, உன்னை மட்டுமே நினைக்கிறான்'.[1]

பணம், பெயர், புகழ் இவற்றின் மீதும், பயனற்ற இந்த உலகின் மீதும் உள்ள ஆசைகளை விடுங்கள். அதன்பிறகு, அதன்பிறகு மட்டுமே கோபியரின் அன்பை உங்களால் புரிந்து கொள்ள முடியும். எல்லாவற்றையும் துறக்காமல் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அந்த அன்பு புனிதமானது. மனம் அப்பழுக்கற்ற தூய்மை அடையாமல் அந்தப் புனிதமான அன்பைப் புரிந்துகொள்ள முடியாது. இதயத்தில் காமமும் பணத்தாசையும் புகழ்போதையும் ஒவ்வொரு நிமிடமும் பொங்கிக் குமுறுகின்றவர்கள், கோபியரின் அன்பைப் புரிந்து கொள்ளவும் அதைக் குறைகூறவும் துணிகிறார்கள்! கிருஷ்ண அவதாரத்தின் சாரமே கோபியரின் அன்புதான். மகத்தான தத்துவமாகிய கீதையைக்கூட கோபியரின் இந்தப் பிரேமை வெறியோடு ஒப்பிட முடியாது. ஏனெனில் லட்சியத்தை நோக்கி ஒருவன் நிதானமாகச் செல்வது பற்றியே கீதையில் போதிக்கப்படுகிறது. ஆனால் இங்கோ இந்த ஆனந்த வெறியில் அன்புப் போதையில், சீடர்கள், ஆச்சாரியர்கள், போதனைகள், புத்தகங்கள் எல்லாமே, ஏன், அச்சம், கடவுள், சொர்க்கம் போன்ற கருத்துக்கள்கூட ஒன்றாகி விடுகின்றன. எல்லாமே வீசி எறியப்பட்டு விடுகின்றன, எஞ்சுவது அன்புப்பித்து ஒன்றே. எல்லாவற்றையும் மறக்கின்ற நிலை இது. இந்த அன்புப்பித்தில் ஆழ்கின்ற அன்பன் கிருஷ்ணனைத் தவிர இந்த உலகில் வேறு எதையும் காண்பதில்லை; அவரை, அவரை மட்டுமே காண்கிறான். ஒவ்வொரு முகமும் அவனுக்குக் கிருஷ்ணனின் முகமாகத் தெரிகிறது. அவனது சொந்த முகமே கிருஷ்ணனின்

---

1. பாகவதம், 10. 31. 14.

முகம்போல் தெரிகிறது. அவனது ஆன்மாகூட கிருஷ்ண வண்ணத்தில் தோய்ந்துவிடுகிறது, அதுதான் மகத்தான கிருஷ்ணர்!

வீண் விபரங்களை அறிந்து கொள்வதில் நேரத்தை வீணாக் காதீர்கள். வாழ்க்கையின் அடிப்படையை, அதன் சாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். கிருஷ்ணரின் வாழ்க்கையில் வரலாற் றிற்கு முரணானவை பல இருக்கலாம், இடைச்செருகல்கள் இருக்கலாம். இவை உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் பரம்பரைப் பாதையிலிருந்து விலகிச் செல்கின்ற இந்தப் புதிய மகத்தான கருத்துக்களுக்கு ஓர் அடிப்படை, ஓர் அடித்தளம் இருந்தேயாக வேண்டும். வேறு எந்த ரிஷி அல்லது மகானின் வாழ்க்கையை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். அவர் தமக்கு முன்பிருந்த கருத்துக்களின் ஒரு பரிணாம வளர்ச்சி யாகவே இருக்கிறார். அல்லது தமது காலத்திலே, தமது நாட் டிலேயே பரவலாகக் காணப்படுகின்ற கருத்துக்களை மட்டுமே போதிக்கிறார். இந்த மகான் இருந்தாரா இல்லையா என்பதைப் பற்றிய சந்தேகம்கூடத் தோன்றலாம்! ஆனால் நான் சவால் விடுகிறேன், இந்த லட்சியங்கள்—பணிக்காகவே பணி, அன்புக் காகவே அன்பு, கடமைக்காகவே கடமை—கிருஷ்ணரின் சொந்தக் கருத்துக்கள் அல்ல, இந்தக் கருத்துக்களை முதலில் வெளிப்படுத்திய வேறொருவர் இருக்கிறார் என்பதை நிரூபி யுங்கள் பார்க்கலாம். முடியாது. இந்தக் கருத்துக்கள் வேறு யாரிடமிருந்தும் கடனாக வாங்கப்பட்டிருக்க முடியாது. கிருஷ்ணர் பிறந்தபோது அவை காற்றிலே மிதந்து கொண் டிருக்கவில்லை. கிருஷ்ண பகவான்தான் முதன்முதலில் அதை வெளிப்படுத்தியவர், அவரது சீடரான வியாசர் அதை மனித குலம் முழுவதற்கும் பிரச்சாரம் செய்தார். இது மிகவுயர்ந்த கருத்து.

கிருஷ்ணரின் பரிமாணங்களுள் நாம் பெறக்கூடிய மிக உயர்ந்த பரிமாணம் கோபீஜன வல்லபர், பிருந்தாவன கோபிய ரின் காதலன். அந்த அன்புப்பித்து உங்கள் மூளையில் புகுமானால், ஆசீர்வதிக்கப்பட்ட அந்த கோபியரை நீங்கள் புரிந்துகொள்ள முடியுமானால், அப்போதுதான் அன்பு என்றால் என்ன என்பதை நீங்கள் புரிந்துகொள்வீர்கள். உலகமே மறந்துபோய், மற்ற எல்லா எதிர்பார்ப்புக்களும் ஒழிந்துபோய், வேறெந்த நோக்கமும், உண்மையைத் தேடும் ஆசைகூட இல்லா மல் உங்கள் இதயம் தூய்மை அடைய வேண்டும். அப்போது,

அப்போது மட்டுமே அந்தப் பிரேமை வெறி உங்களுக்கு வரும்; கோபியர் கொண்டிருந்த எல்லையற்ற அந்த அன்பின் சக்தியும் பலமும் உங்களுக்கு வரும்; அன்பிற்காகவே அன்பு செய்ய உங்களால் முடியும். அதுதான் லட்சியம். அதைப் பெற்றால் நீங்கள் எல்லாவற்றையும் பெற்றுவிட்டீர்கள்.

இந்த உயர்நிலையிலிருந்து சற்றுக் கீழ்நிலைக்கு, அதாவது கீதையை உபதேசித்த கிருஷ்ணரிடம் வருவோம். குதிரைக்கு முன்னால் வண்டியைக் கட்டுவதைப் போன்றதொரு முயற்சி இப்போது இந்தியாவில் நடந்து கொண்டிருக்கிறது. கிருஷ்ணர் கோபியரின் காதலனாக இருப்பது நம்முள் பலருக்கு ஏதோ அமானுஷ்யமாகத் தோன்றுகிறது, இத்தகைய விஷயங்களை ஐரோப்பியர்கள் அதிகமாக விரும்புவதில்லை. டாக்டர் இன்னார் அதை விரும்பவில்லை என்றால் கோபியர் போயே தீர வேண்டும்! ஐரோப்பியனின் அனுமதி இல்லாமல் எப்படி கிருஷ்ணர் வாழ முடியும்? வாழ முடியாது. மகாபாரதத்தில் கோபியரைப்பற்றி ஏதோ முக்கியமல்லாத ஓரிரு இடங்களில் தவிர எங்குமே குறிப்பிடப்படவில்லை. திரௌபதியின் பிரார்த்தனையிலும்[1] சிசுபாலனின் பேச்சிலும் பிருந்தாவனம்பற்றிக் கூறப்படுகிறது, அவ்வளவுதான். இவையெல்லாம் இடைச் செருகல்களாகத்தான் இருக்க வேண்டும்! ஐரோப்பியர்களுக்கு எது தேவையில்லையோ அதை உடனே தூக்கி எறியத்தானே வேண்டும்! கோபியரைப்பற்றி, ஏன், கிருஷ்ணர்கூட இடைச் செருகல்தான்! என்னவென்று சொல்வது! கொடுக்கல்-வாங்கலில் ஆழ்ந்து மூழ்கிய இவர்களைப் பொறுத்தவரை மதம்கூட வியாபாரமாகிவிட்டது. இங்கே எப்படியாவது ஏதாவது செய்து சொர்க்கத்திற்குப் போக முயற்சிக்கிறார்கள். இங்கு ஒன்றைக் கொடுத்து அங்கே கூட்டுவட்டியுடன் இன்பம் அனுபவிக்கத் துடிக்கும் வியாபாரிகள் அவர்கள். இத்தகைய ஒரு சிந்தனை முறையில் நிச்சயமாக கோபியருக்கு இடமில்லைதான்.

லட்சியக் காதலனான கிருஷ்ணனிலிருந்து, சற்று கீழ்நிலையான கீதை போதகரான கிருஷ்ணனிடம் வருவோம். கீதையை விட ஒரு சிறந்த உரை வேதங்களுக்கு இதுவரை எழுதப்படவுமில்லை, இனி எழுதவும் முடியாது. வேதங்கள் ஆகட்டும், உபநிடதங்கள் ஆகட்டும், அவற்றின் உட்பொருளைப் புரிந்து கொள்வது கடினம். ஏனெனில் ஒவ்வொரு உரையாசிரியர்களும்

---

1. கோவிந்த த்வாரகா வாஸின் க்ருஷ்ண கோபீஜனப்ரிய ||
—மகாபாரதம், சபாபர்வம், 68. 41.

தத்தம் போக்கில் பொருள் கூற முற்படுகின்றனர். எனவே பக வானே வந்தார். வேதங்கள் வெளிப்படக் காரணமாக இருந்த அவரே, அவற்றின் சரியான பொருளை நமக்குத் தெரிவிப்பதற் காக கீதோபதேசகராக வந்தார். கீதையைவிடச் சிறந்த ஒன்று இன்றைய இந்தியாவிற்குத் தேவைப்படவில்லை. கீதை தரும் விளக்கங்களைவிடச் சிறந்த எதுவும் உலகிற்குத் தேவைப்பட வில்லை. ஆனால் தொடர்ந்து வந்த உரையாசிரியர்களால் பல இடங்களில் அதன் சரியான பொருளை உணர்ந்துகொள்ள முடியவில்லை; பல இடங்களில் அதன் போக்கைப் புரிந்து கொள்ள இயலவில்லை.

அப்படியானால் கீதையில் நீங்கள் காண்பது என்ன? இன்றைய உரையாசிரியர்கள் என்ன சொல்கிறார்கள்? ஓர் அத் வைத உரையாசிரியர் உபநிடதம் ஒன்றை எடுக்கிறார். அதில் துவைதப் பகுதிகள் எத்தனையோ வருகிறது; அதை அவர் உடனேதிரித்து, சிதைத்து ஏதோவொரு பொருளைக் கூறி, எல்லாவற்றையுமே தமது கோட்பாட்டிற்கு ஏற்ப மாற்ற முயற்சி செய்கிறார். துவைத உரையாசிரியரும் அப்படித்தான். அவர் அதிலுள்ள அத்வைதப் பகுதிகளைச் சிதைத்து மாற்றி துவைதத் தின்கீழ் கொண்டு வந்துவிடுகிறார். ஆனால் கீதையில் இத்தகைய முயற்சிகள் எதுவுமே இல்லை. எல்லாமே சரியானவைதான் என்கிறார் பகவான். ஏனெனில் ஆன்மா தூலத்திலிருந்து நுண் நிலைக்கு, பின்னர் நுண்நிலையிலிருந்து அதிநுண்நிலைக்கு மெல்லமெல்ல, படிப்படியாக மேலே சென்று கடைசியில் தன் லட்சியமான பிரம்மத்தை அடைகிறது. இதுவே கீதையில் கூறப்பட்டுள்ளது.

கீதையில் கர்மகாண்டப் பகுதிகூட எடுத்துக் கொள்ளப்பட் டுள்ளது. அவை நேராக அன்றி மறைமுகமாக மட்டுமே முக்தி யைத் தர முடியும், என்றாலும் அவையும் பயனுள்ளவை. விக்கிரகங்களும் மறைமுகமாகப் பயனளிப்பவையே. அது போலவே சடங்குகள், உருவங்கள் எல்லாமே பயனளிப்பவை தாம். வேண்டியதெல்லாம் உள்ளத் தூய்மை மட்டுமே. உள்ளம் தூய்மையாகவும் உண்மையாகவும் இருந்தால்தான் வழிபாடு பயனுள்ளதாகி லட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்லும். இந்த எல்லா வகையான வழிபாட்டு முறைகளும் தேவைதான். இல்லையென்றால் அவை ஏன் இருக்க வேண்டும்?

தற்காலத்தில் சிலர் நினைப்பதைப் போல் மதமும் மதப் பிரிவுகளும் பணம் சம்பாதிப்பதற்காக ஏதோ சில

அயோக்கியர்களாலும் தீயவர்களாலும் உருவாக்கப்பட்டவை அல்ல. அவர்களின் கூற்று எவ்வளவுதான் சரியானதுபோல் தோன்றினாலும் அது உண்மையல்ல. அவை அதற்காக உருவாக்கப்பட்டவை அல்லவே அல்ல. மனித ஆன்மாவின் தேவை மற்றும் அவசியத்தின் காரணமாக உருவானவை அவை. பல்வேறு வகையான மனித மனங்களின் ஆவலையும் தாகத்தையும்திருப்திப்படுத்தவே அவையெல்லாம் உள்ளன. அவைகளுக்கு எதிராக நீங்கள் பிரச்சாரம் செய்ய வேண்டிய தில்லை. தேவை நிறைவேறியவுடன், அந்தத் தேவையுடன் சேர்ந்து இவையும் மறைந்து விடும். ஆனால் அதன் தேவை நிறைவேறாதிருக்குமானால், நீங்கள் எவ்வளவு எதிர்ப் பிரச்சாரம் செய்தாலும் சரி, எவ்வளவு குறை கூறினாலும் சரி, அவை அனைத்தையும் மீறி மதங்களும் மதப் பிரிவுகளும் இருந்தே தீரும். உருவ வழிபாட்டை எதிர்த்து நீங்கள் வாளை உருவலாம், துப்பாக்கியைக் கொண்டு வரலாம்; உலகையே ரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்கலாம். ஆனால் உருவ வழிபாட்டிற்கான தேவை இருக்கும்வரை அது இருக்கத்தான் செய்யும்! இந்த உருவங்களும் மதத்தின் மற்ற எல்லா படிகளும் இருக்கவே செய்யும். அவை ஏன் இருக்க வேண்டும் என்பதற்கான காரணத்தை பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் உபதேசத்திலிருந்து நாம் தெரிந்துகொள்கிறோம்.

துயரம் தோய்ந்த காலம் ஒன்று இதன் பிறகு இந்திய வரலாற்றில் வருகிறது. பல்வேறு மதப் பிரிவுகளின் மோதல் களின் தூரத்து ஒலி கீதையில் கேட்கிறது. அவைகளைச் சமரசப் படுத்த பகவான் வருகிறார்; சமரசத்தின் சிறந்த போதகரான, சமரசத்தின் மிகச் சிறந்த பிரச்சாரகரான பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தோன்றினார். 'நூலில் மணிகள்போல் எல்லாம் என்னில் கோர்க்கப்பட்டுள்ளன'[1] என்கிறார் அவர்.

உட்பிரிவுகளுக்கு இடையேயான சண்டை சச்சரவுகள் ஏற்கனவே இருந்தாலும், அதற்குமுன் சமரசமும் அமைதியும் நிலவிய ஒரு காலம் இருந்திருக்க வேண்டும். பின்னர் மதத்தின் அடிப்படையில் மட்டுமல்லாமல் ஜாதியின் அடிப்படையிலும் பூசல்கள் வெடித்தன. நம் சமூகத்தின் வலிமை வாய்ந்த இரண்டு பிரிவினரான அரசர் மற்றும் புரோகிதர்களுக்கிடையே சண்டை தோன்றியது. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் இத்தகைய

1. கீதை, 7.7.

போராட்டமும் குழப்பமும் இந்தியாவை மூழ்கடித்தன. அப்போதும் மகத்தான மனிதர் ஒருவர் தோன்றினார். அவர் தான் நம் சாக்கிய முனிவரான கௌதம புத்தர்.

புத்தரது போதனைகளையும் பிரச்சாரங்களையும் நீங்கள் அறிவீர்கள். நாம் அவரைக் கடவுளின் அவதாரமாக வழிபடு கிறோம். நல்லொழுக்கத்தைப் போதித்தவர்களுள் அவர் மிகச் சிறந்தவரும் மிகுந்த தைரியம் வாய்ந்தவரும் ஆவார். ஈடிணை யற்ற கர்மயோகி அவர். தமது போதனைகளைச் செயல்முறைப் படுத்திக் காட்டுவதற்காக தமக்குத் தாமே ஒரு சீடராக, அந்தக் கிருஷ்ணரே மறுபடியும் தோன்றியது போலிருந்தது புத்தரின் வாழ்க்கை. 'இந்த தர்மம் மிகச் சிறிய அளவு பின்பற்றப்பட் டாலும் அது பெரிய பயத்திலிருந்து காப்பாற்றும்'[1], 'பெண்கள், வைசியர்கள், ஏன், சூத்திரர்கள்கூட மிக உயர்ந்த லட்சியத்தை அடைய முடியும்'[2] என்று கீதையில் கேட்ட அதே குரல் மீண்டும் ஒலித்தது.

எல்லோருடைய தளைகளையும் உடைத்தெறிந்து, எல் லோருடைய சங்கிலிகளையும் அறுத்தெறிந்து லட்சியத்தை அடைய அனைவருக்கும் உரிமை உண்டென முழங்கியவாறு புறப்படுகின்றன கீதையின் வாசகங்கள்; 'கடவுள் தூயவர், சம நோக்கு உடையவர். எனவே சமத்துவத்தில் நிலைபெற்றவர்கள் இந்தப் பிறவியில் சம்சார வாழ்வை வென்றுவிடுகிறார்கள். அவர்கள் இறைவனிலேயே வாழ்வதாகக் கூறப்படுகிறது.'[3] 'இறைவன் எங்கும் சமமாக நிறைந்திருப்பதைக் காண்பதால், அந்த ரிஷி தம்மைத் (Self) தாமே (self) துன்புறுத்துவதில்லை. இவ்வாறு அவர் பரமபதத்தை அடைகிறார்'[4]—என்று இடியோசைபோல் கேட்கிறது கிருஷ்ணரின் குரல்.

இந்தப் போதனைக்கு ஒரு நடமாடும் உதாரணம் போலவும், இந்தப் போதனையின் ஒரு பகுதியையாவது செயல்முறையில் காண்பிப்பது போலவும், இதனைக் கூறிய கிருஷ்ணரே இன் னொரு வடிவில் வந்தார். அவரே கௌதம புத்தர். அவர் ஏழை களுக்கும் துன்பப்படுபவர்களுக்கும் போதனைகள் செய்தவர். ஏழைகளின் உள்ளங்களை எட்டுவதற்காக தேவமொழியான சம்ஸ்கிருதத்தை விட்டுவிட்டு, மக்கள் பேசிவந்த மொழியிலேயே

1. கீதை, 2. 40.
2. கீதை, 9. 32.
3. கீதை, 5. 19.
4. கீதை, 13. 28.

பேசியவர். பிச்சைக்காரர்களுடனும் ஏழைகளுடனும் தாழ்ந் தவர்களுடனும் வாழ்வதற்காக அரச சிம்மாசனத்தையே துறந்தவர். தாழ்த்தப்பட்டோரையும் மார்போடு அணைத்துக் கொண்ட இரண்டாவது ராமர் அவர்.

அவரது மகத்தான செயல்களையும் மகோன்னத குணங் களையும் நீங்கள் அறிவீர்கள். ஆனால் அவருடைய செயலில் ஒரு பெரிய குறைபாடு இருந்தது. அதன் காரணமாக இன்றும் நாம் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அதற்காக புத்தரைச் சிறிதும் குறை கூற முடியாது. அவர் தூயவர், உயர்ந்தவர். ஆனால் துரதிர்ஷ்டவசமாக ஆரியர்களுடன் ஒட்டிக்கொண்ட நாகரீகமற்ற, பண்பாடற்ற பல்வேறு இன மக்களால் அவரது உயர்ந்த லட்சியங்களைப் புரிந்துகொள்ள முடியாமல் போய் விட்டது. பல்வேறான மூடநம்பிக்கைகளோடும் அருவருக்கத் தக்க வழிபாடுகளோடும் இவர்கள் ஆரிய இனத்தில் நுழையத் தொடங்கினார்கள். சில காலம்வரை ஏதோ பண்பட்டவர்கள் போல்தான் தோன்றினார்கள். ஆனால் ஒரு நூறாண்டு கழியும் முன்னரே தங்கள் முன்னோர்கள் வழிபட்ட பாம்புகளையும் பேய்களையும், மற்றவைகளையும் வழிபாட்டில் புகுத்தினார்கள். விளைவு? இந்தியா முழுவதும் இழிநிலையை அடைந்து மூடநம்பிக்கைகளின் மொத்த இருப்பிடமாக மாறியது.

மிருக பலிகளுக்கு எதிராக ஏற்பட்ட கோபத்தில், முற்கால பௌத்தர்கள் வேதங்களில் கூறப்பட்ட யாகங்களை வன்மை யாகக் கண்டித்தார்கள். இந்த யாகங்கள் ஒவ்வொரு வீட்டிலும் செய்யப்பட்டு வந்தது. ஒரு நெருப்பு எரிந்து கொண்டிருக்கும், வழிபாட்டிற்கு வேண்டியதெல்லாம் அவ்வளவுதான். இந்த யாகங்கள் நிறுத்தப்பட்டன. அவற்றின் இடத்தில் பிரம்மாண்ட மான கோயில்களும், விஸ்தாரமான சடங்குகளும் நுழைந்தன; ஆடம்பரமான புரோகிதர்கள் தோன்றினார்கள். அதைத்தான் இன்றைய இந்தியாவில் நீங்கள் பார்க்கிறீர்கள். பிராமணர்கள் செய்துவந்த உருவ வழிபாட்டை ஒடுக்கியவர் புத்தர் என்று சிலர் தற்காலத்தில் எழுதுகிறார்கள். அவற்றைப் படிக்கும்போது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. அவர்கள் இன்னும் சற்று படித்தபின் நூல்கள் எழுதியிருக்கலாம். இந்தியாவில் பிராமணத் துவத்தையும் உருவ வழிபாட்டையும் உருவாக்கியதே புத்தமதம் தான் என்பதை பாவம், அவர்கள் சிறிதும் அறியவில்லை.

ரஷ்யர் ஒருவர் எழுதிய நூல் ஒன்றை ஓரிரு ஆண்டு களுக்கு முன் படித்தேன். ஏசுவின் வாழ்க்கையைப்பற்றிய

வினோதமானதோர் உண்மையைத் தாம் கண்டுபிடித்திருப்பதாக அவர் அதில் உரிமை கொண்டாடியிருந்தார். ஏசு, புரியிலுள்ள ஜகன்னாதர் கோயிலுக்கு, அங்குள்ள பிராமணர்களிடம் படிக்கச் சென்றதாகவும், ஆனால் அவர்களின் குறுகிய மனப்பான்மையையும் உருவ வழிபாட்டையும் கண்டு வெறுப் படைந்து, பின்னர் திபெத்திற்குச் சென்று லாமாக்களிடம் படித்து, நிறைவுபெற்று நாடு திரும்பியதாகவும் அதில் எழுதப்பட்டுள்ளது. இது முழுக்கமுழுக்கப் பொய் என்பதை அவரது கூற்றே நிரூபித்துவிடும். இந்திய வரலாற்றை அறிந்த யாருக்கும் இது தெரியும். ஏனெனில் புரி ஜகன்னாதர் ஆலயம் பழைய புத்தர் கோயிலாகும். இது போன்ற கோயில்களை நாம் இந்துக் கோயில்களாக மாற்றினோம். இதுபோன்று இன்னும் பல விஷயங்களை நாம் செய்ய வேண்டியுள்ளது. இது ஜகன்னாதர் கோயில் விஷயம். மேலும், அப்போது ஒரு பிராமணன்கூட அங்கே கிடையாது. எனினும் பிராமணர் களுடன் படிப்பதற்காக ஏசு சென்றாராம். அப்படித்தான் கூறுகிறார் நமது ரஷ்ய வரலாற்று மேதை!

மிருகங்களிடம்கூட இரக்கம் காட்டவேண்டும் என்று உபதேசித்தும், நல்லொழுக்கத்தைப் போதிக்கும் மகத்தான மதமாக இருந்தும், நிலையான ஆன்மா ஒன்று இருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி நுட்பமான ஆராய்ச்சிகள் செய்தும் புத்த மதம் சிதைந்து சின்னாபின்னமாகிவிட்டது. அதனுடைய அழிவும் மிகக் கொடூரமாக உள்ளது. பௌத்த மதத்தின் எழுச்சியால் நேர்ந்த விபரீதங்களை விவரிப்பதற்கு எனக்கு நேரமோ விருப்பமோ இல்லை. மிகக் கொடூரமான சடங்கு களும், எந்த மனிதனின் கைகளும் இதுவரை எழுதாத, எந்த மூளையும் இதுவரை சிந்திக்காத, மிகப் பயங்கரமான மிக ஆபாசமான நூல்களும், மதத்தின் பெயரால் இதுவரை செய்யப் பட்டவற்றுள் சகிக்க முடியாத அளவுக்கு மோசமான சடங்கு களும் எல்லாமே வீழ்ச்சியுற்ற' புத்த மதத்திலிருந்து தோற்று விக்கப்பட்டவைதான்.

ஆனால் இந்தியா வாழ்ந்தாக வேண்டும். அதனால் இறைவனின் ஆற்றல் மறுபடியும் பூமிக்கு வந்தது. 'தர்மம் குன்றும்போதெல்லாம் நான் வருவேன்' என்று அறிவித்த பகவான் மறுபடியும் வந்தார். இந்தமுறை அவதாரம் தெற்கில் நிகழ்ந்தது. ஆம், மகத்தான சங்கரர் தோன்றினார். பதினாறு வயதிற்குள் அந்த பிராமண இளைஞர் தமது நூல்கள்

அனைத்தையும் எழுதி முடித்ததாகக் கூறப்படுகிறது. அந்தப் பதினாறு வயது இளைஞரின் எழுத்துக்கள் இன்றைய நவீன உலகின் விந்தைகளாக உள்ளன, அந்த இளைஞரும் அது போலவே ஆச்சரியமானவர். இந்தியாவின் அப்பழுக்கற்ற தூய்மையை மீண்டும் கொண்டுவர அவர் விரும்பினார். அது அவ்வளவு சாதாரணமான வேலையா என்ன! சற்று எண்ணிப் பாருங்கள். அன்று இந்தியா இருந்த கோலத்தைப்பற்றி உங்களுக்குச் சிறிது கூறினேன். இப்போது நீங்கள் சீர்திருத்த முயல்கிறீர்களே, அந்தக் கொடுமைகள் எல்லாம் அந்தக் காலத்தின் இழிநிலையிலிருந்து தோன்றியவைதாம்.

தார்த்தர்களும் பலுசிஸ்தானியர்களும் மனித சமுதாயத்தின் மற்ற எல்லா காட்டுமிராண்டி இனங்களும் இந்தியாவிற்கு வந்து பௌத்தர்கள் ஆனார்கள், நம்மோடு கலந்தார்கள். அத்துடன் தங்கள் நாட்டுப் பழக்க வழக்கங்களையும் கொண்டுவந்து நமது தேசிய வாழ்வோடு கலந்தார்கள். விளைவு? நமது நாடு மிக பயங்கரமான, மிருகத்தனமான பழக்க வழக்கங்களால் நிறைந்தது. பௌத்தர்களிடமிருந்து அந்த இளைஞர், சங்கரர் பெற்ற பரம்பரைச் சொத்து இதுதான். அவருடைய காலத்திலிருந்து இன்றுவரை இந்தியாவின் முழு வேலையும் புத்த மதம் ஏற்படுத்திய சீரழிவை வேதாந்தத்தின்மூலம் நீக்குவதாகவே இருக்கிறது. அந்த வேலை நடந்து கொண்டே இருக்கிறது, இன்னும் முடியவில்லை. சங்கரர் தலைசிறந்த தத்துவ ஞானி. புத்த மதத்தின் உண்மையான சாரமும் வேதாந்தமும் அதிகமாக வேறுபடவில்லை; ஆனால் சீடர்கள் குருவைப் புரிந்துகொள்ளாமல் தங்களைத் தாங்களே இழிநிலைக்கு இட்டுச் சென்றார்கள், ஆன்மா மற்றும் கடவுளின் இருப்பை மறுத்து நாத்திகர்கள் ஆனார்கள் என்பதையெல்லாம் சங்கரர் காட்டினார். சங்கரர் இதனைத் தெளிவுபடுத்தியதும் பௌத்தர்கள் தங்கள் பழைய மதத்திற்குத் திரும்பினார்கள். ஆனால் அவர்கள் அதுவரை பின்பற்றி வந்தப் பல்வேறு வழக்கங்கள் இருக்கின்றனவே, அவற்றை என்ன செய்வது!

சங்கரருக்குப் பிறகு மிகச் சிறந்த ராமானுஜர் தோன்றினார். சங்கரரின் அறிவு பெரிது. ஆனால் அவரது இதயம் அவ்வளவு பரந்ததாக இல்லையோ என்று அஞ்சுகிறேன். ராமானுஜரின் இதயம் மிகவும் விசாலமானது. தாழ்த்தப்பட்ட மக்களுக்காக அவர் உருகினார், அவர்களிடம் இரக்கம் கொண்டார். காலப்போக்கில் சேர்ந்துவிட்ட சடங்குகளையும் பழக்க

வழக்கங்களையும் ஒன்று திரட்டினார், தம்மால் முடிந்த அளவிற்கு அவற்றைத் தூய்மைப்படுத்தினார். யாருக்கு அவற்றின் தேவை கட்டாயமாக இருந்ததோ, அவர்களுக்காகப் புதிய சடங்குகளையும் வழிபாட்டு முறைகளையும் அறிமுகம் செய்தார். அதேவேளையில் மிகவுயர்ந்த ஆன்மீக வழிபாட்டை பிராமணர் முதல் தாழ்ந்த ஜாதியினர்வரை அனைவருக்கும் உரிமை ஆக்கினார். இது ராமானுஜரின் பணி.

ராமானுஜரின் பணி மெள்ளமெள்ளப் பரந்து வட இந்தியாவில் நுழைந்தது. நெடுங்காலத்திற்குப் பிறகு, முகமதியர்களின் ஆட்சிக் காலத்தில் அங்குள்ள சில தலைவர்கள் அதனை ஏற்றுப் பணியைத் தொடர்ந்தார்கள். அவர்களுள் நமக்குச் சமீப காலத்தில் தோன்றிய தலைசிறந்த ஒருவர் சைதன்யர்.

ஆன்மீகத்தின் கதவுகள் அனைவருக்கும் திறந்து விடப்பட்டது. இது ராமானுஜரின் காலத்திலிருந்து நாம் காணும் ஒரு சிறப்பு அம்சமாகும். ராமானுஜருக்குப் பின் வந்த, அதே போல் சங்கரருக்கு முன் வாழ்ந்த எல்லா மகான்களும் அதையே முழங்கினர். சங்கரர் மட்டும் ஏன் இதற்கு விதிவிலக்காக இருந்ததாகக் கூறப்படுகிறது என்பது எனக்குப் புரியவில்லை. ஆனால் அவர் விதிவிலக்காக இருந்தார் என்பதைக் காட்டுகின்ற எந்தப் பகுதியும் அவரது எழுத்துக்களில் இல்லை. புத்தரின் போதனைகளுக்கு நிகழ்ந்த கதிதான் சங்கரரின் வாழ்க்கையிலும் நடந்திருக்க வேண்டும். சங்கரரை ஒரு விதிவிலக்காகக் கருதுவதற்கு அவரது எழுத்துக்கள் காரணமாக இருக்கவில்லை, அவரது சீடர்களால் அவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாததே காரணம் என்று தோன்றுகிறது.

வட இந்தியாவில் தோன்றிய மகத்தான ரிஷியாகிய சைதன்யர் கோபியர் கொண்ட அன்புப் பித்தின் உருவாகத் திகழ்ந்தார். அவர் ஒரு பிராமணர். தர்க்கத்தைச் சிறப்பாக பயின்ற ஒரு குடும்பத்தில் பிறந்தார். தர்க்கப் பேராசிரியராக இருந்து பிறருடன் வாதம் செய்து வெற்றிகள் பல பெற்றார். ஏனெனில் இதுதான் வாழ்க்கையின் மிகச் சிறந்த லட்சியம் என்று சிறுவயதிலிருந்தே அவர் போதிக்கப்பட்டிருந்தார். ஒரு மகானின் கருணையால் இந்த மனிதரின் வாழ்க்கை முற்றிலுமாக மாறியது. வாதப் பிரதிவாதங்களையும், சண்டைகளையும், தர்க்கப் பேராசிரியர் பதவியையும் துறந்து, பக்தியைப் போதித்த மிகச் சிறந்த ஆச்சாரியர்களுள்

ஒருவரானார் இந்த பக்திப் பித்தரான சைதன்யர். அவரது பக்தி வெள்ளம் வங்கம் முழுவதும் பாய்ந்து எல்லா மக்களுக்கும் ஆறுதலைத் தந்தது. அவரது அன்பிற்கு எல்லையே இருக்க வில்லை. மகான்-பாவி, இந்து-முஸ்லீம், தூய்மையானவர்-தூய்மையற்றவர், விபச்சாரிகள் என்று எல்லோருமே அவரது அன்பிற்கும் கருணைக்கும் பாத்திரமாயினர். காலப்போக்கில் எல்லாமே இழிநிலையை நோக்கித்தானே செல்லும்! சைதன்யரின் நெறியும் அந்தக் கதிக்குப் பெரிதும் உள்ளாகியது. ஆனால் இன்றும் அந்த நெறி ஏழைகள், தாழ்த்தப்பட்டோர், கீழ்ஜாதியினர், பலவீனர், சமுதாயத்தின் எல்லா பகுதிகளிலிருந் தும் ஒதுக்கப்பட்டோர் என்று அனைவருக்கும் புகலிடமாக இருக்கிறது.

உள்ளதை உள்ளபடிச் சொல்ல வேண்டுமானால், ஒரு விஷயத்தை நான் இங்குக் குறிப்பிட்டேயாக வேண்டும்: ஞான நெறியினரிடம் மத விஷயங்களில் அற்புதமான தாராளத்தைக் காண்கிறோம். இந்தியாவிலுள்ள மதப் பிரிவுகளுக்கு இடையில் உண்மையிலேயே வேறுபாடு உள்ளது என்று சங்கரரைப் பின்பற்றுகின்ற யாரும் சொல்வதில்லை; ஆனால் அவர் ஜாதி விஷயங்களில் கணக்கற்ற விதிவிலக்குகளைக் கூறுகிறார். வைணவ ஆச்சாரியர்கள் ஒவ்வொருவரும் ஜாதி விஷயங்களில் தாராளத்தைக் காட்டுகிறார்கள். ஆனால் மத விஷயங்களில் எத்தனையோ விதிவிலக்குகளைக் கூறுகிறார்கள்.

ஒருவரிடம் கூர்த்த அறிவு, மற்றவரிடம் பரந்த இதயம். இந்த அறிவும் இதயமும் ஒருங்கே கொண்ட ஒருவர் பிறப்பதற் கான காலம் கனிந்தது. சங்கரரின் கூர்த்த அறிவும், சைதன்யரின் எல்லையற்றுப் பரந்த இதயமும் கொண்ட, எல்லா மதப் பிரிவு களிலும் ஒரே ஆற்றல், ஒரே கடவுளைக் காண்கின்ற, ஒவ்வோர் உயிரிலும் இறைவனைக் காணக்கூடிய, ஏழைகள், பலவீனர்கள், கீழ்ஜாதியினர், தாழ்த்தப்பட்டவர் என்று இந்தியாவிலும் இந்தியாவுக்கு வெளியிலும் இந்த உலகிலுள்ள ஒவ்வொருவருக் காகவும் உருகும் இதயம்கொண்ட, அதே வேளையில் இந்தியா வில் மட்டுமல்லாமல் இந்தியாவிற்கு வெளியிலும் ஒன்றோ டொன்று போராடிக் கொண்டிருக்கும் மதப்பிரிவுகள் அனைத்தையும் சமரசப்படுத்தி அறிவுக்கும் உணர்ச்சிக்கும் சம இடம் கொடுக்கின்ற, உலகம்தழுவிய மதம் ஒன்றை உருவாக்குவதற்குரிய சிந்தனை வளம் மிக்க ஒருவர் பிறப்பதற்கு உரிய காலம் வந்தது.

அத்தகைய மனிதர் பிறந்தார். அவரது திருவடிகளின் கீழ் பல ஆண்டுகள் அமர்வதற்கான பெரும்பேறு எனக்குக் கிடைத்தது. அத்தகைய ஒருவர் பிறப்பதற்கான தேவை ஏற்பட்டது, காலமும் கனிந்தது, அவர் பிறந்தார். ஆச்சரியமான விஷயம் என்னவென்றால், எந்த நகரம் மேலை நாட்டுச் சிந்தனைகளால் நிறைந்திருந்ததோ, எந்த நகரம் மேலை நாட்டுக் கருத்துக்களின் பின்னால் பைத்தியமாக ஓடிக் கொண்டிருந்ததோ, எந்த நகரம் இந்தியாவிலுள்ள மற்றெல்லா நகரங்களையும்விட ஐரோப்பிய மயமாகி விட்டிருந்ததோ அந்த நகருக்கு அருகிலேயே ஓரிடத்தில் அவரது வாழ்க்கைப் பணியெல்லாம் நடைபெற்றது. அவருக்கு நூலறிவு எதுவும் இல்லை. இந்த மாபெரும் அறிஞருக்குத் தமது சொந்தப் பெயரைக்கூட எழுதத் தெரியாது. ஆனால் கல்வி மிக்க நமது பல்கலைக்கழகப் பட்டதாரிகள் அவரிடம் அறிவுக் களஞ்சியத்தையே கண்டனர். இந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் ஒரு விசித்திரமான மனிதர். அது ஒரு பெரிய கதை. அதைப்பற்றிச் சொல்வதற்கு இன்றிரவு நேரமில்லை. அவர் இந்திய ரிஷிகளின் நிறைவாகத் திகழ்ந்தார். தற்காலத்திற்குரிய ரிஷி அவர், அவரது உபதேசங்களே இந்தக் காலத்திற்கு மிகவும் பயன் தருபவை என்பதை மட்டும் இப்போது கூறிக்கொள்ள விரும்புகிறேன். அவருக்குப் பின்னணியில் செயல்பட்டது தெய்வீக ஆற்றல் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். யாருக்கும் தெரியாத, யாரும் கேள்விப் படாத ஒரு குக்கிராமத்தில் ஏழை அர்ச்சகராகப் பிறந்த அவர் இன்று ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஆயிரக்கணக்கான மக்களால் வழிபடப்படுகிறார், நாளை பல்லாயிரக் கணக்கான நபர்களால் வழிபடப்படுவார். இறைவனின் திட்டங்களை யார் அறிவார்! என் சகோதரர்களே! விதியின் கைகள் உங்களுக்குத் தெரியவில்லை என்று சொன்னால் நீங்கள் உண்மையில் குருடர்கள், பிறவிக் குருடர்கள். நேரம் கிடைத்து வாய்ப்பும் கிடைக்குமானால் அவரைப்பற்றி மேலும் பேசுவேன். ஆனால் இப்போது ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன்: உங்களிடம் நான் உண்மையான ஏதாவது ஒரு வார்த்தை பேசி இருந்தேனானால், அது அவருடையது, அவருடையது மட்டுமே; உண்மையில்லாத, தவறான, மனித இனத்திற்கு நன்மையைத் தராத எதையாவது நான் பேசியிருந்தால், அவையெல்லாம் என்னுடையவை. அதற்குப் பொறுப்பாளி நானே. ❑

## 5. தானம்

பிப்ரவரி 12-ஆம் நாள் மாலையில் சுவாமிஜி சென்னபுரி அன்னதான சமாஜத்தின் ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்தார். அவருக்கு முன்பு பேசிய பேச்சாளர் மற்ற ஜாதியினரைவிட பிராமணர்களுக்கு தானம் அளிப்பது சிறந்தது என்று குறிப்பிட்டார். அதைப்பற்றிச் சுருக்கமாக ஓர் உரை நிகழ்த்தினார் சுவாமிஜி—

இந்தக் கருத்திற்கு நல்ல பக்கம் உண்டு, அதேவேளையில் தீய பக்கமும் உள்ளது. நாடு பெற்றுள்ள எல்லா பண்பாடுகளும் பிராமணர்களிடமே நடைமுறையில் உள்ளன. நாட்டின் சிந்தனையாளர்களாகவும் அவர்களே இருந்து வருகிறார்கள். அவர்களைச் சிந்தனையாளர்களாக்குகின்ற வாழ்க்கை வழியை அடைத்துவிட்டால் நம் நாடு முழுவதுமே துன்பப்பட நேரும்.

பின்னர் சுவாமிஜி, இந்தியாவில் தகுதி பாராமல் தானம் செய்வதையும், மற்ற நாடுகளில் சட்டப்படி தானம் செய்வதையும் ஒப்பிட்டுப் பேசினார்:

நம் நாட்டிலுள்ள ஒரு பிச்சைக்காரன், கொடுத்ததை உடனடியாக வாங்கிக்கொண்டு அமைதியாக, திருப்தியாக இருந்து விடுகிறான். ஆனால் மேலை நாட்டிலுள்ள பிச்சைக் காரனோ, ஏழைகளுக்கு உணவிடும் இடங்களுக்குச் செல்ல மறுக்கிறான். ஏனென்றால் உணவைவிடச் சுதந்திர உணர்ச்சியை நேசிக்கிறானாம் அவன்! விளைவு என்ன? அவன் கொள்ளைக் காரனாக, சமுதாயத்தின் எதிரியாக உருவாகிறான்; நீதிமன்றம், போலீஸ், சிறைச்சாலை போன்றவை உருவாகக் காரணமா கிறான். நாகரீகம் என்னும் நோய் இருக்கும்வரை வறுமையும் இருந்தே தீரும். அதனால் தானமும் தேவையாகவே இருக்கும். தகுதி பாராமல் கொடுப்பதான இந்திய தானத்தின் விளைவு என்ன? நமது சன்னியாசிகள், அவர்கள் உண்மையானவர் களாக இல்லாவிட்டாலும், பிச்சை எடுப்பதற்காகவாவது சாஸ்திரங்கள் சிலவற்றைப் படிக்க வேண்டிய கட்டாயம் உண்டாகும். மேலை நாடுகளின் சட்டரீதியான தானத்தின் விளைவு என்ன? பிச்சைக்காரர்கள் குற்றவாளிகளாக மாறு வார்கள். அறிவுபூர்வமாக இந்த இரண்டுவித தானங்களையும் ஒப்பிட்டுச் சிறந்ததை எடுத்துக்கொள்ள வேண்டும். ❑

# 6. வேதாந்தமும் இந்திய வாழ்க்கையில் அதைச் செயல்முறைப்படுத்தலும்

பிப்ரவரி 13, பச்சையப்பா ஹால்

நமது மக்களையும் நமது மதத்தையும் குறிப்பதற்கு சாதாரண மாக ஒரு சொல் பயன்படுத்தப்படுகிறது— இந்து. நான் வேதாந்தம் என்று எதைக் கூறுகிறேனோ அதைப் புரிந்துகொள் வதற்கு, இந்து என்ற சொல்லைச் சற்று விளக்க வேண்டியுள்ளது. பழங்கால பாரசீகர்கள் ஸிந்து நதியை ஹிந்து நதி என்று அழைத்தார்கள். சம்ஸ்கிருதத்தின் 'ஸ' என்ற சப்தம் பழங்கால பாரசீகத்தில் 'ஹ' என்று மாறிற்று. எனவே 'ஸிந்து' 'ஹிந்து' வாயிற்று. கிரேக்கர்களுக்கு 'ஹ' வை உச்சரிப்பது கஷ்டமா யிருந்தது. ஆதலால் 'ஹ' வையும் அவர்கள் விட்டுவிட்டது உங்கள் எல்லோருக்கும் தெரியும். எனவே 'இந்தியர்' களானோம். சிந்து நதிக்கு மறுகரையில் வாழ்பவர்கள் ஹிந்து என்று அழைக்கப்பட்டனர். பழங்காலத்தில் அந்த வார்த்தையின் பொருள் எதுவாகவும் இருந்திருக்கலாம், ஆனால் இன்று அது தன் எல்லா வேகத்தையும் இழந்துவிட்டது. ஏனெனில் சிந்து நதிக்கு இக்கரையில் இன்று வாழ்பவர்கள் எல்லோரும் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல; 'இந்துக்கள்' உள்ளனர், அவர் களைத் தவிர முகம்மதியர்கள், பார்சிகள், கிறிஸ்தவர்கள், பௌத்தர்கள், சமணர்கள் முதலியவர்களும் வசிக்கின்றனர். எனவே ஹிந்து என்ற வார்த்தையை எடுத்துக்கொண்டால், அது இவர்கள் அனைவரையும் குறிக்க வேண்டும். மதக் கண் ணோட்டத்தில் பார்த்தால் அவர்கள் அனைவரையும் ஹிந்து என்று சொல்ல முடியாது. எனவே நமது மதத்திற்கு ஒரு பொதுப் பெயர் கண்டுபிடிப்பது மிகவும் சிரமம். பல்வேறு நெறிகள், பல்வேறு கருத்துக்கள், பல்வேறு சடங்குகள், பல் வேறு வழிபாட்டு முறைகள்— இவற்றின் ஒரு தொகுப்புபோல் உள்ளது நமது மதம். இந்தத் தொகுப்பிற்கென்று ஒரு தனிப் பெயரில்லை, ஒரு தனித் தலைமை இல்லை, ஒரு தனி அமைப்பு

எதுவும் இல்லை. நமது மதப் பிரிவுகள் எல்லாம் ஒப்புக்கொள்ளும் விஷயம் ஒருவேளை இது ஒன்றுதான் சாஸ்திரங்களாகிய வேதங்களை எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். வேதங்களை ஒப்புக் கொள்ளாதவர்களை இந்து என்று அழைக்கின்ற உரிமை ஒருவேளை இல்லை என்பது நிச்சயம்.

வேதங்கள் கர்ம காண்டம், ஞான காண்டம் என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். கர்ம காண்டம் பலவிதமான யாகங்களையும் சடங்குகளையும் பற்றிக் கூறுகிறது. தற்காலத்தில் அவற்றுள் பலவும் வழக்கத்தில் இல்லை. வேதங்களில் ஆன்மீக உபதேசங்கள் அடங்கிய பகுதியான உபநிடதங்களும் வேதாந்தமும் ஞான காண்டம் என்று அழைக்கப்படுகிறது. துவைதி, விசிஷ்டாத்வைதி, அத்வைதி என்ற வேறுபாடின்றி, நமது ஆச்சாரியர்கள், தத்துவ அறிஞர்கள், எழுத்தாளர்கள் அனைவரும் இவற்றை மிகவுயர்ந்த பிரமாணமாக ஒப்புக் கொள்கின்றனர்.[1] எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்களானாலும், எந்தத் தத்துவக் கோட்பாட்டைப் பின்பற்றுபவர்களாக இருந்தாலும் இந்தியாவிலுள்ள ஒவ்வொருவரும் உபநிடதங்களையே தங்கள் பிரமாண சாஸ்திரமாகக் கொள்ள வேண்டும்.[2] அப்படி ஏற்றுக் கொள்ளாத எந்தப் பிரிவும் வைதீகத்திற்குப் புறம்பாகி விடுகிறது.[3] எனவே தற்காலத்தில் நாடு முழுவதுமுள்ள இந்துக்களை ஒரு பெயர்கொண்டு அழைக்கலாமெனில், அது ஒருவேளை 'வேதாந்தி' அல்லது 'வைதீகர்' என்பதாகத்தான் இருக்கும். இவற்றுள் எதை வேண்டுமானாலும் நீங்கள் வைத்துக் கொள்ளலாம். வேதாந்தத் தத்துவம் அல்லது வேதாந்தம் என்ற வார்த்தைகளை இந்தப் பொருளில்தான் நான் பயன்படுத்துகிறேன்.

இந்தக் கருத்தை இன்னும் சிறிது தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஏனெனில் சமீப காலங்களில் வேதாந்தத் தத்துவத்தின் அத்வைத நெறியைக் குறிக்கவே வேதாந்தம் என்ற சொல்லைப் பலரும் பயன்படுத்துகின்றனர். ஆனால் உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பல்வேறு தத்துவப்

---

1. தர்மம் ஜிஜ்ஞாஸமானானாம் ப்ரமாணம் பரமம் ச்ருதி: ||

—மனு, 1. 13.

2. ச்ருதி ப்ராமாண்யதோ வித்வான் ஸ்வதர்மே நிவிசேத வை ||

—மனு, 1. 8.

3. ஸ ஸாதுபிர்பஹிஷ்காரோ நாஸ்திகோ வேத நிந்தக: ||

—மனு, 1. 11.

பிரிவுகளுள் அத்வைதமும் ஒன்று, அவ்வளவுதான். இது நமக்குத் தெரியும். விசிஷ்டாத்வைதிகளும் அத்வைதிகளைப் போலவே உபநிடதங்களைப் போற்றுகின்றனர்; அத்வைதியைப் போல் வேதாந்தத்தையே பிரமாண சாஸ்திரமாகக் கொண்டுள்ளனர். துவைதிகளும் அப்படியே. அவ்வாறே இந்தியாவிலுள்ள ஒவ்வொரு பிரிவினரும். ஆனால் வேதாந்தம் என்றாலே அத்வைதம் என்றுதான் பொதுவாக மக்கள் நினைக்கின்றனர். ஒருவேளை அதற்கு ஒரு காரணமும் இருக்கலாம். நமது சாஸ்திரங்களாக வேதங்கள் இருப்பினும் அவற்றின் கோட்பாடுகளை விளக்க ஸ்மிருதிகளும் புராணங்களும் ஏற்பட்டன. வேதங்களுக்கு உள்ள அதிகாரம் இவற்றிற்கு இல்லை. புராணங்களும் ஸ்மிருதிகளும் வேதங்களின் எந்தப் பகுதியிலிருந்தேனும் வேறுபடுமானால் வேதங்களையே பின்பற்ற வேண்டும், ஸ்மிருதியை விலக்கிவிட வேண்டும் என்பது நியதி.[1] மகத்தான அத்வைதத் தத்துவ போதகரான சங்கரரின் உரைகளிலும், அவரது தத்துவ விளக்கங்களிலும் பெரும்பாலும் உபநிடதங்களே பிரமாணமாகக் கொள்ளப்படுகின்றன. வேதங்களில் அரிதாகக் காணப்படுகின்ற ஏதோ ஓரிரு கருத்துக்களை விவரிப்பதற்கு மட்டுமே ஸ்மிருதி கையாளப்படுகிறது. மாறாக, மற்ற பிரிவினர் ஸ்மிருதிகளை அதிகமாகவும் வேதங்களைக் குறைவாகவுமே ஆதாரமாகக் கொள்கிறார்கள். நாம் துவைத நெறிகளைப் பார்க்கப் பார்க்க அங்கே ஸ்மிருதிகள்தான் அளவுக்கு அதிகமாக மேற்கோள் காட்டப்படுவது தெரிகிறது; சில இடங்களிலோ ஒரு வேதாந்தியிடமிருந்து எதிர்பார்க்க முடியாத கருத்துக்கள் கூடக் காணப்படுகின்றன. இவ்வாறு துவைத நெறிகளில் புராணங்களின் ஆதிக்கம் அதிகமாக இருந்ததால்தானோ என்னவோ அத்வைதிகள் சரியான வேதாந்திகள் என்று கருதப்பட்டு வந்தார்கள் போலும்.

அது எப்படியிருந்தாலும் வேதாந்தம் என்ற சொல் இந்தியாவின் மத வாழ்க்கை முழுவதற்குமே பொருந்துவதாக இருக்க வேண்டும். வேதாந்தம் என்பது வேதங்கள்தாம். இருப்பவற்றுள் மிகப் பழமையானவை வேதங்கள் என்பதை அனைவரும் ஏற்றுக்கொள்கின்றனர். தற்கால அறிஞர்களின் கருத்து எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும், ஆனால் வேதங்களின் சில பகுதிகள் ஒரு காலத்திலும் பிற பகுதிகள் வேறு காலத்திலும்

1. ச்ருதி ஸ்ம்ருதி விரோதே து ச்ருதிரேவ கரீயஸி || —ஜாபால ஸ்ம்ருதி.

எழுதப்பட்டதாக ஒப்புக்கொள்ள இந்துக்கள் தயாராக இல்லை. அவை ஒரே சமயத்தில் உண்டாக்கப்பட்டவை என்ற தங்கள் கருத்தையே அவர்கள் நம்புகிறார்கள். வேறு விதமாகச் சொல்வதானால், அவை ஒருபோதும் உண்டாக்கப்படவில்லை, எப்போதும் இறைவனின் திருவுள்ளத்தில் அவை இருக்கின்றன என்பதே அவர்கள் கருத்து.

வேதாந்தம் என்பது இந்தியாவிலுள்ள துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் முதலிய அனைத்தையும் தன்னுள் கொண்டதாக இருக்கிறது. வேதாந்தம் என்ற சொல்லால் இதையே நான் குறிப்பிடுகிறேன். பௌத்தம், சமணம் போன்றவற்றின் சில பகுதிகளைக்கூட, அவர்கள் விரும்பினால் நாம் அதற்குள் இடம் கொடுக்கலாம். ஏனெனில் நம் இதயம் அதற்குப் போதுமான விசாலமானதாக இருக்கிறது. நாம் தயாராகத்தான் இருக்கிறோம், ஆனால் அவர்கள் வர மாட்டார்கள். தீவிரமாக ஆராய்ந்து பார்த்தால் பௌத்தத்தின் சாரம் முழுவதும் உபநிடதங்களிலிருந்தே எடுக்கப்பட்டிருப்பதைக் காண முடியும். ஏன், அவர்களின் நல்லொழுக்கக் கோட்பாடுகள், அற்புதமானவை, மகத்தானவை என்றெல்லாம் சொல்லிக் கொள்கிறார்களே, அந்த நல்லொழுக்கக் கோட்பாடுகள்கூட ஏதோவோர் உபநிடதத்தில் வார்த்தைக்கு வார்த்தை அப்படியே இருப்பதைக் காணலாம். அவ்வாறே, சில விசித்திரக் கொள்கைகள் தவிர, சமணர்களின் சிறந்த கோட்பாடுகள் அனைத்தும் உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்டவையே.

இந்திய மதக் கருத்துக்களில் பிற்காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சியின் முளை எல்லாமே உபநிடதங்களில் உள்ளன. தகுந்த ஆதாரம் எதுவும் இன்றியே, சிலவேளைகளில், உபநிடதங்களில் பக்திக் கருத்துக்கள் இல்லை என்று கூறப்படுகிறது. இவர்கள் சொல்வது முற்றிலும் தவறென்பது உபநிடதங்களைப் படிப்பவர்களுக்குத் தெரியும். ஒவ்வோர் உபநிடதத்திலும் பக்திக் கருத்துக்கள் வேண்டிய அளவு உள்ளது. நீங்கள் சற்று தேடிப் பார்க்க வேண்டும், அவ்வளவுதான். பிற்காலத்தில் புராணங்களிலும் ஸ்மிருதிகளிலும் முழு வளர்ச்சியடைந்து காணப்படுகின்ற சில கருத்துக்கள் உபநிடதங்களில் விதை நிலையில் உள்ளன. ஒரு குறிப்பு, ஒரு திட்டம் அங்கே உள்ளது. புராணங்களில் அவை விரிவுபடுத்தப்பட்டுள்ளன. இன்று முழுமையாக வளர்ச்சி பெற்றுள்ள எந்த இந்திய லட்சியத்தை

வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். அவை ஒவ்வொன்றும் உபநிடதங்களிலிருந்தே தோன்றியுள்ளன. உபநிடதங்களை ஒழுங்காகப் படிக்காமல், பக்திக் கருத்து வெளிநாட்டிலிருந்து வந்தது என்று நிலைநாட்டச் சிலர் முயல்கிறார்கள். அவர்களின் முயற்சியை நினைத்தால் சிரிப்புத் தான் வருகிறது. இவையெல்லாம் தவறென்று நிரூபிக்கப் பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். வழிபாடு, பிரேமை என்று பக்திக் கருத்துக்கள் என்னென்ன உண்டோ அவை எல்லாமே உபநிடதங்களில், உபநிடதங்களில் ஏன், சம்ஹிதைகளிலேயே உள்ளன. காலப்போக்கில் பக்தி லட்சியங்கள் வளர்ந்து வரு கின்றன, அவ்வளவுதான். சம்ஹிதைகளில் அங்கங்கே பயமும் வேதனையும் நிறைந்த மதத்தின் சுவட்டைக் காண முடிகிறது. வருணன் அல்லது வேறு ஒரு தேவனின் முன்னால், வழிபடு பவர்கள் நடுங்கி நிற்பதை அங்கங்கே நாம் பார்க்கிறோம். பாவம் என்ற கருத்தின் காரணமாக அவர்கள் மிகுந்த வேதனைக்கு உள்ளாவதையும் அங்கே நாம் காண முடியும். ஆனால் இத்தகைய விஷயங்களை விவரிக்க உபநிடதங்களில் இடம் இல்லை. பயத்தை அடிப்படையாகக் கொண்ட மதம் உபநிடதங்களில் இல்லை. அங்குக் காணப்படும் மதம் அன்பை அடிப்படையாகக் கொண்டது, அறிவையும் அடிப்படையாகக் கொண்டது.

இந்த உபநிடதங்களே நமது சாஸ்திரங்கள். இவை பல வாறாக விளக்கப்பட்டுள்ளன. நான் முன்னரே கூறியதுபோல், வேதங்களுக்கும் தொடர்ந்து வந்துள்ள புராண இலக்கியங் களுக்கும் வேறுபாடு தோன்றுமானால், புராணங்கள்தான் வழி விட வேண்டும். ஆனால் இன்று நடைமுறையில் நாம் நூற்றுக் குத் தொண்ணூறு பங்கு புராணங்களையும் பத்துப் பங்கு மட்டுமே வைதீக முறைகளையும் பின்பற்றி வருகிறோம். மிகவும் முரணான பல பழக்கவழக்கங்கள் நம்மிடையே நிலவுகின்றன. மதம் பற்றிய பல்வேறு கருத்துக்கள் நமது சமுதாயத்தில் உள்ளன. இவற்றுக்கெல்லாம் இந்து சாஸ்திரங்களின் சம்மதமும் இல்லை. இன்னும் சில பழக்கவழக்கங்கள் நம் நாட்டில் உள்ளன; அவற்றைப்பற்றிப் புத்தகங்களில் படிக்கிறோம், பார்க்கவும் வியப்பாக இருக்கிறது. இவற்றிற்கு வேதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் எவற்றின் சம்மதமும் கிடையாது; இவை வெறும் வட்டார வழக்கங்கள். எனினும் அந்தச் சிறு வழக்கம்கூட அழிந்து போகுமானால், தான் ஓர் இந்துவாக நிலைக்க

முடியாது என்றே ஒவ்வொரு பாமர கிராமவாசியும் நினைக்கிறான். அவனைப் பொறுத்தவரையில் வேதாந்தமும் ஒன்றுதான், அந்தச் சிறிய வட்டார வழக்கமும் ஒன்றுதான். தான் செய்வதற்கு சாஸ்திர சம்மதம் இல்லை, அவற்றை விட்டுவிட்டால் தனக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாது; மாறாக, தான் ஒரு சிறந்த மனிதனாவதற்கே அது துணை செய்யும் என்பதை சாஸ்திரங்களில் படித்தாலும் அவன் உணர்வது இல்லை.

இரண்டாவதாக, இன்னுமொரு சிக்கல் இருக்கிறது. நமது சாஸ்திரங்கள் எண்ணற்றவை. சாம வேதத்திற்கு ஆயிரம் கிளைகள் இருந்ததாக இலக்கண நூலாகிய பதஞ்ஜலி மகா பாஷ்யத்தில் படிக்கிறோம். அவையெல்லாம் என்னவாயின? யாருக்கும் தெரியாது. ஒவ்வொரு வேதத்தின் விஷயமும் அப்படியே. இந்த நூல்களின் பெரும் பகுதி மறைந்துவிட்டது, சிறிய பகுதிகளே நமக்குக் கிடைத்துள்ளன. குறிப்பிட்ட சில குடும்பங்கள் அவற்றைத் தங்கள் பொறுப்பில் பாதுகாத்து வந்தன. இந்தக் குடும்பங்கள் மரணத்தைத் தழுவின; அல்லது அன்னியர் கொடுமையின் கீழ் கொல்லப்பட்டன, அல்லது வேறு எந்த விதத்திலோ அழிய நேர்ந்தது. அவற்றுடன் அவை பாதுகாத்து வந்த வேதப் பகுதிகளும் அழிந்துபட்டன. இந்த உண்மை நாம் கருத்தில் கொள்ள வேண்டிய ஒன்றாகும். ஏனெனில் புதிதாக ஒன்றைப் போதிக்க விரும்புபவர்களுக்கும் சரி, ஏதாவது கொள்கையை நிலைநாட்ட விழைபவர்களுக்கும் சரி, ஏன், வேதங்களையே எதிர்க்கின்ற ஒரு கொள்கையைக் கூற எண்ணுபவர்களுக்கும்கூட இந்த உண்மை, இந்த வாதம்தான் ஒரு துருப்புச்சீட்டாக இருந்து வருகிறது. ஏதோவொரு வட்டார வழக்கத்திற்கும் வேதங்களுக்கும் முரண்பாடு இருப்பது கண்டு பிடிக்கப்பட்டு, அந்த வட்டார வழக்கம் வேதங்களுக்கு எதிரானது என்பது சுட்டிக்காட்டப்பட்டால் உடனே இந்த வாதம்தான் முன் வைக்கப்படுகிறது— அதாவது அவற்றிற்கு இடையில் முரண்பாடு எதுவும் இல்லை, இந்தக் குறிப்பிட்ட வாதம்பற்றிக் காணப்பட்ட வேதப் பகுதி அழிந்துவிட்டது, உண்மையில் இந்த வழக்கமும் நிலவியே வந்தது என்று கூறிவிடுவார்கள்.

நமது சாஸ்திரங்களின் இத்தகைய மாறுபட்ட பாட பேதங்கள், விளக்கவுரைகள் இவற்றிற்கு நடுவில், இவை அனைத்தின் ஊடேயும் இவை அனைத்தையும் கோர்த்தபடிச் செல்கின்ற

அடிப்படைக் கருத்தைக் கண்டுபிடிப்பது மிகச் சிரமமான காரியம்தான். ஆனால் மாறுபட்ட இந்த எல்லா பிரிவுகளுக்கும் உட்பிரிவுகளுக்கும் அடிப்படையாக ஏதோ ஒன்று இருக்க வேண்டும். இந்தச் சிறுசிறு கட்டிடங்கள் அனைத்தும் ஒரு பொது அஸ்திவாரத்தின் மீதே கட்டப்பட்டிருக்க வேண்டும். இவையனைத்துள்ளும் ஓர் இயைபு நிலவ வேண்டும், சீர் செய்ய முடியாததுபோல் தோற்றம் அளிக்கின்ற, நாம் நமது மதம் என்று அழைக்கின்ற இந்தக் குழப்பக் குட்டைக்கு ஏதோ வோர் அடிப்படை ஒழுங்கு இருக்க வேண்டும் என்பது புலப் படுகிறது. இல்லாவிடில் இது இவ்வளவு காலம் நிலைத்து நின்றிருக்க முடியாது; இவ்வளவு காலம் தாக்குப் பிடித்திருக்க முடியாது.

இனி நம் உரையாசிரியர்களிடம் வருவோம், அங்கேயும் ஒரு சிக்கல் தெரிகிறது. அத்வைத உரையாசிரியர் என்ன செய் கிறார்? அத்வைதப் பகுதி வரும்போது, அதை அப்படியே வைத்துக் கொள்கிறார். ஆனால் துவைதப் பகுதி வருமானால் அதே உரையாசிரியர், அவரால் முடியுமானால், அந்தப் பகுதியைப் பிரித்தும் திரித்தும் மிகவும் அசம்பாவிதமாகப் பொருள் கூறுகிறார். 'பிறப்பற்றது' சில இடங்களில் 'ஆடு' என்றாகிவிடுகிறது, இத்தகைய வினோத மாற்றங்களை எல்லாம் நாம் காண முடியும். உரையாசிரியர் தமக்கு ஏற்றவாறு பொருள் தருவதற்காக, 'பிறப்பற்றது' என்ற பொருள் தருகின்ற 'அஜ:' என்ற வார்த்தையை, 'பெண் ஆடு' என்று பொருள்படுகின்ற 'அஜா' என்ற வார்த்தையாகத் கொள்கிறார்.

இதைவிட மோசமாக இல்லையென்றாலும், இவ்வாறு தான் துவைத உரையாசிரியர்களும் வேதப் பகுதிகளைக் கையாள்கிறார்கள். துவைதப் பொருள் கொடுக்கும் பகுதிகளை அப்படியே வைத்துக்கொண்டு, அத்வைதப் பொருள் வரும் பகுதியை விருப்பம்போல் திரித்துப் பொருள் தருகிறார்கள்.

சம்ஸ்கிருத மொழி அவ்வளவு நுட்பமானது, வேதங்கள் அவ்வளவு பழமை வாய்ந்தவை, சம்ஸ்கிருத இலக்கணம் அவ் வளவு முழுமையானது—ஒரு வார்த்தையின் பொருளைப் பற்றி யுகயுகமாக விவாதித்துக் கொண்டே இருக்கலாம். ஒரு பண்டிதர் நினைத்தால் வெறும் உளறலைக்கூட வாதத் திறமையால் மேற்கோள்களைக் காட்டியும் நியதிகளைக் கூறியும் சரியான சம்ஸ்கிருதமாகக் காட்டிவிட முடியும். உபநிடதங்களைப் புரிந்து கொள்வதில் உள்ள கஷ்டங்கள் இவை.

ஆனால் ஒரேசமயத்தில் தீவிர துவைதியாகவும் தீவிர அத்வைதியாகவும் தீவிர பக்தராகவும் தீவிர ஞானியாகவும் திகழ்ந்த ஒரு மகானுடன் வாழும் அரிய பேறு எனக்குக் கிடைத்தது. உபநிடதங்களையும் சாஸ்திரங்களையும் புரிந்து கொள்வதற்கு உரையாசிரியர்களைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதைவிடச் சிறந்த சுதந்திரமான வழி அவரிடமிருந்தே எனக்கு முதலில் கிடைத்தது. எனது கருத்தும் எனது ஆராய்ச்சிகளின் பலனாக நான் கண்ட முடிவும் இதுதான்— சாஸ்திரப் பகுதிகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை அல்ல. எனவே அவற்றைத் திரித்துப் பொருள் கூற வேண்டுமே என்று பயப்பட வேண்டாம். ஆஹா! அந்தப் பகுதிகள் மிகவும் அழகு வாய்ந்தவை, மிகவும் அற்புதமானவை; அவை ஒன்றுக்கொன்று முரண்பட்டவை அல்ல, மாறாக அவற்றிற்கிடையில் மிகவும் ஆச்சரியமான இயைபு காணப்படுகிறது, ஒரு கருத்திலிருந்து அடுத்த கருத்திற்குப் படிப்படியாக நம்மை அழைத்துச் செல்கின்ற ஒரு பாங்கு காணப் படுகிறது. எல்லா உபநிடதங்களும் வழிபாடு போன்ற துவைதக் கருத்துக்களில் ஆரம்பித்து உன்னதமான அத்வைதத்தில் முடிவடைகின்றன என்பது நான் கண்ட உண்மை.

எனவே இந்த மகானின் வாழ்க்கையின் வாயிலாகப் பார்க்கும்போது, துவைதிகளும் அத்வைதிகளும் ஒருவருக்கொருவர் சண்டையிட வேண்டிய அவசியமில்லை என்று எனக்குத் தெரிகிறது; இருவருக்கும் இடம் உள்ளது, தேசிய வாழ்க்கையில் மகத்தான இடமிருக்கிறது, துவைதி கட்டாயம் வேண்டும், அத்வைதியைப்போல் துவைதியும் நமது தேசிய மத வாழ்க்கையில் ஒன்றுகலந்தவன். ஒன்றில்லாமல் மற்றது இருக்க முடியாது. ஒன்று மற்றொன்றைப் பூர்த்தி செய்கிறது; ஒன்று கட்டிடம், மற்றொன்று மாடி; ஒன்று வேர், மற்றொன்று பழம். இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம். எனவே உபநிடத வாக்கியங்களைத் திரித்துப் பொருள் கூற முயற்சிப்பது எனக்கு வேடிக்கையாகவே படுகிறது.

உபநிடதங்களின் மொழி மிகவும் அற்புதமாக இருப்பதை இப்போது நான் உணரத் தொடங்கியிருக்கிறேன். அவை மிகச் சிறந்த தத்துவம். அவை மனித குலத்திற்கு முக்தியின் பாதையைக் காட்டுகின்ற மிகச் சிறந்த கோட்பாடு. ஆனால் இந்த எல்லா சிறப்புக்களையும்விட, உபநிடத இலக்கியம் இருக்கின்றனவே, அவை நுண்மையைப் (Sublimity) படம் வரைந்து காட்டுவதில் மிகச் சிறந்த ஓவியமாகத் திகழ்கின்றன. மனித மனத்தின்

தனித்துவம், இந்த மனத்தின் அகவயம் (Introspection), உள்ளுணர்வு (Intuition) இந்த நூல்களில்தான் முழுவேகத்துடன் வெளிப்பட்டுள்ளன.

பொதுவாக எல்லா நாட்டு இலக்கியங்களிலும் நுண்மை யின் சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கவே செய்கின்றன. ஆனால் ஏறக்குறைய அவை எல்லாமே நுண்மையைப் புற இயற்கையில் தேட முயல்கின்றன. உதாரணமாக, மில்டன், தாந்தே, ஹோமர் போன்ற எந்த மேலைநாட்டுக் கவிஞர்களை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். அவர்களின் கவிதைகளில் நயமான நுண்மைப் பகுதிகள் உள்ளன. ஆனால் எல்லையற்ற விரிவை, எல்லையற்ற வெளியைப் புலன்களால் உணரக்கூடிய, புற இயற்கை மூலமாகத் தெளிவுபடுத்துகின்ற முயற்சியையே அந்தக் கவிதைகளுள் நாம் காண்கிறோம். நம் சம்ஹிதை களிலும் இத்தகைய முயற்சிகளைக் காண்கிறோம். படைப்பை விவரிக்கின்ற அந்த அற்புதமான ரிக்குகள் உங்களுக்குத் தெரிந் திருக்கும். விரிவில் (Expansion) நுண்மையையும், வெளியில் (Space), எல்லையற்றதையும் வெளிப்படுத்துகின்ற முயற்சி யில் உச்சங்களை எட்டியிருப்பதை அவற்றுள் நாம் காண் கிறோம்.

ஆனால் எல்லையற்ற ஒன்றை இந்த வழியில் அடைய முடியாது; தங்கள் மனங்களில் உருவாகத் துடித்துக் கொண் டிருக்கின்ற கருத்துக்களை எல்லையற்ற வெளி, எல்லையற்ற விரிவு, எல்லையற்ற புற இயற்கை—இவை எவற்றாலும் வெளிப் படுத்த முடியாது என்பதை அவர்கள் வெகுவிரைவிலேயே கண்டு கொண்டனர். எனவே அவர்கள் வேறு விளக்கங்களுக்குத் திரும்பத் தலைப்பட்டனர். உபநிடதங்களின் மொழி புதியமுறை யில் ஆகிவிட்டது; பெரும்பாலும் எதிர்மறையாக, சில இடங் களில் குழப்பமாக, சில நேரங்களில் நம்மைப் புலன்களுக்கு அப்பால் அழைத்துக் கொண்டுபோய், நம்மால் உணர்ந்து கொள்ள முடியாத ஒன்றைக் காண்பித்து, புரியாவிட்டாலும் அது இருக்கிறது என்ற நிச்சயத்தை நம் மனத்தில் ஏற்படுத்தும் விதமாக இருக்கிறது. உலகின் எந்தக் கவிதை இதற்கு ஈடாகும்? — 'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி?[1]— அங்கு சூரியன் ஒளிரச் செய்ய முடியாது; சந்திரனும் நட்சத்திரங்களும் மின்னலின் ஒளியும்

1. சுவேதாஸ்வதர உபநிடதம், 6. 14. & கடோபநிடதம், 2. 2. 15.

பிரகாசத்தை அளிக்க இயலாது. அப்படியிருக்க இந்தச் சிறு நெருப்பு என்ன செய்யும்?'

உலகின் தத்துவங்களில் மிகச் சிறந்ததும் முழுமை பெற்றதுமான வெளிப்பாட்டையும், இந்துக்களின் சிந்தனை சாரத்தையும், முக்தி பற்றிய மனித குலத்தின் முழுக் கனவையும் வேறு எங்கு இவ்வளவு அழகிய மொழியில் இத்தனை அற்புத உவமையுடன் சொல்லி இருப்பதைக் காண முடியும்?—

த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமானம் வ்ருக்ஷம்
பரிஷஸ்வஜாதே ।
தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத்வத்யனச்னன் அன்யோ
அபிசாகசீதி ॥
ஸமானே வ்ருக்ஷே புருஷோ நிமக்னோऽநீசயா சோசதி
முஹ்யமான: ।
ஜுஷ்டம் யதா பச்யத்யன்யமீசமஸ்ய மஹிமானமிதி
வீதசோக: ॥[1]

ஒரு மரத்தில் அழகிய இறகுகள் கொண்ட இரண்டு பறவைகள் அமர்ந்திருக்கின்றன. இரண்டும் ஒன்றுக்கொன்று மிகுந்த நேசம் பாராட்டுகின்றன. ஒன்று பழங்களைத் தின்கிறது. மற்றொன்று உண்ணாமல் கம்பீரமாக அமைதியாக உட்கார்ந் திருக்கிறது. கீழ்க்கிளையில் அமர்ந்திருக்கும் பறவை மாறிமாறி இனிப்பும் கசப்புமான பழங்களைத் தின்பதால் அதற்கேற்ப மகிழ்ச்சியும் வேதனையும் அடைகிறது. ஆனால் மேலே அமர்ந் திருக்கின்ற மற்ற பறவையோ அமைதியாக கம்பீரமாக அமர்ந் திருக்கிறது. அது இனிப்பையும் உண்ணவில்லை, கசப்பையும் தின்னவில்லை. எனவே சுகம் துக்கம் எதைப் பற்றியும் கவலைப் படாமல் தன் மகிமையிலேயே ஆழ்ந்திருக்கிறது.

மனிதனின் நிலை இதுதான். வாழ்க்கை தரும் இனிப்பும் கசப்புமான பழங்களை உண்கிறான்; பணத்தை நாடி, புலனின் பங்களைத் தேடி, வாழ்க்கையின் நிலையற்ற இன்பங் களைத் தேடி பைத்தியக்காரத்தனமாக, வெறித்தனமாக, இடையீடின்றி ஓடிக் கொண்டிருக்கிறான். சில இடங்களில், ஆன்மாவைத் தேர்ப்பாகனுக்கும், புலன்களைக் கட்டுக்கடங்காத வெறிபிடித்த குதிரைகளுக்கும் உபநிடதங்கள் ஒப்பிடுகின்றன.[2]

---

1. முண்டக உபநிடதம், 3. 1. 1,2.
2. ஆத்மானம் ரதினம் வித்தி சரீரம் ரதமேவ து ।
புத்திம் து ஸாரதிம் வித்தி மன: ப்ரக்ரஹமேவ ச ॥
இந்த்ரியாணி ஹயானாஹுர் விஷயாம் ஸ்தேஷு கோசரான் ।
—கடோபநிடதம், 1. 3. 3,4.

குழந்தைகள் ஒளிமயமான இன்பக்கனவுகளில் மிதப்பதும், பின்பு அவையனைத்தும் வீண் எனக் காண்பதும், வயதான வர்கள் தங்கள் கடந்தகாலச் செயல்களை அசைபோடுவதும், எனினும் இந்த மாய வலையிலிருந்து வெளியேறிச் செல்ல முடியாமல் திண்டாடுவதும் — நிலையற்ற இன்பங்களை நாடி ஓடுகின்ற மனிதனின் வாழ்க்கை இப்படித்தான் இருக்கிறது. இதுதான் உலகம். எனினும் ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் பொன்னான கணங்கள் வரவே செய்கின்றன. ஆழ்ந்த கவலை களின் நடுவில், இல்லை இல்லை, பெருத்த மகிழ்ச்சியின் நடுவில் சில நேரங்கள் வருகின்றன; சூரிய ஒளியை மறைத்துக் கொண்டிருக்கும் மேகத்திரள் விலகுவதுபோல் அப்போது தோன்றுகிறது; அப்பால் உள்ள ஏதோ ஒன்றின் காட்சி நம்மை யும் அறியாமல் கண நேரத்திற்கு நமக்குக் கிடைத்து விடுகிறது— அப்பால் புலனின்ப வாழ்க்கைக்கு அப்பால், அப்பால், உலகின் நிலையற்ற சுக துக்கங்களுக்கும் அப்பால், அப்பால், இயற்கைக்கு அப்பால், இவ்வுலக மறுவுலக இன்பங்களாகிய கற்பனைகளுக்கு அப்பால், புகழ், பணம், பெயர், சந்ததி முதலிய அனைத்து ஆசைகளுக்கும் அப்பால் உள்ள ஒளியைக் கண நேரம் பெறு கிறோம். இந்தக் காட்சியில் கண நேரம் திகைத்து நிற்கிறான் மனிதன்; இனிப்பும் கசப்புமான பழங்களை உண்ணாமல் தன் மகிமையிலேயே திளைத்து, தனக்குத்தானே திருப்தியாக தன் னுள்ளேயே நிறைவு கண்டு, ஆனந்தமாக, அமைதியாக, கம்பீர மாக வீற்றிருக்கும் அந்த மற்றொரு பறவையைப் பார்க்கிறான். கீதை கூறுவதுபோல்,

> யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தச்ச மானவ: ।
> ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥[1]

—'யார் ஆன்மாவின் மீது அன்பு செலுத்துபவனாய், ஆன்மாவைத் தவிர வேறொன்றும் வேண்டாதவனாய், ஆன்மா விலேயே திருப்தி கொண்டவனாய் இருக்கிறானோ அவன் செய்வதற்கு என்ன வேலை இருக்கிறது?' ஏன் அடிமைபோல் வேலை செய்ய வேண்டும்? மனிதன் கண நேரம் அந்தக் காட்சி பெறுகிறான். ஆனால் அதை மறந்துவிடுகிறான், வாழ்வின் இன்பதுன்பமாகிய பழங்களை உண்கிறான். சில காலத்திற்குப் பிறகு ஒருவேளை மீண்டும் அந்தக் காட்சி அவனுக்குக் கிடைக் கிறது. அடிமேல் அடிகளைப் பெற்ற பின்னர் கீழ்ப்பறவை

---

1. கீதை, 3. 17.

மேற்பறவையை நோக்கிச் செல்கிறது. பலமான அடி பெறுவதற்குப் பேறு பெற்றிருந்தால் தனது உயிருக்குயிராகவும் நண்பனாகவும் இருக்கும் மேற்பறவையின் அருகில், மிக அருகில் செல்கிறது. அருகில் செல்லச்செல்ல, மேற்பறவையிலிருந்து கிளம்புகின்ற ஒளி தனது இறகுகளையும் முழுக்காட்டிச் செல்வதை அது காண்கிறது. அதனை இன்னும் நெருங்க நெருங்க, ஆகா, மாற்றம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இன்னும் நெருங்கும்போது, தானே கரைந்து போவதுபோல் அது உணர்கிறது. மெள்ளமெள்ள அது முற்றிலுமாக மறைந்து விடுகிறது. உண்மையில் கீழ்ப்பறவை வேறல்ல; மேலே அசைந்து கொண்டிருக்கும் இலைகளுக்கு இடையில் அமைதியாக, கம்பீரமாக வீற்றிருந்த அந்த மேற்பறவையின் பிரதிபிம்பமே அது. எல்லாம் மேற்பறவையின் மகிமையே. அதன் மகிமையில் கலந்து இதுவும் பயமின்றி இருக்கிறது; பூரண திருப்தியும் அமைதியும் கம்பீரமும் பெறுகிறது. இந்தச் சித்திரத்தின்மூலம் உபநிடதங்கள் நம்மை துவைதத்திலிருந்து அத்வைதத்தின் உச்சக் கருத்திற்கு அழைத்துச் செல்கின்றன.

இப்படிப் பல உதாரணங்களைக் காட்டலாம். ஆனால் அதற்கு நேரம் இல்லை. உபநிடதங்களின் கவித்துவம், நுண்மையைச் சித்தரித்துக் காட்டும் நேர்த்தி, அவற்றில் நிறைந் துள்ள உன்னதக் கருத்துக்கள்— இவற்றையெல்லாம் விளக்கிக் கூறவும் நேரமில்லை.

ஆனால் ஒரு விஷயத்தை நான் சொல்லியே தீர வேண்டும். உபநிடதங்கள் வாள்முனைபோல் உங்களை ஊடுருவுகிறது; சம்மட்டியடிபோல் உங்கள்மீது விழுகிறது. அவற்றின் பொருளில் சிறிதும் குழப்பமில்லை. அந்த இசையின் ஒவ்வொரு சந்தமும் முழு இனிமையுடன் உள்ளது. வீண் வார்த்தைகள் இல்லை, தேவையற்ற வாதங்கள் இல்லை, அறிவை ஆக்கிரமிக் கின்ற சொல்அடுக்குகள் இல்லை, இழிநிலையின் எந்த அடையாளமும் இல்லை, அளவுக்கு அதிகமாக உவமை காட்டு கின்ற முயற்சிகள் இல்லை. உயர்வு நவிற்சி அணிகளைக் கூறி, பொருளை மேலும் குழப்பி, அதன் கருத்தே தொலைந்து போகும் அளவிற்குக் கொண்டுபோய், அதிலிருந்து வெளிவர வழி தெரியாமல் மதிமயங்கித் திகைக்கின்ற அளவிற்குச் செய்யக் கூடிய எதுவும் அவற்றில் இல்லை. அப்படிப்பட்ட எதுவும் உபநிடதங்களில் இல்லை. அவை மனிதர்களால் உருவாக்கப் பட்டிருக்குமானால், அவற்றை உண்டாக்கிய இனம்

அளவற்ற தேசிய சக்தி உடையதாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

வலிமை, வலிமை என்பதையே உபநிடதங்களின் ஒவ்வொரு பக்கமும் எனக்குக் கூறுகின்றன. நினைவில் கொள்ள வேண்டிய விஷயம் இது. நான் வாழ்க்கையில் கற்றுக்கொண்ட ஒரு பெரிய பாடம், 'வலிமை வலிமை, ஓ மனிதா, பலவீனனாக இருக்காதே' என்பதுதான். மனித பலவீனங்களே இல்லையா என்று மனிதன் கேட்கிறான். உண்டு என்று பதிலளிக்கின்றன உபநிடதங்கள். ஆனால் அதிக பலவீனத்தால் பலவீனத்தைப் போக்க முடியுமா? அழுக்கால் அழுக்கைப் போக்க முடியுமா? பாவத்தால் பாவம் தொலையுமா? பலவீனத்தால் பலவீனம் போகுமா? என்று கேட்கின்றன. 'வலிமை, ஓ மனிதா, வலிமையுடன் எழுந்து நில்; வலிமை பெறு' என்று அவை சொல்கின்றன. உலக இலக்கியங்களுள் இதில் மட்டுமே 'அபீ':— 'பயமின்மை' என்ற வார்த்தை மீண்டும்மீண்டும் காணப்படுகிறது. வேறு எந்த சாஸ்திரத்திலும் கடவுளுக்கும் சரி, மனிதனுக்கும் சரி இந்தச் சொல் பயன்படுத்தப்படவில்லை.

அபீ:— பயமின்மை! என் மனத்தில் இப்போது கடந்த காலக் காட்சி ஒன்று விரிகிறது. மேலை நாட்டின் மாபெரும் சக்கரவர்த்தியான அலெக்சாண்டர் நம் சிந்து நதிக்கரையில் நின்று கொண்டிருக்கிறார். காட்டில் வசிக்கின்ற நம் துறவி ஒருவரிடம் அவர் பேசிக்கொண்டிருக்கிறார். அவருடன் பேசிக்கொண்டிருக்கும் வயோதிகத் துறவி ஒருவேளை எந்த உடையும் இன்றி, நிர்வாணமாக ஒரு கல்லின்மீது அமர்ந்திருக்கிறார். அவரது ஞானத்தைக் கண்டு வியந்துபோன சக்கரவர்த்தி அவரை கிரீசுக்கு வருமாறு தூண்டுகிறார். அதற்காகப் பொன்னும் பொருளும் தருவதாக ஆசை காட்டுகிறார். ஆனால் அந்த வயோதிகரோ அலெக்சாண்டரின் பொற்காசுகளைப் பார்த்தும், ஆசை வார்த்தைகளைக் கேட்டும் மென்மையாகச் சிரிக்கிறார், அவருடன் போக மறுத்துவிடுகிறார். சக்கரவர்த்தியோ, தான் அரசன் என்ற தோரணையில் நிமிர்ந்து நின்று, 'நீ வராவிடில் உன்னைக் கொன்று விடுவேன்' என்கிறார். அவ்வளவுதான், அந்தத் துறவி கொல்லென்று சிரித்தபடியே, 'மன்னா, நீ உன் வாழ்நாளில் இது போன்றதொரு பொய்யைக் கூறியிருக்கவே முடியாது. யார் என்னைக் கொல்ல முடியும்? ஜடவுலகை ஆளும் சக்கரவர்த்தியே, நீயா என்னைக் கொல்லப் போகிறாய்? அது ஒருநாளும் நடக்காது. ஏனெனில் நான் பிறப்பும் இறப்பும்

அற்ற ஆன்மா. நான் பிறந்ததும் இல்லை, இறக்கப் போவதும் இல்லை. நான் எல்லையற்றவன், எங்கும் நிறைந்தவன், எல்லாம் அறிந்தவன். நீ என்னைக் கொல்கிறேன் என்று சொல்வது சிறுபிள்ளைத்தனமாக இல்லையா!' என்று கேட்கிறார்.

இதுவல்லவா வலிமை! இதுவல்லவா வலிமை! நண்பர்களே, என் நாட்டு மக்களே, உபநிடதங்களை அதிகம் படிக்கப் படிக்க நான் உங்களுக்காக அதிகம் கண்ணீர் சிந்துகிறேன். வலிமை, வலிமை, நாம் வலிமை பெறுவதற்கான செயல்முறை வழி அவற்றுள் சொல்லப்பட்டிருக்கிறது. நமக்கு வேண்டுவது வலிமை, வலிமைதான். அதை யார் நமக்குத் தருவார்கள்? நம்மைப் பலவீனப்படுத்த ஆயிரக்கணக்கான விஷயங்கள் உள்ளன, கதைகள் வேண்டிய அளவு உள்ளன. உலகின் நூல் நிலையங்களுள் முக்கால் பங்கை நமது புராணக் கதைகளால் நிரப்பிவிடலாம். நம் இனத்தைப் பலவீனப்படுத்துகின்ற அனைத்திற்கும் கடந்த ஆயிரம் வருடங்களாக நாம் இடம் கொடுத்துவிட்டோம். எப்படி நமது தேசிய வாழ்க்கையை மேலும்மேலும் பலவீனப்படுத்துவது என்ற ஒரே நோக்கத்துடன் அந்தக் கால கட்டத்தில் நாம் செயல்பட்டிருப்பதுபோல் தோன்றுகிறது. அதன் விளைவாக, நம்மை மிதிக்கத் துணிந்த ஒவ்வொருவரின் கால்களின் கீழும் வெறும் புழுக்களாகவே ஆகிவிட்டோம்.

எனவே என் அருமை நண்பர்களே, உங்களுள் ஒருவனாகிய நான், உங்களுடனேயே வாழ்ந்து இறப்பவன் என்ற முறையில் உங்களுக்குச் சொல்கிறேன்: நாம் வேண்டுவது வலிமை, வலிமை, ஒவ்வொன்றிலும் வலிமை வேண்டும். வலிமை தரும் பெரும் சுரங்கங்களாக உபநிடதங்கள் உள்ளன. உலகம் முழுவதற்கும் வலிமை ஊட்டுவதற்கான சக்தி அவற்றில் இருக்கின்றன. அவற்றின்மூலம் உலகம் முழுவதற்கும் புத்துயிரும் புது சக்தியும் புது உணர்ச்சியும் அளிக்க முடியும். எல்லா நாடுகளிலும் எல்லா மதங்களிலும் எல்லா இனங்களிலும் உள்ள பலவீனர்களையும் துன்பத்தில் துடிப்பவர்களையும் தாழ்த்தப்பட்டோரையும் அவை பேரிகை கொட்டி அழைத்து, சொந்தக் காலில் எழுந்து நின்று சுதந்திரம் பெறுமாறு பறைசாற்றுகின்றன. சுதந்திரம், பௌதீக சுதந்திரம், மன சுதந்திரம், ஆன்ம சுதந்திரம்— இவையே உபநிடதங்களின் மூல மந்திரங்களாகும்.

உலகத்திலேயே இந்த ஒரு சாஸ்திரம்தான் மீட்சியைப் (Salvation) பற்றிப் பேசாமல், சுதந்திரம் (Freedom) குறித்துப் பேசுகிறது. இயற்கையின் தளைகளிலிருந்து சுதந்திரம்

பெறுங்கள், பலவீனத்திலிருந்து விடுதலை அடையுங்கள்! இந்தச் சுதந்திரம் ஏற்கனவே உங்களிடம் இருக்கிறது என்பதையும் அது காண்பிக்கிறது. இது உபநிடத போதனைகளின் மற்றொரு சிறப்பாகும். நீ ஒரு துவைதியா? பரவாயில்லை. ஆன்மா இயல்பிலேயே பூரணத் தன்மையுடையது என்பதை ஒப்புக் கொள். குறிப்பிட்ட வினைப் பயன்களின் காரணமாக அந்த ஆன்மா சுருங்கியுள்ளது. ராமானுஜரின் சுருங்குதல் மற்றும் விரிதல் கொள்கைகளைத்தான் அப்படியே தற்காலப் பரிணாம வாதிகள் பரிணாம வாதம் (Evolution)[1] மற்றும் 'அட்டாவிசம்' (Atavism)[2] என்று கூறுகிறார்கள். ஆன்மா பழைய நிலைக்குப் போய் சுருங்கியது போலாகிறது, அப்போது அதன் ஆற்றல்கள் அதனுள்ளேயே ஒடுங்கியிருக்கின்றன; நற்செயல்கள் மற்றும் நல்லெண்ணங்கள்மூலம் மீண்டும் விரிகிறது, தன் இயல்பான பூரணத்துவத்தை வெளிப்படுத்துகிறது.

பரிணாமம் பிரகிருதிக்கு உண்டு என்பதை அத்வைதி ஒப்புக்கொள்கிறானே தவிர, ஆன்மாவுக்கு இருப்பதாக அவன் ஒப்புக்கொள்வதில்லை. இதுதான் ஒரு வித்தியாசம். ஒரு திரையிருப்பதாக வைத்துக் கொள்வோம். அதில் துளை ஒன்று உள்ளது, நான் திரையின் அந்தப் பக்கத்திலிருந்து இந்தப் பெரிய கூட்டத்தைப் பார்க்கிறேன். சில முகங்களை மட்டுமே நான் பார்க்க முடியும். துளை பெரிதாகப் பெரிதாகக் கூட்டத்தின் அதிகமான பகுதியைப் பார்க்கலாம். திரையே துளையாகி விட்டால் கூட்டம் முழுவதையும் பார்ப்பேன். இதில் உங்களுக்கும் எனக்கும் இடையில் எதுவும் இல்லை. நானும் மாறவில்லை, நீங்களும் மாறவில்லை, மாறுதல் அனைத்தும் திரையில்தான். ஆரம்பம் முதல் கடைசிவரை நீங்கள் நீங்களாகவே இருந்தீர்கள், மாறுதல் எல்லாம் திரையில்தான். பரிணாமத்தைப்பற்றி அத்வைதி சொல்வது இதுதான்— பிரகிருதியாகிய திரை நீங்குகிறது; உள்ளிருந்து ஆன்மா வெளிப்படுகிறது. ஆன்மா எக்காரணத்தாலும் சுருங்கவோ விரியவோ செய்யவில்லை. அது மாற்றம் அற்றது, எல்லையற்றது, ஒன்றேயானது. ஒரு திரையால், மாயை என்னும் திரையால் அது மறைக்கப்பட்டது போலுள்ளது. இந்த மாயைத்திரையின் கனம் குறையக்குறைய ஆன்மாவின்

---

1. பக்கம் 12, அடிக்குறிப்பு 1 காண்க.
2. ஒரு பரம்பரையில் முந்தைய சில தலைமுறையினரிடம் இருந்த பண்புகள், தொடர்ந்து சில தலைமுறையினரிடம் இல்லாமல், பின்னர் மீண்டும் ஒருவரிடம் தோன்றுவது.

இயல்பான மகிமை மேலும்மேலும் வெளிப்படுகிறது. இந்தச் சிறப்பானதொரு கோட்பாட்டை இந்தியாவிடமிருந்து அறிந்து கொள்ள உலகம் காத்திருக்கிறது. அவர்கள் என்ன வேண்டு மானாலும் கூறட்டும், எப்படி வேண்டுமானாலும் பெருமை யடித்துக் கொள்ளட்டும்; இந்தக் கோட்பாட்டை ஏற்றுக்கொள் ளாமல் எந்தச் சமுதாயமும் நிலைத்து நிற்க முடியாது என்பதை அவர்கள் நாளடைவில் புரிந்து கொள்வார்கள்.

எல்லா விஷயங்களும் எப்படிப் புரட்சிகரமாக மாறிவரு கின்றன என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? ஒன்று நல்ல தென்று நிரூபிக்கப்படும் வரையில் அதைக் கெட்டதென்றே கொள்வது—இதுதானே வழக்கமாயிருந்தது! கல்விமுறையிலும் சரி, குற்றவாளிகளைத் தண்டிப்பதிலும் சரி, பைத்தியக்காரர் களுக்குச் சிகிச்சை செய்வதிலும் சரி, சாதாரண நோய்களுக்குச் சிகிச்சை அளிப்பதிலும் சரி, இதுதானே பழைய நியதியாக இருந்தது! புதிய விதி என்ன? ஆரோக்கியமாயிருப்பது உடம்பின் இயல்பு, அது தன்னைத்தானே குணப்படுத்திக் கொள்கிறது; மிஞ்சிப்போனால் உடம்பிலிருக்கும் சக்தியைச் சேமிக்கத்தான் மருந்து உதவ முடியும், அவ்வளவுதான் என்கிறது புதிய விதி. குற்றவாளிகளைப்பற்றித் தற்காலச் சட்டம் என்ன சொல்கிறது? அவன் எவ்வளவு கேவலமானவன் ஆனாலும் அவனுள்ளும் தெய்வீகம் இருக்கிறது, அது மாறாதது; அதைக் கருத்தில் கொண்டே அவனை நடத்த வேண்டும் என்கிறது புதிய சட்டம். எல்லாமே மாறி வருகின்றன, சீர்திருத்தப் பள்ளிகளும் சீர் திருத்தச் சாலைகளும் கட்டப்படுகின்றன. எல்லா துறைகளிலும் இப்படித்தான்.

எல்லோரிலும் தெய்வீகம் உள்ளது என்ற இந்த இந்தியக் கருத்து பிற நாடுகளிலும் புகுந்து, அவர்கள் அறிந்தோ அறி யாமலோ வேலை செய்தே வருகிறது. உங்கள் சாஸ்திரங்களில் தான் அதன் விளக்கம் உள்ளது. இதைப் பிற நாடுகள் ஏற்றுக் கொண்டுதானாக வேண்டும். ஒருவருக்கொருவர் பரஸ்பரம் நடந்துகொள்ளும் முறை முற்றிலுமாக மாறி அமைய வேண்டும். மக்களின் பலவீனத்தையே சுட்டிக் காட்டுகின்ற பழைய கருத்துக்கள் ஒழிய வேண்டும். இவையெல்லாம் இந்த நூற் றாண்டிற்குள்ளேயே மரண அடி வாங்கிவிடும். இன்று பலர் எழுந்து நம்மைக் குறை கூறலாம். பாவம் என்கின்ற ஒன்றே இல்லை என்ற ஒரு காட்டுமிராண்டித்தனமான கருத்தை நான் பிரச்சாரம் செய்வதாக உலகின் ஓர் எல்லையிலிருந்து மற்றோர்

எல்லைவரை என்னைத் தூற்றுகிறார்கள் அல்லவா! மிகவும் நல்லது. நான் பாவத்தைப் போதித்தவன் அல்ல, தர்மத்தை உபதேசித்தவன் என்று இவர்களின் சந்ததியே என்னைப் போற்றப் போகிறது. நான் தர்மத்தைப் போதிப்பவனே தவிர, பாவங்களைப் போதிப்பவன் அல்ல. இருளையல்ல, ஒளியைப் போதிப்பவன் என்பதில் நான் பெருமை கொள்கிறேன்.

உபநிடதங்களிலிருந்து பெறுவதற்காக உலகம் காத்திருக்கின்ற இரண்டாவது பெரிய கருத்து, பிரபஞ்சம் முழுவதிலும் ஓர் ஒருமை (Solidarity) நிலவுகிறது என்னும் உண்மையாகும். நாடுகளைப் பிரித்திருந்த எல்லைகள் விரைவாக மறைந்து கொண்டிருக்கின்றன. மின்சாரமும் நீராவியும் உலக நாடுகளிடையே தொடர்பை உருவாக்கியுள்ளன. அதன் காரணமாக, நம் நாட்டைத் தவிர மற்ற நாடுகளில் பேய்களும் பிசாசுகளும் தான் வசித்துக் கொண்டிருக்கின்றன என்று இந்துக்களும் கூற முடியாது. அதுபோலவே கிறிஸ்தவ நாட்டினரும் இந்தியாவில் காட்டுமிராண்டிகளும் காட்டு மனிதர்களுமே வாழ்கிறார்கள் என்றும் சொல்ல முடியாது. நாம் வெளிநாடுகளுக்குச் சென்றால், உதவிக்காக நீட்டிய வலுவான கரங்களுடனும், வாழ்த்துக்களைப் பொழிகின்ற உதடுகளுடனும் விரைகின்ற நமது சகோதரனைப் போலவே அங்கும் நாம் காண முடியும்; நம் நாட்டைப் போலவே, சில வேளைகளில் நம் நாட்டினரைவிட அவர்கள் நல்லவர்களாகவே உள்ளனர். அவர்கள் இங்கு வரும் போதும் அதே சகோதரத்துவம், அதே வரவேற்பு, அதே வாழ்த்துக்களையே காண்கிறார்கள்.

எல்லா துன்பங்களுக்கும் காரணம் அறியாமையே என்று நமது உபநிடதங்கள் கூறுகின்றன. சமுதாயம் ஆகட்டும், ஆன்மீகம் ஆகட்டும் அல்லது மற்றெந்தத் துறை ஆகட்டும் இது முற்றிலும் உண்மை. அறியாமையின் காரணமாகத்தான் நாம் ஒருவரை ஒருவர் வெறுக்கிறோம். அறியாமையின் காரணமாகவே நாம் ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்வதுமில்லை; நேசிப்பதுமில்லை. ஒருவரை ஒருவர் தெரிந்துகொண்டதும் அன்பு பிறக்கிறது, பிறந்தேயாக வேண்டும். ஏனெனில் நாம் அனைவரும் உண்மையில் ஒன்றல்லவா? இப்படி ஒருமை உணர்வு தானாகவே உண்டாவதைக் காண்கிறோம். அரசியலிலும் சமுதாயத்திலும்கூட, இருபது வருடங்களுக்கு முன் தேசியப் பிரச்சினைகளாக மட்டுமே இருந்தவையானாலும் இன்று அவற்றிற்கு வெறும் தேசியக் கண்ணோட்டத்தில் தீர்வு

காண முடியாது. இன்று அவை பெரிய அளவில் வளர்ந் துள்ளன, பெரிய பரிமாணங்களைப் பெற்றுவிட்டன, பரந்த நோக்குடன் சர்வதேச அளவில் அணுகினால் மட்டுமே அவற்றைத் தீர்க்க முடியும். சர்வதேசச் சங்கங்கள், சர்வதேச அமைப்புக்கள், சர்வதேசச் சட்டங்கள்—இவையே இன்றைய அவசரத் தேவை. ஒருமை உணர்வையே இது காட்டுகிறது. விஞ்ஞானத்திலும்கூட, ஜடவுலகைப்பற்றி இத்தகையதொரு பரந்த முடிவுக்குத்தான் வந்துகொண்டிருக்கிறார்கள். ஜடப் பொருள் நிலையில் பிரபஞ்சம் முழுவதும் ஒரு மொத்தத் தொகுதியே; ஜடப் பொருளாகிய ஒரே கடல், அதில் நீங்கள், நான், சூரியன், சந்திரன் என்பதெல்லாமே பல்வேறு சிறிய சுழல்களின் பெயர்கள், அவ்வளவுதான், அதற்கு மேலில்லை. மனவுலக நிலையில் பார்த்தால் பிரபஞ்சம் தழுவியதோர் எண்ணக் கடலில் நீங்களும் நானும் அதுபோலவே சிறுசிறு சுழல்களாக இருக்கிறோம். ஆன்ம நிலையில் பார்த்தால் ஒன்றே யான, மாறுதலற்ற, இடையீடற்ற, ஒருமையேயான ஆன்மாவே அது.

நன்னெறியின் தேவை பற்றிய பிரச்சினையும் வருகிறது. அதுவும் நமது சாஸ்திரங்களில் உள்ளன. நற்பண்பின் ஊற்றான நல்லொழுக்கத்தின் விளக்கம் என்ன என்பதைப் பற்றியும் உலகம் அறிந்துகொள்ள விரும்புகிறது. அதுவும் இங்கு கிடைக்கும்.

இந்தியாவில் நமக்குத் தேவையானது எது? இவையெல் லாம் மேலை நாட்டினருக்குத் தேவையானால், நமக்கு அவை இருபதுமடங்கு அதிகம் தேவை. ஏனெனில் ஒப்பற்ற உபநிடதங் களைப் பெற்றிருந்தும், மகரிஷிகளின் பரம்பரையில் வந்தவர்கள் என்று மார்தட்டிக் கொண்டாலும், மற்ற இனங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் பலவீனர்களாக, மிகமிகப் பலவீனர் களாக இருக்கிறோம். இதை நான் சொல்லியே தீர வேண்டும். முதலில் நமது உடல் பலவீனம். நமது துன்பங்களுள் சுமார் மூன்றில் ஒரு பங்கிற்கு உடல் பலவீனமே காரணம். நாம் சோம்பேறிகள், நம்மால் உழைக்க முடிவதில்லை, நம்மால் சேர்ந்து வாழ முடிவதில்லை, நாம் ஒருவரை ஒருவர் நேசிப்ப தில்லை, நம்மிடம் சுயநலம் நிறைந்திருக்கிறது. ஒருவருக் கொருவர் வெறுக்காமல், ஒருவருக்கொருவர் பொறாமைப் படாமல் நாம் மூன்றுபேர் சேர்ந்து வாழ முடிவதில்லை. ஒருங்கிணைக்க முடியாதபடி பிரிந்து கிடக்கின்ற கூட்டம். அளவற்ற சுயநலம்; சமயச் சின்னத்தை நெற்றியில் இப்படிப்

போடுவதா, அப்படிப் போடுவதா என்பதைப்பற்றி நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஒருவருக்கொருவர் சண்டை; ஒருவனின் திருஷ்டி பட்டால் உணவு கெட்டுவிடுமா, இல்லையா என்பது போன்ற அற்ப விஷயங்களைப்பற்றி புத்தகங்களுக்கு மேல் புத்தகங்களாக எழுதிக் குவிப்பது— இதுதான் நமது இன்றைய நிலைமை.

கடந்த சில நூற்றாண்டுகளாக இதைத்தான் நாம் செய்து வந்திருக்கிறோம். இத்தகைய அழகான, அற்புதமான பிரச்சினை களிலும் ஆராய்ச்சிகளிலும் ஈடுபட்டிருக்கின்ற ஓர் இனத்திடம் உயர்ந்த எதையும் எதிர்பார்க்க முடியாதுதான். நம்மை எண்ணி நமக்கே அவமானம் வரவில்லையா? ஆம், சில வேளைகளில் வரத்தான் செய்கிறது. இவையெல்லாம் அற்பமானவை என்று நினைத்தாலும், நம்மால் அவற்றை விட முடிவதில்லை. நாம் என்னவெல்லாமோ நினைக்கிறோம். ஆனால் அவற்றைச் செய்வதில்லை— கிளிப்பிள்ளைகள்போல். நினைப்பதும் நினைப்பதைச் செய்யாதிருப்பதும் நமக்கு வழக்கமாகப் போய் விட்டது. இதற்குக் காரணமென்ன? நமது உடல்பலவீனம். வலுவற்ற இத்தகைய மூளையால் எதையும் செய்ய முடியாது. அதைப் பலப்படுத்த வேண்டும்.

முதலில் நமது இளைஞர்கள் வலிமை பெற்றவர்களாக வேண்டும். மத உணர்ச்சி அதற்குப் பின்னரே வரும். என் வாலிப நண்பர்களே, வலிமை பெறுங்கள். இதுவே நான் உங் களுக்குக் கூறும் அறிவுரை. நீங்கள் கீதையைப் படிப்பதைவிட கால்பந்தாடுவதன்மூலம் சொர்க்கத்திற்கு மிக அருகில் செல்ல முடியும். இவை தைரியமான வார்த்தைகள். இருப்பினும் இவற்றை நான் சொல்லியாக வேண்டியிருக்கிறது. ஏனெனில் நான் உங்களை நேசிக்கிறேன். பிரச்சினை எங்கு என்பது எனக்குத் தெரியும். எனக்குக் கொஞ்சம் அனுபவம் இருக்கிறது. உங்கள் கைகால் தசைகளில் இன்னும் கொஞ்சம் வலிமை சேர்ந்தால் கீதையை இன்னும் நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். உங்கள் ரத்தத்தில் வேகம் இருந்தால் ஸ்ரீகிருஷ்ணரின் மகத்தான ஆற்றலையும் மேதாவிலாசத்தையும் நீங்கள் இன்னும் சிறப்பாக அறிய முடியும். உங்கள் சொந்தக் கால்களில் நிமிர்ந்து நின்று, உங்களை மனிதன் என்று உணரும்போதுதான் நீங்கள் உபநிடதங்களையும் ஆன்மாவின் மகத்துவத்தையும் நன்றாக அறிந்துகொள்ள முடியும். இப்படியே நமது தேவைகளுக்கு ஏற்றாற்போல் இவற்றைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

நான் அத்வைதத்தை உபதேசிப்பதாகப் பலர் அதிருப்தி அடைகிறார்கள். அத்வைதத்தையோ துவைதத்தையோ உலகின் வேறு எந்தத் தத்துவத்தையுமோ நான் பிரச்சாரம் செய்ய விரும்பவில்லை. நமக்கு இப்போது வேண்டிய தத்துவமெல்லாம் ஆன்மா பற்றிய இந்த அற்புதக் கருத்துதான்— அதன் அழிவற்ற மகிமை. அதன் இணையற்ற ஆற்றல், அதன் எல்லையற்ற தூய்மை, அதன் குறைவற்ற பூரணத்துவம். எனக்கு ஒரு குழந்தை இருந்தால், பிறவியிலிருந்தே அதை, 'நீ அந்தத் தூய ஆன்மா' என்று சொல்லியே வளர்ப்பேன். நமது புராணம் ஒன்றிலுள்ள ராணி மதாலசாவின் அற்புதமான கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள். தனக்கு ஒரு குழந்தை பிறந்ததும், அதைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டி, 'நீ அந்தத் தூய ஆன்மா; நீ களங்கமற்ற, பாவமில்லாத, சர்வசக்தி வாய்ந்த, மகத்தான ஆன்மா நீ' என்று அவள் பாடினாளாம்.[1] அதில் பெரிய கருத்து அடங்கியுள்ளது. உங்களை மேன்மையானவர்கள் என்று நினையுங்கள், அப்படியே ஆவீர்கள்.

உலகம் முழுவதிலுமிருந்தும் எனக்கு அனுபவமாக என்ன கிடைத்தது என்பதுதான் கேள்வி. ஆங்கிலேயர்கள் பாவிகளைப் பற்றிப் பேசலாம். தாங்கள் பாவிகள் என்று அவர்கள் உண்மையாக நம்புவார்களானால் அவர்கள் மத்திய ஆப்ரிக்க நீக்ரோக்களைவிட மேலானவர்களாக இருக்க முடியாது. ஆனால் அவர்கள் அவ்வாறு நம்பவில்லை, ஆண்டவன் அவர்களை ஆசீர்வதிக்கட்டும்! ஒவ்வோர் ஆங்கிலேயனும் தான் உலகையே ஆளப் பிறந்தவன் என்று நம்புகிறான்; தான் மேலானவன், தன்னால் எதையும் செய்ய முடியும் என்று நம்புகிறான்; தான் விரும்பினால் சூரிய சந்திர மண்டலங்களுக்குக்கூடப் போக முடியும் என்று நம்புகிறான் அவன். இந்த நம்பிக்கைதான் அவனை மகத்தானவன் ஆக்குகிறது. அவன் இழிவான பாவி, மீளா நரகத்தில் பெருநெருப்பில் வாடப் போகிறான் என்று பாதிரிகள் கூறியதை நம்பியிருந்தால், இன்று இருக்கின்ற ஆங்கிலேயனாக அவன் இருந்திருக்க மாட்டான்.

இந்தப் புரோகிதர்களையும் மூட நம்பிக்கைகளையும் மீறி, மானுட வாழ்வில் தெய்வீகம் இருக்கவே செய்கிறது, அது தன்னை நிலைநாட்டத்தான் செய்கிறது—ஒவ்வொரு நாட்டிலும் நான் இதையே காண்கிறேன். நாம் நம்பிக்கையை இழந்து

---

1. மார்க்கண்டேய புராணம், 25 மற்றும் 26-ஆம் அத்தியாயம் பார்க்க.

விட்டோம். ஓர் ஆங்கிலேயனுக்கோ ஆங்கிலப் பெண்ணுக்கோ இருப்பதில் ஆயிரத்திலொரு பங்கு நம்பிக்கைகூட நம்மிடம் இல்லை என்று நான் சொல்வதை உங்களால் நம்ப முடியுமா? வருத்தம் தரக்கூடிய விஷயம்தான்; ஆனால் சொல்வதை என்னால் தவிர்க்க முடியாது. ஆங்கிலேயனோ அல்லது ஆங்கிலப் பெண்ணோ நமது லட்சியங்களை ஏற்றுக்கொண்டால், அதில் மூழ்கி பைத்தியம் போலவே ஆகிவிடுகின்றனர். ஆளும் வர்க்கத்தினராக இருந்தும், சொந்த நாட்டினரின் கோபத்தையும் கேலியையும் பொருட்படுத்தாமல் இந்தியாவிற்கு வந்து நம் மதத்தை நமக்கே போதிக்க அவர்கள் பாடுபடுவதை நீங்கள் பார்க்கவில்லையா? உங்களில் எத்தனை பேர் அவ்விதம் செய்ய முடியும்? உங்களால் ஏன் அவ்வாறு செய்ய முடியாது? அது உங்களுக்குத் தெரியாததா? அவர்களைவிட உங்களுக்கு அதிகம் தெரியும். ஆனால் உங்கள் நன்மைக்குத் தேவையானதைவிட அதிகம் தெரிந்து விட்டது! அதுதான் உங்கள் கஷ்டம்! உங்கள் இயலாமைக்கு ஒரே காரணம் உங்கள் ரத்தம் வெறும் தண்ணீர், உங்கள் மூளை வலுவிழந்துவிட்டது, உடல் பலமற்றுள்ளது! நீங்கள் உடம்பை மாற்றிக்கொள்ள வேண்டும். உடலின் பலவீனம்தான் இதற்குக் காரணம், வேறொன்றும் அல்ல. சீர்திருத்தங்கள், லட்சியங்கள் போன்றவை பற்றியெல்லாம் கடந்த நூறு வருடங்களாக வெறும் பேச்சுப் பேசி வந்திருக்கிறீர்கள். ஆனால் செயல்முறைக்கான வேளை வரும்போது உங்களை எங்கும் காண முடியவில்லை. இதைக் கண்டு உலகமே உங்களை எள்ளி நகையாடுகிறது. சீர்திருத்தம் என்ற பெயரே கேலிக்கூத்தாகிவிட்டது! இதற்கெல்லாம் காரணம் என்ன? காரணம் உங்களுக்குத் தெரியாததா என்ன? நன்றாகவே தெரியும். நீங்கள் பலவீனமாயிருப்பதே இவை அனைத்திற்கும் காரணம். பலவீனம், பலவீனம், உங்கள் உடல் பலவீனமாக இருக்கிறது; உங்கள் மனம் பலவீனமாயிருக்கிறது. உங்களிடமே உங்களுக்கு நம்பிக்கையில்லை.

என் சகோதரர்களே! நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஜாதிக் கொடுமையும், மன்னர் கொடுங்கோன்மையும், அன்னியர் அரசாட்சியும், உங்கள் சொந்த மக்களே உங்களுக்கு இழைத்த கொடுமைகளும் சேர்ந்து உங்கள் பலத்தையெல்லாம் பிழிந்தெடுத்து விட்டன. உங்கள் முதுகெலும்பு உடைந்து, வெறும் புழுக்கள் போலாகிவிட்டீர்கள். யார் உங்களுக்கு வலிமை தருவார்கள்? வலிமை,

வலிமைதான் நமக்கு இப்போது தேவை. வலிமை பெறுவதற்கான முதற்படி உபநிடதங்களை அடைந்து 'நான் ஆன்மா' என்று நம்புவதுதான். 'என்னை வாள் வெட்டாது, ஆயுதங்கள் துளைக்காது, நெருப்பு எரிக்காது, காற்று உலர்த்தாது, நான் எல்லாம் வல்லவன், நான் எல்லாம் அறிந்தவன்'—நம்மைக் காப்பாற்றக்கூடிய இந்த மங்கலமயமான வார்த்தைகளை மீண்டும்மீண்டும் சொல்லுங்கள். நம்மைப் பலவீனர்களென்று சொல்லாதீர்கள். நாம் எதையும் செய்ய முடியும். நம்மால் எதைத்தான் சாதிக்க முடியாது! எல்லாமே நம்மால் முடியும். அந்த மகத்தான ஆன்மா நம் அனைவருக்குமே உள்ளது என்பதை நம்புவோம். நசிகேதன் கொண்டதைப் போன்ற நம்பிக்கை கொள்ளுங்கள். அவனது தந்தை செய்த யாகத்தின் போது அவனுக்கு நம்பிக்கை பிறந்தது.[1] அத்தகைய நம்பிக்கை உங்கள் ஒவ்வொருவருக்கும் வர வேண்டுமென நான் விரும்புகிறேன். அப்போது நீங்கள் ஒவ்வொருவரும் மகத்தான சக்தி பெற்று உலகத்தையே அசைக்கக்கூடிய பரந்த அறிவைப் பெறுவீர்கள்; எல்லா விதத்திலும் எல்லையற்ற கடவுளாகவே ஆவீர்கள். நீங்கள் அப்படி ஆக வேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன். இத்தகைய வலிமையே நீங்கள் உபநிடதங்களிலிருந்து பெறுவது, இத்தகைய நம்பிக்கையே உபநிடதங்கள் நமக்கு அளிப்பவை.

ஆனால் உபநிடதங்கள் துறவிகளுக்கு மட்டுமே அல்லவா உரியவை! அவை ரகசியமானவை ஆயிற்றே! அவை துறவிகளின் கைகளில் அல்லவா உள்ளன! அவர்களும் காடுகளில் வசிக்கிறார்கள்! சங்கரர் ஏதோ சிறிது கருணை உடையவராக இருந்தார், இல்லறத்தார்களும் உபநிடதங்களைப் படிக்கலாம், அவை அவர்களுக்கு, நல்லதே செய்யும், தீங்கு செய்யாது என்றார். ஆனாலும் அவை துறவியின் வன வாழ்க்கையைப்பற்றி மட்டுமே சொல்கின்றன என்றுதான் மக்கள் எண்ணினார்கள். ஆனால் நான் முன்னர் உங்களுக்குக் கூறியதுபோல் வேதங்களுக்கு அதிகாரபூர்வமான ஒரே விளக்கத்தை, வேதத்தை ஊக்குவித்தவரான ஸ்ரீகிருஷ்ண பகவானே எல்லா காலத்திற்குமாக, முடிந்த முடிவாகக் கீதையில் அருளியிருக்கிறார். எந்தத் தொழில் செய்பவராயினும் எல்லோருக்கும் உபநிடதங்கள் பொதுவானவை. வேதாந்தத்தின் இந்தக் கருத்துக்கள் வெளிவந்தாக வேண்டும்,

---

1. ச்ரத்தாவிவேச । —கடோபநிடதம், 1. 1. 1,2.

காட்டில் மட்டும் இருந்தால் போதாது, குகைகளில் மட்டும் இருந்தால் போதாது. அவை வெளிவந்து வழக்கறிஞர் சபை களிலும், வழிபாட்டு மேடைகளிலும், ஏழையின் குடிசையிலும், மீன் பிடிக்கும் மீனவரிடமும், படிக்கின்ற மாணவரிடமும் செயல்பட்டாக வேண்டும். அவர்களின் தொழில் எதுவாகவும் இருக்கட்டும், அவர்கள் எங்கு வேண்டுமானாலும் வசிக்கட்டும்; ஆண் பெண் குழந்தை என்று அவர்கள் அனைவரையும் அவை கூவி அழைக்கின்றன. பயம் எதற்கு?

மீனவர்களும் பிறரும் எப்படி இந்த உபநிடத லட்சியங் களை வாழ்க்கையில் கடைப்பிடிக்க முடியும்? அதற்கு வழி காட்டப்பட்டுள்ளது. அது எல்லையற்றது, மதம் எல்லையற்றது, அதைக் கடந்து யாரும் செல்ல முடியாது. நீங்கள் சிரத்தையுடன் அதற்காக எதைச் செய்தாலும் அது உங்களுக்கு நன்மையே தரும். சிறு அளவில் ஆனாலும் சிரத்தையுடன் செய்தால், அது அற்புதமான பலன்களை அளிக்கும். ஆதலால் ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற அளவு சிறிதேனும் முயற்சி செய்யட்டும். மீனவன் தன்னை ஆன்மாவென நினைத்தால், சிறந்த மீனவன் ஆவான். மாணவன் தன்னை ஆன்மாவென நினைத்தால், சிறந்த மாணவன் ஆவான். வக்கீல் தன்னை ஆன்மாவென நினைத்தால் சிறந்த வக்கீலாவான். இவ்விதமே எல்லோரும். இதன் விளை வாக ஜாதிகள் என்பவை என்றென்றைக்கும் இருக்கும். சமுதாயத் தின் இயல்பே குழுக்களாகப் பிரிவதுதான். எனவே ஜாதிகள் இருக்கும். ஆனால் சில பிரிவினருக்கான தனிச் சலுகைகள் போய்விடும்!

ஜாதி என்பது இயல்பான ஒன்று. சமுதாய வாழ்வில் நான் ஒரு தொழில் செய்யலாம்; நீங்கள் வேறொன்று செய்ய லாம். நீங்கள் அரசாளலாம், நான் செருப்பு தைக்கலாம். ஆனால் அதன் காரணமாக நீங்கள் உயர்ந்தவர் என்று சொல்ல முடியாது. ஏனெனில் உங்களால் செருப்பு தைக்க முடியுமா? இல்லை, என்னால்தான் நாட்டை ஆள முடியுமா? நான் செருப்பு தைப் பதில் வல்லவனாய் இருக்கலாம்; நீங்கள் வேதம் படிப்பதில் நிபுணனாக இருக்கலாம். ஆனால் அதன் காரணமாக நீங்கள் என் மீது ஏன் ஏறி மிதிக்க வேண்டும்? ஒருவன் கொலை செய் தால்கூட அவனைப் புகழ வேண்டுமாம், மற்றொருவன் ஓர் ஆப்பிளைத் திருடினாலும் அவனைத் தூக்கிலிட வேண்டுமாம். இவை ஒழிய வேண்டும். ஜாதிகள் நல்லது. வாழ்க்கையை இயல் பாகக் கையாள்வதற்கான வழி அது ஒன்றுதான். மனிதர்கள்

குழுக்களாகப் பிரிந்துதான் வாழ முடியும், அதை யாரும் மாற்ற முடியாது. நீங்கள் எங்கு சென்றாலும் ஜாதிகள் இருக்கவே செய்யும். ஆனால் அதன் காரணமாக யாருக்கும் தனிச் சலுகை இருக்க வேண்டும் என்பதில்லை. இந்தத் தனிச் சலுகைகளின் தலையிலடித்து அவற்றை ஒழிக்க வேண்டும். ஒரு மீனவனுக்கு வேதாந்தம் கற்பித்தோமானால் அவன், 'உன்னைப் போலவே நானும் நல்லவன், நான் மீன் பிடிப்பவன், நீ தத்துவவாதி. ஆனால் உன்னில் போலவே என்னிலும் கடவுள் இருக்கிறார்' என்று கூறுவான். யாருக்கும் தனிச்சலுகையில்லை, எல்லோருக்கும் சம வாய்ப்புக்கள்; இதுவே நமக்கு வேண்டும். தெய்வீகம் ஒவ்வொருவரின் உள்ளே இருக்கிறது என்பதை அவர்களுக்குக் கற்பியுங்கள். பின்னர் அவர்களே தங்கள் முக்திக்கு வழி தேடிக் கொள்வார்கள்.

சுதந்திரமே வளர்ச்சிக்கான முதல் நிபந்தனை. 'இந்தப் பெண் அல்லது அந்தக் குழந்தையின் முன்னேற்றத்திற்கு நான் வழி வகுப்பேன்' என்று யாராவது சொல்லத் துணிவானானால் அது தவறு. முற்றிலும் தவறு. விதவைகளின் பிரச்சினைபற்றியும், பெண்கள் நிலையைப் பற்றியும் எனது கருத்து என்ன என்று என்னை மீண்டும்மீண்டும் கேட்கிறார்கள். அவற்றிற்கான பதிலை இப்போது ஒரேயடியாகக் கூறிவிடுகிறேன்—நான் என்ன விதவையா, பெண்ணா? என்னிடம் இந்த அசட்டுக் கேள்விகளைத் திரும்பத்திரும்பக் கேட்கிறீர்களே! பெண்களின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு நீங்கள் யார்? விதவைகளையும் பெண்களையும் ஆள்வதற்கு நீங்கள் என்ன எல்லாம் வல்ல கடவுளா? விலகி நில்லுங்கள்! அவர்கள் தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்வார்கள். கொடுங்கோலர்களே, ஒருவருக்கு வேண்டிய அனைத்தையும் நீங்கள் செய்ய முடியுமென்று நினைக்கிறீர்களே! விலகி நில்லுங்கள்! இறைவன் எல்லோரையும் பார்த்துக்கொள்வார். எல்லாம் தெரியும் என்று நினைப்பதற்கு நீங்கள் யார்? பொய்யர்களே, கடவுள் மீதும் அதிகாரம் செலுத்த முடியுமென்று நினைக்க எப்படித் துணிந்தீர்கள்? ஒவ்வொரு ஜீவனும் அந்தப் பரமாத்மாவின் அம்சம் என்பது உங்களுக்குத் தெரியாதா? உங்கள் வேலையைப் பாருங்கள். உங்கள் கர்மங்களே கொட்டிக் கிடக்கின்றன, அதைத் தீர்ப்பதற்கான வழியைப் பாருங்கள். உங்கள் நாடு உங்களை உயர்ந்த பீடத்தில் வைத்துப் பெருமைப்படுத்தலாம்; உங்கள் சமுதாயம் உங்களை வானளாவப் புகழலாம்; அறிவற்ற மூடர்கள்

உங்களைப் பாராட்டலாம். ஆனால் ஆண்டவன் ஒருபோதும் உறங்குவதில்லை, இம்மையிலோ மறுமையிலோ வினைப்பயன் தொடர்ந்தே தீரும்.

ஆண், பெண், குழந்தை ஒவ்வொருவரையும் கடவுளாகப் பாருங்கள். நீங்கள் யாருக்கும் உதவி செய்ய முடியாது, சேவை தான் செய்ய முடியும். பகவானுடைய குழந்தைகளுக்குச் சேவை செய்யுங்கள். உங்களுக்கு அந்தப் பேறிருந்தால், அதன்மூலம் ஆண்டவனுக்கும் சேவை செய்தவர்கள் ஆவீர்கள். தன் குழந்தைகளுள் ஒருவருக்கேனும் உதவும் பேற்றை ஆண்டவன் உங்களுக்கு அளிப்பானானால் நீங்கள் அருள் பெற்றவர்கள்! உங்களைப்பற்றிப் பெரிதாக எண்ணிக் கொள்ளாதீர்கள். மற்றவர்களுக்குக் கிடைக்காமல் இந்த வாய்ப்பு உங்களுக்குக் கிடைத்தது பெரும் பேறு! இந்தச் சேவையே இறைவனின் வழிபாடு எனச் செய்யுங்கள். ஏழைகளிடம் கடவுளைக் காணுங்கள், உங்கள் முக்திக்காகவே அவர்களிடம் சென்று அவர்களை வழிபடுங்கள். ஏழைகளும் துன்பப்படுபவர்களும் நமது முக்திக்காகவே உள்ளனர். அதற்காகவே பகவானும் நோயாளியாக, பைத்தியமாக, தொழுநோயாளியாக, பாவியாக நம் முன் வருகிறார். எனது வார்த்தைகள் தைரியமானவை. மீண்டும் சொல்கிறேன்— இந்த உருவங்களில் கடவுளை வழிபட நமக்கு வாய்ப்புக் கிடைத்தது பெறற்கரிய பேறாகும். பிறர்மீது அதிகாரம் செலுத்துவதன் மூலம் அவர்களுக்கு நீங்கள் நன்மை செய்ய முடியும் என்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள். ஒரு செடிக்குச் செய்யக்கூடிய அளவுதான் நீங்கள் ஒருவருக்கு உபகாரம் செய்ய முடியும். விதை முளைத்து வளர்வதற்கான மண், தண்ணீர், காற்று முதலியவற்றை நீங்கள் கொடுக்கலாம். ஆனால் இவற்றை அது தன் இயல்பின்படிதான் ஏற்றுக்கொள்ளும், தன் இயல்பின் படியே ஜீரணித்து வளரவும் செய்யும்.

ஒளி! ஒளியைக் கொண்டு வாருங்கள். உலகின் மீது எல்லா ஒளியையும் பாய்ச்சுங்கள். ஒவ்வொருவரையும் இந்த ஒளி அடையட்டும்! ஒவ்வொருவரும் கடவுளை அடையும்வரை இந்தப் பணி முடிவடையாது. ஏழைகளுக்கு இந்த ஒளியை அளியுங்கள். அதைவிட அதிகமாக பணக்காரர்களுக்குக் கொடுங்கள், ஏனெனில் அவர்களுக்கு இது ஏழைகளைவிட அதிகமாகத் தேவை. கல்லாதவர்களுக்கு இந்த ஒளியை அளியுங்கள். அவர்களைவிட அதிகமாக, கற்றவர்களுக்குக் கொடுங்கள். ஏனெனில் அவர்கள் தற்காலப் படிப்பினால் ஆணவம் தலைக்கேறிக்

கிடக்கிறார்கள். இவ்விதம் எல்லோருக்கும் ஒளி கொடுங்கள், மீதியை இறைவனிடம் விட்டுவிடுங்கள். ஏனெனில் அதே இறைவன், 'வேலை செய்ய மட்டுமே உனக்கு உரிமை உள்ளது, பயன்களில் அல்ல' என்றல்லவா கூறியுள்ளார். உனது வேலை உனக்குப் பலனளிக்க வேண்டாம். அதற்காக வேலை செய்யாமலும் இருக்காதே.

யுகயுகங்களுக்கு முன்னரே இத்தகைய மகத்தான கருத்துக்களை நம் முன்னோர்களுக்கு அளித்த அந்த இறைவன், அவற்றை வாழ்க்கையில் செயல்படுத்துவற்கான ஆற்றலை நமக்கு அளிப்பானாக! ❑

# 7. இந்தியாவின் எதிர்காலம்

பிப்ரவரி 14 மாலை, ஹார்ம்ஸ்டன் சர்க்கஸ் வளாகம்

உலகில் வேறெந்த நாட்டையும் அறிவு என்பது தன் இருப்பிடமாகக் கொள்ளுமுன் குடிபுகுந்த தாயகம் நமது புராதன பாரதம். கடல்போல் பொங்கிப் புரண்டோடுகின்ற பேராறுகளும், அடுக்கடுக்காய் உயர்ந்தெழுந்த சிகரங்கள்மீது பனிமுடி தரித்து, ஏதோ வானுலக ரகசியங்களை எட்டிப்பார்க்க விழைவதுபோல் விண்முட்ட நிற்கின்ற நிலையான இமயமலைத் தொடர்களும் அதன் ஆன்மீக மாட்சிமையைப் புறத்தில் காட்டுவதுபோல் உள்ளது. இதுவரை வாழ்ந்தவர்களுள் மகத்தான ரிஷிகளின் திருப்பாதங்கள் இதோ இந்த பாரத மண்ணில்தான் நடைபோட்டன. மனிதனின் இயல்பு பற்றியும் அகவுலகம் பற்றியும் இங்குதான் முதலில் ஆராய்ச்சிகள் தொடங்கின. ஆன்மாவின் அமரத்துவம், அனைத்தையும் ஆட்சிபுரிகின்ற கடவுள், இயற்கையிலும் மனிதனிலும் ஊடுருவி நிற்கின்ற இறைவன் போன்ற கோட்பாடுகள் இங்குதான் முதலில் எழுந்தன. இங்குதான் மதம் மற்றும் தத்துவத்திலுள்ள மிகவுயர்ந்த லட்சியங்கள் உச்ச நிலைகளை எட்டின. இந்த நாட்டிலிருந்து தான் ஆன்மீகமும் தத்துவமும் அலைபோல் மீண்டும்மீண்டும் பாய்ந்து சென்று உலகை ஆக்கிரமித்தது. நலிந்து கொண்டிருக்கின்ற மனித குலத்திற்கு உயிரையும் உத்வேகத்தையும் ஊட்டுவதற்கு இந்தப் பூமியில் இருந்துதான் மறுபடியும் அலைகள் புறப்பட்டுச் சென்றாக வேண்டும். நூற்றுக்கணக்கான அன்னியர் படையெடுப்புகளும், நூற்றுக்கணக்கான பழக்க வழக்கங்களின் காரணமாக எழுந்த புரட்சிகளும் பல நூற்றாண்டுகளாக ஏற்படுத்திய அதிர்ச்சிகளை ஏற்றும் நிலைகுலையாமல் நிற்பதும் அதே இந்தியாதான். என்றும் குன்றாத சக்தியுடன், அழியாத வாழ்வுடன் உலகின் எந்தப் பாறையை விடவும் உறுதியாக இருப்பது அதே நாடுதான். ஆன்மாவைப்போல், நமது நாடும் தோற்றமும் முடிவும் இல்லாததாக நித்தியமானதாக உள்ளது. இத்தகைய நாட்டின் அருமைக் குழந்தைகள் நாம்.

இந்தியாவின் குழந்தைகளே, சில செயல்முறை விஷயங் களைப்பற்றிப் பேசுவதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன். கடந்த காலப் பெருமைகளை உங்களுக்கு நான் நினைவுபடுத்து வதன் காரணம் இதுதான். கடந்த காலத்தை நினைத்துப் பார்ப்பது சீரழிவிற்கே வழிவகுக்கும், அது வெறும் வீண்வேலை; எனவே நாம் எதிர்காலத்தைப்பற்றி எண்ண வேண்டும் என்று பலர் கூறக் கேட்டதுண்டு. உண்மைதான்.

ஆனால் கடந்த காலத்திலிருந்துதான் எதிர்காலம் உருவாகிறது. எனவே உங்களால் எவ்வளவு முடியுமோ அந்த அளவு திரும்பிப் பாருங்கள். பின்னால் உள்ள வற்றாத அந்த ஊற்றுக்களிலிருந்து நன்றாகப் பருகுங்கள். அதன்பின்னர் முன்னே பாருங்கள். பீடுநடை போட்டுச் செல்லுங்கள். பாரதத்தை முன்பிருந்ததைவிட ஒளிமயமானதாக, சிறப் பானதாக, உன்னதமானதாக உருவாக்குங்கள். நம் முன்னோர் கள் மகத்தானவர்களாக இருந்தார்கள். முதலில் அதை நினைத்துப் பார்க்க வேண்டும்; நாம் எதனால் ஆக்கப் பட்டிருக்கிறோம், நமது ரத்தக் குழாய்களில் ஓடுகின்ற ரத்தம் எது என்பதை அறிய வேண்டும், அந்த ரத்தத்தில் நாம் நம்பிக்கைகொள்ள வேண்டும். பழங்காலத்தில் நமது முன்னோர்கள் மகத்தான காரியங்களைச் செய்திருக்கிறார்கள் என்பதிலும் நம்பிக்கை வைக்க வேண்டும். அந்த நம்பிக்கை யிலிருந்தும், பழம்பெருமையைப் பற்றிய உணர்விலிருந்தும் முன்னைவிடச் சிறப்பானதொரு இந்தியாவை நாம் உருவாக்க வேண்டும்.

வீழ்ச்சியும் அழிவும் உள்ள காலகட்டங்களும் வரலாற் றில் இருக்கவே செய்தன. நான் அவைகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதில்லை; அவை நம் எல்லோருக்கும் தெரிந்த விஷயமும்தான். அத்தகைய காலகட்டங்களும் தேவை யாகவே இருந்தன. ஒரு பெரிய மரத்தில் அழகிய பழம் ஒன்று பழுக்கிறது. அந்தப்பழம் பூமியில் வீழ்ந்து கெட்டு அழுகு கிறது. அந்த அழுகலிலிருந்துதான் எதிர்கால மரத்திற்கான முளை வருகிறது, ஒருவேளை இந்த மரம் முதல் மரத்தைவிடப் பெரியதாகக்கூட இருக்கலாம். எனவே நாம் கடந்து வந்த வீழ்ச்சியும் அழிவும் நிறைந்த காலகட்டமும் மிகவும் தேவையே. இந்த வீழ்ச்சியிலிருந்துதான் எதிர்கால இந்தியா பிறக்கும். அது முளைவிட்டுக் கொண்டிருக்கிறது, அதன் முதல் தளிர்கள் ஏற்கனவே வெளிவந்துவிட்டன, ஒரு மாபெரும் மரமான

'ஊர்த்வமூலம்'[1] வளரத் தொடங்கி விட்டது. அதைப்பற்றித் தான் நான் இன்று உங்களிடம் பேச உள்ளேன்.

இந்தியாவின் பிரச்சினைகள் மற்ற எந்த நாட்டுப் பிரச்சினைகளைவிட மிகவும் சிக்கலானதும் முக்கியமானதும் ஆகும். இனம், மதம், மொழி, அரசாங்கம் இவை எல்லாம் சேர்ந்து ஒரு நாட்டை உருவாக்குகின்றன. உலகத்தின் ஒவ்வோர் இனத்தையும் இந்த நாட்டுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். அந்த நாடுகளை உருவாக்கிய அடிப்படைகள் இந்த நாட்டை உரு வாக்கியவற்றைவிட மிகவும் குறைவாகவே இருக்கும். ஆரியர், திராவிடர், தார்த்தர், துருக்கியர், மொகலாயர், ஐரோப்பியர் என்று உலகத்தில் உள்ள எல்லா இனங்களின் ரத்தமும் இங்கே இந்தப் பூமியில் கலந்திருப்பதுபோல் தோன்றுகிறது. மொழி களில்கூட இங்கே அற்புதமான கலப்பு உள்ளது. பழக்க வழக்கங் களைப் பொறுத்தவரை, இரு இந்திய இனங்களுக்கிடையே உள்ள வேறுபாடு ஐரோப்பியர்களுக்கும் கீழை இனங்களுக்கும் உள்ள வேறுபாடுகளைவிட அதிகமாக உள்ளன.

நமது பொதுவான அடிப்படை, நமது புனிதமான பாரம் பரியம் நமது மதம்தான். அது ஒன்றுதான் நமக்குப் பொதுவாக உள்ள அடித்தளம். அதன்மீதுதான் கட்டிடத்தை எழுப்ப வேண்டும். ஐரோப்பாவில் அரசியல் கொள்கைகள் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்குகின்றன. ஆசியாவில் மத லட் சியங்கள் தேசிய ஒருமைப்பாட்டை உருவாக்குகின்றன. எனவே எதிர்கால இந்தியாவிற்கு நிறைவேற்றப்பட வேண்டிய முதல் நிபந்தனை மத ஒற்றுமை. இந்த நாடு முழுவதும் ஒரேயொரு மதம் அங்கீகரிக்கப்பட வேண்டும். ஒரு மதம் என்பதன்மூலம் நான் எதைக் குறிப்பிடுகிறேன்? கிறிஸ்தவர்களோ முகமதியர் களோ பௌத்தர்களோ கருதுகின்ற பொருளிலுள்ள ஒரு மதத்தை அல்ல. நம்மிடையே உள்ள மதப் பிரிவுகள் பல்வேறு விதமான முடிவுகளைக் கொண்டிருக்கின்றன, வேறுபட்ட உரிமைகளைக் கொண்டிருக்கின்றன. எனினும் அவை எல்லா வற்றிற்கும் பொதுவாகச் சில விஷயங்கள் உள்ளன. இந்தப் பொது விஷயங்களாகிய எல்லைக்குள் நமது மதம் அற்புதமான

---

1. சம்சாரத்தை அதாவது இந்த உலகை ஊர்த்வ மூலமரமாக, அதாவது, வேர் மேலேயும் கிளைகள் கீழேயும் உள்ள ஒன்றாகப் பேசுகிறது பகவத்கீதை(15.1). பிரம்மத்தைத் தனது வேராகக் கொண்ட உலகம் என்பது இதன் பொருள். ஆன்மீகத்தை வேராகக் கொண்ட பாரதத்தை இங்கே சுவாமிஜி அதற்கு ஒப்பிடுகிறார்.

வேறுபாடுகளை அனுமதிக்கிறது; நம் சொந்த வாழ்க்கையைச் சிந்திக்கவும் நடத்தவும் அளவற்ற சுதந்திரத்தை அளிக்கிறது. நமது மதத்தின், உயிரோட்டத்தை அளிப்பதான இந்தப் பொதுக் கருத்துக்களை வெளியே கொண்டுவர வேண்டும், ஆண், பெண், குழந்தை என்று இந்த நாடு முழுவதிலும் உள்ள ஒவ்வொருவரும் அவற்றை அறிய வேண்டும், புரிந்துகொள்ள வேண்டும், புரிந்துகொண்டதைத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும். இதுவே நாம் வேண்டுவது. இங்குள்ள நம் அனைவருக்கும், குறைந்தபட்சம் நம்முள் சிந்திக்கும் திறன் உள்ளவர்களுக்காவது இது தெரியும். இதுதான் முதற்படி, எனவே அதனை முதலில் செய்து முடிக்க வேண்டும்.

ஆசியாவில், குறிப்பாக இந்தியாவில் இனப் பிரச்சினைகள், மொழிப் பிரச்சினைகள், சமுதாயப் பிரச்சினைகள், தேசியப் பிரச்சினைகள் எல்லாமே, எவ்வாறு மதத்தின் ஒருங்கிணைக் கின்ற சக்தியின் முன்னால் மறைந்து விடுகின்றன என்பதை நாம் காண்கிறோம். இந்திய மனத்தைப் பொறுத்தவரை மத லட்சியங்களைவிட உயர்ந்தது எதுவும் இல்லை; அதுவே இந்திய வாழ்வின் அடிப்படை அம்சம், அதன்மூலம்தான் மிக வும் குறைவான எதிர்ப்புக்களோடு நாம் வேலை செய்ய முடியும். மத லட்சியமே மிகவுயர்ந்த லட்சியம் என்பது உண்மை மட்டும் அல்ல, இந்தியாவைப் பொறுத்தவரையில் செயல் புரிவதற்கான ஒரே வழி இதுதான். இதை பலப்படுத்திக் கொள்ளாமல் மற்ற எந்த வழியிலாவது வேலை செய்து பாருங்கள், முடிவு விபரீத மாகவே இருக்கும்.

எனவே எதிர்கால இந்தியாவை உருவாக்குவதற்கான முதல் முயற்சி, யுகயுகங்களாக உறுதியாக இருக்கின்ற அந்தப் பாறை யைக் குடைந்து பெற வேண்டிய முதல் படி, மத ஒற்றுமை ஆகும். இந்துக்களாகிய நாம் கற்றுக்கொள்ள வேண்டிய ஒன்று உண்டு: துவைதிகள், விசிஷ்டாத்வைதிகள், அத்வைதிகள் ஆகட்டும், இல்லை மற்ற பிரிவுகளான சைவர்கள், வைண வர்கள், பாசுபதர்கள் என்று நாம் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர் களாக இருந்தாலும், இந்துக்களாகிய நம் அனைவருக்கும் அடிப்படையான சில கருத்துக்கள் உள்ளன. நமது நன்மைக் காகவும் நம் இனத்தின் நன்மைக்காகவும் நம்மிடையே உள்ள சின்னஞ்சிறு சச்சரவுகளையும் வேற்றுமைகளையும் விடுவதற் கான வேளை வந்துவிட்டது. இந்தச் சண்டைகள் எல்லாம் முற்றிலும் தவறானவை என்பதில் உறுதி கொள்ளுங்கள்.

அவை நம் சாஸ்திரங்களால் கண்டிக்கப்பட்டிருக்கின்றன, நம் முன்னோர்களால் தடுக்கப்பட்டிருக்கின்றன. எந்த மாமனிதர் களை நாம் நமது முன்னோர்கள் என்று உரிமை கொண்டாடு கிறோமோ, யாருடைய ரத்தம் நம் ரத்தக் குழாய்களில் ஓடுகிறதோ, அவர்கள், தங்கள் குழந்தைகளான நாம் சிறுசிறு வேறுபாடுகளுக்காக அடித்துக் கொள்வதைக் கண்டு நம்மை வெறுப்புடன் பார்க்கின்றனர்.

இந்தச் சண்டைகளை விட்டுவிட்டால் போதும், மற்ற எல்லா முன்னேற்றங்களும் வரும். ரத்தம் புஷ்டியாகவும் தூய்மை யாகவும் இருக்குமானால் நோய்க் கிருமிகள் எதுவும் அந்த உடம்பில் வாழ முடியாது. நமது ஜீவ ரத்தம் ஆன்மீகம். அது தெளிவாக ஓடுமானால், புஷ்டியாக தூய்மையாக உத்வேகத் துடன் ஓடுமானால் எல்லாம் சரியாக இருக்கும். அந்த ரத்தம் தூய்மையாக இருக்குமானால் அரசியல், சமுதாயம், மற்ற பொருளாதாரக் குறைபாடுகள் எல்லாம் சீர் செய்யப்பட்டு விடும், ஏன், நாட்டின் வறுமைகூடத் தீர்க்கப்பட்டுவிடும். ஏனென்றால் நோய்க்கிருமி வெளியே எறியப்பட்டுவிடுமானால், வேறெதுவும் ரத்தத்தில் கலக்க முடியாது.

தற்கால மருத்துவத்திலிருந்து ஓர் உவமையை எடுத்துக் கொள்வோம். நோய் உண்டாக இரண்டு காரணங்கள் இருந் தாக வேண்டும்: ஒன்று வெளியிலுள்ள நச்சுக் கிருமி, மற் றொன்று உடம்பின் நிலைமை. உடம்பு அந்தக் கிருமிகளை உள்ளே அனுமதிக்கும் நிலையில் இருக்காதவரை, உடம்பின் எதிர்க்கும் சக்தி குறைவாகி, அதனால் அந்தக் கிருமிகள் உடம் பினுள் நுழைந்து செழித்துப் பெருகுகின்ற ஒரு நிலை உரு வாகாதவரை, எந்தக் கிருமிக்கும் உடம்பினுள் ஒரு நோயை உண்டாக்குகின்ற சக்தி இல்லை. உண்மையில் ஒவ்வொரு நாளும் லட்சக்கணக்கான கிருமிகள் நம் எல்லோருடைய உடம்பு வழி யாகவும் தொடர்ந்து வந்துபோய்க் கொண்டிருக்கின்றன. ஆனால் உடம்பு ஆரோக்கியமாக இருக்கும்வரை அவற்றைப் பற்றிய உணர்வே ஏற்படுவதில்லை. உடம்பு பலவீனமாகும் போது மட்டுமே இந்தக் கிருமிகள் உடம்பைப்பற்றிக் கொண்டு நோயை உண்டாக்குகின்றன. தேசிய வாழ்வின் விஷயமும் இது போன்றதுதான். தேசிய உடல் பலவீனமாக இருக்கும்போது தான் அரசியல், சமுதாயம், கல்வி, அறிவு போன்ற எல்லா நிலைகளிலும் எல்லா வகையான நோய்க் கிருமிகளும் ஆக்கிர மித்து நோய்களை உண்டாக்குகின்றன. இதைக் குணமாக்க

வேண்டுமானால் நோயின் வேருக்கே செல்ல வேண்டும், ரத்தத்திலுள்ள எல்லா அசுத்தங்களையும் நீக்க வேண்டும். நாம் செய்ய வேண்டுவதெல்லாம் மனிதனைப் பலப்படுத்துவதும், ரத்தத்தைத் தூய்மையாக்குவதும், வெளியேயிருந்து வருகின்ற விஷங்களை எதிர்த்து அவற்றை வெளியில் தள்ளவல்லதாக உடம்பை வலிமை பெறச் செய்வதும்தான்.

நமது பலமும் நமது உத்வேகமும் மட்டுமின்றி, நம் தேசிய வாழ்வும் மதத்தில்தான் இருக்கிறது என்பதைப் பார்த்தோம். இப்படி நாட்டின் ஆதாரமே மதத்தில் இருப்பது சரியா தவறா, காலப்போக்கில் அதனால் நன்மை விளையுமா விளையாதா என்பதைப் பற்றியெல்லாம் நான் பேசப்போவதில்லை. ஆனால் நல்லதற்கோ கெட்டதற்கோ அது அங்கே இருக்கிறது. நீங்கள் அதிலிருந்து விலகி ஓட முடியாது. இன்றைக்கும் என்றென்றைக்குமாக நீங்கள் அதைப் பெற்றிருக்கிறீர்கள். எனக்கு நமது மதத்தில் உள்ளது போன்ற நம்பிக்கை உங்களுக்கு இல்லை என்றாலும் நீங்கள் அதனுடன்தான் வாழ்ந்தாக வேண்டும். அதனுடன் நீங்கள் கட்டப்பட்டு இருக்கிறீர்கள், அதை விட்டு விலகினால் தூள் தூளாகி விடுவீர்கள். அதுதான் நம் இனத்தின் ஜீவாதாரம், அதை நாம் பலப்படுத்த வேண்டும். அந்த மதம் என்பதை மிகுந்த அக்கறையுடன் பேணிக் காத்ததால்தான், வேறு எல்லாவற்றையுமே அதற்காகத் தியாகம் செய்ததால்தான் பல நூற்றாண்டுகளாக வந்த அதிர்ச்சிகளை எல்லாம் உங்களால் தாங்கிக்கொள்ள முடிந்தது.

உங்கள் முன்னோர் அதைக் காப்பதற்கு எல்லா துன்பங்களையும், ஏன், சாவையும்கூடத் தைரியமாகச் சந்தித்தார்கள். அன்னியர் படைகள் நமது கோயில்கள் ஒவ்வொன்றையும் தரைமட்டமாக்கின. ஆனால் அந்த அலை ஓய்ந்ததுமே கோயில்களும் கோபுரங்களும் மீண்டும் எழுந்தன. தென்னிந்தியாவின் இத்தகைய சில புராதனமான கோயில்களும், குஜராத்தின் சோமநாதர் கோயில் போன்றவையும் எத்தனையெத்தனையோ விஷயங்களை உங்களுக்கு உணர்த்த முடியும்; உங்கள் இனத்தின் சரித்திரத்தைப்பற்றி அடுக்கடுக்கான நூல்கள் கூறுவதைவிட ஆழ்ந்த விஷயங்களைத் தர முடியும். நூற்றுக்கணக்கான தாக்குதல்களின் அடையாளங்கள் இந்தக் கோயில்களில் உள்ளன, நூற்றுக்கணக்கான முறையும் அவை புதுப்பிக்கப்பட்டன. தொடர்ந்து அவை அழிக்கப்பட்டன. அந்த அழிவிலிருந்து மீண்டும் முன்னைவிடப் புதுமையோடும் வலிமையோடும்

எழுந்து நின்றுள்ளன அந்தக் கோயில்கள்! இதுதான் நம் தேசிய சிந்தனை, தேசிய வாழ்க்கை நீரோட்டம். அதைப் பின் பற்றிச் செல்லுங்கள், அது உங்களைப் பெருமைக்கு அழைத்துச் செல்லும். அதை விடுங்கள், நீங்கள் அழிந்து விடுவீர்கள், சாவு தான் அதன் ஒரே விளைவு. வாழ்க்கை நீரோட்டத்தை விட்டு நீங்கள் விலகுகின்ற அந்தக் கணமே அழிவு உங்களைப் பற்றிக் கொள்ளும். மற்ற எதுவும் தேவையில்லை என்று நான் சொல்ல வில்லை; அதாவது அரசியலோ சமூக முன்னேற்றங்களோ தேவையற்றவை என்பதல்ல நான் சொன்னதன் பொருள். நான் சொல்வதெல்லாம், மதம் முதன்மையானது, மற்றவையெல்லாம் அதற்கு அடுத்தபடி என்பதுதான். இந்திய மனம் மற்ற எதை விடவும் மதத்தைச் சார்ந்தது. எனவே அதை வலுப்படுத்தியாக வேண்டும். அதை எப்படிச் செய்வது?

என் கருத்துக்களை உங்கள் முன் வைக்கிறேன். இந்தக் கருத்துக்கள் நெடுங்காலமாக, நான் சென்னையிலிருந்து அமெரிக்கா புறப்படும் முன்னரே என் மனத்தில் இருந்தன. நான் இங்கிலாந்திற்கும் அமெரிக்காவுக்கும் சென்றதெல்லாம் இந்தக் கருத்துக்களைப் பரப்புவதற்காகவே. சர்வமத மகா சபையைப்பற்றியோ வேறு எதைப்பற்றியோ எனக்கு அக்கறை யில்லை, அது ஒரு வாய்ப்பாக இருந்தது, அவ்வளவுதான். ஆனால் உண்மையில் எனது இந்தக் கருத்துக்களே என்னை உலகம் முழுவதும் வலம்வரச் செய்தன.

என் எண்ணம் இது: நமது நூல்களில் புதைந்து கிடக்கின்ற, மடங்களிலும் காடுகளிலும் மறைந்தேவிட்டதுபோல் ஏதோ சிலரின் சொத்தாக இருக்கின்ற ஆன்மீகப் பொக்கிஷங்களை முதலில் வெளியே கொண்டுவர வேண்டும். அந்த ஏதோ சில ரின் கைகளிலிருந்து மட்டுமல்ல, அவை பாதுகாத்து வைக்கப் பட்டுள்ள, அணுகமுடியாத கவசம் போலுள்ள அந்த மொழி யிலிருந்து, நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வளமை பெற்று வந்துள்ள சம்ஸ்கிருத வார்த்தைகளிலிருந்து வெளியே கொண்டு வர வேண்டும். ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால் இந்தக் கருத்துக்களைப் பிரபலமாக்க வேண்டும். இந்தக் கருத்துக் களை வெளியே கொண்டுவர நான் விரும்புகிறேன். சம்ஸ்கிருதம் தெரிந்தவர்களோ தெரியாதவர்களோ, இந்தக் கருத்துக்கள் இந்தியாவில் உள்ள அனைவருக்கும் பொதுச் சொத்தாக வேண்டும். பெருமை மிக்க நமது சம்ஸ்கிருத மொழி இருக் கிறதே அதுதான் தடையாக இருக்கிறது. இயலுமானால் நம்

நாட்டிலுள்ள அனைவரும் சம்ஸ்கிருத வல்லுனராக வேண்டும், அதுவரை இந்தத் தடையை நீக்க முடியாது.

சம்ஸ்கிருத மொழியை என் ஆயுள் முழுவதும் படித்து வருகிறேன். என்றாலும் ஒவ்வொரு புதிய நூலும் புரிந்து கொள்ள முடியாததாகவே எனக்கு உள்ளது. அவ்வளவு கடின மான மொழி அது. இப்படி இருக்கும்போது அந்த மொழியை முழுக்கப் படிப்பதற்கு நேரமில்லாத மக்களுக்கு இன்னும் எவ் வளவு கடினமாக இருக்கும்? எனவே இந்தக் கருத்துக்களை மக்களின் மொழியில் போதிக்க வேண்டும். சம்ஸ்கிருதப் படிப்பும் அதோடு வளர வேண்டும். ஏனென்றால் சம்ஸ்கிருத வார்த்தைகளின் ஒலியே நம் இனத்திற்கு ஒரு மதிப்பையும் ஆற்றலையும் வலிமையையும் தருகிறது.

மகத்தான ராமானுஜரும் சைதன்யரும் கபீரும் இந்தியா வின் தாழ்ந்த வகுப்பினரை முன்னேற்றுவதற்காக மேற்கொண்ட முயற்சிகள் மாபெரும் வெற்றியைக் கண்டன. ஆனால் அது அவர்கள் காலத்தில் மட்டுமே. அந்த மாபெரும் ஆச்சாரியர்கள் போதித்த உபதேசங்களின் வேகம், அவர்கள் மறைந்த ஒரு நூற் றாண்டிற்குள்ளாகவே மறைந்துவிட்டன, அவை தோல்வியைத் தழுவின. ஏன்? அதன் காரணம் என்ன? அதை நாம் இங்கே விளக்கத்தான் வேண்டும். காரணம் இதுதான்: அவர்கள் தாழ்த்தப்பட்டவர்களை உயர்த்தினார்கள், அவர்கள் உயர்ந்த நிலைக்கு வர வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்பினார் கள்; ஆனால் பாமர மக்களிடையே சம்ஸ்கிருதக் கல்வியைப் பரப்புவதற்கான முயற்சிகளைச் செய்யவில்லை. மகத்தான புத்தர் கூட, சாதாரண மக்கள் சம்ஸ்கிருத மொழியைப் படிக்க வேண் டாம் என்று தடுத்தபோது ஒரு தவறான அடியையே எடுத்து வைத்தார். அவர் விரைவான உடனடியான விளைவுகளை விரும்பினார். அதனால் அன்றைய பேச்சுமொழியான பாலியில் மொழிபெயர்த்தே பிரச்சாரம் செய்தார். அது பெரிய விஷயம்; அவர் மக்களின் மொழியில் பேசினார், மக்கள் புரிந்து கொண் டார்கள். அது சிறப்பானது, அது கருத்துக்களை விரைவாகப் பரப்பியது. நெடுந்தொலைவில் உள்ளவர்களையும் அவரது கருத்துக்கள் சென்றடைந்தன. ஆனால் அதனுடன் சம்ஸ்கிருத மும் பரப்பப்பட்டிருக்க வேண்டும். அங்கே அறிவு வந்தது, ஆனால் பெருமை வரவில்லை, பண்பாடு வரவில்லை. பண்பாடு தான் அதிர்ச்சிகளைத் தாங்கிக்கொள்ள முடியும், எவ்வளவுதான் ஆனாலும் அறிவினால் அது முடியாது.

உலகிற்கு நீங்கள் அறிவுரையைப் பொழியலாம். அதனால் பெரிய நன்மை எதுவும் விளைந்துவிடப் போவதில்லை. ரத்தத்தில் பண்பாடு வர வேண்டும். தற்காலத்தில் கல்வியில் உன்னத வளர்ச்சி கண்ட பல நாடுகளை நாம் அறிவோம். அதனால் என்ன! அவர்கள் புலிகளைப்போல் உள்ளார்கள், காட்டு மிராண்டிகளைப்போல் இருக்கிறார்கள். ஏனெனில் அங்கே பண்பாடு இல்லை. நமது நாகரீகத்தைப் போலவே அறிவும் அங்கே தோலை மட்டுமே தொட்டுள்ளது, சிறு சிராய்ப்பு போதும், பழைய காட்டுமிராண்டித்தனம் வந்துவிடும். இத்தகைய நிகழ்ச்சிகள் நடக்கின்றன. இதுதான் ஆபத்து. சாதாரண மக்களுக்கு அவர்களுடைய தாய்மொழியில் போதியுங்கள். கருத்துக்களைக் கொடுங்கள், அதனால் அவர்கள் விஷயங்களை அறிந்து கொள்வார்கள். ஆனால் அதைவிட மேலான ஒன்று அவர்களுக்குத் தேவை, பண்பாட்டை அளியுங்கள். அவர்களுக்கு அதைக் கொடுக்காத வரையில் அந்த உயர்த்தப்பட்ட நிலையில் அவர்களால் நிலையாக இருக்க முடியாது. அப்போது சம்ஸ்கிருத மொழியால் மேன்மை பெற்ற ஒரு தனி ஜாதி உருவாகவே செய்யும், அவர்கள் மற்றவர்களைவிட உயர்ந்து மற்றவர்களை அடக்கியாளவே செய்வார்கள்.

உங்களுள் தாழ்ந்த ஜாதியினரிடம் சொல்கிறேன்: உங்களுக்கு ஒரே வழி, உங்கள் நிலை உயர ஒரே உபாயம் சம்ஸ்கிருதம் படிப்பதே. உயர்ந்த ஜாதியினருடன் சண்டையிடுவதும் எழுதுவதும் நிந்திப்பதும் வீண். அது எந்த நன்மையையும் தராது. துரதிர்ஷ்டவசமாக ஏற்கனவே பிளவுபட்டிருக்கும் நமது இனம் மேலும் பிளவுபடவே இந்தச் சண்டைகள் வழிவகுக்கும். ஜாதிகளுக்கிடையே சமத்துவம் நிலவுவதற்கான ஒரே வழி, மேல்ஜாதியினரின் வலிமைக்குக் காரணமான கல்வியறிவையும் பண்பாட்டையும் எல்லோருக்கும் பொதுவாக்குவதே. அதைச் செய்துவிட்டால் நீங்கள் விரும்பியதைப் பெறுவீர்கள்.

இது தொடர்பாக, சென்னை சம்பந்தப்பட்ட ஒரு முக்கிய விஷயத்தை நான் பேச விரும்புகிறேன். தென்னிந்தியாவில் திராவிடர் என்ற இனத்தினர் இருந்ததாகவும், அவர்கள் வட இந்தியாவில் வாழ்ந்த ஆரியர் என்ற இனத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டவர்கள் என்றும், தென்னிந்திய பிராமணர்கள் மட்டுமே வட இந்தியாவிலிருந்து வந்த ஆரியர்கள் என்றும், பிற தென்னிந்தியர்கள் எல்லாம் இந்தப் பிராமணர்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்ட ஜாதியையும் இனத்தையும் சார்ந்தவர்கள்

என்றும் ஒரு கொள்கை நிலவுகிறது. திருவாளர் மொழியியல் அறிஞரே, உங்கள் கருத்தை மறுப்பதற்கு என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் கருத்து முற்றிலும் ஆதாரமற்றது. ஆதாரத் திற்காக ஒரே ஒரு நிரூபணம் காட்ட முடியும் என்றால் அது வட நாட்டிற்கும் தென்னாட்டிற்கும் இடையே மொழியில் அமைந்துள்ள வேற்றுமை மட்டுமே, வேறு எந்த வேறுபாட்டை யும் நான் காணவில்லை.

இங்கே நாங்கள் வட இந்தியர்களும் பலர் இருக்கிறோம். எங்களுள் யார் வட இந்தியர், யார் தென்னிந்தியர் என்று பிரிக்குமாறு இங்கே இருக்கும் என் ஐரோப்பிய நண்பர்களிடம் நான் சொல்கிறேன். அவர்களால் முடியாது. வேற்றுமை எங்கே? மொழியில்தான் ஏதோ சிறு வேறுபாடு இருக்கிறது. ஆனால் இங்குள்ள பிராமணர்கள் சம்ஸ்கிருதம் பேசிய இனத்திலிருந்து வந்தவர்கள் ஆயிற்றே! அவர்களுக்கு எப்படி சம்ஸ்கிருதம் தெரியாமல் போயிற்று! அவர்கள் இங்கு வந்ததும் திராவிட மொழியைப் பேசத் துவங்கி சம்ஸ்கிருதத்தை மறந்து விட்டார் களாம். மற்ற ஜாதியினர் விஷயத்திலும் ஏன் அப்படி நடந் திருக்கக் கூடாது? வட இந்தியாவிலிருந்து ஒருவர்பின் ஒருவராக வந்த மற்ற எல்லா ஜாதியினரும் திராவிட மொழியைப் பேசத் தொடங்கியதால் ஏன் சம்ஸ்கிருதத்தை மறந்திருக்கக் கூடாது? எனவே இந்த வாதத்தை இரண்டு பக்கமிருந்தும் பேசலாம். பொருளற்ற இத்தகைய பேச்சுக்களை நம்பாதீர்கள். திராவி டர்கள் இங்கே இருந்திருக்கலாம்; ஆனால் அவர்கள் காலப் போக்கில் மறைந்திருக்க வேண்டும். எஞ்சியிருந்த ஏதோ சிலர் காடுகளிலும் மற்ற இடங்களிலும் வாழ்ந்திருக்க வேண்டும். அவர்களின் மொழியை இங்குள்ளவர்கள் எடுத்துக் கொண் டிருக்கலாம், ஆனால் இங்குள்ள அனைவரும் வட இந்தியா விலிருந்து வந்த ஆரியர்களே. இந்தியா முழுவதிலும் இப்போது இருப்பவர்கள் ஆரியர்களே, வேறு யாருமில்லை.

மற்றொரு கருத்தும் இங்கே நிலவுகிறது—சூத்திரர்கள் எல்லாம் ஆதிவாசிகளாம்! அவர்கள் யார்? அடிமைகள்! வர லாறு திரும்புகிறது என்கின்றனர். எப்படி? அமெரிக்கர், ஆங்கி லேயர், டச்சுக்காரர், போர்ச்சுகீசியர் ஆகிய அனைவரும், அப் பாவி ஆப்ரிக்கர்களைப் பிடித்துக் கொண்டுவந்து கடினமாக வேலை வாங்கினார்கள். அவர்கள் இறந்தபிறகு அவர்களுக்குப் பிறந்த கலப்பின மக்களையும் நெடுங்காலம்வரை அதே நிலை யில் அடிமைகளாக வைத்திருந்தார்கள். அந்த விசித்திரமான

உதாரணத்தைப் படித்த இவர்களின் மூளையில், இங்கேயும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு அதேபோன்ற செயல் நடந்திருக்கும் என்ற எண்ணம் தோன்றிவிட்டது. ஒரு காலத்தில் இந்தியா முழுவதுமே கறுப்புக் கண்களோடு கூடிய ஆதிவாசிகளால் நிறைந்திருந்தது என்று கனவு காண்கிறார் நம் தொல்பொருள் ஆய்வாளர். சிவந்த நிறமுடைய ஆரியர்கள் பின்னால் வந்தனராம்! எங்கிருந்து? கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

சிலருடைய கருத்துப்படி அவர்கள் மத்திய திபெத்திலிருந்து வந்தார்கள். மற்றும் சிலரோ, அவர்கள் மத்திய ஆசியாவிலிருந்து வந்ததாகக் கூறுகிறார்கள். சிவப்புத் தலைமயிரை உடையவர்கள் எல்லாம் ஆரியர்கள் என்று நினைக்கின்ற, தேச பக்தர்களான சில ஆங்கிலேயர்களும் இருக்கிறார்கள். தங்கள் கருத்தை வைத்துக்கொண்டு சிலர் அவர்கள் கறுப்பு நிறத் தலைமயிரை உடையவர்கள் என்று நினைக்கிறார்கள். எழுதியவர் கறுப்பு முடியுள்ள மனிதராக இருந்தால், ஆரியர்கள் எல்லாரும் கறுப்பு முடியுள்ளவர்கள். இனி, ஆரியர்கள் சுவிட்சர்லாந்தின் ஏரிக்கரைகளில் வாழ்ந்தார்கள் என்று நிரூபிப்பதற்கான முயற்சிகளும் சமீப காலத்தில் தோன்றியுள்ளன. இத்தகைய கொள்கைகளுடன் அவர்களும் சேர்ந்தே அந்த ஏரியில் மூழ்கினால்கூட எனக்கு வருத்தமில்லை. ஆரியர்கள் வட துருவத்தில் வாழ்ந்ததாக இப்போது சிலர் கூறுகின்றனர். ஆரியர்களையும் அவர்கள் வாழ்ந்த இடங்களையும் கடவுள் ஆசிர்வதிப்பாராக!

இந்தக் கொள்கைகளில் உண்மை இருக்கிறதென்றால், நம் சாஸ்திரங்களில் அதுபற்றிய ஒரு சிறு குறிப்பாவது இருக்க வேண்டுமே! ஆரியர்கள் இந்தியாவிற்கு வெளியேயிருந்து வந்தார்கள் என்று கூறுகின்ற ஒரு வார்த்தைகூட நமது சாஸ்திரங்களில் இல்லை. பழங்கால இந்தியா ஆப்கானிஸ்தானமும் சேர்ந்த பகுதியாகும், அவ்வளவுதான். அதுபோலவே சூத்திரர்கள் எல்லாம் ஆரியர் அல்லாதவர்கள், அவர்கள் எண்ணிக்கையில் மிக அதிகமானவர்கள் என்ற கொள்கையும் தர்க்கரீதியானதோ அறிவுபூர்வமானதோ அல்ல. ஒருசில ஆரியர்கள் வந்து குடியேறி லட்சக்கணக்கான அடிமைகளை அடக்கியாண்டார்கள் என்பது அந்தக் காலத்தில் நடக்கக்கூடிய ஒன்றா என்ன! அப்படி அடக்கி ஆண்டிருந்தால், அந்த அடிமைகள் அவர்களை ஐந்தே நிமிடத்தில் 'சட்னி' செய்து சாப்பிட்டிருப்பார்கள்.

ஒரே ஒரு விளக்கம் மகாபாரதத்தில் காணப்படுகிறது: சத்திய யுகத்தின் ஆரம்பத்தில் பிராமணர்கள் என்ற ஒரு ஜாதி யினரே இருந்தார்கள். அதன்பிறகு பல்வேறு தொழில்களைச் செய்ததன் காரணமாக அவர்கள், தங்களுக்குள் பல்வேறு ஜாதிகளாகப் பிரிந்தார்கள்.[1] இதுதான் ஜாதிப் பிரச்சினைக்கு உண்மையான, அறிவுபூர்வமான ஒரே விளக்கம். இனி வரப் போகின்ற சத்திய யுகத்திலும் ஜாதிகள் எல்லாம் சிறிது சிறிதாக மாறி முதலில் இருந்த நிலைக்குச் செல்ல வேண்டும். இந்தியாவில் உள்ள ஜாதிப் பிரச்சினையைத் தீர்ப்பதற் கான வழி இதுதானே தவிர, உயர்ந்த ஜாதியினரைக் கீழ் நிலைக்குக் கொண்டுவருவதோ பிராமணர்களை நசுக்குவதோ அல்ல.

பிராமணத்துவம்தான் இந்திய மக்களின் லட்சியம் என்பதை சங்கரர் தமது கீதை விளக்கவுரையின் முன்னுரையில் அற்புதமாக விளக்கியுள்ளார்; ஸ்ரீகிருஷ்ணர் உபதேசகராக வந்ததன் காரணத்தைக் கூறும்போது, இந்த பிராமணத்து வத்தை, பிராமண நிலையை நிலைநிறுத்தவே அவர் அவதரித் தார் என்று கூறுகிறார்.[2] அதுதான் மகத்தான லட்சியம். இறை மனிதனான, பிரம்மத்தை அறிந்தவனான, லட்சிய மனிதனான, நிறை மனிதனான இந்தப் பிராமணன் கட்டாயம் இருக்க வேண்டும், அவன் மறைந்து போகக் கூடாது. இன்று அந்த ஜாதி சீர்கெட்டுப் போயிருக்கலாம். இருப்பினும் பிற எல்லா ஜாதியினரையும்விட, பிராமண ஜாதியிலிருந்தே உண்மை பிராமணத்துவம் கொண்ட அதிகம் பேர் தோன்றியுள்ளனர். இந்த மதிப்பை பிராமணர்களுக்குக் கொடுக்க மற்ற எல்லா ஜாதியினரும் தயாராக இருக்க வேண்டும். அது உண்மை. பிற எல்லா ஜாதியினரிடமிருந்தும் அவர்களுக்குக் கிடைக்க வேண் டிய உரிமையுள்ள மதிப்பு அது. அவர்களுடைய குறைகளைப் பற்றிப் பேச தைரியமும் துணிச்சலும் படைத்தவர்களாக நாம் இருக்க வேண்டும். அதே வேளையில் அவர்களுக்கு உரிய பெருமையையும் தர வேண்டும். 'ஒவ்வொரு மனிதனுக்கும்

---

1. ந விசேஷாஷாऽஸ்தி வர்ணானாம் ஸர்வம் ப்ராஹ்மமிதம்ஜகத்|
ப்ரஹ்மா பூர்வஸ்ருஷ்டம் ஹி கர்மபிர் வர்ணதாம் கதம் ||
—சாந்தி பர்வம், 188. 10.

2. ஸ ஆதிகர்த்தா நாராயணாக்யோ விஷ்ணுர் பௌமஸ்ய, ப்ரஷ்மணோ ப்ராஹ்மணத்வஸ்ய ரக்ஷணார்த்தம் தேவக்யாம் வஸுதேவாம்சேன க்ருஷ்ண: கில ஸம்பபூவ ||

அவனுக்கு உரியதைக் கொடுங்கள்'[1] என்னும் ஆங்கிலப் பழமொழியை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். எனவே நண்பர்களே, ஜாதிகளுள் சண்டையிட்டுக் கொண்டிருப்பதால் ஒரு பயனுமில்லை. அது என்ன நன்மை செய்யும்? நமக்குள் இன்னும் அதிகமான பிளவுகளை உண்டாக்கும், நம்மை மேலும் பலவீனப் படுத்தும், மேலும் இழிநிலையில் ஆழ்த்தும், அவ்வளவுதான்.

தனிச்சலுகைகள் மற்றும் தனி உரிமைகளின் காலம் மலையேறிவிட்டது, அவை இந்திய மண்ணிலிருந்து ஒரேயடியாகப் போய்விட்டன. இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சியால் விளைந்த மகத்தான நன்மைகளுள் இதுவும் ஒன்று. தனிச்சலுகைகளை ஒழித்ததான பெரும் பணிக்காக நாம் முகமதியர் ஆட்சிக்கும் நன்றிக் கடன்பட்டிருக்கிறோம். முகமதிய ஆட்சிகூட அப்படியொன்றும் முற்றிலுமாகத் தீயதல்ல. சொல்லப் போனால் எதுவுமே முற்றிலும் நல்லதும் அல்ல, முற்றிலும் கெட்டதும் அல்ல. முகமதியர்கள் இந்தியாவை வெற்றி கொண்டது, தாழ்த்தப்பட்டவர்களுக்கும் ஏழைகளுக்கும் கதிமோட்சமாக அமைந்தது. அதனால்தான் நம் மக்களுள் ஐந்தில் ஒரு பங்கினர் முகமதியர் ஆனார்கள். எல்லாவற்றையுமே வாள் மட்டுமே சாதித்தது என்பதில்லை. வாளாலும் நெருப்பாலும் மட்டுமே இந்த அனைத்து வேலைகளும் நடைபெற்றதாக நினைப்பது பைத்தியக்காரத்தனத்தின் உச்சக்கட்டம். இனி, நீங்கள் எச்சரிக்கையாக இல்லை என்றால், உங்கள் சென்னை மக்களுள் ஐந்தில் ஒரு பங்கினர், ஏன், பாதிபேர் கிறிஸ்தவர்களாகி விடுவார்கள். நான் மலபாரில் பார்த்ததைவிட மடத்தனம் உலகில் வேறு எங்காவது இருக்க முடியுமா? பாவம்! கீழ்ஜாதியினர், மேல்ஜாதியினர் நடக்கும் தெருக்களில்கூட நடக்க அனுமதிக்கப் படுவதில்லை. ஆனால் அவனே தன் பெயரை தாட்பூட்டென்று ஓர் ஆங்கிலப் பெயராக மாற்றிக் கொண்டால் எல்லாம் சரியாகி விடும்; முகமதியப் பெயரை வைத்துக்கொண்டாலும் போதும், எல்லாம் சரியாகி விடும்! அந்த மலபார்வாசிகளைப் பைத்தியங்கள் என்று நினைப்பதைத் தவிர, அவர்களின் வீடுகளையெல்லாம் பைத்தியக்கார விடுதிகள் என்பதைத் தவிர வேறு என்னவென்று நினைப்பது? அவர்கள் தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொண்டு, நல்ல வழியில் நடக்கும்வரை இந்தியாவில் உள்ள ஒவ்வோர் இனத்தினரும் அவர்களை

---

1. Give every man his due.

வெறுப்பாக நடத்த வேண்டும் என்பதைத் தவிர வேறு எந்த முடிவுக்கு வருவது? இத்தகைய கொடூரமான, மிருகத்தனமான பழக்கங்களை அனுமதித்திருக்கிறார்கள். சொந்தக் குழந்தைகளே பட்டினியில் சாகுமாறு விட்டுவிடுகிறார்கள், ஆனால் அவர்கள் மதம் மாறி விட்டார்களானால் சாப்பாடு போடுகிறார்கள். என்ன வெட்கக்கேடு! ஜாதிகளிடையே இனியும் சண்டை இருக்கக் கூடாது.

உயர்ந்ததைத் தாழ்த்துவதல்ல, தாழ்ந்ததை உயர்த்துவதே தீர்வு. இதுதான் நமது நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் மார்க்கம். சொந்த சாஸ்திர அறிவும், முன்னோர்களின் மகத்தான திட்டங்களைப் புரிந்துகொள்வதற்கான திறனும் சுத்த சூன்ய மாக இருக்கின்ற சிலர் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் மூளை யுள்ளவர்களுக்கு, புத்திக்கூர்மை உடையவர்களுக்கு நம் முன்னோர்களின் செயல்திட்டத்தின் முழுப் பரிமாணமும் விளங்கும். அவர்கள் தனியாக நின்று, பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து வருகின்ற அந்த அற்புதமான தேசிய வாழ்வைப் பின்பற்றுவார்கள். பழைய மற்றும் புதிய நூல்களைப் படிப்படி யாக ஆராய்ந்து அவர்களால் அதனைக் கண்டறிய முடியும்.

அந்தத் திட்டம்தான் என்ன? ஒரு கோடியில் பிராமண லட்சியம் உள்ளது. மற்றொரு கோடியில் உள்ளது சண்டாள லட்சியம். நமது வேலையெல்லாம் சண்டாளனைப் பிராமண நிலைக்கு உயர்த்துவதுதான். சிறிதுசிறிதாக அதிகமான சலுகைகள் அவர்களுக்குக் கொடுக்கப்படுவதை நீங்கள் காண லாம். சில நூல்கள் இருக்கின்றன; அவற்றில், 'சூத்திரன் வேதத்தைக் கேட்டால் அவனது காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுங்கள்; ஒரு வரிகூட நினைவில் வைத்திருந்தால் அவனது நாக்கை வெட்டுங்கள். பிராமணனைப் பார்த்து "ஏ! பிராமணா" என்று அவன் அழைத்தால் அவனுடைய நாக்கை வெட்டி விடுங்கள்' என்பன போன்ற கொடூரமான கருத்துக்கள் இருக் கின்றன.[1] இவை மிருகத்தனமான பழங்காலக் காட்டுமிராண்டித் தனம். அதில் சந்தேகமே இல்லை, இதை யாரும் சொல்ல

---

1. இத்தகைய சில ஸ்ம்ருதி வாக்கியங்களை சங்கரர் தமது பிரம்ம சூத்திர பாஷ்யத்தில் (1.3.38) மேற்கோள் காட்டுகிறார். பின்னர் மகாபாரதத்திலிருந்து (சாந்தி பர்வம், 327.49) 'ச்ராவயேச் சதுரோ வர்ணான்— நான்கு வர்ணத்தினரும் வேதத்தைக் கேட்கச் செய்யுங்கள்' என்பதை மேற்கோள் காட்டி மற்ற ஸ்மிருதி கருத்துக்களை மறுக்கிறார்.

வேண்டியதும் இல்லை. அதற்காக விதிமுறைகளை எழுதியவர்களைப் பழிக்காதீர்கள். ஏனெனில் அவர்கள் அப்போது சமுதாயத்தின் ஏதோ ஒரு பகுதியில் நடைமுறையில் இருந்ததை அப்படியே குறித்து வைத்தார்கள், அவ்வளவுதான். முன்னோர்களுள்ளும் சிலவேளைகளில் இத்தகைய பிசாசுகள் தோன்றவே செய்தன. அத்தகைய பிசாசுகள் பெரும்பாலும் எங்கும் எல்லா காலங்களிலும் இருந்தே வருகின்றன.

இந்தக் கொடுமைக்குரலின் வேகம் பிற்காலத்தில் சிறிது குறைந்திருப்பதைக் காணலாம்; உதாரணமாக, 'சூத்திரர்களைத் தொந்தரவு செய்யாதீர்கள். ஆனாலும் உயர்ந்த கருத்துக்களை அவர்களுக்குப் போதிக்காதீர்கள்' என்ற கருத்து வருகிறது. பின்னர் படிப்படியாக பிற்கால ஸ்மிருதிகளில், குறிப்பாக இன்றும் முழுமையாகப் பின்பற்றப்படும் ஸ்மிருதிகளில், சூத்திரர்கள் பிராமணர்களின் நடைமுறைகளையும் பழக்க வழக்கங்களையும் பின்பற்றினால், அது நல்லது. அவர்களை ஊக்கப்படுத்த வேண்டும்,—இது போன்ற கருத்துக்களைக் காண்கிறோம்.[1] அதன் போக்கு அப்படிப் போகிறது.

இந்த விஷயங்களையோ அவற்றை எங்கெல்லாம் தேடிக் காணலாம் என்பதையோ விவரிப்பதற்கு எனக்கு நேரமில்லை. ஆனால் இன்றைய உண்மை நிலையைப் பார்க்கும்போது, எல்லா ஜாதிகளும் மெல்லமெல்லவே உயர வேண்டியிருப்பதை நாம் காணலாம். ஆயிரக்கணக்கான ஜாதிகள் உள்ளன. அவற்றுள் சில பிராமணத்துவத்தினுள் அனுமதிக்கப்பட்டிருப்பதையும் காண்கிறோம். தங்களைப் பிராமணர்கள் என்று ஒரு ஜாதியினர் அறிவித்துக் கொள்வதை யார் தடுக்க முடியும்?

இவ்வாறாக ஜாதி அதனுடைய எல்லா வேகத்தோடும் தோற்றுவிக்கப்பட்டது. இங்கே ஒவ்வொரு ஜாதியிலும் பத்தாயிரம் பேர் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இவர்கள் ஒன்றுசேர்ந்து, தங்களை பிராமணர்கள் என்று அழைத்துக் கொள்வதாகத் தீர்மானித்தால் எதுவும் அவர்களைத் தடுக்க முடியாது. இதை என் வாழ்விலேயே கண்டிருக்கிறேன். சில ஜாதிகள் வலிமை பெற்றுவருகின்றன, அவர்கள் ஒன்றுசேர்ந்து விட்டால், கூடாது என்று யார் சொல்ல முடியும்? ஏனென்றால் ஒவ்வொரு ஜாதியும் மற்ற ஜாதிகளிலிருந்து விலகியே

---

1. கர்மபி: கபிபிர்தேவி சுத்தாத்மா விஜிதேந்த்ரிய: ।
சூத்ரோऽபி த்விஜவத் ஸேவ்ய இதி ப்ரஹ்மாப்ரவீத் ஸ்வயம் ॥
—மகாபாரதம், அனுசாஸன பர்வம், 143. 48.

இருக்கிறது. ஒன்று மற்றதன் செயல்களில் தலையிடுவது இல்லை. ஏன், ஒரே ஜாதியில் பல பிரிவுகள்கூட ஒன்று மற்றொன்றின் விஷயத்தில் தலையிடுவது இல்லை. மாபெரும் சகாப்தத்தையே உருவாக்கியவர்களான சங்கராச்சாரியரும் பிறரும்தான் ஜாதிகளையும் உருவாக்கியவர்கள். அவர்கள் கட்டிவிட்ட வினோதக் கதைகளை எல்லாம் உங்களுக்குச் சொல்ல முடியாது, சொன்னாலும் உங்களுள் சிலருக்குக் கோபம் வரலாம். எனது பயணங்களின்மூலமும் அனுபவங்களின் வாயிலாகவும் அவைகளைக் கண்டுபிடித்து, ஆச்சரியமான முடிவுக்கு வந்திருக்கிறேன். சில வேளைகளில் அவர்கள் பலுசிஸ்தானத்தின் நாடோடிக் கும்பல்களைப் பிடித்து, க்ஷத்திரியர்கள் ஆக்குவார்கள். மீனவர்களைப் பிடித்து பிராமணர்கள் ஆக்குவார்கள்.[1] அவர்கள் ரிஷிகள், மகான்கள். அவர்களின் நினைவிற்கு நாம் அஞ்சலி செய்ய வேண்டும். நீங்களும் ரிஷிகள் ஆகுங்கள், மகான்கள் ஆகுங்கள், அதுதான் ரகசியம். மொத்தத்தில் நாம் ரிஷிகளாக வேண்டும்.

ரிஷி என்றால் என்ன? தூயவர். முதலில் தூயவர் ஆகுங்கள், நீங்கள் ஆற்றலைப் பெறுவீர்கள். வெறுமனே 'நான் ரிஷி' என்று சொல்லிப் பயனில்லை, நீங்கள் ரிஷி என்றால் மற்றவர்கள் தாமாகவே உங்களைப் பணிவார்கள். அமானுஷ்யமான ஏதோ ஒன்று உங்களிடமிருந்து வெளிப்படும். அது, அவர்கள் உங்களைப் பின்பற்றும்படிச் செய்யும்; உங்கள் பேச்சைக் கேட்கும்படிச் செய்யும்; தங்களை அறியாமலே தங்கள் விருப்பத்திற்கு மாறாகக்கூட உங்கள் திட்டங்களை நிறைவேற்றும்படிச் செய்யும். அதுதான் ரிஷி நிலை.

இவற்றிற்கான விளக்கங்களைப் பொறுத்தவரை, அவை பல தலைமுறைகளாகச் செய்து முடிக்க வேண்டிய ஒன்று. நான் இப்போது கூறியவை, ஜாதிச் சண்டைகள் தீர வேண்டும் என்பதற்கான ஒரு ஆலோசனை மட்டுமே. குறிப்பாக இந்த நவீன காலத்தில் ஜாதிகளுக்கிடையே இவ்வளவு சச்சரவுகள் இருப்பது குறித்து நான் வருந்துகிறேன். இது நிறுத்தப்பட்டே தீர வேண்டும். இந்தச் சண்டை இரு தரப்பினருக்கும், குறிப்பாக உயர்ந்த ஜாதியினரான பிராமணர்களுக்குப் பயனற்றது. ஏனென்றால் இன்று தனிச் சலுகைகளும் தனி உரிமைகளும் பறிபோய் விட்டன. தங்கள் கல்லறையைத் தாங்களே தோண்டிக்

---

1. ப்ரஜா ப்ராஹ்மண ஸம்ஸ்காரா: ஸ்வகர்ம க்ருத நிச்சயா: |
ரிஷிபி: ஸ்வேன தபஸா ஸ்ருஜ்யதே சாபரே பரை: ||
—மகாபாரதம், சாந்தி பர்வம், 188,19.

கொள்வதுதான் ஒவ்வோர் உயர்ந்த பிரிவினருடையவும் கடமை. எவ்வளவு சீக்கிரம் அதைச் செய்கிறார்களோ அந்த அளவிற்கு நல்லது. காலம் நீடிக்கநீடிக்க அவை கெட்டுக் குட்டிச்சுவராகி மிகமோசமான முடிவைப் பெற நேரும்.

எனவே பிராமணர்களின் முதல் கடமை இந்தியாவிலுள்ள மற்ற சமுதாயத்தினரின் நன்மைக்காகப் பாடுபடுவதுதான். அவன் அதைச் செய்வானானால், அதைச் செய்யும் காலம் வரையில், அவன் பிராமணன். அதைச் செய்யாமல் பணம் சம்பாதிக்கத் திரிபவன் பிராமணன் அல்ல. நீங்களும் உண்மையில் தகுதியுடைய பிராமணனுக்கு மட்டுமே உதவ வேண்டும். அது உங்களைச் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும். தகுதி இல்லாத ஒருவனுக்குக் கொடுக்கப்படும் தானம் சிலவேளைகளில் நரகத்திற்கே இழுத்துச் செல்கிறது என்று நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இந்த விஷயத்தில் நீங்கள் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். லௌகீகத் தொழில் செய்யாமல் இருப்பவன் மட்டுமே பிராமணன். லௌகீகத் தொழில் பிராமணர்களுக்கு அல்ல, மற்ற ஜாதியினருக்குத்தான். பிராமணர்களை நான் ஒன்று கேட்டுக்கொள்கிறேன். உங்களுக்குத் தெரிந்ததைக் கற்பிப்பதன்மூலமும் நூற்றுக்கணக்கான வருடங்களாகப் பெற்றுச் சேமித்திருக்கும் பண்பாட்டை அளிப்பதன்மூலமும் இந்திய மக்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுங்கள். உண்மை பிராமணத்துவம் என்ன என்பதை நினைத்துப் பார்ப்பது இந்தியப் பிராமணர்களின் முக்கியக் கடமை. மனு சொல்வதைப்போல், எல்லா சலுகைகளும் பெருமைகளும் பிராமணனுக்குக் கொடுக்கப்பட்டது; ஏனென்றால் அவனிடம் 'தர்மம் என்னும் கருவூலம்' இருக்கிறது.[1] அவன் அந்தக் கருவூலத்தைத் திறந்து, அதில் உள்ள மதிப்பு வாய்ந்த பொருட்களை உலகிற்கு வழங்க வேண்டும். அவன் இந்திய இனங்களுக்கு முதல் போதகன் என்பது உண்மைதான்; தியாகம் என்ற கருத்தைப் பிறர் அடைவதற்கு முன்னரே, வாழ்க்கையின் மிகவுயர்ந்த நிலையை அடைவதற்காக எல்லாவற்றையும் முதலில் துறந்தவன் அவன் என்பதும் உண்மையே. பிற ஜாதியினரைவிட அவன் அதிக முன்னேற்றம் அடைந்தால் அது அவனுடைய தவறு அல்ல. உண்மையைப் புரிந்துகொண்டு மற்ற ஜாதியினரும் ஏன்

---

1. மனு, 1.99.

அவனைப்போல் செல்லக் கூடாது? அவர்கள் சோம்பேறிகளாக இருந்துகொண்டு, பந்தயத்தில் பிராமணர்களை ஏன் முன்னேற விட்டார்கள்?

ஆனால் முன்னேற்றம் அடைவது என்பது வேறு, அதைத் தீய செயல்களுக்காகப் பாதுகாத்து வைப்பது என்பது வேறு. அதிகாரம் தீமைகளுக்காகப் பயன்படுத்தப்படும் போது அது மிருகத்தனமாகி விடுகிறது, அது நல்லதற்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும். காலங்காலமாகச் சேர்த்து வைக்கப்பட்டுள்ள பண்பாட்டிற்கு காவலனாக இருப்பவன் பிராமணன். அவன் இப்போது அதை எல்லா மக்களுக்கும் வாரி வழங்க வேண்டும். அப்படி அவன் கொடுக்காததால்தான் முகமதியர்கள் நம்மை ஆக்கிரமிக்க முடிந்தது. ஆரம்பக் காலத் திலிருந்தே இந்தக் கருவூலத்தை மக்கள் அனைவருக்குமாக அவன் திறந்து விடவில்லை. அதனால்தான், இந்தியாவிற்கு வந்தவனின் காலிலெல்லாம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நாம் மிதிபட்டுக் கொண்டிருக்கிறோம்.

எனவே நமது பொது முன்னோர்கள் சேமித்து வைத்திருக் கின்ற அரும் பொக்கிஷங்கள் மறைத்து வைக்கப்பட்டுள்ள அறையை உடைத்துத் திறக்க வேண்டும், அவற்றை வெளியே கொண்டுவர வேண்டும், அனைவருக்கும் வாரி வழங்க வேண் டும். பிராமணனே இதை முதலில் செய்ய வேண்டும். கடித்த பாம்பே விஷத்தை உறிஞ்சி விடுமானால் கடிபட்டவன் பிழைத் துக் கொள்வான் என்ற பழைய நம்பிக்கை வங்காளத்தில் நிலவு கிறது. அதுபோல் பிராமணன் செலுத்திய விஷத்தை பிராமணனே உறிஞ்ச வேண்டும்.

பிராமணர் அல்லாத நண்பர்களுக்கு நான் சொல்ல விரும்பும் சில விஷயங்கள் உண்டு. கொஞ்சம் பொறுமையாக இருங்கள், அவசரப்படாதீர்கள். பிராமணர்களோடு சண்டை யிடுவதற்காக ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்த முயற்சிக் காதீர்கள். உங்கள் தவறுகளாலேயே நீங்கள் துன்பப்படுகிறீர்கள் என்பதை நான் முன்னரே எடுத்துக்காட்டி விட்டேன். ஆன்மீகத் தையும் சம்ஸ்கிருதம் கற்பதையும் அலட்சியம் செய்யும்படி உங்களிடம் யார் சொன்னார்கள்? இவ்வளவு காலமாக என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? எதற்கு இந்த பொறுப்பற்ற தன்மை? இன்று மற்றவர்கள் உங்களைவிட அதிக அறிவும் ஆற்றலும் திறமையும் உள்ளவர்களாக இருப்பதைப் பார்த்து ஏன் எகிறிக் குதிக்கிறீர்கள்? பத்திரிகைகளில் வாதங்களையும்

சண்டைகளையும் வளர்ப்பதில் உங்கள் ஆற்றலை வீணாக்கு வதற்குப் பதிலாக, உங்கள் வீடுகளிலேயே சண்டையும் சச்சரவும் செய்துகொண்டு இருப்பதற்குப் பதிலாக, இந்தப் பாவச் செயல் களுக்குப் பதிலாக, பிராமணர்கள் பெற்றிருக்கும் பண் பாட்டைப் பெற உங்கள் எல்லா ஆற்றலையும் பயன்படுத் துங்கள். அப்போது உங்கள் காரியம் கைகூடிவிடும். ஏன் நீங்கள் சம்ஸ்கிருத பண்டிதர்கள் ஆகக் கூடாது? இந்தியாவில் உள்ள எல்லா ஜாதியினரும் சம்ஸ்கிருதம் படிப்பதற்காகச் சில லட்சங்களை நீங்கள் ஏன் செலவழிக்கக் கூடாது? இதுதான் கேள்வி. இவற்றையெல்லாம் செய்கின்ற அந்தக் கணமே நீங்கள் பிராமணர்களுக்குச் சமமாகி விடுவீர்கள். இந்தியாவில் ஆற்ற லின் ரகசியம் இதுவே. இந்தியாவில் சம்ஸ்கிருதமும் மதிப்பும் கைகோர்த்துச் செல்கின்றன. அது இருந்தால் போதும், உங் களுக்கு எதிராக எதையும் சொல்கின்ற தைரியம் யாருக்கும் வராது. அதுதான் பெரிய ரகசியம். எனவே அதைக் கற்கத் தொடங்குங்கள்.

அத்வைதியின் ஒரு பழைய உவமையின்மூலம் சொல்வது என்றால், தனக்குத் தானே ஏற்படுத்திக் கொண்ட ஒரு மயக்க நிலையிலேயே இந்த உலகம் முழுவதும் உழல்கிறது. சங்கல்பம் தான் பலம். வலுவான சங்கல்பம் படைத்தவன் தன்னைச் சுற்றிலும் ஓர் ஒளியை வெளிப்படுத்துகிறான் என்றுதான் சொல்ல வேண்டும். தன் மனம் எந்த நிலையில் இருக்கிறதோ, அந்த நிலைக்கு அவன் பிறரையும் கொண்டு வருகிறான். அத்தகைய மாபெரும் மனிதர்கள் தோன்றவே செய்கிறார்கள். இதன் பொருள் என்ன? ஆற்றல் மிக்க ஒருவர் தோன்றும்போது, அவரது ஆளுமை அவரது எண்ணங்களை நம்முள் செலுத்து கிறது, நமக்கும் அதே எண்ணங்கள் எழுகின்றன, இவ்வாறு நாமும் ஆற்றல் மிக்கவர்கள் ஆகிறோம். இயக்கங்கள் இவ்வளவு ஆற்றல் மிக்கவையாக இருப்பது ஏன்? இயக்கம் ஜடப்பொருள் என்று சொல்ல வேண்டாம், அவை அப்படி இல்லை. பிரபல மான ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம்; நான்குகோடி ஆங்கிலேயர்கள் இங்கே முப்பது கோடி மக்களை ஆட்சி செய் கிறார்கள். அது ஏன்? இதற்கான மனஇயல் விளக்கம் என்ன? அந்த நான்கு கோடி பேரும் தங்கள் சங்கல்பத்தை ஒன்றாகக் குவிக்கிறார்கள். அதனால் எல்லையற்ற சக்தி உண்டாகிறது. ஆனால் முப்பது கோடி மக்களான உங்கள் சங்கல்பங்கள் ஒவ் வொன்றும் தனித்தனியாகப் பிரிந்து கிடக்கின்றன. எனவே

மகத்தானதோர் எதிர்கால இந்தியாவை உருவாக்க வேண்டு மானால், அதற்கான ரகசியம் முழுவதும் இயக்கங்களை உரு வாக்குவதிலும் ஆற்றலைச் சேர்ப்பதிலும், சங்கல்பங்களை இணைப்பதிலும்தான் இருக்கிறது.

அதர்வ வேத சம்ஹிதையில் உள்ளதோர் அற்புதமான பாடல் என் நினைவில் வருகிறது— 'நீங்கள் எல்லோரும் ஒரே மனத்தவராக இருங்கள். நீங்கள் எல்லோரும் ஒரே எண்ணம் உடையவர்களாக இருங்கள். ஒரே மனத்துடனிருந்த காரணத் தால்தான் தேவர்கள் ஆஹுதிகளைப் பெற முடிந்தது. ஒரே மனத்தவராக இருப்பதால்தான் மனிதர்களால் அவர்களை வழிபட முடிந்தது.'[1] ஒரே மனத்தவராக இருப்பது சமுதாயத் தின் ரகசியம். 'திராவிடன்', 'ஆரியன்' முதலான அற்பவிஷயங் கள் பற்றியும், பிராமணர், பிராமணர் அல்லாதவர் என்றெல் லாமும் நீங்கள் சண்டையிட்டுக் கொண்டிருக்குந்தோறும் எதிர்கால இந்தியாவை உருவாக்குவதற்கான ஆற்றலையும் சக்தியையும் சேமிப்பதிலிருந்து மேலும்மேலும் விலகிப் போகி றீர்கள். நன்றாகத் தெரிந்துகொள்ளுங்கள்—எதிர்கால இந்தியா முற்றிலும் அதையே சார்ந்திருக்கிறது. சங்கல்ப ஆற்றலைச் சேமித்தல், அவற்றை ஒருங்கிணைத்தல், அவை அனைத்தையும் ஒரே மையத்தில் திரட்டுதல்— இதுதான் ரகசியம்.

ஒவ்வொரு சீனனும் தான் விரும்புகின்ற வழியில் சிந்திக் கிறான். ஆனால் எண்ணிக்கையில் குறைந்த ஜப்பானியரோ அனைவரும் ஒரே வழியில் சிந்திக்கின்றனர். விளைவு உங் களுக்கே தெரியும். உலக வரலாறு முழுவதும் இவ்வாறே நடந்துள்ளது. கட்டுக் கோப்பான சிறிய நாடுகளே கட்டுப்பாடற்ற, பெரிய நாடுகளை எப்போதும் ஆள்கின்றன. இது இயல்பானதுதான். ஏனெனில் சிறிய கட்டுக்கோப்பான நாடுகளுக்குத் தங்கள் கருத்துக்களை ஒரே மையத்தில் குவிப்பது எளிதாக உள்ளது. அதன்மூலம் அவை வளர்ந்து விடுகின்றன. ஒரு நாடு எந்த அளவுக்குப் பெரிதாக இருக்கிறதோ அந்த அளவுக்குக் கட்டுப்பாடற்றதாக இருக்கிறது. கட்டுப்பாடற் றவர்கள்போல் பிறந்த அந்த மக்களால் ஒன்றாகச் சேரவும் முடிவதில்லை. இந்தக் கருத்துவேற்றுமைகள் எல்லாம் விலகியே தீர வேண்டும்.

---

1. ஸம் கச்சத்வம் ஸம்வதத்வம் ஸம்வோ மனாம்ஸி ஜானதாம் ।
தேவா பாகம் யதா பூர்வே ஸஞ்ஜானனா உபாஸதே ॥
—ரிக்வேதம், 10,191.2.

மற்றொரு குறைபாடும் நம்மிடம் உள்ளது. பெண்கள் என்னை மன்னிக்க வேண்டும்—பல நூற்றாண்டுகளின் அடிமை வாழ்வின் காரணமாக நாமெல்லாம் பெண்களைப் போலவே ஆகிவிட்டோம். இந்த நாட்டிலும் சரி, வேறு எந்த நாட்டிலும் சரி மூன்று பெண்கள் ஐந்து நிமிடங்களுக்கு மேல் சேர்ந்திருக்க முடியாது, அதற்குள் சண்டையிட்டுக் கொள்வார்கள். ஐரோப்பிய நாடுகளில் பெண்கள் பெரிய சங்கங்களை உரு வாக்குவார்கள், பெண்சக்தி முதலியவை பற்றியெல்லாம் பெரிய அறிக்கைகளை வெளியிடுவார்கள், அவ்வளவுதான், அதற்குள் சண்டை வந்துவிடும். பின்னர் ஆண்கள் வந்து அவர்களை அடக்கியாள நேரும். இன்னும் உலகம் முழுவதிலும் அவர்களை ஆள்வதற்கு ஆண்கள் தேவைப்படுகிறார்கள். நாம் அவர்களைப் போலவே இருக்கிறோம். நாம் பெண்களே. பெண்களை நடத்திச் செல்ல ஒரு பெண் முன்வந்தாலோ, எல்லோருமாகச் சேர்ந்து விமர்சித்து, கிழிகிழியென்று கிழித்து அவளை ஒதுக்கி விடு வார்கள். ஆனால் ஆண் ஒருவன் வரட்டும், அவன் அவர்களை அவ்வப்போது திட்டியதும் சற்று கடினமாக நடத்தியதும் எல்லாம் சரியாகிவிடும். அவர்கள் அத்தகைய மயக்க நிலைக்குப் பழகிவிட்டார்கள். இந்த உலகம் முழுவதும் அத்தகைய மயக்க நிலைக்கு உட்பட்டவர்களே இருக்கிறார்கள். நம் நாட்டிலும் நம்மவருள் ஒருவர் எழுந்து மகத்தானவராக மாற முயற்சிப் பாரானால், உடனே நாம் எல்லோரும் சேர்ந்து அவரை அமுக்க முயற்சிப்போம். ஓர் அன்னியன் வந்து நம்மை எட்டி உதைத் தால்கூட அது பரவாயில்லை. நாம் இப்படியே பழக்கப்பட்டு விட்டோம் இல்லையா! அடிமைகள் சிறந்த எஜமானர்கள் ஆக வேண்டும். எனவே அடிமையாக இருப்பதை விட்டுவிடுங்கள்.

இனி வரும் ஐம்பது ஆண்டுகளுக்கு நமது ஆதார சுருதி இதுவே— ஈடிணையற்ற நமது இந்தியத் தாய். அதுவரை மற்ற எல்லா வீண் தெய்வங்களும் நம் மனத்திலிருந்து மறைந்து விடட்டும். நமது சொந்த இனம்— இது ஒன்று மட்டுமே விழிப் புற்ற தெய்வம்; 'எங்கும் அவரது கைகள், எங்கும் அவரது கால்கள், எங்கும் அவரது செவிகள், அவரே அனைத்திலும் வியாபித்திருக்கிறார்'.[1] மற்ற எல்லா தெய்வங்களும் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். நம்மைச் சுற்றிலும் காண்கின்ற

---

1. ஸர்வத: பாணி பாதம் தத்ஸர்வதோऽக்ஷி சிரோமுகம் ।
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥

—கீதை, 13. 13.

விராட் தெய்வத்தை வழிபடாமல் வேறு வீண் தெய்வங்களை நாம் தேடிச் செல்ல வேண்டுமா? இந்த தெய்வத்தை முதலில் வணங்கினால், பிற எல்லா தெய்வங்களையும் வணங்கும் திறன் பெறுவோம். அரை மைல் ஊர்ந்து செல்லவே முடியவில்லை, அதற்குள் அனுமனைப்போல் கடலைத் தாண்ட விரும்புகிறோம். அது முடிகிற காரியமில்லை. எல்லோரும் யோகியாக முடியுமா? எல்லோரும் தியானம் செய்ய முடியுமா? அது நடக்காது. நாள் முழுவதும் உலக வாழ்க்கையில் கர்ம காண்டத்துடன் அல்லாடுகிறோம். மாலையில் உட்கார்ந்து மூக்கின் வழியாகக் காற்றை இழுத்துவிட்டால் எல்லாம் ஆயிற்றா? இல்லை, நீங்கள் மூன்று முறை மூக்கைப் பிடித்துக்கொண்டு காற்றை இழுத்தவுடன் ரிஷிகள் எல்லோரும் காற்றில் பறந்து உங்களிடம் வர வேண்டுமா? என்ன வேடிக்கை இது! சுத்த முட்டாள்தனம்.

தேவை சித்த சுத்தி, இதயத் தூய்மை. அது எவ்வாறு வரும்? முதலில் விராட்டை அதாவது உங்களைச் சுற்றி இருப்பவர்களை வழிபடுங்கள். வழிபடுங்கள், வழிபாடு—அதுதான் அந்த சம்ஸ்கிருதச் சொல்லுக்குச் சரியான பொருள். வேறு எந்த வார்த்தையும் பொருந்தாது. மனிதர்கள், மிருகங்கள், எல்லாமே நம் தெய்வங்கள். நாம் வணங்க வேண்டிய முதல் கடவுள் நம் நாட்டு மக்கள். ஒருவரோடு ஒருவர் பொறாமை கொண்டு சண்டையிடுவதற்குப் பதிலாக, இவர்களை நாம் வழிபட்டாக வேண்டும். கொடிய தீவினைப் பயனால்தான் நாம் துன்பப்படுகிறோம்; என்றாலும் நம் கண்கள் திறக்கவில்லையே!

நல்லது, நாம் இன்று எடுத்துக் கொண்டிருக்கும் விஷயமோ மிகப் பெரியது. எங்கே நிறுத்துவது என்றே எனக்குத் தெரியவில்லை. எனவே சென்னையில் நான் செய்யவிரும்புகின்ற சில திட்டங்களை உங்களிடம் கூறிவிட்டு, என் பேச்சை நிறைவு செய்கிறேன். நமக்கு நாட்டின் ஆன்மீகக் கல்வி மீதும் லௌகீகக் கல்வி மீதும் நல்ல பிடிப்பு இருக்க வேண்டும். நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதா? நீங்கள் அதைக் கனவு காண வேண்டும், அதைப்பற்றிப் பேச வேண்டும், அதைச் சிந்திக்க வேண்டும், அதைச் செய்து முடிக்கவும் வேண்டும். அதுவரை நம் இனத்திற்குக் கடைத்தேறும் வழியே இல்லை.

தற்போதைய கல்வியில் சில நன்மைகள் உள்ளன, ஆனால் மிக அதிகமான தீமைகள் இருக்கின்றன. மிக அதிகமான அந்தத் தீமைகள் கொஞ்சமான நன்மையைக் கீழே

அமுக்குகின்றன. முதலாவதாக, அது மனிதனை உருவாக்கு கின்ற கல்வி அல்ல. அது முழுக்கமுழுக்க வெறும் எதிர்மறை யான கல்வி. எதிர்மறைக் கல்வியும் சரி, அல்லது எதிர்மறை உணர்ச்சியை உண்டுபண்ணும் எந்தப் பயிற்சியும் சரி அது சாவைவிடக் கொடியது. குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பு கிறோம். அங்கே அவன் முதலில் படிப்பது தன் தந்தை ஒரு முட்டாள்; இரண்டாவது, தன் பாட்டன் பைத்தியக்காரன்; மூன்றாவதாக, தன் ஆசிரியர்கள் அனைவரும் பாசாங்குக் காரர்கள்; நான்காவதாக, எல்லா சாஸ்திரங்களும் பொய். இப்படித்தான் அவனது படிப்பு உள்ளது. அவனுக்குப் பதினாறு வயதாகும்போது அவன் உயிரற்ற, உணர்வற்ற, எதிர்மறை உணர்ச்சிகளின் ஒரு பிண்டம் போலாகிறான். விளைவு? ஐம்பது ஆண்டுகளாக இருக்கும் இத்தகைய கல்வி, இந்தியாவின் மூன்று முக்கிய மாகாணங்களிலும் சுயசிந்தனையுள்ள ஒருவனைக்கூட தோற்றுவிக்கவில்லை. அத்தகைய தனித்தன்மை வாய்ந்தவனாக இங்கு இருக்கின்ற ஒவ்வொருவனும் வேறு எங்கோ கல்வி பெற்றவனாக இருக்கிறான், இந்த நாட்டில் படித்தவனாக இல்லை; அல்லது நம் நாட்டில் இன்னும் ஏதோ சில இடங்களில் இருக்கின்ற பழைய பல்கலைக் கழகங்களில் மேலும் ஒருமுறை கற்று, மூட நம்பிக்கைகளிலிருந்து தன்னைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டவனாக இருக்கிறான்.

வாழ்நாள் முழுவதும் உங்களால் ஜீரணிக்க முடியாமல் உள்ளிருந்து தொந்தரவு தரக்கூடிய செய்திகளை மூளைக்குள் திணிப்பது அல்ல கல்வி. வாழ்க்கையை வளப்படுத்துகின்ற, மனிதனை உருவாக்குகின்ற, குணத்தை மேம்படுத்துகின்ற, கருத்துக்களை ஜீரணம் செய்யத்தக்க கல்வியே நாம் வேண்டுவது. நீங்கள் ஐந்தே ஐந்து கருத்துக்களை நன்கு கிரகித்து, அவை உங்கள் வாழ்க்கையாக, நடத்தையாகப் பரிணமித்து நிற்கச் செய்ய முடியுமானால், ஒரு புத்தகசாலை முழுவதையும் மனப் பாடம் செய்தவனைவிட நீங்கள் அதிகமான கல்வி பெற்றவர். 'யதா கரச்சந்தன பாரவாஹீ பாரஸ்ய வேத்தா ந து சந்தனஸ்ய— கட்டுக்கட்டாகச் சந்தனக் கட்டைகளைச் சுமந்து செல்லும் கழுதை அதன் பாரத்தை மட்டுமே உணர்கிறது, மதிப்பை அறி வதில்லை.' செய்திகளைச் சேகரிப்பதுதான் கல்வி என்றால், நூல் நிலையங்கள் அல்லவா மாபெரும் மகான்கள்! கலைக் களஞ்சியங்கள் அல்லவா ரிஷிகள்! எனவே நம் நாட்டின் ஆன்மீகம் மற்றும் லௌகீகக் கல்வி எல்லாமே நம் சொந்தக்

கைகளில் இருக்க வேண்டும்; முடிந்தவரை அது தேசிய வழியிலும் தேசிய அமைப்புகளின் மூலமும் தரப்பட வேண்டும்.

இது மிகப் பெரிய விஷயம், மிகப் பெரிய திட்டம்தான். இதை என்றைக்காவது செயல்படுத்த முடியுமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் வேலையை நாம் கட்டாயம் தொடங்கியாக வேண்டும். ஆனால் எப்படி? உதாரணத்திற்குச் சென்னையை எடுத்துக்கொள்ளுங்கள். நமக்கு அவசியம் ஒரு கோயில் வேண்டும். ஏனெனில் இந்துக்களைப் பொறுத்தவரை முதலில் வேண்டியது மதம். அப்படி என்றால் பிற நெறியினர் அதுபற்றிச் சண்டையிடுவார்களே என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் நாம் அதை எந்த நெறியும் சாராத கோயிலாகக் கட்டுவோம். எல்லா பிரிவினரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய 'ஓம்' மட்டுமே அங்கே சின்னமாக இருக்கும். எந்தப் பிரிவாவது 'ஓம்' என்பதைச் சின்னமாக வைப்பதில் தங்களுக்கு உடன்பாடு இல்லை என்று கருதுமானால், தன்னை இந்து என்று அழைத்துக்கொள்ளும் உரிமை அதற்குக் கிடையாது. தங்கள் நெறியின் கருத்துக்களுக்கு ஏற்ப இந்து மதத்தை விளக்க எல்லோருக்கும் உரிமை உண்டு. ஆனால் கட்டாயமாக நமக்கு பொதுக் கோயில் வேண்டும். நீங்கள் விரும்புகின்ற விக்கிரகங்கள் மற்றும் சின்னங்கள் எல்லாவற்றையும் மற்ற இடங்களில் வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் கொள்கையிலிருந்து மாறுபடுபவர்களுடன் அதைக் குறித்து இங்கே சண்டையிடக் கூடாது. இங்கே நமது பல்வேறு நெறிகளுக்கும் பொதுவான அடிப்படைகள் போதிக்கப்பட வேண்டும். அதேவேளையில் வெவ்வேறான நெறியினர் எல்லோருமே இங்கே வந்து தங்கள் கோட்பாடுகளைப் போதிப்பதற்கும் முழுமையான சுதந்திரம் வேண்டும். இருக்க வேண்டிய ஒரே கட்டுப்பாடு, எந்தப் பிரிவும் மற்றொன்றுடன் சண்டையிடக் கூடாது என்பது மட்டுமே. நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள், உலகத்திற்கு அது தேவை. ஆனால் நீங்கள் பிறரைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்பதைக் கேட்க உலகத்திற்கு நேரமில்லை, அதை நீங்களே வைத்துக் கொள்ளலாம்.

இரண்டாவதாக, அந்தக் கோயிலோடு தொடர்புடைய ஒரு பயிற்சி நிலையம் இருக்க வேண்டும். நம் மக்களுக்கு மத போதனை செய்யவும் பொதுக் கல்வியை அளிக்கவும் ஆசிரியர்களுக்கு அதில் பயிற்சி அளிக்க வேண்டும். அவர்கள் இரண்டையுமே கற்பிக்க வேண்டும். நாம் ஏற்கனவே வீடுகள்தோறும்

சென்று மதக் கல்வி அளித்தே வருகிறோம். அதனுடன் பொதுக் கல்வியையும் எடுத்துச் செல்வோம். இதை எளிதாகச் செய்ய முடியும். பிறகு இந்த ஆசிரியர்கள் மற்றும் பிரச்சாரகர்கள்மூலம் இந்த வேலை விரிவடையும். இத்தகைய கோயில்களை மற்ற இடங்களிலும் நிறுவ வேண்டும். படிப்படியாக இந்தியா முழுவதும் இது போன்ற கோயில்கள் உருவாக வேண்டும். இதுதான் என் திட்டம். இது மாபெரும் ஒன்றாகத் தோன்றலாம். ஆனால் இது மிகவும் தேவையான ஒன்று. இதற்கான பணம் எங்கே என்று நீங்கள் கேட்கலாம், பணம் தேவையில்லை. பணம் என்பது ஒன்றுமே இல்லை. கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாக, அடுத்தவேளை உணவு எங்கிருந்து வரும் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் எனக்குத் தேவையான பணமும் மற்ற எல்லாமே என்னிடம் வந்து கொண்டுதான் இருக்கிறது. ஏனென்றால் அவை என் அடிமைகள், நான் அவைகளின் அடிமை அல்ல. பணமும் பிறவும் கட்டாயம் வரும். கட்டாயம்—இதுதான் வார்த்தை. ஆனால் மனிதர்கள் எங்கே? இதுவே கேள்வி.

சென்னை இளைஞர்களே, என் நம்பிக்கை உங்களிடம் தான் இருக்கிறது. உங்கள் நாட்டின் அழைப்பிற்குச் செவிசாய்ப்பீர்களா? என்னை நம்புவதற்கான துணிவு உங்களிடம் இருக்குமானால் உங்கள் ஒவ்வொருவருக்கும் பொன்னான எதிர்காலம் இருக்கும். குழந்தையாக இருந்தபோது நான் கொண்டிருந்த நம்பிக்கை, இப்போது நான் செயல்படுத்திக் கொண்டிருக்கின்ற நம்பிக்கை—அதுபோன்ற அசைக்க முடியாத நம்பிக்கையை உங்களிடம் நீங்கள் கொள்ளுங்கள். அத்தகைய மகத்தான நம்பிக்கையை, ஒவ்வோர் ஆன்மாவிலும் எல்லையற்ற ஆற்றல் இருக்கிறது என்ற நம்பிக்கையை நீங்கள் ஒவ்வொருவரும் கொண்டீர்களானால் இந்தியா முழுவதையும் நீங்கள் புதுப்பித்து விடலாம். ஆகா! அதன்பிறகு சூரியனின் கீழ் உள்ள ஒவ்வொரு நாட்டிற்கும் நாம் போவோம். உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டையும் உருவாக்குகின்ற பல சக்திகளுள் ஒன்றாக நமது கருத்துக்களும் விளங்கும். இந்தியாவிலும் வெளியிலும் இருக்கின்ற ஒவ்வோர் இனத்தின் வாழ்க்கையிலும் நாம் புக வேண்டும். இதற்காக இப்போது நாம் பாடுபட்டாக வேண்டும்.

அதற்காக எனக்கு இளைஞர்கள் தேவை. 'இளமையும் வலிமையும் ஆரோக்கியமும் கூர்மையான அறிவும்'[1]

1. யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக: ஆசிஷ்டோ த்ரடிஷ்டோ பலிஷ்ட:।
—தைத்திரீய உபநிடதம், 2. 8. 1

உள்ளவர்களே இறைவனை அடைய முடியும் என்று வேதங்கள் கூறுகின்றன. எதிர்காலத்தைப்பற்றி முடிவுசெய்ய ஏற்ற தருணம் உங்களிடம் இளமைத் துடிப்பு ததும்புகின்ற இந்த நேரம்தான் களைத்து ஓய்ந்து போகும்போது அல்ல. இளமையின் வேகமும் உற்சாகமும் இருக்கும் இந்த நேரம்தான் உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிப்பதற்கு உரிய நேரமாகும். வேலை செய்யுங்கள், அதற்கான நேரம் இதுதான். புத்தம் புதிய, தொடப்படாத, முகரப்படாத மலர்கள் மட்டுமே இறைவனின் திருவடிகளில் சமர்ப்பிக்கப்படும், அத்தகைய மலர்களையே அவர் ஏற்றுக்கொள்கிறார். எனவே கிளர்ந்தெழுங்கள். வாழ்க்கை குறுகியது. வழக்கறிஞர்களாகி, சண்டைசச்சரவுகளில் ஈடுபடுவது போன்ற வேலைகளைவிட, நாடுவதற்கான மகத்தான வேலைகள் பல உள்ளன. உங்கள் இனத்தின் நன்மைக்காக, மனித சமுதாயத்தின் நன்மைக்காக நீங்கள் உங்களைத் தியாகம் செய்து கொள்வது அவற்றைவிட எவ்வளவோ உயர்ந்த வேலை!

இந்த வாழ்க்கையில் என்ன இருக்கிறது? நீங்கள் இந்துக்கள். வாழ்க்கை நிலையானது என்பதில் இயல்பானதொரு நம்பிக்கை உங்களிடம் இருக்கும். சில நேரங்களில் இளைஞர்கள் சிலர் என்னிடம் வந்து நாத்திகம் பேசுகிறார்கள். ஓர் இந்து, நாத்திகன் ஆவான் என்பதை நான் நம்பவில்லை. அவன் ஐரோப்பிய புத்தகங்களைப் படிக்கலாம், தன்னை ஓர் உலகாயதனாகக் கருதவும் செய்யலாம். ஆனால் அவையெல்லாம் குறுகிய காலத்திற்குத்தான். நாத்திகம் உங்கள் ரத்தத்தில் இல்லை. உங்கள் அமைப்பில், உங்களுள் இல்லாத ஒன்றை உங்களால் நம்ப முடியாது. அப்படி நீங்கள் நம்ப முயல்வது ஒரு பயனற்ற வேலை. அத்தகைய காரியங்களைச் செய்ய முயலாதீர்கள். நான் இளைஞனாக இருந்தபோது ஒருமுறை நானும் இந்த முயற்சியில் இறங்கினேன். ஆனால் முடியவில்லை. வாழ்க்கை குறுகியது; ஆன்மா அழியாதது, என்றும் இருப்பது. ஒன்று மட்டும் நிச்சயம்—அது மரணம். எனவே உயர்ந்ததோர் லட்சியத்தைக் கைக்கொள்வோம், அதற்காக நம் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணிப்போம். இது நமது தீர்மானமாக இருக்கட்டும். 'தன் மக்களின் மோட்சத்திற்காக மீண்டும் மீண்டும் வருகின்ற இறைவன்'—இவை நமது சாஸ்திரங்களின் வார்த்தைகள்!—மகத்தான அந்த ஸ்ரீகிருஷ்ணர் நம்மை ஆசீர்வதிப்பாராக, நம் லட்சியங்கள் நிறைவேறும் பாதையில் அழைத்துச் செல்வாராக! ❑

## கல்கத்தாவில்

சுவாமிஜி பிப்ரவரி 19-ஆம் நாள் கல்கத்தாவை அடைந்தார். வரவேற்பு விழா ஒரு வாரத்திற்குப் பின்னர் பிப்ரவரி 28-ஆம் நாள் நடைபெற்றது. தலைவரின் சுருக்கமான அறிமுகத்திற்குப் பின்பு வரவேற்புரையை வாசித்து, வெள்ளிப் பேழையில் வைத்து சுவாமிஜியிடம் கொடுத்தனர். அதன்பிறகு சுவாமிஜி பேசினார்:

### 1. வரவேற்புக்குப் பதிலுரை

'ஒருவன் அண்ட சராசரங்களில் தன் தனித்தன்மையை இழக்க விரும்புகிறான்; ஒருவன் துறந்து செல்ல விரும்புகிறான், பறந்து போக விரும்புகிறான், உடலுடனும் கடந்த காலத்துடனுமான எல்லா தொடர்புகளிலிருந்தும் தன்னை விலக்கிக்கொள்ள விரும்புகிறான்; ஒருவன், தான் ஒரு மனிதன் என்பதைக்கூட மறப்பதற்காகத் தீவிரமாக உழைக்கிறான். எனினும் அவனது இதய ஆழங்களில் ஒரு மெல்லோசை எழுகிறது, ஓர் இழை அதிர்கிறது, ஒரு மென்குரல் கேட்கிறது. மேலைநாடோ கிழை நாடோ சொந்த வீடுதான் மிகச் சிறந்தது என்று அது அவனிடம் கூறுகிறது. ஆங்கிலப் பேரரசின் தலைநகர[1] மக்களே! உங்கள் முன்னால் நான் நிற்கிறேன், ஒரு துறவியாக அல்ல, ஒரு மத போதகனாகவும் அல்ல; ஒரு கல்கத்தா சிறுவனாக, முன்பு உங்களிடம் எப்படிப் பேசிக் கொண்டிருந்தேனோ, அதே சிறு வனாக உங்கள்முன் வந்து நிற்கிறேன். ஆகா, இந்த நகரத்தின் தெருப் புழுதியில் நான் உட்கார விரும்புகிறேன். உட்கார்ந்து, என் சகோதரர்களே, பிள்ளைப் பருவத்தின் சுதந்திரத்தோடு என் மனத்தில் உள்ளதையெல்லாம் உங்களிடம் சொல்ல விரும்பு கிறேன். எனவே 'சகோதரன்' என்ற இணையற்ற வார்த்தையால் என்னை அழைத்ததற்காக என் இதயம் நிறைந்த நன்றிகளை ஏற்றுக்கொள்ளுங்கள்.

ஆம், நான் உங்கள் சகோதரன், நீங்கள் என் சகோதரர்கள். நான் மேலை நாட்டிலிருந்து இந்தியா புறப்படும்போது ஓர் ஆங்கிலேய நண்பர் என்னிடம், 'சுவாமி, நான்கு ஆண்டுகள் ஆடம்பரமான, சிறப்பான, சக்திவாய்ந்த மேலை நாடுகளில்

1. அப்போது கல்கத்தா இந்தியாவின் தலைநகராக இருந்தது.

பழகிய நீங்கள், இப்போது உங்கள் நாட்டைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டார். 'இந்தியாவை விட்டு வந்த போது நான் அதை நேசித்தேன். ஆனால் இப்போது அதன் தூசிகூட எனக்குப் புனிதமானதாகிவிட்டது, அங்கு வீசும் காற்று எனக்குப் புனிதமானது, அது இப்போது எனது புனித பூமி, புண்ணியத்தலம், தீர்த்தத்தலம்' என்று மட்டுமே அதற்கு என்னால் பதில் கூற முடிந்தது.

கல்கத்தா நகர மக்களே! என் சகோதரர்களே! என்மீது நீங்கள் காட்டிய கருணைக்கு என்னால் நன்றி கூற இயலாது. அதோடு நான் உங்களுக்கு நன்றி செலுத்த வேண்டியது இல்லையே, ஏனென்றால் நீங்கள் என் சகோதரர்கள் அல்லவா! ஒரு சகோதரன், ஓர் இந்துச் சகோதரன் செய்ய வேண்டிய கடமையைத்தான் நீங்கள் செய்தீர்கள். ஆகா, இத்தகைய குடும்பப் பிணைப்பு, இத்தகைய உறவு முறைகள், இத்தகைய அன்பு எல்லாம் நம் தாய்நாட்டின் எல்லைகளுக்கு அப்பால் எங்குமே இல்லை.

சர்வமத மகாசபை ஒரு பெரிய நிகழ்ச்சி, சந்தேகமே இல்லை. அந்தக் கூட்டத்தை நடத்தியவர்களுக்கு நமது நாட்டின் பல நகரங்களிலிருந்தும் நாம் நன்றி செலுத்தினோம். நம்மிடம் அவர்கள் காட்டிய கனிவிற்கு நமது எல்லா நன்றிகளும் பொருத் தமானதே. ஆனால் அதுபற்றிய சில உண்மைகளைக் கூற என்னை அனுமதியுங்கள். ஏறி சவாரி செய்ய அவர்களுக்கு ஒரு குதிரை வேண்டியிருந்தது. கிறிஸ்தவர் அல்லாதவர்களைச் சற்றே தலைகுனியச் செய்வதற்கான ஒரு வாய்ப்பாக அந்த மாநாட்டைப் பயன்படுத்த அங்குள்ள சிலர் விரும்பினர். ஆனால் விதியோ அது வேறுவிதமாக நடக்க வேண்டும் என்றிருந்தது, அப்படி நடக்காமலிருக்கவும் முடியாது. அவர் களுள் பலரும் கனிவுடன்தான் பழகினார்கள், அவர்களுக்கு வேண்டிய அளவு நன்றி கூறிவிட்டோம்.

அமெரிக்காவில் எனது செய்தியும் சர்வமத மகாசபைக் காக இருக்கவில்லை. அந்தச் சபை என்பது வழியில் வந்து சேர்ந்த ஒன்று, அது ஓர் ஆரம்பம், ஒரு வாய்ப்பு மட்டுமே. அதற்காக அந்தப் பேரவையின் உறுப்பினர்களுக்கு நமது மனமார்ந்த நன்றி! ஆனால் உண்மையில் நாம் நன்றிக்கடன் பட்டிருப்பது என்னவோ கனிவுமயமான இதயம் கொண்ட விருந்தினரைஉபசரிக்கின்ற உள்ளம் கொண்ட அமெரிக்காவின் மகத்தான மக்களுக்குத்தான். மாபெரும் நாடாகிய அந்த

அமெரிக்காவில்தான் உலகில் வேறு எந்த நாட்டையும்விட சகோதரத்துவம் வளர்ந்திருக்கிறது. ஓர் அமெரிக்கன் உங்களுடன் ரயிலில் ஐந்து நிமிடம் பயணம் செய்தால் போதும், அவன் உங்களுக்கு நண்பனாகிவிடுவான், அடுத்த நிமிடம் உங்களைத் தன் வீட்டில் விருந்திற்கு அழைப்பான், தன் வாழ்வின் ரகசியங்களை உங்களிடம் திறந்துவிடுவான். இது அமெரிக்க இனத்தின் குணம். நாமும் அதை வெகுவாகப் பாராட்டுகிறோம். அவர்கள் என்னிடம் காட்டிய கனிவை வார்த்தைகளால் விளக்க முடியாது. அவர்கள் என்னை எவ்வளவு அன்பாக, இதமாக நடத்தினார்கள் என்பதை நான் சொல்லத் தொடங்கினால், முடிவதற்குப் பல ஆண்டுகள் ஆகும்.

அதுபோலவே அட்லாண்டிக் பெருங்கடலுக்கு மறுகரை யில் உள்ள மற்ற நாட்டிற்கும் நம் நன்றிகள் உரித்தாகுக. ஆங்கிலேயர்களிடம் எனக்கு இருந்ததைவிட அதிக வெறுப் புடன் ஒருவர் அந்த ஆங்கில மண்ணில் காலடி வைத்திருக்க முடியாது. இந்த மேடையில் அமர்ந்திருக்கின்ற என் ஆங்கிலேய நண்பர்களே அதற்குச் சாட்சி. ஆனால் அவர்களுடன் அதிக நாள் வாழவாழ, அந்த நாட்டின் தேசிய வாழ்க்கையாகிய எந்திரம் வேலை செய்கின்ற விதத்தைப் பார்த்தபோது, அவர்களிடம்கலந்து பழகியபோது, அந்த நாட்டின் இதயத் துடிப்பு எங்கே இருக்கிறது என்பதை நான் அறிந்தபோது மிக அதிகமாக அவர்களை நேசிக்க ஆரம்பித்தேன். என் சகோதரர் களே! இப்போது இங்கே என்னைவிட ஆங்கிலேயர்களை அதிகமாக நேசிப்பவர்கள் யாரும் இருக்க முடியாது.

அங்கே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும், அவர்களோடு கலந்து பழக வேண்டும். நம் தேசியத் தத்துவமான வேதாந்தம், எல்லா கஷ்டங்களுக்கும் எல்லா துன்பங்களுக்கும் ஒரே காரணத்தைச் சுருக்கமாக அறியாமை என்று கூறுகிறது. இங்கேகூட நமக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இடையில் ஏற்படு கின்ற பிரச்சினைகளுக்கும் முக்கியக் காரணம் இந்த அறியாமை தான். அவர்களை நாம் அறிந்து கொள்ளவில்லை, நம்மை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை என்பதுதான்.

துரதிர்ஷ்டவசமாக, மேலை நாட்டினருக்கு ஆன்மீகம், ஏன், ஒழுக்கம்கூட, எப்போதும் உலக ஆதாயத்துடன் தொடர்பு கொண்டதாகவே உள்ளது. ஆங்கிலேயனோ அல்லது வேறெந்த மேலைநாட்டைச் சார்ந்தவனோ நம் நாட்டிற்கு வரும்போது இங்கே வறுமையும் துன்பமுமே அவனுக்குத் தெரிகிறது. எனவே

இங்கே மதமோ, ஏன், ஒழுக்கமோகூட இருக்க முடியாது என்று உடனே முடிவுகட்டி விடுகிறான். அவனுக்கு அவனது அனுபவம் உண்மையே. கடுமையான குளிர் போன்ற காலநிலைகளின் காரணமாகவும், மற்றும் பல சூழ்நிலைகளின் காரணமாகவும் ஐரோப்பாவில் வறுமையும் பாவமும் ஒன்றோடொன்று சேர்ந்தே உள்ளன. ஆனால் இந்தியாவில் அப்படி அல்ல. இந்தியாவில் ஒருவன் எந்த அளவு ஏழையோ அந்த அளவிற்கு ஒழுக்கம் நிறைந்தவனாக இருப்பதையே நான் காண்கிறேன்.

இதைப் புரிந்துகொள்ள காலம் ஆகும். இந்திய தேசிய வாழ்வின் ரகசியமான இதனைப் புரிந்துகொள்வதற்காகச் சற்று நின்று நிதானிக்கின்ற வெளிநாட்டினர் எத்தனை பேர் இருக்கிறார்கள்? இந்த நாட்டை ஆராய்வதற்கும் அறிந்துகொள்வதற்குமான பொறுமை மிகச் சிலரிடமே உள்ளது. இங்கு, இங்கு மட்டுமே, இந்த ஓர் இனத்தில் மட்டுமே வறுமை என்பது குற்றமாக இல்லை, வறுமை என்பது பாவமாக இல்லை. இந்த ஓர் இனத்தில் மட்டும்தான் வறுமை என்பது குற்றமாக்கப்படாதது மட்டுமல்ல, வறுமை தெய்வீகமாக்கப்பட்டுள்ளது. இந்த நாட்டில்தான் பிச்சைக்காரனின் உடை மிகச் சிறந்த உடையாகக் கருதப்படுகிறது.

அதுபோலவே மேலை நாட்டின் சமுதாய அமைப்புகளையும் பொறுமையோடு ஆராய்ந்து பார்க்க வேண்டுமே தவிர, அவசரப்பட்டுப் பைத்தியக்காரத்தனமான முடிவுகளுக்கு வந்துவிடக் கூடாது. ஆண்களும் பெண்களும் நெருங்கிப் பழகுதல் போன்ற அவர்களின் பல்வேறு பழக்க வழக்கங்கள், நடைமுறைகள் போன்ற அனைத்திற்கும் அவர்களைப் பொறுத்தவரை பொருள் உள்ளது, மகத்தான சிறப்புக்கள் உள்ளன. பொறுமையாக ஆராய்ந்தால் அவைகளை நீங்கள் அறிந்துகொள்ளலாம். அதற்காக நாம் அவர்களின் பழக்க வழக்கங்களை ஏற்க வேண்டும் என்றோ, அல்லது அவர்கள் நமது பழக்கங்களை ஏற்க வேண்டும் என்றோ நான் கூறவில்லை. ஒவ்வோர் இனத்தின் பழக்க வழக்கங்களும் நடைமுறைகளும் அந்த இனத்தின் நூற்றுக்கணக்கான ஆண்டுகளின் பொறுமையான வளர்ச்சியால் தோன்றியவை. அவை ஒவ்வொன்றும் ஆழமான பொருள் பொதிந்தவை. எனவே நாம் அவர்களின் பழக்க வழக்கங்களைக் கேலி செய்ய வேண்டாம், அவர்களும் நமது பழக்க வழக்கங்களைக் கேலி செய்ய வேண்டாம்.

இந்தக் கூட்டத்தில் மற்றொரு கருத்தையும் தெரிவிக்க விரும்புகிறேன். அமெரிக்காவைவிட இங்கிலாந்தில் என் வேலை மிகவும் திருப்திகரமாக உள்ளது. ஆங்கிலேயர்கள் துணிவுள்ளவர்கள், தைரியம் வாய்ந்தவர்கள், உறுதியானவர்கள்; அவர்களின் தலை ஓடு—இந்த வார்த்தையை நான் பயன்படுத்த முடியுமானால்—ஆம் அவர்களின் தலைஓடு மற்றவர்களுடையதைவிடச் சிறிது கனமாக இருக்கிறது. அவன் ஒருமுறை அதற்குள் ஒரு கருத்தைப் போட்டுவிட்டால், அது வீணாவதே இல்லை. அந்த இனத்தின் அளவற்ற செயல்முறைத் திறனும் ஆற்றலும் அந்தக் கருத்தை முளைக்கச் செய்து விரைவிலேயே பலனளிக்கச் செய்கிறது. வேறு எந்த நாட்டிலும் இப்படி இல்லை. அந்த அளவற்ற செயல்முறைத் திறன், அந்த அளவற்ற வீர்யம்—இவற்றை நீங்கள் வேறெங்கும் காண முடியாது. அவர்களிடம் கற்பனை வளம் குறைவு, ஆனால் செயல்திறன் அதிகம். இந்த ஆங்கிலேய இதயத்தின் ஆழத்தை அதன் முக்கியப் பிரவாகத்தை யார் அறிவார்கள்? அங்கேதான் எத்தனை கற்பனை வளம், எத்தனையெத்தனை உணர்ச்சிகள்! அது வீரர்களின் நாடு. அவர்கள்தான் உண்மையான க்ஷத்திரியர்கள். அவர்கள் கற்பது உணர்ச்சிகளை மறைத்துக்கொள்ளவே, ஒருபோதும் வெளியே காட்டுவதற்காக அல்ல. அதற்கான கல்வியே குழந்தைப் பருவத்திலிருந்து அவர்களுக்கு அளிக்கப்படுகிறது. ஆங்கிலேயன், ஆண் ஏன், ஆங்கிலேயப் பெண்கூட, உணர்ச்சிகளை வெளிக்காட்டுவதை எளிதில் நீங்கள் பார்க்க முடியாது. தைரியம் மிகுந்த வங்காளியைக்கூடத் தடுமாற வைக்கின்ற வேலைகளை ஆங்கிலப் பெண்கள் சர்வசாதாரணமாகச் செய்வதையும் கடினமான காரியங்களை நிர்வகிப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் ஆங்கிலேய இதயத்தின் வீரம் என்னும் இத்தகைய புறத் தோற்றத்திற்குள், தீரம் என்ற போர்வைக்குப் பின்னால் அதன் ஆழத்தில் உணர்ச்சிப் பேரூற்று இருக்கவே செய்கிறது. அதை எப்படி அடைவது என்பதை மட்டும் நீங்கள் அறிந்துகொண்டால், நீங்கள் அவர்களோடு நெருக்கமான தொடர்பு கொண்டு கலந்து பழகினால், அவர்கள் தங்கள் இதயத்தைத் திறப்பார்கள், என்றென்றைக்குமாக உங்கள் நண்பர்களாகி விடுவார்கள், உங்கள் வேலையாட்களாகி விடுவார்கள். எனவே என் கருத்துப்படி, என் வேலை வேறு எங்கேயும்விட இங்கிலாந்தில்தான் மிகுந்த மன நிறைவைத் தருவதாக உள்ளது. நான் நாளையே இறந்துபோனாலும்

இங்கிலாந்திலுள்ள பணி அழிந்து போகாது, மாறாக, வளர்ந்து கொண்டே போகும் என்பதில் எனக்கு உறுதி உள்ளது.

சகோதரர்களே! என் இதய ஆழத்திலுள்ள மற்றொரு பகுதியைத் தொட்டுவிட்டீர்கள். என் இதய ஆழங்களின் மிகவும் உணர்ச்சிமயமான பகுதி அது. வாழ்வில் என் ஆச்சாரியர், என் குரு, என் தலைவர், என் லட்சியம், என் கடவுள் எல்லாமுமாகிய ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைப்பற்றி நீங்கள் இங்கே குறிப்பிட்டதே அது. எண்ணங்களாலோ வார்த்தைகளாலோ செயல்களாலோ என்னால் இந்த உலகத்தில் ஏதாவது சாதிக்கப் பட்டிருக்கிறது என்றால், இந்த உலகத்தில் உள்ள ஒருவரையாவது காப்பாற்றக்கூடிய ஒரு வார்த்தை என் வாயிலிருந்து பிறந்தது என்றால், அதில் எனக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை, எல்லாம் அவருடையவை. ஆனால் என் நாவிலிருந்து சாபங்கள் வந்திருக்குமானால், என்னிடமிருந்து வெறுப்பு வெளிப்பட்டிருக்குமானால், அவையெல்லாம் என்னுடையவை; அவருடையவை அல்ல. பலவீனமான அனைத்தும் என்னுடையவை. உயிர்த்துடிப்பைத் தருபவை, வலிமையைத் தருபவை, தூயவை, புனிதமானவை அனைத்தும் அவர் தந்த உத்வேகத்தால் வந்தவை, அவரது வார்த்தைகள். ஆம், என் நண்பர்களே! அவரை இந்த உலகம் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. உலக வரலாற்றில் தீர்க்கதரிசிகளைப் பற்றியும் அவர்களுடைய வரலாறுகளையும் நாம் படித்திருக்கிறோம். பல நூற்றாண்டுகளாக அவர்களுடைய சீடர்கள் எழுதிய நூல்களின் மூலமாகவும் அந்தச் சீடர்களின் பணிகள் மூலமாகவும், அவை நம்மிடம் வந்து சேர்ந்திருக்கின்றன. அந்த மாபெரும் தீர்க்கதரிசிகளின் மகத்தான வரலாறுகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சீரமைக்கப்பட்டு, வடிவமைக்கப்பட்டே நம்மை அடைந்துள்ளன. ஆனால் யாருடைய வாழ்க்கையை நான் என் கண்களால் கண்டேனோ, யாருடைய நிழலில் நான் வளர்ந்தேனோ, யாருடைய திருவடிகளில் அமர்ந்து நான் அனைத்தையும் கற்றேனோ அந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் அருள்பிரகாசத்திற்கு யாரும் ஈடாகமாட்டார்கள். நண்பர்களே,

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்॥
பரித்ராணாய ஸாதூனாம் வினாசாய ச துஷ்க்ருதாம்।
தர்ம ஸம்ஸ்த்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே॥

—'பரத குலத்தில் உதித்தவனே, எப்போதெல்லாம் தர்மம் குன்றி, அதர்மம் மேலெழுகிறதோ, அப்போதெல்லாம் நான் உடல் தரிக்கிறேன். நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் யுகந்தோறும் நான் அவதாரம் செய்கிறேன்'[1] என்ற பிரபலமான சுலோகங்கள் நீங்கள் அறிந்ததே.

இன்னொன்றையும் நீங்கள் புரிந்துகொண்டாக வேண்டும். அத்தகையதோர் அவதாரம் இன்று நம்முன் நிகழ்ந்திருக்கிறது. ஆன்மீகத்தின் இத்தகைய பேரலையொன்று வருமுன் ஆற்றல் குறைந்த பல்வேறு சிறிய சுழிகள் சமுதாயத்தில் அங்கங்கே தோன்றுகின்றன. அந்தப் பேரலை கிளம்பும்போது முதலில் யாருக்கும் தெரிவதில்லை, யாராலும் உணரப்படுவதில்லை, யாருடைய சிந்தனைக்கும் எட்டுவதில்லை. பின்னர் அது பரிமாணத்தில் கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாகி, சிறுசிறு சுழிகள் அனைத்தையும் விழுங்குவதுபோல் தன்னுள் அடக்கிய படி, மிகவும் பெரியதாகி, மாபெரும் அலையாக எழுந்து, யாராலும் எதிர்க்க முடியாத ஆற்றலோடு சமுதாயத்தின்மீது வீழ்ந்து பரவுகிறது. அத்தகைய நிகழ்ச்சி இப்போது நம் கண்முன் நடந்து கொண்டிருக்கிறது. உங்களுக்குக் கண்கள் இருந்தால் நீங்கள் காண்பீர்கள், உங்கள் இதயம் திறந்திருந்தால், நீங்கள் அதைப் பெறுவீர்கள், உண்மையைத் தேடுபவர்களாக இருந் தால் அதைக் காண்பீர்கள். இன்றைய அந்த அறிகுறிகளைக் காணாதவன் குருடன், குருடனே.

ஆகா, ஓர் ஏழை பிராமண குலத்தில் பிறந்த இந்தச் சிறுவனை, உங்களுள் மிகச் சிலரே கேள்விப்பட்டிருக்கக்கூடிய எங்கோ ஒதுக்குப்புறத்திலிருக்கும் ஒரு குக்கிராமத்தில் பிறந்த இந்தச் சிறுவனை, இந்த நாட்டின் வழிபாட்டை எல்லாம் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தூற்றிக் கொண்டிருந்த நாடுகள் எல்லாம் வழிபடுகின்றன. யாருடைய சக்தி இது? என் சக்தியா, உங்கள் சக்தியா? இங்கே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம் சராக வெளிப்பட்ட சக்தியே இது; அதைத் தவிர வேறு எது வும் இல்லை. ஏனெனில் நீங்கள், நான், மகரிஷிகள், தீர்க்க தரிசிகள், ஏன், அவதார புருஷர்கள், பிரபஞ்சம் மற்றும் எல் லாமே ஒரு சக்தியின் ஏறக்குறைய தனிப்படுத்தப்பட்ட, ஏறக் குறைய குவிக்கப்பட்ட வெளிப்பாடுகளே தவிர வேறல்ல.

---

1. கீதை, 4.7,8.

இப்போது தோன்றியிருப்பது அளவற்ற சக்தியின் வெளிப்பாடு. அதனுடைய செயல்பாடுகளின் வெறும் ஆரம்பத்தையே நாம் இப்போது காண்கிறோம். இந்தத் தலைமுறை முடிவதற்குமுன், நீங்கள் அந்த ஆற்றலின் அதியற்புதமான செயல்பாடுகளைக் காண்பீர்கள். இந்தியாவின் மறுமலர்ச்சிக்கான தகுந்த தருணத் தில் அது வந்திருக்கிறது. ஏனென்றால் எந்த ஆதார சக்தி இந்தியாவை எப்போதும் செயல்பட்டுக் கொண்டிருக்கச் செய் யுமோ அதை நாம் அவ்வப்போது மறந்து விடுகிறோம்.

ஒவ்வொரு நாடும் செயல்படுவதற்கு தனக்கென்று தனிப் பட்ட வழியைக் கொண்டிருக்கிறது. சில நாடுகள் அரசியல் மூலம் வேலை செய்யும்; சில, சமுதாயச் சீர்திருத்தத்தின்மூலம் வேலை செய்யும்; சில, வேறு வழிகளின்மூலம் வேலை செய்யும். நம்மைப் பொறுத்தவரை நாம் செயல்படுவதற்கான ஒரே வழி மதம். மதத்தைக்கூட அரசியலின் மூலம்தான் ஆங்கிலேயர்கள் புரிந்துகொள்வார்கள். அமெரிக்கர்களோ, ஒருவேளை சமுதாயச் சீர்திருத்தத்தின் மூலம்தான் மதத்தையே புரிந்து கொள்வார்கள். ஆனால் அரசியலைக்கூட மதத்தின் வாயிலாகக் கொடுத்தால்தான் இந்துவால் புரிந்துகொள்ள முடியும்; சமூக இயலும் மதத்தின் வழியேதான் வர வேண்டும். எல்லாமே மதத்தின் மூலமாகத்தான் வந்தாக வேண்டும். ஏனென்றால் அதுதான் ஆதார சுருதி, மற்றவையெல்லாம் நம் தேசிய சங்கீதத் தின் பல்வேறு ராகங்கள், அவ்வளவுதான். அதற்கே அபாயம் வந்துவிட்டது. நமது தேசிய வாழ்க்கையின் இந்த ஆதார சுருதியையே மாற்றிவிடப் போகிறோமோ என்று தோன்றியது, நமது இருப்பிற்கே முதுகெலும்பு போன்ற ஆன்மீகத்தை மாற்றி விட்டு, அதற்குப் பதிலாக அரசியலை முதுகெலும்பாகக் கொள்ள முயற்சி செய்வதுபோல் தோன்றியது. அந்த முயற்சி வெற்றி பெற்றிருந்தால் முழு நாசமே அதன் விளைவாக இருந் திருக்கும். ஆனால் அப்படி நடப்பது விதியாக இருக்கவில்லை. அதனால்தான் இந்தச் சக்தி வெளிப்பட்டிருக்கிறது.

இந்த மாபெரும் ரிஷியை நீங்கள் எந்த வகையில் புரிந்து கொள்ளப் போகிறீர்கள் என்ற கவலை எனக்குக் கிடையாது. நீங்கள் அவருக்கு எவ்வளவு மரியாதை கொடுக்கப் போகிறீர்கள் என்பதும் பெரிய விஷயம் அல்ல. ஆனால் பல நூற்றாண்டு களாக இந்தியாவில் இல்லாதவகையில் ஓர் அற்புதமான சக்தி இப்போது இங்கே வெளிப்பட்டிருக்கிறது என்ற உண்மையை உங்களிடம் நேருக்கு நேர் கூறிச் சவால் விடுகிறேன். இந்தச்

சக்தியை ஆராய்வதும், இந்தச் சக்தியின் மூலமாக இந்தியாவின் மறுமலர்ச்சிக்கும் நன்மைக்கும், அதேபோல் மனிதகுலம் முழுவதன் நன்மைக்கும் என்னென்ன நடந்துள்ளன என்பதை அறிவதும் இந்துக்கள் என்ற நிலையில் உங்கள் கடமை. ஆகா, உலகம்தழுவிய மதம் மற்றும் பல்வேறு பிரிவுகளிடையே சகோதரத்துவம் பற்றிய கருத்துக்கள்பற்றிச் சிந்திப்பதற்கும் விவாதிப்பதற்கும் வெகுகாலத்திற்கு முன்பே, இங்கே, இந்த நகரத்தின் அருகிலேயே, தமது வாழ்க்கையே ஒரு மத மகாசபை யாக அமைந்திருந்த ஒரு மனிதர் வாழ்ந்தார்.

நமது சாஸ்திரங்களில் உள்ள மிகவுயர்ந்த லட்சியம் உருவ மற்ற கடவுள்கருத்தாகும். ஆனால் இங்கே இருக்கும் ஒவ்வொரு வரும் கடவுளை உருவமற்ற நிலையில் உணரும் அளவிற்கு உயர்ந்தவர்களாக இருந்திருந்தால் அது வேறு விஷயம். ஆனால் அது நடக்க முடியாது. பெரும்பான்மையான மக்களுக்கு உருவக் கடவுள் லட்சியம் முற்றிலும் அவசியமான ஒன்று. வாழ்வின் இத்தகைய மாபெரும் லட்சியங்களில் ஒன்றின்கீழ் ஆர்வத்துடன் திரளாமல் எந்த நாடும் முன்னேற முடியாது, மகத்தான நாடாக முடியாது, செயல்படக்கூட முடியாது. அரசியல் லட்சியங்கள், அரசியல் லட்சியங்களின் பிரதிநிதிகளான தலைவர்கள், ஏன் சமுதாய லட்சியங்கள் மற்றும் பொருளாதார லட்சியங்கள் எதற்குமே இந்தியாவில் எந்த ஆற்றலும் கிடையாது. நமக்கு நம் முன்னால் வேண்டுவது ஆன்மீக லட்சியங்கள், மகத்தான ஆன்மீகச் செம்மல்களைச் சுற்றியே நாம் ஒன்று சேர விரும்புகிறோம்.

நமது தலைவர்கள் நிச்சயம் ஆன்மீகவாதிகளாகவே இருக்க வேண்டும். அத்தகைய தலைவராக நமக்கு அளிக்கப்பட்டவரே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர். என் வார்த்தைகளைக் குறித்துக் கொள்ளுங்கள்—இந்த நாடு எழுச்சி பெற வேண்டுமானால், அது அவர் பெயரின் கீழ் உற்சாகத்தோடு திரள வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைப் பிரச்சாரம் செய்வது நீங்களா, நானா, அல்லது வேறு யாராவதா என்பது பெரிதல்ல. ஆனால் நான் அவரை உங்கள் முன் வைக்கிறேன், எடைபோட வேண் டியவர்கள் நீங்களே. நம் இனத்தின் நன்மைக்காக, நம் நாட்டின் நன்மைக்காக, அதை இப்போதே செய்யுங்கள். வாழ்வின் இந்த மாபெரும் லட்சியத்தை எவ்வாறு பயன்படுத்துவது என் பதை உடனடியாகத் தீர்மானியுங்கள். ஒரு விஷயம்: அவரது வாழ்க்கை, இதுவரை நீங்கள் கண்ட, இன்னும் தெளிவாகச்

சொல்ல வேண்டுமானால், நீங்கள் இதுவரை படித்த மகா புருஷர்களின் வாழ்க்கைகளை எல்லாம்விட மிகமிகத் தூய்மை யானது. உங்களால் படிக்க முடிந்த, ஒருவேளை உங்களால் பார்க்க முடிந்த ஆன்மசக்தி வெளிப்பாடுகள் எதை விடவும் இது மிகமிகச் சிறப்பானது, மகோன்னதமானது. உங்கள் முன் அந்த உண்மை இருக்கிறது. அவர் மறைந்த பத்தே ஆண்டு களுள் இந்தச் சக்தி உலகையே வலம் வந்துவிட்டது. அந்த உண்மை உங்கள் முன்னே தெரிகிறது. கடமையால் உந்தப்பட்டு, நம் இனத்தின் நன்மைக்காக, நமது மதத்தின் நன்மைக்காக அந்த மகத்தான ஆன்மீக லட்சியத்தை நான் உங்கள் முன் வைக்கிறேன்.

என்னை வைத்து அவரை எடைபோடாதீர்கள். நான் வெறும் ஒரு பலவீனமான கருவி. என்னைப் பார்த்து அவரது குணநலனை எடைபோடாதீர்கள். நானும் சரி, மற்ற அவரது எந்தச் சீடர்களானாலும் சரி, நூற்றுக்கணக்கான ஆண்டுகள் செலவழித்தாலும் அவரது உண்மைத் தன்மையில் லட்சத்தில் ஒரு பங்கைக்கூட வாழ முடியாது, அவரது வாழ்க்கை அவ்வளவு மகத்தானது. ஆதலால் நீங்களே அவரை எடைபோடுங்கள். உங்கள் இதய ஆழங்களினுள் நித்திய சாட்சியான பரம்பொருள் வீற்றிருக்கிறார். அந்த இறைவன், அதே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் நம் நாட்டின் நன்மைக்காகவும், நமது நாட்டின் முன்னேற்றத்திற்காகவும், மனித குலத்தின் நன்மைக்காகவும் உங்கள் இதயத்தை மலரச் செய்யட்டும். நாம் உழைத்தாலும் உழைக்காவிட்டாலும் மறுமலர்ச்சி வரப்போவது திண்ணம். வந்தே தீரப் போகின்ற அந்த மாபெரும் மாறுதலுக்காகப் பாடு பட அவர் உங்களை உண்மையானவர்களாகவும் உறுதி யுடையவர்களாகவும் ஆக்கட்டும்! இறைவனின் வேலை உங் களுடைய அல்லது என்னுடைய விருப்பங்களை எதிர்பார்த்துக் காத்திருக்காது. வெறும் புழுதியிலிருந்தே தமக்குத் தேவையான செயல்வீரர்களை நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலுமாக உருவாக்கிக்கொள்ள அவரால் முடியும். அவரது திருவடிகளில் வேலை செய்வதற்கு நாம் அனுமதிக்கப்படுவது பெருமை, பெரும் பேறு.

இதிலிருந்து அந்தக் கருத்து விரிவடைகிறது. நீங்கள் குறிப்பிட்டதைப்போல், நாம் உலகை வெல்ல வேண்டும், வென் றேயாக வேண்டும். இந்தியா உலகத்தை வென்றாக வேண்டும், அதைவிடக் குறைவானது எதுவும் என் லட்சியமல்ல. இது

மிகப் பெரியதாக இருக்கலாம், உங்களுள் பலரையும் பிரமிக்க வைக்கலாம். ஆனால் இதைச் செய்தேயாக வேண்டும். உலகை நாம் வெல்ல வேண்டும் அல்லது சாக வேண்டும், வேறு வழி யில்லை. வாழ்க்கையின் அறிகுறி விரிவடைதல். நாம் வெளியே சென்றாக வேண்டும், விரிவடைய வேண்டும். வாழ்க்கையைக் காட்டுவோம், அல்லது அழுகிச் சீரழிந்து சாவோம். வேறு எந்த வழியும் இல்லை. இந்த இரண்டுள் ஒன்றைத் தேர்ந் தெடுங்கள்— வாழ்வு அல்லது சாவு.

நம் நாட்டில் நம்மிடையே நிலவுகின்ற அற்பத்தனமான பொறாமையையும் சண்டைசச்சரவுகளையும்பற்றி நமக்குத் தெரியும். என் வார்த்தையை நம்புங்கள்— உலகம் முழுவதுமே இதே கதைதான். அரசியலைத் தங்கள் வாழ்வாகக் கொண்டுள்ள நாடுகள் தங்களைக் காத்துக்கொள்ள அயல்நாட்டுக் கொள்கை களை வைத்துள்ளன. உள்நாட்டுச் சண்டைசச்சரவுகள் அளவை மீறும்போது, சண்டையிடுவதற்காக அயல் நாடுகளில் சிலரை அவர்கள் உருவாக்கிக் கொள்கிறார்கள், அப்போது உள்நாட்டுச் சண்டை நின்று விடுகிறது. இப்படி எந்த அயல்நாட்டுக் கொள்கையும் நம்மிடம் இல்லாததால் நமது சண்டைகள் தொடர்ந்த வண்ணம் உள்ளன. நமது சாஸ்திரங்களில் உள்ள உண்மைகளை உலக நாடுகளுக்கு உபதேசிப்பதே நமது நிலை யான அயல்நாட்டுக் கொள்கையாக இருக்க வேண்டும். உங் களுள் அரசியல் சார்புள்ளவர்களைக் கேட்கிறேன்— இந்தக் கொள்கை நம்மை ஓர் இனமாக ஒருங்கிணைக்கும் என்பதற்கு வேறு ஏதாவது நிரூபணம் உங்களுக்குத் தேவையா? இங்கு திரண்டுள்ள கூட்டமே போதிய சாட்சியாக இல்லையா!

இரண்டாவதாக, இத்தகைய சுயநல விஷயங்களை விட்டு விட்டால் சுயநலமற்ற மேன்மையான உயிரோட்டமுள்ள உதாரணங்கள் நமக்குப் பின்னால் நிலைகொண்டுள்ளன. இந்தியாவின் துன்பத்திற்கும் வீழ்ச்சிக்குமான முக்கிய காரணங் களுள் ஒன்று, அது தன்னைக் குறுக்கிக் கொண்டதாகும்; முத்துச்சிப்பி தன் வாயை இறுக்கமாக மூடிக் கொள்வதுபோல், தன்னிடமுள்ள செல்வங்களையும் பொக்கிஷங்களையும் பிற இனத்தினருக்குத் தர மறுத்ததாகும்; ஆரிய இனத்திற்கு வெளி யில் தாகத்தால் தவிக்கின்ற பிற நாடுகளுக்கு, உயிர்ச் சக்தியளிக் கின்ற உண்மைகளைத் தர மறுத்ததாகும். நாம் வெளிநாடு களுக்கும் செல்லவில்லை, சென்று பிற இனங்களையும் நம்மை யும் ஒப்பிட்டுப் பார்க்கவும் இல்லை—நமது வீழ்ச்சிக்கு இது

ஒரு மிக முக்கியமான காரணம். தற்போது இந்தியாவில் ஏதோ காணப்படுகின்ற சிறிய விழிப்புணர்ச்சியும் உயிர்த்துடிப்பும், இப்படி தனிமைப்பட்டு நின்ற நிலையை உடைத்து ராஜாராம் மோகன்ராய் வெளியேறிய நாளிலிருந்து தொடங்கியதாகும் —இது நீங்கள் அறிந்ததே. அந்த நாளிலிருந்து இந்திய வரலாற்றிற்கு ஒரு திருப்பம் உண்டாயிற்று, அது இப்போது நாள்தோறும் அதிவிரைவாக வளர்ந்து வருகிறது. கடந்த காலத்தில் நம்மிடம் சிறு ஓடைகளே ஓடிக்கொண்டிருந்தன என்றால், இப்போது பெருவெள்ளமே வரப்போகிறது. யாராலும் அதைத் தடுக்க முடியாது.

எனவே நாம் வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டும். கொடுத்தலும் வாங்கலுமே வாழ்க்கையின் ரகசியம். நாம் எப்போதுமே வாங்கிக் கொண்டுதான் இருக்க வேண்டுமா? மேலை நாட்டினரின் காலடியில் உட்கார்ந்து எல்லாவற்றையும், மதத்தைக்கூட அவர்களிடமிருந்துதான் கற்றுக்கொள்ள வேண்டுமா? எந்திரங்கள்பற்றி அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளலாம், வேறு பலவற்றையும் அவர்களிடமிருந்து கற்கலாம். ஆனால் நாமும் அவர்களுக்குச் சிலவற்றைக் கற்றுத் தர வேண்டும், அது நமது மதம், நமது ஆன்மீகம்.

முழுமையானதொரு நாகரீகத்திற்காக உலகம் காத்துக் கொண்டிருக்கிறது; அதற்கான அருஞ்செல்வங்கள் இந்தியாவிலிருந்து வெளிப்படுவதற்காகக் காத்திருக்கின்றன. இந்த இனத்தின் ஈடிணையற்ற பாரம்பரியமான ஆன்மீகத்திற்காக உலகம் காத்துக் கொண்டிருக்கிறது. நூற்றுக்கணக்கான ஆண்டுகள் துன்பங்களையும் சீரழிவுகளையும் சந்தித்த பின்னரும் நம் நாடு நெஞ்சோடு அணைத்துக் காப்பாற்றிக் கொண்டிருக்கின்ற அந்தப் புதையலுக்காக உலகம் காத்துக் கொண்டிருக்கிறது. நம் முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ள அற்புதப் புதையலுக்காக வெளிநாடுகள் எவ்வளவு ஆவலுடன் காத்திருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியாது. இங்கோ நாம் வெறும் பேச்சுக்களிலும் சண்டை சச்சரவுகளிலும் புனிதமானவற்றை ஏளனம் செய்வதிலும் கேலி செய்வதிலும் காலத்தை வீணடிக்கிறோம். புனிதமானவற்றைக் கேலி செய்வது என்பது ஏறக்குறைய நமது தேசியத் தீமையாகவே மாறிவிட்டது. இந்தியாவில் நமது முன்னோர்கள் பாதுகாத்து வைத்திருக்கின்ற அமுதத்தின் ஒரு சிறு துளியைப் பருகுவதற்காக நம் நாட்டின் எல்லைக்கு வெளியே லட்சக்கணக்கானோர் எவ்வளவு பசித்துடிப்புடன், எவ்வாறு

கைகளை நீட்டிக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதுபற்றி நாம் சிறிதே அறிவோம்.

எனவே நாம் வெளிநாடுகளுக்குச் சென்றாக வேண்டும். அவர்கள் தரக்கூடிய ஏதாவதைப் பெற்றுக்கொண்டு, பதிலாக நாம் அவர்களுக்கு ஆன்மீகத்தை அளிக்க வேண்டும். ஆன்மீகத்தின் அற்புத சாம்ராஜ்யத்தை அவர்களுக்கு அளித்து, அதற்குப் பதிலாக லௌகீகத்தின் அற்புத சாம்ராஜ்யத்தை நாம் பெற்றுக் கொள்வோம். நாம் எப்போதுமே மாணவர்களாக இருக்கக் கூடாது, ஆசிரியர்களாகவும் இருக்க வேண்டும். சமத்துவம் இல்லாமல் நட்பு இல்லை. ஒருவர் எப்போதும் ஆசிரியராகவும் மற்றொருவர் எப்போதும் அவர் காலடியில் அமர்ந்தபடியும் இருந்தால் சமத்துவம் ஏற்பட முடியாது. ஆங்கிலேயர்கள் அல்லது அமெரிக்கர்களோடு நீங்கள் சமமாக இருக்க விரும்பினால், அவர்களிடம் கற்றுக் கொள்வதைப் போல் நீங்கள் அவர்களுக்குக் கற்றுத் தரவும் வேண்டும். வரப்போகின்ற நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு உலகத்திற்குக் கற்றுத் தரவும் நம்மிடம் ஏராளமாக உள்ளன. இதைச் செய்தாக வேண்டும்.

நம் ரத்தத்தில் வேகமும் உற்சாகமும் வேண்டும். வங்காளிகளாகிய நாம் கற்பனைவளம் மிக்கவர்கள் என்று பாராட்டப் படுகிறோம், அது நமக்கு உண்டென்றே நானும் நம்புகிறேன். கற்பனை ஆர்வம் கொண்டதும் உணர்ச்சிவசப் படுகின்றதும் ஆனதோர் இனம் என்று நாம் கேலிக்கு உள்ளாகிவருகிறோம். நண்பர்களே, நான் சொல்வதைக் கேளுங்கள். உண்மைதான், அறிவு என்பது மகத்தானதுதான். ஆனால் அது குறிப்பிட்ட சில எல்லைகளுக்குள் நின்று விடுகிறது. ஆனால் இதயத்தின் மூலம், இதயத்தின்மூலம் மட்டுமே தெய்வப் பேருணர்வு (Inspiration) வருகிறது. ஆழ்ந்த உணர்ச்சிகளின் மூலம்தான் மிக உயர்ந்த ஆன்மீக ரகசியங்கள் அடையப்படுகின்றன. எனவே உணர்ச்சிவசப் படுகின்றவனான வங்காளிதான் இந்தப் பணியைச் செய்ய வேண்டும்.

'உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வரான் நிபோதத.' எழுந்திருங்கள் விழித்திருங்கள், விரும்பிய லட்சியத்தை அடையும் வரை நில்லாது செல்லுங்கள். கல்கத்தா இளைஞர்களே எழுந்திருங்கள், விழித்திருங்கள். காலம் கனிந்துள்ளது. நம் முன்னர் எல்லா வழிகளும் திறக்கின்றன. தைரியசாலியாக இருங்கள். பயப்படாதீர்கள். நம்முடைய சாஸ்திரங்களில் மட்டுமே கடவுளுக்கு அபீ: அபீ:— 'பயமற்றவர்' என்ற அடைமொழி

தரப்பட்டுள்ளது. நாமும் அபீ:—பயமற்றவர்கள் ஆகவேண்டும், அப்போது நமது காரியம் நிறைவேறிவிடும். எழுந்திருங்கள்! விழித்திருங்கள்! ஏனெனில் தாய்நாட்டிற்கு இந்த மகத்தான தியாகம் தேவைப்படுகிறது. இளைஞர்களால்தான் இதைச் செய்ய முடியும். 'இளமைத் துடிப்பு நிறைந்த, ஆற்றல் மிக்க, வலிமை வாய்ந்த, உரமேறிய உடல் கொண்ட, அறிவு நிறைந்த'[1] —இவர்களுக்கே இந்தப் பணி. அத்தகைய ஆயிரக்கணக்கான இளைஞர்கள் கல்கத்தாவில் உள்ளனர். நீங்கள் குறிப்பிட்டது போல், நான் எதையாவது சாதித்திருப்பது உண்மையானால், ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், நான் கல்கத்தா தெருக்களில் விளையாடிக் கொண்டிருந்த, ஒன்றுக்கும் உதவாததொரு சிறுவனே நான். நானே இவ்வளவு செய்திருக்கிறேன் என்றால் நீங்கள் இன்னும் எவ்வளவு செய்ய முடியும்? எழுந்திருங்கள்! விழித்திருங்கள். உலகம் உங்களை அழைக்கிறது.

இந்தியாவின் மற்ற பகுதிகளில் அறிவு இருக்கிறது, பணம் இருக்கிறது. ஆனால் உற்சாகம் என் தாய்பூமியில் மட்டும்தான் இருக்கிறது. அது வெளிவர வேண்டும். எனவே கல்கத்தா இளைஞர்களே, ரத்தத்தில் உற்சாகம் கொப்பளிக்க எழுந் திருங்கள். நீங்கள் ஏழைகள், நண்பர்கள் யாரும் இல்லாதவர்கள் என்று நினைக்காதீர்கள். ஆ, பணம் மனிதனை உண்டாக்குவதை யார் கண்டது! மனிதனே பணத்தை உருவாக்குகிறான். இந்த உலகமே மனிதனின் ஆற்றலால்தான் உருவாக்கப்பட்டுள்ளது; உற்சாகத்தின் ஆற்றலால், நம்பிக்கையின் ஆற்றலால்தான் உருவாக்கப்பட்டுள்ளது.

உபநிடதங்களில் மிகவும் இனிய ஒன்றாகிய கடோப நிடதத்தைப் படித்தவர்களுக்குத் தெரியும். மன்னன் ஒருவன் ஒரு பெரிய யாகம் செய்யத் துவங்குகிறான். நல்ல பொருட் களைத் தானம் செய்வதற்குப் பதிலாக அவன் பயனிழந்த பசுக் களையும் குதிரைகளையும் கொடுக்கிறான். அப்போது அரச னின் மகனாகிய நசிகேதனின் இதயத்தில் சிரத்தை நுழைகிறது என்று அந்த நூல் அழகாகக் கூறுகிறது. சிரத்தை என்னும் வட மொழிச் சொல்லை நான் உங்களுக்கு மொழிபெயர்க்கவில்லை. மொழிபெயர்த்தால் அது தவறாகவே இருக்கும். புரிந்துகொள்ள வேண்டியதோர் அற்புதமான சொல் அது. பல விஷயங்கள்

---

1. யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக: ஆசிஷ்டோ த்ரடிஷ்டோ பலிஷ்ட:।
—தைத்திரீய உபநிடதம், 2. 8. 1.

அதைச் சார்ந்தே இருக்கின்றன. அது எப்படி வேலை செய்கிறது என்பதைப் பார்ப்போம்.

சிரத்தை இதயத்தில் நுழைந்தவுடனே நசிகேதன் தனக்குள், ‘நான் பலரைவிட உயர்ந்தவன், சிலரைவிடத் தாழ்ந்தவன். ஆனால் எதிலும் நான் கடைசியானவன் அல்ல. என்னாலும் சில காரியங்கள் செய்ய முடியும்’ என்று கூறிக்கொள்வதை நாம் காண்கிறோம். அவனது தைரியம் வளர்கிறது. மனத்தில் நெடுங்காலமாக இருந்து வருகின்ற கேள்விக்கு, அதாவது, மரணம் பற்றிய கேள்விக்கு விடை காண விரும்புகிறான் அவன். எமலோகம் சென்றால்தான் இந்தக் கேள்விக்கு விடை கிடைக்கும். எனவே அங்கு சென்றான். தைரியசாலியான அவன் அங்கே எமனுடைய வீட்டில் மூன்று நாட்கள் காத்திருந்தான், விரும்பியதை அவன் எப்படிப் பெற்றான் என்பது உங்களுக்குத் தெரியும்.

இந்தச் சிரத்தைதான் நமக்குத் தேவை. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக அது இந்தியாவிலிருந்து ஏறக்குறைய மறைந்தே விட்டது. அதனால்தான் நாம் இந்த நிலையில் இருக்கிறோம். மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையில் எது வேறுபாட்டை உண்டாக்குகிறது என்றால் இந்தச் சிரத்தைதான், வேறு எதுவும் இல்லை. ஒருவனை மகத்தானவனாகவும் மற்றொருவனைப் பலவீனனாகவும் கீழானவனாகவும் எது ஆக்குகிறது என்றால் இந்தச் சிரத்தைதான். யார் தன்னைப் பலவீனன் என்று நினைக் கிறானோ அவன் பலவீனனாகவே ஆவான் என்பார் என் குரு தேவர், உண்மைதான். இந்தச் சிரத்தை உங்களுக்குள் நுழைந் தாக வேண்டும். மேலைநாட்டினரிடம் வெளிப்பட்டிருக்கின்ற பௌதிக சக்திகள் அனைத்தும் இதன் விளைவுதான். அவர்கள் தங்கள் தசைகளின் ஆற்றலில் நம்பிக்கை வைத்தார்கள். நீங்கள் உங்கள் ஆன்மாவில் அத்தகைய நம்பிக்கை வைத்தால் அதன் விளைவு இன்னும் எவ்வளவு மகத்தானதாக இருக்கும்! எல்லை யற்ற ஆன்மாவில், எல்லையற்ற ஆற்றலில் நம்பிக்கை கொள் ளுங்கள். உங்கள் சாஸ்திரங்களும் உங்கள் ரிஷிகளும் ஏகோபித்த குரலில் போதிப்பது அதையே. ஆன்மாவை எதுவும் அழிக்க முடியாது. அதில் எல்லையற்ற ஆற்றல் உள்ளது, வெளிப்படு வதற்காகக் காத்திருக்கிறது. இந்தியத் தத்துவங்களுக்கும் மற்ற எல்லா தத்துவங்களுக்கும் உள்ள பெரிய வேறுபாடு இதுதான். துவைதியாகட்டும், விசிஷ்டாத்வைதியாகட்டும், அத்வைதி யாகட்டும், ஆன்மாவில் எல்லாமே இருக்கிறது என்பதை

அனைவரும் உறுதியாக நம்புகின்றனர். அது வெளியே வர வேண்டும்; வெளிப்பட வேண்டும், அவ்வளவுதான். அந்தச் சிரத்தைதான் இப்போது எனக்கும், நம் எல்லோருக்கும் தேவைப்படுவது. இந்தத் தன்னம்பிக்கையைப் பெறுவதுதான் நாம் செய்ய வேண்டிய பெரிய பணி. நம் தேசிய ரத்தத்தில் படர்ந்து வருகின்றதே ஒரு நோய்—எல்லாவற்றையும் கேலி செய்வதும், பொறுப்பின்மையுமான அந்தப் பயங்கர நோயை விட்டுவிடுங்கள், அறவே அகற்றுங்கள். வலிமை பெறுங்கள், சிரத்தை பெறுங்கள்; பெற்றுவிட்டீர்களானால் எல்லாம் உங்களைத் தொடர்ந்தே தீர வேண்டும்.

நான் இதுவரையில் எதுவுமே செய்யவில்லை. நீங்கள்தான் செய்ய வேண்டும். நான் நாளை இறந்து போனாலும் அந்த வேலை ஓயாது. இந்தப் பணியைச் செய்ய சாதாரண மக்களி லிருந்தே ஆயிரக்கணக்கானோர் அணிதிரண்டு வருவர் என்று நான் மனமார நம்புகிறேன். நம்பிக்கை மயமான என் கற்பனை யில் தெரிவதைவிட அவர்கள் அந்தப் பணியைச் சிறப்பாக நிறைவேற்றுவார்கள்.

என் நாட்டிடம் எனக்கு நம்பிக்கை உள்ளது. குறிப்பாக என் நாட்டு இளைஞர்களிடம் எனக்கு அதிக நம்பிக்கை உள்ளது. மற்றவர்களைவிட வங்காள இளைஞர்களுக்கு இதில் அதிகமான பொறுப்பு உள்ளது. கடந்த பத்து ஆண்டுகளுக்கும் மேலாக நான் இந்தியா முழுவதும் பயணம் செய்திருக்கிறேன். இந்தியாவை மறுபடியும் அதனுடைய புராதனமாக ஆன்மீகப் பெருமைக்கு உயர்த்துவதற்கான ஆற்றல் வங்காள இளைஞர் களிடமிருந்தே பிறக்கும் என்பது என் உறுதியான கணிப்பு. ஆகா, ரத்தத்தில் உணர்ச்சியும் உற்சாகமும் பொங்குகின்ற வங்க இளைஞர்களிடமிருந்துதான் வீரர்கள் எழுவார்கள். நம் முன்னோர்கள் விட்டுச்சென்ற அழிவற்ற ஆன்மீக உண்மை களைப் பூமியின் ஒரு கோடியிலிருந்து மறுகோடிவரை அவர்கள் பிரச்சாரம் செய்வார்கள், போதிப்பார்கள். உங்கள்முன் இருக்கும் மகத்தான வேலை இது.

எனவே, 'எழுந்திருங்கள்! விழித்திருங்கள்! விரும்பிய லட்சியத்தை அடையும்வரை நில்லாது செல்லுங்கள்' என்பதை மீண்டும் ஒருமுறை உங்களுக்கு நினைவுபடுத்தி என் பேச்சை நிறைவு செய்கிறேன். பயப்படாதீர்கள். ஏனெனில் மனித வரலாறு முழுவதையும் நீங்கள் பார்த்தாலும், மகத்தான சக்திகள் எல்லாம் மக்களிடமே இருந்துள்ளதைக் காண்பீர்கள்.

சாதாரண மக்களிடமிருந்தே மாபெரும் மனிதர்கள் எல்லோரும் தோன்றியிருக்கிறார்கள். சரித்திரம் திரும்பியே தீரும். எதைக் கண்டும் அஞ்சாதீர்கள். நீங்கள் மகத்தான காரியங்களைச் செய்வீர்கள். பயம் தோன்றினால் அந்தக் கணமே நீங்கள் ஒன்றுமில்லாதவர்கள் ஆகிவிடுவீர்கள். பயமே உலகத் துன்பங்களுக்குக் காரணம். மூட நம்பிக்கைகள் அனைத்திலும் கொடியது பயமே. இந்தப் பயம்தான் நம் துயரங்களுக்கு எல்லாம் காரணம். பயமின்மை ஒரு நொடியில் சொர்க்கத்தையே நமக்கு அளிக்கவல்லது. எனவே 'எழுந்திருங்கள்! விழித்திருங்கள்! லட்சியத்தை அடையும் வரையில் நிற்காதீர்கள்.'

அன்பர்களே! உங்கள் எல்லா வரவேற்பிற்கும் பாராட்டுக்களுக்கும் மறுபடியும் நான் நன்றி கூறுகிறேன். என் ஆழ்ந்த, உண்மையான விருப்பம் எதுவென்றால், உலகத்திற்கும், அதற்கும் மேலாக என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் என்னாலான சேவையை நான் செய்ய வேண்டும் என்பதுதான். ❑

## 2. வேதாந்தமும் அதன் சகல அம்சங்களும்

மார்ச் 4, ஸ்டார் தியேட்டர்

குறித்து வைக்கப்பட்ட சரித்திரமோ, பாரம்பரியத்தின் மங்கிய வெளிச்சமோகூட ஊடுருவ முடியாத, காலத்தின் அந்த நீண்ட நெடுந்தொலைவில் சன்னமானதோர் ஒளி நிலையாக பிரகாசித்துத் திளைக்கிறது. சூழ்நிலைகளின் காரணத்தால் சிலவேளைகளில் அது மங்கியது, சிலவேளைகளில் சுடர்விட்டது, ஆனால் ஒருபோதும் அணையாமல் சீராகவே ஒளி வீசியது. அந்த ஒளி இந்தியாவில் மட்டுமல்ல, சிந்தனை உலகம் முழுவதிலும் படர்ந்தது. அதிகாலையில் மெல்லென வீழ்கின்ற பனித்துளி, யாரும் காணாமல், யாரும் அறியாமல் அழகிய ரோஜா மொட்டுகளை மலரச் செய்வதுபோல், அந்த ஒளியும் தன் ஆற்றலால் அமைதியாக, யாரும் அறியாமல், மென்மையாக அதே வேளையில் பெரும் சக்தி வாய்ந்ததாக சிந்தனை உலகெங்கும் ஊடுருவியது. அந்த ஒளியே உபநிடதச் சிந்தனைகள், வேதாந்தத் தத்துவம். அது இந்திய மண்ணில் தழைக்கத் தொடங்கிய காலம் எது என்பது யாருக்கும் தெரியாது. ஊகங்கள், முக்கியமாக மேலை நாட்டினரின் ஊகங்கள் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதால் கால வரையறை செய்தல் இயலாததாக உள்ளது. ஆயினும் இந்துக்களாகிய நாம், நமது ஆன்மீக நோக்கில், அவற்றிற்கு ஆரம்பம் என்று எதுவும் இல்லை என்கிறோம். இந்த உபநிடதக் கருத்துக்களாகிய வேதாந்தம்தான் ஆன்மீக விஷயத்தில் மனித குலத்திற்கு வழங்கப்பட்ட முதலும் முடிவுமான கருத்து என்பதை நான் துணிவுடன் கூறுவேன்.

இந்த வேதாந்தப் பெருங்கடலிலிருந்து ஒளியலைகள் எழுந்து அவ்வப்போது மேற்கிலும் கிழக்கிலும் பரவிச் சென்றுள்ளன. பண்டைய நாளில் அவை மேற்கு நோக்கிப் பரந்து, ஏதென்சிலோ அலெக்சாண்டிரியாவிலோ ஆன்டியாக்கிலோ வாழ்ந்த கிரேக்கர்களின் சிந்தனையைத் தூண்டிக் கிளர்ந்தெழச் செய்தன. பண்டைய கிரேக்கர்களின் உள்ளத்தில் சாங்கியத் தத்துவம் பெரிதும் பதிந்தது என்பது உறுதி. சாங்கியத்

தத்துவமும் பிற தத்துவங்களும் உபநிடதங்களை, வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டவை. இந்தியாவில்கூட ஒன்றுக்கொன்று அடித்துக்கொள்கின்ற எத்தனையோ மதப் பிரிவுகள் இருந்தன, இன்றும் இருக்கின்றன. இவை அனைத்தின் அடிப்படையும் உபநிடதங்களே, வேதாந்தமே. நீங்கள் துவைதியோ, விசிஷ்டாத்வைதியோ, அத்வைதியோ, சுத்த அத்வைதியோ, வேறு எந்த அத்வைதியோ, வேறு எந்த துவைதியோ, அல்லது வேறு எப்படி உங்களை அழைத்துக் கொண்டாலும் உங்களுக்கு ஆதார நூலாக, உங்கள் சாஸ்திரங்களாக, உங்கள் புனித நூல்களாக உங்களுக்குப் பின்னால் நிற்பது உபநிடதங்களே. உபநிடதங்களைப் பின்பற்றாத எந்த இந்திய மதமும் வைதீக மதமாகக் கருதப்படுவதில்லை. சமண மற்றும் புத்த மதங்கள் கூட இந்தியாவிலிருந்து விலக்கப்பட்டதன் காரணம், அவை உபநிடதங்களை ஏற்க மறுத்ததே.

நமக்குத் தெரிந்திருந்தாலும் தெரியாவிட்டாலும், இந்திய நாட்டு மதப் பிரிவுகள் அனைத்திலும் வேதாந்தம் ஊடுருவியுள்ளது. இந்து மதம் என்று நாம் அழைக்கின்ற, அந்த எண்ணிறந்த கிளைகளும் விழுதுகளும் கொண்ட மாபெரும் ஆலமரம் வேதாந்தத்தின் ஆதிக்கத்தால் முற்றிலும் ஊடுருவப்பட்டிருக்கிறது. அறிந்தோ அறியாமலோ நாம் வேதாந்தத்தையே நினைக்கிறோம், வேதாந்தத்திலேயே வாழ்கிறோம், வேதாந்தத்தையே சுவாசிக்கிறோம், வேதாந்தத்திலேயே இறக்கவும் செய்கிறோம். ஒவ்வோர் இந்துவும் இதையே செய்கிறான். எனவே இந்தியாவில் இந்தியர்களுக்கு வேதாந்தம் போதிப்பது என்பது முரணான ஒன்றாகவே எனக்குத் தோன்றுகிறது. எனினும் போதிக்கப்பட வேண்டியது அது ஒன்றுதான், அதைப் போதிக்க வேண்டியதுதான் காலத்தின் தேவையாகவும் உள்ளது. ஏனெனில் நான் கூறியதுபோல், இந்திய மதப் பிரிவுகள் அனைத்தும் உபநிடதங்களையே பிரமாணமாகக் கொள்ள வேண்டும். இந்த உட்பிரிவுகளிடையே முரண்பாடுகள் இருப்பதுபோல் தோன்றுகிறது. சிலவேளைகளில் பண்டைய ரிஷிகளுள் பலரால் கூட உபநிடதங்களில் நிலவிய இயைபை அறிந்துகொள்ள முடியவில்லை. அவர்களும்கூட தம்மில் சண்டையிட்டனர்; மாறுபட்ட கருத்தில்லாத ரிஷிகளே இல்லை என்ற கூற்றுக்கு இலக்காயினர். உபநிடதங்களுள் துவைதப் பகுதியோ, விசிஷ்டாத்வைதப் பகுதியோ, அத்வைதப் பகுதியோ, எந்தப் பகுதியானாலும் அவற்றின் அடிப்படையில் நிலவுகின்ற இந்த

இயைபிற்கு இன்னும் சிறந்த விளக்கம் தரப்பட வேண்டும் என்பது காலத்தின் தேவையாக உள்ளது. அதை உலகின்முன் வைக்க வேண்டும். வெளிநாட்டில் மட்டுமல்ல, இந்தியாவிலும் இது தேவை.

இத்தகைய ஒரு விளக்கமாக யாருடைய வாழ்வு விளங்கியதோ அவரது திருவடிகளில் அமர்வதற்கான பெரும் பேறு இறையருளால் எனக்குக் கிடைத்தது. அவரது பெருவாழ்வு அவரது போதனைகளைவிட ஆயிரம் மடங்கு மேன்மை பெற்றது; அது உபநிடதங்களின் உயிர்ததும்பும் விளக்கவுரையாகத் திகழ்ந்தது. உண்மையில் அவர் உபநிடதங்களின் சாரமே மனிதவுருப் பெற்றது போல் விளங்கினார். ஒருவேளை அந்த இயைபில் ஒரு சிறிதை நான் பெற்றிருக்கலாம். ஆனால் அதை எடுத்துச் சொல்லும் ஆற்றல் என்னிடம் உள்ளதா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் இதுவே எனது முயற்சி. வேதாந்த நெறிகள் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல, ஒன்றுக்கு மற்றொன்று தேவையானவை, ஒன்றை மற்றொன்று நிறைவு செய்கிறது; லட்சியமான 'தத்வமஸி' என்னும் அத்வைத நிலையை அடைவதற்கான படிகள் போலவே ஒவ்வொன்றும் விளங்குகின்றன என்பதைக் காட்டுவதே வாழ்வில் எனது நோக்கம்.

இந்தியாவில் கர்மகாண்டம் ஆட்சி செய்த காலம் ஒன்று இருந்தது. வேதத்தின் அந்தப் பகுதியில் பெருமைமிக்க கொள்கைகள் இருக்கவே செய்தன, அதில் சந்தேகம் இல்லை. இன்றும் நாம் செய்யும் தினசரி வழிபாடுகளுள் சில, அந்தக் கர்மகாண்டப் பகுதியைப் பின்பற்றி எழுந்தவையே. இவையெல்லாம் உண்மையானாலும் அவை இந்தியாவிலிருந்து ஏறக்குறைய மறைந்துவிட்டன. நமது இன்றைய வாழ்வில் கர்மகாண்டத்தின் ஆதிக்கம் சிறிதும் இல்லை எனலாம். இன்றைய நமது தினசரி வாழ்வில் நாம் பெரும்பாலும் புராணங்களையும் தந்திர சாஸ்திரங்களையும் பின்பற்றுபவர்களாக உள்ளோம். சில பிராமணர்கள் வேத மந்திரங்களைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் அவற்றை அவர்கள் உபயோகிக்கின்ற முறைகள் வேதங்களுக்கு ஏற்ப இல்லை, அவை தந்திரங்களையும் புராணங்களையும் ஒட்டியவையாகவே உள்ளன. இந்த நிலையில், வேதத்தின் கர்மகாண்டத்தைப் பின்பற்றுபவர்கள் என்னும் கருத்தில் நம்மை நாம் வைதீகர் என்று அழைத்துக்கொள்வது முறையல்ல என்றே நான் கருதுகிறேன். ஆனால் நாம் நம்மை வேதாந்தி என்று

அழைப்பது பொருத்தமாகிறது. தங்களை இந்து என்று அழைத்துக் கொள்பவர்கள், வேதாந்தி என்று கூறிக்கொள்வது அதைவிட நல்லது. ஏனெனில் துவைதி, விசிஷ்டாத்வைதி முதலிய எல்லா நெறியினரும் வேதாந்தி என்ற அந்த ஒரு பெயருள் அடங்குவார்கள்.

இன்று இந்தியாவில் உள்ள நெறிகள் எல்லாமே பொதுவாக துவைதம், அத்வைதம் என்ற இரண்டு பெரும் பிரிவுகளுள் அடங்கிவிடும். இந்தப் பிரிவுகளைச் சேர்ந்த சிலர், மிகவும் சாமானியமான ஏதோ சில வேறுபாடுகளைப் பிடித்துக் கொள்வதும், அவைகளின் அடிப்படையில் தங்களை சுத்தாத்வைதிகள், விசிஷ்டாத்வைதிகள் என்றெல்லாம் அழைத்துக் கொள்வதும் பெரிய விஷயமல்ல. பிரிவுகள் என்ற நிலையில் பார்த்தால் அவர்கள் துவைதிகள் அல்லது அத்வைதிகள். இனி, இன்றுள்ள நெறிகளுள் பல மிகவும் புதியவை; எஞ்சியவையோ பழைய நெறிகளின் நகல்களாகத் தோன்றுகின்றன. இவற்றுள் ஒரு பிரிவை ராமானுஜரின் வாழ்வு மற்றும் தத்துவத்தின் வாயிலாகவும், மற்றொன்றை சங்கரரின் வாயிலாகவும் உங்கள்முன் வைக்கிறேன்.

பிற்கால இந்தியாவின் துவைத ஆச்சாரியர்களுள் முன்னணியில் இருப்பவர் ராமானுஜர். பின்னால் வந்த துவைதிகள் அனைவரும் தங்கள் உபதேசங்களுக்கு அடிப்படையாகவும், தங்கள் நெறிகளை ஓர் இயக்கமாக உருவாக்குவதிலும், இயக்கம் பற்றிய சில நுட்பமான கருத்துக்களிலும்கூட நேரடியாகவோ மறைமுகமாகவோ ராமானுஜரையே பின்பற்றுகின்றனர். இந்தியாவிலுள்ள இதர துவைத வைணவ நெறிகளை ராமானுஜருடனும் அவரது பணியுடனும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவை அமைப்பு முறையிலும் கருத்திலும் செயல்படுமுறையிலும் பேரளவிற்கு ஒத்திருப்பது ஆச்சரியத்திற்குரிய ஒன்று. தென்னிந்தியாவில் மற்றொரு மாபெரும் ஆச்சாரியர் மத்வ முனிவர். அவரைத் தொடர்ந்து, வங்கத்தின் மகத்தான சைதன்யர் மாத்வர்களின் கோட்பாடுகளையே வங்கத்தில் பிரச்சாரம் செய்தார். இனி விசிஷ்டாத்வைத சைவப் பிரிவுகள் போன்ற வேறு சில பிரிவுகளும் தென்னிந்தியாவில் உள்ளன. தென்னிந்தியாவின் சில பகுதிகள், இலங்கை முதலிய இடங்கள் நீங்கலாக இந்தியாவில் உள்ள சைவர்கள் பொதுவாக அத்வைதிகளே. ஆனால் அந்த விசிஷ்டாத்வைத சைவர்களும் முழுக்க முழுக்க ராமானுஜ சம்பிரதாயத்தைச் சார்ந்தவர்கள் என்றுதான்

சொல்ல வேண்டும்; விஷ்ணுவுக்குப் பதிலாக சிவனை வணங்கு கிறார்கள், அவ்வளவுதான்—ஆன்மா பற்றிய கோட்பாட்டில் மட்டுமே வேறுபாடு உள்ளது.

ராமானுஜரைப் பின்பற்றுபவர்கள் ஆன்மா ஓர் அணு, மிகச் சிறியது என்று கூறுகிறார்கள். ஆனால் சங்கரரைப் பின்பற்றுபவர்கள் ஆன்மா என்பது விபு, எங்கும் நிறைந்தது என்கிறார்கள். அத்வைதப் பிரிவுகள் பல இருக்கின்றன, முற்காலத்தில் இன்னும் பல இருந்தன. சங்கரரின் இயக்கம் அவற்றையெல்லாம் அப்படியே தன்னுள் ஈர்த்து அணைத்துக் கொண்டுவிட்டிருக்க வேண்டும். சில விளக்கவுரைகளுள், குறிப் பாக விஞ்ஞான பிட்சுவின் விளக்கவுரையில் சங்கரருக்கு எதிராகக்கூட உறுதியான சில கருத்துக்களைக் காண முடியும். இந்த விஞ்ஞான பிட்சு ஓர் அத்வைதி. எனினும் அவர் சங்கரரின் மாயாவாதத்தை முறியடிக்க முயற்சிக்கிறார். மாயாவாதத்தை ஏற்காத நெறிகளும் அந்தக் காலத்தில் இருந்தன என்றே தோன்று கிறது. மாயாவாதம் பௌத்தர்களிடமிருந்து வேதாந்த சம்பிரதாயத்தில் புகுத்தப்பட்டது என்பது அவர்களின் கருத்து. எனவே சங்கரரை அவர்கள் பிரச்சன்ன பௌத்தர் அதாவது மறைமுக பௌத்தர் என்று அழைக்கும் அளவுக்குச் சென்றுள் ளார்கள். அது எப்படியானாலும், இன்று அத்வைதிகள் அனைவருமே சங்கரரின் பின்னால்தான் அணிதிரண்டு நிற்கின் றனர். தென்னாட்டிலும் வட நாட்டிலும் சங்கரரும் அவரது சீடர்களுமே சிறந்த அத்வைதப் பிரச்சாரகர்களாக இருந்திருக் கிறார்கள். நமது வங்காளம், மற்றும் பஞ்சாப், காஷ்மீர் முதலிய இடங்களில்தான் சங்கரரின் செல்வாக்கு அதிகம் பரவவில்லை. தென்னிந்திய ஸ்மார்த்தர்கள் அனைவரும் சங்கரரைப் பின்பற்று பவர்கள். காசியை மையமாகக்கொண்டு, வட இந்தியாவில் பல இடங்களில் அவரது ஆதிக்கம் மகத்தானது, மிகப் பெரியது.

சங்கரரும் சரி, ராமானுஜரும் சரி தாங்கள் எதையும் புதிதாகக் கூறுவதாக உரிமை கொண்டாடவில்லை. போதாயனரின் விளக்கவுரையையே தாம் பின்பற்றுவதாக மிகத் தெளிவாகச் சொல்கிறார் ராமானுஜர். தமது விளக்கவுரையாகிய ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் அவர் பின்வருமாறு கூறுகிறார்: 'பகவத் போதாயன க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யா: ஸஞ்சிக்ஷிபு: தன்மதானுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே।—முற்காலத்தில் தோன்றிய ஆச்சாரியர்கள், பகவான் போதாயனரின் பிரம்ம சூத்திர

மகாபாஷ்யத்தைச் சுருக்கினார்கள். அவர்களது கருத்தை அடியொற்றி சூத்திர விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.' அந்தக் கருத்துக்களை ஸம்க்ஷிப்தமாக, சுருக்கமாக எடுத்தாண்டிருக்கிறார் ராமானுஜர். அதுவே இன்று நாம் காணும் ஸ்ரீபாஷ்யம். போதாயன பாஷ்யத்தைக் காணும் வாய்ப்பு இதுவரை எனக்குக் கிடைக்கவில்லை. வியாச சூத்திரங்களுக்கு போதாயனர் அளித்த விளக்கவுரையைத் தவிர ஏனையவற்றை எல்லாம், காலம் சென்ற சுவாமி தயானந்த சரஸ்வதி புறக்கணிக்க விரும்பினார். ராமானுஜரைக் கண்டிப்பதற்குக் கிடைத்த வாய்ப்பு எதையும் அவர் விடவில்லை. எனினும் போதாயன பாஷ்யத்தைக் காட்ட அவரால் இயலவில்லை. போதாயனரின் அந்த விளக்கவுரை நூலை நான் இந்தியா முழுவதும் தேடிவிட்டேன், கிடைக்கவில்லை. ராமானுஜர் இந்த விஷயத்தில் மிகவும் தெளிவாக இருக்கிறார்; போதாயனரின் விளக்கவுரையிலுள்ள கருத்துக்களையே தாம் சுருக்கமாகக் கொடுப்பதாகவும் சில இடங்களில் அப்படியே சில பகுதிகளைக் கையாண்டிருப்பதாகவும் அவர் கூறுகிறார். இதுவே இன்றைய ராமானுஜ பாஷ்யம்.

சங்கரரும் இவ்வாறு செய்துள்ளதாகத்தான் தெரிகிறது. அவரது விளக்கவுரையில் சில இடங்களில் பல பழைய விளக்கவுரைகள் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அவரது குருவும், குருவின் குருவும் இதே வேதாந்தக் கருத்து உடையவர்களாக இருந்தனர். அது மட்டுமின்றி, அவர்கள் சில இடங்களில் இன்னும் அடியாழம்வரை செல்கிறார்கள்; சில கருத்துக்களை விளக்கும்போது சங்கரரைவிடத் துணிவாக இருக்கிறார்கள். எனவே சங்கரரும் புதிதாக எதுவும் சொல்லவில்லை என்பது தெளிவு. போதாயனரின் கருத்துக்களைக் கொண்டு ராமானுஜர் விளக்கவுரை எழுதியது போலவே சங்கரரும் ஏதோ ஒரு விளக்கவுரையின் உதவியுடனேயே தமது உரையை எழுதியிருக்க வேண்டும். அது எந்த விளக்கவுரை என்பதைத் தற்போது அறிய முடியாது.

நீங்கள் கண்டும் கேள்வியுற்றும் இருக்கின்ற தத்துவங்கள் எல்லாம் உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்டவை. வேதங்களை மேற்கோள் காட்டும் இடங்களில் எல்லாம் அவர்கள் உபநிடதங்களையே குறிப்பிடுகிறார்கள். உபநிடதங்களைப் பின்பற்றி எழுந்த தத்துவங்களுள் எதுவும் வியாசருடையதுபோல் இந்தியாவில் நிலைத்து நிற்கவில்லை. இனி, வியாசரின் தத்துவம் அதற்கு முந்திய ஒன்றான சாங்கியத் தத்துவத்தின் விரிவேயாகும். இந்தியா மட்டுமல்லாமல் உலகம்

முழுவதிலுமுள்ள ஒவ்வொரு தத்துவப் பிரிவும் ஒவ்வொரு நெறியும் கபிலருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது. இந்தியாவின் மன இயல் மற்றும் தத்துவ வரலாற்றில் கபிலரின் பெயர் உன்னதமான இடத்தை வகிக்கிறது. அவரது தாக்கம் உலகம் முழுவதும் காணப்படுகிறது. அங்கீகரிக்கப்பட்ட சிந்தனைமுறை எங்கே உள்ளதோ, அங்கே கபிலரின் தாக்கத்தைக் காணலாம். அது ஆயிரமாயிரம் ஆண்டுகள் முந்தியதாக இருக்கலாம். இருப்பினும் கபிலர் அங்கே பெருமையுடன், மகிமையுடன் ஒளிவீசித் திகழ்வார். அவரது மனஇயலும், அவர் வகுத்த தத்துவத்தில் பெரும் பகுதியும் இந்தியாவின் எல்லா பிரிவினராலும் ஏதோ சிறு மாற்றங்களுடன் ஏற்றுக் கொள்ளப் படவே செய்கின்றன.

இந்தியாவின் தத்துவ உலகில் நமது வங்கத்தின் நையாயிக தத்துவ அறிஞர்கள் அதிக செல்வாக்குப் பெறவில்லை. ஏனெனில் அவர்கள் சாமான்யம், விசேஷம் என்றெல்லாம் முக்கியத்துவம் இல்லாத விஷயங்களில் மண்டையை உடைத்துக் கொண்டிருந்தனர்; போதாக்குறைக்கு, ஆயுட்காலம் முழுவதும் செலவிட்டால் மட்டுமே படித்துணரக்கூடிய சிக்க லான சொற்றொடர்கள் வேறு! இவ்வாறு அவர்கள் தர்க்கத்தில் மூழ்கி, தத்துவத்தை வேதாந்திகளுக்கு விட்டுவிட்டனர். ஆனால் தற்கால தத்துவப் பிரிவுகள் ஒவ்வொன்றும் வங்க நையாயிகர் களின் தர்க்கச் சொற்றொடர்களை ஏற்கின்றனர். ஜகதீசர், கதாதரர், சிரோமணி முதலிய பெயர்கள் நதியாவைப் போலவே மலபாரின் சில நகரங்களிலும் பிரபலமாக உள்ளன.

ஆனால் வியாசரின் தத்துவமாகிய வியாச சூத்திரங்கள் நிலைத்துவிட்டன. தத்துவத்தின் வைதீக மற்றும் வேதாந்தப் பக்கத்தை மனிதர்களுக்குக் கொடுப்பதே அதன் நோக்கமாக இருந்தது. அந்த நோக்கத்தில் அது வெற்றியும் பெற்றுவிட்டது. அங்கு தர்க்க அறிவு முற்றிலுமாக வேதங்களுக்கு அடுத்த படி யிலேயே வைக்கப்பட்டன. சங்கரர் கூறுவதுபோல், வியாசர் தர்க்க அறிவில் நேரத்தைச் செலவிடவே இல்லை. வேதாந்தக் கருத்துக்களை எல்லாம் ஒரே நூலில் மாலையாகத் தொடுப்பதே அவர் சூத்திரங்களை எழுதியதன் நோக்கமாக இருந்தது. உபநிடதங்களின் பிரமாணத்திற்கு உட்படும்வரை மட்டுமே அவை ஏற்றுக்கொள்ளப்படுகின்றன;[1] அதற்குமேல் அல்ல.

1. பிரம்ம சூத்திரம் 1. 1. 2-ற்கு சங்கரர் எழுதிய விளக்கவுரை காண்க.

நான் முன்னரே கூறியதுபோல், இந்தியாவிலுள்ள மதப் பிரிவுகள் எல்லாம் இப்போது வியாச சூத்திரங்களையே தங்கள் பிரமாணமாகக் குறிப்பிடுகின்றன. புதிதாகத் தோன்றுகின்ற பிரிவு ஒவ்வொன்றும், தனது கருத்திற்கு ஏற்ப வியாச சூத்திரங் களுக்கு விளக்கவுரை எழுதுவதில்தான் ஆரம்பிக்கின்றன. இந்த உரைகள் சிலவற்றுக்கிடையில் வேறுபாடு பெரிதாகக் காணப் படுகிறது. சில இடங்களில் அவர்கள் மூலபாடத்தைத் திரித்து விளக்கும்போது அருவருப்பாகிவிடுகிறது. வியாச சூத்திரங்கள் பிரமாணம் ஆகும். புதிய நெறியை ஏற்படுத்த விரும்புகின்ற யாரும் வியாச சூத்திரங்களுக்கு ஒரு புதிய விளக்கவுரை எழுதாமல் தங்கள் நெறியை நிலைநாட்ட முடியாது.

அடுத்த பிரமாணமாக விளங்குவது பிரபலமான கீதை. கீதையைப் போதித்ததே சங்கரரின் மகத்தான பெருமைக்குக் காரணம். போதித்தது மட்டுமல்லாமல், அதற்கு ஒரு மாபெரும் விளக்கவுரையையும் எழுதினார் அவர். இதுவே அவரது மேலான வாழ்வில் அவர் சாதித்த மாபெரும் செயல்கள் பலவற்றுள் உயர்ந்த ஒன்று. இந்தியாவில் வைதீக நெறிகளைத் தோற்றுவிக்கின்ற ஒவ்வொருவரும் அவரைப் பின்பற்றி கீதைக்கு விளக்கவுரைகள் எழுதியுள்ளனர்.

உபநிடதங்கள் பல. அவை நூற்றெட்டு என்று கூறப்படுகின் றன. இன்னும் அதிகம் என்று சிலர் சொல்கிறார்கள். அவற்றுள் சில, காலத்தால் மிகவும் பிற்பட்டவை என்பது தெளிவு. உதாரணமாக அல்லோபநிடதம். இதில் அல்லா புகழப்படு கிறார், ராஜசுல்லா என்று அழைக்கப்படுகிறார் முகமது. இந்துக் களையும் முகமதியர்களையும் ஒன்றுபடுத்த அக்பர் காலத்தில் எழுதப்பட்ட உபநிடதம் இது என்று நான் கேள்விப்பட்டேன். சம்ஹிதையில், அல்லா என்றோ இல்லா என்றோ ஏதோ ஒரு சொல்லைக் கண்டுபிடித்து, அதை வைத்து ஓர் உபநிடதத்தை உண்டாக்கிவிட்டார்கள். இந்த அல்லோபநிடதத்தில் ராஜ சுல்லா என்று முகமது அழைக்கப்படுகிறார். அதன் பொருள் எதுவோ, என்னவோ!

இதுபோன்றே பிரிவினைவாத உபநிடதங்கள் பல உள்ளன. அவை தற்காலத்தில் தோன்றியவை என்பது உறுதி. இவ்வாறு எழுதுவதும் மிக எளிது. இதற்கு இலக்கணம் வேண்டுவது இல்லை. ஏனெனில் வேதத்தின் சம்ஹிதைப் பகுதிகளும் மிகமிகப் புராதனமானவை, ஆதலால் இலக்கணம் இன்றியே உள்ளன.

பல ஆண்டுகளுக்கு முன்பு நான் தீவிர ஆவலுடன் வேத இலக்கணம் படிக்க முயன்றேன். பாணினி சூத்திரங்களையும் மஹாபாஷ்யத்தையும் படிக்கத் தொடங்கினேன். ஆனால் வேத இலக்கணத்தின் சிறந்த பகுதி முழுவதும் விதிவிலக்குகளாகவே இருந்ததைக் கண்டு வியப்பில் ஆழ்ந்து போனேன். ஒரு விதி சொல்லப்படுகிறது, அதைத் தொடர்ந்து 'இது விதிவிலக்கு' என்று வருகிறது. எவ்வளவு சுதந்திரம் இருக்கிறது பாருங்கள்! யார் வேண்டுமானாலும் எது வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளலாம். யாஸ்கரின் நிகண்டு என்ற ஒரே ஒரு கவசம் இருந்ததால் பிழைத்தோம். ஆனால் அங்கும் பெரும்பகுதியில் ஒரே பொருளுக்குப் பல சொற்கள் கூறுவதையே காண முடிகிறது. இதையெல்லாம் பார்த்தால் நீங்கள் விரும்புவது போல் எத்தனையோ உபநிடதங்களை எழுதித் தள்ளலாம்! புராதன காலச் சொற்கள் போல் தோன்றுகின்ற சொற்கள் சிலவற்றை உருவாக்குகின்ற அளவுக்குச் சிறிது சம்ஸ்கிருதம் தெரிந்தால் போதும். இலக்கணம் பற்றிய கவலைதான் இல்லவே இல்லை! நீங்கள் விரும்புகின்ற ஒரு ராஜசுல்லாவையோ வேறு எந்த சுல்லாவையோ அதில் புகுத்திவிடுங்கள். இவ்வாறுதான் எத்தனையோ உபநிடதங்கள் உருவாக்கப் பட்டுள்ளன, இப்பொழுதும் எழுதப்பட்டு வருகின்றன என்று அறிகிறேன். இந்தியாவில் பல்வேறு மதப் பிரிவுகள் இதுபோன்று உபநிடதங் களை உருவாக்க முயன்று கொண்டிருக்கின்றன என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால் இவற்றுக்கிடையில் சில உபநிடதங்கள் உள்ளன. இவை உண்மையானவை என்று முகத்திலேயே எழுதி ஒட்டப்பட்டதுபோல் அவை திகழ்கின் றன. அவற்றிற்கே மாபெரும் ஆச்சாரியர்கள், குறிப்பாக சங்கர ரும் அவரைத் தொடர்ந்து ராமானுஜரும் பிறரும் விளக்க வுரைகள் எழுதினர்.

உபநிடதங்களைப்பற்றி இன்னும் ஓரிரு கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். அவையோ அறிவுப் பெருங்கடல். இந்த உபநிடதங்களைப்பற்றிப் பேசுவதற்கு என்னைப் போன்ற தகுதி யற்ற ஒருவனுக்குக்கூட பல ஆண்டுகள் தேவை. ஒரு சொற் பொழிவு நிச்சயமாகப் போதாது. எனவே இரண்டொரு கருத்துக்களை உங்கள் கருத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். முதலாவதாக, இவை உலகிலேயே மிகச் சிறந்த கவிதைகள். வேதங்களின் சம்ஹிதைப் பகுதியை நீங்கள் படிப்பீர்களானால், எழில் கொஞ்சித் ததும்பும் அற்புதமான பகுதிகளைக்

காண்பீர்கள். உதாரணமாக பிரளய வர்ணனையைப் பாருங்கள்— 'தம ஆஸீத் தமஸா கூடமக்ரே[1]—இருள் இருளில் மறைந்திருந்த போது'... இவ்வாறு செல்கிறது கவிதை. இதைப் படிக்கும்போது நுட்பமான கவிதைநயத்தை உணர்கிறோம்.

இந்தியாவிற்கு வெளியிலும் இந்தியாவிலும் நுண்மையைச் (Sublime) சொல்லில் வடிப்பதற்காக நடைபெற்ற முயற்சிகளைக் கவனித்திருக்கிறீர்களா? வெளிநாடுகளில் இந்த முயற்சி எப்போதும் புற இயற்கையின் எல்லையற்ற தன்மையைப் பற்றிய வர்ணனையாகவே இருக்கும்—எல்லையற்ற புற இயற்கை, எல்லையற்ற ஜடவுலகம், எல்லையற்ற வெளி என்றெல்லாம் தான் வர்ணனைகளைக் காண முடியும். ஐரோப்பாவின் முற்காலக் கவிஞர்களான மில்டன், தாந்தே அல்லது வேறு யாராகவும் இருக்கட்டும், இல்லை, தற்காலக் கவிஞர்களாக இருக்கட்டும், எல்லையற்ற ஒன்றைச் சித்தரிக்க விரும்பினால் உடனே அவர்கள் எங்கோ தூர தூர ஆகாசத்தில் பறக்க முயன்று, எல்லையற்ற புற இயற்கையின் ஏதோ பகுதியை உங்களுக்குக் காட்ட முயல்கிறார்கள்.

அதே முயற்சி இங்கும் நடைபெற்றுள்ளது. புற இயற்கையின் எல்லையற்ற விரிவை, வேறு எங்கும் காண முடியாத வகையில், மிகவும் வியக்கத்தக்க விதத்தில் சம்ஹிதைகள் சித்தரிப்பதை நாம் காண முடியும். 'தம ஆஸீத் தமஸா கூடம்' என்ற வரியை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். இப்போது மூன்று கவிஞர்கள் இருளை எவ்வாறு வர்ணிக்கின்றனர் என்று பாருங்கள். நமது காளிதாசரை எடுத்துக்கொள்வோம்— 'ஊசி நுனி நுழைந்து ஊடுருவுகின்ற இருள்'[2] என்கிறார் அவர். மில்டன், 'ஒளியில்லை; மாறாக, காணத்தக்கதான இருள்' என்கிறார். இப்போது உபநிடதத்திற்கு வாருங்கள்—'இருளை இருள் மூடியிருந்தது', 'இருள் இருளில் மறைந்திருக்கிறது'. வெப்பப் பகுதியில் வாழ்பவர்களான நாம்தான் இதைப் புரிந்துகொள்ள முடியும். மழைக் காலம் சட்டென்று வரும், கணநேரத்தில் அடிவானம் இருளும், கருமேகத் திரள்கள் எழும், சற்று கரிய மேகக் கூட்டங்கள் அதைவிடக் கரிய மேகங்களால் மூடுவதும் எழுவதுமாக ஓர் அற்புதக் கோலம் விரியும். இவ்வாறு செல்கிறது சம்ஹிதை. சம்ஹிதைகளின் இந்தப் பகுதியில் நாம் காணும் இந்த முயற்சிகள் எல்லாம் புறம் சம்பந்தப்பட்டவையே.

---

1. ரிக் வேதம், 10. 129. 3.
2. ஸூசிபேத்யைஸ்தமோபி: ‖ —மேக சந்தேசம், 35.

வாழ்க்கையின் பெரும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் முயற்சி பிற நாடுகளில் எவ்வாறு புறத்தே நிகழ்ந்ததோ, அவ் வாறே இங்கும் நடந்தது. கிரேக்க மனமும் நவீன ஐரோப்பிய மனமும் வாழ்க்கைப் பிரச்சினைகளையும், பரம்பொருள்பற்றிய புனிதப் பிரச்சினைகளையும் தீர்க்கப் புறவுலகத்தை நாடியது போலவே நமது முன்னோர்களும் செய்தனர். ஐரோப்பியர்கள் தோல்வி கண்டது போலவே இவர்களும் தோல்வியுற்றனர். ஆனால் மேலை நாட்டினர் மேற்கொண்டு முயலவில்லை, அங்கேயே நின்றுவிட்டனர். பிறப்பு இறப்பு போன்ற வாழ்க்கையின் பெரும் பிரச்சினைகளுக்கு விடை காணப் புறவுலகை நாடிய அவர்கள், தோல்வியுற்றதும் உறைந்துபோய் அங்கேயே நின்றுவிட்டனர். நமது முன்னோர்களும் அந்த முயற்சி பயனற்றது என்றே கண்டனர். எனினும் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதில் புலன்கள் ஒரு சிறிதும் பயனற்றவை என்பதைத் துணிவுடன் கூறினர். இதனை உபநிடதங்கள் கூறுவதைவிட வேறு எங்கும் இவ்வளவு சிறப்பாகவும் விளக்கமாகவும் காண முடியாது. 'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ— மனத்துடன் வாக்கும் எங்கிருந்து திரும்புகிறதோ.' 'ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக்கச்சதி— அங்கே பார்வை செல்லாது, வாக்கும் செல்லாது.' புலன்களின் இயலாமையை விளக்குகின்ற வாக்கியங்கள் எத்தனையோ அங்குள்ளன. ஆனால் அவர்கள் அவ்வளவில் நிற்கவில்லை; திரும்பி, மனிதனின் அக இயல்பை ஆராயப் புகுந்தார்கள், தங்கள் ஆன்மாவிடமே விடை காண விரும்பி னார்கள், அகமுகமானார்கள். புற இயற்கை பயனற்றது, ஏனெனில் அங்கு எதுவும் செய்ய இயலாது, அங்கிருந்து எந்த நம்பிக்கையோ விடையோ கிடைக்காது என்பதை உணர்ந் தார்கள்; மந்தமான ஜடப் பொருளால் உண்மையைக் காட்ட முடியாது என்று தெளிந்தார்கள்; ஒளி படைத்த மனித ஆன்மாவை நோக்கித் திரும்பினார்கள், விடை கண்டார்கள்.

'தமேவைகம் ஜானத ஆத்மானம் அன்யா வாசோ விமுஞ்சத[1]—ஆன்மாவை மட்டுமே அறி, பிற வீண் சொற்கள் அனைத்தையும் விடு, வேறு எதையும் கேட்கவே கூடாது' என்று முழங்கினர். அனைத்திற்கும் விடையை அவர்கள் ஆன்மாவில் கண்டனர்; அந்த முயற்சியிலேயே பிரபஞ்சத்தின்

1. முண்டக உபநிடதம், 2. 2. 5.

தலைவனான பரமாத்மாவைக் கண்டனர்; பரமாத்மாவுக்கும் ஜீவான்மாவாகிய நமக்கும் உள்ள தொடர்பு, அவருக்கு நமது கடமை, அதன்மூலம் மனிதனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு ஆகியவை பற்றியெல்லாம் அறிந்தனர். உலகத்தின் அதி நுண்மையான கவிதைநயத்தை நீங்கள் இங்கே காணலாம். ஜடப்பொருளை வர்ணிக்கின்ற சொற்களால் ஆன்மாவை விளக்க முயற்சிப்பது இனி இல்லை; இதுதான் என்று சொற்களால் சுட்டிக்காட்டுவதற்கான முயற்சியும் இல்லை, எல்லாவற்றையும் விட்டுவிட்டனர். எல்லையற்றதைப் புலன்களால் விளக்கும் முயற்சியே இல்லை. இனிமேல் புறம் சம்பந்தமான, மந்தமான, உயிரற்ற ஜடப் பொருளான புற வெளி, புற இயற்கை எதுவும் இல்லை. அதற்குப் பதிலாகப் புறப்பட்டது ஓர் அழகிய கவிதை! அது கூறும் பொருளைப் போலவே நுண்மையான கவிதை நயமும் அதில் சொட்டுகிறது—

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: ।
தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥

உலகில் இதைவிட நுண்மையான கவிதை இருக்க முடியுமா?—'அங்கே கதிரவன் ஒளிவீச முடியாது, சந்திரன் பிரகாசிக்க முடியாது, நட்சத்திரங்களும் ஒளி தர இயலாது, மின்னல் மின்னாது. அழியக்கூடிய இந்த நெருப்பைப்பற்றி என்ன சொல்வது?' இத்தகைய கவிதையை வேறு எங்கும் காண முடியாது.

மிகச் சிறந்ததான கடோபநிடதத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் பூர்த்தியின் நேர்த்திதான் என்ன அற்புதமாக உள்ளது! எத்தகைய கலை மணம் கமழும் கவிதை! எவ்வளவு அழகாகத் தொடங்குகிறது! சிறுவனிடம் சிரத்தை நுழைகிறது, எமனைக் காண்பதில் ஆர்வம்கொள்கிறான் அவன். ஆச்சாரியர்களில் சிறந்தவரான எமதர்மனே பிறப்பு இறப்பு பற்றி அவனுக்கு உபதேசம் செய்கிறார்! அந்தச் சிறுவன் அறிய விரும்பிய உண்மைதான் என்ன? மரணத்தின் மர்மம் என்ன என்பதுதான்!

நீங்கள் நினைவில்கொள்ள வேண்டிய இரண்டாவது விஷயம் உபநிடதங்களின் யாரையும் சார்ந்திருக்காத அற்புதத் தன்மை. அங்கே எவ்வளவோ பெயர்கள் காணப்படுகின்றன, கூறுவோர் பலர் உள்ளனர், எத்தனையோ ஆச்சாரியர்கள்

இருக்கின்றனர், எனினும் அவர்களுள் ஒருவர்கூட உபநிடதங் களுக்குப் பிரமாணமாக விளங்கவில்லை; யாருடைய வாழ்வை யாவது அடிப்படையாகக் கொண்ட ஒரு வரிகூட அதில் இல்லை. இவர்கள் அனைவரும் பின்னணியில் இயங்கும் நிழற் படங்கள், அவ்வளவுதான். அவர்கள் உணரப்படுவதில்லை, காணப்படுவதில்லை, அறியப்படுவதும் இல்லை. அந்த அழகிய, அற்புதமான, உன்னதமான, முற்றிலும் சார்பற்று விளங்குகின்ற உபநிடத பாடங்களே உபநிடதங்களின் உண்மையான சக்தி யாகத் திகழ்கிறது. யாஜ்ஞவல்கியர்கள் இருபது பேர் வந்தால் என்ன, வாழ்ந்தால் என்ன, இறந்தால் என்ன! உபநிடதங்கள் அங்கேயே இருக்கின்றன.

அதேவேளையில் அவை எந்தத் தனி மனிதனுக்கும் எதிரானவையும் அல்ல. உலகில் இதுவரை தோன்றியுள்ள வர்கள், இனித் தோன்ற இருப்பவர்கள் அனைவரையும் அணைத்துச் செல்லத்தக்க விரிவு படைத்தவை உபநிடதங்கள். மனிதர்களையோ அவதார புருஷர்களையோ ரிஷிகளையோ வழிபடுவதை அவை எதிர்க்கவில்லை, மாறாக ஆதரிக்கின்றன. அதேவேளையில் எதையும் சிறிதுகூடச் சாராமலும் இருக் கின்றன. உபநிடதங்கள் போதிக்கின்ற கடவுள் எதையும் சாராதவர், அவையும் அதுபோல் எதையும் சாராமல் இருப்பது அற்புதமான விஷயம். எந்த நவீன விஞ்ஞானியும் எவ்வாறு எதிலும் சாராத ஒன்றை விரும்புகின்றானோ, அவ்வாறே இந்த உபநிடதக் கருத்துக்கள், ரிஷிகளுக்கும் சிந்தனையாளர் களுக்கும் தத்துவ ஞானிகளுக்கும் ஏற்றவையாக விளங்கு கின்றன. இவையே நமது சாஸ்திரங்கள்.

கிறிஸ்தவர்களுக்கு பைபிள், முகமதியர்களுக்கு குரான், பௌத்தர்களுக்கு திரிபிடகம், பார்சிகளுக்கு ஜென்ட் அவஸ்தா போல் நமக்கு உபநிடதங்கள் என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். இவை, இவைதாம் நமது சாஸ்திரங்கள்; வேறு எவையும் அல்ல. புராணங்களும் தந்திரங்களும் பிறவும் வியாச சூத்திரங்களும்கூட இரண்டாவதோ மூன்றாவதோ நிலையில் உள்ள பிரமாணங்கள், தலையாயவை வேதங்கள் மட்டுமே. மனுதர்மமும் புராணங்களும் பிற சாஸ்திரங்களும் எல்லாமே உபநிடதங்களை அனுசரித்துப் போகும் வரையில் தான் ஏற்கத் தக்கவை, உபநிடதங்களிலிருந்து மாறுபடும் போது இரக்கமின்றி அவற்றை ஒதுக்கிவிட வேண்டும். இது எப்போதும் நம் நினைவில் இருக்க வேண்டும்.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக, இந்தியாவில் தற்போது இதை நாம் மறந்துவிட்டோம். உபநிடதக் கருத்துக்களைவிட, வட்டார வழக்கங்களே ஏதோ உண்மை அதிகாரம் பெற்றவைபோல் விளங்குகின்றன. வங்காளத்தின் ஒதுக்குப்புறத்திலுள்ள ஏதோ ஒரு குக்கிராமத்தில் நிலவுகின்ற ஓர் அற்பக் கருத்து வேதங் களைப்போல், சிலவேளைகளில் அவற்றிற்கும் மேலான பிரமாணமாகக் கொள்ளப்படுகிறது. 'வைதீகம்' என்ற ஒரு சொல் இருக்கிறதே, அதற்குத்தான் எத்தனை செல்வாக்கு! கர்ம காண்டத்தின் ஒவ்வொரு பகுதியையும் பின்பற்றுவதுதான் ஒரு கிராமவாசிக்கு 'வைதீக'த்தின் உச்சநிலை. யாராவது ஒருவன் அதனைப் பின்பற்றாதிருக்கட்டும், 'அடே, போய்விடு, நீ இந்துவே அல்ல' என்று அவனிடம் கூறிவிடுவார்கள். துரதிர்ஷ் டவசமாக எனது தாய்பூமியிலும் அப்படித்தான். ஏதாவது ஒரு தந்திர சாஸ்திரத்தைப் பின்பற்றுபவர்கள் அதைக் காட்டி இதன்படி நடக்க வேண்டும் என்பார்கள், அதை மீறி நடப் பவன் வைதீகன் அல்ல என்பது அவர்களின் கருத்து. உபநிடதங்களே நமக்கு முதன்மையான ஆதாரம் என்பதை நினைவில் கொள்வது நல்லது. கிருஹ்ய சூத்திரங்களும் சிரௌத சூத்திரங்களும்கூட வேதங்களுக்கு அடுத்த படியிலுள்ள பிரமாணங்களே.

வேதங்கள் நமது முன்னோர்களாகிய ரிஷிகளின் வார்த்தைகள். நீங்கள் இந்துவாயிருக்க விரும்பினால் அவற்றை நம்பியே ஆக வேண்டும். நீங்கள் இறைவனைப் பற்றிய எந்த விசித்திரக் கொள்கையை வேண்டுமானாலும் நம்புபவர்களாக இருக்கலாம், ஆனால் வேதங்களை ஒப்புக்கொள்ளாவிடில் நீங்கள் நாத்திகர்களே. கிறிஸ்தவ மற்றும் பௌத்த நூல்களுக் கும், நமது சாஸ்திரங்களுக்கும் உள்ள வேற்றுமை இதுவே. அவர்களது நூல்கள் வெறும் புராணங்கள்; சாஸ்திரங்கள் அல்ல. ஏனெனில் அவை பிரளயத்தைப் பற்றியும் அரசர்களின் பரம்பரை பற்றியும் அரச குடும்பங்களைப் பற்றியும் மாமனிதர் களின் வரலாறுகளையுமே குறித்து வைத்துள்ளன. ஆனால் இது புராணங்களின் வேலை ஆயிற்றே! போகட்டும், வேதங் களுக்கு ஒத்துப்போகிறவரையில் அவை நல்லவை. பைபிளும் சரி, மற்ற நாட்டு சாஸ்திரங்களும் சரி, வேதங்களுக்கு ஒத்துப் போகிற வரையில் அவை மிகச் சரியானவை. ஆனால் மாறுபடும் போது அவற்றை ஏற்கக் கூடாது. குரானைப் பொறுத்தவரையும் அப்படியே. இவற்றுள் நல்லொழுக்கக் கோட்பாடுகள் பல

உள்ளன, வேதங்களுக்கு முரண்படாதவரையில் இவற்றைப் புராணங்களுக்கு ஒப்பான பிரமாணமாகக் கொள்ளலாம், அதற்குமேல் அல்ல. வேதங்கள் ஒருபோதும் எழுதப்பட்டவை அல்ல, ஒருபோதும் தோன்றியவை அல்ல— இதுதான் விஷயம். தங்கள் மத நூல்களில் சரித்திரக் காலத்திற்கு உட்பட்ட மனிதர் ஒருவர் இருக்கிறார், எனவே அவை உண்மையானவை என்று கிறிஸ்தவப் பாதிரி ஒருவர் என்னிடம் கூறினார். அவரிடம் நான், 'எங்கள் மத நூல்கள் சரித்திர வரையறை அற்றவை, அதனால்தான் உண்மையானவை. உங்களுடையவை சரித்திர வரையறைக்கு உட்பட்டவை. எனவே நிச்சயமாக அவை இன்றோ நேற்றோ ஒரு மனிதனால் ஆக்கப் பெற்றவை. உங்கள் சாஸ்திரங்கள் மனிதர்களால் உருவாக்கப்பட்டவை; எங்களுடையவை அத்தகையவை அல்ல. சரித்திர வரையறைக்கு உட்படாமலிருப்பதுதான் எங்கள் நூல்களின் வலிமை!' என்று கூறினேன். மற்ற மத நூல்களுடன் ஒப்பிடும்போது நமது வேதங்களின் பெருமை இதுவே.

இப்போது உபநிடதங்கள் போதிப்பது என்ன என்பதைப் பார்ப்போம். பல்வேறு பகுதிகள் உள்ளன. சில முற்றிலும் துவைதக் கருத்துக்கள், சில அத்வைதக் கருத்துக்கள். ஆனால் இந்தியாவின் எல்லா நெறியினருமே ஏற்றுக்கொள்கின்ற சில கோட்பாடுகளும் உள்ளன. முதலாவதாக வருவது சம்சாரக் கோட்பாடு, அதாவது மறுபிறவி. இரண்டாவதாக, மன இயலைப் பொறுத்தவரை எல்லோரும் ஒத்த கருத்து உடையவர்களாக இருக்கிறார்கள்—முதலில் தூல உடல், அதன் பின்னால் சூட்சும உடல் எனப்படும் மனம், அதற்கும் அப்பால் உள்ளது ஜீவன். இதுவே இந்தியா மற்றும் மேலை நாட்டு மன இயல்களுக்கு இடையேயுள்ள பெரும் வேற்றுமை. மனமே ஜீவன் என்றுதான் மேலை மனஇயல் வல்லுனர்கள் கூறுகின்றனர். ஆனால் இங்கே அவ்வாறு அல்ல. மனம் என்பது அந்தக்கரணம், ஜீவனின் கையில் இது ஒரு கருவி மட்டுமே. இதன்மூலமே ஜீவன் உடலிலும் புறவுலகிலும் இயங்குகிறது. இதை இங்குள்ள நெறியினர் அனைவரும் ஏற்றுக் கொள்கின்றனர். ஆன்மா, ஜீவான்மா என்று பல்வேறு பிரிவினரால் பலவிதமாக அழைக்கப்படும் ஜீவன் என்றுமுள்ளது, முதலும் முடிவும் அற்றது, பரிபூரண விடுதலை கிடைக்கும்வரை பிறவிகள்தோறும் வந்து போய்க் கொண்டிருக்கிறது—இதையும் எல்லோரும் ஏற்கின்றனர்.

மிக முக்கியமான மற்றொரு அடிப்படைக் கருத்தையும் அனைவரும் ஏற்றுக்கொள்கின்றனர். இதுவே இந்திய மனத்தையும் மேலை நாட்டு மனத்தையும் மிகத் தெளிவாக, மிக விளக்கமாக, தனித்தன்மையுடன் வேறுபடுத்திக் காட்டுகிறது—ஆன்மாவிலேயே அனைத்தும் இருக்கிறது என்னும் கோட்பாடே அது. புறத்திலிருந்து எதுவும் ஆன்மாவைத் தூண்டத் தேவையில்லை, உண்மையைச் சொல்வதானால், தூண்டும் சக்தி எல்லாமே ஆன்மாவின் உள்ளிருந்துதான் வெளிப்படுகிறது. ஆற்றல்கள் அனைத்தும், தூய்மை அனைத்தும், பெருமைகள் அனைத்தும் ஆன்மாவிலேயே உள்ளன. உண்மையில் அணிமா, லகிமா முதலான சித்திகள் அடையப்பட வேண்டியவை அல்ல, அவையனைத்தும் ஏற்கனவே ஆன்மாவில் உள்ளன என்கிறான் யோகி. நாம் செய்ய வேண்டுவதெல்லாம் இவற்றை வெளிப்படுத்துவதே. யோகியின் அஷ்டமா சித்திகள், காலடியில் நெளியும் புழுவில்கூட உள்ளன என்கிறார் பதஞ்ஜலி. வேற்றுமையை உண்டாக்குவது உடல். ஏற்ற உடலைப் பெற்றதும் இந்த ஆற்றல்கள் வெளிப்படுகின்றன, ஆனால் ஆற்றல்கள் ஏற்கனவே அதில் உள்ளன. 'நிமித்தமப்ரயோஜகம் ப்ரக்ருதீனாம் வரணபேதஸ்து தத: க்ஷேத்ரிகவத்[1]— நல்ல செயல்களோ தீய செயல்களோ இயற்கையின் மாறுதலுக்கான நேரடிக் காரணங்கள் அல்ல. ஆனால் அந்தச் செயல்கள் இயற்கையின் பரிணாமங்களுக்கு, மாறுதல்களுக்குத் தடையாக உள்ளவற்றை நீக்குகின்றன, அவ்வளவே! நீரின் பாதையிலுள்ள தடைகளை மட்டுமே உழவன் நீக்குகிறான், நீர் தன் இயல்பின்படி தானாகவே பாய்கிறது, அதுபோல்'. எங்கோ இருக்கின்ற ஏரி நீரைக் கொண்டு வந்து வயல்களுக்கு உழவன் பாய்ச்சுவதான பிரபல உதாரணத்தை இங்கே தருகிறார் பதஞ்ஜலி. ஏரியில் நீர் நிறைந்துள்ளது, கண நேரத்தில் அது வயலில் பாய்ந்துவிடும், ஏரிக்கும் வயலுக்கும் இடையில் இருப்பது ஒரு மண்கரை மட்டுமே. அந்தக் கரை உடைந்தால் போதும், தண்ணீர் தன் சொந்த ஆற்றலாலும் வேகத்தின் காரணமாகவும் பொங்கியோடி வரும்.

இவ்வாறு ஆற்றலும் தூய்மையும் நிறைநிலையும் ஆன்மாவில் ஏற்கனவே உள்ளன. ஆனால் தடுத்து நிற்பது அதை மூடியுள்ள ஆவரணமே, திரையே. திரையை நீக்கிவிட்டால் ஆன்மா

---

1. யோக சூத்திரங்கள், 4. 3; ஞான தீபம், சுடர் 2, பக்கம் 189 பார்க்க.

தன் சொந்தத் தூய்மையை அடைகிறது; அதன் ஆற்றல்கள் வெளிப்படுகின்றன. இதுவே கீழை மற்றும் மேலை நாட்டுச் சிந்தனைகளுக்கு இடையே உள்ள பெரிய வேறுபாடு. இதனை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். நாம் எல்லோரும் பிறவியிலேயே பாவிகள் என்றெல்லாம் கேலிக்கூத்தான கருத்துக்களைச் சிலர் பரப்புவதை நீங்கள் காண்கிறீர்கள். இத்தகைய கோட்பாடுகளில் நம்பிக்கை வைக்காததால் நாம் கொடியவர்களாகப் பிறந்து விட்டோமாம்! இயல்பாகவே நாம் கொடியவர்களானால், நாம் ஒருபோதும் நல்லவர்களாகவும் முடியாது என்பதை அவர்கள் சற்றும் எண்ணிப் பார்க்க மாட்டேன் என்கிறார்கள். ஏனெனில் இயல்பு எவ்வாறு மாற முடியும்? மாறுமானால் அது தனக்குத்தானே முரண்பாடுடைய ஒன்றாகிவிடும்; அது இயல்பாகாது. இதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். இந்தியாவில் உள்ள துவைதிகளும் அத்வைதிகளும் மற்ற எல்லோருமே இதில் ஒத்த கருத்துடைய வர்களாக இருக்கின்றனர்.

அடுத்தபடியாக இந்தியாவிலுள்ள எல்லா பிரிவினரும் நம்புகின்ற ஒரு கருத்து கடவுள். கடவுளைப் பற்றிய அவர்களது கருத்துக்கள் வெவ்வேறுதான். சகுணக் கடவுளை, சகுணக் கடவுளை மட்டுமே நம்புகிறான் துவைதி. சகுணம் என்ற சொல்லை இன்னும் சிறிது நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். சகுணக் கடவுள் என்றால் அவருக்கு ஓர் உடல் உண்டு, எங்கோ ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்து அவர் இந்த உலகை ஆள்கிறார் என்பது பொருள் அல்ல. சில குணங் களுடன் கூடியவர் அவர் என்பதே அதன் பொருள். சகுணக் கடவுளைப் பற்றிய பல்வேறு விளக்கங்கள் உள்ளன. அவர் இந்தப் பிரபஞ்சத்தை ஆள்பவர்; இதனைப் படைத்து, காத்து, அழிப்பவர் என்பதை எல்லா பிரிவினரும் நம்புகின்றனர். அத்வைதிகள் இன்னும் ஒருபடி மேலே சென்று, சகுணக் கடவுளின் சற்று உயர்ந்த நிலையான சகுண-நிர்க்குணம் என்ற நிலையில் நம்பிக்கை கொள்கிறார்கள். குணங்கள் எதுவுமற்ற ஒன்றை எந்த அடைமொழிகளாலும் விவரிக்க முடியாது. அத்வைதிகளும் அவருக்கு சத்-சித்-ஆனந்தம், அதாவது உண்மை-அறிவு-இன்பம் என்ற மூன்று குணங்களைத் தவிர வேறு எதையும் கொடுக்கவில்லை. சங்கரர் செய்தது இதுவே. ஆனால் இன்னும் சிறிது ஊடுருவி முன்னே செல்வதை உபநிடதங்களிலேயே நீங்கள் காண முடியும்; 'நேதி, நேதி,

இதுவல்ல இதுவல்ல,'[1] என்பதைத் தவிர அதைப்பற்றி எதுவும் சொல்ல முடியாது என்று அவை கூறுகின்றன.

இந்தியாவின் பல்வேறு பிரிவினரும் இதனை ஏற்றுக்கொள் கின்றனர். துவைதிகளை எடுத்துக்கொள்வோம். இந்தியாவின் துவைத நெறிகளுக்கு ஒரு சிறந்த நவீன பிரதிநிதியாக மாபெரும் துவைதியான ராமானுஜரை நான் எடுத்துக் கொள்கிறேன். இந்தியாவின் பிற பகுதிகளில் தோன்றிய மாபெரும் ஆச்சாரியர் களைப்பற்றி வங்க மக்கள் மிகச் சிறிதே அறிந்திருப்பது வருத்தத் திற்கு உரியது. முகமதியர் காலத்தில் சைதன்யர் ஒருவரைத் தவிர, மற்ற மகத்தான ஆச்சாரியர்கள் அனைவரும் தென் னிந்தியாவில்தான் தோன்றியுள்ளனர். தற்போது தென்னிந் தியாவின் அறிவுதான் இந்தியாவை உண்மையில் ஆள்கிறது. ஏனெனில் சைதன்யர்கூட தென்னாட்டு நெறிகளுள் ஒன்றான மாத்வ நெறியைச் சேர்ந்தவரே.

ராமானுஜரின் கருத்துப்படி கடவுள், ஆன்மா, இயற்கை— இந்த மூன்றுமே என்றும் உள்ளவை. ஆன்மாக்கள் என்றும் இருப்பவை, என்றென்றும் தனித்தே இருப்பவை, எப்போதும் தங்கள் தனித்தன்மையுடன் விளங்குபவை. உங்கள் ஆன்மாவும் எனது ஆன்மாவும் என்றென்றும் வேறானது என்கிறார் ராமானுஜர். இயற்கையும் இத்தகையதே, ஆன்மாவும் கடவுளும் இருப்பது எவ்வாறு உண்மையோ, அவ்வாறே இயற்கையின் இருப்பும் உண்மையே, அதுவும் என்றென்றைக்கும் இருக்கும். ராமானுஜரின் கருத்துப்படி இறைவன் இவற்றில் ஊடுருவி யுள்ளார்; ஆன்மாவின் சாரமாக இருக்கிறார். அவர் அந்தர்யாமி; இந்தப் பொருளில் கடவுளை ஆன்மாவுடன் ஒன்றுபட்டவராக வும், ஆன்மாவின் சாரமாகவும் ராமானுஜர் சிலவேளைகளில் கருதுகிறார். பிரளய காலத்தில் இயற்கை முழுவதுமே 'சங்குசித' நிலைக்கு உள்ளாகிறது, அதாவது சுருங்குகிறது, அப்போது இந்த ஆன்மாக்களும் சுருங்கி நுண்மையாகின்றன. அதே நிலை யில் சில காலம் இருக்கின்றன. அடுத்த யுக ஆரம்பத்தில் மீண் டும் வெளிப்பட்டு முன்வினைகளுக்கு ஏற்ப பயன்களை அனு பவிக்கின்றன. ஆன்மாவின் இயல்பான தூய்மையையும் நிறை நிலையையும் சுருங்கச் செய்கின்ற செயல் ஒவ்வொன்றும் தீய செயல், அதை வெளிப்படச் செய்து விரியச் செய்கின்ற செயல் ஒவ்வொன்றும் நற்செயல் என்கிறார் ராமானுஜர். ஆன்மாவை

---

1. பிருகதாரண்யக உபநிடதம், 2. 3. 6.

விகாச நிலைக்குக் கொண்டுவருகின்ற எல்லாமே நல்லது; அதை சங்குசித நிலைக்குக் கொண்டுவருகின்ற அனைத்துமே தீயது. இவ்வாறு ஆன்மா தன் செயல்களின்மூலம் சுருங்கியும் விரிந்தும் இயங்கிக் கொண்டிருக்கிறது, இறுதியில் ஆண்டவனின் அருளால் முக்தி பெறுகிறது. தூயதான, இந்த அருளை வேண்டி நிற்கின்ற எல்லா ஆன்மாக்கள்மீதும் இந்த அருள் பொழிகிறது, என்கிறார் ராமானுஜர்.

சிறப்பான சுலோகம் ஒன்று வேதங்களில் உள்ளது: 'ஆஹார சுத்தெள ஸத்வசுத்தி: ஸத்வசுத்தெள த்ருவா ஸ்ம்ருதி:[1]— உணவு தூய்மையாக இருக்குமானால் சத்வம் தூய்மையாகிறது. சத்வம் தூய்மையானால் நினைவு—' பரம்பொருள் நினைவு, அல்லது அத்வைதிகளின் கூற்றுப்படி, நமது சொந்த நிறைநிலையின் நினைவு—'மேலும் உண்மையாகிறது, உறுதியாகிறது, நிறைவெய்துகிறது.' இங்கேதான் பெரிய பிரச்சினை எழுகிறது. முதலில், சத்வம் என்பது என்ன? சாங்கியத் தத்துவத்தின்படி நமது உடல் மூவகைப் பொருட்களால் ஆனது. அவை சத்வம், ராஜசம், தாமசம். இதை எல்லா பிரிவினரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். இந்த மூன்றும் குணங்கள் என்னும் கருத்தே பொதுவாக நிலவி வருகிறது. அது சரியல்ல, இந்த மூன்றும் குணங்களே அல்ல, அவை மூன்று விதமான பொருட்கள், எந்தப் பொருட்களால் பிரபஞ்சம் ஆக்கப்பட்டுள்ளதோ அந்த மூலப் பொருட்கள். எனவே ஆஹார சுத்தியால், அதாவது உணவுத் தூய்மையால் இந்த சத்வப் பொருள் தூய்மையாகிறது. இந்த சத்வத்தைப் பெறுவதே வேதாந்தம் வலியுறுத்துகின்ற ஒன்று. நான் ஏற்கனவே கூறியதுபோல், ஆன்மா ஏற்கனவே தூய்மையானது, பூரணமானது. வேதாந்தம் கூறுவதுபோல், ராஜச, தாமசத் துகள்கள் அதை மூடியுள்ளன. சத்வத் துகள்கள் மிகவும் ஒளிர்பவை. கண்ணாடி வழியாக ஒளி எளிதாக ஊடுருவுவதுபோல் இந்த சத்வத் துகள்கள் வழியாக ஆன்மப் பிரகாசம் சுலபமாக ஊடுருவிச் செல்கின்றன. அந்த நிலையில் ராஜச, தாமசத் துகள்கள் விலகி சத்வத் துகள்கள் எஞ்சியிருக்குமானால், ஆன்மாவின் சக்தியும் தூய்மையும் வெளிப்படும்; ஆன்மா நன்றாகத் துலங்கி நிற்கும்.

எனவே இந்த சத்வத்தைப் பெறுதல் அவசியம். 'ஆஹாரம் தூய்மையாக இருக்குமானால்' என்று சுலோகத்தில் வருகிறது.

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 7. 26. 2.

ஆஹாரம் என்ற சொல்லுக்கு உணவு என்று பொருள் கூறுகிறார் ராமானுஜர்; இதனைத் தமது தத்துவத்தின் முக்கியமான திருப்பு முனைகளுள் ஒன்றாக்கியும்விட்டார் அவர். அது மட்டுமல்ல, அதன் தாக்கம் இந்தியா முழுவதிலும் எல்லா பிரிவுகளிலும் உள்ளது. எனவே இதை நாம் நன்கு புரிந்துகொள்வது இன்றியமையாதது. உணவில் தூய்மை நம் வாழ்வில் தலையாய ஒன்று என்பது ராமானுஜர் கருத்து.

உணவைத் தூய்மை இழக்கச் செய்பவை எவை? மூவகை தோஷங்கள் என்கிறார் ராமானுஜர்— ஜாதி தோஷம், ஆச்ரய தோஷம், நிமித்த தோஷம். உணவு எந்தப் பிரிவைச் சேர்ந்ததோ அந்தப் பிரிவுக்கு இயல்பாகவே உள்ளது ஜாதி தோஷம்; உதாரணமாக வெங்காயம், பூண்டு முதலியவற்றின் வாசனை இருக்கிறதே அதுபோல். அடுத்தது ஆச்ரய தோஷம்; அதாவது உணவு யாரிடமிருந்து பெறப்படுகிறதோ அவரது தோஷம். தீயவர்களிடமிருந்து பெறும் உணவு உங்கள் தூய்மையைக் கெடுக்கும். பெரிய மகான்கள் பலர் இந்த விஷயத்தில் மிகவும் கவனமாக, மிகவும் கண்டிப்பாக இருப்பதை நானே பார்த்திருக்கிறேன். ஆனால் ஒன்று: உணவைக் கொண்டு வந்தவர் எத்தகையவர், அதனைத் தொட்டவர் எத்தகையவர் என்பதை அறிவதற்கான ஆற்றல் அவர்களிடம் இருந்தது. இதனை ஒரு முறை அல்ல, நூறுமுறை என் வாழ்வில் நான் பார்த்திருக்கிறேன். அடுத்தது நிமித்த தோஷம். அசுத்தமான பொருட்களோ அத்தகைய ஆதிக்கமோ உணவில் சேர்வதால் வரும் தோஷம். இதனைச் சற்று விரிவாகப் பார்ப்போம். தூசியோ அழுக்கோ முடியோ விழுந்தாலும் பொருட்படுத்தாமல் அந்த உணவை உண்பது இந்தியாவில் சர்வ சாதாரணமான ஒன்று.

இந்த மூன்று தோஷங்களிலிருந்தும் விலக்கப்பட்ட உணவை உட்கொண்டு விட்டால் சத்வசுத்தி உண்டாகிறது, சத்வம் தூய்மையாகிறது. இப்படி மட்டும் இருந்தால் மதம் எவ்வளவு எளிதான ஒன்றாகத் தெரிகிறது! தூய உணவை உட்கொண்டால் மட்டும் போதும் என்றால், ஒவ்வொருவரும் ஆன்மீகவாதிகளாகி விடலாமே! இந்த தோஷங்களிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள இயலாத அளவுக்குப் பலவீனமான, அதற்குத் தகுதியில்லாத ஒருவர் இந்த உலகில் இருப்பார் என்று நான் நினைக்கவில்லை.

இந்த நிலையில் வருகிறார் சங்கரர். மனத்தில் சேர்ந்துள்ள எண்ணமே ஆஹாரம் என்கிறார் அவர். எண்ணம் தூய்மை

பெறும்போது சத்வமும் தூய்மை பெறுகிறது, அதற்கு முன்பு தூய்மை ஆவதில்லை. நீங்கள் எது வேண்டுமானாலும் உண்ண லாம். உணவு ஒன்றே சத்வத்தைத் தூய்மையாக்குமானால், ஒரு குரங்கிற்கு அதன் ஆயுள் முழுவதும் பாலும் சோறும் கொடுங்கள். அது யோகியாகிவிடுமா? அப்படியானால் பசுவும் மானும் பெரிய யோகிகளாக வேண்டுமே! 'பலமுறை நீராடுவ தால் சொர்க்கம் கிடைக்குமானால் மீன்கள் அல்லவா முதலில் சொர்க்கம் செல்ல வேண்டும்! காய்கறிகளை உண்பதால் ஒருவன் சொர்க்கம் செல்ல முடியுமானால் பசுவும் மானும் அல்லவா முதலில் அங்கே சென்றிருக்க வேண்டும்'[1]—என்றல்லவா சொல்லப்பட்டிருக்கிறது.

இதற்குத் தீர்வுதான் என்ன? ஆஹாரம் என்பதற்கான விளக்கங்களும் தேவை. சங்கரரின் விளக்கமே அடிப்படை. அதேவேளையில் தூய உணவு தூய எண்ணங்களுக்கு உதவு கிறது என்பதிலும் சிறிதும் சந்தேகமில்லை. இந்த இரண்டிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இரண்டும் தேவை. ஆனால் நவீன இந்தியாவில் வாழ்கின்ற நாம் சங்கரரின் உபதேசத்தை மறந்து 'உணவுத் தூய்மை' ஒன்றையே பிடித்துக் கொண்டது தான் தவறு. அதனால்தான் நான் நமது மதம் சமையலறை யில் புகுந்து கொண்டது என்று சொல்லும்போது சிலருக்குப் பொறி கலங்கிவிடுகிறது. நீங்கள் மட்டும் என்னுடன் சென்னை யில் இருந்திருந்தால், நான் சொல்வதிலுள்ள உண்மையை உணர்ந்திருப்பீர்கள். இந்த விஷயத்தில் வங்காளிகள் பரவா யில்லை. உணவை யாராவது பார்த்து விட்டால்கூட சென்னை வாசிகள் அதைத் தூர எறிந்து விடுகிறார்கள். இவ்வளவிருந்தும் அவர்கள் பெரிதாக முன்னேறியதாகவும் தெரியவில்லை. இத்தகைய உணவை அல்லது அத்தகைய உணவை உண்பதால் மட்டுமோ, இந்த மனிதன் அல்லது அந்த மனிதனின் பார்வையிலிருந்து அதை மறைத்துவிடுவதாலோ ஒருவர் நிறைநிலை எய்திவிட முடியுமானால், அவர்கள் அனைவரும் நிறை மனிதர்களாக இருக்க வேண்டுமே! ஆனால் அப்படி ஒன்றும் இல்லை!

---

1. நித நஹன் ஸே ஹரி மிலே தோ ஜல ஜந்து ஹோய் ।
பல மூல காகே ஹரி மிலே தோ பாதுர் பாந்தராய் ।
திரன் பகன் ஸே ஹரி மிலே தோ பஹுத் ம்ருகி அஜா ॥
—'ஸாதன் கர்னா' என்று தொடங்கும் மீராவின் பாடலில் வரும் வரிகள்.

ஒரு முழுமை, ஒரு நிறைவு வேண்டுமானால் இந்த இரண்டும் சேர வேண்டும், இரண்டும் இணைய வேண்டும். ஆனால் குதிரைக்கு முன்னே வண்டியைப் பூட்டுவது கூடாது. இந்த உணவு, அந்த உணவு என்றெல்லாமும் வர்ணாசிரமம் பற்றியும் இன்று எங்கும் கூக்குரல் கேட்கிறது. இதில் பெரும் கூச்சலிடுபவர்கள் வங்காளிகளே.

ஆமாம், உங்கள் ஒவ்வொருவரையும் கேட்கிறேன், வர்ணாசிரமம்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? நான்கு ஜாதிகள் இன்று எங்கே உள்ளன? பதில் சொல்லுங்கள். நான்கு ஜாதிகளை நான் காணவில்லையே! நமது வங்கப் பழமொழி உள்ளதே— 'தலையே இல்லை, தலைவலி உள்ளது' என்று. அத்தகைய வர்ணாசிரமத்தை இங்கு உருவாக்குவதா உங்கள் விருப்பம். இங்கு நான்கு ஜாதிகளே இல்லை. பிராமணர் களையும் சூத்திரர்களையும் மட்டுமே நான் காண்கிறேன். க்ஷத்திரியர்களும் வைசியர்களும் இருந்தால் அவர்கள் எங்கே? ஒவ்வோர் இந்துவும் செய்ய வேண்டிய முறைப்படி, பூணூல் அணிந்து வேதங்களைப் படிக்குமாறு அவர்களுக்கு நீங்கள் பிராமணர்கள் ஏன் கட்டளையிடக் கூடாது? வைசியர் களும் க்ஷத்திரியர்களும் இல்லாமல் பிராமணர்களும் சூத்திரர் களும் வசிக்கிறார்கள் என்றால், சாஸ்திரங்கள் என்ன சொல் கின்றன தெரியுமா? சூத்திரர்கள் மட்டுமே வாழும் நாட்டில் பிராமணர்கள் வசிக்கவே கூடாதாம். எனவே மூட்டை முடிச்சுகளுடன் வெளியேறுங்கள்! கடந்த ஆயிரம் ஆண்டு களாக மிலேச்சர்களின் அரசில் வாழ்ந்து, அவர்களின் உணவை உட்கொள்ளும் உங்களைப் போன்றவர்களைப்பற்றி சாஸ் திரங்கள் என்ன சொல்கின்றன தெரியுமா? அதற்காக நீங்கள் செய்ய வேண்டிய பிராயச்சித்தம் என்ன தெரியுமா? உங்களை நீங்களே எரித்துக்கொள்வதே பிராயச்சித்தம். ஆச்சாரியர்கள் என்று கூறிக்கொண்டு வேடதாரிகளாக நடக்க விரும்புகிறீர் களா? உங்கள் சாஸ்திரங்களில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கு மானால் முதலில் தீக்குளித்து உயிர்விடுங்கள். அலெக்சாண்ட ருடன் சென்ற பிராமணன் ஒருவன், தான் மிலேச்ச உணவு உட் கொண்டதாகக் கருதித் தீயில் விழுந்து உயிர் விட்டானே அந்த மாதிரிச் செய்யுங்கள். அதுபோல் செய்யுங்கள், இந்த நாடே உங்கள் காலடியில் கிடக்கும். உங்கள் சாஸ்திரங்களில் உங் களுக்கே நம்பிக்கையில்லை, ஆனால் பிறர் அதை நம்பவேண்டும் என்று விரும்புகிறீர்கள். வங்க பிராமணர்களே! இந்தக் காலத்தில்

உங்களால் அதைச் செய்ய முடியாது என்று நீங்கள் நினைத்தால், உங்கள் இயலாமையை ஒப்புக்கொள்ளுங்கள். அதேபோல் பிறரது இயலாமையையும் மன்னியுங்கள். பிற ஜாதியினரைத் தூக்கி விடுங்கள், கைகொடுத்து உதவுங்கள், வேதம் பயிலச் செய்யுங்கள், உலகத்திலிருக்கும் பிற ஆரியர் போல் ஆகச் செய்யுங்கள். நீங்களும் அதுபோன்ற ஆரியராகுங்கள்.

உங்கள் நாட்டைப் பாழாக்கிக் கொண்டிருக்கும் வாமாச்சாரச் சேற்றை விட்டொழியுங்கள். இந்தியாவின் பிற பகுதிகளை நீங்கள் பார்க்கவில்லை. நமது சமுதாயத்தில் இந்த வாமாச்சாரம் ஊடுருவியிருப்பதைப் பார்க்கும்போது, என்னதான் பண்பாடு என்றெல்லாம் பெருமையடித்துக் கொண்டாலும் இது எனக்கு ஒரு நரகமாகவே படுகிறது. இந்த வாமாச்சாரப் பிரிவினர் தேனடைபோல் நமது வங்க சமூகத்தை மொய்த்துக் கொண்டிருக்கின்றனர். பகலில் ஆசாரம்பற்றித் தீவிரமாக உபதேசிக்கின்ற இவர்கள் இரவில் குலைநடுங்கத் தக்க துன்மார்க்கச் செயல்களில் அல்லவா ஈடுபடுகிறார்கள்! இவர்களின் செயல்களுக்கு பயங்கரமான ஏதோ நூல்களின் ஆதரவு வேறு! இவற்றையெல்லாம் செய்யுமாறு அந்த நூல்களில் கட்டளையிடப்பட்டு இருக்கிறதாம். உங்களுள் வங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு இது தெரியும். வாமாச்சாரத் தாந்திரீகங்களே வங்கத்தின் சாஸ்திரங்கள். வண்டிக்கணக்கில் அவை அச்சிடப்படுகின்றன. வேதங்களைக் கற்பிப்பதற்குப் பதிலாக, உங்கள் குழந்தைகளின் உள்ளத்தில் நீங்கள் அந்த நஞ்சையே ஊட்டுகிறீர்கள். கல்கத்தா நகரத்துத் தந்தையரே, பயங்கரமான இந்த வாமாச்சார தந்திரங்களை எல்லாம் மொழிபெயர்த்து, உங்கள் பிள்ளைகளிடம் கொடுத்து, அதன்மூலம் அவர்களின் மனம் கெட்டுக் குட்டிச் சுவராகி, இதுவே இந்து சாஸ்திரங்கள் என்ற கருத்தில் அவர்கள் வளருமாறு செய்வது உங்களுக்கு வெட்கக்கேடாக இல்லையா? நீங்கள் உண்மையிலேயே அவமானப் படுவீர்களானால், அவற்றை எல்லாம் உங்கள் குழந்தைகளிடமிருந்து அகற்றி விடுங்கள். உண்மையான சாஸ்திரங்களான வேதங்கள், கீதை, உபநிடதங்கள் முதலியவற்றை அவர்கள் படிக்கட்டும்.

ஜீவான்மாக்கள் என்றுமே தனித்து நிற்பவை; இறைவன், தாம் வெறும் நிமித்த காரணமாக மட்டும் இருந்து, ஏற்கனவே

---

1. குயவன் மண்பாண்டங்கள் செய்வதை உதாரணமாக எடுத்துக் கொண்டால், மண்பாண்டங்கள் செய்வதற்கு குயவன் நிமித்த காரணம்; மண், சக்கரம் முதலியவை உபாதான காரணங்கள்.

இருக்கும் பொருளைக் கொண்டு உலகைப் படைக்கிறார் என்பது இந்தியாவில் உள்ள துவைதப் பிரிவினரின் கருத்து. ஆனால் அத்வைதிகளின் கருத்தோ, பிரபஞ்சத்தின் நிமித்த காரணமும் உபாதான காரணமும் அவரே என்பதாகும்.[1] இறைவன் உலகைப் படைக்கிறார் என்பதுடன் தம்மிடமிருந்தே படைக்கிறார்—இது அத்வைதிகளின் நிலை. இறைவன் தம்மிடமிருந்தே பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தார், அதேவேளை யில் அவர் அதிலிருந்து என்றென்றைக்குமாகப் பிரிந்தே நிற் கிறார், எல்லாமே எப்போதும் இறைவனுக்கு அடங்கியவை என்று கூறுகின்ற பக்குவமுறாத சில துவைதப் பிரிவினரும் இருக்கிறார்கள். இனி, இறைவன் பிரபஞ்சத்தைத் தன்னிட மிருந்தே பரிணமிக்கச் செய்தார். ஆன்மாக்கள் நீண்டகாலத் திற்குப் பின் தளைகள் நீங்கப்பெற்று எல்லையற்ற ஒன்றாகி நிர்வாண நிலையடைகின்றன என்று கருதுகின்ற பிரிவினரும் உள்ளனர். ஆனால் இந்தப் பிரிவுகள் மறைந்துவிட்டன.

இன்றைய இந்தியாவில் நீங்கள் காண்கின்ற அத்வைதிகள் சங்கரரைப் பின்பற்றுபவர்கள். சங்கரரின் கருத்துப்படி, இறைவன் நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் ஆவது மாயையின் காரணமாகவே தவிர, உண்மையில் அல்ல. இறைவன் இந்தப் பிரபஞ்சமாகவில்லை; பிரபஞ்சம் என்ற ஒன்றே இல்லை, இறைவன் இருக்கிறார். அத்வைத வேதாந் தத்தில் அறிந்துகொள்ள வேண்டிய மிக உயர்ந்த கருத்துக்களுள் ஒன்று இந்த மாயை என்பது! நமது தத்துவங்களுள் மிகவும் கடினமான இந்தக் கருத்தை விளக்குவதற்குப் போதிய நேரம் இல்லாததற்கு வருந்துகிறேன்.

உங்களுள் மேலைநாட்டு தத்துவத்தைப் படித்தவர்கள், இதற்கு மிகவும் ஒத்த கருத்துக்கள் சிலவற்றைக் கான்டின் (Kant) எழுத்துக்களில் காணலாம். ஆனால் ஓர் எச்சரிக்கை: கான்ட் பற்றி பேராசிரியர் மாக்ஸ்முல்லர் எழுதியுள்ளத்தில் பெரிய தவறு ஒன்று உள்ளது. காலமும் இடமும் நிமித்தமும் மாயையே என்ற கருத்தை முதலில் கண்டவர் சங்கரரே. (இதனைத் தெளிவாக்கும் வண்ணம்) சங்கரரின் விளக்கவுரை களில் சில பகுதிகளைக் கண்டெடுத்து எனது நண்பராகிய அந்தப் பேராசிரியருக்கு அனுப்பும் பேற்றை நான் பெற்றேன். எனவே அந்தக் கருத்தும் இங்கே இந்தியாவில்தான் இருந்தது.

அத்வைத வேதாந்திகளின் மாயாவாதம் இருக்கிறதே அது சற்று விசித்திரமானதுதான். இருப்பது பிரம்மம் ஒன்றே,

வேறுபாடுகளைத் தோற்றுவிப்பது மாயை. ஒருமை அல்லது ஒன்றேயான பிரம்மமே முடிவு, லட்சியம். இங்கும் இந்திய மற்றும் மேலைநாட்டுச் சிந்தனைகளுக்கு இடையே ஒரு பெரிய கருத்து வேற்றுமையைக் காண்கிறோம். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக உலக நாடுகளை நோக்கி இந்தியா இந்த அறை கூவலை விடுத்துள்ளது. இதனை எதிர்த்த நாடுகள் பல. ஆனால் விளைவு? அவை அழிந்தன, நீங்கள் வாழ்கிறீர்கள். இதோ, இதுதான் அந்த அறைகூவல்: இந்த உலகம் ஒரு மித்யை, எல்லாமே மாயை. நீங்கள் தரையில் அமர்ந்து கைகளால் உணவருந்தினாலும், தங்கத் தட்டில் உண்டாலும், மன்னாதி மன்னனானாலும் மணிமாடத்தில் வாழ்ந்தாலும், பிச்சைக்கார னாக ஏழ்மையில் உழன்றாலும் எல்லோருக்கும் மரணம்தான் முடிவு. எல்லாம் ஒன்றுதான், எல்லாம் மாயை. இது இந்திய நாட்டின் பழமையான கருத்து. மீண்டும்மீண்டும் பல நாடுகள் எழுந்து, இந்தக் கருத்தை மறுக்க, பொய்யாக்க முயல்கின்றன; போகத்தையே ஆதார சுருதியாகக் கொண்டு அவை வளர் கின்றன, அவற்றிடம் அதிகாரம் உள்ளது. போகத்தின் உச்சக் கட்டத்தில் திளைக்கின்றன, அடுத்தக் கணமே அழிந்துவிடு கின்றன. நாம் என்றும் இருக்கிறோம். ஏனெனில் எல்லாமே மாயை என்று நாம் காண்கிறோம். மாயையின் குழந்தைகள் என்றும் வாழ்கின்றனர்; போகத்தின் பிள்ளைகள் அழிந்து போகின்றனர்.

இங்கே இன்னொரு பெரும் வேறுபாடும் உள்ளது. ஹெகலும் (Hegal), ஷோபனேரும் (Schopenhaur) ஜெர்மானிய தத்துவத்தில் கொண்டுவர முயன்ற அதே கருத்துக்கள் பண்டைய இந்தியாவிலும் கொண்டுவரப்பட்டன. அதிர்ஷ்ட வசமாக ஹெகலின் தத்துவம் இங்கே முளையிலேயே கிள்ளி எறியப்பட்டுவிட்டது; வளர்ந்து, தன் நாசக்கிளைகளை நமது தாய்நாட்டின் மீது படரவிடாமல் தடுக்கப்பட்டுவிட்டது. ஒன்றான அந்த அறுதி உண்மை (Absolute) வெறும் குழப்பமே, வெளிப்பட்டு நிற்கின்ற உருவம் (Individualized form) எவ்வளவோ பரவாயில்லை என்பது ஹெகலின் கருத்துக்களுள் ஒன்று. உலகம் அல்லாததைவிட உலகம் சிறந்தது, முக்தியைவிட சம்சார வாழ்வே சிறந்தது என்பதுதான் அவரது கருத்து. எவ்வளவு அதிகமாக இந்த சம்சாரக் கடலில் மூழ்கிக் கிடக்கிறோமோ, வாழ்க்கைச் செயல்பாடுகளால் எவ்வளவு அதிகமாக ஆன்மா மூடப்படுமோ அவ்வளவுக்கு நல்லது என்று

அவர் கூறுகிறார். நாங்கள் வீடுகளை எவ்வளவு அழகாகக் கட்டுகிறோம், வீதிகளை எவ்வளவு நன்றாகச் சுத்தம் செய் கிறோம், புலனின்பங்களை எவ்வாறு அனுபவிக்கிறோம்— இதெல்லாம் உங்கள் கண்களுக்குத் தெரியவில்லையா என்று கேட்கிறார்கள். ஆம், அவற்றின் பின்னால், அந்த இன்பத்தின் ஒவ்வொரு துளியின் பின்னால் நிலைத்தவெறுப்பையும் துன்பத்தையும் பயத்தையும் மறைத்து வைத்துக் கொள்ளலாம் அல்லவா!

மாறாக, நமது தத்துவ அறிஞர்களோ, பரிணாமம் என்று நீங்கள் சொல்கின்ற வெளிப்பாடு ஒவ்வொன்றும் வீண், தோன்றா நிலையிலுள்ள ஒன்று தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற்காகச் செய்கின்ற வீண் முயற்சி என்று எடுத்த எடுப்பிலேயே கூறிவிடுகிறார்கள். ஆம், இந்தப் பிரபஞ்சத்திற்கே காரணமானவரும் எல்லாம் வல்லவருமாகிய நீங்கள் வெறும் சேற்றுக் குட்டையில் உங்களைப் பிரதிபலித்துக் கொள்ள முயற்சிக்கிறீர்கள்! இந்த முயற்சியில் சில காலம் ஈடுபட்டபின் இது எல்லாமே வீண் என்பதை உணர்கிறீர்கள். பின்னர், எங்கிருந்து புறப்பட்டீர்களோ அந்த இடத்தை நோக்கிச் செல் கிறீர்கள். இதுவே வைராக்கியம் அல்லது தியாகம், மதத்தின் சரியான ஆரம்பம். தியாகமே இல்லாமல் மதமும் ஒழுக்கமும் எங்கிருந்து வரும்? தொடக்கமும் முடிவும் தியாகமே. 'விட்டு விடு' என்று சொல்கிறது வேதம், 'விட்டுவிடு', 'விட்டு விடு'— அது ஒன்றே வழி. 'ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வ மானசு:[1]— செல்வத்தால் அல்ல, சந்தான விருத்தியால் அல்ல, தியாகம் ஒன்றினாலேயே மரணமிலாப் பெருநிலை அடையப் பட வேண்டும்'. இந்திய நூல்கள் இவ்வாறே கட்டளையிடு கின்றன. அரியாசனத்தில் அமர்ந்து அரசாண்ட அதே வேளை யில் தியாகத்தின் திருவுருவாகவும் திகழ்ந்த பலர் உள்ளனர். ஜனகர்கூட அனைத்தையும் துறக்க நேர்ந்தது. அவரைவிடப் பெரிய தியாகி யார்?

இன்று நாமும் நம்மை ஜனகர் என்று அழைத்துக் கொள்ள விரும்புகிறோம். உண்மைதான், அவர்களும் ஜனகர்களே! உடுப் பதற்கும் உண்பதற்கும் இல்லாமல் திக்கற்று அலையும் குழந்தைகளுக்கு ஜனகர்கள் (தந்தைகள்). இந்தக் கருத்தில்தான் ஜனகர் என்னும் பெயர் இவர்களுக்குப் பொருந்தும். பண்டைய

---

1. கைவல்ய உபநிடதம், 2.

ஜனகரிடம் இருந்த தேஜசும் தெய்வீகச் சிந்தையும் இவர்களுக்கு இல்லை. இவர்கள் நமது நவீன ஜனகர்கள்! இப்போது ஜன கராவதைச் சிறிது குறைத்துக்கொண்டு நேராக லட்சியத்திற்கு வாருங்கள்! தியாகம் செய்ய இயலுமானால் உங்களுக்கு ஆன்மீகம் உண்டு, இல்லா விட்டால் பயனில்லை. நீங்கள் உல கிலுள்ள நூல்கள் எல்லாவற்றையும் கற்கலாம், கிழக்கிலிருந்து மேற்கு வரையுள்ள நூல் நிலையங்களிலுள்ள நூல்களை யெல்லாம் கரைத்துக் குடித்து மகாபண்டிதராகலாம். ஆனால் கர்மகாண்ட அளவில் மட்டுமே நின்றுவிட்டீர்களானால் நீங்கள் வெறும் பூஜ்யம், உங்களுக்கு ஆன்மீகம் கிடையாது. தியாகத்தின் மூலமே மரணமிலாப் பெருநிலையை அடைய வேண்டும். அதுவே சக்தி, மாபெரும் சக்தி, உலகையே துரும் பென மதிக்கும் சக்தி. அப்போதுதான் 'ப்ரஹ்மாண்டம் கோஷ் பதாயதே—இந்தப் பிரபஞ்சமே ஒரு பசுவின் கால்குளம்பு பதிந்த சிறு பள்ளம்போல் ஆகிறது'.

தியாகம்! அதுவே கொடி, இந்திய நாட்டின் அடையாளக் கொடி, உலகின் மீது பறக்கும் கொடி. மடிந்துகொண்டிருக்கும் மனித குலத்திற்கு ஓர் எச்சரிக்கையாக, எல்லா கொடுங் கோன்மைக்கும் ஓர் எச்சரிக்கையாக, உலகின் தீமைகளுக்கு ஓர் எச்சரிக்கையாக இந்தியா மீண்டும்மீண்டும் அனுப்பி வருகின்ற அழியாத கருத்து இது. ஓ இந்துக்களே! அந்தக் கொடியின்மீது உங்களுக்குள்ள பிடியை விடாதீர்கள், அதை உயர்த்திப் பிடி யுங்கள். உங்கள் வலிமை குறைந்ததாக இருந்தாலும் உங்களால் தியாகம் எதுவும் செய்ய முடியாவிட்டாலும், லட்சியத்தைத் தாழ்த்தாதீர்கள். 'நான் பலவீனன், என்னால் உலகை விட முடியாது' என்று சொல்லிக் கொள்ளுங்கள். வெறும் ஆஷாட பூதிகள் ஆகி, (வேத) வாக்கியங்களைத் திரித்து, விதண்டாவாதம் செய்து பாமர மக்களின் கண்களில் மண்ணைத் தூவ முயற்சி செய்யாதீர்கள். உங்கள் பலவீனத்தை ஒப்புக் கொள்ளுங்கள். ஏனெனில் தியாகம் என்னும் கருத்து மிக உயர்ந்த ஒன்று. கோடிக்கணக்கானோர் தோல்வியுறலாம். பத்துபேர் அல்லது வெறும் இருவரே அந்த முயற்சியில் வெற்றி பெறலாம். அப்படித் தான் இருக்கட்டுமே! உயிரிழந்த கோடிக்கணக்கானவர்களும் புண்ணியவான்கள்! அவர்கள் சிந்திய ரத்தத்தால் அல்லவா வெற்றி கிடைத்தது! பம்பாய் மாகாணத்தில் உள்ள வல்லபாச் சாரியரின் நெறியைத் தவிர பிற வைதீக நெறியினர் அனைவரும் தியாகம் என்ற இந்த லட்சியத்தை ஏற்றுக்கொள்கின்றனர்.

தியாகம் இல்லாத இடத்தில் என்ன நிகழும் என்பது உங்களுள் பலருக்கும் தெரிந்ததே.

நமக்கு வைதீகம் வேண்டும், அதிதிவிரமான வைதீகம் வேண்டும். உடம்பு முழுவதுமே சாம்பலைப் பூசிக் கொள்பவர்களும், கைகளைத் தூக்கியே நின்று தவம் செய்பவர்களும் நமக்குத் தேவை. ஆம், அவை விசித்திரமான முறைகளாக இருந்தாலும், அவையும் விட்டுவிடுதல் என்ற கருத்தையே சுட்டி நிற்கின்றன. நமது ஆதார சக்திகளை அரித்துத் தின்று, நம் இனத்தை ஒரு கபடதாரிகளின் இனமாக மாற்றியவாறே இந்தியாவில் நுழைந்து முன்னேறி வருகின்ற ஆண்மையற்ற சுக போகங்களின் வசப்பட்டு அழியாதீர்கள் என்று ஓர் எச்சரிக்கை யாக அவர்கள் நிற்கிறார்கள். நமக்குத் தவம் என்ற ஒன்று கண்டிப்பாகத் தேவை. தியாகம்தான் பழம்பெரும் நாட்களில் இந்தியாவை வெற்றி கொண்டிருந்தது; இனியும் அதுவே வெற்றி கொள்ளும். லட்சியங்களுள் எல்லாம் மிக உயர்ந்ததாக, மிகச் சிறப்பானதாக இன்றும் விளங்குவது அதுவே. புத்தரும் ராமா னுஜரும் ராமகிருஷ்ண பரமஹம்சரும் தோன்றிய பூமி, தியாக பூமி இது. பண்டைய நாட்களிலிருந்தே கர்ம காண்டத்தை எதிர்த்துப் பிரச்சாரம் செய்த பூமி இது. எல்லாவற்றையும் துறந்து ஜீவன்முக்தர்களாக நூற்றுக் கணக்கானோர் இன்றும் வாழ்ந்து வருகின்ற பூமி இது. இந்தப் பூமி, தனது லட்சியத்தைக் கைவிடுமா? விடாது, ஒருபோதும் விடாது. மேலைநாட்டின் சுகபோக லட்சியங்களைக் கண்டு மதிமயங்கிய சிலர் இருக்க லாம். மேலைநாட்டின் சாபக்கேடான இந்தச் சுகபோகத்தில் மூழ்கியவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கலாம்; உலகத்தின் சாபக்கேடான இந்தப் புலனின்பங்களில் மூழ்கியவர்கள் லட்சக் கணக்கில் இருக்கலாம். ஆனாலும் மதத்தையே தங்கள் வாழ் வாகக் கொண்டு, எத்தகைய விளைவுகளையும் பொருட்படுத் தாமல், தேவையானால் எல்லாவற்றையும் விட்டுவிடக் கூடியவர் களும் ஆயிரக்கணக்கில் இதோ இந்த எனது பாரத பூமியில் இருக்கவே செய்கின்றனர்.

நமது பல்வேறு பிரிவுகளுக்கும் பொதுவாக உள்ள மற்றொரு லட்சியத்தையும் உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். அதுவும் பெரிய விஷயமே. மதம் என்பது உணரப்பட வேண்டிய ஒன்று என்ற இந்த இணையற்ற கருத்து இந்தியாவில் மட்டுமே உள்ளது. 'நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுனா ச்ருதேன—அதிகமாகப் பேசுவதாலோ, அறிவு

பலத்தாலோ, சாஸ்திரங்களை ஏராளமாகப் பயில்வதாலோ இந்த ஆன்மாவை அடைய முடியாது.'[1] சாஸ்திரங்களைப் படிப்பதால்கூட ஆன்மாவை அறிய முடியாது என்று முழங்குபவை இந்த உலகில் நமது சாஸ்திரங்கள் மட்டுமே. பேச்சுக்கள், சொற்பொழிவுகள் இவை எவையும் அல்ல, அனுபூதியே தேவை. ஆன்மாவை உணர வேண்டும். இது குருவிடமிருந்து சீடனுக்கு வருகிறது. சீடனுக்கு இந்த அகக் காட்சி வந்ததும் எல்லாம் தெளிவாகிறது, அனுபூதி உண்டாகிறது.

இன்னும் ஒன்று: வங்காளத்தில் குலகுரு முறை என்னும் வினோதமான வழக்கம் இருந்து வருகிறது—'எனது தந்தை உனக்குக் குருவாயிருந்தார், இப்போது நான் உனக்கு குருவா யிருக்கிறேன்', 'என் தந்தை உன் தந்தைக்குக் குருவாயிருந்தார், எனவே இப்போது நான் உனக்குக் குருவாயிருக்கிறேன்' என்பது. குரு யார்? வேதங்களைப் பார்ப்போம்— குரு என்பவர் 'வேதங்களின் ரகசியத்தை உணர்ந்தவர்'; புத்தகப் பூச்சியல்ல, இலக்கணப் பண்டிதர் அல்ல, சாதாரண பண்டிதரும் அல்ல, பொருள் உணர்ந்தவரே குரு, 'யதா கரச்சந்தனபாரவாஹீ பாரஸ்ய வேத்தா ந து சந்தனஸ்ய—சந்தனக் கட்டைகளைச் சுமக்கின்ற கழுதைக்கு அதன் எடைதான் தெரியுமே தவிர, அதன் சிறப்பு தெரியாது'. இந்தப் பண்டிதர்களும் இத்தகைய வர்களே. இத்தகைய பண்டிதர்கள் நமக்கு வேண்டாம். அனுபூதியில் அறியாதவர்கள் எதைப் போதிக்க முடியும்? நான் இளைஞனாக இருந்தபோது ஆன்மீகத்தைத் தேடி இந்தக் கல்கத்தாவெங்கும் சுற்றினேன்; பெரிய பெரிய சொற்பொழிவு களைக் கேட்டேன். சொற்பொழிவு முடிந்த பின்னர் அந்தச் சொற்பொழிவாளர்களிடம், 'நீங்கள் கடவுளைக் கண்ட துண்டா?' என்று கேட்டேன். அவர்களோ கடவுளைக் காண் பது என்ற பேச்சைக் கேட்டதும் வெலவெலத்து விட்டார்கள். 'ஆம் நான் கண்டிருக்கிறேன்' என்று கூறியவர் ராமகிருஷ்ண பரமஹம்சர் ஒருவரே. அது மட்டுமல்ல, 'கடவுளைக் காணும் வழியில் உன்னையும் அழைத்துச் செல்வேன்' என்றும் அவர் கூறினார். மூல பாடங்களைத் திரித்துப் பொருள் கூறுபவர் குரு அல்ல. 'வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ர வ்யாக்யான கௌச லம் வைதுஷ்யம் விதுஷாம் தத்வத்புக்தயே ந து முக்தயே[2]—

1. கடோபநிடதம், 1. 2. 23.
2. விவேக சூடாமணி, 58.

விதவிதமான வார்த்தை ஜாலங்கள், சாஸ்திரங்களுக்குப் பலவிதமாகப் பொருள் கூறுதல்; இவையெல்லாம் பண்டிதர் களின் களிப்பிற்கு உரியவை, ஆனால் முக்திக்கு வழியல்ல.'

ச்ரோத்ரிய:—வேதங்களின் ரகசியத்தை அறிந்தவர்; அவ்ருஜின:—பாவம் அற்றவர், அகாமஹத:[1]—ஆசையால் துளைக்கப் பெறாதவர், கற்பிப்பதன் மூலம் சம்பாதிக்க விரும் பாதவர், அவரே சாது; அவரே குரு. அவர் வசந்தம்போல் வரு கிறார். வசந்தம் வந்தால் மரம் செடி கொடிகள் துளிர் விடு கின்றன; அரும்புகின்றன, மலர்கின்றன. இவற்றிடமிருந்து பிரதி யாக எதையாவது வசந்தம் வேண்டுகிறதா? எதிர்பார்க்கிறதா? இல்லை. ஏனெனில் நன்மை செய்வதே அதன் இயல்பு. நன்மை செய்கிறது, அத்துடன் நின்று விடுகிறது. இத்தகையவரே குரு. 'தீர்ணா: ஸ்வயம் பீமபவார்ணவம் ஜனான் அஹேதுநான் யானபி தாரயந்த:[2]— சம்சாரப் பெருங்கடலைத் தாண்டியவர் யாரோ, எவ்விதச் சுய லாபமும் இன்றி மற்றவர்களும் அந்தப் பெருங்கடலைக் கடக்க உதவுகிறவர் யாரோ' அவரே குரு. வேறு யாரும் குரு ஆக முடியாது. இதைக் குறித்துக் கொள் ளுங்கள். ஏனெனில் 'அவித்யாயாமந்தரே வர்தமானா: ஸ்வயம் தீரா: பண்டிதம் மன்யமானா: | தந்த்ரம்யமாணா: பரியந்தி மூடா: அந்தேனைவ நீயமானா யதாந்தா:[3]—தாங்களே அறியாமையில் மூழ்கிக் கிடக்கின்ற மூடர்கள், அகங்காரத்தின் காரணமாகத் தங்களுக்கு எல்லாம் தெரியும் என்று எண்ணிக் கொண்டு, பிறருக்கு உதவத் துடிக்கிறார்கள். அந்த முட்டாள்கள் கோணல் வழிகளில் தட்டுத் தடுமாறித் தள்ளாடியவாறே முன்னும் பின்னும் செல்கிறார்கள்; குருடன் குருடனுக்கு வழி காட்டியதுபோல் இருவரும் குருட்டாட்டமாடி குழியில் விழு கிறார்கள்.' இவ்வாறு வேதங்கள் சொல்கின்றன. இப்போதுள்ள உங்கள் பழக்கத்தை இதனுடன் ஒப்பிட்டுப் பாருங்கள்.

நீங்கள் வேதாந்திகள்; நீங்கள் வைதீகர்கள். இல்லையா? நீங்கள் பெரிய இந்துக்கள், பரம வைதீகர்கள். நான் செய்ய விரும்புவதெல்லாம் உங்களை மேலும் சிறந்த வைதீகர்கள் ஆக்குவதையே. நீங்கள் எந்த அளவிற்கு வைதீகர்களாக இருக் கிறீர்களோ, அந்த அளவிற்கு அறிவாளிகளாக இருப்பீர்கள். தற்கால வைதீகம்பற்றி நீங்கள் நினைக்கநினைக்க முட்டாள்கள்

1. விவேக சூடாமணி, 34.
2. விவேக சூடாமணி, 39.
3. கட உபநிடதம், 1. 2. 5.

ஆவீர்கள். உங்கள் பழைய வைதீகத்திற்குச் செல்லுங்கள். ஏனெனில் அன்று வேதங்களிலிருந்து புறப்பட்ட அந்த ஒவ்வோர் ஒலியும், ஒவ்வொரு துடிப்பும் வலிமையான, உறுதியான, உண்மையான, இதயத்திலிருந்து தோன்றியவை. ஒவ்வொன்றும் உண்மையானவை. பிறகே வீழ்ச்சி ஏற்பட்டது. கலை, விஞ்ஞானம், மதம் அனைத்திலும் சீரழிவு கண்டு நாடே வீழ்ச்சியுறத் தொடங்கியது. இந்த வீழ்ச்சிக்கான காரணங்களை ஆராய்ந்து பார்க்க இப்போது நமக்கு நேரமில்லை. எனினும் அந்த வேளையில் எழுதப்பட்ட நூல்கள் எல்லாம் தேசிய வீழ்ச்சி என்னும் கொள்ளைநோயின் நச்சுக் காற்றையே வெளியிடக் காண்கிறோம்; வீரத்திற்குப் பதிலாக அழுகைக் குரல்களையே கேட்கிறோம். திரும்பச் செல்லுங்கள், பொன்னான பழங்காலத்திற்குத் திரும்பிச் செல்லுங்கள். வலிமையும் வீரியமும் நிறைந்த அந்தக் காலத்திற்குச் செல்லுங்கள். மீண்டும் ஒருமுறை வலிமை பெறுங்கள். பண்டைய ஊற்று நீரை நன்றாகப் பருகுங்கள். அதுவே இந்தியாவில் வாழ்விற்குரிய ஒரே நியதி.

அத்வைதிகளின் கருத்துப்படி, இப்போது நம்மிடம் காணப்படுகின்ற இந்தத் தனித்தன்மை இருக்கிறதே அது ஒரு பிரமை. இதைப் புரிந்துகொள்ள உலகமே திணறுகிறது. நீ ஒரு தனிமனிதன் அல்ல என்று ஒருவனிடம் சொல்லிப் பாருங்கள். தனது தனித்துவம் என்று அவன் என்ன புரிந்துகொண்டானோ என்னவோ, ஆனால் அதை இழந்துவிடப் போகிறோமே என்று பயந்து நடுங்குகிறான். ஆனால் அத்வைதியோ தனித்துவம் என்பது ஒரு காலத்திலும் இருந்ததில்லை என்கிறான். வாழ்வின் ஒவ்வொரு கணமும் நீ மாறிக்கொண்டே இருக்கிறாய். நீ குழந்தையாக இருந்தாய், அப்போது உன் எண்ணங்கள் ஒருவிதமாக இருந்தன. இப்போது வாலிபனாக இருக்கிறாய், இப்போது இன்னொரு விதமாகச் சிந்திக்கிறாய். கிழவனாவாய், அப்போது வேறொரு விதமாகச் சிந்திப்பாய். ஒவ்வொருவரும் மாறுகின்றனர். அப்படியானால் உனது தனித்துவம் எங்கே? உடலிலோ மனத்திலோ சிந்தனையிலோ நிச்சயமாக இல்லை. இவற்றிற்கு அப்பால் உள்ளது உன் ஆன்மா. இந்த ஆன்மா பிரம்மமே என்கிறான் அத்வைதி. இரண்டு எல்லையற்றவை இருக்க முடியாது. ஒரே ஒரு தனித்துவம்தான் உள்ளது, அதுவே எல்லையற்றது. தெளிவாகச் சொல்வதானால் நாம் விவேகிகள், எதையும் ஆராய்ந்து பார்க்க விரும்புகிறோம்.

ஆராய்ச்சி என்பது என்ன? பகுத்து அறிதல் என்று சொல்லலாம். இதற்குமேல் போக முடியாது என்னும் நிலைவரை பகுத்து அறிதல். எல்லையற்ற ஒன்றுடன் சேரும்போது மட்டுமே எல்லையுள்ள ஒன்று முழு அமைதி பெற முடியும். எல்லையுள்ள ஒன்றை எடுத்து, பகுத்து ஆராயப் புகுந்தால் இறுதியாக எங்கே போய் நிற்பீர்கள்? எல்லையற்ற ஒன்றில் போய்தான் நிற்பீர்கள். அந்த எல்லையற்ற ஒன்றே உள்ளது என்கிறான் அத்வைதி. மற்றவை அனைத்தும் மாயை, உண்மையாக இருப்பவை அல்ல. தூலமான பொருளாகக் காட்சியளிக்கும் அனைத்தும் இந்த பிரம்மமே. நாமும் பிரம்மமே. அதன் பல்வேறு உருவங்களும் பிறவும் மாயை. உருவத்தையும் வடிவத்தையும் விலக்குங்கள், நீங்களும் நானும் எல்லாம் ஒன்று. ஆனால் 'நான்' என்ற சொல் இருக்கிறதே, அதனிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். 'நானே பிரம்மமாக இருந்தால் இதை ஏன் செய்யக் கூடாது, அதை ஏன் செய்யக் கூடாது!' என்று பொதுவாகச் சொல்கிறார்கள். இது அந்தச் சொல்லை வேறு கருத்தில் உபயோகிப்பதாகும். நீ கட்டுப்பட்டிருப்பதாகக் கருதிவிட்டால், நீ பிரம்மமே அல்ல. பிரம்மத்திற்கு எதுவும் தேவையில்லை. அதன் ஒளியும் இன்பமும் மகிழ்ச்சியும் உள்ளேயே இருக்கிறது. தன்னுள்ளேயே முழுத் திருப்தியுற்று இருப்பது அது. அதற்கு வேண்டியது எதுவுமில்லை; அது எதிர்பார்ப்பது எதுவுமில்லை. அது சிறிதும் பயமில்லாதது; சுதந்திரமானது. அதுவே பிரம்மம். அதில் நாம் எல்லோரும் ஒன்றே.

துவைதிகளுக்கும் அத்வைதிகளுக்கும் இடையிலுள்ள ஒரு பெரிய கருத்து வேறுபாடு இது என்று தோன்றுகிறது. சங்கரர் போன்ற மாபெரும் உரையாசிரியர்கள்கூட சில மூலபாடங்களுக்குச் சிலவேளைகளில் நியாயமற்ற முறையில் பொருள் கூறுவதாகவே எனக்குத் தோன்றுகிறது. ராமானுஜரும் சில இடங்களில் தெளிவின்றியே பொருள் கூறுகிறார். துவைதம், அத்வைதம் ஆகிய இரண்டில் ஒன்று மட்டுமே உண்மையாக இருக்க முடியும், மற்றது தவறு என்றே பண்டிதர்களும் கருதுகின்றனர். ஆனால் வேதங்களோ, இதுவரை இந்தியா உலகிற்கு வழங்கியவற்றுள் மிக உன்னதமான கருத்தைக் கூறுகிறது— 'ஏகம் ஸத் விப்ரா: பஹுதா வதந்தி—உள்ளது ஒன்றே; ரிஷிகள் அதனைப் பல பெயர்களால் அழைக்கிறார்கள்.' இதுவே அடிப்படையான கருத்து, இந்த அஸ்திவாரத்தின் மீதுதான் இந்திய நாட்டின் வாழ்க்கைப் பிரச்சினைகள் எல்லாம் அலசி ஆராய்ந்து

செயலாற்றப்படுகின்றன—ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி. சில அறிஞர்கள்—நான் இங்கு ஆன்மீக மேலோரையே குறிப் பிடுகிறேன்—இவர்களைத் தவிர, மற்ற அனைவரும் இந்தக் கருத்தை மறந்துவிட்டார்கள். நாமும் மறந்துவிட்டோம். பண் டிதர்களுள் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு பேர் இதை மறந்து விடுகின்றனர். துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் இவற் றுள் ஒன்றுதான் சரியானது என்றே இவர்கள் கருதுகின்றனர். காசிக்குச் சென்று ஏதாவது படித்துறையில் ஐந்து நிமிடம் உட்காருங்கள், நான் சொல்வதன் உண்மையைப் புரிந்து கொள் வீர்கள். பல்வேறு பிரிவினரின் மல்யுத்தத்தையே நீங்கள் அங்கே காண முடியும்.

இந்த நிலைமையில்தான், இந்திய நாட்டின் சமயப் பிரிவுகள் அனைத்திற்கும் பின்னணியாக உள்ள சமரசத்தின் செயல்முறை விளக்கமாக யாருடைய வாழ்க்கை விளங்கியதோ அவர் தோன்றினார். நான் குறிப்பிடுவது ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைத்தான். இந்த இரண்டு நெறிகளுமே அவசிய மானவை என்பதை அவரது வாழ்வு விளக்குகிறது. இவை இரண்டும் வான இயலில் வரும் பூமிக் கொள்கை, சூரியக் கொள்கை (Geocentric & Heliocentric Theories) போன்றவை. ஒரு சிறுவனுக்கு வான இயல் கற்பிக்கும்போது முதலில் பூமிக் கொள்கை சொல்லிக் கொடுக்கப்படுகிறது, பின்னர் அதனை ஒத்த கருத்துக்கள் கற்பிக்கப்படுகின்றன. அவன் வான இயல் நுணுக்கங்களைப் படிக்க முயலும்போதுதான் சூரியக்கொள்கை அவசியம். அப்போது மட்டுமே அவனால் அதை நன்கு புரிந்து கொள்ள முடியும். துவைதம் என்பது புலன்களின் இயல்பான போக்கில் செல்வது. புலனறிவுக்கு அடங்கி வாழும்வரை சகுணக் கடவுளை, சகுணக் கடவுளை மட்டுமே நாம் காண முடியும். உலகம் எப்படிக் காட்சியளிக்கிறதோ, அப்படித்தான் அதை அறிய முடியும். ராமானுஜர் கூறுகிறார்: 'இந்த உடல்தான் நீ, இந்த மனமே நீ, ஜீவனே நீ என்று கருதும் வரையில், எதையும் அறிவதற்காக நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலிலும் ஆன்மா, இயற்கை, இந்த இரண்டிற்கும் காரணமான ஒன்று—இந்த மூன்றையும் நீ காண்பாய்.' ஆனால் அதேவேளையில் மனம் ஒடுங்கிஒடுங்கி நுண்ணியதாகும்போது உடல் நினைவுகூட அற்றுப் போகும். பிறகு மனமும் ஏறக்குறைய மறைந்துவிடும். அப்போது நம்மைப் பயமுறுத்துகின்றவை, பலவீனப்படுத்து கின்றவை, நம்மை உடலுடன் பந்தப்படுத்துகின்றவை எல்லாமே

மறையும். அப்போதுதான் மிகப் பழம்பெரும் அந்த உபதேசத்தின் உண்மையை ஒருவன் காண்பான். அந்த உபதேசம் எது?

இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥[1]

'யாருடைய மனம் எல்லாவற்றினுடையவும் சமத்துவத்தில் நிலை பெற்றிருக்கிறதோ, அவர் பிறப்பு இறப்பாகிய சக்கரத்தை இந்தப் பிறவியிலேயே வெல்கிறார். ஏனெனில் கடவுள் தூய்மையானவர், எல்லோருக்கும் சமமானவர். எனவே அவர் இறைவனில் வாழ்பவர் எனப்படுகிறார்.'

ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீச்வரம் ।
ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோ யாதி பராம்கதிம் ॥[2]

'இவ்வாறு ஒரே இறைவனை எல்லா இடத்திலும் காண்கின்ற, அந்த ரிஷி ஆன்மாவால் (Self) ஆன்மாவைத் (self) துன்புறுத்துவதில்லை, எனவே மிகவும் உயர்ந்ததான லட்சியத்தை அடைகிறார்.' ❑

---

1. கீதை, 5. 19.
2. கீதை, 13. 28.

## அல்மோராவில்

சுவாமிஜி மே 11-ஆம் நாள் அல்மோராவை அடைந்தார். அப்போது அவருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது; இந்தியில் வரவேற்புரை வழங்கப்பட்டது.

### 1. வரவேற்புக்குப் பதிலுரை

இது நம் முன்னோர்களின் கனவுமயமான பூமி. இதில்தான் இந்தியத் தாயான பார்வதி பிறந்தாள். இந்தியாவின் ஆன்மீக சாதகர் ஒவ்வொருவரும் இறுதிநாளைக் கழிக்க, தன் வாழ்க்கையின் கடைசிப் பகுதியை நிறைவு செய்ய விரும்புகின்ற புனிதபூமி இது. ஆசீர்வதிக்கப்பட்ட புனிதமான இந்தப் பூமியின் மலையுச்சிகளில், இங்குள்ள குகைகளின் இருள்திரளில், பொங்கிப் பாய்ந்து செல்லும் இந்த நதிகளின் கரையில்தான் அற்புதச் சிந்தனைகள் பல உருப்பெற்றன. அந்தச் சிந்தனை வெள்ளத்தின் சிறு துளிகள்தான் மேலை நாட்டில் இவ்வளவு அதிகமான போற்றுதலைப் பெற்றுள்ளது; ஈடிணையற்றவை என்று தகுதி வாய்ந்த அறிஞர்களால் முடிவு செய்யப் பட்டுள்ளது.

என் வாழ்நாளைக் கழிக்க வேண்டுமென்று இளம் வயதிலிருந்தே நான் கனவு கண்டு கொண்டிருக்கும் பூமி இது. இங்கு வாழ நான் பலமுறை முயன்றேன். இது உங்களுக்கும் தெரியும். ஆனால் அதற்கான வேளை வரவில்லை. நான் செய்ய வேண்டிய பணி உள்ளது. அதற்காக இந்தப் புனித பூமிக்கு வெளியில் நான் சுழன்று கொண்டிருக்கிறேன். எனினும் ரிஷிகள் வாழ்ந்ததும், தத்துவங்கள் பிறந்ததும், மலைகளின் தந்தையுமான இந்தப் பூமியிலேயே என் இறுதி நாட்களைச் செலவிடுவேன் என்பது என் நம்பிக்கை. ஆகா, அந்த அமைதியும், யாரும் என்னை அறியாத அந்த நாட்களும் மீண்டும் எனக்குக் கிடைக்க வேண்டும் என்று நான் எவ்வளவு விரும்புகிறேன்! ஆனால் நண்பர்களே, நான் திட்டமிட்டிருப்பது போல் நடக்க முடியாமல் போகலாம். எனினும் என் வாழ்நாளின் கடைசி நாட்கள் உலகத்தின் எந்த இடத்தை விடவும் இங்கே கழிய வேண்டும் என்று நான் உண்மையாகப் பிரார்த்தனை செய்கிறேன், நம்புகிறேன்.

நான் மேலை நாட்டில் செய்த சிறியதொரு பணிக்காக, இந்தப் புனித பூமியில் வாழும் நீங்கள் வழங்கிய கனிவான பாராட்டுக்களுக்கு என் நன்றியை ஏற்றுக்கொள்ளுங்கள். கீழை நாட்டிலோ மேலை நாட்டிலோ நான் செய்துள்ள பணிகளைப் பற்றிப் பேச என் மனம் விரும்பவில்லை. இந்த மலைத்தந்தை யின் சிகரங்கள் ஒன்றன்பின் ஒன்றாக என் பார்வையில் விழுந் தோறும், இத்தனை ஆண்டுகளாக என் மனத்தில் பொங்கிக் கொண்டிருந்த, பணிகள் செய்வதற்கான வேகம் அப்படியே தணிவதுபோல் தோன்றுகிறது. இதுவரை செய்ததையும் இனி செய்யப் போவதையும் பற்றிய பேச்சில் என் நாட்டம் குறை கிறது. மாறாக இந்த இமயமலை எப்போதும் நமக்குப் போதித்து வருகின்ற அந்த அழிவற்ற கருத்தில் என் மனம் நிலைகொள் கிறது. அந்தக் கருத்தே இந்தச் சூழல் முழுவதும் எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. சுழித்துப் பாய்கின்ற நீரோடைகளின் சன்ன மான சலசலப்பில் எல்லாம் நான் அந்தக் கருத்தின் முணு முணுப்பையே கேட்கிறேன்—அந்தக் கருத்துதான் துறவு. 'ஸர்வம் வஸ்து பயான்விதம் புவி ந்ருணாம் வைராக்ய மேவாபயம்[1]—இந்த வாழ்க்கையின் எல்லாமே அச்சம் நிறைந்த தாக உள்ளது. துறவு மட்டுமே ஒருவனை அச்சமற்றவனாக ஆக்கும்'. ஆம், இது துறவின் பூமி.

என் மனத்தில் உள்ளதையெல்லாம் முழுமையாகப் பேசு வதற்கான நேரமோ, அதற்குரிய சூழ்நிலையோ இப்போது இல்லை. எனவே, அந்தத் துறவு என்ற ஒன்றையே இமயமலை நமக்கு உணர்த்தியவாறு நிற்கிறது, அந்த மகத்தான கருத்தையே மனித சமுதாயத்திற்கு நாம் போதிக்க வேண்டும் என்பதை மட்டும் கூறி, என் பேச்சை நிறைவு செய்ய வேண்டியவனாக இருக்கிறேன். நம் முன்னோர்கள் தங்கள் இறுதிக்கால வாழ்வில் இந்த மலையால் கவரப்பட்டார்கள். அதுபோலவே, ஆன்ம பலம் வாய்ந்தோர் பூமியின் எல்லா பகுதிகளில் இருந்தும் எதிர்காலத்தில் இந்த மலையரசனால் கவரப்படுவார்கள். இங்கே மதத்தின் பல பிரிவுகளுக்கு இடையேயுள்ள சண்டைகளும் கொள்கை வேற்றுமைகளும் மறக்கப்பட்டுவிடும்; என் மதத் திற்கும் உன் மதத்திற்கும் சண்டைக்ள் முழுமையாக மறைந்து போகும். அழியாத மதமாக ஒன்றே ஒன்றுதான் இந்த உலகில் உள்ளது, உள்ளிருக்கும் தெய்வீகத்தை உணர்வதே அது.

1. வைராக்கிய சதகம், 31.

மற்றவையெல்லாம் பயனற்றவை என்பதை மனித சமுதாயம் புரிந்துகொள்ளும். உலகம் வெறும் வீண் பகட்டு என்பதை உணர்ந்து, இறைவனை, இறைவனை வழிபடுவது ஒன்றைத் தவிர, மற்ற எதுவுமே பயனற்றவை என்பதைப் புரிந்துகொண்ட ஆர்வம் மிக்கோர் இங்கே வருவார்கள்.

நண்பர்களே, இந்த இமயமலையில் ஒரு மடம் தொடங்க வேண்டும் என்ற எனது கருத்தை நீங்கள் கனிவோடு போற்றினீர்கள். இந்த உலகம்தழுவிய மதத்தைப் போதிப்பதற்கான ஒரு பெரிய மையத்தை அமைப்ப'தற்கு, மற்ற எல்லா இடங்களையும்விட இந்த இடத்தை ஏன் தேர்ந்தெடுத்தேன் என்பதைப் பற்றிப் போதிய அளவு விளக்கிவிட்டதாக நினைக்கிறேன்.

இந்த மலைகள் நம் இனத்தின் மிகச் சிறந்த நினைவுகளுடன் தொடர்பு உடையவை. நமது மத வரலாற்றிலிருந்து இமயமலை விலக்கப்படுமானால் எஞ்சுவது மிகக் குறைவே. எனவே இங்கு ஒரு மடத்தை நிறுவியேயாக வேண்டும், வெறும் பணிகளுக்காக மட்டுமல்ல; அதற்கும் மேலாக, மௌனத்தின், தியானத்தின், அமைதியின் ஒரு மையமாக அது விளங்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஒருநாள் என் ஆவல் நிறைவேறும் என்று நம்புகிறேன். உங்களைச் சந்தித்து, இன்னும் சிறப்பாக உங்களுடன் பேசுவதற்கான வாய்ப்பு மீண்டும் கிடைக்குமென்று நம்புகிறேன். இப்போது, நீங்கள் என்னிடம் காட்டிய கனிவுக்கும் மீண்டும் என் நன்றி. இந்த வரவேற்பு தனிமனிதன் என்ற முறையில் எனக்குத் தரப்பட்டதாக நான் கொள்ளவில்லை, நமது மதத்தின் ஒரு பிரதிநிதி என்ற அளவில் எனக்குத் தரப்பட்டதாகவே நான் கருதுகிறேன். அது நமது நெஞ்சங்களைவிட்டு நீங்காமல் இருப்பதாக! நான் இப்போதைப் போலவே எப்போதும் தூய்மையாகவும் ஆன்மீகத்தில் ஆர்வம் உடையவர்களாகவும் இருப்போமாக! ❑

## 2

சுவாமிஜியின் சுற்றுப் பயணம் நிறைவுக்கு வந்தத் தருணத்தில் அவரது அல்மோரா நண்பர்கள் அங்கே இந்தியில் ஒரு சொற்பொழிவாற்றுமாறு கேட்டுக் கொண்டனர். முதன்முறையாக இந்தியில் பேசும் முயற்சியை அவர் ஏற்றுக்கொண்டார். முதலில் தயக்கத்தோடுதான் ஆரம்பித்தார். சிறிதுநேரத்தில் சொற்பொழிவு களைகட்ட ஆரம்பித்தது. நேரம் செல்லச்செல்ல வார்த்தைகளை அடுக்கி அழகாகப் பேசினார் சுவாமிஜி. சொற்பொழிவு என்று வரும்போது, இந்தி கடினமானதும் சில குறைபாடு களும் கொண்ட மொழி. இந்த விஷயம் நன்றாகத் தெரிந்தவர்கள்கூட, சுவாமிஜியின் பேச்சு வசீகரம் மிக்கதாக இருந்தது என்றும், முதல் முயற்சி என்பதைப் பொறுத்த வரையில் அவரது வெற்றி ஈடிணையற்ற சிறப்பு வாய்ந்தது என்றும் பாராட்டி னார்கள். மொழியை அவர் கையாண்ட சிறப்பான பாங்கு, அந்த மொழிக்குச் சொற்பொழிவுத் துறையில், கனவுகூடக் காண முடியாத அளவிற்கு இன்னும் எவ்வளவோ முன்னேறுவதற்கான வாய்ப்புகள் இருப்பதைக் காட்டுவதாகவும் அவர்கள் தெரிவித்தார்கள்.

மற்றொரு சொற்பொழிவு ஆங்கில சங்கத்தில் ஜூலை 28-ஆம் நாள் நடைபெற்றது. சுவாமிஜி ஆங்கிலத்தில் பேசிய அந்தச் சொற்பொழிவுபற்றிய குறிப்பு கீழே வருகிறது:

### வேத போதனை: கோட்பாடும் செயல்முறையும்

பழங்குடி மக்களின் வழிபாட்டு வளர்ச்சி பற்றிய சுருக்கமான வரலாறும் மற்றப் பழங்குடியினரை முதல் குடியினர் வென்ற தால் அவர்களின் மதம் பரவிய வரலாறும் பற்றி முதலில் சுவாமிஜி விளக்கினார். பின்னர் வேதங்கள் அதுபற்றிக் கூறுவதைக் குறிப்பிட்டார். அந்தப் பழங்குடி மதத்தின் இயல்பு, பண்பு, கொள்கை முதலியவற்றைச் சுருக்கமாகக் கூறினார்.

அதன்பிறகு ஆன்மாவைப்பற்றிக் கூறினார். மிக முக்கிய மான மதப் பிரச்சினைகளுக்கு மேலை நாட்டினர் தீர்வு காணும் முறையைக் கீழை நாட்டு முறையோடு ஒப்பிட்டார்— புறத்தில் தீர்வு காண முடியாததால், அகத்தில் தீர்வு காண்பதற்குக் கீழை நாட்டினர் அகமுகமாகத் திரும்பியதையும் அவர் கூறினார். தனக்குள் மூழ்கி இதற்கான விடையைக் கண்டுபிடிக்கும் சிறப் பான வழியை நம் நாடு கண்டுபிடித்ததைப்பற்றி அவர் பெருமை கொண்டார். அதன் விளைவாகக் கிடைத்த விலைமதிப்பற்ற ஆன்மீகப் புதையலை உலகிற்கு வழங்கியதற்காகவும் அவர் பெருமை கொண்டார்.

ஓர் இந்துவின் மனத்திற்கு இயல்பாகவே மகிழ்ச்சியை ஊட்டுவதான இந்தத் தலைப்பைப் பேசியபடியே சுவாமிஜி தமது ஆச்சாரியர் என்ற நிலையின் உச்சக்கட்டத்தை அடைந்தவராக, ஆன்மாவிற்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பையும், ஆன்மாவின் வேட்கையையும், கடவுளோடு அது இணைவதைப் பற்றியும் விவரித்தார். இவ்வாறு பேசி வரும்போது ஒரு கட்டத்தில் பேசுகின்ற அவர், அவரது சொற்கள், அதைக் கேட்பவர்கள், அவர்களைச் சுற்றிப் பரவியிருந்த உணர்வு எல்லாமே ஒன்றாகி விட்டது. 'நான்', ' நீ', 'இது', 'அது' என்ற உணர்வே அங்கு இல்லை. அங்குக் கூடியவர்கள் அந்தக் குறிப்பிட்ட காலம்வரை, தங்கள் வேற்றுமைகளை மறந்து அந்த மகத்தான ஆச்சாரியரிடமிருந்து வெளிப்பட்ட ஆன்மீகப் பேருணர்வில் ஒன்றி, மூழ்கி, தங்களை மறந்துவிட்டார்கள்.

சுவாமிஜியின் சொற்பொழிவுகளை அடிக்கடிக் கேட்டவர்கள் இத்தகைய அனுபவங்களை நினைவுகூர முடியும்— ஒருகணம் அந்த விவேகானந்தர், கூரிய அறிவுமிக்க சபையோரின் முன் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கின்ற அந்த விவேகானந்தர் மறைந்தே போவார்; மனிதர்களும் மற்றவையும் மறைந்து போகும்; உருவங்களும் பெயர்களும் மறைந்து போகும். அங்கே இருப்பதெல்லாம் உணர்வு மட்டுமே, பேசுபவரையும் கேட்போரையும் பேசப்பட்டதையும் இணைத்து நிற்கின்ற உணர்வு மட்டுமே. ❑

# பஞ்சாப்

## 1. சியால்கோட்டில்

பஞ்சாப் மற்றும் காஷ்மீரிலிருந்து வந்த அழைப்புகளை ஏற்று சுவாமிஜி அங்கே சென்றார். காஷ்மீரில் ஒரு மாதத்திற்கும் மேலாகத் தங்கினார். அவரது பணியை மன்னரும் மன்னரின் சகோதரர்களும் வெகுவாகப் பாராட்டினர். பின்னர் அவர் முர்ரி, ராவல்பிண்டி, ஜம்மு முதலான இடங்களுக்குச் சென்றார். அங்கெல்லாம் சொற்பொழிவுகள் ஆற்றினார். அக்டோபர் 31-ஆம் நாள் சியால்கோட்டிற்குச் சென்றார். அங்கே ஆங்கிலத்தில் ஒன்றும் இந்தியில் ஒன்றுமாக இரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இந்திச் சொற்பொழிவின் சுருக்கம் கீழே வருகிறது:

### பக்தி

உலகின் பல்வேறு மதங்களும் வழிபாட்டு முறையில் வேறு பட்டாலும் உண்மையில் அவை ஒன்றே. சில இடங்களில் கோயில்களைக் கட்டி அங்கே வழிபடுகிறார்கள். சில இடங் களில் நெருப்பை வழிபடுகிறார்கள். பலர் திருவுருவங்கள் முன்பு வீழ்ந்து வணங்குகிறார்கள். கடவுளையே நம்பாத பலரும் உள்ளார்கள். இவை எல்லாமே உண்மையானவைதாம். ஏனெ னில் அவற்றின் உண்மையான சாரத்தை, உண்மை மதத்தை, அவை கூறும் உண்மைகளைப் பார்த்தால் எல்லாம் சமமாகவே உள்ளது. சில மதங்களில் கடவுள் வழிபடப்படுவதில்லை, ஏன், அவர் இருப்பதையே நம்புவதில்லை. ஆனால் நல்லவர்களும் தகுதி வாய்ந்தவர்களும் கடவுளைப்போல் வழிபடப்படு கிறார்கள். இதற்குச் சிறந்த உதாரணம் புத்த மதம். கடவுளிடம் செலுத்தட்டும், அல்லது, உன்னதமான மனிதர்களிடம் செலுத்தட்டும், ஆனால் பக்தி என்பது எல்லா இடங்களிலும் இருக்கவே செய்கிறது.

பக்தியின் வடிவத்தில் உபாசனை என்பது எல்லா இடங் களிலும் உள்ளது. ஞானத்தைவிட, அடைவதற்கு எளிதானது பக்தி. ஞானம் பெறுவதற்குச் சாதகமான சூழ்நிலைகளும் கடின மான பயிற்சிகளும் தேவை. யோகமும் அப்படித்தான். உடல் நலத்தோடும் உலகப் பற்றுகளிலிருந்து விடுபட்டும் இருந்தால் அன்றி, யோகத்தைச் சரியான முறையில் பயிற்சி செய்ய முடியாது. ஆனால் வாழ்க்கையில் எந்த நிலையில் உள்ள மனிதனாலும் பக்தியைச் சுலபமாகக் கடைப்பிடிக்க முடியும்.

பக்தியைப்பற்றி எழுதிய சாண்டில்ய மகரிஷி, இறைவனிடம் கொள்ளும் பேரன்பே பக்தி[1] என்று கூறுகிறார். பிரகலாதனும் இதையே கூறுகிறார். மனிதனுக்கு ஒருநாள் உணவு இல்லையென்றால் துன்பப்படுகிறான், மகன் இறந்து விட்டாலோ அவன் துன்பத்தில் துடிக்கிறான்! உண்மையான பக்தனின் இதயம் கடவுளுக்காக ஏங்கும்போது அத்தகைய துயரத்தை அனுபவிக்கிறது. பக்தியின் மகத்தான பண்பு என்னவென்றால் அது மனத்தைத் தூய்மைப்படுத்துகிறது, என்பதுதான். மனத்தைத் தூய்மையாக்க, பகவானிடம் உறுதியாக நிலைபெற்ற பக்தி ஒன்றே போதுமானது. 'ஓ, பகவானே! உனது திருநாமங்கள் எண்ணற்றவை. ஆனால் அவை ஒவ்வொன்றிலும் உன் சக்தி வெளிப்படுகிறது. உனது ஒவ்வொரு திருநாமமும் ஆழமான, மகத்தான பொருள் பொதிந்ததாக உள்ளது.'[2] நாம் கடவுளை எப்போதும் நினைக்க வேண்டும், காலத்தையோ இடத்தையோ எதிர்பார்க்கக் கூடாது.

பல்வேறு விதங்களில் கடவுள் வழிபடப்படும்போது அவற்றுக்கிடையில் வேற்றுமை இருப்பதுபோல் தெரிகிறது. தான் வழிபடும் முறை மிகவும் பலனளிக்கக்கூடியது என்று ஒருவர் நினைக்கலாம். மற்றொருவரோ தனது வழிபாட்டு முறையே முக்தி பெறுவதற்குச் சிறந்த பாதை என்று கருதலாம். ஆனால் அவை அனைத்தின் அடிப்படையையும் பார்த்தால் ஒன்றாகவே இருக்கிறது.

சைவர்கள் சிவபெருமானை மிகுந்த ஆற்றல் வாய்ந்தவர் என்று கூறுகிறார்கள். வைணவர்கள் எல்லா சக்தியும் விஷ்ணுவுக்கே என்கிறார்கள். தேவி உபாசகர்கள் இந்தப் பிரபஞ்சத்தில் தேவியே சர்வ வல்லமை பெற்றவள் என்ற கருத்திலிருந்து சிறிதும் பின்வாங்குவது இல்லை. நிலையான பக்தி வேண்டுமானால் இத்தகைய தீய எண்ணங்களை ஒதுக்கி விடுங்கள். வெறுப்பு என்பது பக்தியின் வளர்ச்சியைப் பெருமளவு தடுக்கின்ற ஒரு தடையாகும். வெறுப்பவர்கள் யாரும் கடவுளை அடைய முடியாது.

ஆனால் ஒருவனுக்கு இஷ்டதெய்வத்திடம் பக்தி தேவை. 'விஷ்ணுவும் ராமரும் ஒருவரே என்பது எனக்குத் தெரியும்.

---

1. ஸா பரானுரக்திரீச்வரே ॥ —சாண்டில்ய ஸூத்ரம், 2.
2. நாம்னாமகாரி பஹுதா நிஜ ஸர்வசக்தி: தத்ரார்ப்பிதா நியமித:
ஸ்மரணே ந கால: ॥
—ஸ்ரீசைதன்யர், சிக்ஷாஷ்டகம்.

ஆனால் தாமரைக் கண்ணனான ராமன்தான் என் விலைமதிப் பற்ற புதையல்'[1] என்று அனுமன் கூறினார். ஒருவன் எத்தகைய இயல்புடன் பிறந்தானோ அது அவனிடம் நிலைபெற்று விடுகிறது. ஒரே ஒரு மதம் மட்டுமே இருக்க முடியாது என்பதற்கு இதுதான் ஒரே காரணம். அப்படி ஒரே மதம் ஆகாமல் இருக்க இறைவன் அருளட்டும். அப்படி ஆகுமானால் இந்த உலகம் உலகமாக இருக்காது, குழப்பக்குட்டை ஆகிவிடும்.

தனக்கே உரித்தான இயல்பின்படிதான் ஒருவன் நடக்க வேண்டும். அவனுடைய வழியிலேயே அவனை ஊக்குவித்து உதவி செய்ய ஓர் ஆசிரியர் கிடைத்தால் அவன் முன்னேறு கிறான். அந்த மனப்பாங்கை வளர்க்க வேண்டும். தான் விரும்பு கின்ற பாதையிலேயே செல்ல ஒருவனை அனுமதிக்க வேண்டும். வேறு வழியில் போகுமாறு அவனை நாம் வற்புறுத்தினால், இதுவரை தான் பெற்ற வளர்ச்சியை அவன் இழப்பான்; எதற்கும் பயனற்றவனாகவும் ஆகிவிடுவான். ஒருவனது முகம் மற்றொரு வனின் முகத்திலிருந்து வேறுபட்டிருப்பதைப் போல், ஒவ் வொருவரின் இயல்பும் வெவ்வேறாக இருக்கிறது. அவனது இயல்பின்படியே செல்ல நாம் அவனை ஏன் அனுமதிக்கக் கூடாது? ஓர் ஆறு ஒரு குறிப்பிட்ட திசையில் பாய்ந்துகொண் டிருக்கிறது. அதே திசையில் செல்வதற்கு நீங்கள் உதவினால் அதன் வேகம் அதிகரிக்கும், ஆற்றலும் அதிகரிக்கும். அதன் போக்கிலிருந்து மாற்ற முயற்சி செய்யுங்கள், விளைவைக் காண்பீர்கள்; நீரின் அளவும் குறையும், வேகமும் தணிந்து விடும். வாழ்க்கை மிகவும் முக்கியமானது. எனவே சொந்த இயல்பு ஒருவனை எந்தத் திசையில் தூண்டுகிறதோ, அந்தத் திசையிலேயே அவனுக்கு வழிகாட்ட வேண்டும்.

இந்தியாவில் மதங்களுக்குள் பகை இருந்ததில்லை. எந்த மதமும் துன்புறுத்தப்படாமல் தனித்து வளரவிடப் படுகிறது. அதனால் மதங்கள் இங்கு வாழ்ந்து வருகின்றன. தன் மதம் மட்டுமே உண்மை, அதைப் பின்பற்றாதவர்கள் முட்டாள்கள்; என் மதத்தைப் பின்பற்றாதவர்கள் எல்லாம் அயோக்கியர்கள்— இத்தகைய எண்ணங்களால் மட்டுமே மதச் சண்டைகள் உண்டாகின்றன என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

---

1. ஸ்ரீநாதே ஜானகீநாதே அபேத: பரமாத்மனி ।
தததாபி மம ஸர்வஸ்வம் ராம: கமல லோசன: ॥
–துளசிதாசர் ராமாயணம்.

எல்லோரும் ஒரே மதத்தைப் பின்பற்ற வேண்டும் என்று கடவுள் விரும்பியிருந்தால் இத்தனை மதங்கள் ஏன் தோன்றின? அனைவர்மீதும் ஒரே மதத்தைத் திணிப்பதற்காக எத்தனையோ முயற்சிகள் நடந்தன, அத்தனையும் தோல்வியையே தழுவின. எல்லோரையும் ஒரே மதத்தைப் பின்பற்றச் செய்வதற்காக வாளையே தூக்கியபோதுகூட என்ன நடந்தது! ஒன்றிற்குப் பதிலாக பத்து மதங்கள் தோன்றின என்பதையே வரலாறு காட்டுகிறது.[1] அனைவருக்கும் ஒரே மதம் பொருந்தாது. செயல், எதிர்ச்செயல் இந்த இரண்டு சக்திகளின் விளைவே மனிதன். இந்த இரண்டுமே அவனைச் சிந்திக்க வைக்கின்றன. இத்தகைய சக்திகள் மனத்தில் செயல்படவில்லை என்றால் மனிதன் சிந்திப் பதற்கே முடியாதவனாகி விடுவான். மனிதன் சிந்திக்கின்ற ஜீவி. மனத்தை உடையவன் மனிதன், இந்த மனம் போய்விட்டால், அவனது சிந்தனை ஆற்றல் அகன்றுவிட்டால் அவன் மிருக நிலைக்குச் சென்று விடுகிறான். அத்தகையவனை யார் விரும்பு வார்கள்? இந்தியர்களுக்கு அத்தகைய எந்த நிலையும் வராமல் கடவுள் தடுப்பாராக! மனிதன் மனிதனாக இருக்க வேண்டு மானால் ஒருமையில் வேறுபாடுகள் தேவை. எல்லாவற்றிலும் வேறுபாடுகள் இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் வேறுபாடுகள் இருக்கும் வரைதான் உலகம் நிலைக்கும். வேறுபாடு என்பதற்கு ஒருவர் சிறியவராகவும் மற்றொருவர் பெரியவராகவும் இருக்க வேண்டும் என்பது மட்டும் பொருள் இல்லை. ஒவ்வொருவரும் வாழ்க்கையில் தங்கள் நிலையில் இருந்துகொண்டே தங்கள் பங்கை ஒரே போல் திறம்பட வகித்தாலே வேறுபாடு காப்பாற்றப்பட்டு விடும்.

நற்பண்பும் திறமையும் மிக்கவர்கள் எல்லா மதங்களிலும் இருக்கிறார்கள். தாங்கள் இருப்பதன்மூலமே தங்கள் மதத்தைப் பிறருடைய மரியாதைக்கு உரியதாக ஆக்குகிறார்கள். இத்தகை யோர் ஒவ்வொரு மதத்திலும் இருப்பதால், எந்தப் பிரிவிடமும் வெறுப்பு கூடாது.

அப்படியானால் தீமையைப் போதிக்கின்ற மதத்தை மதிக்க வேண்டுமா என்ற கேள்வி எழலாம். அதற்கான விடை உறுதி

---

1. முகமது நபியின் மரணத்திற்குப்பின், அடுத்த தலைவர் யார் என்னும் போட்டியில் ஷியா மற்றும் சுன்னி பிரிவினருக்கிடையே சண்டை மூண்டது. இதன் விளைவாக காவாரிஜ் என்ற புதிய பிரிவு தோன்றியது. இவ்வாறு இன்று இஸ்லாமில் பல பிரிவுகள் உள்ளன.

யாக, கூடாது என்பதுதான். அது மட்டுமல்ல, அத்தகைய மதத்தை உடனடியாக ஒதுக்கிவிட வேண்டும். ஏனென்றால் அது தீமையையே உருவாக்கும். எல்லா மதங்களும் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும், தனிமனித ஒழுக்கம் என்பது தர்மத்தைவிட உயர்ந்ததாகக் கொள்ளப்பட வேண்டும்.

இப்போது ஆசாரம் என்பதன் பொருளைத் தெரிந்து கொள்வோம். ஆசாரம் என்பது அகமும் புறமும் தூய்மையாக இருத்தல் ஆகும். சாஸ்திரங்கள் கூறுகின்ற குளித்தல் முதலிய வற்றால் புறத் தூய்மை உண்டாகும். பொய் பேசாதிருத்தல், மது அருந்தாதிருத்தல், ஒழுக்கக்கேடான செயல்களைச் செய்யா திருத்தல் முதலியவற்றாலும் பிறருக்கு நன்மை செய்வதாலும் அகத் தூய்மை உண்டாகிறது. பாவம் செய்யாமல், பொய் சொல்லாமல், மது அருந்தாமல், சூதாடாமல், திருடாமல் இருப்பது நல்லது. ஆனால் இவையெல்லாம் உங்கள் கடமைகள் மட்டுமே. இப்படி நல்லவர்களாக இருப்பதற்காக உங்களைப் பாராட்ட முடியாது. சிறிது பரோபகாரமும் செய்ய வேண்டும். உங்களுக்கு நீங்கள் நன்மை செய்து கொள்வதுபோல் பிறருக்கும் நன்மை செய்தேயாக வேண்டும்.

உணவு விதிகளைப் பற்றியும் கொஞ்சம் நான் இங்கே சொல்ல வேண்டும். உணவைப் பற்றிய பழைய வழக்கங்கள் எல்லாமே மறைந்து போய்விட்டன. இவனுடன் சாப்பிடக் கூடாது, அவனுடன் சாப்பிடக் கூடாது, இவைபோன்ற சில தெளிவற்ற கருத்துக்கள் மட்டுமே நம் மக்களிடம் எஞ்சியுள்ளன. பல நூற்றாண்டுகளுக்கு முன் உருவாக்கப்பட்ட நல்ல நியமங் களுள் எஞ்சிய ஒரேயொரு அடிப்படைக் கருத்து, தொடுவதன் மூலம் சுத்தம் வரும் என்பதுதான்.

மூவகை உணவை சாஸ்திரங்கள் தடை செய்கின்றன: முதலில் ஜாதி தோஷம்—இயல்பாகவே குறையுடைய உணவு கள்: பூண்டு, வெங்காயம் போன்றவை. அவைகளை அதிகமாகச் சாப்பிட்டால் அது அதிக ஆசையை எழுப்புகிறது; மனிதனுக் கும் கடவுளுக்கும் வெறுப்பான தீயொழுக்கத்தில் ஈடுபடுமாறு அவனைத் தூண்டுகிறது. இரண்டாவது, அசுத்தமான இடங் களில் உண்பது. தூய்மையான, ஆரோக்கியமான இடங் களிலேயே உணவுகொள்ள வேண்டும். மூன்றாவது, தீயவர் களால் தொடப்படுகின்ற உணவைத் தவிர்க்க வேண்டும். அத் தகைய உணவு நம் மனத்தில் தீய எண்ணங்களை எழுப்புகிறது.

பிராமணனின் மகனாக இருந்தாலும், நெறி தவறியவனானால் அவன் கையிலிருந்து உணவுகொள்ளக் கூடாது. ஆனால் இத்தகைய ஆசாரங்களின் அடிப்படை தற்போது மறைந்தே விட்டது. ஒருவர் மிகச் சிறந்த ஞானமும் புனிதமும் பெற்றிருந் தாலும், உயர்ந்த ஜாதியில் பிறக்காதவர் என்றால் அவரிட மிருந்து சாப்பிடக் கூடாது என்பதெல்லாம்தான் எஞ்சி யிருக்கிறது.

உணவுபற்றிய அந்தப் பழைய நியமங்கள் எப்படி முற்றிலுமாகப் பின்பற்றப்படாமல் போய்விட்டது என்பதற்கு மிட்டாய்க் கடைகளைப் பார்த்தால் போதும். கடை முழுவதும் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்கும், தெருவில் உள்ள தூசி எல்லாம் அந்தப் பண்டங்களின் மீதுதான். கடைக்காரன் உடுத்தியிருக்கும் துணிகூட அழுக்கு படிந்ததாக, தூய்மையற்ற தாக உள்ளது. இனிப்புகள் எல்லாம் கண்ணாடிப் பெட்டிக்குள் வைக்கப் பட்டாலன்றி அவற்றை வாங்க மாட்டோம் என்று வாங்குபவர்கள் எல்லோருமே குரலெழுப்ப வேண்டும். அப்படிச் செய்தால், ஈக்கள் மொய்த்து, காலராவும் பிளேக்கும் அந்த இனிப்புக்கள்மூலம் மக்களிடையே பரவாமல் தடுக்க முடியும்.

நாம் முன்னேற வேண்டும். நாமோ, முன்னேறுவதற்குப் பதிலாக பின்னோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம். 'தண்ணீரில் எச்சில் துப்பக் கூடாது' என்கிறார் மனு.[1] ஆனால் நாமோ எல்லா வகையான குப்பைகளையும் ஆறுகளில்தான் கொட்டுகிறோம். இதையெல்லாம் பார்க்கும்போதுதான் புறத்தூய்மை எவ்வளவு அவசியமானது என்பது தெரிகிறது. சாஸ்திரங்களை எழுதியவர்கள் இதை நன்றாகப் புரிந்து கொண்டுள்ளனர். தற்போது உணவுத் தூய்மை என்பதன் சாரம் போய்விட்டது, வெறும் சக்கை மட்டுமே எஞ்சியுள்ளது. நமது ஜாதியினர் திருடர்களாக, குடிகாரர்களாக, குற்றவாளிகளாக இருக்கலாம், பரவாயில்லை; ஆனால் நல்ல மேன்மையான மனிதன் ஒரு தாழ்ந்த ஜாதிக்காரனுடன் உண்ணட்டும், அந்த கீழ்ஜாதிக்காரன் எவ்வளவுதான் நல்லவனாக இருந் தாலும், அவனுடன் உண்டவன் ஜாதியை விட்டே விலக்கப்படு கிறான். இது நம் நாட்டின் சாபக்கேடு. எனவே பாவிகளின்

---

1. நாப்ஸு மூத்ரம் புரீஷம் வா ஷ்டீவனம் வா ஸமுத்ஸ்ருஜேத் ।

—மனு, 4. 56.

தொடர்பால் பாவம் வருகிறது, நல்லவர்களின் தொடர்பால் மேன்மை வருகிறது, தீயவர்களிடமிருந்து விலகி இருப்பதே புறத் தூய்மை என்பனவற்றைத் தெளிவாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

அகத் தூய்மை இன்னும் கடினமான ஒன்று. உண்மை பேசுவது, ஏழைகளுக்குச் சேவை செய்வது, தேவைப்படுபவர் களுக்கு உதவுவது முதலியவற்றால் அகத் தூய்மை உண்டாகிறது. நாம் எப்போதும் உண்மை பேசுகிறோமா? நடைமுறையில் அது இல்லை. சொந்த அலுவல்களுக்காகப் பணக்காரனை நாடிச் செல்கிறார்கள். அந்தப் பணக்காரன் தன் வீட்டிற்கு வரும் ஏழையின் கழுத்தை அறுப்பவனாக இருந்தாலும் அவனை ஏழைகளின் இதய தெய்வம் என்று முகஸ்துதி செய்கிறார்கள். இது என்ன? பொய்யைத் தவிர வேறில்லை. இதுதான் மனத்தைக் கெடுக்கிறது. பன்னிரண்டு ஆண்டுகள் எந்தத் தீய நினைப்பும் இல்லாமல் இருந்து அகத் தூய்மை பெற்றவன் என்ன சொன் னாலும் பலிக்கும் என்று அதனால்தான் சரியாகக் கூறப்பட் டுள்ளது. இது உண்மையின் சக்தி.

இவ்வாறு அகமும் புறமும் தூய்மை பெற்றவர்களே பக்திக்குத் தகுதி வாய்ந்தவர்கள். இதில் சிறப்பு என்னவென்றால் பக்தியே பெருமளவில் மனத்தைத் தூய்மைப்படுத்தி விடுகிறது. யூதர்களும் முகமதியர்களும் கிறிஸ்தவர்களும் இந்துக்களைப் போல் அளவுக்கு அதிகமாக புறத் தூய்மையை வற்புறுத்த வில்லை என்றாலும், ஏதாவது ஒருவகையில் வற்புறுத்தவே செய்கிறார்கள், அது மிக முக்கியமானது என்பதை அவர்களும் அறிந்தே இருக்கிறார்கள்.

யூதர்கள் உருவ வழிபாட்டைக் கண்டிப்பவர்கள் என்றா லும் அவர்களுக்கும் கோயில் இருந்தது. அதில் அவர்களுடைய மதச் சட்டங்களை[1] ஒரு பெட்டியில் வைத்துப் பாதுகாக் கிறார்கள். சிறகுகளை விரித்த நிலையிலுள்ள தேவதூதர்களின் படம் அந்தப் பெட்டிக்கு மேல் உள்ளது. அவர்களுக்கு இடையே தெய்வீகம் ஒரு மேகத்தின் வடிவில் இருப்பதாக அவர்கள் கொள்கின்றனர். அந்தப் பழைய கோயில் நெடுங்காலத் திற்கு முன்பே அழிக்கப்பட்டு விட்டது. அதே அமைப்பில் புதிய கோயில்கள் கட்டப்பட்டுள்ளன, பெட்டியில் மத நூல்கள் வைக்கப்பட்டுள்ளன.

---

1. Tables of the Law: பத்துக் கட்டளைகள். சினாய் மலையின்மீது மோசஸ் இவற்றை இறைவனிடமிருந்து நேரடியாகப் பெற்றதாகக் கூறப்படுகிறது.

ரோமன் கத்தோலிக்கர்களிடமும் கிரேக்கக் கிறிஸ்தவர்களிடமும் உருவ வழிபாடு ஏதோ சில விதங்களில் இன்னும் இருக்கவே செய்கிறது. ஏசு மற்றும் அவரது தாயின் திருவுருவங்கள் வழிபடப்படுகின்றன. புரோட்டஸ்டன்ட்களிடையே உருவ வழிபாடு இல்லை என்றாலும், அவர்கள் கடவுளைச் சிறப்பான மனித வடிவில் வழிபடுகிறார்கள். இதுவும் ஒருவகையில் உருவ வழிபாடுதானே. பாரசீகர்களிடமும் ஈரானியர்களிடமும் அக்கினி வழிபாடு மிகப் பரவலாக உள்ளது. முகமதியர்கள் இறைத்தூதர்களையும் மகான்களையும் வழிபடுகிறார்கள். காபா[1] இருக்கும் திசையை நோக்கியே பிரார்த்தனை செய்கிறார்கள். மத வளர்ச்சியின் முதல்கட்டத்தில் மனிதன் சில புறப் பொருட்களின் துணையை நாட வேண்டியுள்ளது, அகத் தூய்மை பெற்ற பின்னரே குணங்கள் எதுவுமற்ற கருத்துநிலைக்குச் செல்கிறார்கள் என்பதையே இவையெல்லாம் காட்டுகின்றன.

'ஜீவனை பிரம்மத்துடன் இணைப்பதற்கான முயற்சி உயர் தரமானது. தியானம் இடைத்தரமானது, ஜபம் கடைத்தரமானது, உருவ வழிபாடு கடைத்தரத்திலும் கடைத்தரமானது.'[2] ஆனால் உருவங்களை வழிபடுவது பாவம் அல்ல என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். தன்னால் இயன்றதையே ஒவ்வொருவரும் செய்ய வேண்டும், அதை நாம் தடுத்தால், தான் விரும்புவதை அடைய அவன் வேறு ஏதாவது வழியை நாடுவான். எனவே உருவங்களை வழிபடுபவனை நாம் இழிவாகப் பேசக் கூடாது. வளர்ச்சியின் அந்தப் படியில்தான் அவன் இருக்கிறான், அவனுக்கு உருவங்கள் வேண்டும். அவன் முன்னேறுவதற்கு, மேலான நிலையை அடைவதற்குச் சான்றோர்கள் உதவ வேண்டும். இத்தகைய பல்வேறு வழிபாட்டு முறைகளைப்பற்றிச் சண்டையிட்டுக் கொண்டிருப்பதில் எந்தப் பயனும் இல்லை.

சிலர் செல்வத்திற்காகக் கடவுளை வணங்குகிறார்கள், இன்னும் சிலர் மகன் வேண்டும் என்று அவரை வணங்குகிறார்கள்; இவர்கள் தங்களை பக்தர்களென்று எண்ணிக் கொள்கிறார்கள். இது பக்தியல்ல, அவர்கள் உண்மையான பக்தர்களும்

---

1. பக்கம் 17 அடிக்குறிப்பு காண்க.
2. உத்தமம் ப்ரஹ்ம ஸத்பாவோ த்யான பாவஸ்து மத்யம: ।
அதம: ஸ்தோத்ர பாடாதிர் பஹி: பூஜாதமோதமா ॥
—மகா நிர்வாண தந்திரம், 14. 122.

அல்ல. சாது ஒருவர் வந்து தன்னால் பொன்னை உண்டாக்க முடியும் என்று சொன்னால் அவர் பின்னால் ஓடுகிறார்கள், இருந்தாலும் தங்களை பக்தர்களாகக் கருதிக் கொள்கிறார்கள். மகன் வேண்டுமென்று கடவுளை வழிபடுவது பக்தியல்ல, பணக்காரனாக வேண்டும் என்ற ஆசையால் கடவுளை வழி படுவது பக்தியல்ல, சொர்க்கத்திற்குச் செல்ல வேண்டும் என்ற ஆசையோடு வழிபடுவது பக்தி அல்ல, நரகத்தின் வேதனை களிலிருந்து காப்பாற்றப்பட வேண்டும் என்ற ஆசையோடு வழிபடுவதும் பக்தியல்ல. பயஉணர்ச்சியிலிருந்தோ பேராசை யிலிருந்தோ தோன்றுவது பக்தியே அல்ல, 'ஓ பகவானே! எனக்கு அழகான மனைவி வேண்டாம், ஞானமோ முக்தியோ வேண்டாம், நான் நூற்றுக்கணக்கான முறை பிறப்பேனாக! நான் வேண்டுவதெல்லாம், அந்தப் பிறவிகள் அனைத்திலும் உனக்கு எப்போதும் சேவை செய்கின்ற பேறு ஒன்றையே பெறுவேனாக!' என்றுசொல்பவன்தான் உண்மையான பக்தன். இந்த நிலையில்தான், அதாவது கடவுளை எல்லாவற்றிலும், எல்லாவற்றையும் கடவுளிலும் காணும் போதுதான் அவன் முழுமையான பக்தியை அடைந்தவனாகிறான். அதன் பிறகு தான் அவன் அணு முதல் பிரம்மாவரை ஒவ்வொன்றையும் விஷ்ணு வடிவமாகக் காண்கிறான். அதன் பிறகுதான் கடவுளே உலகில் ஒவ்வொன்றாக ஆகியிருப்பதையும் காண்கிறான். அதன் பிறகுதான் உலகத்தில் கடவுளைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்பதை உணர்கிறான். அதன்பிறகு, அதன்பிறகு மட்டுமே அவன் தன்னை எல்லா உயிர்களுக்கும் தாழ்ந்தவனாகக் கருதி ஓர் உண்மை பக்தனின் நிலையில் இருந்து கடவுளை வழி படுகிறான். அந்த நிலையில் அவன் புண்ணிய தீர்த்தங்களுக்குச் செல்வதை விட்டுவிடுகிறான்; புற வழிபாடுகளைத் தாண்டிச் செல்கிறான். ஒவ்வொரு மனிதனையும் முழுமை பெற்ற கோயிலாகக் காண்கிறான்.

சாஸ்திரங்களில் பக்தி பல வழிகளில் விவரிக்கப்பட்டுள் ளது. நாம் கடவுளை நம் தந்தை என்கிறோம். இதைப் போலவே தாய் என்றும், மற்றும் பலவாறாகவும் அழைக்கிறோம். நம் மிடம் உள்ள பக்தியை வலுப்படுத்துவதற்காகவும் அவரை நமக்கு மிக நெருங்கியவராக, அன்பானவராக உணர்வதற் காகவுமே இந்த உறவு முறைகள் ஏற்படுத்தப்பட்டன. எனவே அவரது திருநாமங்கள் எல்லாம் ஒருவிதத்தில் நியாய மானவையே. அதாவது அவை ஒவ்வொன்றும் அன்பை

வெளிப்படுத்துகின்றன. உண்மையான பக்தன் இறைவனிடம் கொள்கின்ற அன்புப் பிணைப்பின் வெளிப்பாடுகளே இந்த உறவு முறைகள்.

ராச லீலையிலுள்ள ராதை மற்றும் கிருஷ்ணனின் கதையை எடுத்துக் கொள்ளுங்கள். இந்தக் கதை ஒரு பக்தனின் உண்மை யான உணர்வை அப்படியே சித்தரிக்கிறது. ஆணுக்கும் பெண் ணுக்கும் இடையில் உள்ள அன்பைவிட மேலான அன்பு இந்த உலகில் எதுவுமில்லை. அத்தகைய ஆழ்ந்த அன்பு எங்கே இருக் கிறதோ அங்கே அச்சம் இல்லை. பிரிய முடியாதபடி, ஒருவருக் குள் ஒருவர் ஐக்கியமாகின்றவாறு அந்த இருவரையும் இணைக் கின்ற பந்தம் ஒன்றைத் தவிர் அதில் வேறு எந்தப் பற்றும் இல்லை. ஆனால் பெற்றோர்கள் விஷயத்தில் நமக்கு அவர் களிடம் மரியாதை இருப்பதால் அவர்களிடம் நாம் காட்டும் அன்பு பயம் கலந்ததாகவே இருக்கும்.

கடவுள் எதையாவது படைத்தாரா இல்லையா என்பதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? அவரே நம்மைக் காப்பவர் என்ற உண்மையையெல்லாம் தெரிந்துகொண்டு என்ன செய்யப் போகிறோம்? நமது அன்பிற்கு உரியவர் அவர் மட்டுமே. பயத்தைத் தரும் எல்லா எண்ணங்களையும் விலக்கி விட்டு அவரைப் போற்றுவோம். வேறு எந்த ஆசையும் இல்லாத போது, வேறு எதையும் நினைக்காதபோது, அவரிடம் பித்துப் பிடிக்கும் போது மட்டுமே மனிதன் கடவுளை விரும்புகிறான். காதலன் காதலியிடம் கொள்கின்ற அன்பு ஒன்று மட்டுமே, ஒரு பக்தன் கடவுளிடம் கொள்ள வேண்டிய பக்திக்கு உதாரண மாக விளங்க முடியும். கிருஷ்ணர் கடவுள், ராதை அவரை நேசித்தாள். இந்தக் கதையைக் கூறும் நூல்களைப் படியுங்கள். அதன்பிறகே கடவுளிடம் எப்படி பக்தி செலுத்த வேண்டும் என்பதை உங்களால் ஊகித்துப் பார்க்க முடியும். ஆனால் எத்தனை பேர் இதனைப் புரிந்து கொள்வார்கள்? நாடி நரம்புவரை மலினப்பட்டு, ஒழுக்கமென்றால் என்னவென்றே தெரியாதவர்கள் எப்படி இதையெல்லாம் புரிந்துகொள்ள முடியும்? மனத்தில் உள்ள எல்லாவித உலகியல் எண்ணங்களை யும் விரட்டிவிட்டு, தூய்மையான, ஒழுக்கம் நிறைந்த, ஆன்மீகமயமான சூழலில் வாழும்போது, கற்றறிவு இல்லாத வர்கள் கூட மிக நுண்ணிய உணர்வுகளைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் இத்தகையோர் மிகக் குறைவாக அல்லவா இருக்கிறார்கள்!

மனிதனின் புரட்டுக்கு இடமாகாத மதம் ஒன்றுகூட இல்லை. உதாரணமாக ஆன்மா வேறு, உடல் வேறு என்று அவன் நினைத்துக் கொள்ளலாம். ஏனெனில் உடலால் பாவம் செய்தால் அது ஆன்மாவைப் பாதிக்காது அல்லவா! மதங்கள் உண்மையாகப் பின்பற்றப்படுமானால் இந்து, முகமதியன், கிறிஸ்தவன் என்று யாராக இருந்தாலும் முற்றிலும் தூய்மை யால் நிறையப் பெறாத ஒருவன்கூட இருக்க மாட்டான். ஆனால் மனிதர்கள் தங்கள் இயல்பான நல்ல அல்லது கெட்ட குணங்களால் வழிநடத்தப்படுகிறார்கள், இதை யாரும் மறுக்க முடியாது. இறைவனைப்பற்றிக் கேட்கும்போது இறையுணர்வு போதையில் ஆழ்கின்ற, இறைவனைப்பற்றிப் படிக்கும்போது கண்ணீர் சிந்துபவர்களும் இந்த உலகில் இருக்கிறார்கள். அத்தகையவர்களே உண்மை பக்தர்கள்.

ஆன்மீக முன்னேற்றத்தின் ஆரம்ப நிலையில் ஒருவன் கடவுளை எஜமானனாகவும், தன்னை அவரது ஏவலனாகவும் நினைக்கிறான். தன் அன்றாடத் தேவைகள் போன்றவற்றை அளிப்பதற்காக அவரிடம் நன்றியுணர்ச்சி கொள்கிறான். இத்தகைய எண்ணங்களை எல்லாம் ஒதுக்கி வையுங்கள். எல்லா வற்றையும் கவரக்கூடிய சக்தி ஒன்றே உள்ளது, அதுதான் கடவுள். அந்தச் சக்திக்கு அடங்கியே சூரியனும் சந்திரனும் மற்ற எல்லாமே இயங்குகின்றன. இந்த உலகத்திலுள்ள நல்ல தானாலும் கெட்டதானாலும் ஒவ்வொன்றும் கடவுளுக்கே சொந்தம். நம் வாழ்க்கையில் நல்லதோ தீயதோ எது நடந்தாலும் அது நம்மைக் கடவுளிடமே கொண்டு செல்கிறது.

ஒருவன் சுயநலம் காரணமாக மற்றொருவனைக் கொல் கிறான். ஆனால் அதன் பின்னணியிலும் அவன் தன்னிடமோ பிறரிடமோ கொண்ட அன்புதான் இருக்கிறது. நாம் நன்மை செய்தாலும் தீமை செய்தாலும் அதைத் தூண்டுகின்ற சக்தியாக அன்பே இருக்கிறது. தானோ, தன் குட்டிகளோ பசியாக இருப்பதால்தான் புலி எருமையைக் கொல்கிறது.

கடவுள் அன்பே வடிவானவர். எல்லாவற்றிலும் வெளிப் பட்டுத் தோன்றுபவர் அவரே. தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொருவரும் அவரிடம் இழுக்கப்படுகிறோம். பெண் ணொருத்தி கணவனை நேசிக்கும்போது அவனிடம் உறை கின்ற தெய்வீகமே தன்னை அவனிடம் ஈர்க்கின்ற மகாசக்தி என்பதை அறிவதில்லை. நாம் வழிபட வேண்டியது அன்பு வடிவாகிய கடவுள் ஒருவரையே. படைப்பவராகவும்

காப்பவராகவும் மட்டும் அவரைக் கருதும்வரையில் புற வழிபாட்டில் மட்டுமே ஈடுபட முடியும். ஆனால் அவற்றைக் கடந்து, அவரை அன்பின் உருவமாகக் கருதும்போது, எல்லாவற்றிலும் அவரையும் அவரில் எல்லாவற்றையும் காணும்போது மட்டுமே மிக மேலான பக்தியை அடைகிறோம். ❑

## 2. லாகூரில்

சுவாமிஜி லாகூருக்கு நவம்பர் 5-ஆம் நாள் வந்தார். ஆரிய சமாஜம் மற்றும் சனாதன தர்ம சபையின் தலைவர்கள் அவருக்கு மாபெரும் வரவேற்பு அளித்தனர். லாகூரில் தங்கியிருந்த குறைந்த காலத்தில் சுவாமிஜி மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். முதல் சொற்பொழிவு தியான் சிங் என்பவரின் மாளிகையில் நடைபெற்றது. அவர் பேசியது:

### 1. இந்துமதத்தின் பொது அடிப்படைகள்

புனிதமான ஆர்யாவர்த்தத்தில்[1] மிகப் புனிதமான இடமாகக் கருதப்படுவது இந்த இடம். நமது மகத்தான ரிஷியாகிய மனு குறிப்பிடுகின்ற பிரம்மாவர்த்தம் இதுதான்.[2] ஆன்மாவை அடைவதற்கான பெரும் துடிப்பு, ஆம், வரலாறு காட்டுவதுபோல் எதிர்காலத்தில் உலகத்தையே நிறைத்துப் பரவப் போகின்ற அந்தப் பேரார்வம் இந்தப் பூமியிலிருந்துதான் எழுந்தது. பெருநதிகளைப்போல் ஆன்மீகப் பேரார்வங்கள் பொங்கியெழுந்து, ஒன்று சேர்ந்து, வலிமை பெற்று உலகம் முழுவதிலும் பயணம் செய்து, இடிபோன்ற குரலில் தங்களை அறிவித்துக்கொண்ட பூமி இதுதான். இந்தியாவிற்குள் நுழைந்த எல்லா ஊடுருவல்களையும் படையெடுப்புகளையும் முதன்முதலில் தாங்கிக்கொண்ட பூமி இதுதான். வெளியிலிருந்து இந்தியாவிற்குள் நுழைந்த காட்டுமிராண்டிகளின் ஒவ்வொரு தாக்குதலையும் தன் நெஞ்சில் முதலில் தாங்கிய வீர பூமி இதுதான். அத்தனை

---

1. இந்தியாவின் பண்டைய பெயர். 'மேலோர் மீண்டும்மீண்டும் பிறக்கின்ற இடம்' என்பது ஆர்யாவர்த்தம் என்ற சொல்லின் பொருளாகும். கிழக்கிலும் மேற்கிலும் கடல், வடக்கிலும் தெற்கிலும் இமயம் மற்றும் விந்திய மலைகள் என்று அதன் எல்லைகளைக் கூறுகிறார் மனு.

*ஆ ஸமுத்ராத் து வை பூர்வாதாஸமுத்ராச்ச பச்சிமாத் ।*
*தயோரேவாந்தரம் கிர்யோரார்யாவர்த்தம் விதுர்புதா: ॥*

—மனு, 2. 22.

2. சரஸ்வதி, த்ருஷத்வதி என்ற நதிகளுக்கு இடையிலுள்ள பகுதியாக இதனைக் குறிப்பிடுகிறார் மனு—

*ஸரஸ்வதீ த்ருஷத்வத்யோர் தேவநத்யோர் யதந்தரம் ।*
*தம் தேவநிர்மிதம் தேசம் ப்ரஹ்மாவர்த்தம் ப்ரசக்ஷதே ॥*

—மனு, 2. 17.

துன்பங்களுக்குப் பிறகும் தன் பெருமையையும் வலிமையையும் முழுவதுமாக இழந்துவிடாமல் இருக்கும் பூமி இதுதான். இங்கேதான் சாந்தமயமான நானக் தமது மகத்தான உலகம் தழுவிய அன்பைப் பிற்காலத்தில் போதித்தார். இங்குதான் அவரது விசாலமான இதயம் திறந்தது. உலகம் முழுவதையும் அணைத்துக்கொள்ள—இந்துக்களை மட்டுமல்ல, முகமதியர் களையும் தழுவிக்கொள்ள—அவரது கைகள் நீண்ட இடம் இதுதான். நமது இனத்தின் கடைசி வீரர்களுள் ஒருவரும், மங்காப் புகழ் பெற்றவர்களுள் ஒருவருமான குரு கோவிந்த சிங் தம்முடையவும், தமது அன்பிற்குரியவர்கள் மற்றும் நெருக்க மானவர்களுடையவும் ரத்தத்தை மதத்திற்காகச் சொரிந்தார்; யாருக்காக ரத்தம் சிந்தினாரோ அவர்களால் புறக்கணிக்கப் பட்ட பின்னரும் தமது நாட்டிற்கு எதிராக ஒரு வார்த்தையும் சொல்லாமல், ஒரு முணுமுணுப்பும் இல்லாமல், நெஞ்சில் அடிபட்டுக் காயமுற்ற சிங்கம் போல், மரணத்தை எதிர்நோக்கித் தென்னாடு செல்வதற்காக அவர் பின்வாங்கியது இந்தப் பூமியில் தான்.

ஐந்து நதிகள் பாயும் நாட்டின் குழந்தைகளே, இங்கே, நமது இந்தப் புராதன பூமியில் உங்கள் முன்னால் நான் நிற் கிறேன்—ஆசிரியனாக அல்ல, ஏனெனில் கற்பிப்பதற்காக எனக்குத் தெரிந்தது மிகவும் சொற்பமே. மேற்கில் வாழும் சகோதரர்களுக்குத் தன் வாழ்த்துக்களைச் சொல்வதற்காக, அவர்களுடன் தன் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதற்காக, கிழக்கிலிருந்து வருகின்ற ஒருவனாக மட்டுமே இங்கு நிற்கிறேன். நமக்குள் நிலவும் வேறுபாடுகளைக் கண்டறிய நான் இங்கு வரவில்லை, நாம் எங்கு ஒன்றுபடுகிறோம் என்பதைக் காணவே வந்திருக்கிறேன். எந்த அடிப்படையில் நாம் எப்போதும் சகோதரர்களாக இருக்க முடியும், அனாதிகாலம் முதல் பேசி வருகின்ற குரல் எந்த அடிப்படையில் வளர்ந்து நாளுக்கு நாள் வலிமை காண முடியும் என்பதை அறியவே நான் முயல்கிறேன். அழிவு வேலைகளை அல்ல, ஆக்க வேலைகளை உங்கள் முன் வைக்கவே நான் வந்திருக்கிறேன். விமர்சித்துக் கொண்டிருப் பதற்கான நாட்கள் கழிந்துவிட்டன, ஆக்க வேலைகளுக்காக நாம் காத்திருக்கின்ற வேளை இது. விமர்சனம், ஏன், கடுமையான விமர்சனம்கூடச் சிலவேளைகளில் உலகிற்குத் தேவைதான். ஆனால் அது அப்போதைக்கு மட்டுமே. எல்லா காலத்திற்கும் தேவைப்படுவது வளர்ச்சியும் ஆக்கமுமே தவிர, குறைகூறுவதும்

அழிவும் அல்ல. ஏறக்குறைய கடந்த நூறு ஆண்டுகளாகவே நமது நாட்டில் விமர்சன வெள்ளம் கரைபுரண்டுதான் ஓடிக்கொண்டிருக்கிறது; நமது குறைபாடுகளின்மீது மேலை விஞ்ஞானம் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது. அதன் காரண மாக அந்தக் குறைபாடுகளும் மலினங்களும் மற்ற எல்லாவற்றை யும்விட வெளிப்பட்டுத் தெரிகின்றன.

எனவே இயல்பாகவே நம் நாட்டின் எல்லா இடங்களிலும் மகத்தான அறிவுஜீவிகள் தோன்றினார்கள். அவர்களின் இதயங் களில் சத்திய நாட்டமும் நியாய உணர்ச்சியும் நாட்டுப் பற்றும் குடிகொண்டிருந்தன. எல்லாவற்றிற்கும் மேலாகத் தங்கள் மதத் தின்மீதும் தெய்வத்தின்மீதும் அவர்களுக்கு ஆழ்ந்த அன்பு இருந்தது. இந்த மாமனிதர்களின் உள்ளத்து உணர்ச்சிகள் மிகவும் ஆழமானதாக இருந்தன; அவர்களின் அன்பு மிகவும் ஆழ்ந்ததாக இருந்தது. எனவே தாங்கள் எதையெல்லாம் தவறு என்று நினைத்தார்களோ அதையெல்லாம் விமர்சித்தார்கள். கடந்த காலத்தின் இந்த மகத்தான உள்ளங்களுக்குப் பெருமை கள் சேர்வதாக! அவர்கள் எவ்வளவோ நன்மையைச் செய் தார்கள். ஆனால் இன்றைய குரல் நம்மிடம் 'போதும்' என்று சொல்லியவாறு வருகிறது. போதிய அளவிற்கு விமர்சனம் செய்தாகிவிட்டது, குற்றம் கண்டுபிடித்தலும் போதிய அளவிற்குச் செய்தாகிவிட்டது. இப்போது புதுப்பிக்கவும் புனரமைப்பதற்குமான காலம் வந்திருக்கிறது; சிதறிக் கிடக்கின்ற நம் சக்திகளையெல்லாம் திரட்டி, ஒரு மையத்தில் குவித்து, நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஏறக்குறைய தடைபட்டுப் போய்விட்ட இந்த நாட்டின் முன்னேற்றப் பயணத்தை அதன்மூலம் வழி நடத்துவற்கான காலம் வந்திருக்கிறது. இந்த வீடு சுத்தமாக்கப்பட்டுவிட்டது. இனி இதில் புதிதாகக் குடியேறலாம். பாதை சீரமைக்கப்பட்டுவிட்டது, ஆரியர்களின் குழந்தைகளே, முன்னேறிச் செல்லுங்கள்.

பெரியோர்களே, இந்த நோக்கம்தான் என்னை உங்களிடம் வரச் செய்தது. நான் எந்தக் கட்சியையோ எந்தப் பிரிவையோ சேர்ந்தவன் அல்ல என்பதை முதலிலேயே உங்களிடம் தெளி வாகக் கூறிவிடுகிறேன். என்னைப் பொறுத்தவரை அவையெல் லாம் மகத்தானவை, பெருமை மிக்கவை. அவற்றிலுள்ள நல்ல வற்றையும் உண்மையானவற்றையும் நான் என் வாழ்நாள் முழு வதும் தேடி வருகிறேன். இன்றிரவு இது சம்பந்தமான சில கருத்துக்களை உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். எந்தக்

கருத்தில் நாம் இணைய முடியும் என்பதைக் கண்டறிவதும், முடியுமானால் இணைவதற்கான ஓர் அடிப்படையைக் காண் பதும், இறையருளால் அத்தகைய அடிப்படையைக் கண்டறிய முடிந்தால் அதை ஏற்றுக்கொண்டு, கொள்கையளவிலிருந்து அதைச் செயல்முறை நிலைக்குக் கொண்டு வருவதும்தான் என் திட்டம்.

நாம் இந்துக்கள். இந்து என்ற வார்த்தையை மோசமான பொருளில் நான் பயன்படுத்தவில்லை; அந்தச் சொல்லிற்கு மோசமான பொருள் இருக்கிறது என்று கூறுபவர்களின் கருத்தையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை. பழங்காலத்தில் அந்தச் சொல் சிந்து நதியின் மறுகரையில் வாழ்பவர்கள் என்று பொருள்பட்டது. நம்மை வெறுப்பவர்களுள் பலர் தற்போது அதற்கு மோசமான பொருள் கூறலாம். ஆனால் பெயரில் ஒன்றுமே இல்லை. இந்து என்ற சொல், எவையெல்லாம் பெருமை மிக்கதோ, எவையெல்லாம் ஆன்மீகமோ அவற்றைக் குறிக்கிறதா அல்லது வெட்கப்படத்தக்க ஒன்றின் பெயராக, தாழ்த்தப்பட்ட பயனற்ற நம்பிக்கையற்ற ஒன்றைக் குறிக்கின்ற ஒன்றாகத்தான் நிலைபெறுமா என்பது நம்மைப் பொறுத்து தான் உள்ளது.

இன்று இந்து என்ற சொல் மோசமான எதையாவது குறிப்பதாக இருக்குமானால் அதைப்பற்றிக் கவலை வேண்டாம். நம் செயல்கள்மூலம் அந்த வார்த்தையை உலகில் உள்ள எந்த மொழியும் உருவாக்க முடியாத உயர்ந்த வார்த்தையாக மாற்று வோம். நமது முன்னோர்களைக் குறித்து அவமானம் கொள்ளக் கூடாது என்பது என் வாழ்க்கைக் கோட்பாடுகளுள் ஒன்றாக உள்ளது. இதுவரை பிறந்துள்ள கர்வம் மிக்கவர்களுள் நான் ஒருவன், உங்களிடம் உண்மையைச் சொல்கிறேன்—இந்தக் கர்வம் என் பெருமையின் காரணமாக அல்ல, எனது பாரம்பரியத்தின் பெருமைக்காகவே ஆகும். கடந்த காலத்தைப் பற்றி நான் அதிகமாகப் படிக்குந்தோறும், நான் பின்னோக்கிப் பார்க்குந்தோறும் இந்தக் கர்வம் என்னிடம் மேலோங்குகிறது. அது எனக்கு வலிமையைத் தருகிறது; ஆழ்ந்த நம்பிக்கை நிறைந்த தைரியத்தைத் தருகிறது; பூமியின் தூசியிலிருந்து என்னை உயர்த்துகிறது; நமது அந்த மகத்தான முன்னோர்கள் வகுத்துச் சென்றுள்ள சீரிய திட்டங்களைச் செயல்படுத்த வைத்திருக்கிறது. அந்தப் புராதன ஆரியர்களின் குழந்தைகளே! நீங்களும் அத்தகைய கர்வம் கொள்ளுங்கள்! உங்கள்

முன்னோர்களிடம் அத்தகைய நம்பிக்கை உங்கள் ரத்தத்தில் பொங்கட்டும், அது உங்கள் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் கலந்து பரவட்டும், உலகின் கதிமோட்சத்திற்காக அது செயல்படட்டும்!

நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்வதான தனியொரு கருத்தைக் கண்டுபிடிக்குமுன் நமது தேசிய வாழ்வின் பொது அடிப்படையை நினைவுகூர வேண்டியது அவசியம். ஒவ்வொரு மனிதனிடமும் தனித்துவம் இருப்பதுபோல் நாடுகளுக்கும் தனித்துவம் இருக்கிறது. ஒருவன் சில விஷயங்களில் மற்றவனிடமிருந்து வேறுபடுவதைப்போல், அவனுக்கென்று சில தனி குணங்கள் இருப்பதைப்போல் ஓர் இனமும் மற்றோர் இனத்திலிருந்து சில குறிப்பிட்ட பண்புகளில் வேறுபடுகிறது. இயற்கையின் திட்டத்தில் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட பங்கை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது, அதற்காக அவனது முன்வினை அவனுக்கென்று ஒரு குறிப்பிட்ட வழியை வகுத்துக் கொடுக்கிறது. நாடுகள் விஷயமும் அப்படியே. ஒவ்வொரு நாடும் நிறைவேற்றுவதற்கென ஒரு லட்சியம் உள்ளது. ஒவ்வொரு நாடும் அளிப்பதற்கென ஒரு செய்தி உள்ளது. ஒவ்வொரு நாடும் சாதிப்பதற்கான ஒரு பணியும் உள்ளது. எனவே நம் இனத்தின் பணி எது, நிறைவேற்ற வேண்டிய லட்சியம் எது, நாடுகளின் அணிவகுப்பில் அதன் இடம் எது, இனங்களின் ஒற்றுமைக்காக அது அளிக்க வேண்டிய பங்கு எது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது.

சில நாகங்களின் தலையில் மாணிக்கம் இருக்கும் என்றும், அது இருக்கும்வரை அதை யாராலும் கொல்ல முடியாது என்றும் கதை சொல்வதை நாம் குழந்தைப் பருவத்தில் கேட்டிருக்கிறோம். அரக்கர்களின் கதையும் உள்ளது. அவர்களின் உயிர் சில சிறிய பறவைகளின் உடம்பில் இருக்கும், அந்தப் பறவைகள் பத்திரமாக இருக்கும்வரை அந்த அரக்கர்களைக் கொல்ல முடியாது. துண்டுதுண்டாக வெட்டினாலும், என்ன தான் செய்தாலும் அவர்களைச் சாகடிக்க முடியாது. நாடுகளின் விஷயமும் அதுபோல்தான். ஒவ்வொரு நாட்டிற்கும் அதன் தேசிய வாழ்வு, மையம் கொண்டிருக்கின்ற ஓர் இடம் உள்ளது. அங்குதான் அந்த நாட்டின் வாழ்க்கை இருக்கிறது. அதைத் தொடாதவரை அந்த நாடு அழியாது.

இந்த விளக்கத்தின் கண்ணோட்டத்தில், உலக வரலாறு காட்டும் அதிசயத்தை நாம் அறிந்துகொள்ள முடியும். நமது

இந்தப் பொன்னாட்டின்மீது காட்டுமிராண்டிகளின் படையெடுப்புகள் அலைஅலையாகப் புரண்டு வந்தன, 'அல்லாஹு அக்பர்' என்னும் ஒலி நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வானையே நிறைத்துப் பரவியது, தன் உயிர் எந்தக் கணம் போகுமோ என்பது தெரியாமல் ஒவ்வோர் இந்துவும் உறைந்து போயிருந்தான். சரித்திரப் பிரசித்தி பெற்ற உலக நாடுகளில் மிக அதிகமான துன்பங்களுக்கு உள்ளானதும், மிக அதிகமான முறை கீழடக்கப் பட்டதுமான நாடு இது. என்றாலும் நாம் ஏறக்குறைய அப்படியே, அதே இனமாக, தேவையானால் அத்தகைய துன்பங்களை எத்தனைமுறை வேண்டுமானாலும் சந்திப்பதற்குத் தயாராக இருக்கிறோம். அது மட்டுமல்ல, நாம் வலிமையோடு இருப்பதுடன், வெளிநாடுகளுக்குச் செல்லவும் தயாராக இருக்கிறோம் என்பதற்கான அறிகுறிகள் சமீப காலத்தில் தெரியவும் செய்கின்றன. ஏனென்றால் விரிவடைவது தானே வாழ்வின் அறிகுறி.

நமது லட்சியங்களும் சிந்தனைகளும் முன்புபோல் நம் நாட்டு எல்லைக்குள் அடங்கிக் கிடக்கவில்லை என்பதை இன்று காண்கிறோம். நாம் விரும்புகிறோமோ இல்லையோ அவை அணிவகுத்து வெளியே செல்கின்றன, பிற நாடுகளின் இலக்கியங்களில் ஊடுருவுகின்றன, மற்ற நாடுகளில் தனக்குரிய இடத்தைப் பெறுகின்றன, சில நாடுகளில் அதிகார பீடத்தில் கூட இடம் பிடித்திருக்கின்றன. இதற்கான விளக்கம் என்னவென்றால், உலகின் ஒட்டுமொத்த முன்னேற்றத்திற்கு இந்தியாவின் பங்களிப்பு மகத்தானது, மேன்மையானது, மனிதனின் மனத்தை ஆக்கிரமிக்க முடிந்தவற்றுள் மிகமிக நுண்மையானது. அது தத்துவமும் ஆன்மீகமும் ஆகும். நம் முன்னோர்களும் பல வழிகளில் முயன்றார்கள், இது நமக்குத் தெரியும். மற்ற நாட்டினரைப் போல் புறவுலக ரகசியங்களை அறிய முற்பட்டார்கள். ஈடிணையற்ற அறிவு வளம் கொண்டவர்களான நமது மகத்தான இனத்தினர், அதில், உலகம் கற்பனையில்கூடக் காண இயலாத அதிசயங்களை நிகழ்த்தி இருப்பார்கள். ஆனால் அதைவிட உயர்ந்த ஒன்றிற்காக அந்த முயற்சியைக் கைவிட்டு விட்டார்கள். அந்த உயர்ந்தவைதான் வேதங்களில் எதிரொலிக்கின்றன—'யார் மாறாமல் இருக்கிறாரோ, அவரை நாம் அறியச் செய்வது தான், அனைத்திலும் மகத்தான அறிவு!'[1] மாறக்கூடிய, நிலையற்ற

---

1. அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே। —முண்டக உபநிடதம், 1. 1. 5.

இயற்கையைப்பற்றிய, மரணமும் துன்பமும் துயரமும் நிறைந்த உலகைப்பற்றிய அறிவியல் மகத்தானது, மகத்தானதுதான். ஆனால் நம் முன்னோர்களின் கருத்துப்படி, மாற்றமே இல்லாத, ஆனந்த மயமான இறைவனைப் பற்றிய அறிவுதான் அனைத்திலும் நுண்மையான அறிவியல். அதில் மட்டுமே அமைதி உள்ளது, அதில் மட்டுமே நிலையான வாழ்வு உள்ளது, அதில் மட்டுமே முழுமை உள்ளது, அதில் மட்டுமே துன்பங்கள் எல்லாம் ஒழிகின்றன.

மிஞ்சிப்போனால் அறிவியல்கள் நமக்கு உணவும் உடையும் தரலாம், பிறர்மீது செலுத்துவதற்கான அதிகார பலம் தரலாம்; சக மனிதர்களை எப்படி வெல்வது, எப்படி ஆள்வது, பலவீனர்களைப் பலமானவர்கள் எப்படி அடக்குவது என்பதையெல்லாம் கற்றுத் தரலாம். நமது முன்னோர்கள் விரும்பியிருந்தால் கட்டாயமாக இத்தகைய அறிவியல்களைக் கண்டு பிடித்திருப்பார்கள். ஆனால் அவர்கள் அவற்றை நாடாததற்காக நாம் இறைவனைப் போற்றுவோம். அந்த அறிவியல்களை நாடாமல் அவற்றைவிட மேன்மையான, அளவற்ற மடங்கு உன்னதமான, அளவற்ற மடங்கு ஆனந்தம் தருகின்ற மறு பக்கத்தை அவர்கள் பிடித்துக் கொண்டார்கள். இன்று அது தேசியப் பண்பாகிவிட்டது. தந்தையிடமிருந்து மகனுக்கு என்ற ரீதியில் பரம்பரைபரம்பரையாக ஆயிரக்கணக்கான ஆண்டுகளைக் கடந்து இன்று அது நம்மிடம் வந்து சேர்ந்திருக்கிறது. நம் வாழ்வோடு வாழ்வாகியுள்ளது, நம் நரம்புகளில் ஓடுகின்ற ரத்தத்தில் கலந்து ஒவ்வொரு துளியிலும் அதிர்ந்து, நம் இயல்பாகவே ஆகிவிட்டது. அதன் காரணமாக மதம், இந்து—இந்த இரண்டும் ஒரே பொருளைத் தருகின்ற சொற்களாகி விட்டன.

இதுதான் நமது தேசியப் பண்பு, இதை யாரும் அசைக்க முடியாது. வாளுடனும் நெருப்புடனும் வரும் காட்டுமிராண்டிகளும் சரி, மிருகத்தனமான மதங்களைப் பரப்ப வரும் காட்டு மிராண்டிகளும் சரி இவர்களில் யாராலும் அந்தச் சாரத்தை அந்த 'மாணிக்கத்தை'த் தொட முடியாது; இந்த இனத்தின் உயிர் இருக்கின்ற 'பறவை'யைக் கொல்லும் ஆற்றல் யாருக்கும் இல்லை. இதுவே இந்த இனத்தின் உயிர்நாடி. இந்த உயிர் நாடி இருக்கும்வரை சூரியனின் கீழ் உள்ள எந்தச் சக்தியாலும் இந்த இனத்தை அழிக்க முடியாது. உலகின் எல்லா சித்திரவதைகளும் துன்பங்களும் நம்மை வருத்தாமல் கடந்து சென்றுவிடும்.

நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றவை அனைத்திலும் மகோன்னதமான ஆன்மீகத்தை நாம் பற்றிக்கொண்டிருக்கும்வரை நாமும் பிரகலாதனைப்போல் அக்கினியில் குளித்தெழுந்து வெளிவந்து விடுவோம்.

ஓர் இந்து ஆன்மீக உணர்வின்றி இருப்பானானால், அவனை நான் இந்து என அழைக்க மாட்டேன். பிற நாடுகளில் மனிதனுக்குப் பெரும்பாலும் அரசியல்தான் முதன்மையானதாக இருக்கும், அதனுடன் ஏதோ சிறிது மதமும் இருக்கும். ஆனால் இந்தியாவில் நமது வாழ்க்கையின் முதற்கடமை, முக்கியக் கடமை ஆன்மீகம்தான். அதற்குப் பிறகு, நேரம் இருந்தால் மற்றவை இடம் பெறும். இதை மனத்தில் கொண்டால், நம் நாட்டு நலனிற்காக நாம் கடந்த காலங்களில் செய்ததும், இனிவரும் காலங்களில் செய்ய வேண்டுவதும் நம் இனத்தின் எல்லா ஆன்மீக சக்திகளையும் கண்டுபிடிப்பதே என்பது ஏன் என்று தெளிவாக அறிந்துகொள்ள முடியும். சிதறிக் கிடக்கின்ற ஆன்மீக சக்திகளை ஒருங்கிணைப்பதன் மூலம் மட்டுமே இந்தியாவில் தேசிய ஒருமைப்பாட்டைக் கொண்டுவர முடியும். ஆன்மீகம் என்ற ஒரே ராகத்திற்கு ஏற்ப இசைந்து துடிக்கின்ற இதயம் கொண்டவர்களின் சங்கமத்தால்தான் இந்த நாட்டை உருவாக்க முடியும்.

இந்த நாட்டில் போதிய அளவு மதப் பிரிவுகள் உள்ளன. தற்காலத்தில் போதுமானவை உள்ளன, எதிர்காலத்திலும் போதுமானவை தோன்றும். இது நமது மதத்தின் சிறப்புத் தன்மையாகும். நமது மதத்தின் நுண் தத்துவங்கள் நம் தலைகளுக்கு மேல் விரிந்து கிடக்கும் வானம்போல் பரந்தவை, இயற்கையைப்போல் நிலையானவை; அவற்றின் மீது எத்தனையெத்தனையோ விதமான விளக்கங்கள் எழுதுகின்ற அளவிற்குப் பரந்த போக்கு கொண்டவை. எனவே இங்கே மதப் பிரிவுகள் இயல்பாக இருந்தே தீரும். ஆனால் இருக்கத் தேவையற்றது எது என்றால் அவற்றுக்கிடையே சண்டை. பிரிவுகள் (Sect) இருந்தேயாக வேண்டும், ஆனால் பிரிவினைவாதம் (Sectarianism) கூடாது. பிரிவினைவாதத்தால் இந்த உலகம் முன்னேறப் போவதில்லை; ஆனால் பிரிவுகள் இல்லையென்றால் உலகிற்கு முன்னேற்றம் இல்லை. ஏதோ ஒரு கூட்டத்தினர் எல்லாவற்றையும் செய்துவிட முடியாது. உலகம் முழுவதும் ஏறக்குறைய எல்லையற்றுப் பரந்திருக்கும் சக்தியை ஏதோ சிலரால் கையாள முடியாது. எனவே அந்த வேலையைப்

பகிர்ந்துகொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு நாம் உள்ளா கிறோம். இதுவே பல பிரிவுகள் உண்டாக ஏதுவானது. ஆன்மீக சக்திகளைப் பயன்படுத்துவதற்காக மதப் பிரிவுகள் இருக்கட்டும். ஆனால் இந்தப் பிரிவுகள், இந்த வேறுபாடுகள் வெறும் தோற்றம் மட்டுமே, இந்த எல்லா வேறுபாடுகளுக்கு இடை யிலும் சமரசத்தின் ஓர் இழை ஊடுருவி நிற்கிறது, ஓர் அழகிய ஒருமைப்பாடு அனைத்துள்ளும் நிலவுகிறது என்று நமது சாஸ்திரங்கள் முழங்கும்போது மதச் சண்டைகள் தேவைதானா? 'ஏகம் ஸத்விப்ரா: பஹுதா வதந்தி—உள்ளது ஒன்றே, ரிஷிகள் அதனைப் பல்வேறு பெயர்களால் அழைக்கிறார்கள்' என்று தான் நமது மிகப் புராதன நூல்கள் கூறுகின்றன. எனவே எல்லா மதப் பிரிவுகளையும் மதிக்கின்ற நமது நாட்டில், அவற்றுக்கிடையே பிரிவினைவாதப் போராட்டங்களும் சண்டைகளும் இருக்குமானால், பொறாமையும் வெறுப்பும் நிலவுமானால் அது நமக்குத்தான் இழிவு. மேன்மைமிகு முன்னோர்களின் வழித்தோன்றல்கள் என்று நம்மை அழைத்துக் கொள்ளத் துணிந்த நமக்கு இது அவமானமே தவிர, வேறல்ல.

வைணவர், சைவர், சாக்தர், காணபத்யர் முதலிய யாரா னாலும், புராதன வேதாந்தியானாலும் நவீனப் பிரிவுகளைச் சேர்ந்தவரானாலும், பழங்காலத்தின் கடுமையான பிரிவுகளைச் சார்ந்தவர்கள் ஆனாலும், நவீன சீர்திருத்தப் பிரிவுகளைச் சார்ந்தவர்கள் ஆனாலும் குறிப்பிட்ட சில கோட்பாடுகளை ஏற்றுக்கொள்பவர்கள் என்ற ரீதியில் நாம் அனைவரும் ஒன்றே என்று நான் கருதுகிறேன். இந்து என்று தங்களை அழைத்துக் கொள்கின்ற எல்லோரும் இந்தக் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்வார்கள்.

இந்தக் கோட்பாடுகளை விளக்குவதிலும் விரித்துரைப் பதிலும் வேறுபாடுகள் இருக்கலாம். அந்த வேறுபாடுகள் இருந்தேயாக வேண்டும், அவை அனுமதிக்கப்படவே வேண்டும். ஏனெனில் எல்லோரையும் நமது நிலையுடன் சேர்த்துக் கட்டிப் போடுவதல்ல நமது அளவுகோல். எல்லா மனிதர்களும் நமது கருத்துக்களின்படி வேலை செய்ய வேண்டும், நமது வழி முறை களின்படி வாழ வேண்டும் என்று வற்புறுத்துவது பாவம். மத ரகசியங்களின் அழிவற்ற உபதேசங்களே வேதங்கள் என்ற முதல் கருத்தை இங்குள்ள அனைவரும் ஒருவேளை ஏற்றுக் கொள்ளலாம்.

இந்தப் புனித இலக்கியங்கள் இயற்கையைப் போலவே தோற்றமும் முடிவும் இல்லாதவை என்பதை நாம் அனைவரும் நம்புகிறோம். இந்தப் புனித நூல்களின் சன்னிதியில் நிற்கும் போது நமது மத வேற்றுமைகளும் மதப் போராட்டங்களும் ஒழிந்துவிடும் என்றும் நாம் நம்புகிறோம். மத வேற்றுமைகளை எல்லாம் முறையீடு செய்யும் இறுதி இடமான உயர்நீதி மன்றம் இந்த வேதங்களே என்பதையும் நாம் ஏற்றுக்கொள்கிறோம். இந்த வேதங்கள் என்றால் என்ன என்பதைப்பற்றி நாம் பல்வேறு கருத்துக்களைக் கொள்ளலாம். அதன் ஒரு பகுதியை மற்றப் பகுதியைவிட மேலானதாக ஒரு பிரிவு கருதலாம்; ஆனால் வேதங்களின் திருமுன்னர் நாம் அனைவரும் சகோதரர்கள்; இந்த வழிபாட்டிற்குரிய, நிலையான, அற்புதமான வேதங் களிலிருந்தே இன்று நாம் பெற்றிருக்கும் நல்லதும் புனிதமான தும் தூய்மையானதும் ஆகிய அனைத்தும் வந்திருக்கின்றன என்பதை நாம் ஏற்றுக்கொள்ளும்போது, அது ஒன்றும் அவ் வளவு பெரிய விஷயம் அல்ல.

நல்லது, நாம் இவை எல்லாவற்றையும் நம்புவதானால் முதன்முதலில் இந்தக் கருத்து நாட்டின் ஒரு கோடியிலிருந்து மறுகோடிவரை பரப்பப்படட்டும். இது உண்மை என்றால் வேதங்கள் அவற்றிற்கு எப்போதும் உரியதான, நாமும் நம்புவ தான தலைமை இடத்தைப் பெறட்டும். ஆகையால் முதலில் வேதங்கள்.

நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்கின்ற இரண்டாவது கருத்து கடவுள். படைப்பவர் அவர், அண்டங்கள் அனைத்தை யும் காக்கின்ற சக்தி அவர். குறிப்பிட்ட காலங்களில் அவரிடமே அவை ஒடுங்குகின்றன, மற்றக் காலங்களில் அவரிடமிருந்தே வெளிவந்து பிரபஞ்சம் எனப்படும் இந்த அற்புதக் கோலமாக வெளிப்பட்டு நிற்கிறது. கடவுள் பற்றிய விளக்கத்தில் நாம் வேறுபடலாம். ஒருவர் முற்றிலும் சகுணமான கடவுளை நம்ப லாம், மற்றொருவர் கடவுளின் குணங்களை ஏற்றுக்கொண்டு உருவத்தை நம்பாமல் போகலாம், இன்னொருவர் முழுக்க முழுக்க நிர்க்குணமான கடவுளை நம்பலாம். இவர்கள் எல் லோருமே வேதங்களிலிருந்துதான் அத்தாட்சி பெறுகிறார்கள். இவையெல்லாம் இருந்தும் நாம் அனைவரும் கடவுளை நம்பு பவர்கள். அதாவது எதிலிருந்து எல்லாம் வந்ததோ, எதில் எல்லாமே வாழ்கிறதோ, இறுதியில் எல்லாம் எங்கே திரும்பியே தீர வேண்டுமோ அந்த மாபெரும் அற்புதமான எல்லையற்ற

சக்தியிடம் நம்பிக்கை கொள்ளவில்லை என்றால் அவனை இந்து என்றே அழைக்க முடியாது. இது சரியென்றால் இந்தக் கருத்தை நாடு முழுவதும் பரப்ப முயற்சிப்போம்.

நீங்கள் விரும்புகின்ற கோட்பாட்டைப் பரப்புங்கள், அதில் நமக்கொன்றும் கருத்துவேற்றுமை இல்லை, அதைப்பற்றி நாம் சண்டையிடப் போவதும் இல்லை. ஆனால் நீங்கள் பரப்புவது கடவுளைப் பற்றிய கோட்பாடாக இருக்கட்டும், அது ஒன்று தான் நாம் வேண்டுவது. ஒரு கோட்பாடு மற்றதைவிட மேலானதாக இருக்கலாம், ஆனால் அவற்றுள் எதுவும் தீமை யானது அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒன்று நல்லது, மற்றொன்று அதைவிட நல்லது, இன்னொன்று அதை விட நல்லது. ஆனால் கெட்டது என்ற ஒரு சொல்லே நமது மத அகராதியில் இடம் பெறவில்லை. எனவே இறைவனின் திருநாமத்தைத் தாங்கள் விரும்பும் வழியிலேயே போதிக்கின்ற அனைவரையும் எம்பெருமான் ஆசீர்வதிப்பாராக. அவர் அதிக மாகப் போதிக்கப்படுகின்ற அளவு நம் இனத்திற்கு நல்லது. நம் குழந்தைகள் இந்தக் கருத்துடன் வளர்க்கப்படுவார்களாக! இறைவனின் திருநாமம், ஏழைகள் மற்றும் தாழ்ந்தவர்கள், அதுபோலவே, பணக்காரர்கள் மற்றும் உயர்ந்தவர்களின் வீடுகளில் எல்லாம் நுழையட்டும்.

நான் உங்களிடம் கூறப்போகும் மூன்றாவது கருத்து இது —பிற இனத்தினர் கூறுவதுபோல், இந்த உலகம் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் படைக்கப்பட்டது, ஒரு குறிப்பிட்ட நாளன்று இது என்றென்றைக்குமாக அழியப் போகிறது என் பதை நாம் நம்புவதில்லை. அதைப் போலவே, இந்தப் பிரபஞ்சத் துடன் மனித ஆன்மாவும் வெறும் சூன்யத்திலிருந்து படைக்கப் பட்டது என்பதையும் நாம் நம்புதில்லை. இங்கே நாம் எல் லோருமே ஏற்றுக்கொள்கின்ற மற்றொரு கருத்து இருப்பதாகத் தோன்றுகிறது.

இயற்கை ஆதியும் அந்தமும் இல்லாதது; இந்தப் புற வுலகம் எதனால் ஆக்கப்பட்டுள்ளதோ அந்த ஜடப் பொருள், குறிப்பிட்ட சில காலகட்டங்களில் (Psychological periods), அதன் நுண்நிலைக்குத் திரும்புகிறது; ஒரு குறிப்பிட்ட காலம் வரை அந்த நிலையிலேயே இருக்கிறது, அதன்பிறகு வெளித் தோன்றி, நாம் இயற்கை என்று அழைக்கின்ற இந்த எல்லையற்ற காட்சியை விரிக்கிறது என்பதை நாம் நம்புகிறோம். அலை போன்றதான இந்த இயக்கம், காலம் என்ற ஒன்று தொடங்கும்

முன்னரே காலங்காலமாக நடந்து வருகிறது. இனியும் எல்லை யற்ற காலத்திற்கு நடந்து கொண்டேயிருக்கும்.

அடுத்ததாக, மனிதன் வெறும் ஜடப்பொருளாலான உடம்பு அல்ல என்பதை எல்லா இந்துக்களும் நம்புகிறோம். இந்த உடம்பிற்குள் மனம் என்னும் நுண்ணுடல் உள்ளது என் பதை மட்டும் அல்ல, அதற்கு அப்பாலும் ஏதோ மகத்தான ஒன்று இருக்கிறது என்பதையும் நாம் நம்புகிறோம். உடம்பு மாற்றத்திற்கு உள்ளாகிறது, மனமும் மாறுகிறது. இவற்றிற்கு அப்பாலுள்ள ஏதோ ஒன்றான ஆன்மா மாறாதது. ஆன்மா என்ற சொல்லை என்னால் மொழிபெயர்க்க முடியாது, ஏனெ னில் எந்த வார்த்தையைப் பயன்படுத்தினாலும் அது தவறான தாக இருக்கும். அந்த ஆன்மா நுண்ணுடலான மனத்திற்கும் அப்பால் இருக்கிறது. அதற்கு ஆதியோ அந்தமோ கிடையாது. மரணம் என்பது என்னவென்று அதற்குத் தெரியாது. இந்த ஆன்மா பல்வேறு உடல்களைத் தரிக்கிறது. மீண்டும் உடல் தரிக்கும் விருப்பம் இல்லாமல் போகும்போது அது சுதந்திர மாகிறது. அதற்குமேல் அது பிறப்பதில்லை. இந்த ஆன்மக் கோட்பாடு மற்ற எல்லா இனத்தவரின் கருத்திலிருந்து மாறுபட்ட மகத்தான ஒன்று. ஆம், நமது சாஸ்திரங்கள் போதிக்கின்ற சம்சாரக் கோட்பாடு மற்றும் அழிவற்ற ஆன்மாக் களைப் பற்றிய கோட்பாடுகளைத்தான் இங்கே நான் குறிப்பிடுகிறேன். நாம் எந்தப் பிரிவைச் சார்ந்தவர்களாக இருந் தாலும், நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்கின்ற மற்றொரு கருத்து இது.

ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் இடையே உள்ள தொடர்பு பற்றிய கருத்தில் வேறுபாடு இருக்கலாம். ஆன்மா என்றென்றைக்கும் இறைவனிலிருந்து தனித்தே நிற்பதாக ஒரு பிரிவினர் கூறலாம். மற்றொரு பிரிவினரின் கருத்துப்படி, இறைவன் என்ற எல்லையற்ற நெருப்புப் பிழம்பில் ஆன்மா ஒருபொறி என்பதாக இருக்கலாம். இன்னொரு பிரிவினர், ஆன்மாவை எல்லையற்ற அந்த ஒன்றுடன் இணைந்ததாகக் கொள்ளலாம். ஆனால் ஆன்மா என்பது வரையறையற்றது, படைக்கப்படாதது, அதனால் அது மரணமில்லாதது; பல்வேறு உடம்புகளைத் தரித்து மனித உடம்பில் நிறைநிலையை அடையும்வரை பரிணமித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற அடிப்படைக் கருத்தை நாம் விடாதிருக்கும்வரை இந்த வேறுபட்ட விளக்கங்களை எல்லாம் பெரிதாக எடுத்துக்

கொள்ள வேண்டியதில்லை. இந்த ஆன்மக் கோட்பாட்டிலும் நாம் அனைவரும் ஒன்றுபடுகிறோம்.

அடுத்து வருவதுதான் மிகவும் வேறுபட்டது, மகோன்னதமானது, ஆன்மீக உலகில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட அனைத்திலும் மிகவும் அற்புதமான கருத்து. உங்களுள் மேலை நாட்டுச் சிந்தனைகளைப் படித்துள்ளவர்கள், மேலை மற்றும் கீழைச் சிந்தனைகளை ஒரே வீச்சில் வேறுபடுத்திக் காட்டுகின்ற ஒரு முக்கிய வேறுபாட்டைக் கண்டிருப்பீர்கள். நாம் சாக்தர்களோ, சௌரர்களோ, வைணவர்களோ, அல்லது பௌத்தர்களோ, சமணர்களோ, யாராக இருந்தாலும், ஆன்மா இயல்பாகவே தூய்மையானது, முழுமையானது, சக்தியிலும் ஆனந்தத்திலும் எல்லையற்றது என்ற கருத்தை இந்தியாவில் உள்ள அனைவருமே ஏற்றுக்கொள்கிறோம். துவைதிகளின் கருத்துப்படி, ஆன்மாவின் இந்த இயல்பான பேரின்பம் முற்பிறவிகளின் தீவினையால் சுருங்கிப் போகிறது; இறையருளால் மீண்டும் விரிவுற்று நிறைநிலையை அடைகிறது. அத்வைதிகளின் கருத்துப்படி, ஆன்மா சுருங்குகிறது என்பதுகூட ஒருவகையில் தவறுதான்; மாயை என்னும் திரைதான் ஆன்மா தன் ஆற்றல்களை இழந்து விட்டதாக நம்மை நினைக்கச் செய்கிறது. ஆனால் அங்கே எல்லா ஆற்றலும் முழுமையாக வெளிப்பட்டே நிற்கிறது.

வேறுபாடுகள் இப்படியிருக்க நாம் மையக் கருத்திற்கு வருகிறோம். மேலை மற்றும் கீழை நாட்டுச் சிந்தனைகள் ஒருங்கிணைய முடியாத ஒரு வேறுபாட்டைக் காண்கிறோம்.

சிறந்தவை மற்றும் நல்லவை அனைத்தையும் கீழை நாட்டுச் சிந்தனை அகத்தில் தேடுகிறது. நாம் வழிபடும்போது கண்களை மூடி நமக்குள்தான் கடவுளைக் காண முயல்கிறோம். மேலை நாட்டினர் தங்கள் கடவுளை வெளியில் தேடுகிறார்கள். மேலை நாட்டினரின் மத நூல்கள் புறத்திலிருந்து அவர்கள் பெற்ற கருத்துக்களால் உருவாக்கப் பட்டவை. நமது நூல்களோ உள்ளிருந்து எழுந்த கருத்துக்களால் உருவானவை; மூச்சுக் காற்றைப் போல் இறைவனின் மூச்சாக[1] வெளிப்பட்டவை, 'மந்த்ர த்ரஷ்டா'க்களாகிய ரிஷிகளின் இதயங்களிலிருந்து எழுந்தவையே நமது நூல்கள்.

1. அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத்।
—பிருஹதாரண்யக உபநிடதம், 2. 4. 10.

என் நண்பர்களே, என் சகோதரர்களே! நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு மகத்தான கருத்து இருக்கிறது. எதிர் காலத்தில் இது நாம் மிகவும் வலியுறுத்த வேண்டிய கருத்தாகும். இந்தக் கருத்தில் நான் அவ்வளவு உறுதியான நம்பிக்கை வைத்திருக்கிறேன். இதை நீங்கள் மனத்தில் கொள்ள வேண்டும் என்று உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். தான் எதற்கும் உபயோகமற்றவன் என்று இரவு பகலாக எண்ணிக் கொண்டிருக்கும் ஒருவனிடமிருந்து எந்த நன்மையும் பிறக்காது. நான் வேதனைக்குரியவன், கிழானவன், எதற்கும் பயனற்றவன் என்று இரவும்பகலும் நினைத்துக்கொண்டிருந்தால், அவன் ஒன்றுக்கும் பிரயோஜனம் இல்லாதவனாகத்தான் ஆகிறான். 'ஆம், என்னால் எதுவும் முடியும்' என்று நீங்கள் நினைத்தால் அத்தகைய ஒருவர் ஆவீர்கள். மாறாக 'நான் ஒன்றுக்கும் உதவாதவன்' என்று கூறியவாறு அல்லும்பகலும் அதையே உருப்போட்டுக் கொண்டிருந்தால் அப்படியே எதற்கும் பயனற்றுப் போய்விடுவீர்கள். நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியதொரு பேருண்மை இது. நாம் எல்லாம் வல்ல இறைவனின் பிள்ளைகள். எல்லையற்றதான தெய்வீக நெருப்புப் பிழம்பின் பொறிகள் நாம், நாம் எப்படி பூஜ்யங்கள் ஆக முடியும்? நாமே எல்லாம். எதைச் செய்யவும் நாம் தயாராக இருக்கிறோம். நம்மால் எதையும் செய்ய முடியும். மனிதன் எல்லாவற்றையும் செய்தாக வேண்டும்.

இத்தகைய தன்னம்பிக்கை நம் முன்னோர்களின் இதயங் களில் இருந்தது. அவர்களின் இந்தத் தன்னம்பிக்கைதான் அடிப் படை சக்தியாக இருந்து அவர்களை நாகரீகத்தின் அணிவகுப் பில் மேலும்மேலும் முன்னணியில் உந்தித் தள்ளியது. இப்போது இழிவு நேர்ந்திருக்கிறது என்றால், வீழ்ச்சி நேர்ந்திருக்கிறது என்றால், நம் மக்கள் தங்களிடம் இந்தத் தன்னம்பிக்கையை என்று இழந்தார்களோ, அன்றுதான் இந்த வீழ்ச்சி ஆரம்ப மாகியது. இந்த வார்த்தைகளைக் குறித்துக் கொள்ளுங்கள்.

ஒருவன் தன்னிடம் நம்பிக்கை இழக்கிறான் என்றால் இறைவனிடமே நம்பிக்கை இழக்கிறான் என்பது பொருள். உங்களுக்கு உள்ளும் உங்கள் மூலமாகவும் செயல்படுகின்ற அந்த எல்லையற்ற சக்தியை நீங்கள் நம்புகிறீர்களா? எங்கும் நிறைந்துள்ள, அந்தர்யாமியான, ஒவ்வோர் அணுவினுள்ளும் இருக்கின்ற, சம்ஸ்கிருத வார்த்தை சுட்டுவதுபோல் 'ஓத-ப்ரோத' மாக, அதாவது, ஊடும்பாவும் போல் உங்கள் உடம்பிலும்

மனத்திலும் ஆன்மாவிலும் ஊடுருவி நிற்கின்றதான அந்தச் சக்தியில் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமானால் நீங்கள் எப்படி நம்பிக்கை இழக்க முடியும்? நான் சிறியதொரு நீர்க்குமிழியாக இருக்கலாம், நீங்கள் மலையளவு உயரமான அலையாக இருக்கலாம், அதைப் பொருட்படுத்த வேண்டாம். எனக்கும் உங்களுக்கும் பின்னணியாக அந்த எல்லையற்ற கடல்தான் இருக்கிறது; வாழ்க்கை, ஆற்றல், ஆன்மீகம்—இவற்றின் அந்த எல்லையற்ற பெருங்கடல்தான் உங்களைப்போல் எனக்கும் அடிப்படையாக இருக்கிறது. நான் ஏற்கனவே என்னை அதில் இணைத்துக் கொண்டுவிட்டேன். நான் பிறந்ததிலிருந்து வாழ்ந்து வருகிறேன் என்பதால் அந்த எல்லையற்ற வாழ்வுடனும் எல்லையற்ற நன்மையுடனும் எல்லையற்ற சக்தியுடனும் யோகத்தில் உள்ளேன், அதாவது இணைந்துள்ளேன். நீங்கள் மலையளவிற்கு உயர்ந்திருக்கலாம், ஆனால் நானும் உங்களைப் போலவே அந்த எல்லையற்றதுடன் இணைந்திருக்கிறேன்.

எனவே சகோதரர்களே, இந்த உயிரூட்டுகின்ற, மகத்தான, மேன்மையான, மகோன்னதமான உண்மைகளை உங்கள் குழந்தைகள் பிறந்ததிலிருந்தே அவர்களுக்குச் சொல்லித் தாருங்கள். அவர்களுக்கு நீங்கள் அத்வைதத்தைச் சொல்லித் தரத் தேவையில்லை; துவைதத்தையோ, நீங்கள் விரும்பும்வேறு ஏதாவது ஒரு கோட்பாட்டையோ சொல்லித் தாருங்கள். ஆனால் இந்தியா முழுவதற்கும் ஆன்மா பற்றிய இந்தக் கோட்பாடுதான் பொதுவாக இருப்பதை நாம் காண்கிறோம். ஆன்மாவின் பூரணத்துவத்தைப் பற்றிய கோட்பாட்டை எல்லா பிரிவுகளும் நம்புகின்றன.

நமது மகத்தான தத்துவ ஞானியான கபிலர் சொல்வதைப் போல், தூய்மை என்பது ஆன்மாவின் இயல்பாக இல்லாத பட்சத்தில், அது பின்னர் ஒருபோதும் தூய்மை பெற முடியாது. ஏனென்றால் இயல்பாகவே எது நிறைநிலை பெற்றதில்லையோ, அது நிறைநிலையை அடைந்தாலும் அந்த நிலை மறுபடியும் போய்விடும். தூய்மையின்மை மனிதனின் இயல்பாக இருக்குமானால் அவன் ஒருவேளை ஏதோ ஐந்து நிமிட நேரத்திற்குத் தூயவனாக இருக்க நேர்ந்தாலும், மறுபடியும் தூய்மையற்றவனாகத்தான் என்றென்றைக்கும் இருக்க நேரும். அந்த ஐந்து நிமிடத் தூய்மை கலைந்து போகின்ற, மறைந்து போகின்ற நேரம் வரவே செய்யும். அப்போது மறுபடியும் பழைய இயல்பான தூய்மையின்மை அவனை ஆட்கொண்டுவிடும்.

அதனால்தான், நன்மையே நமது இயல்பு, பூரணத்துவமே நமது இயல்பு, பூரணமின்மையோ பரிசுத்தமின்மையோ நமது இயல்பு அல்ல என்று நம் தத்துவ ஞானியர் அனைவரும் கூறியிருக்கின்றனர். அதை நாம் நினைவில்கொள்ள வேண்டும். தாம் செய்த எல்லா மகத்தான காரியங்களையும், சிந்தித்த மகத்தான சிந்தனைகளையும் நினைவு கூரும்படி தமது மரண வேளையில் கூறிய அந்த மாபெரும் ரிஷியின் அற்புத உதாரணத்தை நினைத்துப் பாருங்கள்.[1] தமது பலவீனங்களையும் குற்றங்களையும் நினைக்கும்படி அங்கே அவர் சொல்லாததை நீங்கள் கவனித்திருப்பீர்கள். குறைகள் இருக்கலாம், பலவீனங்கள் இருக்கவே செய்யும், ஆனால் எப்போதும் உங்கள் உண்மை இயல்பை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். பலவீனங்களை விலக்க, குற்றங்குறைகளைப் போக்க அது ஒன்றே சிறந்த வழி. இந்தச் சில கருத்துக்கள் இந்தியாவின் பல்வேறு பிரிவுகளுக்கும் பொதுவானவை என்றே தோன்று கிறது. எதிர்காலத்தில் ஒருவேளை இத்தகைய பொதுமேடை யில் சமய சனாதனிகளும் மிதவாதிகளும், பழைய பிரிவைச் சேர்ந்தவர்களும் புதிய பிரிவைச் சேர்ந்தவர்களும் கைகுலுக்க நேரலாம்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக நாம் நினைவில்கொள்ள வேண்டிய ஒன்று உண்டு. அதைத்தான் நாம் அடிக்கடி மறந்து விடுகிறோம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள் கிறேன். அதுதான் மதம் பற்றிய நமது கருத்து. இந்தியாவைப் பொறுத்தவரை மதம் என்றால் அது அனுபூதியையே குறிக்கும், அதற்குக் குறைந்தது எதுவும் மதம் ஆகாது. 'இந்தக் கொள் கையை நம்புங்கள், நீங்கள் பத்திரமாக இருப்பீர்கள்' என்றெல் லாம் நமக்கு இனிமேல் யாரும் உபதேசிக்க முடியாது. ஏனென் றால் நாம் அதை நம்புவதில்லை. உங்களை எப்படி நீங்கள் உருவாக்குகிறீர்களோ அப்படியே உருவாவீர்கள். இறையரு ளாலும் உங்கள் முயற்சியாலும்தான் நீங்கள் இப்போது இருக்கின்ற நிலைமையை அடைந்துள்ளீர்கள். வெறுமனே சில கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நம்புவது பெரி தாக உங்களுக்கு எந்த உதவியையும் செய்யாது. இந்தியாவின்

---

1. ஓம் க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர |
—ஓம். ஓ மனமே, செய்தவற்றை நினைப்பாய்; ஓ மனமே, செய்தவற்றை நினைப்பாய்.

—ஈசாவாஸ்ய உபநிடதம், 17.

ஆன்மீக வானிலிருந்து வருகின்ற ஒரு மகத்தான வார்த்தை அனுபூதி, அதாவது நேரடி அனுபவம். 'கடவுளை நேராகக் காண வேண்டும்' என்று திரும்பத்திரும்பக் கூறுபவை நமது சாஸ்திரங்கள் மட்டுமே. உண்மையிலேயே அவை தைரியம் மிக்க வார்த்தைகள், வீர மொழிகள்! ஆனால் ஆணிவேர்வரை உண்மையானவை. அதன் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு துடிப்பும் உண்மையானவை. மதம் என்றால் அது அனுபவிப் பதற்கு உரியது, வெறுமனே கேட்பதற்கு மட்டுமல்ல. கிளிப் பிள்ளையைப்போல் சில கோட்பாடுகளை மனப்பாடம் செய் வது மதம் ஆகாது. அறிவில் உயர்வதும் மதம் அல்ல, அறிவு என்பது வெறும் பூஜ்யம். மதம் என்பது நம் உள்ளே வர வேண்டிய ஒன்றாகும்.

எனவே இறைவன் ஒருவர் இருக்கிறார் என்பதற்கு மிகச் சிறந்த நிரூபணம் நம் அறிவு அப்படிச் சொல்கிறது என்பது அல்ல, நம் முன்னோர்களும் இன்றுள்ளவர்களும் இறைவனைக் கண்டார்கள் என்பதே ஆகும். நாம் ஆன்மாவை நம்புகிறோம்; அது உள்ளது என்பதை நிரூபிக்கத் தகுந்த காரணங்கள் இருப் பதால் மட்டுமல்ல; அதற்கும் மேலாக, இந்தியாவில் ஆயிரக் கணக்கானோர் முற்காலத்தில் அதை அனுபவித்து அறிந்திருந் தார்கள், இன்றும் பலர் அனுபவிக்கிறார்கள், எதிர்காலத்திலும் ஆயிரக்கணக்கானவர்கள் ஆன்மாவைக் கண்டு அனுபவிக்கப் போகிறார்கள் என்பதற்காகவே நாம் ஆன்மாவை நம்புகிறோம். எனவே கடவுளைக் கண்டுணரும்வரை, தன் சொந்த ஆன்மாவை அறிந்துணரும்வரை மனிதனுக்கு முக்தியே கிடையாது. அனைத் திற்கும் மேலாக இதை நாம் புரிந்து கொள்வோம். எவ்வளவு அதிகமாகப் புரிந்து கொள்கிறோமோ அந்த அளவிற்கு இந்தியா வில் பிரிவினைவாதம் குறையும். ஏனென்றால் கடவுளை உணர்ந் தவனே, கண்டவனே மதவாதியாக இருக்க முடியும். அவனது முடிச்சுக்கள் வெட்டப் படுகின்றன; அவனுக்கு மட்டுமே சந்தேகங்கள் அகல்கின்றன; நெருங்கியவற்றைவிட நெருங்கிய வராகவும், தொலைதூரத்தில் இருக்கின்ற அனைத்தையும்விட தூரத்தில் இருப்பவராகவும் உள்ள இறைவனைக் கண்டவன் மட்டுமே வினைப்பயன்களிலிருந்து விடுபட முடியும்.

வெறும் பிதற்றல்களை மத உண்மைகளாகவும், பண்டித விளக்கங்களை ஆன்மீகப் பேரனுபூதியாகவும் தவறாக நாம் நினைத்துக் கொள்கிறோம். விளைவு? பிரிவினைவாதம்; தொடர் வது, சண்டைகள். அனுபூதி என்பதுதான் ஒரே மதம் என்பதை

நாம் ஒருமுறை புரிந்து கொண்டால் போதும், நம் இதயத்திற் குள்ளேயே ஆழ்ந்து பார்க்க முற்படுவோம், மத உண்மைகளை நாம் எவ்வளவு தூரம் அனுபவித்து உணர்ந்திருக்கிறோம் என்று அறிந்துகொள்வோம். நாமே இருளில் தட்டுத்தடுமாறிக் கொண்டிருக்கிறோம். இந்த நிலைமையில் பிறரும் அதே இருளில் உழல வழிகாட்டுகிறோம் என்பது அப்போதுதான் நமக்குத் தெரியவரும். அதன்பிறகு பிரிவினைவாதம், சண்டை சச்சரவுகள் போன்றவற்றிலிருந்து விடுபடுவோம். யாராவது மதச் சண்டைகளில் ஈடுபட விரும்பினால் அவனிடம், 'நீ கடவுளைக் கண்டிருக்கிறாயா? ஆன்மாவைக் கண்டிருக்கிறாயா? இல்லையென்றால் இறைவனின் திருநாமத்தைப் பிரச்சாரம் செய்ய உனக்கு என்ன உரிமை இருக்கிறது? இருட்டிற்குள் தட்டுத்தடுமாறிக் கொண்டிருக்கும் நீ என்னையும் அதற்குள் இழுத்துச் செல்ல விரும்புகிறாய். குருடனைக் குருடன் வழிநடத்தி இருவரும் குழியில் விழ வேண்டுமா?' என்று கேளுங்கள்.

எனவே பிறரது குற்றங்களைக் கண்டுபிடிக்கச் செல்வதற்கு முன்னால் சற்று நின்று நிதானமாகச் சிந்தனை செய்யுங்கள். தங்கள் இதயங்களிலேயே உண்மையைக் காண்பதற்காக அவர்கள் போராடுகிறார்கள் என்கின்ற பட்சத்தில், அனுபூதிக் கான அவரவர் பாதையைப் பின்பற்றட்டும். பரந்த, தெளிவான உண்மையைக் காணும்போது, இந்தியாவின் ரிஷிகள் ஒவ்வொருவரும், அனுபூதி பெற்ற ஒவ்வொருவரும் அனுபவித்த அந்த அற்புதப் பேரின்பத்தை இவர்களும் உணர்வார்கள். அந்த இதயத்திலிருந்து அன்பான வார்த்தைகள் மட்டுமே வெளிவரும். ஏனென்றால் அன்பின் சாரமான ஒன்றால் அது தொடப்பட்டிருக்கிறது! அதன்பிறகு, அதன்பிறகு மட்டுமே எல்லா பிரிவுச்சண்டைகளும் தீரும். அப்போதுதான் இந்து என்ற சொல்லையே, இந்து என்ற சொல்லால் அழைக்கப்படு கின்ற ஒவ்வொருவரையுமே இதயத்தில் ஏற்றுக்கொண்டு, ஆரத் தழுவி அன்பு பாராட்ட முடியும். நான் சொல்வதைக் குறித்துக் கொள்ளுங்கள்—

எப்போது இந்து என்ற சொல்லே உங்களுள் வலிமை யின் மின்னதிர்வுகளைப் பரப்புமோ அப்போது, அப்போது மட்டுமே நீங்கள் இந்துக்கள் ஆவீர்கள்.

எந்த நாட்டைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், நமது மொழியில் பேசினாலும் வேறெந்த மொழியில் பேசினாலும்,

இந்து என்ற பெயரைத் தாங்கியவர்களாக இருந்தால், அவர்கள் ஒவ்வொருவரும் உங்களுக்கு மிக நெருங்கிய வர்களாக மிகுந்த அன்பிற்கு உரியவர்களாக என்று தோன்றுகிறதோ, அன்று, அன்றுதான் நீங்கள் இந்துக்கள் ஆவீர்கள்.

இந்து என்ற பெயரைத் தாங்கிய யார் துன்பப்பட்டாலும், அந்தத் துன்பம் உங்கள் இதயத்தில் நுழைந்து, உங்கள் சொந்த மகனின் துன்பத்தைப்போல் உங்களைத் துடிக்கச் செய்யுமா னால், அப்போது, அப்போது மட்டுமே நீங்கள் இந்துக்கள் ஆவீர்கள்.

எனது சொற்பொழிவின் ஆரம்பத்தில் நான் குறிப்பிட்டது போன்ற மகத்தான உதாரணமாகிய குரு கோவிந்த சிம்மனைப் போல் என்று அவர்களுக்காக எல்லாவற்றையும் சகிக்கத் தயாராவீர்களோ, அன்றுதான் நீங்கள் இந்துக்கள் ஆவீர்கள். அவர் ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்துப் போரிட்டார், இந்து மதத்திற்காக ரத்தம் சிந்தினார், போர்க்களத்தில் தம் குழந்தை களே மடிவதையும் கண்டார். அந்தோ! யாருக்காகத் தம் ரத்தத்தையும் தமது உற்றார் உறவினரின் ரத்தத்தையும் சிந்தினாரோ அவர்களாலேயே கைவிடப்பட்டார். அந்த அடியுண்ட சிங்கம் இறுதியில் போர்க்களத்திலிருந்து விலகி மரணத்தை அமைதியாக எதிர்கொள்வதற்காகத் தென்னாடு சென்றார். ஆ, அந்த நிலையிலும், தம்மைக் கைவிட்ட நன்றி யில்லாத மக்களுக்கு எதிராக ஒரு கடுஞ்சொல்கூட அவரது வாயிலிருந்து வெளிப்படவில்லை. ஆகா, என்னவோர் உதாரணம் அந்த மகா குருவின் வாழ்க்கை!

என் வார்த்தைகளைக் குறித்துக் கொள்ளுங்கள்— நீங்கள் உங்கள் நாட்டிற்கு நன்மை செய்ய விரும்பினால், நீங்கள் ஒவ் வொருவரும் ஒரு குரு கோவிந்த சிங் ஆக வேண்டும். உங்கள் மக்களிடம் நீங்கள் ஆயிரம் குறைகளைக் காணலாம். ஆனால் அவர்களுடையது இந்து ரத்தம் என்பதை நினைவில் கொள் ளுங்கள். உங்களைத் துன்புறுத்துவதற்கான எல்லாவற்றையும் அவர்கள் செய்தாலும் நீங்கள் வழிபட வேண்டிய முதல் தெய்வங்கள் அவர்களே. அவர்கள் ஒவ்வொருவரும் உங்கள்மீது சாபங்களைப் பொழிந்தாலும், நீங்கள் அவர்களுக்கு அன்பு வார்த்தைகளையே அளியுங்கள். அவர்கள் உங்களை வெளியே துரத்தினால் அந்தச் சீரிய சிங்கமான கோவிந்தசிம்மனைப் போல் அமைதியாக மரணத்தை எதிர்கொள்வதற்காகச்

சென்றுவிடுங்கள். அத்தகையவன்தான் இந்து என்னும் பெயருக்குத் தகுதியானவன். அத்தகையதொரு லட்சியம் எப் போதும் நம் கண்முன் இருக்க வேண்டும். சண்டைசச்சரவுகளை எல்லாம் புதைத்துவிடுவோம். இந்த ஆழ்ந்த அன்புணர்வை எங்கும் பரப்புவோம்!

இந்தியாவின் முன்னேற்றத்தைப்பற்றி யாரும் எது வேண்டு மானாலும் பேசட்டும். ஆனால் வேலை செய்து கொண்டிருப் பவன் என்ற முறையில், அல்லது குறைந்தபட்சம் வேலை செய்ய முயல்பவன் என்ற வகையில் நான் சொல்ல விரும்பு வது இதுதான்: நீங்கள் ஆன்மீகத்தைக் கைக்கொள்ளும் வரை இந்தியாவிற்கு முன்னேற்றம் கிடையாது.

அது மட்டுமல்ல, உலகின் நன்மையே அதைத்தான் சார்ந்துள்ளது. ஏனென்றால் மேலைநாட்டு நாகரீகம் அஸ்திவாரம்வரை ஆட்டம் கண்டுவிட்டது என்பதை நான் வெளிப்படையாக உங்களிடம் சொல்லியே ஆக வேண்டும். உலகாயதம் என்ற வெறும் மணல் அஸ்திவாரத்தின்மீது எழுப்பப்பட்ட கட்டிடங்கள் எவ்வளவு பெரியதாக இருந்தா லும் ஒருநாள் சரிந்தே தீரும், என்றாவது தரைமட்டமாகியே தீரும். உலக வரலாறு இதற்குச் சாட்சியாக உள்ளது. உலகாயதப் பெருமையைத் தன் அடிப்படையாகக் கொண்ட எத்தனையோ நாடுகள் எழுந்தன, மனிதன் வெறும் ஜடப்பொருளே என்று முழங்கின. ஆம், மரணம் அடைவது மேலைநாட்டு மொழி யில், உயிரை விட்டுவிடுதல் என்று கூறப்படுகிறது; நமது மொழியில் உடம்பை விட்டுவிடுதல் என்றே நாம் கூறு கிறோம். மேலைநாட்டைப் பொறுத்தவரை மனிதன் என்பவன் உடம்பு, அவனுக்கு ஆன்மா உள்ளது. நமக்கோ மனிதன் என்பவன் ஆன்மா, அவனுக்கு உடம்பு உள்ளது. இங்குதான் பெரிய வித்தியாசம். எனவே உலக போகம் முதலான மணல் அடித்தளத்தின் மீது கட்டப்பட்ட அத்தகைய நாகரீகங்கள் எல்லாமே குறுகிய காலம் மட்டுமே வாழ்ந்து, ஒன்றன்பின் ஒன்றாக உலகிலிருந்து மறைந்துவிட்டன.

ஆனால் இந்திய நாகரீகமும், அதன் காலடியில் அமர்ந்து கற்கவும் கவனிக்கவும் உடன்பட்ட நாடுகளான ஜப்பான், சீனா முதலியவற்றின் நாகரீகங்களும் இன்றும் வாழ்ந்துவருகின்றன; மேலும் வளர்வதற்கான அறிகுறிகளும் அவைகளிடம் தென் படுகின்றன. ஆயிரம் முறை அழிக்கப்பட்டாலும் மறுபடியும் மேலும் பெருமையோடு வெளிவரத் தயாராக இருக்கின்ற

ஃபினிக்ஸ்[1] பறவையைப்போல் உள்ளது அவைகளின் வாழ்க்கை. ஆனால் உலகாயத நாகரீகம் ஒருமுறை வீழ்ந்துபட்டால் மீண்டும் அதனால் எழ முடியாது. ஒருமுறை அந்தக் கட்டிடம் தரைமட்டமாக்கப் பட்டுவிட்டால் என்றென்றைக்குமாக நொறுங்கி சுக்கல்சுக்கலாகி விடுகிறது. எனவே பொறுமையுடன் காத்திருங்கள், எதிர்காலம் நம்முடையதாகத்தான் ஆகப் போகிறது.

அவசரப்படாதீர்கள். மற்றவர்களைக் காப்பியடிக்காதீர்கள். நாம் நினைவில் கொள்ள வேண்டிய மற்றொரு முக்கியமான பாடம் இது. காப்பியடிப்பது ஒருபோதும் நாகரீகம் ஆகாது. நான் அரசனுடைய உடை தரிக்கலாம், ஆனால் அது என்னை அரசனாக்கிவிடுமா? சிங்கத் தோல் போர்த்தாலும் கழுதை எந்தக் காலத்திலும் சிங்கம் ஆக முடியாது. காப்பியடித்தல், கோழைத்தனமான இந்தப் போலித்தனம் ஒருபோதும் முன்னேற்றத்தைத் தராது. இது மனிதனின் கேவலமான வீழ்ச்சியின் தெளிவான அடையாளம். ஆம், ஒருவன் தன்னையே வெறுக்கத் தொடங்கி விட்டானானால் அவனுக்கு இறுதிமணி அடித்துவிட்டது என்று அர்த்தம்.

ஒருவன் தன் முன்னோர்களைக் குறித்து வெட்கப்பட ஆரம்பித்து விட்டானானால் அவனுக்கு முடிவுக் காலம் வந்து விட்டது.

இதோ நான் இருக்கிறேன், இந்து இனத்தின் மிகச் சாதாரணமானவன் நான். என்றாலும் என் இனத்தைப் பற்றியும் என் முன்னோர்களைப் பற்றியும் பெருமைப்படுகிறேன். என்னை ஓர் இந்து என்று அழைத்துக்கொள்வதில் நான் பெருமைப்படுகிறேன், உங்கள் தகுதியில்லாத வேலைக்காரர்களுள் ஒருவன் என்பதில் பெருமைப்படுகிறேன், உங்கள் நாட்டினன் என்பதில் பெருமைப்படுகிறேன். நீங்கள் மகான்களின் வழி வந்தவர்கள், இந்த உலகம் இதுவரை கண்டவர்களுள் மாபெரும் ரிஷிகளின் வழித்தோன்றல்கள். எனவே உங்களிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். உங்கள் முன்னோர்களைக் குறித்து அவமானப்படாதீர்கள், அதற்குப் பதிலாகப் பெருமைப் படுங்கள். ஒருபோதும்

---

1. ஃபினிக்ஸ் (Phoenix) என்பது அரேபியக் கதைகளில் வரும் மிகவும் அழகிய பறவை. ஐநூறோ அறுநூறோ வருடங்கள் வாழ்ந்த பின்னர் இது தன்னைத் தானே எரித்துக் கொண்டு, அந்தச் சாம்பலிலிருந்து புத்திளமையுடன் மீண்டும் வெளிவந்து பழையதுபோல் நூற்றுக்கணக்கான வருடங்கள் வாழ்வதாகச் சொல்லப்படுகிறது.

போலித்தனமாக நடிக்காதீர்கள், காப்பியடிக்காதீர்கள்! நீங்கள் பிறருடைய கையசைவிற்குக் கட்டுப்பட்டு இருக்கும்வரை உங்கள் சுதந்திரத்தை இழக்கிறீர்கள். ஆன்மீக விஷயத்தில் கூட மற்றவர்களின் கட்டளைக்குப் பணிந்து நீங்கள் செய்யும்வரை சிறிதுசிறிதாக உங்கள் சிந்தனைத்திறனை இழந்து விடுகிறீர்கள். உங்கள் உள்ளிருப்பதை உங்கள் சொந்த உழைப்பின்மூலம் வெளியே கொண்டு வாருங்கள். உங்களை எப்படி உருவாக்க முடியுமோ, அப்படி உருவாக்கிக் கொள்ளுங்கள். ஆனால் பிறரைக் காப்பியடிக்காதீர்கள். என்றாலும் மற்றவர்களிடமிருந்து நல்லவற்றையெல்லாம் எடுத்துக் கொள்ளுங்கள். பிறரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். விதையை நிலத்தில் போடுகிறீர்கள்; அது வளர ஏராளமான மண்ணையும் காற்றையும் தண்ணீரையும் அளிக்கிறீர்கள். விதை கன்றாகவும் பிறகு பெரிய மரமாகவும் வளர்கிறது. அந்த விதை மண்ணாக மாறியதா, காற்றாக மாறியதா, இல்லை, நீராகத்தான் மாறியதா? அது தனக்கு அளிக்கப்பட்ட எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு, தன் இயல்பிற்கு ஏற்றவாறு செடியாகியது, பெரிய மரமாக வளர்ந்தது. உங்கள் நிலையும் அப்படி இருக்கட்டும்.

நாம் பிறரிடமிருந்து கற்க வேண்டியவை உண்மையிலேயே ஏராளம் உள்ளன. பிறரிடமிருந்து கற்றுக்கொள்ள மறுப்பவன் செத்தவனே. நம் மனு (2. 238) கூறுகிறார்: 'ஆததீத பராம் வித்யாம் ப்ரயத்னாதவராதபி। அந்த்யாதபி பரம் தர்மம் ஸ்த்ரீ ரத்னம் துஷ்குலாதபி—உத்தமப் பெண் கீழ்ஜாதியில் பிறந்திருந்தாலும் அவளை மனைவியாக ஏற்றுக்கொள். ஞானி தாழ்ந்த குலத்தில் பிறந்தவராக இருந்தாலும் அவருக்குச் சேவை செய்து உயர் ஞானத்தைப் பெறு. சண்டாளன் ஆனாலும் அவருக்குப் பணிவிடைகள் செய்து முக்திக்கு வழி தேடு.' நல்லவற்றை மற்றவர்களிடமிருந்தும் கற்றுக் கொள்ளுங்கள். ஆனால் அவைகளை உங்கள் இயல்பிற்கு ஏற்பக் கிரகித்துக்கொள்ளுங்கள், மற்றவர்களாக மாறாதீர்கள். இந்திய வாழ்க்கையிலிருந்து வெளியே இழுக்கப்பட்டவர்களாகிவிடாதீர்கள். இந்தியர்கள் மற்ற இனத்தவரைப்போல் உடையுடுத்தி, உண்டு வாழ்ந்தால் இந்தியாவிற்கு நன்மை விளையும் என்று ஒருகணம்கூட நினைக்காதீர்கள்.

சில ஆண்டு பழக்கத்தையே விடுவது எவ்வளவு கடினம் என்பது உங்களுக்குத் தெரியும்; இந்தச் சிறப்பான தேசிய வாழ்க்கை எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக உங்கள் ரத்தத்தில்

ஓடிக்கொண்டிருக்கிறது என்பது கடவுளுக்கே தெரியும், எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக ஒரு குறிப்பிட்ட வழியில் ஓடிக்கொண்டிருக்கிறதோ கடவுளே அறிவார். கடலை நெருங்கி விட்ட அந்த மாநதி திரும்பி இமயத்தின் பனி மூடிய சிகரத்தை அடையும் என்றா நீங்கள் சொல்கிறீர்கள்? அது முடியாதது! அதற்கு முயன்றால் அழிவே பலனாக இருக்கும். ஆகையால் நாட்டின் தேசிய நீரோட்டத்திற்கு வழிவிடுங்கள். அந்த மாநதியின் போக்கிற்கு இடையூறாக உள்ள தடைகளை அகற்றுங்கள். பாதையைச் செப்பனிடுங்கள், குண்டுகுழிகளைச் சரி செய்யுங்கள். அது தன் சொந்தப் போக்கிலேயே பொங்கிப் பாயும், முன்னேற்றப் பாதையில் மேன்மையுடன் நாடு செல்லும்.

இந்தியாவின் ஆன்மீகப் பணிகளுக்காக எனது சில யோசனைகள் இவை. இன்னும் எத்தனையோ முக்கியமான பிரச்சினைகள் உள்ளன. நேரம் இல்லாத காரணத்தால் அவற்றை இன்றிரவு உங்களிடம் சொல்ல இயலவில்லை. உதாரணமாக ஜாதிப் பிரச்சினை. இந்தப் பிரச்சினை, அதன் நன்மை, தீமை எல்லாவற்றையும் என் வாழ்நாள் முழுவதும் ஆராய்ந்து வருகிறேன். ஏறக்குறைய இந்தியாவின் எல்லா பகுதிகளிலும் இதைக் குறித்து ஆராய்ந்திருக்கிறேன். இந்த நாட்டில் உள்ள ஏறக்குறைய எல்லா ஜாதியினருடனும் கலந்து பழகியிருக்கிறேன். ஆனால் அதன் முக்கியத்துவத்தை அறிய எண்ணும்போது என் மனம் திகைப்பில் ஆழ்ந்துவிடுகிறது. அதிகமாக ஆராயும் அளவு பிரமிப்பு அதிகரிக்கிறது. என்றாலும் கடைசியாக என் முன் மங்கலான சிறிய ஒளி தென்படுகிறது. அதன் முக்கியத்துவம் இப்போது தெரியத் தொடங்கியுள்ளது.

இனி உண்பது, அருந்துவது குறித்த பெரிய பிரச்சினை உள்ளது. உண்மையிலே அது ஒரு பெரிய பிரச்சினைதான். ஆனால் நாம் பொதுவாக நினைப்பதுபோல் பயனற்ற பிரச்சினை அல்ல. நான் கண்டுள்ள முடிவு இது: உண்பது, பருகுவது குறித்து இப்போது நாம் காட்டுகின்ற கண்டிப்பு மிகவும் வினோதமானது. இந்தக் கண்டிப்பு, சாஸ்திரங்களுக்கு எதிரானது, அதாவது உண்கின்ற உணவு மற்றும் நீரின் உண்மையான தூய்மையை அசட்டை செய்ததால்தான் நாம் அவல நிலையை அடைந்துள்ளோம், அதன் உண்மையான சாரத்தை இழந்துவிட்டோம்.

மேலும் சில பிரச்சினைகள், அவைகளுக்கு எப்படித் தீர்வு காண்பது, இந்த லட்சியங்களை எப்படிச் செயல்முறைப்

படுத்துவது என்பது பற்றியெல்லாம் உங்களிடம் பேச வேண்டு மென்ற ஆவல் எனக்கு உண்டு. ஆனால் துரதிர்ஷ்டவசமாக, இந்தக் கூட்டம் ஆரம்பிக்கும் போதே மிகவும் காலதாமதமாகி விட்டது. இனியும் உங்களைக் காக்கவைக்க நான் விரும்ப வில்லை. எனவே ஜாதி மற்றும் பிற விஷயங்களில் என் கருத்தை மற்றொரு சமயம் கூறுகிறேன்.

இன்னொரு வார்த்தை மட்டும் கூறி எனது இந்த ஆன்மீகக் கருத்துக்களை நிறைவு செய்கிறேன். நெடுங்காலமாக இந்தியா வில் மதம் தேக்க நிலையில் உள்ளது. அதைச் செயல்நிலைக்குக் கொண்டு வருவதே நாம் செய்ய வேண்டியது. ஒவ்வொருவரின் அன்றாட வாழ்க்கையிலும் அதனைக் கொண்டு வர வேண்டும் என்று நான் விரும்புகிறேன். கடந்த காலத்தில்போல், மதம் என்பது மன்னர்களின் மாளிகையிலும் அதுபோலவே நாட்டின் ஏழை விவசாயியின் குடிசையிலும் நுழைய வேண்டும். அனை வருடையவும் பொதுச் சொத்தான, இனத்தின் பிறப்புரிமையான மதம் என்பது ஒவ்வொருவரின் வாசற்படிக்கும் இலவசமாகக் கொண்டு செல்லப்பட வேண்டும். இந்தியாவில் மதம் என்பது, கடவுள் தந்தக் காற்றைப்போல் சுதந்திரமானதாகவும் எளிதில் கிடைக்கக் கூடியதாகவும் ஆக்கப்பட வேண்டும். இந்தியாவில் நாம் தொடங்க வேண்டியது இத்தகைய வேலையையே. சிறிய சிறிய மதப் பிரிவுகளை ஏற்படுத்தியும், அவற்றுக்கிடையே உள்ள வேற்றுமைகளைப்பற்றிச் சண்டையிட்டும் செய்ய வேண் டியது அல்ல இது. எல்லோரும் ஏற்றுக்கொள்வதைப் பிரச்சாரம் செய்வோம், வேற்றுமைகள் தங்களைத் தாங்களே சீர்செய்து கொள்ளும்படி விட்டுவிடுவோம். நான் இந்திய மக்களிடம் திரும்பத்திரும்பச் சொல்லி வந்துள்ளதுபோல், பல நூறு ஆண்டுகளாக இருள்மூடிக் கிடக்கிறது ஓர் அறை, அந்த அறை யின் அருகே சென்று, 'ஓ இது இருட்டாக இருக்கிறது, இருட் டாக இருக்கிறது' என்று அழுதால் இருள் விலகுமா என்ன! ஒளியை உள்ளே கொண்டு வாருங்கள், அந்தக் கணமே இருள் மறைந்துவிடும். மனிதனைச் சீர்திருத்துவதன் ரகசியம் இதுதான்.

மக்களுக்கு உயர்ந்தவற்றைப்பற்றிச் சொல்லுங்கள். முதலில் மனிதனை நம்புங்கள். மனிதன் இழிந்தவன், தாழ்ந் தவன் என்ற நம்பிக்கையோடு ஏன் தொடங்க வேண்டும்? மிக மோசமான மனிதனிலும் என் நம்பிக்கை ஒருபோதும் தளர்ந்ததில்லை. எங்கெல்லாம் மனிதனிடம் நான் நம்பிக்கை வைத்தேனோ, அங்கெல்லாம் ஆரம்ப நிலைமை நன்றாக

இல்லை என்றாலும் காலப்போக்கில் அது வெற்றி பெறவே செய்தது.

ஒருவன் நன்கு படித்தவனாகத் தோன்றினாலும், படிக்காத வனாக இருந்தாலும் அவனிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். தேவதூதனாகத் தோன்றினாலும், சாத்தானாகவே தோன்றி னாலும், அவனிடம் நம்பிக்கை வையுங்கள். முதலில் மனிதனிடம் நம்பிக்கை வையுங்கள். அவனிடம் குற்றங்குறைகள் இருந்தால், அவன் தவறுகள் செய்தால், வளர்ச்சியுறாத மோசமான கொள்கைகளை அவன் பின்பற்றினால், அதற்குக் காரணம் அவனது இயல்பே தாழ்ந்தது என்பதல்ல, உயர்ந்த லட்சியங்களை அவன் அறியாததே உண்மையான காரணம் என்பதை நம்புங்கள். ஒருவன் தவறை நோக்கிப் போகிறான் என்றால், அதன் காரணம் சரியானது அவனுக்குக் கிடைக்க வில்லை என்பதே. எனவே தவறிலிருந்து ஒருவனைத் திருத்த வேண்டும் என்றால் அவனுக்கு உண்மையைக் காட்டுங்கள். இதைச் செய்யுங்கள். அவன் சீர்தூக்கிப் பார்க்கட்டும். அவனுக்கு உண்மையைக் கொடுங்கள், அதோடு உங்கள் வேலை முடிந்து விட்டது. அவன் தன் மனத்துள், ஏற்கனவே அங்கே இருப் பதுடன் இதை ஒப்பிட்டுப் பார்க்கட்டும். என் வார்த்தை களைக் குறித்துக் கொள்ளுங்கள்—நீங்கள் உண்மையாகவே உண்மையைக் கொடுத்திருந்தால் பொய் மறைந்தே தீர வேண்டும். வெளிச்சம் இருளைத் துரத்தியே தீரும். உண்மை நன்மையை வெளியே கொண்டுவந்தே தீரும்.

ஆன்மீக வழியில் நாட்டைச் சீர்திருத்த வேண்டுமானால் இதுதான் வழி; சண்டையிடுவது, அல்ல; மக்கள் செய்வதெல் லாம் தவறு என்று அவர்களிடம் சொல்வதும் அல்ல. நல்லதை அவர்கள் முன் வையுங்கள், எவ்வளவு ஆர்வத்துடன் அவர்கள் அதை ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதைக் கவனியுங்கள்; மனிதனில் என்றென்றும் உறைகின்ற, ஒருபோதும் அழியாத தெய்வீகம் விழித்தெழுந்து நல்லதையும் மகத்தானதையும் ஏற்றுக் கொள்ளத் தனது கைகளை நீட்டுவதைக் காண்பீர்கள்.

படைப்பவராகவும், காப்பவராகவும், நம் இனத்தின் காப் பாளராகவும், நம் முன்னோர்களின் கடவுளாகவும், விஷ்ணு, சிவன், சக்தி, கணபதி முதலிய பல பெயர்களால் அழைக்கப் படுபவராகவும், சகுணமாகவோ நிர்க்குணமாகவோ வழிபடப் படுபவரும், உருவம் உடையவராகவோ உருவம் அற்ற வராகவோ வழிபடப்படுபவரும் நம்முடைய முன்னோர்கள்

யாரை அறிந்து, 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி— உள்ளது ஒருவரே; மகான்கள் அவரைப் பல்வேறான பெயர்களில் அழைக்கிறார்கள்' என்று யாரைக் குறிப்பிட்டார்களோ, அந்த இறைவன் மகத்தான அன்போடு நம்முள் புகுவாராக. தமது ஆசிகளை நம்மீது பொழிவாராக. நாம் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளும்படிச் செய்வாராக. உண்மையான அன்போடு, நாம் ஒருவருக்கு ஒருவர் சேவை செய்யுமாறு செய்வாராக. உண்மையின் மீதுள்ள ஆழ்ந்த அன்போடு, நம் சொந்தப் புகழில் சிறிதுகூட ஆர்வம் இல்லாமல், நம் சொந்த மரியாதையைப் பெரிதாகக் கருதாமல், சொந்த நன்மையை நினைக்காமல் இந்தியாவின் ஆன்மீக மறுமலர்ச்சியான இந்த மகத்தான பணியைச் செய்வதில் நம்மை ஈடுபடுத்துவாராக! ❑

## 2. பக்தி

நவம்பர் 9-ஆம் நாள் மாலை 6 மணிக்கு 'க்ரேட் பெங்கால் சர்க்கஸ்' வளாகத்தில் நடைபெற்ற சொற்பொழிவு இது. 'டிரிபியூன்' (Tribune) பத்திரிகையில் வெளிவந்த அதன் சுருக்கம் இங்கே தரப்படுகிறது.

எங்கோ வெகுதூரத்தில் ஓர் ஒலி கேட்கிறது, தூரத்து எதிரொலிபோல் அது உள்ளது, உபநிடதங்கள் என்னும் பிரவாகத்தினுடைய முழக்கத்தின் ஊடே அது கேட்கிறது, சிலவேளைகளில் எழுச்சி மிகுந்து கேட்கிறது, மற்றொரு நேரம் எழுச்சி குன்றிக் கேட்கிறது. வேதாந்த இலக்கியம் முழுவதும் அதன் குரலைக் கேட்கிறோம். அது தெளிந்த குரல்தான்; ஆயினும் மெல்லிய குரல். நுண்மையின் சாரத்தையும் சித்திரத்தையும் நம் முன் வைப்பதே உபநிடதங்களின் முக்கிய மான கடமை என்று தோன்றுகிறது. ஆனால் இந்த நுண்மைக்குப் பின்னால் அங்கங்கே சில கவிதை நயமான காட்சிகளையும் சந்திக்கிறோம்— 'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி:?— அங்கே சூரியன் ஒளிர்வதில்லை, சந்திரன் ஒளிர்வதில்லை, நட்சத்திரங்கள் ஒளிர்வதில்லை, அப்படி இருக்கும்போது இந்த அக்கினியைப்பற்றி என்ன சொல்வது!' இதயத்தை வருடும் அற்புதமான இந்தக் கவிதை வரிகளைக் கேட்கும்போது நாம் ஏதோ புலனுலகிற்கு அப்பால், அறிவுலகிற்கும் அப்பால், இன்னதென்று அறிய முடியாத, அதேவேளையில் எப்போதும் நம்முடனே இருந்துவருகின்ற ஓர் உலகத்திற்குக் கொண்டு செல்லப்பட்டதுபோல் உணர்கிறோம்.

இந்த நுண்மைக்குப் பின்னால் மற்றொரு கருத்து இதன் நிழலைப்போல் தொடர்ந்து வருகிறது. மனித குலத்திற்கு இன்றும் ஏற்புடையதான லட்சியம் அது, அன்றாட வாழ்க்கைக் குப் பயன் தர வல்லது அது, மனித வாழ்வின் ஒவ்வோர் அம்சத்திலும் நுழைய வேண்டியது அது. இது பிற்காலத்தில் விரிவுபடுத்தப்பட்டு, புராணங்களில் முழுமையான, உறுதி யான மொழியில் கூறப்படுகிறது. இதுவே பக்தி-லட்சியம்,

பக்திக் கருத்துக்கள் ஏற்கனவே அங்கு உள்ளன. சம்ஹிதைகளில் முளைகளாக உள்ளன, உபநிடதங்களில் சற்று வளர்ச்சி பெற்றுள்ளன, ஆனால் முழுமையாக வளர்ந்துள்ளது புராணங்களில்தான்.

எனவே பக்தியைப் புரிந்துகொள்வதற்கு நாம் நமது புராணங்களை அறிய வேண்டும். அவை ஆதாரபூர்வமானவையா இல்லையா என்பதைப்பற்றிச் சமீப காலங்களில் பெரிய விவாதங்கள் நடைபெற்று வருகின்றன. பொருள் தெளிவற்ற பல பகுதிகள் விமர்சிக்கப் படுகின்றன. பல இடங்களில் அதன் கருத்துக்கள் இன்றைய விஞ்ஞான ஒளிக்கு முன்னால் நிற்க முடியாதவை என்றெல்லாம் காட்டப்படுகின்றன. இந்த விவாதங்களும் புராணக் கருத்துக்களின் விஞ்ஞானபூர்வமான அத்தாட்சியும் ஒருபுறம் இருக்கட்டும். அவற்றின் புவியியல் மற்றும் வானவியல் கருத்துக்கள் உண்மையா இல்லையா என்ற இந்த விஷயங்களும் ஒரு புறம் இருக்கட்டும். ஆனால் இந்தப் புராணங்கள் ஒவ்வொன்றிலும் தெளிவாக நிச்சயமாக விவரிக்கப்பட்டுள்ளது பக்திக் கோட்பாடு. மகான்கள் மற்றும் மன்னர்களின் வாழ்வில் இது மீண்டும்மீண்டும் சித்தரிக்கப்படுவதைக் காணலாம்; மீண்டும்மீண்டும் வலியுறுத்தப்படுவதைக் காணலாம்.

இந்த அழகிய உன்னதமான பக்தி லட்சியத்திற்கு விளக்கங்களாக இருப்பதே புராணங்களின் கடமையோ என்று தோன்றுகிறது. நான் ஏற்கனவே சொல்லியதுபோல் இது சாதாரண மனிதனுக்கு மிகவும் நெருங்கிய லட்சியம் ஆகும். வேதாந்தப் பேரொளியின் முழுப் பிரகாசத்தின் மகிமையை அறியவும் ஆமோதிக்கவும் வல்லவர்கள் சிலரே, அதிலேயே வாழவும் செயல்படவும் வல்லவர்கள் இன்னும் சிலரே. ஏனென்றால் ஒரு பூரண வேதாந்தி வைக்க வேண்டிய முதல் அடி அபீ: அச்சமின்மை. ஒருவன் வேதாந்தி ஆவதற்குத் துணியுமுன் அவனிடமிருந்து பலவீனம் போய்விட வேண்டும். இது எவ்வளவு கடினம் என்பது நமக்குத் தெரியும். உலகத்தோடு எல்லா தொடர்புகளையும் விட்டு, தங்களைக் கோழைகள் ஆக்கவல்ல மிகக் குறைவான பந்தங்களையே கொண்டிருப்பவர்கள்கூட, சில சந்தர்ப்பங்களில் தங்கள் மன ஆழங்களில் எந்த அளவு பலவீனத்தை உணர்கிறார்கள், சிலவேளைகளில் எவ்வளவு மிருதுவாகி விடுகிறார்கள், எவ்வளவு தளர்ந்து போகிறார்கள்! இந்த நிலையில், அதிகமான பந்தங்களுடன்,

தங்களுக்கு உள்ளும்புறமும் உள்ள ஆயிரக்கணக்கான பொருட்களுக்கு அடிமைகளாக இருக்கின்ற கட்டாயத்திற்கு உள்ளான, வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் அடிமைத்தனத்தால் இழுத்துச் செல்லப்படுபவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அத்தகையவர்களுக்கு, புராணங்கள் பக்தி என்ற மகோன்னதமான செய்தியுடன் வருகின்றன. மென்மையும் கவிதைகளும் அவர்களுக்காக விரித்து வைக்கப்பட்டுள்ளன. துருவன், பிரகலாதன் மற்றும் ஆயிரக்கணக்கான மகான்களின் அற்புதமான கதைகளும் சொல்லப்படுகின்றன. இந்தக் கதைகள் எல்லாம் பக்தி லட்சியத்தை நடைமுறைப் படுத்துவதற்காகவே.

புராணங்கள் விஞ்ஞான பூர்வமானவை என்பதில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, ஆனால் அதில் காணப்படுகின்ற பிரகலாதன், துருவன் அல்லது மற்ற மகத்தான மகான்களின் கதைகளின் தாக்கம் இல்லாதவர்கள் இங்கே ஒருவர்கூட இருக்க மாட்டார்கள். இன்று புராணங்களுக்கு இருக்கும் செல்வாக்கை நாம் ஏற்றுக் கொள்வது மட்டும் போதாது. நலிவுற்ற பிற்கால புத்த மதம் நம்மைக் கொண்டு சேர்க்கவிருந்த ஒரு மதத்தைவிட, தெளிவான, சிறந்த, எளிய மதத்தை அன்று தந்ததற்காகவும் நாம் அவற்றிற்கு நன்றி செலுத்த வேண்டும்.

இந்த எளிய, சரளமான பக்தி என்னும் கருத்து பலமுறை எழுதி சித்தரித்துக் காட்டப்பட்டுவிட்டது. அது மட்டுமல்ல. அதை நாம் அன்றாட வாழ்வில் கைக்கொள்ளவும் வேண்டும். அவ்வாறு செய்யச்செய்ய பக்தி அன்பின் சாரமாக மலர்கிறது. தனிமனிதர் மீது கொள்கின்ற அன்பு, பொருட்கள் மீது வைக்கின்ற அன்பு—இவையெல்லாம் இருக்கின்ற வரையில் நம்மால் புராணங்களின் உபதேசங்களைக் கடந்து போக முடியாது. சார்ந்துகொள்வதற்கு யாருடைய துணையாவது வேண்டும் என்ற மனித பலவீனம் இருக்கும்வரையில் ஏதாவது ஒருவகையில் இந்தப் புராணங்கள் இருந்தேயாக வேண்டும். நீங்கள் அதன் பெயர்களை மாற்றலாம், ஏற்கனவே இருக்கும் அவைகளை உதறித் தள்ளலாம், ஆனால் உடனடியாக மற்றொரு புராணத்தை எழுதுகின்ற கட்டாயத்திற்கு உள்ளாவீர்கள். இந்தப் பழைய புராணங்கள் வேண்டாம் என்கின்ற ஒரு மகான் நம்மிடையே தோன்றினார் என்றால், அவரது சீடர்கள், அவர் மறைந்த இருபது ஆண்டுகளுக்குள் அவருடைய வாழ்க்கையையே மற்றொரு புராணமாக எழுதுவதைக்

காணலாம். மாற்றமெல்லாம் இவ்வளவுதான். புராணங்கள் மனித இயல்பிற்கு அவசியமானவை. மனித பலவீனங்கள் யாவும் நீங்கப் பெற்ற, உண்மையான பரமஹம்சருக்கான தகுதி பெற்ற, வீரமும் திரமும் மிக்க, மாயையின் கட்டுக்களை வெட்டியெறிந்த, இயற்கையின் தேவைகளைக்கூட கடந்த வெற்றி வீரர்களுக்கு, மனித தெய்வங்களுக்கு மட்டுமே புராணங்கள் தேவையில்லை.

ஆனால் சாதாரண மனிதன் சகுணக் கடவுள் இல்லாமல் வழிபட முடியாது. இயற்கையில் உள்ள ஒரு கடவுளை அவனால் வழிபட முடியவில்லை என்றால் மனைவி வடிவிலோ, குழந்தை வடிவிலோ, அல்லது தந்தை, நண்பன், குரு என்று ஏதாவது ஒரு வடிவிலோ அவன் வழிபட்டே தீர்வான். ஆண்களைவிடப் பெண்களுக்கு இந்தத் தேவை இன்னும் அதிகமாக உள்ளது.

ஒளியின் அலைகள் எல்லா இடத்திலும் இருக்கலாம், இருண்ட இடங்களிலும் அது இருக்கலாம், பூனை முதலான விலங்குகள் அதை உணர்கின்றன. நமக்கோ அந்த ஒளியலைகள் நாம் காணத்தக்க அதிர்வு நிலையில் இருந்தால்தான் அவற்றைக் காண முடியும். அதுபோலவே உருவமற்ற கடவுள் போன்ற வற்றைப் பற்றியெல்லாம் பேசலாம். ஆனால் நாம் சாதாரண மனிதனாக இருக்கும்வரை கடவுளை மனிதனிடம் மட்டுமே காண முடியும். எனவே கடவுளைப் பற்றிய நமது கருத்தும் இறைவழிபாடும் இயல்பாகவே மனித நிலையில் அமைந் துள்ளது. 'இந்த உடம்பு உண்மையிலேயே இறைவனின் மிகப் பெரும் திருக்கோயில்.' இவ்வாறு காலங்காலமாக மனிதர்கள் வழிபடப்பட்டு வருவதைக் காண்கிறோம். இயல்பாகவே அதைத் தொடர்ந்து வருபவையான அளவுக்கு மீறிய சில விஷயங்களை நாம் கண்டிக்கலாம், விமர்சிக்கலாம். ஆனால் அதன் இதயம், அதன் சாரம் பாதுகாப்பாகவே இருக்கிறது, அளவுக்கு மீறிய விஷயங்களும் எல்லை கடந்த செயல்களும் இருந்தாலும் போதிக்கப்படுகின்ற கோட்பாட்டில் ஓர் உண்மையான, உறுதி யான சாரம் இருக்கிறது. ஒரு முதுகெலும்பு இருக்கிறது.

இப்படிச் சொல்வதால், உடனே எந்தப் பழங்கதைகள் ஆனாலும், அறிவியலுக்கு ஒத்துவராத புதிர்க் கூட்டங்கள் ஆனாலும் ஆராயாமல் அப்படியே நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் சொல்லவில்லை. துரதிர்ஷ்டவசமாக நமது புராணங்களில் நுழைந்துள்ள எல்லாவிதமான வாமாச் சார விளக்கங்களையும் நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம்,

புராணங்களில் ஒரு சாரம் இருக்கிறது, புராணங்கள் இருப்ப தற்கு ஓர் அறிவுபூர்வமான காரணம் இருக்கிறது, அதை நாம் இழந்து விடக்கூடாது என்பதுதான். அந்த அறிவுபூர்வமான காரணம் பக்தியை உபதேசிப்பது, மதத்தைச் செயல்முறைப் படுத்துவது, உயர்ந்த தத்துவ நிலையில் உள்ள மதத்தைச் சாதாரண மனிதர்களின் அன்றாட வாழ்வில் கொண்டுவருவது என்பதுதான்.

இனி வருவது பத்திரிகைக் குறிப்பு. பக்தியில் உலகப் பொருட்களின் துணையை நாடுவதை ஆதரித்துப் பேசினார் சுவாமிஜி:

மனிதன் தற்போது எந்த நிலையில் இருக்கிறானோ, இறையருளால் அந்த நிலையில் இல்லாதிருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். ஆனால் இருக்கின்ற உண்மை நிலையை எதிர்ப்பது பயனற்றது. ஆன்மீகம் போன்றவற்றைக் குறித்து அவன் எப்படித்தான் பேசினாலும் அவன் உலகாயதச் சார்பு உடையவனே. எனவே இந்த உலகாயதச் சார்புடைய மனிதனை ஏற்றுக்கொண்டு, அவனைச் சிறிதுசிறிதாக ஆன்மீக நிலைக்கு உயர்த்த வேண்டும். இந்தக் காலத்தில் தொண்ணூற்றொன்பது சதவீதம் பேரால் ஆன்மீகத்தைப் புரிந்து கொள்வதே கடினம், அதை எடுத்துக் கூறத் தெரிந்தவர் இன்னும் குறைவே. நம்மை முன்னோக்கி உந்தும் சக்திகள், நாம் அடைய விரும்பும் பயன்கள் எல்லாம் உலகாயதச் சார்புடையவையாகவே இருக்கின்றன.

ஹெர்பர்ட் ஸ்பென்சர் கூறுவதுபோல், எதிர்ப்பு குறை வாகவுள்ள வழியில்தான் நாம் வேலை செய்ய முடியும். அவ்வாறு வேலை செய்வதற்கான நல்லெண்ணமும், பொது அறிவும் புராணங்களுக்கு உண்டு. புராணங்கள் பெற்ற வெற்றி மகத்தானதும் இணையற்றதும் ஆகும். பக்தி லட்சியம் ஆன்மீக மானதுதான், ஆனால் அதன் வழி உலகாயதச் சார்புடையது, அது தவிர்க்க முடியாதது. எனவே ஆன்மீகத்தை அடைய இந்த ஜடவுலகில் எவையெல்லாம் ஏற்றதாக இருக்கிறதோ, அவற்றை யெல்லாம் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அவைகளைப் பயன்படுத்தி மனிதனை ஆன்மீகத்திற்கு உயர்த்த வேண்டும்.

வேதங்களைப் பயிலும் உரிமையை ஆண், பெண், ஜாதி, மத, இன வேறுபாடுகள் இல்லாமல் எல்லோருக்கும் கொடுத்த வாறுதான் நமது சாஸ்திரங்கள் தொடங்குகின்றன. கோயில் கட்டுகிறான் ஒருவன், அது இறைவனை மேலும் நேசிக்க உதவுமானால் வரவேற்கத் தக்கதே. இறைவனின் திருவுருவை வடிக்கிறான் ஒருவன்; அன்பு என்னும் லட்சியத்தை

அடைவதற்கு அது உதவுமானால் இறைவன் அவனுக்கு அருள்வாராக, தேவையானால் இருபது திருவுருவங்களை அவனுக்குக் கொடுங்கள்! ஆன்மீக லட்சியத்தை அடைவதற்கு எது உதவியாயிருந்தாலும், அது நன்னெறிக்கு உட்பட்டதாக இருக்கும்வரையில் அது வரவேற்கத் தக்கதே. ஏனென்றால் நன்னெறிக்கு உட்படாத எதுவும் உதவ முடியாது, அது தடையாகவே அமையும்.

இந்தியாவில் உருவ வழிபாட்டைக் கண்டித்தவர்களுள் கபீரும் ஒருவர். மாறாகச் சகுணக் கடவுள் இருப்பதையே நம்பாத, அதேவேளையில் உருவ வழிபாட்டைக் கண்டிக்காத மகத்தான தத்துவ ஞானியரும் மத ஸ்தாபகர்களும் இந்தியாவில் இருந்தனர், தங்கள் கருத்துக்களை அவர்கள் தைரியமாக மக்களுக்குப் போதிக்கவும் செய்தனர். அவர்கள் அதிகமாக அதைப் பற்றிச் சொன்னதெல்லாம், அது மிகவுயர்ந்த வழிபாடு அல்ல என்பதுதான். மிகவுயர்ந்த வழிபாடு அது என்று புராணங்களும் சொல்லவில்லை.

வரலாற்றை ஆராய்ந்தால் யூதர்களும் உருவ வழிபாடு செய்திருப்பது தெரிகிறது. ஜெஹோவா ஒரு பெட்டியில் உறைகிறார் என்று அவர்கள் நம்புவதாகத் தெரிவித்த சுவாமிஜி, உருவ வழிபாடு தவறு என்று யாரோ கூறியதற்காக அதைக் கண்டிப்பது முறையாகாது என்றார்.

ஒரு சிலையோ உருவமோ ஒருவன் ஆன்மீகத்தை அடைய உதவும் என்றால் அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அதே வேளையில் உருவ வழிபாடு தாழ்ந்தது என்பதைத் தெளிவாக எடுத்துக் கூறாத எந்த நூலும் நமது மதத்தில் இல்லை. ஏனென்றால் அது ஜடப்பொருள்மூலம் செய்யப்படும் வழிபாடே அல்லவா! உருவ வழிபாட்டை எல்லோர்மீதும் திணிப்பதற்காக இந்தியா முழுவதிலும் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளைக் கண்டிப்பதற்குப் போதிய சொற்கள் அகப்படவில்லை என்றார் அவர். ஒருவர் எதை வழிபடுவது, எதன்மூலம் வழிபடுவது என்பதையெல்லாம் கூறவும் வற்புறுத்தவும் உரிமையில்லை. ஒருவர் எவ்வாறு முன்னேறுவார் என்பதை இன்னொருவர் எவ்வாறு கூற முடியும்? சிலர் உருவ வழிபாட்டின்மூலம், மற்றவர் அக்கினி வழிபாட்டின்மூலம், ஏன், சிலர் ஒரு தூணை வழிபடுவதன்மூலம்கூட முன்னேறலாம். சொந்த குருவும் குரு-சிஷ்ய உறவும் மட்டுமே இந்த விஷயத்தில் நமக்கு வழிகாட்டவும் நம்மை வழிநடத்திச் செல்லவும் முடியும்!

இஷ்டதெய்வம்பற்றி பக்தி இலக்கியங்கள் கூறுகின்ற நியமம் மேற்சொன்னதை விளக்குகிறது. அதாவது ஒவ்வொரு வரும் தனக்குரிய தனியான வழிபாட்டு முறையையும் இறை வனை நாடிச் செல்வதற்கான சொந்த வழியையும் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். ஒருவன் தேர்ந்தெடுக்கும் இறைவடிவமே அவனது இஷ்டதெய்வம். அவன் மற்ற வழி பாட்டு முறைகளை மதித்துப் போற்ற வேண்டும். அதே வேளையில், அடைய வேண்டிய லட்சியத்தை அடையும் வரை, புறப் பொருட்களின் அவசியம் தேவையில்லாமல் போகின்ற மையத்தை அடையும்வரை, அவன் தன் இஷ்ட தெய்வ வழிபாட்டிலேயே கண்ணும்கருத்துமாக இருக்க வேண்டும்.

இதைப்பற்றிச் சொல்லும்போது, இந்தியாவின் பல பகுதி களில் உள்ள குலகுரு முறை என்னும் ஒரு விதமான பரம்பரை அமைப்பு பற்றி நான் சிறிது எச்சரிக்க விரும்புகிறேன். யார் குரு வாக இருக்க முடியும் என்பதைப்பற்றி சாஸ்திரங்களில் நாம் படிக்கிறோம்—'வேதங்களின் சாரத்தை அறிந்தவர், பாவமற்ற வர், பணத்திற்காகவோ வேறு எதற்காகவோ கற்பிக்காதவர், காரணம் இல்லாமல் கருணை காட்டுபவர், நல்லது செய்வது ஒன்றையே இயல்பாகக் கொண்டு, செடி கொடிகளிலிருந்து எதையும் எதிர்பாராமல், அவற்றிற்கு மொட்டு, மலர், இலை களைக் கொடுத்து வாழ்வளிக்கின்ற வசந்தம்போல், தமக்கென்று எந்தத் தேவையுமின்றி தம் வாழ்க்கையை மற்றவர்களுக்கு நன்மை செய்வதற்காக மட்டுமே கொண்டவர்—அத்தகைய வரையே குரு என்று அழைக்க முடியும்; வேறு யாரையும் அல்ல.'[1]

இதில் மற்றோர் ஆபத்தும் இருக்கிறது, குரு என்பவர் வெறும் ஆசிரியர் மட்டுமல்ல. ஆசிரியர் என்பது, குரு தன்மை யில் ஒரு சிறிய பகுதி மட்டுமே. குரு, ஆன்மீகத்தைச் சீடர்களிடம் பாய்ச்சுவதாக இந்துக்கள் நம்புகிறார்கள். சாதாரண உலக உதாரணத்தையே எடுத்துக் கொள்வோம். நோயைத் தடுக் கின்ற நல்ல நுண்கிருமிகளை (Virus) உடம்பில் ஏற்றாவிட்டால், தீய, கேடு விளைக்கக்கூடிய நுண்கிருமிகள் தொற்றிக் கொள் கின்ற அபாயம் உள்ளது. அதுபோல் தீய குருவால் போதிக்கப் படும்போது கெட்டவற்றைக் கற்க வேண்டிய அபாயம்

---

1. ஒப்பிடுக: விவேக சூடாமணி, 34, 39.

நேர்கிறது. எனவே குலகுரு முறை என்பது இந்தியாவை விட்டுக் கட்டாயமாக மறைய வேண்டிய ஒன்றாகும். குருநிலை என்பது ஒரு வியாபாரமாக ஆகிவிடக் கூடாது; அதைத் தடுத்தேயாக வேண்டும். இது சாஸ்திரங்களுக்கே முரணானது. தன்னை குரு என்று அழைத்துக் கொள்கின்ற யாரும் குலகுரு முறை என்ற பெயரில் இன்று நடைபெற்று வருகின்ற செயல்களுக்குத் துணைபோகக் கூடாது.

உணவைப்பற்றி சுவாமிஜி பேசும்போது, இன்றைய நடைமுறையில் உள்ள கடினமான கட்டுப்பாடுகள் பெருமளவிற்கு மேலோட்டமானவை என்றும் எதற்காக ஆரம்ப காலத்தில் அமைக்கப்பட்டதோ அந்த நோக்கத்திலிருந்து அவை மாறுபட்டுவிட்டன என்றும் கூறினார். குறிப்பாக, உணவைத் தொடுவதற்கு மற்றவர்களை அனுமதிப்பதுபற்றிப் பேசினார். அதன் ஆழமான மனோதத்துவ முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டினார். ஆனால் சாதாரண மனிதன் அன்றாட வாழ்க்கையில் இதில் கவனமாக இருப்பது கடினம், ஏன், முடியாத ஒன்று என்றும் கூறினார். இங்கும் பொதுவாக ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கு மட்டும் பொருந்தக்கூடிய விதி, பொதுவிதியாக மாற்றப்பட்ட தவறு நேர்ந்துள்ளது. முழுக்கமுழுக்கத் தங்கள் வாழ்வை ஆன்மீகத்திற்கே அர்ப்பணித்தவர்களுக்கென வகுக்கப்பட்ட விதிகள், உலகியல் ஆசைகளை இன்னும் அனுபவித்துத் தீர்த்துக் கொள்ளாத பெருவாரியான மக்களுக்கு விதிக்கப்பட்டுள்ளது. அவர்கள் அதை அனுபவிக்காதவரையில் அவர்கள் மீது ஆன்மீகத்தைத் திணிப்பது பயனற்றது.

பக்தர்களுக்காக விதிக்கப்பட்ட வழிபாடுகளுள் மிகவும் உயர்ந்தது மனித வழிபாடாகும். உண்மையாகவே ஏதாவது வழிபாடு நடைபெற வேண்டுமென்றால் உங்கள் வசதிக்குத் தக்கவாறு ஏழைகள் ஒருவரையோ இருவரையோ சிலரையோ உங்கள் வீட்டிற்கு அழைத்து வந்து, நாராயணனாகக் கருதி அவர்களுக்குச் சேவை செய்யுங்கள்.

சுவாமிஜி பல நாடுகளில் தானம் நடைபெறுவதைக் கண்டுள்ளார். அவை வெற்றி பெறாததன் காரணம், நல்ல மனப்பான்மையோடு செய்யாததுதான் என்றார். 'இங்கே வா, இதை எடுத்துக் கொள், வெளியே போ'—இது தானம் அல்ல, இது கர்வத்தை வெளிப்படுத்துவது; பாராட்டு பெறவும், இவர்கள் கொடையாளிகள் என்பதை உலகம் அறிந்துகொள்ளவும் செய்யப்படுவதே இது.

வாங்குபவனைவிடக் கொடுப்பவன் கீழானவனே என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. ஏனென்றால் வாங்குபவன் அந்த நேரத்திற்குக் கடவுளே. இதனை இந்துக்கள் அறிந்து கொள்வது அவசியம். ஆகையால் சில ஏழை நாராயணர்களை, பார்வை யற்ற நாராயணர்களை, பசித்த நாராயணர்களை, ஒவ்வொரு நாளும் வீட்டிற்கு அழைத்து வந்து, திருவுருவங்களுக்கு இறை வழிபாடு செய்வதுபோல் அவர்களுக்கு உணவு, உடையளித்துச் சேவை செய்ய வேண்டும் என்று சுவாமிஜி சொன்னார். அவர் எந்த வழிபாட்டு முறையையும் கண்டிக்கவில்லை. இன்றைய இந்தியாவின் நிலைக்குத் தேவையானதும் மிகவுயர்ந்ததுமான வழிபாடு மேற்கண்ட நாராயண வழிபாடுதான் என்பதே அவர் குறிப்பிட்டதாகும்.

சொற்பொழிவின் முடிவில் பக்தியை ஒரு முக்கோணத் திற்கு அவர் ஒப்பிட்டார். அதில் முதல் கோணம், அன்பு என்பது எதையும் வேண்டாதது; இரண்டாவது கோணம், அன்பு பயத்தை அறியாதது. பிரதிபலனை எதிர்பார்த்தோ ஏதாவது சேவைகளுக்கு ஆசைப்பட்டோ அன்பு செலுத்துவது பிச்சைக்காரனின் மதம், வியாபாரியின் மதம்; அதில் உண்மை யான மதம் மிகமிகக் குறைவாகவே உள்ளது. பிச்சைக்காரர் களாக ஆகாதீர்கள்! ஏனென்றால் பிச்சை கேட்பது முதலில் நாத்திகத்தின் அறிகுறி. 'கங்கைக் கரையில் வாழ்ந்துகொண்டே குடிநீருக்காகச் சிறிய கிணற்றைத் தோண்டுபவன் உண்மை யிலேயே முட்டாள்தான்.' இறைவனிடமும் உலகப் பொருட் களுக்காகக் கையேந்துபவனும் அப்படிப்பட்டவன்தான். தைரியமாக எழுந்து நின்று, 'இறைவா, உன்னிடமிருந்து எனக்கு எதுவும் தேவையில்லை, என்னிடமிருந்து உனக்கு ஏதாவது தேவை இருந்தால் தர நான் தயாராக இருக்கிறேன்' என்று சொல்வதற்கு பக்தன் தயாராக இருக்க வேண்டும். அன்பிற்குப் பயமே தெரியாது. பலவீனமான, மெலிந்த பெண் ஒருத்தி தெருவில் தனியே போய்க் கொண்டிருக்கிறாள். திடீரென ஒரு நாய் அவளைப் பார்த்துக் குரைக்கிறது. அவ்வளவுதான், ஒரே பாய்ச்சலில் பக்கத்து வீட்டிற்குள் ஓடிவிடுகிறாள். இன்னொரு நாள் அதே பெண் தெருவில் தன் குழந்தையை மார்போடு அணைத்தபடிச் செல்கிறாள். அவள்மீது ஒரு சிங்கம் பாய்கிறது. அப்போது அவள் எங்கே ஓடுவாள்? சிங்கத்தின் வாயில்தான். தன் குழந்தையைக் காப்பாற்றுவதற்காக அந்தச் சிங்கத்தின் வாய்க்குள்ளேயே தன்னைக் கொடுத்து விடுவாள்.

இறுதியாக, அன்பு அன்பிற்காகவே. அன்பே இறைவன், வேறொன்றும் அல்ல என்ற நிலைக்கு பக்தன் இறுதியாக வருகிறான்.

கடவுள் இருப்பதை நிரூபிக்க மனிதன் எங்கு செல்ல வேண்டும்? காணக் கூடியவற்றுள் மிகவும் தெளிவாகக் காணக் கூடியது அன்பு. இந்த அன்பின் ஆற்றல்தான் சூரியனையும் சந்திரனையும் நட்சத்திரங்களையும் இயங்கச் செய்கிறது; ஆண்களிலும் பெண்களிலும் மிருகங்களிலும் எல்லா இடங்களிலும் எல்லா பொருட்களிலும் தன்னை வெளிப்படுத்தி நிற்கிறது. இந்த ஆற்றலே பௌதீக நிலையில் புவியீர்ப்பு முதலிய சக்திகளாகச் செயல்படுகிறது. இது எங்கும் இருக்கிறது, ஒவ்வோர் அணுவிலும் இருக்கிறது, எல்லா இடங்களிலும் வெளிப்படுகிறது. இந்த எல்லையற்ற அன்பே பிரபஞ்சத்தை இயக்கும் சக்தியாகவும் எல்லா இடங்களிலும் காணும் சக்தியாகவும் உள்ளது. இந்தச் சக்திதான் கடவுள். ❑

## 3.வேதாந்தம்

12 நவம்பர்

இரண்டு உலகங்களில் நாம் வாழ்ந்து வருகிறோம், ஒன்று புறம், மற்றது அகம். பழங்காலத்திலிருந்தே இந்த இரண்டு உலகங்களிலும் மனிதனின் முன்னேற்றம் ஏறக்குறைய இணையாக இருந்துவருகிறது. ஆராய்ச்சி, முதலில் புறவுலகில் ஆரம்பித்தது, முக்கியமாக, பிரச்சினைகளின் தீர்வுகளை முதலில் புற இயற்கையிலிருந்து பெற விரும்பினான் மனிதன். அழகின்மீதும் நுண்மைமீதும் தான்கொண்ட தாகத்தைத் தணிப்பதற்காக தன்னைச் சூழ்ந்திருப்பவற்றை நாடினான். தன்னையும் தன்னுள்ளே உள்ள அனைத்தையும் தூல மொழியில் வெளிப்படுத்த முயன்றான். அவனுக்குக் கிடைத்த பதில்களும் கம்பீரமாகவே இருந்தன; கடவுளையும் வழிபாட்டையும்பற்றிய உன்னதமான கருத்துக்களையும் அழகின் அதிஅற்புதமான ஆனந்த வெளிப்பாடுகளையும் அவன் பெற்றான். நுண்ணிய கருத்துக்கள் புறவுலகிலிருந்து கிடைத்தன என்பது உண்மைதான். ஆனால், சற்று பின்னர், மனித குலத்திற்காக விரிந்த அகவுலகமோ இன்னும் நுண்மையான, இன்னும் அழகான, எல்லையற்ற மடங்கு பரந்ததுமானதொரு பிரபஞ்சத்தை அவன் முன் விரித்தது.

வேதங்களின் கர்மகாண்டப் பகுதியில் மதத்தைப் பற்றிய அற்புதமான கருத்துக்களும், பிரபஞ்சத்தைப் படைத்து, காத்து, அழிக்கும் கடவுளைப் பற்றிய அதி அற்புதமான கருத்துக்களும் இதயத்தைத் தொட்டுணர்த்தும் விதத்தில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. படைப்புக்கு முந்தைய நிலையை விவரிக்கின்ற ரிக்வேத சம்ஹிதையின் அந்த அழகிய சுலோகம் உங்களுள் பலருக்கு ஞாபகமிருக்கலாம், இதுவரை எழுதப்பட்டவற்றுள் ஒருவேளை நுண்மையின் மிகச் சிறந்த வர்ணனை அதுவாகத் தானிருக்கும். ஆனால் அது புறவுலகம் பற்றிய நுண்மையின் சித்திரம் மட்டுமே; அது தூலமே, ஜடவுலகின் நிழல் இன்னும் அதில் ஒட்டிக்கொண்டிருப்பதை நாம் காண்கிறோம்.

எல்லையற்றதை எல்லைக்குட்பட்ட மொழியின்மூலம், ஜட வுலகின்மூலம் தெரிவிக்கவே அதில் முயற்சி செய்யப்பட்டிருக் கிறது. அது எல்லையற்ற புற இயற்கையைப் பற்றியதே தவிர அக இயற்கையைப் பற்றியதல்ல; எல்லையற்ற புற வெளியைப் பற்றியதே தவிர எல்லையற்ற எண்ணத்தைப் பற்றியதல்ல.

அதனால் இரண்டாம் பகுதியாகிய ஞானகாண்டத்தில் முற்றிலும் மாறுபட்டதொரு வழிமுறையைக் காண்கிறோம். முதலாவது, பிரபஞ்ச உண்மைகளை அறிவதற்கான புற இயற்கையை ஆராய்ந்த ஒரு முயற்சி; வாழ்க்கையின் முக்கியப் பிரச்சினைகளுக்கு ஜடவுலகிலிருந்து தீர்வு காண்பதற்கான ஒரு முயற்சி அது. 'யஸ்யைதே ஹிமவந்தோ மஹித்வா'[1]— இமய மலைகள் யாருடைய புகழை விளக்குகின்றனவோ'— இந்தக் கருத்து சிறந்ததுதான், ஆனால் நம் நாட்டின் பெருமைக்கு ஏற்ற அளவு சிறந்ததாக இல்லை. எனவே இந்தியர்களின் மனம் பின்வாங்க வேண்டியதாயிற்று. அவர்களின் ஆராய்ச்சி முற்றி லும் புதிய திசையில் செல்லத் தொடங்கியது. புறவுலகிலிருந்து அகவுலகிற்கு, ஜடத்திலிருந்து மனவுலகிற்குத் திரும்பியது. 'மரணத்திற்குப் பின் மனிதனின் நிலை என்ன?' என்ற கேள்வி எழுந்தது. 'அஸ்தீத்யேகே நாயமஸ்தீதி சைகே[2]— அவன் இருக் கிறான் என்று சிலரும் அவன் போய்விட்டான் என்று பிறரும் கூறுகிறார்கள். ஓ மரணதேவனே, எது உண்மை?' இங்கு முற்றி லும் வேறான வழிமுறையைக் காண்கிறோம். புறவுலகிலிருந்து என்னென்ன கிடைக்க முடியுமோ அவை அனைத்தும் இந்திய மனத்திற்குக் கிடைக்கவே செய்தன. ஆனால் அவற்றில் அது திருப்தியடையவில்லை, இன்னும் ஆராய விழைந்தது. எனவே சொந்த ஆன்மாவில் மூழ்கியது, அங்கே இறுதி விடை கிடைத்தது.

வேதங்களின் இந்தப் பகுதிக்கு உபநிடதங்கள் அல்லது வேதாந்தம் அல்லது ஆரண்யகங்கள் அல்லது ரகசியங்கள் என்பது பெயர். இங்கே மதம் என்பது எல்லாவிதமான புறச் சடங்குகளிலிருந்தும் விடுபட்டிருப்பதை எடுத்த எடுப்பி லேயே காணலாம். ஆன்மீக விஷயங்கள் தூல மொழியில் சொல்லப்படாமல், நுண்ணியதான உணர்வின் மொழியில், நுண்ணுணர்வின் மொழியில் சொல்லப்பட்டிருப்பதையும்

---

1. ஹிரண்யகர்ப்ப ஸூக்தம், 10. 121. 4.
2. கட உபநிடதம், 1. 1. 20.

ஆரம்பத்திலேயே காணலாம். தூலம் சிறிதுகூட அதில் கலக்க வில்லை, உலகம் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்காகச் சிறிதளவு கூட விட்டுக் கொடுக்கவும் இல்லை. உபநிடத ரிஷிகளின் மகத்தான மனம் தைரியமும் துணிவும் மிக்கது; இன்றைக்கு நம்மால் நினைத்துப் பார்க்கவே முடியாதது. மனித இனத்திற்கு இதுவரை எடுத்துக் கூறப்பட்ட உண்மைகளுள் மிகச் சிறந்தவற்றை, எதற்காகவும் விட்டுக்கொடுக்காமல், சிறிதும் பயமின்றி அவர்கள் முழங்கியிருக்கிறார்கள். என் நாட்டு மக்களே, இவற்றையே உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். வேதங்களின் ஞான காண்டம் ஒரு கடல்தான். அதில் ஒரு துளியை அறிவதற்குக் கூடப் பல பிறவிகள் தேவை. உபநிடதங்களே வேதங்களின் சிரசாகவும் தோள்களாகவும் கிரீடமாகவும் விளங்குகின்றன என்று ராமானுஜர் சரியாகவே கூறியிருக்கிறார். உண்மைதான், உபநிடதங்கள் தற்கால இந்தியாவின் பைபிளாகிவிட்டது. வேதங்களின் கர்மகாண்டப் பகுதியை இந்துக்கள் மிகவும் மதித்துப் போற்றுகிறார்கள். ஆனால் நடைமுறையைப் பொறுத்தவரையில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக, சுருதி என்றால் உபநிடதங்கள், உபநிடதங்கள் மட்டுமே மனத்தில் கொள்ளப்படுகிறது. வியாசர், பதஞ்ஜலி, கௌதமர் போன்ற நமது மாபெரும் தத்துவ ஞானியரும், தத்துவ ஞானத்தின் தந்தை என்று போற்றப்படும் கபிலரும்கூட எழுதியவற்றிற்கு அத்தாட்சி தேவைப்பட்ட போதெல்லாம், அதனை அவர்கள் பெற்றது உபநிடதங்களிலிருந்துதான், வேறெங்கிருந்தும் அல்ல. ஏனெனில் உபநிடதங்களில் மட்டுமே என்றும் அழியாத உண்மைகள் உள்ளன.

சில உண்மைகள் ஒரு குறிப்பிட்ட துறையில், ஒரு குறிப்பிட்ட வகையில், குறிப்பிட்ட சூழ்நிலைகளில், குறிப்பிட்ட காலங்களில் மட்டுமே உண்மையாக இருக்கின்றன. இவை அந்தக் காலத்தின் அமைப்புகளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டவை. இனி, மனிதனின் இயல்பை அடிப்படையாகக் கொண்ட வேறு சில உண்மைகள் உள்ளன, இவை மனிதன் இருக்கும்வரையிலும் நிலைத்து நிற்கும். இந்த உண்மைகள் மட்டுமே உலகம்தழுவியதாக இருக்க முடியும். நமது சமுதாய அமைப்புகள், உடை அணிதல், உணவுப் பழக்கம், வழிபாட்டு முறைகள் என்று இந்தியாவில் எல்லாவற்றிலுமே மாற்றங்கள் வந்தபோதிலும், சுருதிகளின் இந்த உலகம்தழுவிய உண்மைகள், இந்த அற்புத வேதாந்தக் கருத்துக்கள், தங்கள்

நுண்மையில், அசைக்க முடியாதவையாக, வெல்ல முடியாதவை யாக, அழிவற்றவையாக, அமரத்துவம் பெற்றவையாக நிலைத்து நிற்கின்றன. உபநிடதங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்ற இந்த எல்லா கருத்துக்களுடையவும் முளைகள் கர்மகாண்டத்தில் ஏற்கனவே சொல்லப்பட்டுள்ளன. வேதாந்தத்தைப் பின்பற்றும் அனைவரும் ஒப்புக்கொள்கின்ற பிரபஞ்சக் கருத்தும், இந்தியத் தத்துவ சாஸ்திரங்கள் அனைத்திற்கும் பொது அடிப்படையாக இருக்கின்ற மனஇயலும் ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டு உலகின் முன் வைக்கப்பட்டுவிட்டது. எனவே வேதாந்தத் தின் ஆன்மீகப் பகுதியைப்பற்றிக் கூறுவதற்கு முன்னர் கர்ம காண்டத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும். முதலில் வேதாந்தம் என்ற சொல்லை நான் எந்தப் பொருளில் பயன்படுத்துகிறேன் என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

வேதாந்தம் என்பது அத்வைத நெறியையே குறிப்பதாக தற்காலத்தில் இந்தியாவில் பொதுவாகக் கருதப்படுகிறது. இது முற்றிலும் தவறு. இன்று இந்தியாவிலுள்ள மதப் பிரிவுகளுள் எதைப் படிப்பதிலும் மூன்று பிரஸ்தானங்களும் சம முக்கியத் துவம் உடையதாகவே கருதப்படுவதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். முதலில் அருள் வெளிப்பாடுகளாகிய சுருதிகள்; இங்கு சுருதிகள் என்று கூறும்போது உபநிடதங் களையே குறிப்பிடுகிறேன். இரண்டாவதாக வியாசசூத்திரங்கள்; இது, அதற்கு முன்னால் இருந்த பல்வேறு தத்துவப் பிரிவுகளின் தொகுப்பாக இருப்பதால் நமது தத்துவங்களில் மிகவும் முக்கியத் துவம் வாய்ந்ததாக மதிக்கப்படுகிறது. இந்தப் பல்வேறு பிரிவுகள் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல; மாறாக, ஒன்றை யொன்று சார்ந்துள்ளன. படிப்படியாக இவை ஒவ்வொன்றிலும் விரிகின்ற கருத்து வியாச சூத்திரங்களில் நிறைநிலையை அடை கிறது. இனி, உபநிடதங்களுக்கும், வேதாந்தத்தின் அற்புத உண்மைகளை நெறிப்படுத்துபவையான வியாச சூத்திரங்களுக் கும் இடையே வருகிறது வேதாந்தத்திற்கு தெய்வீக விளக்கவுரை யான கீதை.

தங்கள் பிரிவு வைதீகமானது என்ற அத்தாட்சி பெற விழைகின்ற ஒவ்வொரு பிரிவினரும், அவர்கள் துவைதி, விசிஷ் டாத்வைதி, அத்வைதி என்று யாராக இருந்தாலும் சரி, உப நிடதங்கள், வியாச சூத்திரங்கள், கீதை இவற்றை ஏற்றுக்கொண் டிருக்கின்றன. இவர்கள் அனைவருக்கும் இந்த மூன்று பிரஸ் தானங்களுமே பிரமாணமாக உள்ளன. புதிய பிரிவை உருவாக்க

வந்தவர்களான சங்கரர், ராமானுஜர், மத்வர், வல்லபர், சைதன்யர் அனைவருமே இந்த மூன்று ப்ரஸ்தானங்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது, விளக்கவுரையை மட்டும் அவர்கள் புதியதாக எழுதிக் கொண்டனர். எனவே உபநிடதங் களிலிருந்து தோன்றிய பல பிரிவுகளுள் ஒன்றை மட்டும் வேதாந்தம் என்று குறிப்பிடுவது தவறு. வேதாந்தம் என்பது இந்த எல்லா நெறிகளையுமே குறிக்கும். அத்வைதிகளைப் போலவே விசிஷ்டாத்வைதிகளுக்கும் தங்களை வேதாந்திகள் என்று அழைத்துக்கொள்ள சம உரிமை உண்டு. உண்மையில், நான் இன்னும் முன்னே சென்று, இந்து என்ற சொல்லால் எதைக் குறிப்பிடுகிறோமா அதுவும் வேதாந்தி என்ற சொல்லும் ஒன்றுதான் என்றே சொல்வேன். இந்த மூன்று நெறிகளும் மிகப் பழங்காலந்தொட்டே இந்தியாவில் இருந்துவந்திருக் கின்றன. சங்கரர் அத்வைத நெறியைக் கண்டுபிடிக்கவில்லை. அவர் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அது இருந்தது, அதன் கடைசி பிரதிநிதிகளுள் ஒருவர் சங்கரர். விசிஷ்டாத்வைதமும் அது போலவே. ராமானுஜர் தோன்று வதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே அது இருந்தது. ராமானுஜர் எழுதிய விளக்கவுரைகளிலிருந்தே இது நமக்குத் தெளிவாகிறது. இவ்வாறே துவைத நெறியும் மற்ற நெறிகளுடன் இணையாகவே இருந்து வந்திருக்கிறது. என் சிற்றறிவைக் கொண்டு, அவை ஒன்றுக்கொன்று முரணானவையல்ல என்ற முடிவுக்கே நான் வந்திருக்கிறேன்.

நமது ஆறு தரிசனங்களும் மகத்தான கோட்பாடுகளின் படிப்படியான விரிவாக அமைந்துள்ளன; அவற்றின் சங்கீதம் மிக முன்பே தாழ்ந்த மெல்லிய சுரங்களில் தொடங்கி, இடியேறு போல் முழங்குகின்ற அத்வைதத்தில் நிறைவுகிறது. அவ்வாறே இந்த மூன்று நெறிகளிலும், மனித உள்ளத்தைப் படிப்படியாக உயர் லட்சியங்களுக்குக் கொண்டு சென்று, அத்வைத நெறியில் அடையப்படுவதான அந்த அதிஅற்புத ஒருமை நிலையில் எல்லாவற்றையும் சங்கமிக்கச் செய்யும் பாங்கினையும் காண் கிறோம். எனவே இவை ஒன்றுக்கொன்று எதிரானவை அல்ல. இந்த விஷயத்தில் பலர் தவறு செய்திருக்கிறார்கள் என்பதை நான் உங்களுக்குச் சொல்லாமல் இருக்க முடியாது. அத்வைத ஆச்சாரியர் அத்வைதப் பொருள் கொடுக்கும் பகுதிகளை அப்படியே வைத்துக்கொண்டு, துவைத, மற்றும் விசிஷ்டாத் வைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களை அத்வைதப்

பொருள் கொடுக்குமாறு விளக்க முயல்கிறார். இவ்விதமே துவைத ஆச்சாரியர்கள் அத்வைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களுக்கு துவைதப் பொருள் கூற முயல்கிறார்கள். நமது குருமார்கள் எல்லோருமே மகத்தானவர்கள், ஆனால் 'குருவுடையதே ஆயினும் தவறுகளை எடுத்துக் கூற வேண்டும்'[1] என்ற பழமொழி ஒன்று உண்டு. பொருள் கூறுவதற்கான இந்த முயற்சியில் மட்டுமே அவர்கள் தவறியதாக நான் நினைக்கிறேன். நாம் வாக்கியங்களைச் சிதைத்துப் பொருள் கூற வேண்டிய தில்லை, நேர்மை தவறி நடக்க வேண்டியதில்லை, பொருளற்ற இலக்கணக் குழப்பங்களை நாட வேண்டியதில்லை, நமது சொந்தக் கருத்துக்களைத் திணித்து, அந்த வாக்கியங்களுக்கு இல்லாத பொருளை அவற்றின்மீது சுமத்த வேண்டியதும் இல்லை. மாறாக, அதிகாரபேதம் என்ற கோட்பாட்டை நீங்கள் புரிந்துகொண்டால் வேலை தெளிவாகவும் எளிதாகவும் ஆகிவிடும்.

உண்மைதான்: 'கஸ்மின்னு பகவோ விஜ்ஞாதே ஸர்வ மிதம் விஜ்ஞாதம் பவதி[2]— எதை அறிந்தால் நாம் எல்லா வற்றையும் அறிய முடியும்?' இந்த ஆராய்ச்சியையே உப நிடதங்கள் தங்கள் ஒரே கருத்தாகக் கொண்டிருக்கின்றன. தற் கால மொழியில் சொல்வதானால், பொருட்களின் ஓர் அறுதி ஒருமையைக் (Ultimate Unity) காண்பதே உபநிடதங்களின் நோக்கம். அறிவு என்பது வேறுபாடுகளுக்குள் ஒருமையைக் காண்பதே தவிர வேறல்ல. எல்லா விஞ்ஞானமும் இந்தக் கருத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. மனித அறிவு எல்லாமும் இந்த வேறுபாடுகளுள் ஒருமையைக் காண் பதைத்தான் அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. விஞ் ஞானங்கள் என்று நாம் கூறுபவையெல்லாம் மனித அறிவின் சிறு துணுக்குகளே. இவற்றின் வேலையே இந்தச் சிறு வேறுபாடு களுக்கிடையில் ஒருமையைக் காண்பது என்றால், அற்புதமான வேறுபாடுகள் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில், பெயர், உருவம், ஜடம், உணர்வு என்று ஒன்றுக்கொன்று முற்றிலும் வேறுபட்ட சிந்தனைகளும் உருவங்களும் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில் ஓர் ஒருமையைக் காண்பது எவ்வளவு கடினமான வேலை! இந்தப் பல்வேறு தளங்களையும் முடிவற்ற உலகங்களையும்

---

1. தோஷா வாச்யா குரோரபி।
2. முண்டக உபநிடதம், 1. 1. 3.

ஒருங்கிணைத்து, அந்த எண்ணற்ற வேறுபாடுகளுக்கிடையே ஒருமை காண்பதே உபநிடதங்களின் நோக்கம்.

மறுபுறம் அருந்ததி நியாயத்தை நாம் துணைகொள்ள வேண்டும். அருந்ததி நட்சத்திரத்தை ஒருவருக்குக் காட்ட வேண்டுமானால், முதலில் அதற்கு அருகிலிருக்கின்ற பெரியதும் ஒளி மிகுந்ததுமான நட்சத்திரம் ஒன்றைக் காட்டி, அதன் மீது அவனது பார்வை பதியுமாறு செய்ய வேண்டும். பின்னர் சிறிய நட்சத்திரமான அருந்ததியைக் காண்பிப்பது எளிதாகி விடும். நமது வேலையும் இதுதான். எனது கருத்தை நிரூபிக்க நான் உபநிடதங்களைக் காட்டினால் மட்டும் போதும், எனது கருத்தின் உண்மையை நீங்களே காண்பீர்கள்.

ஏறக்குறைய எல்லா அத்தியாயங்களுமே துவைத உபதேசமான உபாசனையில்தான் ஆரம்பமாகிறது. இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்து, காத்து, இறுதியில் தம்முள்ளே ஒடுக்கிக்கொள்பவரே இறைவன் என்று முதலில் கற்பிக்கப்படுகிறது. புற, அக இயற்கையை வழிநடத்துபவரும் ஆள்பவரும் அவரே; இயற்கைக்கு வெளியில் இருப்பவர்போல் அவர் தோன்றுகிறார். எனவே அவரை வணங்க வேண்டுமென்று கற்பிக்கப்படுகிறது. அடுத்த படியில், அவர் இயற்கைக்கு வெளியில் இல்லை, ஆனால் அதில் அந்தர்யாமியாக, அதாவது ஊடுருவிக் கலந்திருக்கிறார் என்று அதே ஆசிரியர் போதிக்கிறார். இறுதியில் இந்த இரண்டு கருத்துக்களுமே விடப்பட்டு, உண்மையானவை எல்லாம் அவரே, வேறுபாடு என்பதே இல்லை என்ற கருத்து வருகிறது; 'தத்வமஸி ச்வேதகேதோ[1]—சுவேதகேது, அது நீயே.' அனைத்துள்ளும் அந்தர்யாமியாக இருக்கின்ற அந்த ஒரே பொருள்தான் மனித ஆன்மாவின் உள்ளும் இருக்கிறது எனத் தெளிவுபடுத்தப் படுகிறது. இங்கு எதற்காகவும் விட்டுக்கொடுத்தல் இல்லை, பிறருடைய அபிப்பிராயங்களைப் பற்றிய பயம் இல்லை. உண்மை, தைரியமான உண்மை கூறப்படுகிறது. இன்று அந்த உண்மையை அதே வீர மொழியில் எடுத்துரைக்க நாம் அஞ்ச வேண்டியதில்லை. இறையருளால் நான் அத்தகையதொரு துணிவுமிக்க தைரியமான போதகனாக இருப்பதாக நம்புகிறேன்.

தொடங்கிய விஷயத்திற்குத் திரும்புவோம். முதலில் இரண்டு விஷயங்களைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 8. 7.

வேண்டும். முதன்முதலில் வேதாந்த நெறிகள் அனைத்திற்கும் பொதுவாக இருக்கும் மனஇயல் உண்மைகள்; இரண்டாவது அவை கூறும் பிரபஞ்சக் கருத்து. இரண்டாவதை முதலில் எடுத்துக் கொள்கிறேன். தற்கால விஞ்ஞானத்தின் அற்புதக் கண்டுபிடிப்புகள் இடிபோல் நம்மீது இறங்குகின்றன. நாம் கனவுகூடக் காண முடியாத அதிசயங்களை எல்லாம் அது நம் முன் விரிக்கிறது. ஆனால் இவற்றுள் பலவும் பல யுகங்களுக்கு முன்னர் அறியப்பட்டவைதாம், இன்று மீண்டும் கண்டு பிடித்துள்ளார்கள். வேறுபட்ட பல ஆற்றல்களுக்கு இடையில் ஒற்றுமை இருக்கிறது என்பதை ஏதோ சிறிது காலத்திற்கு முன்புதான் விஞ்ஞானம் கண்டுபிடித்தது. வெப்பம், காந்தம், மின்சாரம் என்று அழைக்கப்படுகின்ற வேறுபட்ட ஆற்றல்கள் அனைத்தும் அடிப்படையில் ஒன்றே என்றும், இவை அனைத்தையும் அந்த அடிப்படைச் சக்தியாக மாற்ற முடியும் என்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அந்த அடிப்படைச் சக்தியை எப்படி வேண்டுமானாலும் நாம் அழைத்துக் கொள்ளலாம். ஆனால் இந்தக் கருத்து நமது சம்ஹிதை களிலேயே சொல்லப்பட்டுவிட்டது; பழையதும் புராதனமான துமாக இருந்தாலும், அதில், ஆற்றல் என்று நான் குறிப்பிட்ட அதே கருத்தை நாம் காணலாம். புவியீர்ப்பு ஆற்றல், ஈர்ப்பாற்றல், விலக்கும் ஆற்றல் என்று நீங்கள் எப்படி அழைத் தாலும் சரி, அது வெப்பம், மின்சாரம், காந்த சக்தி என்று எப்படி வெளிப்பட்டாலும் சரி, எல்லா ஆற்றல்களும் அந்த அடிப்படை ஆற்றலின் மாறுபாடுகளே தவிர வேறல்ல. மனித னின் அகக் கருவிகளாகிய அந்தக்கரணங்களிலிருந்து பிரதிபலிக் கின்ற எண்ணமாக இருந்தாலும் சரி, அல்லது புற உறுப்புகளின் செயல்களாக வெளிப்பட்டாலும் சரி, எல்லாமே 'பிராணன்' எனப்படும் அடிப்படை சக்தியிலிருந்தே பிறக்கின்றன.

பிராணன் என்பது என்ன? பிராணன் என்பது ஸ்பந்தனம், அதிர்வு. இந்தப் பிரபஞ்சம் எல்லாம் ஒடுங்கி, முன்பிருந்த நிலையை அடையும்போது இந்த அளவற்ற ஆற்றல் என்ன ஆகிறது? அது அழிந்துவிடுகிறதென்றா நினைக்கிறீர்கள்? இல்லை, அழிவதில்லை. அவை அழிந்துவிட்டால் அடுத்த அலை எங்கிருந்து தோன்ற முடியும்? இயக்கம் என்பது அலை களைப் போல் எழுவதும் விழுவதுமாக அல்லவா உள்ளது! எழுகிறது, விழுகிறது, மீண்டும் எழுகிறது—இவ்வாறு அல்லவா நடைபெறுகிறது!

இனி, பிரபஞ்சம் வெளிப்படுவதைக் குறிக்கின்ற சொல்லான சிருஷ்டி என்பதைக் கவனிக்க வேண்டும். இந்தச் சொல்லின் பொருள் படைப்பு (Creation) என்பதல்ல என்பதை நினைவில்கொள்ள வேண்டும். இந்த வார்த்தைக்கு இணையாக ஆங்கிலத்தில் வார்த்தை இல்லை. சம்ஸ்கிருத வார்த்தைகளை என்னால் இயன்றவரைதான் மொழிபெயர்க்க முடியும். அது, படைப்பு அல்ல, சிருஷ்டி, தோற்றத்திற்கு வருதல் (Projection). ஒரு கல்பத்தின் முடிவில் எல்லாமே நுண்மையாகி, மேலும் நுண்மையாகி சிருஷ்டிக்கு முன்பிருந்த நிலையை அடைகின்றன. மறுபடியும் வெளிப்படத் தயாராக அந்த நிலையிலேயே அமைதியாக இருக்கின்றன. மீண்டும் அதிலிருந்து வெளிப்படுவதே சிருஷ்டி, தோற்றத்திற்கு வருதல். அந்த அமைதி நிலையில் எல்லா சக்திகளும் அதாவது எல்லா பிராணன்களும் என்னவாகின்றன? அவை ஆதிபிராணனுடன் ஒடுங்கி விடுகின்றன. இந்தப் பிராணன் ஏறக்குறைய இயக்கமற்றதாகி விடுகிறது; முற்றிலுமாக இயக்கமற்று விடுவதில்லை. இதைத்தான் வேத ஸூக்தம் ஆனீதவாதம்[1]— 'அது அதிர்வுகளின்றி அதிர்ந்தது' என்று கூறுகிறது. உபநிடதங்களில் பல இடங்கள் புரிந்து கொள்ளக் கடினமானவை, குறிப்பாக கலைச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்ற இடங்கள் மிகவும் கடினமானவை. உதாரணமாக 'வாதம்' என்ற வார்த்தையை எடுத்துக் கொள்ளுங்கள். பல இடங்களில் அது வாயு என்ற பொருளிலும், பல இடங்களில் இயக்கம் அதாவது அசைவு என்ற பொருளிலும் பயன்படுத்தப் படுகிறது. பலர் ஒன்றுக்கொன்று மாறாகப் பொருள் செய்து கொண்டு குழப்பிக் கொள்கிறார்கள். இதில் நாம் கவனமாக இருக்க வேண்டும்.

ஜடம் என்று நாம் அழைக்கின்ற பொருள் என்னவாகிறது? ஜடத்திலெல்லாம் சக்திகள் வியாபித்திருக்கின்றன. அவை ஆகாசத்தில் ஒடுங்குகின்றன. அதிலிருந்தே மீண்டும் வெளிவருகின்றன. முதலில் வருவது ஆகாசமே. ஆகாசத்தை ஈதர் (Ether) என்றோ வேறு எப்படியோ மொழிபெயர்த்தாலும் சரி, இந்த ஆகாசமே ஜடப்பொருளின் ஆதி நிலை (Primal Matter) என்பது தான் கருத்து. பிராணனின் இயக்கத்தால் ஆகாசம் அதிர்கிறது. அடுத்த சிருஷ்டி ஆரம்பிக்கும்போது இந்த அதிர்வு விரைவாகிறது, அப்போது ஆகாசம் அலையாகத் திரண்டடித்து,

---

1. ரிக்வேதம், 10.129–322.

சூரியர்கள், நட்சத்திரர்கள் என்றெல்லாம் நாம் அழைக்கின்ற இந்த உருவங்கள் ஆகின்றன.

'யதிதம் கிஞ்ச ஜகத் ஸர்வம் ப்ராண ஏஜதி நி:ஸ்ருதம்[1]— இந்தப் பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் பிராணனின் அதிர்வால் தோற்றத்திற்கு வருகின்றன' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஏஜதி' என்ற வார்த்தையைக் கவனிக்க வேண்டும். அது 'ஏஜ' என்ற மூலத்திலிருந்து வருகிறது. அதன் பொருள் அதிர்தல் என்பது. 'நி:ஸ்ருதம்' என்றால் தோற்றத்திற்கு வருதல். 'யதிதம் கிஞ்ச' என்றால், இந்தப் பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் என்று பொருள்.

பிரபஞ்சக் கருத்தின் ஒரு பகுதி இது. இதில் இன்னும் பல விவரங்கள் இருக்கின்றன. உதாரணமாக இது எப்படி நடை பெறுகிறது? முதலில் ஆகாசமும் அதிலிருந்து மற்ற பொருட் களும் எப்படி உண்டாகின்றன? ஆகாசம் எவ்வாறு அதிரத் தொடங்குகிறது? அதிலிருந்து எப்படி வாயு உண்டாகிறது? இதில் முக்கியமான கருத்து என்னவென்றால் சூட்சுமத்திலிருந்து தான் தூலம் பிறக்கிறது. தூலமாகிய ஜடம்தான் கடைசியாகத் தோன்றுகிறது, இதுதான் மிகவும் புறத்திலும் உள்ளது. தூல ஜடப்பொருளுக்கு முன்னால் சூட்சும ஜடப்பொருள் உள்ளது. எல்லாமே இரண்டாகப் பிரிக்கப் பட்டிருப்பதைக் காண் கிறோம்; ஓர் அறுதி ஒருமையை இன்னும் எட்டவில்லை. ஆற்றல்களின் ஒருமை உள்ளது—அது பிராணன். தூல ஜடத்தின் ஒருமை உள்ளது—அது ஆகாசம். இனி இவை இரண்டிற்கும் அடிப்படையாக ஏதாவது ஒருமை இருக்கிறதா? இவற்றைச் சேர்த்து ஒன்றாக்க முடியுமா? தற்கால விஞ்ஞானத் தில் இந்தக் கேள்விக்குப் பதிலில்லை. இதற்குப் பதில் காணும் ஆற்றலை அவை பெறவில்லை. அந்த ஆற்றலைப் பெற வேண்டு மானால், பழைய கருத்துக்களாகிய பிராணன், ஆகாசம் போன்ற வற்றை அவை இப்போது மெள்ளமெள்ளக் கண்டுபிடித்து வருகின்றனவே, அந்த வழியாகத்தான் செல்ல வேண்டும்.

அடுத்த ஒருமை எங்கும் நிறைந்த நிர்க்குணப் பரம்பொருள். புராணங்களில் நான்கு தலைகள் கொண்ட பிரம்மாவாகவும் மனஇயலில் மகத் என்று சொல்லப்படுவதும் இந்த ஒருமை யையே. இங்குதான் அந்த இரண்டும் ஒருமைப்படுகின்றன. நம் மூளையால் கட்டுப்பட்டிருக்கின்ற மகத்தின் ஒரு சிறிய

---

1. கடோபநிடதம், 2. 3. 2.

பகுதியையே நாம் மனம் என்று சொல்கிறோம், பல மூளைகளிலும் கட்டுண்ட எல்லா மனமும் சேர்ந்து சமஷ்டி, ஒட்டுமொத்தம், பிரபஞ்சம்தழுவிய மனம். ஆராய்ச்சி முடிய வில்லை, தொடர்கிறது. நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பிண்டம், உலக மொத்தத்தையும் சேர்த்தால் அது அண்டம். பிண்டத்தில் நிகழ்வதே அண்டத்திலும் நிகழ்கிறதென்று நாம் ஊகித்தால் அது தவறாகாது. அதாவது நமது சொந்த மனத்தை ஆராய்ந்தறிய நம்மால் முடியுமானால், இங்கு போலவே பிரபஞ்ச மனத்திலும் நடைபெறுகின்றதென்று நாம் நிச்சயமாக முடிவு செய்யலாம்.

மனம் என்றால் என்ன என்பதுதான் கேள்வி. மேலைநாடு களில் தற்காலத்தில் விஞ்ஞானம் வெகுவேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது. கூடவே உடலியல், பழைய மதங்களின் ஒவ்வொரு வலிமையான பிடியையும் படிப்படியாக வென்று வருகிறது. எங்கே காலூன்றி நிற்பதென்று தெரியாமல் திகைத்து நிற்கின்றனர் மேலை நாட்டினர். ஏனெனில் இன்றைய உடலியல் அவர்களின் திகைப்பை இன்னும் அதிகரிப்பதைப்போல் ஒவ் வொரு படியிலும் மனத்தையும் மூளையையும் சமப்படுத்தியே பேசி வருகிறது. ஆனால் இந்தியாவில் இது என்றோ நமக்குத் தெரிந்த விஷயம். மனமும் ஜடப் பொருளே, ஆனால் சற்று நுண்ணியது என்பதையே ஒவ்வோர் இந்துச் சிறுவனும் முதல் பாடமாகக் கற்கிறான். இந்த உடல் தூலமானது; இதற்குப் பின்னால் நாம் சூட்சும சரீரம் என்று அழைக்கின்ற நுண்ணுடல் அல்லது மனம் இருக்கிறது. இதுவும் ஜடப்பொருள்தான், சற்று நுண்ணியது. ஆனால் மனம் ஆன்மா அல்ல.

ஆன்மா என்னும் வார்த்தையை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க முடியாது. ஏனெனில் அந்தக் கருத்து ஐரோப்பாவில் இல்லை. தற்கால ஜெர்மன் தத்துவ அறிஞர்கள் அதை Self என்று மொழிபெயர்த்திருக்கிறார்கள். ஆனால் இந்த வார்த் தையை உலகம் முழுவதும் ஏற்றுக்கொள்ளும்வரை நாம் பயன் படுத்த முடியாது. எனவே Self என்றோ வேறு எப்படியோ குறிப்பிடுங்கள், அது ஆன்மாவே; பின்னாலிருக்கும் உண்மை யான மனிதன் இந்த ஆன்மாவே. இந்த ஆன்மா ஜடப்பொரு ளான மனத்தைத் தனது கருவியாக, அல்லது மனத்தை மனவியல் குறிப்பிடுவதுபோல் தனது அந்தக்கரணமாக, அகக் கருஇயாகப் பயன்படுத்துகிறது. மனம் பல்வேறு அகக் கருவிகளின்மூலம் உடலுறுப்புகளை இயக்குகிறது.

இந்த மனம் என்பது என்ன? நாம் எதையும் உணர்வதற்குப் புற உறுப்புகள் மட்டுமே காரணம் அல்ல என்பதை மேலைத் தத்துவ அறிஞர்கள் நேற்றுதான் கண்டுபிடித்தனர். பார்வைக் கான உண்மையான கருவி கண்கள் அல்ல; இதுபோலவே மற்ற உறுப்புகளும். இவற்றிற்குப் பின்னால் இந்திரியங்கள் எனப்படும் வேறு கருவிகள் உள்ளன. இவையே அவற்றைச் செய்கின்றன. இந்திரியங்கள் கெட்டுவிட்டால், இந்திரனைப்போல் ஆயிரம் கண்களிருந்தாலும் ஒருவனால் எதையும் பார்க்க முடியாது. ஆனால் பார்ப்பது என்றால் அது புறப் பார்வையைக் குறிக்காது என்ற அடிப்படையில்தான் நமது தத்துவம் தொடங்கவே செய்கிறது. உண்மையாகப் பார்ப்பது அகக் கருவிகளே, மூளை யிலுள்ள சில மையங்களே. நீங்கள் எந்தப் பெயரிட்டு வேண்டு மானாலும் அழையுங்கள், ஆனால் கண்களோ, மூக்கோ, காது களோ இந்திரியங்கள் அல்ல. இந்த எல்லா இந்திரியங்களின் மொத்தமும் அதனுடன் புத்தி, சித்தம், அகங்காரம் இவை அனைத்தும் சேர்ந்த ஒன்றையே ஆங்கிலத்தில் mind என்ற சொல்லால் அழைக்கிறார்கள். எனவே நவீன உடலியல் வல்லுனர் உங்களிடம் வந்து, மனம் என்று அழைக்கப்படுவது மூளையே என்றும், மூளை என்பது பல்வேறு கருவிகளால் ஆக்கப்பட்டது என்றும் கூறினால் நீங்கள் கலங்க வேண்டிய தில்லை. உங்கள் தத்துவ ஞானிகள் இதை என்றோ தெரிந்து விட்டிருந்தார்கள், உங்கள் மதத்தின் முதற்கோட்பாடே இது தான் என்று அவர்களிடம் சொல்லுங்கள்.

இனி மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றால் என்ன என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். முதலில் சித்தத்தை எடுத்துக் கொள்வோம். எதனால் மனம் ஆக்கப்பட்டிருக்கிறதோ அதுவே சித்தம், அது மகத்தின் ஓர் அம்சம். மனத்தின் பல்வேறு நிலைகளின் பொதுப் பெயரே சித்தம். கோடைக்கால மாலை யில் அலைகளற்ற, சலனமில்லாத, அமைதியான ஏரி ஒன்றின் கரையில் நிற்கிறீர்கள். ஒருவன் ஒரு கல்லை எறிகிறான், என்ன நடக்கிறது? முதலில், ஒரு செயல்—அந்த நீர்ப்பரப்பில் ஓர் அடி; இரண்டாவதாக, நீர் எழுந்து கல்லை நோக்கி ஓர் எதிர்ச் செயலை அனுப்புகிறது, அந்த எதிர்ச்செயல் ஓர் அலையின் உருவம் எடுக்கிறது. முதலில் தண்ணீர் சிறிது அதிர்கிறது, உடனடியாக ஓர் அலையின் உருவத்தில் ஓர் எதிர்ச்செயலைத் திருப்பியனுப்புகிறது. சித்தத்தை இந்தக் குளத்திற்கு ஒப்பிடு வோம். புறப் பொருட்களே அதற்குள் எறியப்படும் கற்கள்.

இந்திரியங்களின் வாயிலாக ஏதாவது புறப் பொருளுடன் சித்தத்திற்குத் தொடர்பு ஏற்பட்டவுடனே—அந்தத் தொடர்பை ஏற்படுத்த, அதாவது புறப்பொருட்களை உள்ளே கொண்டு செல்ல இந்திரியங்கள் இருந்தேயாக வேண்டும்—ஓர் அதிர்வு உண்டாகிறது. இன்னதென்று நிச்சயமாகாத இந்த அதிர்வே மனம். இந்த அதிர்வுக்கு எதிர்ச்செயல் ஏற்படுகிறது, தீர்மானிக்கின்ற இந்தச் சக்தியே, புத்தி. இந்தப் புத்தியுடன் கூடவே நான்-உணர்வும் புறப்பொருளும் பளிச்சிடுகின்றன. ஒரு கொசு என் கையின்மீது உட்கார்வதாக வைத்துக் கொள்வோம். இந்த உணர்ச்சி என் சித்தத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு, சித்தம் மெள்ள அதிர்கிறது. மன இயலின்படிச் சொல்வதானால் இது தான் மனம். தொடர்ந்து எதிர்ச்செயல் உண்டாகிறது; உடனடியாக, என் கையின்மீது ஒரு கொசு உட்கார்ந்திருக்கிறது என்றும் அதை நான் துரத்த வேண்டுமென்றும் எண்ணம் தோன்றுகிறது. இவ்வாறு எத்தனையோ கற்கள் குளத்தில் எறியப்படுகின்றன. குளத்தைப் பொறுத்தவரை கற்கள் அதாவது அடிகள் புறத்திலிருந்து வருகின்றன. ஆனால் இந்தச் சித்தமாகிய குளத்திற்கு அடிகள் புறவுலகிலிருந்தும் வரலாம், அகவுலகிலிருந்தும் வரலாம். இவையனைத்தும் சேர்ந்ததுதான் அந்தக்கரணம்.

இன்னொரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். பின்னால் அத்வைத நெறியைப் புரிந்துகொள்ள அது உதவியாக இருக்கும். நீங்கள் எல்லோரும் முத்துச் சிப்பிகளைப் பார்த்திருப்பீர்கள். முத்து எப்படி உண்டாகிறது என்பதைப் பற்றியும் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஒரு மணற்துகள் அந்த முத்துச் சிப்பிக்குள் போய்விடுகிறது. அதனால் உறுத்தல் உண்டாகிறது, அதைத் தணிப்பதற்காக சிப்பி எதிர்ச்செயலை உண்டாக்குகிறது, தன் உடலிலிருந்து உண்டாகும் ஒருவிதத் திரவத்தால் மணற்துகளை மூடுகிறது. அந்த மணற்துகளே கெட்டியாகி முத்தாக மாறுகிறது. பிரபஞ்சமே இப்படித்தான், நம்மால் உருவாக்கப்பட்ட முத்தே அது. புறவுலகிலிருந்து நாம் பெறுபவை வெறும் அடிகள் மட்டுமே. அவற்றை உணர வேண்டுமானால்கூட நாம் உள்ளிருந்து எதிர்ச்செயல் புரிந்தாக வேண்டும். அப்படி எதிர்ச்செயல் புரியும்போது, உண்மையில் நமது மனத்தின் ஒரு பகுதியை அந்த அடியை நோக்கிச் செலுத்துகிறோம். அதை நாம் அறியும்போது, அந்த அடியால் உருவாக்கப் பெற்றது உண்மையில் நமது சொந்த மனமே என்பதை அறிந்துகொள்கிறோம். எனவே புறவுலகம் என்பது

முழுக்கமுழுக்க உண்மையானது என்று நம்புபவர்களும் ஒரு விஷயத்தை ஏற்றுக்கொண்டே தீர வேண்டும். உடலியல் எவ்வளவோ வளர்ந்துள்ள இந்த நாளில் அவர்களால் இதனை ஏற்காமலும் இருக்க முடியாது. அந்த விஷயம் இதுதான்— புறவுலகை 'அ' என்று வைத்துக் கொள்வோம்; நாம் அறியும் புறவுலகம் அமனம் ஆகும். இந்த மனப்பகுதி ஆற்றல் வாய்ந்த தாக இருப்பதால், அது 'அ'வை முழுமையாக மூடி விடுகிறது. அதனால் 'அ' அறியப் படாததாகவும் அறிய முடியாததாக வுமே எப்போதும் இருக்கிறது. எனவே புறவுலகம் என்ற ஒன்று இருந்தால்கூட அது அறியப்படாதது, அறியவும் முடியாதது. நாம் அறியும் புறவுலகம் நமது மனத்தால் உருவாக்கப்பட்டு, வடிவம் கொடுக்கப்பட்டு, அழகுபடுத்தப்பட்டது.

அகவுலகிற்கும் இதே நியதிதான். நமது சொந்த ஆன்மா விற்கும் இது பொருந்தும். ஆன்மாவை அறிய வேண்டுமா னாலும் அதை மனத்தின் மூலமாகவே அறிய முடியும். எனவே ஆன்மாவைப்பற்றி அறிந்திருக்கின்ற ஏதோ சிறிதும் ஆன்மாவும் மனமும் சேர்ந்ததேயாகும்; அதாவது மனத்தால் மூடப்பட்ட, உருவம் கொடுக்கப்பட்ட, சித்தரிக்கப்பட்ட ஆன்மாவையே நாம் அறிகிறோம், அதற்கு மேலான எதையும் அல்ல. இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். சிறிது நேரத்தில் மீண்டும் இந்த விஷயத்திற்குத் திரும்பி வருவோம்.

அடுத்ததாக நாம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் இது: இந்த உடல் என்பது ஜடப்பொருளின் தொடர்ந்த பிர வாகம் ஆகும். இதில் ஒவ்வொரு கணமும் சில மூலப்பொருட்கள் சேர்க்கப்படுகின்றன, ஒவ்வொரு கணமும் சில மூலப் பொருட்கள் வெளியேற்றப்படுகின்றன. தொடர்ந்து ஓடுகின்ற ஓர் ஆற்றைப் போன்றது இது. நீர் இடம் மாறிக்கொண்டே இருக்கிறது. என்றாலும் இவை எல்லாவற்றையும் மனத்துள் ஒன்றுசேர்த்து அதை அதே ஆறு என்று கூறுகிறோம். ஆறு என்று எதை நாம் அழைக்கிறோம்? தண்ணீர் மாறிக் கொண் டிருக்கிறது, சுற்றுப்புறமும் மாறிக் கொண்டிருக்கிறது, அப்படி யானால் ஆறு என்பது என்ன? தொடர்ச்சியான இந்த மாறுதல் களின் பெயர்தான் அது.

மனத்தைப் பொறுத்தவரையிலும் அவ்வாறே. இதைத் தான் க்ஷணிக விஞ்ஞான வாதம் என்று கூறுகிறார்கள். புரிந்து கொள்ள மிகவும் கடினமான இது, பௌத்தத் தத்துவத்தில் தீவிரமாக, தர்க்கரீதியாக ஆராயப்பட்டுள்ளது. இந்தியாவிலும்

வேதாந்தத்தின் ஒரு பகுதியை எதிர்ப்பதற்காக இந்த வாதம் எழுந்தது. இதற்குப் பதில் சொல்ல வேண்டியிருந்தது. இதற்குச் சரியான மறுப்பை அத்வைதத்தின்மூலம் மட்டுமே கொடுக்க முடியும் என்பதைப் பின்னால் காண்போம். மக்கள் அத்வைதத்தைப்பற்றி விசித்திரமான கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்கள். பலர் அத்வைதம் என்றாலே மிரள்கிறார்கள், ஆனால் அதுதான் உலகிற்கே கதிமோட்சமானது. ஏனெனில் அது மட்டுமே காரணகாரியங்களுக்கு ஏற்றதாக இருக்கிறது. துவைதமும் அதுபோன்ற நெறிகளும் வழிபாட்டிற்கு ஏற்றவையாக, மனத்திற்கு இதமானவையாக இருக்கின்றன என்ற விதத்தில் மிக நல்லவையே. மனத்தை உயர்நிலைக்கு எடுத்துச் செல்வதிலும் அவை துணை செய்யலாம். ஆனால் அறிவுபூர்வமாக மதத்தைப் பின்பற்ற வேண்டுமென்றால் அத்வைதம் ஒன்றே புகலிடம்.

நாம் எடுத்துக்கொண்ட விஷயத்தை இப்போது ஆராய்வோம். மனமும் இவ்வாறே ஆறுபோல் ஒரு பக்கம் நிறைந்து கொண்டும் மற்றொரு பக்கம் வடிந்துகொண்டும் இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அப்படியானால் நாம் ஆன்மா என்று அழைக்கின்ற அந்த ஒருமை எங்கே இருக்கிறது? விஷயம் இதுதான்: உடம்பு இடைவிடாமல் மாறுதல் அடைந்து கொண்டிருக்கிறது, மனமும் இடைவிடாது மாறிக்கொண்டே இருக்கிறது. எனினும் மாறாத ஒன்று நம்முள் இருக்கிறது. பொருட்களைப் பற்றிய நமது கருத்துக்களுக்கு மாற்றமில்லாததுபோல் தோன்றச் செய்வது இதுவே. பல்வேறு திசைகளிலிருந்து வருகின்ற ஒளியின் கிரணங்கள் ஒரு திரை அல்லது சுவர் அல்லது மாறாத ஏதோ ஒன்றின்மீது விழும்போது மட்டுமே அவை ஓர் ஒருமையை உருவாக்க முடியும்; அவை ஒன்றுசேர்ந்து ஒரு முழுமையான உருவம் ஆக முடியும். இத்தகைய ஒருமை மனிதனின் உறுப்புகளில் இருக்க முடியுமா? அவற்றின் மீது பல்வேறு எண்ணங்கள் விழும்போது அவை ஒன்று சேர்ந்து ஒரு முழுமையாக முடியுமா? முடியாது. அது நிச்சயமாக மனமாகவும் இருக்க முடியாது, ஏனெனில் அதுவும் மாறுதல் அடைந்து கொண்டே இருப்பதை நாம் காண்கிறோம். ஆதலால் உடலையும் மனத்தையும் தவிர மாறாத, நிலையான ஏதோ ஒன்று இருக்க வேண்டும். அதன்மீதுதான் நமது எண்ணங்களும் உணர்ச்சிகளும் பட்டு ஓர் ஒருமையை, ஒரு முழுமையை உருவாக்கிக் கொண்டிருக்க வேண்டும். அதுவே ஆன்மா, மனிதனின்

ஆன்மா. ஜடப்பொருள் எல்லாமே— அதை நீங்கள் சூட்சும ஜடம் என்று அழைத்தாலும் சரி மனம் என்று அழைத்தாலும் சரி— மாறுகிறது. அதனுடன் ஒப்பிடும்போது, தூலப் பொருள் அதாவது புறவுலகமும் மாறுகிறது. இதைப் பார்க்கும் போது, மாறாத அந்தப் பொருள் ஜடப் பொருளால் ஆன ஒன்றாக இருக்க முடியாது என்பது தெளிவாகிறது. ஜடப் பொருள் இல்லையென்றால் அது சைதன்யமாகவே, உணர்வுப் பொரு ளாகவே இருக்க வேண்டும். அது ஜடப் பொருள் அல்லாதது, அழியாதது, மாறாதது.

இனி வேறொரு கேள்வி பிறக்கிறது. புறவுலகைப் படைத் தது யார்? ஜடப்பொருட்களைப் படைத்தது யார்? ஜடவுலக நிலையில்தான் இந்தக் கேள்விகள் எழ முடியும் என்றெல்லாம் இந்தக் கேள்விகளுக்கு அனுகூலமாகப் பதில் சொல்லிவிட லாம். இந்த வாதங்களை ஒதுக்கிவிட்டாலும் கேள்விகள் எழத் தான் செய்கின்றன. மனிதனின் அக இயல்பிலிருந்து மட்டுமே உண்மையை அறிய வேண்டும் என்பதே இங்கு நோக்கம். ஆன்மாவைப்பற்றி எழும் கேள்வியைப் போலவே இந்தக் கேள்வியும் எழுகிறது.

மனமும் உடலும் அல்லாத, மாறாத ஆன்மா ஒன்று ஒவ் வொருவரிடமும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்படி யானால் எண்ணத்திலும் உணர்ச்சியிலும் இந்த ஆன்மாக்கள் அனைத்திற்குள்ளும் ஒருமை இருப்பதை ஏற்றுக்கொள்ள வேண் டும். என் ஆன்மா உங்கள் ஆன்மாவின்மீது எப்படிச் செயல்பட முடிகிறது? எதன்மூலம் அது அவ்வாறு வேலை செய்கிறது? உங்கள் ஆன்மாவைப் பற்றிய அனுபவத்தை நான் எப்படி உணர முடிகிறது? நம் இருவரின் ஆன்மாவையும் இணைத்து வைப்பது எது? எனவே மற்றோர் ஆன்மாவை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் தத்துவரீதியாக (Metaphysical necessity) ஏற்படுகிறது. அது பல்வேறு ஆன்மாக்களுடன் தொடர்பு கொண்டு, ஜடத்திலும் ஜடத்தின் ஊடேயும் செயல்பட வேண்டும்; எண்ணற்ற ஆன்மாக்களில் எல்லாம் வியாபித்து நிற்க வேண்டும். அந்த ஆன்மாவிலும் அதன் ஊடேயும்தான் மற்ற ஆன்மாக்கள் வாழவும், அனுபவிக்கவும், அன்பு காட்டவும், ஒருவருக்கொருவர் துணையாகச் செயல்படவும் வேண்டும். பிரபஞ்சம் தழுவிய இந்த ஆன்மாவே பரமாத்மா, பிரபஞ்சத் தின் தலைவரான இறைவன். இனி, ஆன்மா ஜடப்பொரு ளால் ஆக்கப்பட்டதல்ல, அது உணர்வுமயமானது, எனவே

ஜடப்பொருட்களைக் கட்டுப்படுத்தும் விதிகளுக்கு அது கட்டுப்பட வேண்டியதில்லை, ஜடப்பொருளின் நியமங்கள் மூலம் அதை நிர்ணயம் செய்யவும் முடியாது. எனவே அது வெல்ல முடியாதது, பிறப்பும் இறப்பும் இல்லாதது; மாறுதல் இல்லாதது.

'நைனம் சிந்தந்தி சஸ்த்ராணி நைனம் தஹறதி பாவக:|
ந சைனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதிமாருத:||
நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரசலோऽயம் ஸனாதன:||[1]

—இந்த ஆன்மாவை ஆயுதங்கள் துளைக்க முடியாது, நெருப்பு எரிக்க முடியாது; தண்ணீர் நனைக்க முடியாது; காற்று உலர்த்த முடியாது. இந்த மனித ஆன்மா மாறாதது, எங்கும் நிறைந்தது, அசைவற்றது, அசைக்க முடியாதது, நித்திய மானது.' இந்த ஜீவாத்மாவும் விபு அதாவது எங்கும் நிறைந் தது என்று கீதையும் வேதாந்தமும் கூறுகின்றன. அது எங்கும் வியாபித்திருப்பது என்று கபிலர் கூறுகிறார். ஆன்மா அணு போன்றது என்று கூறும் மதப் பிரிவினரும் இந்தியாவில் உள்ளனர்; வெளிப்பாட்டில் அது அணுவே தவிர, அதன் உண்மை இயல்பு விபு அதாவது எங்கும் நிறைந்திருப்பது என்பது அவர்களின் கருத்து.

இப்போது வேறு ஒரு கருத்திற்கு வருகிறோம். ஒருவேளை இது திடுக்கிட வைக்கின்ற கருத்தாக இருக்கலாம். ஆனால் இது முழுக்கமுழுக்க இந்தியக் கருத்து. நம் எல்லா நெறிகளுக்கும் பொதுவாக ஏதாவது கருத்து இருக்கிறதென்றால் அது இது தான். இந்தியாவில் அனைத்திற்கும் அடிப்படையே இது தான். ஆதலால் இதை நீங்கள் கவனமாகக் கேட்க வேண்டும். அது இதுதான்: மேலைநாட்டில் ஜெர்மன் மற்றும் ஆங்கில ஆராய்ச்சியாளர்கள் பரிணாமத்தைப்பற்றிச் சொல்வதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். எல்லா உயிர்களின் உடலும் அடிப் படையில் ஒன்றே, நாம் காண்கின்ற வேறுபாடுகள் எல்லாம் ஒரே தொடர்ச்சியின் வெளிப்பாட்டு வேற்றுமைகளே, சாதாரணப் புழுவிலிருந்து மிக உயர்ந்த மகான்வரை அவர் களின் உள்ளிருப்பது ஒன்றே, ஒன்று மற்றொன்றாக மாறிமாறிப் படிப்படியாக உயர்ந்த நிலையை அடைந்து பூரணத்தைப் பெறுகின்றன என்று அவர்கள் கருதுகிறார்கள். இந்தக் கருத்து நம்மிடமும் இருந்தது. 'ஜாத்யந்தர பரிணாம: ப்ரக்ருத்யாபூராத்'[2]

1. கீதை, 2. 23,24.
2. யோக சூத்திரம், 4. 2; ஞானதீபம், சுடர் 2, பக்கம் 188 பார்க்க.

என்று பதஞ்ஜலி கூறுகிறார். ஓர் இன உயிர் மற்றோர் உயிராக மாறுகிறது, இதுதான் பரிணாமம். ஜாதி என்றால் இனம், பரிணாமம் என்றால் ஒன்று மற்றொன்றாக மாறுதல்—ஓர் இனம் மற்றொன்றாக மாறுவதைப் போல். நாமும் ஐரோப்பியர் களும் எங்கு வேறுபடுகிறோம்? பதஞ்ஜலியின் கருத்துப் படி, 'ப்ரக்ருத்யாபூராத்—இயற்கையின் உள்நிறைவுமூலம்' பரிணாமம் ஏற்படுகிறது. போட்டியும், இயல்பான பாலியல் சம்பந்தமான தேர்ந்தெடுப்பும்தான் ஓர் உடல் மற்றோர் உடலை எடுக்கும்படிச் செய்கிறது என்று மேலை நாட்டு அறிஞர்கள் சொல்கிறார்கள். ஆனால் பதஞ்ஜலி முனிவரின் கருத்து இதை விடச் சிறந்த ஆராய்ச்சியாக, இதைவிட ஆழமாக, கருத்தினுள் செல்வதாக உள்ளது.

'இயற்கையின் உள்நிறைவின்மூலம்' என்று அவர் கூறிய தன் பொருள் என்ன? அமீபாவும் படிப்படியாக உயர்நிலைகளை அடைந்து கடைசியாக புத்தர் நிலையை அடைகிறது என்பதை நாம் ஒப்புக்கொள்கிறோம். அதேவேளையில் இன்னொன்றும் சர்வ நிச்சயம். அதாவது, எந்திரம் ஒன்றிற்கு எந்த வகையிலாவது எவ்வளவு ஆற்றலை அளிக்கிறோமோ அந்த அளவுதான் அது வேலை செய்யும். அதனுள் செலுத்தும் சக்தியும் வெளிப்படும் சக்தியும் வெவ்வேறாக இருந்தாலும் மொத்த ஆற்றலின் அளவு மாறாமல் இருக்கிறது. ஒரு பயன் உங்களுக்கு வேண்டுமானால், அதற்கு வேண்டிய ஆற்றலை அதே அளவில் ஏதாவதொரு விதத்தில் நீங்கள் அளித்தேயாக வேண்டும். எனவே புத்தர் வேண்டுமானால், அமீபா, புத்தரை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். அமீபாவே புத்தராகப் பரிணமிக்கிறது என்றால் அந்த அமீபாவுக்குள் புத்தர் இருந்திருக்க வேண்டும்! ஏறக்குறைய எல்லையற்ற ஆற்றலின் வெளிப்பாடே இந்தப் பிரபஞ்சம் என் றால், ஒடுங்கிய நிலையில் பிரபஞ்சம் இருக்கும்போதும் அந்த ஆற்றல் இதற்குள்தான் இருந்திருக்க வேண்டும், இல்லாதிருக்க முடியாது.

இதன்படிப் பார்த்தால் ஒவ்வோர் ஆன்மாவும் எல்லை யற்றது என்றாகிறது. நம் காலடியில் ஊர்ந்து செல்லும் மிகத் தாழ்ந்த புழுவிலிருந்து மிக உயர்ந்த மகான்வரை எல்லா உயிர் களிலும் எல்லையற்ற ஆற்றலும், எல்லையற்ற தூய்மையும் எல்லையற்ற அளவில் எல்லாமுமே இருக்கின்றன. அவற்றை வெளிப்படுத்தும் அளவில்தான் வேற்றுமை எல்லாம். புழு மிகச்சிறிய அளவை வெளிப்படுத்துகிறது, நீங்கள் அதைவிட

அதிகமாக வெளிப்படுத்தலாம்; ஒரு தெய்வ-மனிதர் இன்னும் அதிகமாக வெளிப்படுத்தி இருப்பார்; வேற்றுமை இதுதான். அந்த எல்லையற்ற ஆற்றல் அனைவரிடமும் உள்ளது. 'தத: க்ஷேத்ரிகவத்[1]— உழவன் தன் வயலுக்கு நீர் பாய்ச்சுவதுபோல்' என்று பதஞ்ஜலி சொல்வார். எங்கோவுள்ள குளத்திலிருந்து உழவன் தன் வயலுக்கு ஒரு மூலை வழியாக நீர் பாய்ச்சுகிறான். சிறு அடைப்பு ஒன்று தண்ணீரைப் பாய விடாமல் தடுக்கலாம். அவன் தண்ணீர் பாய்ச்ச விரும்பும்போது அந்த அடைப்பை மட்டும்தான் விலக்க வேண்டும், தண்ணீர் தன்னியல்பாகவே மளமளவென்று வயலில் பாய்ந்துவிடும். அந்தத் தண்ணீருக்குப் பாயும் சக்தியைக் கொடுக்க வேண்டியதில்லை. அந்தச் சக்தி ஏற்கனவே அதில் இருக்கிறது. நாம் அனைவரும் அந்த நிலையில் தான் இருக்கிறோம். நம் ஒவ்வொருவருக்கும், ஒவ்வோர் உயிருக்கும் பின்னணியாக அத்தகைய எல்லையற்ற வலிமை, எல்லையற்ற ஆற்றல், எல்லையற்ற தூய்மை, எல்லையற்ற ஆனந்தம், எல்லையற்ற உண்மை எல்லாம் இருக்கின்றன. நாம் உண்மையில் யாரோ, அதனை முழுமையாக வெளிப்படுத்த முடியாமல் அடைப்புகளாகிய இந்த உடல்கள் தடுத்துக் கொண்டிருக்கின்றன. இந்த உடல் நுண்மையாக நுண்மையாக, குணம் ரஜோகுணமாக மாறமாற, ரஜோகுணம் சத்வகுணமாக மாறமாற தூய்மையும் ஆற்றலும் அதிகமாக வெளிப்படும்.

இதனால்தான் நம் முன்னோர்கள் உணவு விஷயத்தில் மிகவும் கவனமாக இருந்திருக்கிறார்கள். திருமணம் பற்றிய விஷயங்களில் எவ்வாறு நமது பழைய உட்கருத்துக்கள் மறைந்து விட்டனவோ, அவ்வாறே உணவுப் பழக்க வழக்கங்களிலும் அதன் உண்மையான அடிப்படை மறைந்துவிட்டதாகச் சொல்லலாம். நமது கருத்திற்குத் தொடர்பில்லை எனினும் திருமணம் பற்றிய உதாரணம் ஒன்றை எடுத்துக் கொள்கிறேன், வேறு சந்தர்ப்பம் கிடைத்தால் விரிவாகப் பேசுகிறேன். ஆனால் திருமணத்தைப் பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்துக்களே, மனித இனத்திற்கு உண்மையாக நாகரீகம் தரக்கூடியவை என்பதை மட்டும் இப்போது சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தனது சுகத்திற்காக, தனது மிருக இச்சையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகத் தான் விரும்புபவரை, மனைவி அல்லது கணவனாக

1. யோக சூத்திரம், 4. 3; ஞானதீபம், சுடர் 2, பக்கம் 189 பார்க்க.

ஏற்றுக்கொள்ளும் சுதந்திரத்தை அளித்தால் தீமையே அதன் விளைவாக இருக்கும். அத்தகைய திருமணத்தின் பயனாகப் பிறக்கும் குழந்தைகள் தீயவர்களாக, கொடியவர்களாக, அசுரத்தனம் கொண்டவர்களாகத்தான் இருப்பார்கள். ஒவ்வொரு நாட்டிலும் மனிதன் ஒருபுறம் இத்தகைய மிருகத் தனமான குழந்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறான்; மறுபுறம் இவர்களை அடக்கியாள போலீஸ்படையை அதிகரித்துக் கொண்டிருக்கிறான். பிரச்சினை, தீமையை எப்படி அழிப்பது என்பதல்ல, எப்படி தீமையே உண்டாகாமல் தடுப்பது என்பதுதான். நீங்கள் சமுதாயத்தில் இருக்கும்வரை, உங்கள் திருமணம் சமுதாயத்தில் இருக்கின்ற ஒவ்வொருவரையும் நிச்சயமாகப் பாதிக்கவே செய்யும். எனவே நீங்கள் யாரை மணக்க வேண்டும், யாரை மணக்கக் கூடாது என்று சட்டம் செய்ய சமுதாயத்திற்கு அதிகாரம் இருக்கிறது. நமது திருமண அமைப்பிற்குப் பின்னால் இதுபோன்ற மிகவுயர்ந்த கருத்துக்கள் இருக்கின்றன. இவற்றையே ஜோதிட சாஸ்திரம் 'ஜாதி' அதாவது பொருத்தம் என்று அழைக்கிறது. காமபோகத்தின் விளைவாகப் பிறக்கின்ற குழந்தை ஆரியன் அல்ல என்பது மனுவின் கருத்து என்பதையும் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். வேத முறைகளின்படி கருவுற்று, வாழ்ந்து, இறப்பவனே ஆரியன். ஆம், ஒவ்வொரு நாட்டிலும் இத்தகைய குழந்தைகள் மிகக் குறைவாகவே பிறக்கிறார்கள். அதன் பயனாகவே இன்று நாம் கலியுகம் என்று கூறும் இவ்வளவு கெடுதல்கள் உலகில் இருக்கின்றன.

இந்த லட்சியங்கள் அனைத்தையும் நாம் இழந்துவிட்டோம். இன்று இந்தக் கருத்துக்களை முழுவதுமாகப் பின்பற்ற முடியாது என்பது உண்மை. அந்த உன்னத லட்சியங்களுள் சிலவற்றை இன்று வெறும் கேலிச் சித்திரங்களாக்கியுள்ளோம் என்பது உண்மையே. தற்கால தாய்தந்தையரும் முன்போல் இல்லை, சமுதாயமும் அன்றிருந்தது போலன்றி கல்வியறிவில் மிகத் தாழ்ந்த நிலையில் உள்ளது, மக்களும் முன்போல் ஒருவருக் கொருவர் அன்புடையவர்களாக இல்லை என்பது வருத்தம் தரக்கூடிய உண்மை. ஆனால் இந்தக் கருத்துக்கள் எவ்வளவு தான் தவறான முறைகளில் கடைப்பிடிக்கப்பட்டாலும் அந்தக் கோட்பாடுகள் அப்பழுக்கற்றவை; அதன் செயல்முறை தவறாகி விட்டால், ஒரு வழி தோற்றுவிட்டால், கோட்பாட்டை எடுத் துக்கொண்டு இன்னொரு வழியைக் கடைப்பிடித்து நன்றாகச்

செய்ய முயல வேண்டும். வழிகளில் தவறிருந்தால், அதற்காகக் கோட்பாட்டை விட்டுவிடுவது எப்படி நியாயமாகும்?

இந்த மாதிரியே உணவு விஷயமும். உணவு விஷயத்தில் இப்போது நாம் கடைப்பிடித்து வரும் முறை மிகமிக மோசமானது. ஆனால் நாம் உண்ணும் உணவு தூய்மையாக இருக்க வேண்டும் என்ற உயர்ந்த நிரந்தரமான கோட்பாட்டை அது பாதிக்கவில்லை. அந்தக் கோட்பாட்டை வைத்துக்கொண்டு, அதன் செயல்முறையைச் சீர்திருத்தி, புதியதாக மாற்றி, பின் பற்றுங்கள்.

ஆன்மாபற்றிய இந்த மாபெரும் கருத்தை நாட்டின் எல்லா நெறிகளும் ஏற்றுக்கொண்டாக வேண்டும். தீவினை காரணமாக ஆன்மா சங்குசிதமாகி விட்டதாகவும், அதாவது அதன் இயல்பும் ஆற்றல்களும் சுருங்கி விட்டதாகவும், நல்வினைகளின் பயனாக அது மறுபடியும் விரியும் என்றும் துவைதிகள் சொல்கிறார்கள். அத்வைதிகளோ, ஆன்மா சுருங்குவதோ விரிவதோ கிடையாது, அவை வெறும் தோற்றமே என்கிறார்கள்; வேறுபாடு இதுதான். ஆனால், ஆன்மாவில் ஏற்கனவே எல்லா ஆற்றல்களும் இருக்கின்றன, வெளியிலிருந்து எந்தச் சக்தியும் அதனுள் வருவதில்லை, வான வெளியிலிருந்து ஏதோ அதனுள் நுழைவதில்லை என்ற கருத்து எல்லோருக்கும் பொதுவானது. வேதங்கள்கூட நமக்கு அருளப்பட்டவை அல்ல, வெளியில் எங்கிருந்தோ வந்தவை அல்ல; மாறாக அவை உள்ளிருந்து வெளிவந்திருக்கின்றன, ஒவ்வோர் ஆன்மாவிலும் குடிகொண்டிருக்கும் நிரந்தர உண்மைகளே வேதங்கள். இதனை நன்றாக நினைவில் வையுங்கள். எறும்பின் ஆன்மாவிலும் வேதங்கள் உள்ளன, தேவனின் ஆன்மாவிலும் வேதங்கள் இருக்கின்றன. எறும்பு படிப்படியாகப் பரிணமித்து ரிஷியாக வேண்டும். அப்போது வேதங்கள், அந்த நிரந்தர உண்மைகள் தாமாகவே வெளிப்படும். இந்தச் சிறந்த கருத்தை நாம் அனைவரும் உணர்ந்துகொள்ள வேண்டும். அனைத்து ஆற்றல்களும் நம்முள்ளே இருக்கின்றன. நமது முக்தியும் ஏற்கனவே நம்முள் இருக்கிறது. ஆன்மா சுருங்கியுள்ளது அல்லது மாயையாகிய திரையால் மறைக்கப்பட்டிருக்கிறது என்று எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள், கருத்து இதுதான்— மிகத் தாழ்ந்தவர் முதல் அனைவரிடமும் புத்தர் ஆவதற்கான வாய்ப்பு இருக்கிறது. இதை நீங்கள் நம்பியே தீர வேண்டும். ஆன்மா பற்றிய கோட்பாடு இதுதான்.

இதற்குமேல் ஒரு பெரிய சண்டை வருகிறது. உடலும் மனமும் ஜடப்பொருளின் பிரவாகங்கள் என்று பௌத்தர்களும் ஆராய்ந்து முடிவு கண்டிருக்கிறார்கள். ஆனால், அதற்காக ஆன்மா என்ற ஒன்று தேவையில்லை, ஆன்மா என்ற ஒன்று இருக்கிறதென்ற முடிவுக்கும் வர வேண்டியதில்லை என்று அவர்கள் கூறுகிறார்கள். பண்புகளை ஒப்புக்கொண்டுவிட்டு, அவை சார்ந்திருக்கின்ற ஒரு பொருளையும் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்? எங்களைப் பொறுத்தவரை பண்புகள், பண்புகள் மட்டுமே போதும். ஒரு பொருளை விளக்க ஒரு காரணமே போதுமானதாக இருக்க, இன்னொரு காரணத்தை ஏற்றுக் கொள்வது அறிவுக்குப் பொருந்தாத ஒன்று—இவ்வாறு பௌத்தர்களின் வாதங்கள் தொடர்கின்றன. பொருள் அதாவது ஆன்மா பற்றிய கருத்துக்கள் அனைத்தையும் அவர்கள் ஒரேயடியாக முறியடித்துவிட்டார்கள். உங்களுக்குத் தனி ஆன்மா, எனக்குத் தனியாக ஆன்மா, அவ்வாறே ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஆன்மா இருக்கிறதென்றும், இந்த ஆன்மா ஒவ்வொன்றும் தனித்தனியானவை என்றும், அவை உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் வேறுபட்டவை என்றும் கூறி, பொருளையும் அதன் பண்புகளையும் ஏற்பவர்களுக்குத் தொடர்ந்த வீழ்ச்சி உண்டாயிற்று.

இதுவரை பார்த்ததில் துவைதக் கருத்தில் பிரச்சினை எதுவும் இல்லை—உடல் ஒன்று உள்ளது, அதற்கடுத்து ஒரு நுண்ணுடல் அதாவது மனம், அதன்பிறகு ஓர் ஆன்மா; இந்த எல்லா ஆன்மாக்களின் உள்ளும் புறமும் நிறைந்த ஒரு பரமாத்மா அதாவது கடவுள். பிரச்சினை இங்கேதான் எழுகிறது. ஆன்மா, பரமாத்மா இரண்டுமே வஸ்துக்கள், பொருட்கள்; உடலும், மனமும், நாம் பொருட்கள் அல்லது வஸ்துக்கள் என்று அழைக்கின்ற பிறவும் பல்வேறு பண்புகளைப்போல் இவற்றைப் பற்றிநிற்கின்றன. ஆனால் யாரும் வஸ்துவைக் கண்டதில்லை, கருத்தில் கொள்ளவும் முடியாது, அத்தகைய ஒன்றைப்பற்றி ஏன் நினைக்க வேண்டும்? ஏன் க்ஷணிக வாதத்தை ஏற்றுக்கொண்டு அவர்கள் கூறுவதுபோல், இருக்கும் அனைத்தும் மனப் பிரவாகங்களின் தொடர்ச்சியே தவிர, வேறல்ல என்று கூறக் கூடாது? இந்தப் பிரவாகங்கள் ஒன்றை ஒன்று பற்றிநிற்பதில்லை, சேர்ந்து ஒன்றாவதில்லை; கடலின் அலைகளைப்போல் ஒன்றை மற்றொன்று தொடர்ந்து வருகிறதே தவிர அவை முழுமை பெறுவதும் இலை, சேர்ந்து முழுமையான

ஒன்றாக மாறுவதும் இல்லை. அலைகளின் தொடர்ச்சியே மனிதன்; ஒன்று போகும்போது அது மற்றொன்றை உருவாக்கு கிறது. இந்த அலைகள் ஓய்வதுதான் நிர்வாணம். இந்த வாதத் தின் முன்னால் துவைதம் மௌனமாகி விடுகிறது, எந்த எதிர் வாதத்தையும் அதனால் கொண்டுவர முடியாது. துவைதக் கடவுளையும் இங்கே நிலைநிறுத்த முடியாது. ஒரு கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்றாலும், அவர் ஒருவர், அவர் கைகளில்லாமல் உலகைப் படைக்கிறார், கால்கள் இல்லாமல் நடக்கிறார், குயவன் பானை செய்வதுபோல் உலகைப் படைக் கிறார் என்றெல்லாம் சொல்வது குழந்தைத்தனமாக இருக்கிறது என்று பௌத்தர்கள் கூறுகிறார்கள். இப்படி ஒரு கடவுள் இருப்பாரானால், தாங்கள் அவரை வழிபடப் போவதில்லை, எதிர்க்கவே விழைவதாக அவர்கள் சொல்கிறார்கள். துக்கம் நிறைந்தது உலகம். இதனைப் படைத்தது கடவுள் என்றால் அவரை எதிர்க்கவே வேண்டும் என்கிறார்கள். இத்தகைய ஒரு கடவுள் கருத்து அறிவுபூர்வமானது அல்ல, இது ஏற்றுக் கொள்ள முடியாதது, இதனை நீங்களும் அறிவீர்கள். இந்தப் படைப்புக் கொள்கையின் குறைபாடுகளுக்கு நாம் போக வேண் டியதில்லை, நமது க்ஷணிகவாதிகள் அவற்றைத் தெளிவாகக் காட்டி விட்டார்கள். இவ்வாறு உருவக் கடவுள் கொள்கை முறியடிக்கப்பட்டது.

உண்மையை, உண்மையை மட்டுமே பின்பற்ற வேண்டும் என்று அத்வைதி சொல்கிறான்: 'ஸத்யமேவ ஜயதே நான்ருதம்| ஸத்யேனைவ பந்தா விததோ தேவயான:[1]— வாய்மையே வெல் லும், வாய்மையற்றது அல்ல; தேவயானத்திற்கான பாதை வாய்மையின் வழியாகவே செல்கிறது.' ஒவ்வொருவரும் இந்தக் கொடியின் கீழ்தான் முன்னேறுகிறார்கள். ஆம். ஆனால் அதன் நோக்கமெல்லாம் பலவீனனை அடக்கி அவனைத் தன்கீழ் கொண்டுவருவதுதான். நீங்கள் துவைதியாக இருக்கலாம்; உருவத்தை வழிபடும் ஓர் அப்பாவியைக் கண்டால், நீங்கள் மிகவும் புத்திசாலி என்று நினைத்துக் கொண்டு, அவனிடம் வாதித்து, அவன் மனத்தில் குழப்பத்தை உண்டாக்குவீர்கள். ஆனால் அவன் திரும்பி, நீங்கள் வழிபடும் சகுணக் கடவுள் கருத்தைத் தவறென்று நிரூபித்தால் உங்கள் கதி என்னவாகும்? நம்பிக்கைதான் முக்கியம் என்றெல்லாம் சொல்வீர்கள்; அல்லது

---

1. முண்டக உபநிடதம், 3. 1. 6.

உங்களுக்கு எதிராக வாதம் செய்பவர்கள் நாத்திகர்கள் என்று கூறுவீர்கள். வாதத்தில் தோற்றுவிட்டால் எதிர்த் தரப் பினரை நாத்திகர்கள் என்று கூறிவிடுவது பலவீனன் கடைப் பிடிக்கின்ற பழைய விஷயம்தானே! நீங்கள் அறிவுபூர்வமாக இருக்க விரும்பினால், இறுதிவரை அறிவுபூர்வமாகவே இருங்கள். அப்படி இருக்க முடியாவிட்டால் நீங்கள் எதிர்பார்க் கின்ற சலுகைகளைப் பிறருக்கும் அளியுங்கள்.

கடவுள் இருப்பதை நீங்கள் எப்படி நிரூபிப்பீர்கள்? மாறாக, அவரை ஏறக்குறைய மறுத்தேவிடலாம். அவர் இருக் கிறார் என்று நிரூபிப்பதற்கு சாட்சியங்களின் சாயல்கூட இல்லை; மறுப்பதற்கோ உறுதியான பல வாதங்கள் இருக்கின் றன. கடவுள், அவரது குணங்கள், வஸ்துக்களாகிய எண்ணற்ற ஆன்மாக்கள், ஒவ்வோர் ஆன்மாவும் தனித்தனியானவை— இப்படியெல்லாமான ஒரு கடவுளை நீங்கள் எப்படி நிரூபிப் பீர்கள்? எந்த விஷயத்தில் நீங்கள் தனித்துவம் வாய்ந்தவர்கள்? நீங்கள் உடம்பு என்ற முறையில் உங்களுக்குத் தனித்தன்மை இல்லை, பண்டைய பௌத்தர்களைவிட இன்று இது உங் களுக்கு நன்றாகத் தெரியும். நேற்று சூரியனிடத்திலிருந்த ஜடப் பொருள் இன்று உங்கள் உடலில் இருக்கலாம். நாளை அது ஒரு செடியில் போய்ச் சேரலாம். இவ்வாறு உடம்பு ஓயாமல் மாறிக்கொண்டிருக்கையில், உங்களை இன்னார் என்று சொல்லிக்கொள்ளக்கூடிய உங்கள் தனித்துவம் எங்கே? மனமும் இவ்வாறுதான். எங்கே உங்கள் தனித்துவம்? இன்றிரவு ஒன்றை நினைக்கிறீர்கள், நாளை வேறொன்றை நினைக்கிறீர்கள். குழந்தைகளாக இருந்தபோது நினைத்ததுபோல் இப்போது நினைப்பதில்லை. இளைஞர்களாக இருந்தபோது நினைத் ததைப்போல் வயதானபின் நினைப்பதில்லை. அப்படியானால் உங்கள் தனித்துவம் எங்கிருக்கிறது? உணர்ச்சியினுள் அல்லது அகங்காரத்தினுள் என்று சொல்லாதீர்கள். ஏனெனில் நம் வாழ்க்கையின் ஒரு சிறிய பகுதியில் மட்டுமே அது வியாபித் திருக்கிறது. நான் உங்களுடன் பேசிக்கொண்டிருக்கிறேன், இப்போது என் அவயவங்கள் எல்லாம் வேலை செய்து கொண்டிருக்கின்றன, ஆனால் நான் அதனை உணரவில்லை. உணர்ச்சிதான் அவை இருப்பதற்கு முடிவான சாட்சியம் என்றால், அவைபற்றி எனக்கு உணர்வில்லாததால், அவை இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். உருவக் கடவுளைப் பற்றிய கொள்கைகள் உங்களை எங்கு கொண்டுபோய்

விடுகின்றன என்று பார்த்தீர்களா? இத்தகைய கடவுளை நீங்கள் எப்படி நிரூபிக்க முடியும்?

இத்தகைய கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பது அறிவு பூர்வமாக இல்லை என்பது ஒருபுறமிருக்க, இந்தக் கருத்தைப் பரப்புவதுகூட நன்னெறிக்கு விரோதமானது என்று பௌத்தர்கள் அடித்துச் சொல்கிறார்கள். வெளியிலிருந்து எந்த உதவியும் மனிதனுக்கு வருவதில்லை என்பது உண்மையாக இருக்க, ஏன் அவனைப் புறவுதவியை நாடும்படிச் செய்து கோழையாக்க வேண்டுமென்று அவர்கள் கேட்கிறார்கள். இதோ இந்தப் பிரபஞ்சம் உள்ளது. இது மனிதனால் உண்டாக்கப்பட்டது. அப்படியிருக்க, யாரும் பார்த்திராத, அறிந்திராத, யாரும் எந்த உதவியும் பெற்றிராத ஒரு கடவுளைப் புறத்தேயிருப்பதாகக் கற்பனை செய்து, ஏன் அவரைச் சார்ந்திருக்க வேண்டும்? ஏன் உங்களையே நீங்கள் கோழைகளாக்கிக் கொள்கிறீர்கள்? நாய் போல் ஒருவரிடம் பணிந்து நிற்பதுதான், ஒரு கற்பனை உருவின் காலடியில் கிடப்பதுதான், உங்களையே பலவீனர்கள் என்றும் உலகிலேயே இழிந்த பாவிகள் என்றும் சொல்லிக் கொள்வது தான் மனிதனின் மிகவுயர்ந்த நிலை என்று ஏன் உங்கள் குழந்தைகளுக்குக் கற்பிக்கிறீர்கள்? இதனால் நீங்கள் பொய் சொல்வதுடன், உங்கள் குழந்தைகளுக்குப் பெருந்தீங்கையும் விளைவிக்கிறீர்கள் என்று பௌத்தர்கள் துணிவுடன் கூறு கிறார்கள். ஏனெனில் இந்த உலகே ஒரு மயக்குவித்தை போன்றது, அதை மறக்கக் கூடாது.

நீங்கள் உங்களைப்பற்றி என்ன சொல்கிறீர்களோ அதையே மெள்ளமெள்ள நம்பவும் தொடங்குவீர்கள். புத்த பகவான் ஏறக்குறைய முதலில் சொன்னது, 'நீங்கள் எதை நினைக்கிறீர் களோ அதுவே நீங்கள், எதை நினைப்பீர்களோ அதுவாக ஆவீர்கள்' என்பவைதான். இது உண்மையானால், நம்மால் எந்தப் பயனும் இல்லை, இங்கு வாழாமல் மேகங்களுக்கு மேல் வாழ்கின்ற ஒருவர் வந்து நமக்கு உதவினால் மட்டுமே நம்மால் ஏதாவது செய்ய முடியும் என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்வதை விட்டுவிடுங்கள். இப்படி நீங்கள் நினைக்க நினைக்கப் பலவீனமே உங்களிடம் மிகும். 'நாங்கள் தூய்மை யற்றவர்கள். இறைவா, எங்களைத் தூயவர்கள் ஆக்குவாய்' என்று நினைக்குந்தோறும் நீங்களே உங்களை ஒருவித சுய மயக்கத்திற்கு உட்படுத்திக் கொண்டு, எல்லாவிதத் தீமை களிலும் உழல்வீர்கள். ஆம், சமுதாயத்திலிருக்கும் நூற்றுக்குத்

தொண்ணூறு தீமைகளுக்குக் காரணம் சகுணக்கடவுள்-கருத்து தான் என்று பௌத்தர்கள் கூறுகிறார்கள். இந்த அற்புதமான வாழ்க்கையின் முதலும் முடிவும் நிறைவும் ஒரு நாயைப்போல் ஆவதுதான் என்றால் அது பயங்கரமான ஒன்று. கடவுள் வாழும் இடமான வைகுண்டத்திற்குச் சென்று, அங்கு அவர் முன்னிலை யில் என்றென்றும் கைகட்டி வாய் புதைத்து நிற்பதுதான் வாழ்க்கையின் லட்சியமும் குறிக்கோளும் நோக்கமும் என்றால், அதைவிடத் தற்கொலை செய்துகொள்வதே மேல் என்று வைணவனைப் பார்த்து பௌத்தன் சொல்கிறான். இதிலிருந்து தப்புவதற்காகத்தான் நிர்வாணம் அல்லது சூன்யம் என்னும் கருத்தை உருவாக்கியுள்ளதாகவும் கூட அவர்கள் சொல்லலாம்.

அத்வைதக் கருத்துக்கள் ஒழுக்கக்கேட்டை உண்டாக்கும் என்று இப்போதெல்லாம் சொல்லப்படுகிறது. எனவே அதன் மறுபக்கம் எப்படியிருக்கும் என்பதை உங்களுக்குக் காட்டவே பௌத்தர்களின் நிலையிலிருந்து இந்தக் கருத்துக்களை உங்கள்முன் வைத்தேன். இரண்டு பக்கத்தைப் பற்றியும் துணி வுடனும் தைரியமாகவும் தெரிந்து கொள்வோம்.

சகுணக் கடவுள் ஒருவர் உலகைப் படைத்தார் என்பது போன்ற கருத்துக்களை நிரூபிக்க முடியாது என்பதை முதலில் நாம் கண்டோம். குயவன் பானை செய்வதுபோல் கடவுள் இந்த உலகை உண்டாக்கி இருக்கிறார் என்று சொன்னால், தற் காலத்தில் ஒரு குழந்தைகூட அதனை ஒப்புக்கொள்ளாது! அப் படியானால் குயவனும் கடவுள்தான்; கைகாலில்லாமல் ஒரு குயவன் பானை செய்கிறான் என்று உங்களிடம் ஒருவன் சொன்னால், அவனை நீங்கள் பைத்தியக்கார விடுதிக்கு அல் லவா கொண்டு செல்வீர்கள்!

இந்த உலகை ஆக்கியதாக நீங்கள் சொல்லும் இந்தக் கடவுளிடம் உங்கள் ஆயுள் முழுவதும் அழுதுகொண்டிருக் கிறீர்களே, அவர் எப்போதாவது உங்களுக்கு உதவி செய்திருக் கிறாரா என்று இன்றைய விஞ்ஞானம் அடுத்த சவாலுடன் வருகிறது. நீங்கள் பெற்ற உதவியெல்லாம் உங்கள் உழைப்பின் காரணமாகவே கிடைத்தது. அது மட்டுமல்ல, அழுவதிலும் கெஞ்சுவதிலும் உங்கள் சக்தியை வீணாக்காமலிருந்தால், இன்னும் அதிகப் பயனைப் பெற்றிருக்கலாம் என்று அவர்கள் நிரூபிக்கவும் செய்வார்கள்.

இனி, சகுணக்கடவுள் கருத்துடன் கூடவே புரோகிதர் களின் கொடுமைகளும் இருந்துவந்திருக்கின்றன என்பதும்

நமக்குத் தெரியும். சகுணக் கடவுள் கருத்து இருக்கும் இடங்களில் எல்லாம் புரோகிதர்களின் கொடுமையும் இருந்து வந்திருக்கின் றன, எனவே இந்தப் பொய்க் கருத்தின் தலையில் அடித்து அதை ஒடுக்காத வரையில் இந்தக் கொடுமைகளையும் ஒழிக்க முடியாது என்று பௌத்தர்கள் கூறுகிறார்கள். இயற்கையை மீறிய ஒரு சக்திக்கு, தான் அஞ்சி நடுங்க வேண்டும் என்று மனிதன் எண்ணிக் கொண்டிருக்கும்வரை, சலுகைகளும் உரிமை களும் கோருவதற்குப் புரோகிதர்களும் இருக்கத்தான் செய் வார்கள், அவர்கள் மக்களைத் தங்கள் முன் மண்டியிட வைப்பார்கள், இந்தப் பாமர மக்களும் அவர்களிடம் சென்று தங்களுக்காக அந்தச் சக்தியிடம் பரிந்து பேசும்படிக் கேட்கத்தான் செய்வார்கள். நீங்கள் பிராமணனை ஒழித்து விடலாம்; ஆனால், அப்படி ஒழிப்பவர்கள் தங்களை பிராமணர் களின் இடத்தில் இருத்திக்கொள்வார்கள்; நினைவில் வையுங்கள்— இவர்கள் பிராமணனைவிட மோசமாக இருப் பார்கள். ஏனெனில் பிராமணனிடம் சிறிதாவது பெருந்தன்மை இருக்கும், ஆனால் இவர்கள் கொடுமைகளின் உச்சிக்கே போய்விடுவார்கள். பிச்சைக்காரனுக்குச் செல்வம் கிடைத்துவிட் டால் அவன் உலகையே ஒரு துரும்பாக நினைத்துக் கொள்கிறான். எனவே சகுணக்கடவுள்-கருத்து இருக்கும்வரை புரோகிதர்கள் இருந்தே தீருவார்கள்; பெரிய நன்னெறி எதையும் சமுதாயத்தில் எதிர்பார்க்கவும் முடியாது. புரோகிதமும் கொடுமையும் இணைந்தே செல்பவை. இது எவ்வாறு உருவாகியது? பழங்காலத்தில் பலசாலிகள் சிலர் மக்களை அடக்கி, எனக்கு அடங்காவிடில் உங்களை அழித்துவிடுவோம் என்றனர். இதுவே அது தோன்றிய கதை. 'மஹத்பயம் வஜ்ரமுத்யதம்'[1] தனக்கு அடங்காதவர்களையெல்லாம் அழித்து விடும் கொடுங்கோலனின் கருத்து இது.

பௌத்தனின் வாதங்கள் தொடர்கின்றன: எல்லாம் வினை யின் பயனாக ஏற்பட்டது என்று சொல்கிறீர்கள். அது அறிவு பூர்வமாக ஒப்புக்கொள்ளக் கூடியதாக இருக்கிறது. ஆன்மாக் கள் எண்ணற்றவை, பிறப்பு இறப்பு அற்றவை என்று நம்பு கிறீர்கள், இதுவும் முற்றிலும் நியாயமானதுதான். காரண மின்றிக் காரியம் இருக்க முடியாது. தற்கால நிலைமைக்கு

1. கடோபநிடதம், 2.3.2; இறைவனின், ஓங்கிய வஜ்ராயுதம் போன்ற ஆட்சிக்குப் பயந்தே பிரபஞ்சம் இயங்குகிறது என்பதைக் கூறும் பகுதி இது.

இறந்த காலம் காரணமாக இருந்தது. நிகழ்காலத்தின் காரணம் கடந்த காலத்தில் இருந்தே தீரவேண்டும், அதன் விளைவு எதிர் காலத்தில் தோன்றியே தீரவேண்டும்.

ஆனால் கர்மம் என்பது ஜடம், சைதன்யம் அல்ல. எனவே இந்தக் காரணம் காரியமாக மலர ஒரு சைதன்யம் தேவை என்கிறான் இந்து.

அப்படியா? ஒரு செடி வளர்ந்து பலன் தர சைதன்யம் தேவையா? விதையை நட்டுத் தண்ணீர் விட்டால் செடி தானாக வளர்கிறது; அதற்கு சைதன்யம் தேவையில்லை, என்பான் பௌத்தன். அதனுள் இயல்பாகவே சிறிது சைதன்யம் இருக் கிறது என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் ஆன்மாக்களே சைதன்யம் என்னும்போது, வேறு எதுவும் தேவையில்லை. மனித ஆன்மா தன்னிடமே சைதன்யத்தைப் பெற்றிருக்குமா னால், ஒரு கடவுளின் தேவையென்ன? சமணர்கள் அப்படித் தானே! அவர்கள் பௌத்தர்களைப் போலன்றி ஆன்மாக்கள் உண்டென்று நம்புகிறார்கள், ஆனால் கடவுளை ஏற்றுக் கொள் வதில்லை.

உங்கள் நியாயம் எங்கே? உங்கள் நன்னெறி எங்கே? அத்வைதத்தை விமர்சிக்கவும், அது தீயொழுக்கத்தை வளர்க்கும் என்று அஞ்சவும் செய்கின்ற நீங்கள், துவைதப் பிரிவுகள் இந்தியாவில் என்னென்ன செய்துள்ளன என்பதைச் சற்று படித்துப் பாருங்கள். அத்வைத நெறியில் இருபதாயிரம் போக்கிரிகள் இருந்தால், துவைதிகளில் அதைவிட அதிகமாக உள்ளனர். பொதுவாகப் பார்க்கப் போனால் துவைதப் பிரிவுகளில்தான் அவர்கள் அதிகம் என்று சொல்ல வேண்டும். ஏனெனில் அத்வைதத்தைப் புரிந்துகொள்ள சற்று பக்குவப் பட்ட மனம் வேண்டும். அது மட்டுமின்றி அவர்களை எளிதில் அச்சுறுத்தவும் முடியாது. இந்துக்களே, உங்களிடம் மிஞ்சுவது என்ன? பௌத்தர்களின் பிடியிலிருந்து விடுபட உங்களுக்கு எந்த வழியும் இல்லை. நீங்கள் உங்கள் வேதங்களை மேற்கோள் காட்டலாம். அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை; மாறாக, ‘எங்கள் திரிபிடகங்கள் வேறுவிதமாக அல்லவா சொல்கின்றன எங்கள் திரிபிடகங்களும் ஆரம்பமோ முடிவோ இல்லாதவை, புத்தர்கூட எழுதியவை அல்ல. ஏற்கனவே உள்ள அவற்றைத் தாம் எடுத்துக் கூறுவதாகவே புத்தர் குறிப் பிடுகிறார். அவை என்றென்றும் இருப்பவை. அவைதான் உண்மையான வேதங்கள். உங்கள் வேதங்கள் பொய், பிராமணப்

புரோகிதர்களால் உண்டாக்கப்பட்டவை. அவற்றை விட்டு விடுங்கள்' என்பார்கள். இவர்களின் வாதங்களிலிருந்து எப்படித் தப்பப் போகிறீர்கள்?

அதற்கு வழி அத்வைதத்தில் உள்ளது. பௌத்தர்களின் முதல் வாதத்தை எடுத்துக் கொள்வோம்—வஸ்து அல்லது பொருள் வேறு, அதன் குணங்கள் வேறு என்பது அவர்களின் கூற்று. அப்படியில்லை என்கிறான் அத்வைதி. பழைய உதாரணம் உங்களுக்கு ஞாபகம் இருக்குமே! கயிறு பாம்பாகத் தெரிகிறது, பாம்பைக் காணும்போது கயிறு தெரிவதில்லை, முற்றிலுமாக மறைந்து விடுகிறது. அதுபோலவே எதையும் பொருள், அதன் குணங்கள் என்று பாகுபடுத்துவது தத்துவ ரீதியானது; அது தத்துவ அறிஞர்களின் மூளையில் நடக்கிறதே தவிர, வெளியில் அவ்வாறு பிரித்து அறிய முடியாது. சாதாரண மனிதன் வெறும் குணங்களைப் பார்க்கிறான், யோகி அடிப்படையான பொருளைப் பார்க்கிறான். ஆனால் இரண்டும் ஒரேசமயத்தில் காணப்படுவதில்லை.

எனவே பௌத்தர்களே, பொருள், மற்றும் குணம் பற்றிய உங்கள் வாதம் தவறானது, உண்மையற்றது. பொருள் குணங்கள் எதுவுமற்றது என்றால், ஒரே ஒரு பொருள்தான் இருக்க முடியும். குணங்களை ஆன்மாவிலிருந்து பிரித்து, அவை மனத்திற்குச் சொந்தமானவை, ஆன்மாவிற்குச் சொந்தமானதுபோல் தெரிந்தது வெறும் தோற்றம் மட்டுமே என்று காட்ட முடியுமானால் அங்கு இரண்டு ஆன்மாக்கள் இருக்கவே முடியாது. ஏனெனில் குண வேறுபாடுகள்தான் இது ஓர் ஆன்மா, அது மற்றோர் ஆன்மா என்று பிரித்துக் காட்டுகிறது. ஓர் ஆன்மா மற்றொன்றிலிருந்து வேறுபட்டது என்று எப்படி நீங்கள் அறிகிறீர்கள்? சில அடையாளங்களால், சில குணங்களால். குணங்களே இல்லாதபோது வேறுபாடு எங்கிருந்து வரும்? எனவே ஆன்மாக்கள் இரண்டு அல்ல, ஒன்றே. நீங்கள் கூறும் பரமாத்மா தேவையில்லை. ஆன்மாவே பரமாத்மா. ஜீவாத்மா என்றும் பரமாத்மா என்றும் இன்னும் பலவாறாகவும் அழைக்கப்படுவது இந்த ஒன்றைத்தான்.

சாங்கியர் முதலான பல்வேறு துவைதிகளே! ஆன்மா விபு, எங்கும் நிறைந்தது என்றெல்லாம் சொல்கிறீர்கள். அதேவேளையில், எல்லையற்றவை இரண்டு என்றும் கூறுகிறீர்களே, அது ஒன்றே ஒன்றுதான் இருக்க முடியும். மற்றொன்று எப்படியிருக்க முடியும்? அந்த ஒன்றுதான்,

ஒன்றேயான எல்லையற்ற ஆன்மா. மற்றவை அனைத்தும் அதன் வெளிப்பாடுகளே.

இந்த இடத்தில் பௌத்தன் நின்றுவிடுகிறான். ஆனால் விஷயம் இத்துடன் நிற்பதில்லை. அத்வைதி, மற்றவர்களின் வாதங்களை விமர்சிப்பதுடன் மட்டும் நின்றுவிடுகின்ற பல வீனமான ஒரு நிலையில் இருப்பவன் அல்ல. யாராவது தன்னை மிகவும் நெருங்கும்போது மட்டுமே அவன் அவர்களை விமர்சிக் கிறான், அவர்களது வாதங்களைச் சுலபமாக முறியடிக்கிறான். ஆனால் அவன் தனக்கென ஒரு நிலையை, ஓர் இடத்தை உரு வாக்கி வைத்துள்ளான். அத்வைதி ஒருவன்தான் வெறும் விமர்சனத்துடனும் சாஸ்திர மேற்கோள்களுடனும் நிற்காமல் தொடர்ந்து அறிவுபூர்வமாக ஆராய்ச்சி செய்கிறான்.

அவன் சொல்கிறான்—இந்தப் பிரபஞ்சம் இடையீடற்று இயங்கிக் கொண்டேயிருக்கிறது என்று நீங்கள் (பௌத்தர்கள்) சொல்கிறீர்கள். நல்லது. தனி நிலையில் நீங்கள், நான், இந்த மேஜை என்று எல்லாமே தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக் கிறோம். இது சம்சாரம்—எங்குமே இயக்கம்தான்; இது ஜகத்— தொடர் இயக்கம். எனவே ஜகத்திற்கென்று ஒரு தனித்துவம் இருக்க முடியாது. ஏனெனில் தனித்துவம் என்றால் மாறாத ஒன்று. மாறுகின்ற தனித்துவம் என்பது முன்னுக்குப்பின் முரணானது. ஜகத்தில், நமது இந்தச் சின்னஞ்சிறிய உலகில் தனித்துவம் என்பது கிடையாது. எண்ணங்கள், உணர்ச்சிகள், மனம், உடல், மனிதர்கள், மிருகங்கள் அனைத்தும் இடை விடாமல் மாறிக் கொண்டிருக்கின்றன. ஆனால் பிரபஞ்சத் தையே ஒரு முழுப்பொருளாக எடுத்துக்கொண்டால், அது இயங்க முடியுமா அல்லது மாற முடியுமா? முடியவே முடியாது. ஏனெனில் இயக்கம் என்பதை, அதைவிடக் குறைந்த வேகத் துடன் இயங்குகின்ற அல்லது முற்றிலும் இயங்காத ஒன்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தே அறிய முடியும். எனவே பிரபஞ்சத்தை முழுமையாக எடுத்துக் கொண்டால் அது மாறாதது, இயங்கா தது. ஆதலால் நீயே முழுமையாக ஆகும்போது, அதாவது ‘நானே பிரபஞ்சம்’ என்ற அனுபூதி பெற்றவர்களுக்கு, அனுபூதி பெற்றவர்களுக்கு மட்டுமே தனித்துவம் இருக்க முடியும். அதனால்தான் இரண்டு என்பது இருக்கும்வரை பயம் அகலாது என்று வேதாந்திகள் சொல்கிறார்கள்.[1] ஒருவர் மற்றொருவரைப்

1. த்விதீயாத்வை பயம் பவதி | —பிருகதாரண்யக உபநிடதம், 1. 4. 2.

பார்க்காதபோது, மற்றொருவரை உணராதபோது, எல்லாமே ஒன்றாகும்போது—அப்போது மட்டுமே பயம் அகலும், மரணம் மறையும், சம்சாரம் ஒழியும்.

எனவே பிரபஞ்சத்துடன் ஒன்றுபட்டிருக்கும்போதுதான் மனிதன் தனித்துவம் பெற்றவன் ஆகிறான், தனிமனிதனாக இருப்பதில் அவனுக்குத் தனித்துவம் இல்லை என்று அத்வைதம் போதிக்கிறது. முழுமையானதாக இருக்கும்போது மட்டுமே நீங்கள் அமரத்துவம் பெற்றவர்கள் ஆகிறீர்கள். நீங்களே பிரபஞ்சமாக இருக்கும்போது மட்டுமே உங்களுக்கு பயம் இல்லை, மரணமும் இல்லை. பிரபஞ்சம் என்று நாம் குறிப்பிடுவதுதான் இறைவன், அதுவே ஸத் அல்லது இருப்பு (Existence), அதுவே முழுமை. ஸத்தாகிய, பிரிவற்றதான ஒன்றையே நாமும் நம்மைப் போன்ற சாதாரண மனநிலையில் உள்ளவர்களும் வேறுபாடுகள் நிறைந்த உலகமாகக் காண்கிறோம். சிறிது நற்செயல்கள் புரிந்து சற்று உயர்ந்த மனநிலை பெற்றவர்கள், மரணத்திற்குப்பின் அதையே சொர்க்கமாகக் காண்கிறார்கள், அங்கே இந்திரனையும் பிறரையும் தரிசிக்கிறார்கள். இன்னும் உயர்ந்த நிலையை அடைந்தவர்கள் அதை பிரம்மலோகமாகக் காண்கிறார்கள். ஆனால் நிறைநிலையை அடைந்தவர்கள், இந்த உலகையோ சொர்க்கங்களையோ பிரம்ம லோகத்தையோ காண்பதில்லை. அவர்களுக்கு இந்தப் பிரபஞ்சமே மறைந்து விடுகிறது, பிரம்மம் மட்டுமே உள்ளது.

இந்தப் பிரம்மத்தை நாம் உணர முடியுமா? இந்த எல்லையற்ற பரம்பொருளை சம்ஹிதைகள் எவ்விதம் சித்தரிக்கின்றன என்பதை நான் கூறியிருக்கிறேன். இங்கு அதன் மறுபக்கம், அதாவது எல்லையற்ற அகவுலகை விவரித்திருப்பதைக் காணலாம். அங்கே எல்லையற்ற புறவுலகம், இங்கே எல்லையற்ற அகவுலகம், அதாவது எண்ணத்தின் எல்லையற்ற தன்மை. எல்லையற்றதை அங்கு உடன்பாட்டு முறையில் சொல்ல முயன்றார்கள், அந்த முயற்சி தோல்வியுற்றது. எனவே எதிர்மறையில் சொல்ல முயன்றார்கள். இதோ இந்தப் பிரபஞ்சம் உள்ளது, இதுவே பிரம்மமென்று ஒப்புக் கொண்டாலும், அதை நாம் அறிய முடியுமா? முடியாது! முடியவே முடியாது! இதனை நீங்கள் மிகத் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்தப் பிரபஞ்சம் பிரம்மம். ஆனால் நாம் எப்படித் தெரிந்துகொள்வது என்ற சந்தேகம் மீண்டும் மீண்டும் எழுகிறது. 'விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்—அறிபவரை எதனால் அறிவது?'

அறிபவரை அறிவது எப்படி? அனைத்தையும் கண்கள் காண் கின்றன, அவை தம்மைத் தாமே பார்க்க முடியுமா? முடியாது. அறிவு என்பதே தாழ்ந்தது. ஆரியர்களின் குழந்தைகளே, இதனை நீங்கள் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இதில் ஒரு பெரிய விஷயமே உள்ளது.

நீங்கள் காண்கின்ற மேலைநாட்டுக் கவர்ச்சிகள் அனைத் திற்கும், தத்துவரீதியிலான அடிப்படை ஒன்றுதான்; புலன் களின்மூலம் வரக்கூடிய அறிவைவிட உயர்ந்தது வேறொன்று மில்லை என்பதுதான் அது. ஆனால் இந்த அறிவு, வஸ்து அல்லது பொருளைவிடத் தாழ்ந்ததே என்று கீழைநாட்டில் நமது வேதங்கள் கூறுகின்றன. ஏனெனில் அறிவு என்பதே ஓர் எல்லைதான் என்பது நம் கருத்து. நீ ஒரு பொருளை அறிய முற்பட்ட உடனேயே அது உன் மனத்தின் எல்லைக்கு உட் படுத்தப்பட்டுவிடுகிறது. முத்துச்சிப்பி முத்தை உண்டாக்கும் உதாரணம் உங்களுக்கு நினைவிருக்கும். அதைச் சற்று நினைவு கூர்ந்தால், அறிவு எப்படி எல்லையாகிறது என்பது புரியும். ஒரு பொருளைத் தேர்ந்து, அதனை நாம் உணர்வின் எல்லைக்குள் கொண்டுவருகிறோம், இது அதனை முழுமையாக அறிவது ஆகாது. அறிவுகள் எல்லாம் இத்தகையதே. எல்லையற்றதைப் பற்றிய நமது அறிவும் இப்படிப்பட்டதே என்றில்லாமல் போகுமா? எல்லா அறிவுகளின் சாரமாகவும் சாட்சியாகவும், எல்லா அறிவும் உண்டாவதற்குக் கட்டாயமாகத் தேவையான வரும், குணங்கள் அற்றவரும், பிரபஞ்சத்திற்கே சாட்சியாகவும், எல்லா உயிர்களிலும் சாட்சியாகவும் இருக்கின்ற பரம் பொருளை இவ்வாறு எல்லைப்படுத்த முடியுமா? எப்படி நீ அறிய முடியும்? எதன்மூலம் அவரைக் கட்டுப்படுத்த முடியும்? உலகம் முழுவதும் ஒவ்வொன்றும் அப்படிக் கட்டுப்படுத்துவதற் கான வீண் முயற்சியே.

எல்லையற்ற இந்த ஆன்மா தன் முகத்தையே பார்க்க விழைவதுபோல் உள்ளது; மிகத் தாழ்ந்த மிருகங்களிலிருந்து மிகவுயர்ந்த தேவர்கள்வரை எல்லாமே அவனைப் பிரதிபலிக்கும் கண்ணாடிகளாக இருக்கின்றன. இவை போதாதென்று உணர்ந்து, இன்னும் பலவற்றை அவன் கைக்கொள்கிறான். இறுதியாக மனித உடம்பிற்கு வருகிறான். அதுவும் எல்லைக்கு உட்பட்டது. எல்லாமே எல்லைக்கு உட்பட்டவை, எல்லைக்கு உட்பட்டதில் எல்லையற்றது வெளிப்பட முடியாதென்று அப்போது உணர்கிறான். அந்த இடத்தில் தொடங்குகிறது

பின்னோக்கிய பயணம். இதுவே துறவு, வைராக்கியம் எனப்படுவது. புலன்களிலிருந்து திரும்புங்கள். புலன் வாழ்க்கையிலிருந்து திரும்புங்கள் என்பதே வைராக்கியத்தின் அடிப்படை நியதி. எல்லா ஒழுக்கத்திற்கும் எல்லா நன்மை களுக்கும் இதுவே அடிப்படை. தவத்தினாலும் துறவினாலும் தான் அனைத்தும் உண்டாக்கப்பட்டிருப்பதாக நமது நூல்கள் கூறுவதை மறந்து விடாதீர்கள். இவ்வாறு நீங்கள் பின்னோக்கிச் செல்லுந்தோறும் பல்வேறு உருவங்கள் உங்கள் முன் வெளிப் படும். அவை அனைத்தையும் விட்டுவிட்டுச் செல்ல வேண்டும். இறுதியில் நீங்கள் உண்மையில் எதுவோ அதுவாக இருப் பீர்கள். இதுவே மோட்சம் அல்லது முக்தி.

'விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்—அறிபவனை எப் படி அறிவது?' இந்தக் கருத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அறிபவரை நாம் அறிய முடியாது. அறிய முடியுமானால் அறிபவன் என்று அவனைக் கூற முடியாது. உங்கள் கண்களை ஒரு கண்ணாடியில் பாருங்கள், அங்கு தெரிகின்ற பிம்பம் கண்கள் அல்ல, அவை வேறு ஏதோ, வெறும் பிரதிபிம்பம் மட்டுமே. இனி, நாமாகிய இந்த ஆன்மா, அதாவது எங்கும் நிறைந்த எல்லையற்ற இந்தப் பரம்பொருள், சாட்சி மட்டுமே என்றால் அதில் பயனென்ன? அது நம்மைப்போல் வாழ முடியாது, போய்வர முடியாது, அனுபவிக்க முடியாதே. 'ஓ, இந்தக் கோட்பாட்டை, அதாவது நாம் சாட்சிகள் என்ற கோட்பாட்டை மேற்கொண்டதன் காரணமாகவே இந்துக் களாகிய நீங்கள் சோம்பேறிகளாகவும் பயனற்றவர்களாகவும் ஆகிவிட்டீர்கள்' என்று கூறுகிறார்கள். சாட்சியாக இருப்பவர் எப்படி இன்பம் அனுபவிக்க முடியும் என்பது சாதாரண மக்களுக்குத் தெரியாது. சாட்சியாக இருப்பவர்களால்தான் நன்றாக அனுபவித்து மகிழ முடியும். குத்துச்சண்டை நடக் கிறது என்று வைத்துக்கொள்வோம். அதை யார் அதிகம் அனுபவிக்கிறார்கள்? அந்தச் சண்டையில் கலந்து கொள்பவர் களா அல்லது அதைக் காண வந்திருப்பவர்களா? சாட்சியாக இருக்கும் தன்மையை அதிகம் பெறப்பெற நீங்கள் அதிகம் அனுபவிப்பீர்கள். அதுதான் உண்மை ஆனந்தம். சாட்சியாக இருந்து உலகம் முழுவதையும் பார்க்கும் தன்மையைப் பெற்றால் தான் நீங்கள் எல்லையற்ற ஆனந்தத்தைப் பெற முடியும், அப்போது மட்டுமே நீங்கள் முக்த புருஷர்கள். சாட்சியாக இருப்பவர்கள் மட்டுமே எந்தவிதமான ஆசைகளும் இன்றி,

சொர்க்கம் போகும் எண்ணம் இன்றி, இகழ்ச்சி-புகழ்ச்சி போன்ற கருத்துக்கள் இன்றி வேலை செய்ய முடியும். அவர்கள் மட்டுமே இன்பம் அனுபவிக்கிறார்கள்; மற்றவர்கள் அல்ல.

அத்வைதத்தின் நன்னெறிக் கருத்திற்கு வருவோம். அத்வைதத்தின் தத்துவப் பக்கத்திற்கும் (Metaphysical aspect), நன்னெறிப் பக்கத்திற்கும் (Moral aspect) இடையில் ஒரு கொள்கை உள்ளது. அதுவே மாயாவாதம். அத்வைதத்தின் இந்தக் கொள்கைகள் ஒவ்வொன்றையும் புரிந்துகொள்ளப் பல வருடங்களாகும்; எடுத்துச் சொல்ல மாதங்கள் பலவாகும். எனவே அவற்றைக் கோடிகாட்ட மட்டும் செய்வதற்கு என்னை மன்னியுங்கள். மாயாவாதம் என்ற இந்தக் கொள்கையைச் சரியாகப் புரிந்துகொள்வது எப்போதுமே கடினமாகத்தான் இருந்து வந்திருக்கிறது. இது வெறும் கொள்கையே அல்ல என்பதை உங்களுக்கு முதலில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தேச-கால-நிமித்தம் ஆகிய மூன்று கருத்துக்களின் சேர்க்கையே அது. இந்த தேச, கால, நிமித்தம், மேலும் நாம ரூபங்களாகச் சுருக்கப்பட்டிருக்கின்றன. கடலில் ஓர் அலை எழுவதாக வைத்துக்கொள்வோம். நாமரூபத்தில் அதாவது பெயர் மற்றும் வடிவத்தில் மட்டுமே அது கடலிலிருந்து வேறாகத் தோன்றுகிறது. இந்தப் பெயரும் வடிவமும் உண்மையில் அலையிலிருந்து வேறுபட்டு இருக்க முடியாது, அலையுடன் கூடவேதான் அவை இருக்கும். அலை அடங்கலாம், ஆனால் தண்ணீரின் அளவு மாறாமலே இருக்கிறது. அலையின் பெயரும் வடிவமும் நிரந்தரமாக அழிந்து போனாலும் கடலுக்கு எந்தவித மாற்றமும் நிகழ்வதில்லை. இவ்வாறு உங்களுக்கும் எனக்கும், மனிதனுக்கும் மிருகத்திற்கும், மனிதனுக்கும் தெய்வத்திற்கும் வேற்றுமைகளை உண்டாக்குவதுதான் மாயை. ஆன்மா கட்டுண்டது போலவும், கோடிக்கணக்கான நாமரூபங்களைத் தாங்கி ஒன்றுக்கொன்று வேறுபாடாகத் தெரிகின்ற உயிர்களாக உள்ளது போலவும் தெரிவது இந்த மாயையினால்தான். இவற்றை விட்டுவிட்டால் இந்த நாமரூபங்களை விலக்கிவிட்டால் எல்லா வேறுபாடுகளும் என்றென்றைக்குமாக மறைந்து போகும், நீங்கள் உண்மையில் யாரோ அவராக இருப்பீர்கள். இதுதான் மாயை.

இது ஒரு கொள்கையல்ல, இது நிஜங்களின் சித்திரம். இதோ இந்த மேஜை இருக்கிறது என்று உண்மைவாதி (Realist), சொல்லும்போது அதன் பொருள் என்ன என்பதை

நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது இந்த மேஜை, பிரபஞ்சத்திலுள்ள வேறு எந்தப் பொருளையும் சார்ந்திருக்க வில்லை, சுயமாகவே இருக்கிறது, பிரபஞ்சம் முழுவதுமே அழிந்தாலும் இந்த மேஜை மட்டும் இப்போது இருப்பதுபோல் அப்படியே இருக்கும். கொஞ்சம் ஆலோசித்துப் பார்த்தால் கூட இது தவறு என்பது விளங்கிவிடும். புலன்களால் அறியப் படுகின்ற இந்த உலகில் எல்லாமே ஒன்றுக்கொன்று தொடர்பு உடையதாகவும் ஒன்றையொன்று சார்ந்துமே இருக்கின்றன.

எனவே ஒரு பொருளை நாம் அறிவதில் மூன்று படிகள் உள்ளன. முதலாவதாக, ஒவ்வொரு பொருளும் தனியானது, மற்ற ஒவ்வொன்றிலிருந்தும் வேறுபட்டது. இரண்டாவதாக, அவற்றுள் ஒரு தொடர்பை, ஒன்றுக்கொன்று ஒரு தொடர் பிருப்பதை உணர்வது. மூன்றாவது படியில், ஒரே பொருளையே நாம் பலவாகக் காண்கிறோம் என்பதை அறிவது. கடவுள் விஷயத்திலும் இப்படியே. முதலில் அவர் எங்கோ பிரபஞ்சத் திற்கு வெளியில் இருப்பதாகப் பாமரன் நினைக்கிறான். கடவுளைப் பற்றிய அவனது கருத்து பெருமளவிற்கு மானுட மாகவே உள்ளது. மனிதன் செய்வதையே அவரும் செய்கிறார், சற்று பெரிய அளவில் செய்கிறார், அவ்வளவுதான். இத்தகைய கடவுள்கருத்து அறிவுபூர்வமானதாக இல்லை, போதுமானதாக இல்லை என்பதை ஏற்கனவே எளிதாக நிரூபித்து விட்டோம்.

அடுத்ததாக நாம் காண்பது எங்கும் வெளிப்பட்டுத் துலங் கும் சக்தியைப் பற்றிய கருத்து. இதுதான் தேவீ மாஹாத்மியத் தில் நாம் காணும் உருவக் கடவுள். இந்தக் கடவுள் நற்குணங் களுக்கு மட்டும் இருப்பிடமானவர் அல்ல என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். கடவுள் என்றும் சாத்தான் என்றும் இரு வருக்கு இடமில்லை; ஒருவர் மட்டுமே இருக்க முடியும், நன்மை மற்றும் தீமைகளின் வடிவில் அவரைப் போற்றவும் உங்களுக்குத் துணிவிருக்க வேண்டும். ஒரு கடவுளை மட்டுமே கொள்ளுங் கள், அதனால் வந்தே தீர்கின்ற விளைவுகளையும் ஏற்றுக்கொள் ளுங்கள். 'தாயே, எல்லா உயிர்களிலும் சாந்த வடிவில் உறை பவளே, உன்னை வணங்குகிறேன். அம்மா, எல்லா உயிர்களிலும் தூய்மை வடிவில் உறைபவளே, உன்னை வணங்குகிறேன்'[1] என்றே தேவீ மாஹாத்மியம் கூறுகிறது. எல்லா உயிர்களிலும்

1. யா தேவீ ஸர்வ பூதேஷு சாந்திரூபேண ஸம்ஸ்திதா |
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: ||
—தேவீ மாஹாத்மியம், 5. 23.

அவள் இருக்கிறாள் என்று நாம் சொல்வதிலிருந்து ஏற்படக் கூடிய பயனையும் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். 'ஓ கார்க்கி, இதெல்லாம் ஆனந்தம், எங்கெங்கு ஆனந்தம் இருக்கிறதோ அங்கெல்லாம் தெய்வீகம் இருக்கிறது.' அதை நீங்கள் விருப்பம் போல் உபயோகிக்கலாம். இதோ என் முன்னால் இருக்கும் இந்த விளக்கு வெளிச்சத்தில் நீங்கள் ஓர் ஏழைக்கு நூறு ரூபாய் கொடுக்கலாம்; வேறொருவன் இதில் உங்கள் கையெழுத்தைப் போட்டு மோசடி செய்யலாம். வெளிச்சம் இருவருக்கும் ஒன்று தான். இது இரண்டாவது நிலை.

மூன்றாவதாக, கடவுள் இயற்கைக்கு வெளியிலோ இயற்கைக்கு உள்ளேயோ இல்லை; மாறாக கடவுள், இயற்கை, ஆன்மா, பிரபஞ்சம் எல்லாமே ஒன்றுதான். நீங்கள் இரண்டைக் காண்பதே இல்லை. தத்துவவாதிகளின் பெரிய வார்த்தைகள் உங்களை அவ்வாறு நினைக்கும்படிக் குழப்பியிருக்கின்றன. நீங்கள் உடல் என்றும், உங்களுக்கு ஆன்மா இருக்கிறது என்றும், இரண்டும் சேர்ந்ததே நீங்கள் என்றும் நினைக்கிறீர்கள். இது எப்படி முடியும்? யோசனை செய்து பாருங்கள். உங்கள் மத்தியில் யோகி ஒருவன் இருந்தால், அவன் தன்னைச் சைதன்யமென உணர்வான், அவனுக்கு உடல் மறைந்துவிட்டது. சாதாரண மனிதனோ தன்னை உடல் என்று நினைக்கிறான், அவனுக்குச் சைதன்யம் அல்லது உணர்வு பற்றிய எண்ணம் இல்லை. மனிதனுக்கு உடலும் ஆன்மாவும் உள்ளது போன்ற தத்துவக் கருத்துக்கள் இருப்பதால்தான், அவை எல்லாமே ஒரே நேரத்தில் இருக்க முடியும் என நாம் எண்ணுகிறோம். ஒரு நேரத்தில் ஒன்று. ஜடப்பொருளை உணரும்போது கடவுளை உணர முடியாது; அப்போது காரியத்தை, காரியத்தை மட்டுமே காண்கிறீர்கள், காரணத்தைக் காணவில்லை. காரணத்தைக் காண்கின்ற அந்தக் கணமே காரியம் மறைந்துவிடும். அப்போது உலகம் எங்கே போனது? யார் அதை மறைத்தது?

'ஓ அறிவார்ந்த ரிஷியே, எப்போதும் உணர்வுமயமான தனிப்பேரானந்தமான, எல்லைகளைக் கடந்ததான, உவமைகளைக் கடந்ததான, எல்லா குணங்களையும் கடந்ததான, எப்போதும் சுதந்திரமான, ஆகாசம்போல் எல்லையற்றதான, பகுதிகள் அற்றதான, தனியான, பூரணமான பிரம்மம் சமாதியில் ஆழ்ந்திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகாசிக்கிறது.

'ஓ அறிவார்ந்த ரிஷியே, இயற்கையின் மாறுபாடுகள் அனைத்தும் நிரந்தரமாக ஓயும்போது, எண்ணங்கள் எல்லாம்

கடந்த எண்ணமாக, எல்லாவற்றிற்கும் சமமாக ஆனால் தனக்கு இணை இல்லாத, அளக்க முடியாத, வேதங்கள் பறைசாற்று கின்ற நமது இருப்பின் (அதாவது நமது) சாரமாக, பூரணமாக விளங்குகின்ற பிரம்மம் சமாதியில் ஆழ்ந்திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகாசிக்கிறது.

'ஓ அறிவார்ந்த ரிஷியே, பிறப்புக்கும் இறப்புக்கும் அப்பாற் பட்டதாக, எல்லையற்றதாக, ஒன்றேயானதாக, ஒப்பற்ற தாக, ஆனால் பிரபஞ்சம் அனைத்தையும் மூழ்கடிக்கும் மகா பிரளய வெள்ளம்போல்— மேலே வெள்ளம், கீழே வெள்ளம், எல்லா திக்கிலும் வெள்ளம், ஆனால் மேற்பரப்பில் அலையோ குமிழியோ இல்லாமல்—சாந்தமானதாக, அமைதியானதாக, எந்தக் காட்சிகளும் அற்றதாக, சண்டைகளும் சச்சரவுகளும் ஓய்ந்ததாக, முட்டாள்கள் மற்றும் ஞானியரின் போர் என்றென் றைக்குமே அற்றதாக, விளங்குகின்ற பிரம்மம் சமாதியில் ஆழ்ந் திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகாசிக்கிறது.'[1]

இந்த அனுபவம் வரும்போது உலகம் முற்றிலும் மறைந்துவிடும்.

இந்த சத்தியப் பரம்பொருள் அறியப்படாதது, அறிய முடியாதது; இதை நான் ஆஜ்ஞேயவாதி (Agnostic) சொல்லும் பொருளில் சொல்லவில்லை. அவரை அறிய முடியும் என்று கூறுவது அபசாரம், ஏனெனில் நீங்களே அவர். பிரம்மம் இந்த மேஜை அல்ல, ஆனாலும் மேஜைதான். நாம ரூபங்களை எடுத்துவிட்டால் எஞ்சியிருக்கும் உண்மைப் பொருளே பிரம் மம், அனைத்திலும் உள்ள உண்மை அதுவே— இவற்றையெல் லாம் ஏற்கனவே நாம் கண்டோம்.

'நீயே பெண், நீயே ஆண், நீயே இளைஞன், நீயே யுவதி, நீயே தடியை ஊன்றி நடக்கும் கிழவன், நீயே பிரபஞ்சத்தின் அனைத்துமாக இருக்கிறாய்'[2] அத்வைதத்தின் கருத்து இதுவே. இன்னும் ஓரிரு வார்த்தைகள். பொருட்களின் சாரம் என்பதன் விளக்கம் இதில்தான் உள்ளது என்பதை நாம் காணலாம். இங்கு மட்டுமே தர்க்கங்களையும் விஞ்ஞான ஆராய்ச்சிகளின் தாக்குதல்களையும் எப்படி நாம் உறுதியாக எதிர்கொள்ள

---

1. விவேக சூடாமணி, 408-410.
2. த்வம் ஸத்ரீ த்வம் புமானஸி த்வம் குமார உத வா குமாரீ ।
   த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி த்வம் ஜாதோ பவஸி
   விச்வதோமுக: ॥
   —சுவேதாஸ்வதர உபநிடதம், 4. 3.

முடியும் என்பதை நாம் கண்டோம். இறுதியாக இங்குதான் ஆராய்ச்சிக்கு ஓர் உறுதியான அஸ்திவாரம் கிடைத்தது. ஆனால் இந்திய வேதாந்தி தான் ஏறிவந்த படிகளைச் சபிப்பதில்லை, அவற்றைத் திரும்பிப் பார்த்து ஆசீர்வதிக்கிறான். அவை எல் லாம் உண்மையானவை; ஆனால் தவறுதலாகக் காணப்பட்டு, தவறான மொழியில் கூறப்பட்டவை என்பதை அவன் உணர் கிறான். அவை அதே உண்மைதான், ஆனால் மாயை என்னும் கண்ணாடிமூலம் பார்க்கப்பட்டவை, அவ்வளவுதான். எனினும் அவை உண்மை, முற்றிலும் உண்மையே. எந்தக் கடவுளை, பாமரன் இயற்கைக்கு வெளியில் காண்கிறானோ, கொஞ்சம் அறிவுள்ளவன் பிரபஞ்சத்தில் வியாபித்திருப்பதாகக் காண் கிறானோ, ரிஷி தமது சொந்த ஆன்மாவாக, பிரபஞ்சம் அனைத்துமாகக் காண்கிறாரோ, எல்லாமே அந்த ஒரு பரம் பொருள்தான், பல்வேறு கண்ணோட்டத்தில் பார்க்கப்பட்ட ஒரே பொருள்தான்; மாயையென்னும் பல்வேறு கண்ணாடிகள் வழியாகப் பார்க்கப்படுகின்றன, பலவகைப்பட்ட மனத்தினரால் உணரப்படுகின்றன. இதன் காரணமாகத்தான் இந்த வேறு பாடுகள் எழுந்தன.

அது மட்டுமல்ல, இவை ஒன்று மற்றொன்றுக்கு அழைத் துச் செல்பவையாக உள்ளன. விஞ்ஞானத்திற்கும் சாதாரண அறிவிற்கும் உள்ள வித்தியாசம் என்ன? இருட்டில் வெளியே செல்லுங்கள். அங்கு அசாதாரண நிகழ்ச்சி ஒன்று நடந்துவிட்ட தென்று வைத்துக் கொள்ளுங்கள். அதற்குக் காரணம் என்ன வென்று வழிப்போக்கர்களிடம் கேளுங்கள். பத்துக்கு ஒருவர் பேயைத்தான் காரணம் காட்டுவார்கள். அவர்கள் எப்போதுமே பேய் பிசாசு என்று வெளியிலேயே காரணம் தேடுகிறார்கள். காரியத்திற்கு வெளியில் காரணத்தைத் தேடுவது அறியாமையின் இயல்பு. ஒரு கல் விழுந்தால் போதும், அதை எறிந்தது ஒரு பேய் என்பான் அறிவிலி. ஆனால் விஞ்ஞானம் தெரிந்தவனோ அது இயற்கை நியதி, புவியீர்ப்பு விசையால் நேர்ந்தது என்பான்.

உலகெங்கும் விஞ்ஞானத்திற்கும் மதத்திற்கும் உள்ள சண்டை என்ன? புறத்தை ஆதாரமாகக் கொண்ட விளக்கக் குவியல்களால் மதங்கள் நிறைந்து கிடக்கின்றன. சூரியன் ஒரு தேவனின் ஆதிக்கத்தின் கீழ், சந்திரன் இன்னொருவரின் கீழ் என்று எல்லாமே ஒவ்வொரு தேவனின் ஆதிக்கத்தில் உள்ளன. மாறுதல்கள் எல்லாவற்றையும் உண்டாக்குவது ஒரு பூதம். இவர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்வது ஒரு கருத்தை—

அதாவது இந்தப் பூதங்கள் எல்லாமே இயற்கைக்கு வெளியில் உள்ளன என்பதைத்தான். விஞ்ஞானமோ ஒரு பொருளின் காரணத்தை அதன் இயல்பிலேயே ஆராய வேண்டும் என்று சொல்கிறது. விஞ்ஞான ஆராய்ச்சிகள் முன்னேற முன்னேற இந்த இயற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணம் இந்தப் பூதங்களும் தேவர்களும் அல்ல என்பது கண்டுபிடிக்கப்பட்டது. தூல விஷயங்களில் விஞ்ஞானம் செய்த வேலையை, அத்வைதம் ஆன்மீக உலகில் செய்திருக்கிறது. அதனால்தான் அத்வைதம் அறிவுபூர்வமான மிகச் சிறந்த விஞ்ஞான நெறியாக இருக்கிறது. இந்த உலகம் அதற்கு வெளியிலுள்ள ஒரு தெய்வத்தாலோ அறிவில் சிறந்த வேறு யாராலோ உண்டாக்கப்பட்டதல்ல. தானே உண்டாகி, தானே வெளிப்பட்டு, தானே அழிகின்ற எல்லையற்ற பரம்பொருளே அது. 'தத்வமஸி ச்வேதகேதோ— ஓ சுவேதகேது, நீயே அது.'

எனவே அத்வைதம், அத்வைதம் மட்டுமே விஞ்ஞான நெறியாக இருக்க முடியும், வேறு எதுவும் அல்ல என்பதை நீங்கள் காண்கிறீர்கள். அரைகுறையாகத் தற்காலப் படிப்பைப் பெற்றுவிட்டு, பலர் இன்று இந்தியாவில் விஞ்ஞான ஆராய்ச்சி களைப் பற்றியும், நமது மதம் அறிவுபூர்வமானதாக இருக்க வேண்டும் என்றும் பலவாறாகப் பிதற்றி வருவதை நான் தினமும் கேட்கிறேன். நீங்கள் எல்லோரும் திரளாக முன்வந்து அத் வைதத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் எதிர் பார்க்கிறேன். புத்தர் பெருமான் கூறியிருப்பதுபோல் 'பஹு ஜன ஹிதாய பஹு ஜன ஸுகாய —பலரின் நன்மைக்காகவும், பலரின் மகிழ்ச்சிக்காகவும்' இதனை உலகிற்கு எடுத்துரைப் பதற்கான துணிவு உங்களுக்கு இருக்கிறதா? இல்லையானால் நீங்கள் கோழைகள் என்றே நான் சொல்வேன். உங்கள் கோழைத் தனத்தைப் போக்கிக்கொள்ளும் ஆற்றல் உங்களிடம் இல்லை யென்றால், உண்மையை ஏற்றுக்கொள்ளப் பயந்து அதனை ஒரு சாக்குப்போக்காக வைத்திருக்கிறீர்கள் என்றால் இந்தச் சுதந்திரத்தைப் பிறருக்கும் அளியுங்கள். உருவத்தை வழிபட்டு வரும் அப்பாவிகளிடம் சென்று அவர்களின் நம்பிக்கையைக் குலைக்காதீர்கள். அவர்களைப் பேய் என்று அழைக்கா தீர்கள், உங்கள் கருத்திற்கு ஒத்துவராத கருத்து உடையவர் களிடம் சென்று உங்கள் கருத்தைப் போதிக்காதீர்கள். நீங்கள் கோழைகள் என்பதை முதலில் அறிந்து கொள் ளுங்கள். நீங்களே சமுதாயத்திற்குப் பயப்படுகிறீர்கள், பழைய

மூடநம்பிக்கைகளுக்கு அஞ்சுகிறீர்கள் என்றால், இந்த மூடநம்பிக்கைகள் பாமரர்கள் மனத்தில் இன்னும் எத்தகைய பயத்தை உண்டாக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்!

இதுதான் அத்வைதியின் நிலை. அனைவரிடமும் இரக்கம் கொள்ளுங்கள். உலகில் அனைவரும் கொள்கையளவில் மட்டுமல்லாமல், அனுபூதியிலும் அத்வைதிகளாக இருக்கும்படி இறைவன் அருள்புரிவாரானால், ஆகா, அது எவ்வளவு நன்றாக இருக்கும்! அது நடக்காது என்றால் அதற்கடுத்த நல்ல காரியத்தைச் செய்வோம். கல்வியறிவு அற்றவர்களை, அவர் களால் இயன்ற அளவு படிப்படியாக உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்வோம். இந்தியாவில் மத வளர்ச்சிக்காக நாம் வைக்கும் ஒவ்வோர் அடியும் முன்னேற்றப் பாதையிலேயே நம்மை அழைத்துச் செல்கிறது. அந்த முன்னேற்றம் தீமை யிலிருந்து நன்மைக்கல்ல; நன்மையிலிருந்து மேலான நன்மைக்குச் செல்வதே.

ஒழுக்க நெறிபற்றி மேலும் சில வார்த்தைகள் சொல்ல வேண்டியது அவசியம். அத்வைதம் மக்களை ஒழுக்க நெறி யிலிருந்து பிறழச் செய்கிறதென்று நமது இளைஞர்கள் உளறுகிறார்கள். இதை அவர்கள் எங்குதான் கற்றார்களோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்! நாம் அனைவரும் ஒன்று, நாமே கடவுள் என்றால் நல்லொழுக்கம் என்ற ஒன்று அவசியமா என்ன? இது அவர்கள் கூறுவது. முதலில், இது காட்டு மிராண்டித்தனமான வாதம், சவுக்கடியால் அடக்கி வைக்க வேண்டியவர்களின் பேச்சு. நீங்கள் அத்தகைய மிருகங்கள் என்றால் தற்கொலை செய்துகொள்வதே உங்களுக்கு நல்லது. சவுக்கால் கட்டுப்படுத்த வேண்டிய நீங்கள் மனிதர்கள் என்ற பெயரில் உலவுவதைவிட அது எவ்வளவோ மேல். சவுக்கு இல்லாவிட்டால் நீங்களெல்லாம் அசுரர்கள் ஆகிவிடுவீர்கள்! அதுதான் நிலைமை என்றால் உங்களைக் கொன்றுதான் போட வேண்டும். உங்களுக்கு எந்த உதவியும் வராது. நீங்கள் என்றுமே சாட்டை மற்றும் கம்பின் கீழ்தான் வாழ வேண்டும். உங்களுக்குக் கதிமோட்சமே கிடையாது, நீங்கள் தப்பவே முடியாது.

இரண்டாவதாக, அத்வைதம் மட்டுமே நன்னெறிக்கு விளக்கம் தருகிறது. பிறருக்கு நன்மை செய்வதே நன்னெறியின் சாரம் என்று எல்லா மதங்களும் போதிக்கின்றன. அது ஏன்? சுயநலமற்றிரு. அது எதற்காக? ஏதோ ஒரு தெய்வம் அவ்வாறு கூறியிருப்பதற்காகவா? ஆம் என்றால், அவர் என் கடவுள்

அல்லவே! சில சாஸ்திரங்கள் கூறுகின்றன என்பதற்காகவா? அவை சொல்லட்டும், எனக்கென்ன வந்தது? அவை நன்றாகச் சொல்லட்டும். அவை சொன்னால் எனக்கென்ன? அவனவன் சொந்த காரியத்தைப் பார்த்துக்கொள்ள வேண்டும்; பலவீனர்கள் எப்படி வேண்டுமானாலும் தொலையட்டும்—இதுதான் இன்றைய உலகில், பலருடைய நன்னெறியாக இருக்கிறது. நாம் ஏன் நன்னெறியைக் கடைப்பிடிக்க வேண்டும்? கீதை சொல்கின்ற உண்மையைத் தவிர வேறு எதன்மூலமும் அதை நீங்கள் விளக்க முடியாது— 'யார் எல்லா உயிர்களையும் தன்னிலும், தன்னை எல்லா உயிர்களிலும் காண்கிறானோ, இவ்வாறு கடவுள் எல்லா உயிர்களிலும் இருப்பதாகக் காண்கின்ற அந்த ஞானி தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்ளமாட்டான்'.[1] யாரைத் துன்புறுத்தினாலும் நீங்கள் உங்களையே துன்புறுத்திக் கொள்கிறீர்கள்; ஏனெனில் அவை எல்லாமே நீங்கள்தாம் என்று அத்வைதம் கூறுகிறது. நீங்கள் அறிந்தாலும் அறியாவிட்டாலும், எல்லா கைகள் மூலமாகவும் நீங்களே வேலை செய்கிறீர்கள், எல்லா கால்கள் மூலமாகவும் நீங்களே நடக்கிறீர்கள். அரண்மனையில் வாழ்ந்து இன்பம் அனுபவிக்கும் அரசனும், தெருவில் பிச்சையெடுத்துத் துயருறும் ஏழையும் நீங்களே. பாமரனிலும் பண்டிதனிலும் நீங்களே இருக்கிறீர்கள். பலவீனனிலும் பலசாலியிலும் நீங்கள் இருக்கிறீர்கள்! இதனை அறிந்து இரக்க மனம் கொள்ளுங்கள். இதனால்தான் நாம் ஒருவருக்கும் தீங்கிழைக்கக் கூடாது. இதனால்தான் நான் பட்டினி கிடந்தாலும் அதற்காகக் கவலைப்பட வேண்டியதில்லை. ஏனெனில் அதேவேளையில் லட்சக்கணக்கான வாய்கள்மூலம் சாப்பிடுவதும் நானே அல்லவா! அந்த வாய்கள் அனைத்தும் என்னுடையவையே அல்லவா! எனவே எனக்கும் சரி எனது உடைமைகளுக்கும் சரி என்ன நேர்ந்தாலும், நான் அதற்காகக் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் இந்தப் பிரபஞ்சமே என்னுடையதுதானே! எல்லா இன்பங்களையும் நானே அனுபவிக்கிறேன்; என்னையும் சரி, பிரபஞ்சத்தையும் சரி, யார் அழிக்க முடியும்? இங்குதான் நன்னெறி உள்ளது, அத்வைதத்தில் மட்டுமே நன்னெறி விளக்கப்படுகிறது. மற்ற நெறிகள் போதிக்கலாம், ஆனால் காரணம் காட்ட அவைகளால் முடியாது. விளக்கங்களை இங்கே நிறுத்துவோம்.

---

1. கீதை, 6. 29; 13. 28.

இதனால் வரும் பலன் என்ன? வலிமைதான். உலகின்மீது நீங்கள் போர்த்தியிருக்கும் மனமயக்கம் என்ற திரையை அகற்றுங்கள். மனித இனத்தில் பலவீனமான எண்ணங்களையும் வார்த்தைகளையும் பரப்பாதீர்கள். எல்லா பாவங்களையும் எல்லா தீமைகளையும் பலவீனம் என்ற ஒரே வார்த்தையில் அடக்கிவிடலாம். எல்லா தீங்குகளுக்கும் காரணம் பலவீனம் மட்டுமே. எல்லா சுயநலங்களுக்கும் காரணம் பலவீனமே. பலவீனத்தின் காரணமாகத்தான் ஒருவன் மற்றவனைத் துன்புறுத்துகிறான். பலவீனம்தான் ஒருவனைத் தன் உண்மை நிலையை விட்டு, வேறொருவனாகக் காட்டுமாறு செய்கிறது. தாங்கள் யார் என்பதை எல்லோரும் உணரட்டும். ஸோஹம்—'நானே அவன்'. இந்த வலிமைக் கருத்தைக் குழந்தைகள் தாய்ப் பாலுடனேயே குடித்து வளரட்டும்— 'நானே அவன், நானே அவன். இந்தக் கருத்துதான் முதலில் கேட்கப்பட வேண்டும், ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:[1], பின்னர் அதை ஆழ்ந்து சிந்திக்கட்டும்; இந்தச் சிந்தனையிலிருந்து, இந்த இதயத்திலிருந்து உலகம் இதுவரை கண்டிராத செயல்கள் பல பிறக்கும்.

நாம் செய்ய வேண்டுவது என்ன? அத்வைதம் செயல்முறைப்படுத்த முடியாதது என்று சிலர் சொல்கிறார்கள். அதாவது தினசரி வாழ்க்கையில் அந்தக் கருத்துக்களைப் பின்பற்ற முடியாது என்கிறார்கள். அவர்கள் சொல்வதில் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது. வேதங்கள் கூறுவது உங்களுக்கு நினைவிருக்கலாம்—

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம ஓமித்யேகாக்ஷரம் பரம் |
ஓமித்யேகாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதிச்சதி தஸ்ய தத் ||[2]

—'ஓம், இதுவே பரம ரகசியம்; ஓம், இதுவே மேலான செல்வம். யார் ஓம் என்பதன் ரகசியத்தை உணர்வானோ, அவன் விரும்பிய அனைத்தையும் பெறுகிறான்.' எனவே இந்த ஓம் என்பதன் ரகசியத்தை முதலில் உணருங்கள், நீங்களே அந்த ஓம் என்பதை அறியுங்கள், இந்த 'தத்வமஸி' என்பதன் ரகசியத்தை உணருங்கள். அப்போது, அப்போது மட்டுமே நீங்கள் விரும்புபவை உங்களை வந்து சேரும். லௌகீகப் பெருமை பெற விரும்பினால், அந்தப் பெருமை உங்களிடம்

---

1. பிருஹதாரண்யக உபநிடதம், 2. 4. 5.
2. ஒப்பிடுக: கட உபநிடதம், 1. 2. 16.

இருக்கிறது என்று முதலில் நம்புங்கள். நான் சிறிய குமிழியாக இருக்கலாம், நீங்கள் மலையளவு பெரிய அலையாக இருக்க லாம். ஆனால் இருவருக்கும் அடிப்படை அந்த எல்லையற்ற கடலே. நமது சக்தியின், நமது ஆற்றலின் ஆதாரம் அந்த எல்லையற்ற பரம்பொருள்தான்; நீர்க்குமிழியான நானும் மலை யளவு பெரிய அலையான நீங்களும் இருவருமே அதிலிருந்து வேண்டிய அளவு பெற முடியும். எனவே முதலில் உங்களிடம் நம்பிக்கை கொள்ளுங்கள், அத்வைத ரகசியம் இதுதான்— முதலில் உங்களை நம்புங்கள், பிறகு எதை வேண்டுமானாலும் நம்புங்கள்.

தங்களிடமே நம்பிக்கை கொண்ட நாடுகள் மட்டுமே வலிமையும் பெருமையும் அடைந்திருக்கின்றன என்பதை உலக வரலாறு நமக்குக் கற்பிக்கிறது. தன்னம்பிக்கை நிறைந்தவர்களே பலம் பெற்றுச் சிறப்பெய்தி இருக்கிறார்கள் என்பதை ஒவ் வொரு நாட்டின் வரலாற்றிலும் காண முடியும். இந்தியாவிற்கு ஓர் ஆங்கிலேயன் வந்தான். அவன் ஒரு குமாஸ்தா மட்டுமே. வறுமையாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ தலையில் சுட்டுக் கொண்டு தற்கொலை செய்ய அவன் இரண்டு முறை முயன்றான். இரண்டு முறையும் தவறியபோது அவனுக்குத் தன்னம்பிக்கை பிறந்தது. தான் ஏதோ அரிய காரியங்களைச் செய்வதற்குப் பிறந்திருப்பதாக ஒரு நம்பிக்கை அவன் மனத்தில் உண்டாயிற்று. அந்த மனிதனே இந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு அடிகோலிய கிளைவ் பிரபு. பாதிரிகள் கூறுவதை நம்பி, 'ஓ கடவுளே, நான் பலவீனன், நான் தாழ்ந்தவன்' என்று வாழ்நாள் முழுவதும் கூனிக் குறுகியபடி கதறிக் கொண்டிருந்தால் என்னவாகியிருப் பான்? பைத்தியக்கார விடுதிக்குத்தான் சென்றிருப்பான். இத்தகைய தீய போதனைகள் உங்களையும் பைத்தியக்காரர் களாக ஆக்கியுள்ளன. பணிந்து கிடக்கச் செய்கின்ற இந்தப் பலவீன போதனைகள் மனித இனத்திற்கு எவ்வளவு தீமைகளை விளைக்கின்றன என்பதை நான் உலகம் முழுவதிலும் பார்த் திருக்கிறேன். இவ்வாறு வளர்க்கப்படும் நம் குழந்தைகள் அரைப் பைத்தியங்களாவதில் ஆச்சரியம் ஏதும் உண்டா என்ன?

செயல்முறைப் பகுதிக்கான பாடம் இது. எனவே உங்களை நம்புங்கள். செல்வம் வேண்டுமானால், அதற்காகப் பாடு படுங்கள், அது உங்களை வந்து சேரும். அறிவாளிகளாக விரும் பினால் அறிவுநிலையில் பாடுபடுங்கள்; நிச்சயமாக உயர்ந்த அறிவாளிகள் ஆவீர்கள். முக்தியை விரும்பினால் ஆன்மீக

நிலையில் பாடுபடுங்கள், நிச்சயமாக முக்தி பெறுவீர்கள், நிர்வாணத்தை அடைவீர்கள், பேரின்பம் பெறுவீர்கள். அத்வைதத்திலுள்ள ஒரு குறை, இதுவரை அது ஆன்மீகத் துறையில் மட்டுமே பின்பற்றப்பட்டு வந்ததுதான். வேறு எங்கும் அது பின்பற்றப்படவில்லை. அதனைச் செயல்முறைப்படுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. இனிமேலும் அது ரகசியமாக இருக்கக் கூடாது, இமய மலைகளின் காடுகளிலும் குகைகளிலும் வசிக்கும் துறவியரிடம் மட்டுமே அவை இருக்கக் கூடாது, சாதாரண மக்களின் தினசரி வாழ்க்கையிலும் அவை புகுந்து வேலை செய்ய வேண்டும். மன்னனின் அரண்மனையிலும், முனிவரின் குகையிலும், ஏழையின் குடிசையிலும், தெருவில் திரியும் பிச்சைக்காரனிடமும் எல்லா இடங்களிலும், எல்லா மக்களாலும் அது பின்பற்றப்பட வேண்டும். நீங்கள் பெண்ணாக இருந்தாலும் சரி, சூத்திரராக இருந்தாலும் சரி, பயம் வேண்டாம். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அருளியிருப்பதுபோல் இந்தப் பாதை மகத்தானது; சிறிதளவு இதைப் பின்பற்றினால்கூட அது மகத்தான பயனை அளிக்கும்.

ஆதலால், ஆரியர்களின் அருமைக் குழந்தைகளே! சோம்பியிருக்காதீர்கள், விழித்திருங்கள், எழுந்திருங்கள், நோக்கம் கைகூடும்வரை நிற்காதீர்கள். அத்வைதத்தைத் தினசரி வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய காலம் இது. அதை விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்குக் கொண்டு வருவோம்—இதுதான் இன்றைய செய்தி. ஆம். விண்ணிலிருந்து அதனை மண்ணிற்குக் கொண்டு வர வேண்டும் என்ற இந்தச் செய்தியையே நமது முன்னோர்களின் குரலும் நமக்குக் கூறுகின்றன. உங்கள் போதனைகள் உலகை வியாபிக்கட்டும், சமுதாயத்தின் ஒவ்வொரு மூலையையும் சென்று அடையட்டும், எல்லோருடைய பொது உடைமையாகட்டும், வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் புகட்டும், நரம்புகளில் நுழைந்து ஒவ்வொரு துளி ரத்தத்திலும் கலந்து துடிக்கட்டும்!

அமெரிக்க மக்கள் நம்மைவிடச் சிறந்த செயல்முறை வேதாந்திகள் என்பது உங்களுக்கு ஆச்சரியம் தரலாம். நான் நியூயார்க் கடற்கரையில் நின்றுகொண்டு, பல நாடுகளிலிருந்தும் அமெரிக்காவிற்குக் குடியேற வரும் மக்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் வரும்போது மொத்துண்டு, மனம் தளர்ந்து, நம்பிக்கை இழந்து, யாரையும் நிமிர்ந்து பார்க்கவும் தைரியம் அற்றவர்களாக, சிறிய துணி மூட்டை ஒன்றையே தங்கள்

மொத்த உடைமையாகக் கொண்டு, கந்தலை உடுத்திக் கொண்டு வருவார்கள். போலீசைப் பார்த்தாலே நடுங்கி நடைபாதையின் அந்தப் பக்கம் சென்று விடுவார்கள். ஆனால் இது ஆறு மாதங் களுக்குத்தான். அதற்குள் அவர்களிடம் பெரிய மாறுதல் ஏற் பட்டுவிடும். நிமிர்ந்த நடை, நல்ல உடை, எவரையும் முகத்தைப் பார்த்து பேசும் தைரியம் என்று மாறிவிடுகிறார்கள். ஆச்சரிய மான இந்த மாறுதலைச் செய்தது எது? அவன் அர்மீனியா வையோ, வேறெந்த இடத்தையோ சேர்ந்தவன் என்று வைத்துக் கொள்வோம். அங்கு அவன் சொல்லொணாத அளவிற்கு நசுக்கப்பட்டான், அடிமையாகப் பிறந்த அவன் அந்தத் தாழ்ந்த நிலையிலேயே ஆயுள் முழுவதும் இருக்க வேண்டும் என்றே அனைவரும் கூறினார்கள். தன்னை உயர்த்திக்கொள்ள அவன் செய்த ஒவ்வொரு முயற்சியும் ஒடுக்கப்பட்டது. 'அடிமையே, நீ ஓர் அடிமை. அப்படியே இரு. இழிந்தவனாகப் பிறந்தாய். அப்படியே இரு' என்றே ஒவ்வொன்றும் அவனிடம் கூறியது போலிருந்தது. வீசிய காற்றும்கூட, 'உனக்குக் கதியே கிடையாது. நீ அடிமையாகவே, திக்கற்றவனாகவே இருக்க வேண்டியது தான்' என்றே முணுமுணுத்துச் சென்றது போலிருந்தது. பல சாலிகள் அவனது வாழ்க்கையை கசக்கிப் பிழிந்தார்கள். ஆனால் நியூயார்க் தெருக்களில் அவன் நடந்து சென்றபோது, மிடுக்கான கனவான் ஒருவர் அவனிடம் கைகுலுக்குகிறார். அவன் கந்தல் உடுத்தியிருந்தான், அவர் நல்ல உடை அணிந்திருந்தார், அது எந்த வேற்றுமையையும் ஏற்படுத்தவில்லை. சிறிது தூரம் சென்றதும் உணவு விடுதி ஒன்றிற்குச் செல்கிறான். அங்கு நல்ல உடை அணிந்திருக்கும் கனவான்களுடன் அதே மேஜையில் அவனுக்கும் இடம் கொடுக்கப்பட்டு உணவு பரிமாறப்படுகிறது. இவ்வாறு பல இடங்களுக்குச் சென்றதில் அவன் புதிய வாழ்க்கை ஒன்றையே கண்டடைந்தான். மனிதர்களுக்கிடையே அவனையும் ஒரு மனிதனாக நடத்தப்படுகின்ற ஓர் இடம் அவனுக்குக் கிடைத்துவிட்டது. ஒருவேளை அவன் வாஷிங் டனுக்குச் சென்றால் அமெரிக்க அதிபர் அவனுடன் கைகுலுக்கி இருக்கலாம். தூரத்திலுள்ள பல கிராமங்களிலிருந்து சாதாரண உடை அணிந்து வந்திருந்த குடியானவர்கள் பலரும் அவருடன் கைகுலுக்குவதை அவன் பார்த்திருக்கலாம். மாயையின் திரை மெள்ள அவனிடமிருந்து விலகியது. அவன் பிரம்மம்; தான் அடிமை, பலவீனன் என்ற மனமயக்கத்தில் ஆழ்ந்திருந்தான். இப்போது விழித்தெழுந்து விட்டான். எழுந்துவிட்ட அவன்

மனிதர்களின் உலகில் தானும் ஒரு மனிதன் என்பதைக் காண்கிறான்.

அந்தோ! நமது நாட்டில், வேதாந்தத்தின் பிறப்பிடமான இதே நாட்டில் மக்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இத்தகைய மனமயக்கத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களைத் தொட்டால் தீட்டு! சேர்ந்து உட்கார்ந்தால் தீட்டு! திக்கற்றவர்களாக அவர்கள் பிறந்தார்கள், அவர்கள் அந்த நிலையிலேயே இருக்க வேண்டும்! இதன் பயனாக அவர்கள் தாழ்ந்து, தாழ்ந்து, தாழ்ந்து கொண்டேபோய், மனிதனாகப் பிறந்த ஒருவன் எவ்வளவு தாழ்ந்த நிலையை அடைய முடியுமோ அந்தக் கடைசிப் படிக்கு வந்துவிட்டார்கள். எந்த நாட்டில் மனிதன் ஆடுமாடுகளுடன் உறங்கிக் கழிக்க வேண்டியுள்ளது? இதற்காக மற்றவர்கள்மீது பழி போடாதீர்கள், அறிவற்றவர்கள் செய்யும் அந்தச் செயலைச் செய்யாதீர்கள். விளைவு இங்கே உள்ளது என்றால் காரணமும் இங்கேயே இருக்கிறது. பழியை ஏற்க வேண்டியவர்கள் நாமே. தைரியமாக எழுந்து நின்று பழியை உங்கள் தோள்களில் தாங்கிக் கொள்ளுங்கள். பிறர்மீது சேற்றை வாரி இறைக்காதீர்கள். உங்களுக்குத் துன்பம் தருகின்ற தவறுகளுக்கெல்லாம் நீங்கள்தான் ஒரே காரணம்.

லாகூர் இளைஞர்களே! இந்தப் பாரம்பரியப் பெரும் பாவம், இந்தத் தேசியப் பெரும்பாவம் உங்கள் தோள் மீதிருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். நமது விடிவிற்கு வழியே இல்லை. நீங்கள் ஆயிரக்கணக்கான சங்கங்கள் அமைக்கலாம், பதினாயிரக்கணக்கான அரசியல் கூட்டங்கள் நடத்தலாம், லட்சக்கணக்கான இயக்கங்கள் அமைக்கலாம். ஆனால் அனைவருக்காகவும் உருகுகின்ற அந்த இரக்கம், அந்த அன்பு, அந்த இதயம் இல்லாமல் இவையெல்லாம் வீண். புத்தரின் இதயம் மீண்டும் இந்தியாவிற்குள் வராதவரையில், கிருஷ்ண பகவானின் வார்த்தைகள் செயல்முறைப் படுத்தப்படாத வரையில் உங்களுக்கு விடிவு இல்லை. நீங்கள் ஐரோப்பியர்களையும் அவர்களது சங்கங்களையும் காப்பியடித்துக் கொண்டே இருக்கலாம், அவ்வளவுதான். நான் என் கண்ணால் கண்ட ஒரு விஷயத்தை உங்களுக்குச் சொல்கிறேன். சில பர்மியர்களை இங்குள்ள சிலர் லண்டனுக்கு அழைத்துச் சென்றார்கள், அழைத்துச் சென்றவர்கள் யுரேசியர்கள். அங்கு அவர்களைக் காட்சிப்பொருளாகக் காட்டிப் பணம் சம்பாதித்தார்கள். பின்னர் அவர்களை ஐரோப்பாவில் எங்கோ அழைத்துச்

சென்று, அவர்கள் வாழ்ந்தாலும் சரி, செத்தாலும் சரி என்று தள்ளிவிட்டார்கள். அந்த பர்மியர்களுக்கோ ஐரோப்பிய மொழியில் ஒரு வார்த்தைகூடத் தெரியாது. அப்போது ஆஸ்திரியாவிலிருந்த ஆங்கிலப் பிரதிநிதி அவர்களை லண்டனுக்கு அனுப்பினார். லண்டனிலும் அவர்களுக்கு யாரையும் தெரியாததால், அங்கும் அவர்கள் உதவியற்றுக் கிடந்தார்கள். ஓர் ஆங்கிலேயப் பெண் அவர்களின் நிலைமையை அறிந்து, பச்சாதாபப்பட்டு, தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று, வேண்டிய துணிமணிகளை அளித்து, தங்கச் செய்து இந்த விஷயத்தைப் பத்திரிகைகளுக்கும் தெரிவித்தார். ஒரே நாள்தான், மறுநாள் நாடு முழுவதும் கிளர்ந்தது போலாகிவிட்டது. பல இடங்களிலிருந்தும் பணம் வந்தது, அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்து பர்மாவுக்குத் திருப்பி அனுப்பினர்.

இத்தகைய பரிவையே ஆங்கிலேயர்களின் அரசியல் மற்றும் பிற அமைப்புக்கள் அனைத்தும் அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. குறைந்தபட்சம் தங்களுக்குள்ளாவது பாறை போன்ற அஸ்திவாரமாக அவர்களிடம் அன்பே உள்ளது. அவர்கள் உலகம் முழுவதையும் நேசிக்காமல் இருக்கலாம், பர்மியர்கள் அவர்களின் எதிரிகளாகவே இருக்கலாம். ஆனால் இங்கிலாந்தில் அவர்கள் இவ்வாறு தங்கள் மக்களிடம் நிறைந்த அன்பும், வாசலில் வருகின்ற வெளிநாட்டினரிடம் உண்மையாகவும் நியாயமாகவும் தர்ம சிந்தனையுடனும் நடந்து கொள்கிறார்கள் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை அல்லவா? நான் சென்ற எல்லா மேலைநாடுகளிலும் எத்தகைய அன்புடன் வரவேற்று உபசரிக்கப்பட்டேன் என்பதை உங்களிடம் சொல்லாவிட்டால், நான் செய்நன்றி மறந்தவனாவேன். அமைப்புகளுக்கெல்லாம் அடிப்படையாக வேண்டிய அத்தகைய இதயம் இந்த நாட்டில் எங்கே இருக்கிறது? ஒரு சிறிய கூட்டுக் கம்பெனி ஆரம்பிப்போம். அதற்குள் ஒருவரை ஒருவர் ஏமாற்ற முயற்சி செய்வோம்; அந்தக் கம்பெனி உடைந்து தூளாகிவிடும். ஆங்கிலேயர்களைக் காப்பியடிக்கவும் அவர்களின் நாட்டைப்போல் பெரிய நாட்டை உருவாக்க வேண்டும் என்றும் பேசுகிறீர்கள். ஆனால் அஸ்திவாரம் எங்கே? நமது அஸ்திவாரங்கள் அனைத்தும் மணல்மீதுதான். அதனால்தான் கட்டிடம் கணநேரத்தில் தூளாகிவிடுகிறது!

எனவே, லாகூர் இளைஞர்களே! மகத்தான அத்வைதக் கொடியை மீண்டும் ஒருமுறை உயர்த்துங்கள். வேறெந்த

தளத்தின்மூலமும் நாம் அந்த அற்புத அன்பைப் பெற முடியாது; எங்கும் ஒரே இறைவன் உறைவதைக் காணும்வரை அது முடியாது. அந்த அன்புக் கொடியை ஏற்றுங்கள். 'எழுந் திருங்கள், விழித்திருங்கள்; லட்சியம் கைகூடும்வரை நிற்கா தீர்கள்.' எழுந்திருங்கள், இன்னொரு முறை எழுந்திருங்கள். தியாகமின்றி எதையும் சாதிக்க முடியாது. பிறருக்கு உதவ வேண்டுமானால், உங்கள் அற்ப 'நான்' தொலைந்தே தீர வேண்டும். கிறிஸ்தவர்கள் சொல்வதுபோல், கடவுளுக்கும் சாத்தானுக்கும் நீங்கள் ஒருங்கே சேவை செய்ய முடியாது. வைராக்கியம் கொள்ளுங்கள். அரும்பணிகள் செய்வதற்காக உங்கள் முன்னோர் உலகைத் துறந்தனர். சொந்த முக்திக்காக உலகைத் துறப்போர் இன்றும் இருக்கவே செய்கிறார்கள். எல் லாவற்றையும் உதறுங்கள், உங்கள் முக்தியைப் பற்றிக்கூட நினைக்காதீர்கள், பிறர் சேவையில் ஈடுபடுங்கள். வீர மொழிகள் பேசுகிறீர்கள், ஆனால் இதோ உங்கள் முன் செயல்முறைக்கான வேதாந்தம் உள்ளது. உங்களது இந்தச் சிறிய வாழ்க்கையை விட்டுவிடுங்கள். நமது நாடு நலம் பெறுமானால், நீங்களும் நானும் நம்மைப் போன்ற சில ஆயிரம் பேரும் பட்டினி கிடந்து செத்தால்தான் என்ன?

நாடு மூழ்கிக்கொண்டே இருக்கிறது. கோடிக்கணக்கான தாழ்த்தப்பட்ட மக்களின் சாபம் நம் தலைமீதிருக்கிறது. தெள்ளிய ஆற்றுநீர் அருகில் விரைந்தோடிக் கொண்டிருக்கும் போது, தாகத்தால் வாடித் தவித்த அவர்களுக்குச் சாக்கடை நீரை அளித்து வந்திருக்கிறோம். நிறைந்த செல்வத்தின் மத்தியில், கோடிக்கணக்கானோரைப் பட்டினியில் வாட்டியிருக்கிறோம். அவர்களிடம் நாம் அத்வைதத்தை வாயளவில் பேசி, அதே வேளையில் முடிந்த அளவு அவர்களை வெறுத்திருக்கிறோம். உலகவழக்கு என்ற கொடுமையை அவர்களுக்காக ஏற்படுத்தி யிருக்கிறோம். நாம் எல்லோரும் சமம், பரம்பொருளுடன் நாம் ஒன்றுபட்டிருக்கிறோம் என்றெல்லாம் வாய்கிழியப் பேசுகிறோம், அதில் அணுவளவுகூட செயல் முறையில் இல்லை. 'ஆனால் நண்பர்களே, என்ன இருந்தாலும் அது மனத்தளவில் இருக்கவேண்டுமே தவிர செயல்முறையில் கடைப்பிடிக்க முடியாது' என்று இதில் உபதேசம் வேறு! இந்தக் கறையை அழியுங்கள். 'எழுந்திருங்கள், விழித்திருங்கள்'. இந்த அற்ப வாழ்க்கை போனால்தான் என்ன! தூயவன், தீயவன், பணக்காரன், ஏழை என்று ஒருவர் விடாமல் அனைவரும்

இறக்கத்தான் வேண்டும். யாருடைய உடம்பும் நிலைத்து நிற்பதில்லை. எழுந்திருங்கள், விழித்திருங்கள், அப்பழுக்கற்ற நேர்மையுடன் இருங்கள். இந்தியாவில் நேர்மையின்மை என்பது பயங்கரமாக இருக்கிறது. நமக்கு வேண்டியது நற்பண்பு. கொடிய மரணத்தைப் போன்ற ஒன்றைக்கூட பற்றிநிற்கச் செய்கின்ற உறுதியும் நற்பண்புமே நாம் வேண்டுவது.

'சான்றோர்கள் பழிக்கட்டும் அல்லது புகழட்டும்; திரு மகள் இன்றே வரட்டும் அல்லது போகட்டும்; மரணம் இப் போதே வந்தாலும் சரி, நூறு வருடங்கள் கழித்து வந்தாலும் சரி, நேர்மையிலிருந்து மயிரிழைகூடப் பிறழாதிருப்பவனே மகான்'. எழுந்திருங்கள், விழித்திருங்கள். ஏனெனில் காலம் கரைகிறது, வீண் பேச்சிலேயே நமது எல்லா ஆற்றல்களும் விரயமாகிக் கொண்டிருக்கின்றன. எழுந்திருங்கள், விழித் திருங்கள். சிறு விஷயங்களையும் அற்பச் சண்டைகளையும் கோட்பாட்டுப் பூசல்களையும் தூர எறியுங்கள். மகத்தான பணி, தாழ்ந்து கொண்டிருக்கும் மக்களை உயர்த்தும் பணி இதோ நம் முன் இருக்கிறது. முகமதியர்கள் முதலில் இந்தியா வுக்கு வந்தபோது இந்துக்களின் எண்ணிக்கை எவ்வளவு? இன்று எப்படி அவர்கள் இவ்வளவு குறைந்தார்கள்? இன்னும் குறைந்து கொண்டேபோய் நாளடைவில் முற்றிலும் மறைந்தே போய்விடுவார்கள். அவர்கள் மட்டும் மறைந்தால் பாதக மில்லை; அவர்களுடன் அற்புதமான கருத்துக்களும் மறைந்து போகும். அவர்களிடம் எவ்வளவு குறைகள் இருந்தாலும் அவர் களைப்பற்றி நாம் என்ன நினைத்தாலும் அவர்கள் அல்லவா அந்தக் கருத்துக்களின் பிரதிநிதிகள்! எல்லா ஆன்மீகச் சிந்தனை களுக்கும் கருத்துக்களுக்கும் மகுடமாக விளங்குகின்ற அந்த அற்புத அத்வைதமும் அவர்களுடன் மறைந்துபோகும். ஆதலால் எழுந்திருங்கள், விழித்திருங்கள், உலகின் உன்னதமான ஆன்மீகத்தைக் காப்பாற்ற முன்வாருங்கள். முதலில் உங்கள் நாட்டிலேயே அந்தக் கருத்துக்களைச் செயல்படுத்துங்கள். பெருமளவிற்கு ஆன்மீகத்தைவிட, அத்வைதத்தைச் சிறிது வாழ்க்கையில் கொண்டுவருவதே நாம் செய்ய வேண்டியது. முதலில் உணவு, பின்னர் மதம். பசியால் வாடிக்கொண்டிருக்கும் ஏழைகளிடம் தேவைக்கும் அதிகமாக மதத்தைத் திணிக்கிறோம். பசியின் கொடுமையை எந்தக் கொள்கையும் தீர்க்காது.

நம்மிடம் இரண்டு சாபக்கேடுகள் உள்ளன. முதலாவது, பலவீனம்; இரண்டாவது, வெறுப்பு, நமது ஈரமற்ற இதயங்கள்.

நீங்கள் ஆயிரக்கணக்கான கொள்கைகளைப் பேசலாம்; ஆயிரக்கணக்கான நெறிகளை வைத்துக்கொள்ளலாம். ஆனால் உருகுகின்ற இதயம் உங்களிடம் இல்லையென்றால் எல்லாம் வெறும் பூஜ்யமே. வேதங்கள் கூறுவதுபோல் அவர்களை உங்கள் உடம்பில் ஓர் அங்கமாகக் காணும்வரை, நீங்களும், அவர்களும், ஏழைகளும், பணக்காரர்களும், தூயவரும் தீயவரும் எல்லோரும் நீங்கள் பிரம்மம் என்று அழைக்கின்ற அந்த எல்லையற்ற பரம்பொருளின் அம்சங்கள் என்பதை உணரும் வரை அவர்களுக்காக உருகிக் கரையுங்கள்.

அன்பர்களே, அத்வைத நெறியின் முக்கிய அம்சங்களுள் சிலவற்றை உங்களுக்கு எடுத்துச் சொல்ல நான் முயற்சி செய் திருக்கிறேன். அவற்றை, இந்த நாட்டில் மட்டுமல்ல, உலகம் முழுவதிலும் நடைமுறையில் பின்பற்ற வேண்டிய காலம் வந்திருக்கிறது. தற்கால விஞ்ஞான ஆராய்ச்சிகளும் அவற்றின் மரண அடிகளும் உலகெங்கிலும் உள்ள துவைத மதங்களின் களிமண் அஸ்திவாரங்களைத் தவிடுபொடியாக்கிக் கொண் டிருக்கின்றன. இங்கு மட்டுமல்ல, எங்கும் துவைதிகள் தங்கள் பிரமாண வாக்கியங்களை முடிந்த அளவிற்கு நீட்டிவிட் டார்கள், இனி இழுத்து நீட்ட முடியாது என்ற அளவிற்கு வந்துவிட்டார்கள், நீட்டிக்கொண்டே போக வாக்கியங்கள் இந்திய ரப்பர் அல்ல, பாருங்கள். மூலைமுடுக்குகளில் புகுந்து கொண்டு தங்களைக் காத்துக்கொள்ள முயற்சிப்பது இங்கு மட்டுமல்ல, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இங்குள்ளதை விட அதிகமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அந்த நாடு களுக்கும் அத்வைதக் கருத்துக்கள் இங்கிருந்து செல்ல வேண்டும். ஒருசிறிது அவை சென்றிருக்கின்றன. அங்கே அவை தழைத்து வளர்ந்து அவர்களின் நாகரீகத்தையும் காப்பாற்ற வேண்டும். ஏனெனில் மேலைநாடுகளின் பழைய பண்பாடு களும் கோட்பாடுகளும் மறைந்து வருகின்றன; பண வழிபாடும் குபேர பூஜையும் அவற்றின் இடத்தைப் பிடித்து வருகின்றன. அவர்களின் பழைய மதம் கொஞ்சம் பண்படாததாக இருந்த போதிலும், இந்தப் புதிய மதமாகிய போட்டியைவிட, பண வழிபாட்டைவிட உயர்ந்ததாக இருந்தது. எந்த வலிமைமிக்க நாடானாலும் இத்தகைய அஸ்திவாரத்தைக் கொண்டு நிலைத் திருக்க முடியாது. அத்தகைய நாடுகள் எல்லாமே மாய்ந்துபோய் விட்டதை உலக வரலாறு நமக்குக் கூறுகிறது. இத்தகையதோர் அலை இந்தியாவிற்குள் வராமல் தடுக்க வேண்டியது நமது

முதல் வேலை. எனவே அத்வைத நெறியை அனைவருக்கும் கூறுங்கள். அதன்மூலம் தற்கால விஞ்ஞானத்தின் எதிர்ப்புகளைத் தாங்கும் சக்தியை நம் மதம் பெறும். அது மட்டுமல்ல, நீங்கள் பிறருக்கு உதவ வேண்டும். உங்கள் சிந்தனை ஐரோப்பாவிற்கும் அமெரிக்காவிற்கும் உதவ வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, செயல்முறையே நமது இன்றையத் தேவை என்பதை மீண்டும் ஒருமுறை உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். அதன் முதற்கட்டமாக, கண்ணன் கூறியதை மனத்திற்கொண்டு, தாழ்த்தப்பட்ட லட்சக்கணக்கான நம் மக்களிடம் சென்று, அவர்களுக்கு கைகொடுங்கள்—

'இஹைவ தைர்ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே
ஸ்திதம் மன: ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி
தே ஸ்திதா: ॥[1]

—எல்லாவற்றின் சமத்துவத்தில் யாருடைய மனம் நிலை பெற்றிருக்கிறதோ, அவர்கள் இந்தப் பிறவியிலேயே சம்சார வாழ்வை வென்றுவிடுகிறார்கள். ஏனெனில் இறைவன் தூயவரும் எல்லோருக்கும் சமமானவரும் ஆவார். அதனால் அவர்கள் இறைவனில் வாழ்பவர்கள் என்று சொல்லப் படுகிறார்கள்.' ❑

1. கீதை, 5. 19.

# ராஜஸ்தான்

## கேத்ரியில்

லாகூரிலிருந்து டேராடூன், சஹரன்பூர், டெல்லி மற்றும் ராஜஸ்தானிலுள்ள ஆல்வார், ஜெய்பூர் வழியாக கேத்ரி சென்று சேர்ந்தார் சுவாமிஜி. எல்லா இடங்களிலும் சீடர்களுடனும் பக்தர்களுடனும் பிறருடனும் உரையாடல்கள், ஆலோசனைகள் நிகழ்த்தினார். சொற்பொழிவுகளும் செய்தார். ஜெய்பூரின் கீழுள்ள ஒரு சிறு பகுதி கேத்ரி. சுவாமிஜி வந்ததும் கேத்ரி மன்னர் சுவாமிஜியின் திருப்பாதங்களில் பணிந்தார். பின்னர் குதிரை வண்டியிலிருந்து சுவாமிஜியை இறங்கச் செய்து அழைத்துச் சென்றார். டிசம்பர் 17-ஆம் நாள் அங்குள்ள பள்ளிக்கூட வளாகம் ஒன்றிலுள்ள மண்டபத்தில் சுவாமிஜிக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. கேத்ரி மன்னர் அந்தக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார்.

### 1. வரவேற்புக்குப் பதிலுரை

பாரதத்தின் உன்னதத்திற்காக நான் ஏதோ சிறிது பணி செய்துள்ளேன். ஆனால் மன்னரைச் சந்தித்திருக்காவிட்டால் அதை நான் சாதித்திருக்க முடியாது. மேலை நாடுகளின் லட்சியம் போகம், கீழை நாடுகளின் லட்சியம் தியாகம். கேத்ரி இளைஞர்களே, மேலை லட்சியத்தின் பகட்டில் மதிமயங்காமல், கீழை லட்சியத்தை உறுதியுடன் தொடருங்கள்.

மனிதனுள் ஏற்கனவே இருக்கின்ற தெய்வீகத்தை வெளிப் படுத்துவதே கல்வி. குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும்போது அவர்களிடம் நாம் ஆழ்ந்த நம்பிக்கை வைக்க வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் எல்லையற்ற இறையாற்றலின் ஆதார வடிவங்கள் என்பதை நாம் நம்ப வேண்டும். அவர்களுள்ளே தூங்கிக் கிடக்கின்ற அந்த பிரம்மத்தை விழிப்புணர்த்துவதற் கான முயற்சியையே நாம் செய்ய வேண்டும்.

குழந்தைகளின் கல்வியில் மற்றொன்றையும் நாம் கருத் தில் கொள்வது இன்றியமையாதது. எதனால் அவர்கள் சுய மாகச் சிந்திக்கக் கற்றுக் கொள்வார்களோ, அதில் அவர்களுக்கு ஆர்வத்தை ஊட்ட வேண்டும். இந்த அடிப்படைக் கருத்தை மறந்ததுதான் இந்தியாவின் இன்றைய இழிநிலைக்குக் காரணம். மாணவர்களுக்கு இத்தகைய கல்வி அளிக்கப்படுமானால் அவர்கள் மனிதர்கள் ஆவார்கள்; வாழ்க்கைப் போராட்டத்தில் தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்வதற் கான ஆற்றல் பெறுவார்கள். ❑

## 2. வேதாந்தத் தத்துவம்

சுவாமிஜி தமது சீடர்களுடன் கேத்ரி மன்னரின் மாளிகையில் தங்கியிருந்தார். அங்கே டிசம்பர் 20-ஆம் நாள் வேதாந்தத் தத்துவம் என்னும் பொருள்பற்றி சொற்பொழிவு நிகழ்த்தினார். அந்தக் கூட்டத்திற்கு மன்னர் தலைமை வகித்தார்; அவர் சுவாமிஜியை அறிமுகப்படுத்தினார். ஒன்றரை மணி நேரத்திற்கும் மேலாகப் பேசினார் சுவாமிஜி. அப்போது எடுக்கப்பட்ட குறிப்புகளின் தொகுப்பு:

பழம்பெரும் தேசிய இனங்களான கிரேக்க மற்றும் ஆரிய இனங்கள் வெவ்வேறான சூழ்நிலைகளில் வளர்ந்தவை. கிரேக்கச் சூழ்நிலை இயற்கையழகு செறிந்தது, இன்பமானது, கிளர்ச்சியூட்டுவது, உற்சாக மூட்டும் பருவ நிலை கொண்டது. ஆரியச் சூழ்நிலையோ நுட்பமான சுற்றுச் சூழலைக் கொண்டது, உடல் உழைப்பு அதிகம் வேண்டப்படாதது. இந்த இரண்டும் இருவேறுபட்ட நாகரீக லட்சியங்களை உருவாக்கின. கிரேக்கர்களின் ஆராய்ச்சி எல்லையற்ற புறவெளியைப் பற்றியது; ஆரியர்களின் ஆராய்ச்சியோ எல்லையற்ற அகம் பற்றியது. முதல் இனம் அண்டத்தைப் பற்றியும், மற்ற இனம் பிண்டத்தைப் பற்றியும் ஆராய்ந்தது. உலக நாகரீகத்தில் இரண்டிற்குமே தனியிடம் உள்ளன. இதில் ஒருவர் மற்றவரிடமிருந்து கடன் வாங்க வேண்டியது எதுவுமில்லை, ஆனால் ஒன்றிற்கொன்று கருத்துப் பரிமாற்றங்களை வளர்த்துக் கொள்ளுமானால் இரண்டுமே நன்மை பெறும். ஆரியர்கள் இயல்பாகவே எதையும் ஆராய்ந்து அறிபவர்கள். இதனால் கணிதம் மற்றும் இலக்கணத் துறையில் பிரமிக்கத்தக்க விளைவு களை அவர்கள் கண்டனர். ஆனால் மனத்தைப் பகுத்தறியும் துறையில்தான் அவர்களின் வளர்ச்சி நிறைநிலையை அடைந்தது. பிதகோரஸ், சாக்ரடீஸ், பிளேட்டோ முதலியவர்களிடமும் இந்தியக் கருத்துக்களின் சுவடுகளைக் காண முடியும்.

ஸ்பெயின், ஜெர்மனி முதலிய பல ஐரோப்பிய நாடுகளில் எவ்வாறு வெவ்வேறு காலங்களில் இந்தியக் கருத்து ஆதிக்கம் செலுத்தியது என்பதை விரிவாக சுவாமிஜி எடுத்துரைத்தார்.

இந்திய இளவரசரான தாராசிகோ உபநிடதங்களைப் பாரசிகத்தில் மொழிபெயர்த்தார். உபநிடதங்களின் லத்தீன்

மொழிபெயர்ப்பை ஷோபனேர் படித்தார். அவரது கோட்பாடு இதிலிருந்தே உருவாக்கப்பட்டது. கான்ட்டின் கருத்துக்களிலும் உபநிடதங்களின் சுவடு காணப்படுகிறது. ஒப்பியல் மொழி நூலில் (Comparative Philology) கொண்ட ஆர்வமே ஐரோப்பிய பண்டிதர்களை சம்ஸ்கிருதம் கற்கத் தூண்டியது. டேசன் (Deussen) போன்ற சிலர் அதில் காணப்படும் தத்துவச் சிறப்பிற்காக அதில் ஆர்வம் காட்டினர்.

எதிர்காலத்தில் சம்ஸ்கிருதம் கற்பதில் இன்னும் அதிக ஆர்வம் தோன்றும் என்று தாம் நம்புவதாக சுவாமிஜி தெரிவித்தார்.

முற்காலத்தில் ஹிந்து என்ற சொல் ஆழமான பொருள் கொண்டதாக இருந்தது. சிந்துநதி தீரத்திற்கு அப்பாலுள்ள மக்களுக்கு 'ஹிந்து' என்று பெயரிருந்தது. இப்போது அந்தச் சொல் பொருளற்றதாகி விட்டது, ஏனென்றால் இப்போது அந்தச் சொல் ஒரு நாட்டையோ மதத்தையோ குறிப்பதாக இல்லை. தற்காலத்தில் சிந்து தீரத்தில் பல்வேறு இனத்தினரும் பல மதத்தினரும் வசிக்கின்றனர்.

பிறகு சுவாமிஜி வேதங்களைப்பற்றி விரிவாக விளக்கினார்.

வேதங்கள் ஒருவரால் பேசப்பட்டவை அல்ல. அவற்றின் கருத்துக்கள் சிறிதுசிறிதாக வளர்ந்து நாளடைவில் நூல் வடிவமாயின. பின்னர் அவை பிரமாண நூல்களாக உயர்ந்தன. பல மதங்கள் சாஸ்திரங்களிலேயே அடங்கிவிட்டன, சாஸ்திரங்களின் சக்தி எல்லையற்றது போலவே தோன்றுகிறது. இந்துக்களுக்கு வேதங்கள் இருக்கின்றன, இன்னும் பல்லாயிரம் வருடங்களுக்கு அவற்றையே பின்பற்ற வேண்டும். ஆனால் காலப்போக்கிற்கு ஏற்றபடி அவைபற்றிய அவர்களது கருத்துக்களை மாற்றி, பாறை போன்ற மிக உறுதியான அஸ்திவாரத்தில் நிலைநிறுத்த வேண்டும். வேதங்கள் என்பவை பெரிய இலக்கியம். அதில் தொண்ணூற்றொன்பது சதவீதம் தொலைந்துவிட்டது. சில குறிப்பிட்ட குடும்பங்களிடம் அந்த நூல்கள் இருந்தன. அந்தக் குடும்பங்கள் அழிந்தபோது நூல்களும் மறைந்தன. எஞ்சிய நூல்களை வைப்பதானால்கூட இந்தப் பெரிய மண்டபம் போதாது. அந்த நூல்கள் மிகவும் பழமையான, எளிமையான மொழியில் எழுதப்பட்டவை. அவற்றின் இலக்கணம் வளர்ச்சியடையாத நிலையில் உள்ளது. அதனால்தானோ என்னவோ வேதங்களின் சில பகுதிகளுக்குப் பொருளே இல்லை என்று கூறப்படுகிறது.

வேதங்களின் இரு பிரிவுகளான கர்ம காண்டத்தையும் ஞான காண்டத்தையும்பற்றி விரிவாக எடுத்துரைத்தார் சுவாமிஜி.

சம்ஹிதையும் பிராமணமுமே கர்ம காண்டம். பிராமணம் என்பது வேள்விகளைப்பற்றிச் சொல்கிறது. சம்ஹிதை என்பது அனுஷ்டுப், திருஷ்டுப், ஜகதி முதலிய சந்தங்களில் தொகுக்கப் பட்ட பாடல்கள். பொதுவாக அவை இந்திரன், வருணன் முதலிய தேவர்களைப் புகழ்கின்றன; இந்தத் தேவர்கள் யார் என்ற கேள்வி எழுந்தது. அதுபற்றி ஏதாவது கோட்பாடுகள் எழுந்தால், மற்ற கோட்பாடுகள் அவற்றைத் தகர்த்தன. இவ்வாறு இந்தப் பிரச்சினை முடிவின்றிச் சென்றது.

பிறகு சுவாமிஜி வெவ்வேறு விதமான வழிபாடுகள்பற்றி விரித்துரைத்தார். முதலில் பண்டைய பாபிலோனியர்களின் கருத்துபற்றிக் கூறினார்:

உயிர் என்பது ஒரு நிழல் மட்டுமே, அதற்கென்று ஒரு தனித்துவம் கிடையாது, உடலுடன் தன் பந்தத்தை அது விட முடியாது. பழைய உடலைப் போலவே உயிருக்கும் பசி, தாகம், உணர்ச்சிகள், மாற்றங்கள் எல்லாம் உண்டு. இன்னொரு கருத் தும் இவர்களிடையே உண்டு: உடலிற்குத் தீங்கு ஏற்பட் டால் உயிருக்கும் தீங்கு வரும்; உடல் அழிந்தால் உயிரும் அழியும். எனவே இறந்த உடலைப் பத்திரப்படுத்தி வைக்கும் வழக்கம் வளர்ந்தது. இறந்தபின் உடலை மருத்துவ முறையில் பாது காத்தல், கல்லறை கட்டுதல், சவக்குழி அமைத்தல் முதலியவை தோன்றின. எகிப்தியர்களும் பாபிலோனியர்களும் யூதர்களும் இந்த இருவகைக் கருத்துக்களுக்கு மேல் செல்லவில்லை. அதற் கும் மேலான ஆன்மா பற்றிய கருத்தை அவர்கள் அறியவில்லை.

மூதாதையர் வழிபாட்டின் சுவடுகூட ரிக் வேதத்தில் இல்லை என்பதே பேராசிரியர் மாக்ஸ்முல்லரின் கருத்து. பத்திரப்படுத்தப்பட்ட பிணங்கள் விறைத்து சூன்யமாகப் பார்க் கின்ற, பயங்கரமான தோற்றம்பற்றி வேதங்களில் எழுதப்பட வில்லை. தேவர்கள் மனிதர்களிடம் நட்புடன் இருப்பதாகவே அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. தேவர்களுக்கும் மனிதர் களுக்கும் இடையில் ஆரோக்கியமான தொடர்பு நிலவியது. முகங்களில் கடுகடுப்பு இல்லை, ஆனந்தத்திற்கும், புன்சிரிப் பிற்கும், கண்களில் ஒளிக்கும் குறைவில்லை.

வேதங்களைப் படிக்கும்போது தேவர்கள் சிரிக்கும் ஒலியைக்கூடத் தாம் கேட்டது போல் தோன்றியதாக சுவாமிஜி அறிவித்தார்.

வேத கால ரிஷிகளின் சொற்கள் நிறைநிலையை அடை யாதவை போல் தோன்றலாம். ஆனால் அவர்கள் பண்பாடு

மிக்கவர்கள், இதயம் உள்ளவர்கள். அவர்களுடன் ஒப்பிட்டால் நாமெல்லாம் வெறும் மிருகங்களே.

சுவாமிஜி தமது கூற்றுக்கு ஆதாரமாக பல மந்திரங்களைக் கூறினார்:

'மூதாதையர் வசிக்கின்றதும் துக்கம், கவலை முதலியவை இல்லாததுமான இடத்திற்கு அவனைக் கொண்டு போ.' இறந்த பின் உடலை எவ்வளவு விரைவில் எரிக்கிறோமோ அவ்வளவு நல்லது என்ற கருத்து இவ்வாறு ஏற்பட்டது. எப்போதும் மகிழ்ச்சி நிலவுவதும், ஒருபோதும் கவலை இல்லாததுமான ஓர் இடத்திற்குச் செல்லும் ஒரு நுண்ணுடல் இருப்பதை அவர்கள் நாளடைவில் அறிந்தார்கள். செமிட்டிக்[1] மதங்களில் சஞ்சலமும் பயமும் நிரம்பியிருந்தன; கடவுளைக்கண்டால் மனிதன் இறந்து விடுவான் என்று அங்கே எண்ணப்பட்டது. ஆனால் ரிக் வேதத்தின்படி எப்போது மனிதன் கடவுளை நேருக்கு நேராகக் காண்கிறானோ, அப்போதுதான் அவனது உண்மை வாழ்வு ஆரம்பிக்கிறது.

இப்போது ஒரு கேள்வி எழுகிறது— இந்தத் தேவர்கள் யார்? சில வேளைகளில் இந்திரன் வந்து மனிதனுக்கு உதவி செய்தான்; மற்ற வேளைகளில் இந்திரன் சோம ரசத்தை அதிகமாக அருந்தினான். 'எல்லாம் வல்ல', 'எங்கும் நிறைந்த' முதலான பண்புச் சொற்கள் அவனுக்கு அடிக்கடிக் கொடுக்கப் படுகின்றன. வருணன் விஷயத்திலும் இதேபோல்தான். இவ் வாறு அது தொடர்ந்தது. இந்தத் தேவர்களின் பண்புகளை விவரிக்கும் சில மந்திரங்கள் மிகவும் அற்புதமாக உள்ளன, மொழியோ சிறப்பு மிக்கதாக இருக்கிறது.

சுவாமிஜி இந்த இடத்தில் பெருமை வாய்ந்த நாஸதீய சூக்தத்தை ஓதினார்.

அது பிரளய காலத்தை வர்ணிக்கிறது. இதில்தான் 'இருளை இருள் மூடியிருக்கிறது' என்ற கருத்து வருகிறது. இவ்வளவு நுட்பமான கருத்துக்களை, இத்தகைய கவிதை நயத்துடன் விளக்கியவர்களை அநாகரீகமானவர்கள், பண் பாடற்றவர்கள் என்றால் நம்மை எவ்வாறு கருதுவது? அந்த ரிஷிகளையும் அவர்களது தேவர்களான இந்திரன், வருணன் போன்றோரையும் விமர்சிக்கவோ தீர்மானிக்கவோ எனக்குத் தகுதியில்லை. இவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகக் காட்சிகள் அழகுறத் தோன்றுவது போன்றதோர் அற்புதமாக

1. தென்மேற்கு ஆசியப் பகுதி.

உள்ளது. இவை எல்லாவற்றிற்கும் பின்னணியில் விளங்குவதோ, 'ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்தி—உள்ளது ஒன்றே; மகான்கள் அதைப் பலவாறு அழைக்கிறார்கள்' என்பது. இவை ஆழ்ந்த உட்பொருள் கொண்டவை, அற்புதமானவை, சொல்லொணா அழகு வாய்ந்தவை. இன்றுகூட அவற்றை நெருங்குவது முடியாது என்றே தோன்றுகிறது. அந்த மெல்லிய திரை கிழிந்து விடுமோ என்று தோன்றுகிறது.

ஒரு விஷயம் தமக்குத் தெளிவாகப் புரிவதாகவும், அப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்று தோன்றுவதாகவும் அவர் குறிப்பிட்டார்:

அதாவது கிரேக்கர்களைப் போலவே ஆரியர்களும் தீர்வு காண்பதற்கு முதலில் புற இயற்கையையே நாடினர். புற இயற்கை அவர்களையும் கவர்ந்திருக்கலாம், படிப்படியாக அவர்களை அழகும் நன்மையும் மிக்கதான புறவுலகிற்கு இட்டுச் சென் றிருக்கலாம். ஆனால் நுட்பமற்ற எதுவும் இந்தியாவில் பொருட் படுத்தப் படுவதில்லை. மரணத்திற்குப் பின்னால் உள்ள ரகசியங் களை ஆராய்ந்து பார்க்கும் எண்ணம் கிரேக்கர்களுக்குத் தோன்றவில்லை. ஆனால் இங்கோ ஆதிகாலம் முதலே 'நான் யார்? மரணத்திற்குப்பின் எனக்கு என்ன நடக்கும்?' என்ற கேள்விகள் மீண்டும்மீண்டும் எழுந்தன. இறந்தவன் சொர்க்கத் திற்குச் செல்வான் என்றே கிரேக்கர்கள் கருதினர். சொர்க்கத் திற்குச் செல்வது என்பதன் பொருள் என்ன? எல்லாவற் றிற்கும் வெளியில் செல்வதே; உள்ளே எதுவும் இல்லை, எல்லாம் வெளியில்தான் இருக்கிறது என்பதே. அவனது ஆராய்ச்சி எல்லாம் வெளியில் நாட்டம் கொண்டதாக இருந்தது, இல்லை இல்லை, அவனே அவனுக்கு வெளியில் இருந்தான் எனலாம். இந்த உலகைப்போல், ஆனால் இதன் துன்பங்கள் எதுவும் இல்லாததோர் உலகிற்கு மட்டும் சென்றுவிட்டால் போதும், வேண்டிய அனைத்தும் கிடைத்ததாகி விடும் என்றே கிரேக்கன் கருதினான். அப்படி அவன் திருப்தியுற்றான். மதம் பற்றிய அவர் களின் கருத்துக்கள் எல்லாமே அந்த இடத்தில் நின்றுவிட்டன.

இந்து மனம் அத்துடன் திருப்தி அடையவில்லை. அவர் களின் ஆராய்ச்சி இன்னும் விரிந்தபோது, சொர்க்கங்கள்கூட ஜடப் பிரபஞ்சத்துள் அடங்கியதே என்று கண்டனர். 'சேர்க்கை யால் உண்டானவை அழிவது உறுதி' என்கிறான் இந்து. 'ஆன்மா எது என்பது உனக்குத் தெரியுமா?' என்று புறஇயற்கை யிடம் இந்துக்கள் கேட்டனர். 'தெரியாது' என்று விடை யளித்தது இயற்கை. 'கடவுள் என்பவர் உண்டா?' என்று

கேட்டனர். 'எனக்குத் தெரியாது' என்று பதிலளித்தது இயற்கை. உடனே அவர்கள் இயற்கையிலிருந்து கவனத்தைத் திருப்பினர். புற இயற்கை எவ்வளவு மேன்மையானதாக, சிறப்பானதாக இருந்தாலும், அது இடம், காலம் என்ற எல்லைகளுக்கு உட்பட்டது என்பதைப் புரிந்துகொண்டனர். பின்னர் மற்றொரு குரல் எழுந்தது. புதிய நுட்பமான சிந்தனைகள் அவர்கள் மனத்தில் உதித்தன. 'நேதிநேதி,—இது அல்ல, இது அல்ல' என்றது அந்தக் குரல். பல்வேறு தேவர்களும் ஒருவராக்கப்பட்டனர். சூரிய சந்திரர்களும் நட்சத்திரங்களும், ஏன் இந்தப் பிரபஞ்சமே ஒன்றாகிவிட்டது. இந்தப் புதிய லட்சியத்தின்மீது மதத்தின் ஆன்மீக அடிப்படை அமைக்கப்பட்டது.

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா
வித்யுதோ பாந்தி குதோऽயமக்னி: ।
தமேவ பாந்தமனுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா
ஸர்வமிதம் விபாதி ॥

—'அங்கே சூரியன் ஒளி வீசுவதில்லை; சந்திரனோ நட்சத்திரங்களோ, மின்னலோ ஒளிர்வதில்லை. சாதாரண அக்கினியைப்பற்றி என்ன சொல்வது? அவர் பிரகாசிப்பதால் எல்லாம் ஒளிர்கின்றன. அவர்மூலமே எல்லாம் பிரகாசிக்கின்றன'. அங்கே வரம்பிற்கு உட்பட்ட, வளர்ச்சி பெறாத சகுணக் கருத்துக்கள் இல்லை; தீர்ப்பு கூறுவதற்காக அமர்ந்திருக்கும் கடவுள் போன்ற சாமானிய எண்ணங்கள் இல்லை. இனிமேல் புற ஆராய்ச்சி இல்லை; அது இப்போதிலிருந்து அகமுகமாக்கப்பட்டது. இவ்வாறாக உபநிடதங்களே இந்தியாவின் சாஸ்திரங்கள் ஆயின. உபநிடதங்கள் பரந்துபட்ட இலக்கியம் ஆகும். வேறுபட்ட கருத்துக்கள் கொண்ட மதப்பிரிவுகள் எல்லாமே இந்த உபநிடதங்களின் அடிப்படையில்தான் நிறுவப்பட்டன.

பின்னர் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய கோட்பாடுகளைப் பற்றிக் கூறினார் சுவாமிஜி.

ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு படிகளே, ஒரு படியிலிருந்து அடுத்த படியை அடைய அவை ஒவ்வொன்றும் உதவுகின்றன. இறுதியில் அத்வைதத்தில் சென்றுசேர்வது இயல்பான பரிணாமமே. 'தத்வமஸி' என்பது கடைசிப்படி.

மகத்தான உரையாசிரியர்களான சங்கராச்சாரியார், ராமானுஜாச்சாரியார், மத்வாச்சாரியார்—இவர்கள்கூடத் தவறு செய்திருக்கும் இடங்களை அவர் சுட்டிக் காட்டினார்.

உபநிடதங்கள் மட்டுமே பிரமாணம் என்றுதான் ஒவ்வொருவரும் கருதினர், ஆனால் அவை ஒரே ஒரு விஷயத்தை,

ஒரே ஒரு வழியை மட்டுமே காட்டுவதாக எண்ணினர். உப நிடதங்கள் அத்வைதத்தைத் தவிர வேறு எதையும் போதிக்க வில்லை என்று சங்கராச்சாரியார் எண்ணினார்; தெளிவாக துவைதக் கருத்துப் பற்றிக் கூறும் வாக்கியங்களைத் திரித்துச் சிதைத்துத் தமது கோட்பாட்டிற்கு ஏற்ற பொருள் வருமாறு செய்தார். அதே போல்தான் ராமானுஜரும் மத்வரும் அத்வைதப் பகுதிகளைத் திரித்துக் கூறினர். உபநிடதங்கள் ஒன்றையே போதிக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை, ஆனால் படிப்படியாக அந்த உண்மைக்குச் செல்வதையே அவை கூறு கின்றன.

நவீன இந்தியாவில் மதத்தின் ஆதாரம், அதன் சாரம் மறைந்து வெறும் சடங்கு களே எஞ்சியுள்ளன என்று சுவாமிஜி வருத்தத்துடன் கூறினார்.

மக்கள் இந்துக்களும் அல்ல, வேதாந்திகளும் அல்ல; தீண் டாமைவாதிகள், அவ்வளவுதான். சமையலறையே அவர்களது கோயில்; சமையல் பாத்திரங்களே தெய்வங்கள். இந்த நிலைமை ஒழிய வேண்டும். விரைவில் ஒழியும் அளவிற்கு நமது மதத்திற்கு நன்மை விளையும். உபநிடதங்கள் தங்கள் மகிமையுடன் விளங் கட்டும். அதேவேளையில் வெவ்வேறு பிரிவுகள் பூசலிட வேண் டியதும் இல்லை.

உடல்நிலை மோசமாக இருந்ததால் சுவாமிஜி களைத்துவிட்டார். அரை மணிநேரம் ஓய்வு எடுத்தார். மீதியுள்ள உரையைக் கேட்க அனைவரும் பொறுமையுடன் காத்திருந்தனர். சுவாமிஜி மீண்டும் வெளியே வந்து அரை மணி நேரம் பேசினார்.

அறிவு என்பது வேறுபாடுகளுக்கிடையே ஒருமையைக் காணுதல். வேறுபாடுகளில் ஓர் ஒருமையைக் காணும்போது ஒவ்வொரு விஞ்ஞானமும் அதன் உச்சத்தை அடைகின் றன. இது பௌதீகத்திற்கு மட்டுமல்ல, ஆன்மீகத்திற்கும் பொருந்தும். ❑

## வங்காளம்

### 1. கல்கத்தாவில்

1898, மார்ச் 11- ஆம் நாள் கல்கத்தாவிலுள்ள ஸ்டார் தியேட்டரில் நடைபெற்ற கூட்டம் ஒன்றில் 'இங்கிலாந்தில் இந்திய ஆன்மீகக் கருத்தின் தாக்கம்' என்னும் பொருள்பற்றி சகோதரி நிவேதிதை (மிஸ். மார்கரெட் நோபிள்) பேசினார். சுவாமிஜி தலைமை வகித்தார். நிவேதிதையை அறிமுகம் செய்வித்து அவர் பேசினார்:

## இங்கிலாந்தில் இந்திய ஆன்மீகக் கருத்தின் தாக்கம்

அன்பர்களே தாய்மார்களே,

ஆசியாவின் கிழக்குப் பகுதிகள் வழியாக நான் பயணம் செய்தபோது குறிப்பாக ஒரு விஷயம் என் கருத்தைக் கவர்ந்தது, அங்கெல்லாம் இந்திய ஆன்மீகக் கருத்தின் தாக்கம் இருந்தது. பிரசித்திபெற்ற சில சம்ஸ்கிருத மந்திரங்கள் சீன மற்றும் ஜப்பானியக் கோயில் சுவர்களில் எழுதப்பட்டிருந்தன, அவற்றைக் கண்டபோது என் வியப்பு எப்படி இருந்திருக்கும் என்பதை ஊகித்துப் பாருங்கள். அதைவிட ஆச்சரியம் என்ன என்றால் அவை பழைய வங்காள எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தன; வங்கத்தின் நமது முன்னோர்களுக்கு, பிரச்சாரத்தில் இருந்த ஊக்கத்திற்கும் ஆர்வத்திற்கும் சான்றாக அவை விளங்குகின்றன. இவை உங்களை மகிழ்ச்சியூட்டும் விஷயங்கள் அல்லவா!

ஆசிய நாடுகளைத் தவிர மேலை நாடுகளிலும் இந்திய ஆன்மீகக் கருத்துக்கள் பரவியிருக்கின்றன—மேலோட்டமாக அல்ல, அடியாழம்வரை அதன் தாக்கம் உள்ளது. இன்றும் அந்த ஆதிக்கத்தின் சுவடுகளை நான் கண்டேன். இந்தியாவின் ஆன்மீகச் சிந்தனைகள் கீழை மற்றும் மேலை நாடுகளில்கடந்த காலங்களில் பரவியிருந்தன என்பது இன்று வரலாறு காட்டும் உண்மை. கடந்த காலத்திலும் சரி, இக்காலத்திலும் சரி, இந்தியாவின் ஆன்மீக சக்திகள் மனித குலத்திற்கு எத்தகைய வரப்பிரசாதமாக விளங்கி வருகின்றன என்பதும், இந்தியாவின் ஆன்மீகத்திற்கு உலகம் எவ்வளவு தூரம் கடமைப்பட்டுள்ளது என்பதும் எல்லோரும் அறிந்த ஒன்று. இவை யாவும் கடந்தகால நிகழ்ச்சிகள்.

நான் கண்ட மற்றொரு குறிப்பிடத்தக்க விஷயமும் உண்டு. அற்புதமான அந்த ஆங்கிலோ-சாக்சன் இனம் மனித குல நாகரீகத்திலும், வளர்ச்சியிலும், சமுதாய முன்னேற்றத்திலும் ஏற்படுத்தியுள்ள பிரமிக்கத்தக்க விளைவுகளே அது. இன்னும் ஒருபடி மேலே சென்று கூறினால், ஆங்கிலோ-சாக்சன் இனத்தின் மாபெரும் ஆற்றல் இல்லையெனில் இன்று நாம் இவ்வாறு கூடியிருக்க மாட்டோம்; நமது ஆன்மீகக் கருத்தின் தாக்கம் பற்றியெல்லாம் பேசியிருக்க மாட்டோம். நமது நாட்டிற்குத் திரும்பியபோது, அதாவது மேலை நாடுகளிலிருந்து கிழக்கே வந்தபோது அதே ஆங்கிலோ-சாக்சன் இனம், தனது எல்லா குறைபாடுகளுடனும் தனக்கே உரிய சிறப்புமிக்க நல்ல அம்சங்களைத் தக்கவைத்துக்கொண்டு செயல்படுவதைக் காண்கிறேன். இறுதியில், மகத்தான அந்தப் பயனும் கிடைத்து விட்டது என்றே நான் நம்புகிறேன். விரிவு மற்றும் முன்னேற்றம் ஆகிய பிரிட்டிஷ் சிந்தனைகள் நம்மை எழச் செய்துள்ளன. மேலை நாகரீகம் கிரேக்க ஊற்றிலிருந்து எடுக்கப்பட்டது என்பதை நினைவில்கொள்ள வேண்டும். கிரேக்க நாகரீகத்தின் மாபெரும் கருத்து வெளிப்படுத்தல் (Expression) என்பது ஆகும்.

இந்தியாவில், நாம் சிந்திக்கிறோம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக, சிலவேளைகளில் வெளிப்படுத்துவதற்கான சக்தி மிஞ்சாத அளவிற்கு ஆழமாகச் சிந்தித்து விடுகிறோம். எனவே நமது வெளிப்படுத்தும் ஆற்றல் படிப்படியாக உலகிற்குத் தெரியாமலே போயிற்று. விளைவு? விளைவு இதுதான்— நம்மிடம் இருந்தவற்றையும் மறைத்து வைப்பதில் ஈடுபட்டோம். இவ்வாறு மறைத்து வைத்தல் என்பது தனி நபர்களிடம் ஒரு பழக்கமாகத் தொடங்கி, தேசிய வழக்கமாக முடிந்தது. இன்று நாம் உயிரற்ற ஒரு நாடாகக் கருதப்படும் அளவிற்கு இந்த வெளிப்படுத்தும் சக்தியை இழந்துவிட்டோம். வெளிப்படுத்தாமல் நாம் எப்படி வாழ முடியும்? மேலை நாட்டு நாகரீகத்தின் முதுகெலும்பாக விளங்குவது விரிவும் வெளிப்பாடுமே. இந்தியாவில் ஆங்கிலோ-சாக்சன் இனம் இந்த விஷயங்கள் சம்பந்தமாக ஆற்றியுள்ள பணியைச் சற்று நினைவுகூருமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். மீண்டும் ஒருமுறை நமது நாடு தன்னைத் தானே வெளிப்படுத்திக் கொள்வதற்காக அவர்களின் பணி அதனைத் தூண்டுகிறது. அந்த மகத்தான இனம் நமக்கு அளித்துள்ள தொடர்பு சாதனங்களைப் பயன்படுத்தி, மறைத்து

வைக்கப்பட்டுள்ள நமது செல்வங்களைக் கண்டுபிடித்து வெளிக் கொணருமாறு அது நம்மை வற்புறுத்துகிறது.

ஆங்கிலோ-சாக்சன் இனம் இந்தியாவிற்கு ஓர் எதிர் காலத்தை உருவாக்கித் தந்துவிட்டது. நமது முன்னோர் களின் சிந்தனைகள் இப்போது பரவிவரும் பகுதி உண்மை யிலேயே பெரியதுதான். உண்மை, முக்தி போன்ற செய்திகளை நமது முன்னோர்கள் போதித்தபோது அவர்களுக்கு என்ன வசதி இருந்தது? புத்தர் தமது உன்னதமான உலக சகோதரத் துவக் கோட்பாட்டை எவ்வாறு பிரச்சாரம் செய்தார்? அப் போதும் நமது இந்த இனிய நாட்டில் உண்மையான இன்பத்தை அடைவதற்கான சிறந்த வசதிகள் இருந்தன. நமது எண்ணங் களை உலகின் ஒரு கோடியிலிருந்து மறுகோடிக்கு அனுப்பவும் நம்மால் முடிந்திருந்தது.

இப்போது நாம் ஆங்கிலோ-சாக்சன் இனத்தினரை நெருங்கி விட்டோம். இந்த விதமான ஒரு பரிமாற்றமே இப் போது நடந்து கொண்டிருக்கிறது. நமது செய்தி கேட்கப்படு வதை நாம் காண்கிறோம்; கேட்கப்படுவது மட்டுமல்ல, அதற்குப் பதிலும் கிடைக்கிறது. நமது பணியில் உதவ இங்கிலாந்து தனது பேரறிஞர்கள் சிலரை ஏற்கனவே தந்துள்ளது.

இங்கே இந்த மேடையில் அமர்ந்திருக்கும் மிஸ். முல்லரைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்; ஒருவேளை நன்கு அறிந்தும் இருப்பீர்கள். இவர் உயர்குடியில் பிறந்தவர்; கல்வியில் சிறந்தவர்; இந்திய நாட்டின்மீது கொண்ட அன்பின் காரண மாகத் தமது வாழ்க்கையை நமக்கென அர்ப்பணித்தவர். இந்தியாவையே தமது வீடும் நாடுமாக ஆக்கிக்கொண்டவர்.

இந்திய நாட்டின் நல்வாழ்விற்காகவும் மலர்ச்சிக்காகவும் தமது வாழ்வையே அர்ப்பணம் செய்துள்ள இன்னொரு ஆங்கிலப் பெண்மணியை நீங்கள் அறிவீர்கள். திருமதி. அன்னி பெசன்டைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அதே பணியை மனத்தில் கொண்டு இங்கு அமர்ந்திருக்கும் அமெரிக்கப் பெண் கள் இருவரை இன்று நாம் சந்திக்கிறோம். நமது ஏழை நாட்டின் ஏதோ சிறு நன்மைக்காகவும் அவர்களும் தங்கள் வாழ்வை அர்ப்பணிக்கத் தயாராக இருக்கிறார்கள். இந்த வேளையில் நமது நாட்டைச் சேர்ந்தவரும் இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளைக் கண்டவரும் சிறந்த ஆன்மீகவாதியுமான திரு. மோகினி மோகன் சட்டர்ஜியை உங்களுக்கு நான் நினைவூட்ட விரும்புகிறேன். வேறு ஏதோ அலுவல் காரணமாக அவர்

இன்று நம்மிடையே வர முடியவில்லை. அவரிடம் நான் மிக நம்பிக்கை கொண்டுள்ளேன்; மதிப்பு வைத்துள்ளேன்; நேசிக்கிறேன். அவர் நமது நாட்டின் நலத்திற்காக உறுதியாக அமைதியாகத் தொண்டு செய்கிறார். இப்போது இங்கிலாந்து இன்னொரு பரிசைத் தந்துள்ளது, அதாவது மிஸ். மார்கரெட்டை அனுப்பியுள்ளது. இவரிடம் நாம் அதிகம் எதிர்பார்க்கிறோம். அதிக முன்னுரை தேவையில்லை. மிஸ். நோபிலை உங்களுக்கு அறிமுகம் செய்கிறேன், அவர் இப்போது பேசுவார்.

சகோதரி நிவேதிதை தமது சொற்பொழிவை முடித்தபின் சுவாமிஜி தொடர்ந்தார்:

நான் கூற வேண்டியது சொற்பமே. இந்தியராகிய நாம் சிலவற்றைச் செய்ய முடியும் என்று நினைக்கிறோம். நம்முள் வங்காளிகள் ஒருவேளை இதை நினைத்துச் சிரிக்கக்கூடும். ஆனால் நான் அப்படிச் செய்ய மாட்டேன். உங்களிடம் ஓர் உத்வேகத்தை எழுப்புவதே எனது வாழ்க்கைப் பணி. நீங்கள் அத்வைதியானாலும் சரி, விசிஷ்டாத்வைதியானாலும் சரி, துவைதியானாலும் சரி, அது பெரிய விஷயமல்ல. துரதிர்ஷ்டவசமாக நாம் மறந்துவிடுகின்ற ஒரு விஷயத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்; 'ஓ மனிதா, உன்னிடம் நம்பிக்கை கொள்' என்பதே அது. கடவுளிடம் நம்பிக்கை கொள்வதற்கான வழி அதுவே. நீங்கள் அத்வைதியானாலும் சரி, துவைதியானாலும் சரி, யோகத்தில் நம்பிக்கை உடையவராயினும் சரி, சங்கராச்சாரியாரிடம் நம்பிக்கை உடையவராயினும் சரி, வியாசரைப் பின்பற்றுபவரானாலும் சரி, விசுவாமித்திரரைப் பின்பற்றுபவரானாலும் சரி அதுபற்றிக் கவலையில்லை. இந்த ஒரு விஷயத்தில் இந்தியக் கருத்து மற்றைய உலகக் கருத்துக்கள் அனைத்திலிருந்தும் வேறுபடுகிறது என்பதுதான் முக்கிய விஷயம். அதனை நாம் ஒரு கணம் நினைவு கூர்வோம். எல்லா மதத்திலும் எல்லா நாட்டிலும் ஆன்மாவின் சக்தி முற்றிலுமாகப் புறக்கணிக்கப் பட்டுள்ளது; ஆன்மா ஏறக்குறைய வலிமையற்றது, பலவீனமானது, செயலற்றது என்றே கருதப்படுகிறது. ஆனால் இந்தியராகிய நாமோ ஆன்மா என்றுமுள்ளது, எப்போதும் பரிபூரணமானது என்று கருதுகிறோம். நமது உபநிடதக் கருத்துக்களை எப்போதும் நாம் நினைவில்கொள்ள வேண்டும்.

வாழ்வில் உங்கள் மகத்தான பணியை நினைவில் கொள்ளுங்கள். அன்னியக் கருத்துக்கள் ஏராளமாக நமது நாட்டில், அதிலும் வங்காளத்தில் பெரிதும் புகுந்துவிட்டன. அவை

நமது தேசிய மதத்தின் அடிப்படை ஆதாரங்களையே அரித்துத் தின்று கொண்டிருக்கின்றன. நாம் இப்போது ஏன் இவ்வளவு பின்தங்கி விட்டோம்? நம்மில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் அன்னியக் கருத்துக்களாலும் அன்னிய விஷயங்களாலும் உருவாக்கப்பட்டிருப்பது ஏன்? உலக நாடுகளிடையே நாமும் தலைநிமிர்ந்து நிற்க வேண்டுமானால் இதைத் தூக்கி எறிந்தாக வேண்டும். நாம் உயர வேண்டுமானால், மேலை நாடுகளிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை பல உள்ளன என்பதை மறக்கக் கூடாது. மேலை நாடுகளின் கலை, விஞ்ஞானம் போன்றவற்றை நாம் கற்றுக்கொள்ள வேண்டும்; புற இயற்கை பற்றிய விஞ்ஞானங்களைக் கற்க வேண்டும். அதே வேளையில் மதத்தையும் ஆன்மீக ஞானத்தையும் கற்கவும் தங்களுக்கு உரியதாக்கவும் மேலை நாட்டினர் நம்மிடம் வர வேண்டும். உலகத்தின் ஆச்சாரியர்கள் நாமே என்பதை இந்துக்களாகிய நாம் நம்ப வேண்டும். அரசியல் உரிமைகளுக்காகவும் அதுபோன்ற பிறவற்றிற்காகவும் நாம் இங்கே கூக்குரலிட்டுக் கொண்டிருக்கிறோம். மிகவும் நல்லது. ஆனால் உரிமைகளும் சலுகைகளும் பிறவும் நட்பின்மூலம் மட்டுமே கிடைக்கும்! சம அந்தஸ்துடைய இருவருக்கிடையேதானே நட்பு உண்டாக முடியும். இருவருள் ஒருவர் பிச்சைக்காரனாக இருந்தால் அங்கு என்ன நட்பு நிலவ முடியும்? பேசுவதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் பரஸ்பர ஒத்துழைப்பின்றி நாம் வலிமை பெற முடியாது. எனவே உங்களை அழைக்கிறேன். இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் செல்லுங்கள்—பிச்சைக்காரர்களாக அல்ல, மத போதகர்களாக. பண்டமாற்று நியதியை நம்மால் முடிந்தவரை செயல்படுத்த வேண்டும். இந்த வாழ்வில் மகிழ்ச்சியுடன் இருப்பதற்கான வழிவகைகளை நாம் அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ளும்போது நிரந்தர மகிழ்ச்சிக்கான வழிகளை அதற்குப் பதிலாக அவர்களுக்கு ஏன் கற்பிக்கக் கூடாது?

எல்லாவற்றிற்கும் மேலாக மனிதகுல நன்மைக்காகப் பணி புரியுங்கள். உங்கள் குறுகிய வைதீக வாழ்க்கையைப்பற்றிப் பெருமையடித்துக் கொள்வதை விடுங்கள். ஒவ்வொருவரையும் மரணம் பின்தொடர்ந்து கொண்டிருக்கிறது. ஒன்றை நினைவில் கொள்ளுங்கள், அற்புதமானதொரு சரித்திர உண்மை அது—இந்திய இலக்கியங்களில் காணப்படும் நிலையான உண்மைகளை அறிவதற்காக உலக நாடுகள் யாவும் இந்தியாவின் காலடியில் பொறுமையாகக் காத்திருக்க வேண்டும். இந்தியா

அழியாது. சீனா அழியாது. ஜப்பான் அழியாது. எனவே நமது முதுகெலும்பாகிய ஆன்மீகத்தை ஒருபோதும் நாம் மறக்கக் கூடாது. அப்படி நாம் மறக்காமல் இருக்க வேண்டுமானால் நமக்குப் பாதையைக் காட்ட, நான் இப்போது சொல்லி வரு கின்றேனே, அந்தப் பாதையைக் காட்ட நமக்கு ஒரு வழிகாட்டி தேவை. உங்களில் யாருக்காவது இதில் நம்பிக்கை இல்லாமல் போகுமானால், நமது மதம் ஆன்மீகம் மட்டுமே என்பதை நம்பாத இந்து ஒருவன் இருப்பானானால் அவனை நான் இந்து வென்று கூற மாட்டேன்.

காஷ்மீரின் கிராமம் ஒன்றில் முகமதிய முதியவள் ஒருத்தி யுடன் பேசிக் கொண்டிருந்தது என் நினைவுக்கு வருகிறது. நான் அவளிடம், 'உனது மதம் எது அம்மா?' என்று கேட்டேன். அவள் தனது மொழியில், 'இறைவனுக்கு மகிமை உண்டாவ தாக! அவனருளால் நான் ஒரு முஸ்லீம்' என்று கூறினாள். பிறகு ஓர் இந்துவை நோக்கி, 'உனது மதம் எது?' என்று கேட்டேன், வெறுமனே, 'நான் ஓர் இந்து' என்றான் அவன். கடோபநிடதத்தில் வருகின்ற சிரத்தை அல்லது அற்புதமான நம்பிக்கை என்னும் மகத்தான சொல்லை நான் நினைத்துக் கொண்டேன். சிரத்தைக்கு ஓர் எடுத்துக்காட்டை நசிகேதனின் வாழ்வில் நாம் காணலாம். சிரத்தை அல்லது உண்மையான நம்பிக்கையைப் போதிப்பதே எனது வாழ்வின் பணி. மனித குலத்திற்கும் சரி, மதங்களுக்கும் சரி, அடிப்படை ஆதார சக்தி களுள் ஒன்று இந்த நம்பிக்கையே என்பதை மீண்டும் ஒரு முறை உங்களிடம் சொல்லிக் கொள்கிறேன். முதலில் உங்களிடம் நம்பிக்கை கொள்ளுங்கள். ஒன்று, சின்னஞ்சிறிய தொரு நீர்க்குமிழியாக இருக்கலாம்; மற்றொன்று, மலை போன்றதோர் அலையாக இருக்கலாம். ஆனால் இந்த இரண் டிற்கும் பின்னால் எல்லையற்ற கடல் உள்ளது என்பதைமறந்து விடாதீர்கள். எனவே ஒவ்வொருவருக்கும் உய்யும் வழி உள்ளது; எல்லோருக்கும் முக்தியுண்டு. விரைவாகவோ தாமதமாகவோ ஒவ்வொருவரும் மாயையின் பந்தங்களிலிருந்து விடுபட்டே தீர வேண்டும். இதுவே நாம் முதலில் செய்ய வேண்டுவது. எல்லையற்ற நம்பிக்கை எல்லையற்ற ஆர்வத்தை உண்டாக்கு கிறது. இந்த நம்பிக்கை நமக்கு வருமானால் அது நமது தேசிய வாழ்வை, வியாசரும் அர்ஜுனனும் வாழ்ந்த நாட்களை, மனித குலத்தின் அதிநுட்பமான கருத்துக்களை யெல்லாம் போதித்த காலத்தை மீண்டும் கொண்டு வரும்.

ஆன்மீக உள்நோக்கிலும் சரி, ஆன்மீகச் சிந்தனைகளிலும் சரி, இன்று நாம் மிகவும் பின்தங்கி இருக்கிறோம். இந்தியாவில் ஆன்மீகக் செல்வம் கொட்டிக் கிடந்தது. ஆன்மீகப் பெருமை யின் காரணமாக நாடுகளில் தலைசிறந்து விளங்கியது இந்தியா. பாரம்பரியங்களிலும் ஐதீகங்களிலும் நம்பிக்கை வைப்போ மானால் அந்த நாட்கள் மீண்டும் வரும், அது உங்களைப் பொறுத்தே உள்ளது.

வங்க இளைஞர்களே, பணக்காரர்களையும் பெரியவர் களையும் எதிர்பார்த்து நிற்காதீர்கள். உலகில் மாபெரும் காரியங் களை எல்லாம் சாதித்தது ஏழைகள்தாம். வங்கத்து ஏழைகளே! முன்வாருங்கள். நீங்கள் எதையும் சாதிக்க முடியும். நீங்கள் எல்லாவற்றையும் சாதிக்க வேண்டும். நீங்கள் ஏழைகளாக இருக்கலாம், ஆனாலும் உங்களைப் பலர் பின்பற்றுவார்கள். உறுதியாக இருங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக நேர்மையுடன் இருங்கள். உங்கள் விதியில் நம்பிக்கை கொள்ளுங்கள். இந்தியா வின் கதிமோட்சத்திற்காக உழைக்க வேண்டியவர்கள் வங்கத்து இளைஞர்களே. நீங்கள் நம்பினாலும் நம்பாவிட்டாலும் இதைக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள். இன்றோ நாளையோ இது நிகழ்ந்துவிடும் என்று எண்ணாதீர்கள். எனது சொந்த உடலை யும் ஆன்மாவையும் நம்புவதுபோல் இதை நான் நம்புகிறேன். எனவே வங்க இளைஞர்களே! என் இதயம் உங்களிடம் செல் கிறது. ஏழைகளாகிய உங்களைப் பொறுத்தே அது உள்ளது. உங்களிடம் பணமில்லை, அதனால் நீங்கள் உழைப்பீர்கள். உங்களிடம் ஒன்றுமில்லை, எனவே நீங்கள் நேர்மையுடன் இருப்பீர்கள். நேர்மை இருப்பதால் எல்லாவற்றையும் துறக்கச் சித்தமாயிருப்பீர்கள். அதைத்தான் நான் இப்போது உங்களிடம் சொல்கிறேன். மீண்டும் சொல்கிறேன், இதுவே உங்கள் வாழ் வின் பணி, என் வாழ்வின் பணி. உங்கள் தத்துவம் எதுவாக இருந்தாலும் நான் கவலைப்படவில்லை. ஆனால் மனித குலத் தின் நிறைவில் நிலையான நம்பிக்கை என்னும் ஓர் இழை, பரஸ்பரம் ஒருவரையொருவர் பிணைத்தபடி இந்தியா முழு வதிலும் ஓடிக்கொண்டிருக்கிறது. இதை நிரூபிக்க நான் தயாராக இருக்கிறேன். இதில் எனக்கு நம்பிக்கை உண்டு. இந்த நம்பிக்கை நாடெங்கிலும் பரவட்டும்! ❑

## 2. பேலூர் மடத்தில்

சுவாமிஜி இரண்டாம் முறையாக 1899, ஜூன் 20-ஆம் நாள் மேலைநாட்டிற்குப் புறப்பட்டார். அதற்கு முந்தின நாள் மாலையில் பேலூர் மடத்தில் இளந்துறவிகளும் சீடர்களும் அவரை உபசரித்து வழியனுப்பினார்கள். அப்போது சுவாமிஜி அவர்களிடம் சிறியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன் சுருக்கம் மடத்து நாட்குறிப்பில் உள்ளது. கீழே வருவது அதன் மொழிபெயர்ப்பு.

### துறவு: அதன் லட்சியமும் செயல்முறையும்

நீண்ட சொற்பொழிவுக்கான நேரமல்ல இது. ஆனால் நீங்கள் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும் என்று நான் விரும்புகின்ற சிலவற்றை உங்களுக்குச் சுருக்கமாகக் கூறுகிறேன். முதலில் நாம் நமது லட்சியத்தை நன்றாக அறிந்துகொள்ள வேண்டும். பிறகு அதைச் செயல்முறைப்படுத்துவது எப்படி என்பதை அறிய வேண்டும். உங்களுள் துறவிகள் பிறருக்கு நன்மை செய்யவே முயல வேண்டும், ஏனெனில் துறவின் பொருளே அது தான். துறவு பற்றி நீண்ட சொற்பொழிவு நிகழ்த்த நேரமில்லை. அதன் பொருளைச் சுருக்கமாகக் கூறுகிறேன். துறவு என்பது மரணத்தை நேசித்தல். சாதாரண மனிதர்கள் வாழ்வை நேசிக்கிறார்கள். துறவி மரணத்தை நேசிக்க வேண்டும். அப்படியானால் நாம் தற்கொலை செய்துகொள்ள வேண்டுமா? அல்லவே அல்ல. தற்கொலை செய்து கொள்பவர்கள் மரணத்தை நேசிப்பவர்கள் அல்ல; ஏனெனில் தற்கொலைக்கு முயல்பவர்கள், ஒருமுறை தப்பிவிட்டால் இரண்டாம் முறை அந்த முயற்சியில் ஈடுபட மாட்டார்கள். இது நாம் கண்கூடாகக் காணும் ஒன்று.

மரணத்தை நேசிப்பது என்றால் என்ன? நாம் இறந்தே தீர வேண்டும்— அது உறுதி, அப்படியானால் ஒரு நல்ல லட்சியத்திற்காக இறப்போம். நமது செயல்கள் எல்லாம், உண்பது, உடுப்பது என்று நாம் செய்கின்ற அனைத்தும், நமது ஆன்ம தியாகத்திற்கு நம்மை இட்டுச் செல்வதாக இருக்கட்டும். சாப்பிட்டு உடலை வளர்க்கிறோம். பிறரது நன்மைக்காகத் தியாகம் செய்வதற்கு அது இல்லையென்றால் அதைப் போற்றி

வளர்ப்பதில் என்ன பயன்? புத்தகங்களைப் படிப்பதன்மூலம் மனத்தைப் பண்படுத்துகிறோம். ஆனால் அதையும் உலகின் சேவைக்காகப் பயன்படுத்தாவிடில் பயன் ஒன்றுமில்லை. சுய நலத்தை வளர்ப்பதைவிட உங்கள் லட்சக்கணக்கான சகோதரர் களுக்குச் சேவை செய்வதே செய்யத் தக்கது. உபநிடதத்தின் அந்த அற்புதக்குரல் உங்கள் மனத்தில் எழவில்லையா?—

ஸர்வத: பாணி பாதம் தத் ஸர்வதோऽக்ஷி சிரோமுகம் ।
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥[1]

—'எங்கும் கைகள், கால்கள், எங்கும் கண்கள், தலைகள், வாய்கள், எங்கும் காதுகள் என்று பிரபஞ்சம் முழுவதும் அது நிறைந்திருக்கிறது.'

இவ்வாறு நீ படிப்படியாக இறக்க வேண்டும். இத்தகைய மரணத்தில் சொர்க்கம் உள்ளது, எல்லா நன்மைகளும் நிறைந் துள்ளது. இதற்கு எதிர்மாறான மரணம் அனைத்து அமங்கலங் களும் தீமைகளும் நிறைந்தது.

இனி லட்சியங்களைச் செயல்முறைப் படுத்துவதற்கான முறைகளைப் பார்ப்போம். முதலில் நாம் அறிய வேண்டியது, சாதிக்க முடியாத லட்சியம் எதையும் நாம் ஏற்றுக்கொள்ளக் கூடாது என்பதுதான். சாதிக்க முடியாத அளவிற்கு மிக உயர்ந்த லட்சியங்கள் நாட்டைப் பலவீனப்படுத்துகின்றன, வீழ்ச்சிக்கு உள்ளாக்குகின்றன. பௌத்த மற்றும் சமண சீர்திருத்தங்களுக் குப் பின்னர் இதுதான் நிகழ்ந்தது. அதேவேளையில் அளவுக்கு மீறிய செயல்முறைத் தன்மையும் தவறு. சிறிதளவுகூட கற்பனைத் திறன் உங்களிடம் இல்லையென்றால், உங்களை வழிநடத்த ஒரு லட்சியம் இல்லையென்றால் நீங்கள் வெறும் மிருகங்களே. எனவே நமது லட்சியத்தைத் தாழ்த்தவும் கூடாது, அதேவேளை யில் அதன் செயல்முறைத் திறனை மறக்கவும் கூடாது. இரண்டு எல்லைகளையும் நாம் தவிர்க்க வேண்டும். நமது நாட்டின் பண்டைய கருத்து ஒரு குகையில் அமர்ந்து, தியானம் செய்து சாக வேண்டும் என்பது. பிறரை முந்திக் கொண்டு, தான் மட்டும் முக்தி பெற நினைப்பது தவறு. தனது சகோதரர்களின் முக்திக்காக முயலாமல் ஒருவன் முக்தி பெற முடியாது என்பதை இன்றோ நாளையோ ஒருவன் அறிந்தே தீர வேண்டும். மிகமிக உயர்ந்த லட்சியத்துடன் மிகமிகச் சிறந்த செயல்முறைத் திறனை உங்கள் வாழ்வில் இணைப்பதற்கு முயல வேண்டும். இப்போது

1. கீதை, 13. 13.

ஆழ்ந்த தியானத்தில் மூழ்கத் தயாராக இருக்க வேண்டும். அடுத்த கணமே இதோ (மடத்தின் தோட்டப்பகுதியைச் சுவாமிஜி சுட்டிக்காட்டுகிறார்) இந்த நிலத்தைச் சாகுபடி செய்யவும் தயாராக இருக்க வேண்டும். இப்போது சாஸ்திரங்களிலுள்ள மிக நுட்பமான விஷயங்களைத் தெளிவு படுத்தத் தயாராக இருக்க வேண்டும்; அடுத்த கணமே, இந்த நிலத்தில் விளையும் பொருட்களைச் சந்தைக்குக் கொண்டு போய் விற்று வர வேண்டும். தாழ்வான எத்தகைய வேலைகளையும், இங்கு மட்டுமின்றி எங்குமே செய்ய நீங்கள் தயாராக இருக்க வேண்டும்.

இந்த இயக்கத்தின் லட்சியம் மனிதர்களை உருவாக்குவதே என்பதுதான் நீங்கள் அடுத்து நினைவில்கொள்ள வேண்டிய விஷயம். நமது ரிஷிகள் கூறியதைப் படித்தால் மட்டும் போதாது. அந்த ரிஷிகள் மறைந்து விட்டார்கள், அவர்களது கருத்துக்களும் அவர்களுடன் போய்விட்டன. நீங்களே ரிஷிகளாக வேண்டும். இதுவரை பிறந்துள்ள மாமனிதர்களைப் போல், ஏன், அவதார புருஷர்களைப்போல் நீங்களும் மனிதர்கள்தாம். வெறும் புத்தகப் படிப்பு என்ன செய்ய முடியும்? தியானம்தான் எதைச் சாதித்துவிடும்? மந்திரங்களும் தந்திரங்களும் என்ன செய்யும்? நீங்கள் உங்கள் சொந்தக் கால்களில் நிற்க வேண்டும். மனிதனை உருவாக்குதல் என்ற முறையை, இந்தப் புதிய முறையை நீங்கள் கைக்கொள்ள வேண்டும். வலிமையே உருக்கொண்டதுபோல் வலிமையும் அதேவேளையில் ஒரு பெண்ணின் இதயமும் கொண்டவனே உண்மை மனிதன். உங்களைச் சுற்றி வாழும் உயிர்களுக்காக உருகுங்கள்; அதேவேளையில் உறுதியும், வளைந்து கொடுக்காத தன்மையும் உடையவராகவும் இருங்கள். அத்துடன் பணிவும் வேண்டும். இது முரண்பாடுபோல் தோன்றலாம்; ஆனால் முரண்பட்டவை போல் தோன்றுகின்ற இந்தக் குணங்களை உடையவராக நீங்கள் இருக்க வேண்டும்.

உங்களைவிடப் பெரியவர் உங்களிடம், நதியில் குதித்து முதலையைப் பிடித்து வரும்படிச் சொன்னாலும், முதலில் அந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டும். பிறகு வேண்டுமானால் நீங்கள் வாதாடலாம். கட்டளை தவறாக இருந்தாலும் முதலில் கீழ்ப்படியுங்கள், பிறகு எதிர்த்து விவாதியுங்கள். கருத்து வேற்றுமை ஏற்பட்டவுடனேயே ஒரு தனிப் பிரிவை ஆரம்பிப்பது நமது மதப் பிரிவுகளின், குறிப்பாக வங்காளத்தில்,

ஒரு சாபக்கேடாக உள்ளது; சிறிது காத்திருக்கப் பொறுமை யில்லை. உங்கள் இயக்கத்திடம் உங்களுக்கு ஆழ்ந்த மதிப்பு இருக்க வேண்டும். கீழ்ப்படியாமைக்கு இங்கே இடம் கிடை யாது, கருணை காட்டாமல் அதனை நசுக்கி எறியுங்கள். கீழ்ப் படியாதவர்களுக்கு இங்கு இடமில்லை, அவர்களை வெளி யேற்றி விடுங்கள். ஏமாற்றுப் பேர்வழிகளுக்கு இங்கே இடம் இல்லை. நீங்கள் காற்றைப்போல் சுதந்திரத்துடன் வாழ வேண்டும், ஆனால் ஒரு செடியைப்போல், ஒரு நாயைப்போல் கீழ்ப்படிபவர்களாகவும் இருக்க வேண்டும். ❑

# கிழக்கு வங்காளம்

## டாக்காவில்

மேலைநாடுகளுக்கு இரண்டாம் முறையாகச் சென்ற சுவாமிஜி, சுமார் ஒன்றரை வருடங்கள் அங்கே பணிகளில் ஈடுபட்ட பின்னர் இந்தியா திரும்பினார். அதன் பிறகு கிழக்கு வங்காளத்திலுள்ள லாங்கல் பந்த் மற்றும் அசாமிலுள்ள காமாக்யா சென்று தரிசனம் செய்தார். பின்னர் ஷில்லாங், கௌஹாட்டி வழியாக டாக்கா சென்றார். 1901, மார்ச் 19-ஆம் நாள் டாக்காவிலுள்ள ஜகன்னாத் கல்லூரியில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவு இது.

### 1. நான் கற்றது என்ன?

கிழக்கு வங்காளத்திற்கு வருவதற்கான ஒரு வாய்ப்பு கிடைத்த தில் என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நாகரீகம் மிக்க மேலை நாடுகள் பலவற்றில் சுற்ற என்னால் முடிந்தது. ஆனால் இந்தப் பகுதியைப்பற்றி எனக்கு அதிகம் அறிய முடியாமல் போயிற்று. கம்பீரமாகப் பாயும் நதிகள், வளம் மிகுந்து பரந்து விரிந்து தோன்றும் சமவெளிகள், வனப்புமிக்கச் சூழ்நிலையுடன் விளங்கும் சிற்றூர்கள் இவற்றை என் சொந்த நாடாகிய வங்கத்திலேயே கண்டு மனம் மகிழ்கிறேன். இதுவரை இவற்றைக் காணும் பேறு எனக்குக் கிடைக்கவில்லை. எனது வங்க நாடு நீரிலும் சரி, நிலத்திலும் சரி, எங்கும் இத்தனை அழகும் வசீகரமும் நிறைந்தது என்பது இதுவரை எனக்குத் தெரியாது. உலக நாடுகளுள் பலவற்றையும் கண்ட பின்னர், எனது நாட்டின் அழகை மேலும் சிறப்பாக உணர முடிகிறது, இது நான் கண்ட பலன்.

அதுபோலவே மதத்தைத் தேடியும் நான் பல்வேறு பிரிவின ரிடையே திரிந்ததுண்டு. பிற நாட்டினரின் லட்சியங்களைத் தங்கள் லட்சியமாக ஏற்றுக் கொண்டவர்களிடம்கூடச் சென் றேன். எனது நாட்டு மதத்தில், நமது தேசிய மதத்தில் எவ்வளவு அழகிருக்கிறது, எத்தனை சிறப்பிருக்கிறது என்பதை அறியாமல் பிறரது வாசலில் பிச்சை கேட்டேன். இன்றைக்குப் பல ஆண்டு களுக்கு முன்பே, உலகில் மிகவும் திருப்திகரமான மதம் இந்து மதம் ஒன்றே என்பதைக் கண்டு கொண்டேன். எனவே என் நாட்டு மக்கள், தாங்கள் ஒப்பற்ற மதத்தைச் சார்ந்தவர்கள் என்று சொல்லிக்கொண்டு, அதேவேளையில் அதைப் புறக் கணிப்பதைக் கண்டு உள்ளம் வருந்துகிறேன். அதேவேளையில்,

ஐரோப்பியச் சிந்தனைகள் நமது மாபெரும் நாட்டினுள் ஊடுருவியிருப்பதால் எத்தகைய அனுகூலமற்ற உலகியல் சூழ்நிலையில் இவர்கள் தங்கள் வாழ்நாளைக் கடத்துகிறார்கள் என்பதையும் நான் நன்றாக உணர்ந்திருக்கிறேன்.

இன்று நம்மிடையே சீர்திருத்தவாதிகள் சிலர் தோன்றி யுள்ளனர். அவர்கள் நமது மதத்தைச் சீர்திருத்த விரும்பு பவர்கள் என்பதைவிட, அதன் புது வாழ்விற்காக அதையே தலைகீழாக மாற்றி அமைக்க விரும்புபவர்கள் என்று சொல்வதே பொருத்தமாக இருக்கும். இவர்களிடையே உண்மையான சிந்தனையாளர்களும் சிலர் உள்ளனர் என்பதில் ஐயமில்லை. எனினும் செய்வது எதுவெனத் தெரியாமலே குருட்டுத்தன மாகப் பிறரைப் பின்பற்றுபவர்களும், முட்டாள்தனமாகச் செயலில் ஈடுபடுபவர்களும் பலர் உள்ளனர். அன்னியக் கருத்துக் களை நமது மதத்தில் புகுத்துவதில் இவர்கள் மிகுந்த உற்சாகம் காட்டுகின்றனர். 'உருவ வழிபாடு' என்ற வார்த்தையை வேறு பிடித்துக் கொண்டுள்ளனர். இந்து மதம் உண்மையல்ல, ஏனெ னில் அதில் உருவ வழிபாடு உள்ளது என்று அடித்துப் பேசு கின்றனர். இந்த 'உருவ வழிபாடு' என்பது என்ன, அது நல்லதா கெட்டதா என்று சிந்தித்துப் பார்க்க ஒரு கணம்கூட இவர்கள் முயல்வதில்லை. அந்த வார்த்தையிலிருந்து எதையோ புரிந்து கொண்டு, இந்து மதம் உண்மையல்ல என்று துணிந்து கூச்சலிடு கின்றனர்.

இனி, மற்றொரு சாரார் உள்ளனர். இந்து மதத்தில் காணப் படும் பழக்க வழக்கங்கள், நடைமுறைகள் எல்லாவற்றிற்கும் ஏதாவதோர் சம்பந்தமில்லாத விஞ்ஞான விளக்கம் தர முற்படு கின்றவர்கள் இவர்கள். மின்சாரம், காந்தசக்தி, காற்றதிர்வு என் றெல்லாம் ஏதேதோ பேசுவார்கள். இறைவன்கூட மின்சார அதிர்வுகளின் தொகுப்பே தவிர வேறல்ல என்று ஒருநாள் சொன்னாலும் சொல்வார்கள், யார் கண்டது! எப்படியோ, அன்னை இவர்களுக்கு அருள் புரிவாளாக! பல்வேறு வகை யிலும் பல்வேறு வழியிலும் தனது பணியை நடத்துபவள் அவளே அல்லவா!

இவர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட, பழமைவாதிகள் சிலர் உள்ளனர். 'உங்கள் தர்க்கங்களோ வாதப் பிரதிவாதங் களோ எனக்குத் தெரியாது; தெரிந்துகொள்ளவும் நான் விரும்பவில்லை. எனக்குத் தேவை கடவுள். எனக்கு வேண் டியது ஆன்மா. பிரபஞ்சமே மறைந்து போய்விட்ட, இன்ப

துன்பங்களற்ற பேரானந்தமே நிறைந்துள்ள அந்த இடத்திற்குப் போகவே நான் விரும்புகிறேன்', 'நம்பிக்கையுடன் புனித கங்கையில் நீராடினால் முக்தி என்பதை நான் நம்புகிறேன்', 'சிவன், ராமன், திருமால் என்று எந்த உருவில் வணங்கினாலும் அவரே பிரபஞ்சத்தின் ஒரே கடவுள் என்ற உறுதியான நம்பிக்கையும் பக்தியும் இருக்குமானால் நீ மோட்சம் பெறுவாய்' என்றெல்லாம் இவர்கள் கூறுகிறார்கள். தளராத உறுதி கொண்ட இந்தப் புராதன இனத்தைச் சேர்ந்தவன் என்பதில் நான் பெருமை கொள்கிறேன்.

மற்றொரு பிரிவினர் உள்ளனர். ஆண்டவனையும் அதே வேளையில் உலகையும் பற்றிக் கொள்ளுமாறு இவர்கள் கூறுகின்றனர். இவர்கள் நேர்மையற்றவர்கள், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுபவர்கள். மகான்களின் போதனை என்ன? 'ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை. காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை. இரவும் பகலும் ஒருபோதும் இணைந்திருக்க முடியாது'[1] என்பதல்லவா? 'இறைவனை அடைய விரும்பினால் காமத்தையும் ஆசையையும் விட வேண்டும். இந்த சம்சாரம் என்பது உண்மையற்றது, உள்ளீடற்றது, சூன்யம். இதை விடாமல் நீ எவ்வளவு முயன்றாலும் இறைவனை அடைய முடியாது. அதிலிருந்து வெளியேற முடியாவிட்டால் உனது பலவீனத்தை ஒப்புக்கொள், ஆனால் அதற்காக லட்சியத்தைக் கீழே கொண்டு வராதே. அழுகும் பிணத்தைப் பொன்இலைகளால் மறைக்காதே' என்றல்லவா நமது பண்டைய ரிஷிகளின் குரல் ஒலிக்கிறது! அவர்களைப் பொறுத்தவரை, உனக்கு ஆன்மீகம் வேண்டுமானால், நீ கடவுளை அடைய விரும்புவாயானால் முதன்முதலாகச் செய்ய வேண்டுவது நேர்மையின்மையை விட்டுவிடுவதே; கருத்தில் கண்கட்டு விளையாட்டை விட்டுவிடுங்கள், நேர்மையற்றவர்களாக இருக்காதீர்கள். 'உணர்வு வீட்டில் திருட்டு'க்கு[2] இடம் கொடுக்காதீர்கள். நான் கற்றது என்ன? இந்தப் புராதன இனத்திலிருந்து நான் என்ன கற்றுக் கொண்டேன்? நான் கற்றது இதுவே—

---

1. ஜஹாம் காம் தஹாம் ராம் நஹிம் ஜஹாம் ராம் தஹாம் நஹிம் காம் ।
கபஹு்ம் மிலத் விலோகியே ரவி ரஜனீ ஏக் டாம் ॥
—துளஸீதாசர் பாடல்.

2. உணர்வு (Consciousness) பிளவுபட்டுச் செயல்படுகின்ற நிலை. உணர்வின் ஒருபக்கம் ஒரு லட்சியத்தை நாடும்போது, மற்ற பக்கங்கள் அதற்கு எதிராகச் செயல்படுகின்ற நிலை இது.

துர்லபம் த்ரயமேவைதத் தேவானுக்ரஹஹேதுகம்।
மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரய:॥[1]

—'மனிதப் பிறவி, முக்தி வேட்கை, சாது சங்கம் ஆகிய இந்த மூன்றும் கிடைப்பது அபூர்வம், ஆண்டவனின் அருளால் மட்டுமே அவை கிடைக்கும்'. முதலில் வேண்டுவது மனுஷ்யத்வம், மனிதப் பிறவி. ஏனெனில் மனிதப் பிறவி ஒன்றின் மூலமே முக்தி பெற முடியும். அடுத்தது முமுக்ஷுத்வம், முக்தி வேட்கை. அனுபூதிக்கான நமது பாதைகள் மனிதர்களுக்கும் பிரிவுகளுக்கும் ஏற்ப பல்வேறாக இருக்கலாம், பல்வேறு வாழ்க்கை நிலைகளைப் பொறுத்து, ஞானம் பெறத் தகுதியுடையவர்கள் நாங்களே என்று சிலர் தனியுரிமை கொண்டாடலாம், எனினும் முக்தி வேட்கை இல்லாவிடில் இறைவனை அறிய முடியாது என்பதை எந்த எதிர்ப்பின் பயமுமின்றி துணிந்து கூறிவிடலாம். முமுக்ஷுத்வம் என்பது என்ன? மோட்சம் வேண்டுமென்ற தணியாத ஆசை, இன்ப துன்பச் சூழலிலிருந்து விடுபட வேண்டுமென்ற வேட்கை, உலகத்தின் மீது தீவிர வெறுப்பு, கடவுளைக் காண வேண்டுமென்ற இந்த வேட்கை தீவிரமாகக் கனன்று எழும்போதே உங்களுக்கு அனுபூதி பெறும் தகுதி வந்துவிட்டது என்று புரிந்து கொள்ளலாம்.

இன்னொன்றும் தேவை, அது, மகா புருஷர்களின் நேரடித் தொடர்பு; லட்சியத்தை அடைந்துவிட்ட அந்த மகான்களின் வாழ்வைப் பார்த்து நமது வாழ்வை வகுத்துக் கொள்வது.

உலகின் மீது வெறுப்பு, இறைவனை அடைவதற்கான தீவிர ஆசை, இவைகூடப் போதாது. குருமூலம் தீட்சை அவசியம். ஏன்? ஏனெனில் பரம்பரைபரம்பரையாக குருவிடமிருந்து சீடனுக்கு வழங்கப்பட்டு, இடைவெளியின்றி தலைமுறை தலைமுறையாக வரும் மகத்தானதொரு ஆற்றல்மையத்துடன் தீட்சை உங்களை இணைக்கிறது. பக்தன், குருவைத் தேடிச் செல்ல வேண்டும், அவரை ஏற்றுக்கொண்டு தனது வழிகாட்டியாக, தத்துவ ஞானியாக, தோழராக, தலைவராகக் கொள்ள வேண்டும். சுருங்கக் கூறினால் ஆன்மீக வளர்ச்சிக்கு முதலும் முக்கியமும் ஆனவர் குருவே.

யாரை குருவாக ஏற்பது? 'ச்ரோத்ரியோऽவ்ருஜினோऽகாமஹதோ யோ ப்ரஹ்மவித்தம:[2]— வேதங்களை அறிந்தவர்,

1. விவேக சூடாமணி, 3.
2. விவேக சூடாமணி, 35.

மாசற்றவர், ஆசையற்றவர், பிரம்மத்தை அறிந்தவருள் சிறந்தவர்'. சாஸ்திரங்களைப் படித்தவர் மட்டுமல்ல, அவற்றின் நுட்பமான ரகசியங்களை, அவற்றின் உண்மைப் பொருளைத் தம் வாழ்க்கையில் அனுபவித்து உணர்ந்தவரே ச்ரோத்ரியர். 'பல்வேறு சாஸ்திரங்களைப் படிப்பதால் மட்டும் ஒருவர் பண்டிதராக மாட்டார், அவர் வெறும் கிளி மட்டுமே ஆகிறார். சாஸ்திரங்களின் ஒரு வார்த்தையைப் படித்த அளவிலேயே தெய்வீக அன்பு வரப் பெற்றவர்களே உண்மையான பண்டிதர்கள்.' புத்தகப் பூச்சிகளான பண்டிதர்களால் பயனில்லை. இப்போது ஒவ்வொருவரும் குருவாகவே விரும்புகின்றனர், பிச்சைக்காரன் லட்ச ரூபாய் நன்கொடை அளிக்க விரும்புவது போன்றதே அது. குரு என்பவர் மாசு என்பதன் சாயல்கூடப் படியாதவராக இருக்க வேண்டும், 'அகாமஹத'ராக, எந்த ஆசையாலும் தீண்டப்படாதவராக இருக்க வேண்டும். பிறருக்கு நன்மை செய்வதைத் தவிர வேறு எந்த நோக்கமும் அவருக்கு இருக்கக் கூடாது. காரணமின்றிக் கருணை காட்டும் கடலாக அவர் விளங்க வேண்டும். பெயர் புகழை விரும்பியோ, சுயநலம் எதையும் கருதியோ அவர் உபதேசம் செய்யக் கூடாது. பிரம்மத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிந்து அனுபவித்தவராக இருக்க வேண்டும். இத்தகையவரே குரு என்று வேதங்கள் கூறுகின்றன. இத்தகைய குருவுடன் ஆன்மீக ஐக்கியம் ஏற்படும் போது இறையனுபூதி வாய்க்கிறது, இறைக் காட்சி எளிதாகிறது.

சத்திய நாட்டம் கொண்டவன் தீட்சைக்குப் பிறகு அப்யாசம் செய்ய வேண்டும்; அதாவது குறிப்பிட்ட முறையில் இஷ்டதெய்வத்தைத் தொடர்ந்து தியானிப்பதன் மூலம், அந்த சத்தியத்தைச் செயல்முறைப் படுத்துவதற்கு மீண்டும் மீண்டும் உண்மை ஆர்வத்துடன் முயற்சி செய்ய வேண்டும். உன்னிடம் கடவுளைக் காண்பதற்குத் தணியாத வேட்கை இருக்கலாம், குருவையும் அடைந்திருக்கலாம், ஆனால் அவற்றுடன் அப்யாசம் என்பது இல்லாவிடில், உனக்கு உபதேசிக்கப் பட்டதைப் பயிற்சி செய்யாவிடில் உனக்கு அனுபூதி கிடைக்காது. இவையெல்லாம் உன்னிடம் நிலைபெறுமானால் நீ லட்சியத்தை அடைவாய்.

எனவே இந்துக்களே, மகோன்னதமான ஆரியர்களின் வழிவந்தவர்களே! உங்களுக்குச் சொல்கிறேன்— நமது மதத்தின் மகத்தான லட்சியத்தை மறந்து விடாதீர்கள். இந்துக்களின் உயர்ந்த லட்சியமான இந்த சம்சார சாகரத்தைக் கடந்து

செல்வது என்பதை மறந்து விடாதீர்கள். இந்த உலகைத் துறப்பது மட்டும் அல்ல, சொர்க்கத்தையும் துறப்பது; தீமையை மட்டும் விடுவதல்ல, நன்மையையும் விடுவது; இவ்வாறு எல்லாவற்றையும் கடந்து செல்வது, இந்தத் தோற்ற உலகைக் கடந்து செல்வது சச்சிதானந்த பிரம்மமாகிய உண்மை-அறிவு-ஆனந்த நிலையை அடைவது—இந்த லட்சியத்தை மறந்து விடாதீர்கள். ❑

## 2. நாம் பிறந்த மதம்

பகோஜ் பள்ளி, 31 மார்ச் 1901

மிகப் பண்டைய நாளிலேயே நமது நாடு ஆன்மீகத் துறையில் மாபெரும் முன்னேற்றங்களைக் கண்டிருந்தது. அந்தப் பழம் பெரும் சரித்திரத்தை இன்று நம் கண்முன் கொண்டு வருவோம். இவ்வாறு பழம்பெருமையில் ஆழ்ந்திருப்பதால் ஓர் ஆபத்து உள்ளது; நாம் புதுமைகளைக் காண்பதற்கு முயற்சி செய்யாமல் இருந்துவிடுவோம். கடந்துபோன நமது முன்னோர்களின் பெருமையில் குளிர்காய்வதுடன் திருப்தியுற்று நின்று விடுவோம், அதிலேயே பெருமை காண்போம். இந்த விஷயத்தில் நாம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். உண்மையை நேருக்கு நேர் கண்ட ரிஷிகளும் மகரிஷிகளும் பண்டைய நாட்களில் பலர் இருந்தனர். இப்படிப் பழம்பெருமையை எண்ணிப்பார்ப்பதில் பயன் விளைய வேண்டுமானால், நாமும் அவர்களைப் போல் ரிஷிகளாக வேண்டும். அது மட்டுமல்ல, வரலாறு நமக்களித்த ரிஷிகளைவிட நாம் சிறந்த ரிஷிகளாக இருப்போம் என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். கடந்த காலத்தின் நமது சாதனைகள் மகத்தானவை. அவற்றில் நான் பெருமை கொள்கிறேன், அவற்றை எண்ணும்போது பெருமிதம் அடைகிறேன். நமது இன்றைய வீழ்ச்சியால் நான் சிறிதும் மனம் தளரவில்லை, எதிர்காலத்தில் என்ன நடக்க இருக்கிறது என்பதை மனத்தில் தீட்டி, அதில் பூரண நம்பிக்கை கொள்கிறேன். ஏன்? ஏனெனில் விதை அழிவது மரம் ஆவதற்காகத் தானே! விதை முற்றிலுமாக ஒரு மாற்றத்திற்கு உள்ளாகிறது, அப்போது அது அழிந்துவிட்டது போல்தான் தோன்றுகிறது. ஆனால் அதுதான் பின்னர் மரமாகிறது. அதுபோல் இன்றைய வீழ்ச்சியில், நமது மதத்தின் நாளைய மகோன்னதமான எதிர்காலம் இப்போதைக்கு மறைந்து கிடக்கிறது. அது மீண்டும் எழுச்சி பெறும், ஒருவேளை முன்பு எப்போதும் இருந்ததைவிட மேன்மையுடனும் மகிமையுடனும் அது எழலாம்.

நாம் பிறந்த இந்த மதத்தின் பொதுவான அடிப்படைகளைப் பார்ப்போம். எடுத்தஎடுப்பில் நமது மதப் பிரிவுகளுக்கு

இடையே பல்வேறு வேறுபாடுகள்தான் தென்படும் என்பதை மறுப்பதற்கில்லை. சிலர் அத்வைதிகள், சிலர் விசிஷ்டாத் வைதிகள், சிலர் துவைதிகள். சிலர் அவதாரங்களை நம்பு கிறார்கள்; உருவ வழிபாடு செய்பவர்கள் சிலர்; அருவக் கொள்கை உடையவர்கள் சிலர். பழக்க வழக்கங்களிலும் எவ்வளவோ வேறுபாடுகள் இருப்பதாகத்தான் தெரிகிறது. ஜாட்கள் முகமதியர்களுடனும் கிறிஸ்தவர்களுடனும் திருமணத் தொடர்பு கொண்டாலும், ஜாதியிலிருந்து நீக்கப்படுவதில்லை. இவர்கள் இந்துக் கோயில்களில் தடையின்றிச் சென்று வழிபடலாம். பஞ்சாபிலுள்ள பல கிராமங்களில் பன்றி மாமிசம் சாப்பிடாதவன் இந்துவாகக் கருதப்படுவதில்லை. நேபாள பிராமணன் நான்கு வர்ணத்தைச் சேர்ந்தவர்களிலிருந்தும் திருமணம் செய்துகொள்ளலாம், வங்காள பிராமணனோ சொந்த ஜாதியின் உட்பிரிவுகளில்கூடத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. இதுபோல் எத்தனையோ உள்ளன. இவ் வாறு நாம் காணும் எவ்வளவோ வேறுபாடுகளுக்கு இடையே, இந்துக்களுள் ஓர் ஒற்றுமை உள்ளது, அது எந்த இந்துவும் பசு மாமிசம் உண்பதில்லை என்பதுதான். இதுபோல் நமது மதத்தின் பல்வேறு பிரிவுகளுக்கிடையே ஓர் அடிப்படை ஒற்றுமை இருக்கவே செய்கிறது.

சாஸ்திரங்களை ஆராயும்போது ஓர் உண்மை தெளிவாகத் தெரிகிறது. அதாவது எந்த மதத்திற்கு, தனக்கென ஒன்றோ, பலவோ சாஸ்திரங்கள் அடிப்படையாக உள்ளனவோ, அது விரைவான வளர்ச்சி காண்கிறது, இன்றளவும் நிலைத்திருக் கிறது, எவ்வளவோ தாக்குதல்களையும் அடக்குமுறைகளையும் எதிர்கொண்டும் தலைதூக்கி நிற்கிறது. கிரேக்க மதம் எவ் வளவோ சிறந்ததாக இருந்தும் அழிந்து போயிற்று. காரணம், அதனைத் தாங்கி நிற்க ஒரு சாஸ்திரம்கூட இல்லாததே. ஆனால் யூதர்களின் மதம் இன்றும் செல்வாக்குடன் ஓங்கி நிற்கிறது, காரணம் பழைய ஏற்பாட்டின் அடிப்படையில் அது எழுந்ததே. இந்து மதத்தின் நிலையும் இதைப் போன்றதுதான், உலகத்தின் மிகப் பழைய சாஸ்திரமாகிய வேதங்கள் அதன் அடிப்படை யாக உள்ளன.

வேதங்கள் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒன்று கர்மகாண்டம், மற்றொன்று ஞானகாண்டம். நல்லதற்கோ, கெட்டதற்கோ கர்மகாண்டம் இந்தியாவில் இன்று வழக்கத் தில் இல்லை. எனினும் தென்பகுதியிலுள்ள பிராமணர் சிலர்

இன்றும் ஆடுகளைப் பலியிட்டு அவ்வப்போது யாகம் செய்கின்றனர்; வேதங்களின் கிரியாகாண்ட மந்திரங்களின் சுவடுகளைத் திருமணம் மற்றும் சிராத்த மந்திரங்களில் காண்கிறோம். ஆயினும் முன்புபோல் அவற்றின் செல்வாக்கு விளங்க வழியில்லை. அதற்காக ஒருமுறை குமாரில பட்டர் முயன்றார்; ஆனால் தோல்வியே கண்டார்.

வேதங்களின் ஞான காண்டம் உபநிடதங்களைக் கொண்டது; இது வேதாந்தம் என்று அழைக்கப்படுகிறது; வேதங்களின் சிகரம் என்றே இது அறியப்படுகிறது. நமது ஆச்சாரியர்கள் வேதங்களிலிருந்து மேற்கோள் காட்டும் இடங்களில் எல்லாம் உபநிடதங்களையே கையாண்டிருக்கிறார்கள். தற்போது வேதாந்தமே இந்துக்களின் மதம். நமது மதப் பிரிவுகள் எதுவாயினும் தன் கருத்துக்களை மக்களிடம் உறுதியாக நிலை பெறச் செய்ய வேண்டுமானால், அவை வேதாந்தப் பிரமாணத்தை அடிப்படையாகக் கொள்ள வேண்டும். துவைதிகளோ அத்வைதிகளோ அவர்கள் இதைச் செய்தேயாக வேண்டும். வைணவர்கள்கூடத் தங்கள் கொள்கைகளை நிலைநாட்டுவதற்கு கோபாலதாபினி உபநிடதத்தை நாடவே வேண்டியிருந்தது. புதிதாகத் தோன்றும் பிரிவு ஒன்று தன் கருத்துக்களை வேதங்களில் காண இயலாவிட்டால் புதிதாக ஓர் உபநிடதத்தையே உருவாக்கும் அளவிற்குப் போய்விடும்; பின்னர் அது பழைய உபநிடதங்களுள் ஒன்று என்று பிரச்சாரமும் செய்துவிடும். இத்தகைய கடந்தகால நிகழ்ச்சிகள் பல.

இப்போது வேதங்களைப் பார்ப்போம். வேதங்கள் மனிதர்களால் என்றோ ஒருநாள் எழுதப்பட்ட வெறும் நூல்கள் அல்ல என்பது இந்துக்களின் நம்பிக்கை. அவை எல்லையற்ற தெய்வீக ஞானத்தின் தொகுப்பு; சிலகாலம் வெளிப்பட்டும், மற்றும் சிலகாலம் வெளிப்படாமலும் இருப்பவை. வேதங்களுக்கு உரை எழுதிய சாயனாச்சாரியர், 'யோ வேதேப் யோऽகிலம் ஜகத் நிர்மமே—வேத ஞானத்தால் முழுப் பிரபஞ்சத்தையும் படைத்தவர் யாரோ' என்கிறார். வேதங்களைத் தொகுத்தவரை யாரும் கண்டதும் இல்லை; கற்பனை செய்யவும் முடியாது. ரிஷிகள் என்பவர்கள் மந்திரங்களை, நித்திய நியமங்களைக் கண்டுபிடித்தவர்கள், அவ்வளவுதான்; அனாதிகாலம் முதல் எல்லையற்ற அறிவுச் சுரங்கமாக விளங்கி வருகின்ற வேதங்களை நேருக்குநேராக உணர்ந்தவர்கள், அவ்வளவுதான்.

ரிஷிகள் யார்? 'சரியான வழியில் தர்மத்தின் நேரடி அனுபூதி பெற்றவர்கள், அவர்கள் பிறப்பினால் மிலேச்சர்களாக இருந்தாலும், அவர்கள், அவர்கள் மட்டுமே ரிஷிகள்' என்கிறார் வாத்ஸ்யாயனர். அதனால்தான் பண்டைய நாட்களில், விலை மகளுக்குப் பிறந்த வசிஷ்டரும், மீனவப் பெண்ணிற்குப் பிறந்த வியாசரும், அடிமைப் பெண்ணின் பிள்ளையான நாரதரும் இவர்களைப்போல் பலரும் ரிஷிநிலையை அடைந்தனர். உண்மையை அறிந்தவர்களிடையில் வேற்றுமை காணக் கூடாது என்பதுதான் இதன் உண்மையான பொருளாகும். இப்போது கூறிய இவர்களே ரிஷிகள் ஆனார்கள் என்றால், ஓ இன்றைய உயர்குல பிராமணர்களே, நீங்கள் எவ்வளவு பெரிய ரிஷி களாகலாம்! அந்த ரிஷித்துவத்தை அடைய முயற்சி செய்யுங்கள். லட்சியத்தை அடையும் வரையில் நிற்காதீர்கள், உலகம் தானாகவே உங்கள் காலடியில் வணங்கிக் கிடக்கும்! ரிஷி ஆகுங்கள்—இதுவே ஆற்றலின் ரகசியம்.

இந்த வேதமே நமக்கு ஒரே பிரமாணம், அதன்மீது எல்லோருக்கும் உரிமை உண்டு.

*யதேமாம் வாசம் கல்யாணீமாவதானி ஜனேப்ய: |*
*ப்ரஹ்ம ராஜன்யாப்யாம் சூத்ராய சார்யாய ச ஸ்வாய சாரணாய ||*

இவ்வாறு சுக்ல யஜுர் வேதம்[1] கூறுகிறது. வேதத்தின் மீது எல்லோருக்கும் உரிமை இல்லை என்பதற்கு நமது இந்த வேதங்களிலிருந்து ஏதாவது ஆதாரம் காட்ட முடியுமா? வேதங் களின் சில பகுதிகளைச் சில ஜாதியினர்தான் படிக்க வேண்டும், இன்ன ஜாதியினர் அதைப் படிக்கக் கூடாது, இந்தப் பகுதி சத்திய யுகத்திற்கு, இந்தப் பகுதி கலியுகத்திற்கு என்றெல்லாம் புராணங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் ஒன்று, இதை வேதங்கள் சொல்லவில்லை, சொல்பவை புராணங்களே— இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். வேலைக்காரன் எஜமானனை அதிகாரம் செய்ய முடியுமா? ஸ்மிருதிகள், புராணங்கள், தந்திரங்கள் எல்லாமே வேதத்துடன் ஒத்துப் போகும்வரைதான் ஏற்கத் தக்கவை; எங்கெல்லாம் மாறுபடு கின்றனவோ, அவற்றை நம்பத் தகுந்தவை அல்ல என்று ஒதுக்கி விட வேண்டும். ஆனால் இன்று நாம் வேதங்களைவிட உயர்ந்த பீடத்தில் புராணங்களை வைத்துள்ளோம்! வேதங்களைப்

---

1. மாத்யந்தினீய சாகை, 26. 2.

படிப்பது என்பது வங்காளத்திலிருந்து ஏறக்குறைய மறைந்து விட்டது. வீடுதோறும் சாளக்கிராமத்துடன்,[1] குல தெய்வத் துடன் வேதங்களையும் வழிபடும் அந்த நாள், இளைஞர்களும், முதியவர்களும், பெண்களும் வேதங்களைப் பூஜிக்கும் அந்த நாள் விரைவில் வர வேண்டும் என்று நான் எவ்வளவு ஏங்கு கிறேன்!

வேதங்களைப்பற்றி மேலை அறிஞர்கள் கூறுகின்ற கருத் தில் எனக்கு நம்பிக்கையில்லை. அது இன்ன காலத்தைச் சேர்ந்தது என்று இன்று கூறுகிறார்கள். நாளையே அதைத் தவறென்று தள்ளிவிட்டு, ஓராயிரம் ஆண்டுகள் முன்னே கொண்டு வருகிறார்கள். புராணங்களைப்பற்றி நான் முன்பே கூறிவிட்டேன், வேதங்களோடு ஒத்துப்போகும் வரையே அவை ஏற்கத்தக்கவை, ஒத்துப்போகாவிட்டால் ஏற்கக் கூடாது. வேதங் களுடன் ஒத்துப்போகாத பல பகுதிகளை நாம் புராணங்களில் காண்கிறோம். உதாரணமாக, அவர் பத்தாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார், இவர் இருபதாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார் என் றெல்லாம் அதில் எழுதப்பட்டுள்ளன. ஆனால் வேதங்களோ 'சதாயுர்வை புருஷ:— மனிதன் நூறாண்டுகளே வாழ்கிறான்' என்று கூறுகிறது. இதில் நாம் எதை ஏற்பது? நிச்சயமாக வேதங் களைத்தான். இத்தகைய விஷயங்கள் இருந்தாலும் நான் புராணங்களைக் குறைத்து மதிப்பிடவில்லை. அவற்றுள் மனத்தை வளப்படுத்துகின்ற அழகிய போதனைகள் எவளவோ உள்ளன; யோகம், பக்தி, ஞானம், கர்மம் முதலியவை பற்றிய அறிவுரைகள் பல உள்ளன. இயல்பாக அவற்றை நாம் ஏற்றுக் கொள்ளவே வேண்டும்.

பிறகு தந்திரங்கள் உள்ளன. தந்திரம் என்ற சொல்லுக்கு உண்மையான பொருள் சாஸ்திரம் என்பதே. உதாரணமாக காபில தந்திரம். ஆனால் தந்திரம் என்னும் சொல் குறுகிய கருத்திலேயே பொதுவாக உபயோகிக்கப்படுகிறது. புத்த மதத் தைத் தழுவிய மன்னர்கள் அஹிம்சைக் கோட்பாட்டைத் தீவிர மாகப் பிரச்சாரம் செய்யத் தொடங்கிய பின்னர் வேத யாகங் களும் யஜ்ஞங்களும் பழங்கதையாயின. மன்னரிடம் கொண்ட அச்சத்தின் காரணமாக யாகத்திற்குப் பிராணிகளைக் கொல்ல ஒருவரும் முன்வரவில்லை. ஆனால் பிறகு, இந்து மதத்திலிருந்து

---

1. மகாவிஷ்ணுவின் அடையாளமாக வழிபடப்படும் கறுப்பு உருண்டைக் கல். இதில் துவாரம் ஒன்றிருக்கும். அதனுள் மகா விஷ்ணுவின் சக்கரம் போன்ற அமைப்பு காணப்படும்.

புத்த மதத்திற்குச் சென்றவர்கள் இந்த யாக யஜ்ஞங்களின் சிறப்பான அம்சங்களை ரகசியமாகக் கடைப்பிடிக்கத் தொடங்கினார்கள். இவற்றிலிருந்தே தந்திரங்கள் எழுந்தன. இவற்றுள் வாமாச்சாரம் போன்ற இழிந்த சில பகுதிகளைத் தவிர பிற பகுதிகள், மக்கள் கருதுவதுபோல் அவ்வளவு மோசமானவை அல்ல. உயர்ந்த நுட்பமான வேதாந்தக் கருத்துக்கள் பல அவற்றுள் உள்ளன. உண்மையில், வேதத்திலுள்ள பிராம்மணப் பகுதிகள் சிறு மாற்றங்களுடன் தந்திரங்களில் புகுத்தப்பட்டுள்ளன. இன்று கர்மகாண்டமாக நாம் கடைப்பிடிக்கின்ற பூஜைகளும் சடங்குகளும் எல்லாம் தந்திரங்களைப் பின்பற்றியே நடக்கின்றன.

இனி நமது மதத்தின் தத்துவங்களைப்பற்றிச் சிறிது பார்ப்போம். மதப் பிரிவுகளுக்கிடையே வேறுபாடுகளும் முரண்பாடுகளும் எவ்வளவோ இருந்தாலும், அவற்றை ஒற்றுமைப்படுத்துகின்ற அடிப்படைகளும் உள்ளன. ஏறக்குறைய இந்தப் பிரிவுகள் எல்லாமே மூன்று விஷயங்களை ஒப்புக் கொள்கின்றன— இறைவன், ஆன்மா, உலகம். பிரபஞ்சம் முழுவதையும் படைத்து, காத்து, அழிப்பவனே இறைவன். சாங்கியர்களைத் தவிர அனைவரும் இதனை ஏற்றுக் கொள்கின்றனர். அடுத்து ஆன்மா, அதன் மறுபிறவி பற்றிய கோட்பாடு. இதன்படி, கணக்கற்ற தனி ஆன்மாக்கள் தத்தம் வினைக்கேற்ப மீண்டும் மீண்டும் உடலெடுத்து பிறப்பு-இறப்புச் சுழலில் உழன்று கொண்டிருக்கின்றன. இதுவே சம்சாரவாதம், பொதுவாக இது மறுபிறவிக் கோட்பாடு என்று அழைக்கப்படுகிறது. அடுத்தது உலகம், அதாவது ஆதியும் அந்தமும் அற்ற பிரபஞ்சம். இவை மூன்றும் ஒன்றின் மூன்று பக்கங்கள் மட்டுமே என்று சிலர் கொள்கின்றனர், சிலர் மூன்றுமே தனியானவை, வெவ்வேறானவை என்கின்றனர். இவ்வாறு எப்படியெல்லாமோ கூறுகின்றனர். ஆனால் அனைவரும் இந்த மூன்றையும் நம்புகிறார்கள். அதில் கருத்து வேற்றுமை இல்லை.

ஒன்று மட்டும் நினைவில் இருக்கட்டும்— மனம் வேறு, ஆன்மா வேறு. இந்துக்கள் இதைத் தொன்றுதொட்டே அறிந்திருந்தனர். ஆனால் மேலை நாட்டினரால் மனத்திற்கு அப்பால் செல்ல முடியவில்லை. அவர்களைப் பொறுத்தவரை உலகம் இன்பம் நிறைந்தது. எனவே முடிந்தவரை இன்பம் அனுபவிக்க வேண்டிய இடம் இது. ஆனால் கீழைநாடோ, இந்த சம்சாரம் இடையீடற்று மாறிக் கொண்டிருப்பது, துன்பம் நிறைந்தது.

எனவே பயனற்றது, உண்மையற்றதைத் தவிர வேறு எதுவுமில்லை; இதன் நிலையற்ற மகிழ்ச்சிகளுக்காகவும் பொருட்களுக்காகவும் ஆன்மாவை இழப்பது தகுதியற்றது என்ற கருத்தில் ஊன்றி நிற்கிறது. இந்தக் காரணத்திற்காகவே ஸ்தாபன ரீதியான செயலில் மேலை நாடு மிகவும் சிறந்து விளங்குகிறது, அகவுலக ரகசியங்களைத் துணிவுடன் நாடி அறிவதில் கீழை நாடு ஊக்கம் கொண்டிருக்கிறது.

இந்து மதத்தின் மற்ற ஓரிரு அம்சங்களை இப்போது பார்ப்போம். அவதாரக் கோட்பாடு உள்ளது. வேதங்களில் மச்சாவதாரம்பற்றி மட்டுமே கூறப்பட்டுள்ளது. இந்தக் கோட்பாட்டை எல்லோரும் நம்புகிறார்களா இல்லையா என்பது அல்ல பிரச்சினை. அவதாரக் கோட்பாட்டின் உண்மைப் பொருள் மானிட வழிபாடு, அதாவது மனிதனில் இறைவனைக் காண்பதே உண்மையான இறைக் காட்சி. இந்து இயற்கையின் மூலமாக இயற்கையின் கடவுளுக்குச் செல்வதில்லை, மனிதனின் மூலமாகவே மனிதனின் கடவுளை அடைகிறான்.

அடுத்தது உருவ வழிபாடு. சாஸ்திர விதிப்படி சுபகாரியங்கள் செய்யும்போது வழிபடப்படுகின்ற பஞ்ச தேவதைகளைத்[1] தவிர வேறு தேவதைகள் யாவும் அவர்கள் வகிக்கும் நிலையைக் குறிப்பிடுபவை மட்டுமே. இனி இந்தப் பஞ்ச தேவதைகளும்கூட ஒரே தெய்வத்தின் பல பெயர்கள் மட்டுமே. வழிபாடுகளுள் கீழ்நிலையிலுள்ளது உருவ வழிபாடு என்று நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதற்காக இது செய்யத் தகாத தவறான ஒன்று என்பது இதன் பொருளல்ல. உருவ வழிபாட்டில் எவ்வளவோ மலினங்கள் இன்று புகுந்துவிட்டன, எனினும் நான் அதைக் குறைகூற மாட்டேன். ஆம், வைதிகரும், உருவ வழிபாட்டினருமாகிய அந்தப் பிராமணரின் புனிதமான பாத தூளியைப் பெற்று, ஆசீர்வதிக்கப்படாவிடில் நான் எங்கே!

உருவ வழிபாட்டை எதிர்த்துப் பிரச்சாரம் செய்கின்ற, அதைக் கண்டிக்கின்ற சீர்திருத்தவாதிகளுக்கு நான் ஒன்று கூறுகிறேன்—சகோதரர்களே, புற உதவி எதுவுமின்றி, உருவமற்றவராக இறைவனை வழிபடும் தகுதி உங்களுக்கு இருந்தால் அவ்வாறே செய்யுங்கள். ஆனால் அவ்வாறு செய்ய முடியாதவர்களை ஏன் நிந்திக்கிறீர்கள்? பண்டைய பெருமையின் சின்னமாக இருக்கின்ற, ஓர் அழகிய விசாலமான மாளிகை,

---

1. சூரியன், கணபதி, தேவி, சிவன், விஷ்ணு.

கவனமின்மையாலோ, பராமரிக்கப் படாததாலோ நலிவுற்றிருக்கிறது; அழுக்கும் புழுதியும் எங்கும் படிந்திருக்கலாம், இன்னொரு புறம் இடிந்து சரிந்து விழுந்த பகுதி, நீங்கள் என்ன செய்வீர்கள்? புழுதியைச் சுத்தம் செய்து பழுதான இடங்களைச் சீர்திருத்தி மீண்டும் மாளிகை நன்கு விளங்கச் செய்வீர்களா? அல்லது இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டு அந்த இடத்தில் அற்பமான, திடமாக இருக்கும் என்று இதுவரை நிரூபிக்கப் படாத புதியதொரு கட்டிடம் அமைப்பீர்களா? அதை நாம் புனரமைக்க வேண்டும். சுத்தம் செய்து பழுது பார்ப்பதன் மூலம் அதைச் செய்ய வேண்டுமே தவிர, இடித்துத் தகர்த்துத் தரைமட்டமாக்குவதன்மூலம் சீரமைக்க முயலக் கூடாது. புனரமைப்புப் பணி செப்பனிடுவதுடன் நிறைவுறுகிறது. செப்பனிட்டு புனரமைத்துவிட்டபின் செப்பனிடும் வேலை எதற்கு? முடிந்தால் அதைச் செய்யுங்கள், இல்லாவிட்டால் தொடாதீர்கள். மாறாக, நமது நாட்டுச் சீர்திருத்தவாதிகளோ புதிதாக ஒரு பிரிவை உண்டாக்க விரும்புகிறார்கள். எனினும் அவர்கள் நல்ல காரியம் செய்திருக்கிறார்கள். ஆண்டவன் அவர்களுக்கு அருள்புரிவானாக!

ஆனால் இந்துக்களாகிய நீங்கள் பொது அமைப்பிலிருந்து ஏன் பிரிந்து போக விரும்புகிறீர்கள்? இந்து என்று சொல்லிக் கொள்ள ஏன் வெட்கப்படுகிறீர்கள்? உயர்ந்ததும் பெருமை மிக்கதுமான சொத்தல்லவா அது! என் நாட்டு மக்களே! அழியாத அமரத்துவத்தின் குழந்தைகளே! நமது தேசியக் கப்பல் நாகரீகத்தைச் சுமந்தபடி, மதிப்புமிக்க தன் செல்வத்தை உலகிற்கு வழங்கி வளப்படுத்தியபடி யுகயுகாந்தரங்களாகப் பயணம் செய்து கொண்டிருக்கிறது. நமது இந்தத் தேசியக் கப்பல் பற்பல நூற்றாண்டுகளாக வாழ்வெனும் கடலில் பயணம் செய்து கொண்டிருக்கிறது; கோடிக்கணக்கான மக்களைக் கரை சேர்த்துள்ளது. துன்பக்கடலைத் தாண்டிச் செல்ல உதவியுள்ளது. இன்று உங்கள் குறையாலோ, வேறு எந்தக் காரணத்தாலோ இந்தக் கப்பலில் சிறு ஓட்டை விழுந்துவிட்டது. அது பெரிதல்ல. அப்போது கப்பலில் அமர்ந்திருக்கும் நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களுக்குள் சண்டையிட்டும், ஒருவரை மற்றொருவர் சபித்துக்கொண்டும் பொழுதுபோக்குவீர்களா? அல்லது, எல்லோரும் ஒரே மனத்துடன் ஒன்றுகூடி, ஓட்டையை முடிந்த அளவு அடைக்க முயற்சி செய்வீர்களா? நாம் எல்லோரும் நம் இதயத்தின் ரத்தத்தை மகிழ்ச்சியுடன்

கொடுத்து இதைச் செய்வோம்! தோல்வியுற்றால் எல்லோரும் ஒருங்கே அழிவோம், சாபத்துடன் அல்ல, வாழ்த்துக்களுடன் அழிவோம்.

பிராமணர்களுக்கு ஒரு வார்த்தை: உங்கள் குலப் பெருமையும் பாரம்பரியப் பெருமிதமும் வீணே. அதை விட்டொழியுங்கள். உங்கள் சாஸ்திரத்தின்படி பார்த்தால் இப்போது உங்களிடம் பிராமணத்துவம் இல்லை. ஏனெனில் நீண்ட காலமாக நீங்கள் மிலேச்ச அரசின்கீழ் வாழ்ந்துவிட்டீர்கள். உங்கள் முன்னோரின் வார்த்தைகளில் உங்களுக்கு நம்பிக்கையிருக்குமானால், இந்தக் கணமே துஷாக்கினியில்[1] பிரவேசித்து உங்கள் பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ளுங்கள். குமாரில பட்டர் அதையே செய்தார். பௌத்தர்களை ஒழிக்க அவர் விரும்பினார். எனவே முதலில் பௌத்தரானார். பின்னர் பலரை வாதத்தில் வென்றார்; பலரது மரணத்திற்குக் காரணமானார். தமது பாவங்களைக் கழுவுவதற்காக துஷாக்கினியில் வீழ்ந்து உடலை மாய்த்துக் கொண்டார். அதற்கான நெஞ்சத் துணிவு உங்களுக்கு இல்லாவிடில் உங்கள் பலவீனத்தை ஒப்புக் கொள்ளுங்கள், எல்லோருக்கும் உதவிக்கரம் நீட்டுங்கள், அறிவின் கதவைத் திறவுங்கள். தாழ்த்தப்பட்ட பாமர மக்களின் நியாயமான உரிமைகளையும் சலுகைகளையும் மீண்டும் ஒருமுறை வழங்குங்கள். ❑

**சுடர் 5 முற்றும்**

1. உமியைக் குவித்து வைத்து மூட்டுகின்ற தீ.